Vol XII 1933 - 1934



# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு.

பன்னிரண்டாம் சிலம்பு

இதழாசிரியர் கூட்டத்தலைவர்
மா. வே. நெல்லையப்ப பிள்ளை
அவர்கள். பி. எ.

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட்.
சீமுக-பவ ௵

The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly Ltd.

 Tinnevelly and Madras [*Price Rs.* 3 8 0

# உள்ளுறை

[* இக்குறியிடப்பட்டவைகள் இத் தொகுதியில் முடிவு பெறாது தொடர்வன.]

---

## படங்கள்



*திருவாதர் என்று அச்சிட்டிருப்பது தவறு.

---

**Statement of Receipts and Disbursements from 1—7—1929 to 31—12—1932, Sri Sankara Barati Mutt, at Inam Manditope Village, Kovilpatti Taluq, Tinnevelly District.**

| RECEIPTS. | Rs. | A. | P. | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|
| Rent collections from ryots:— | | | | | | |
| Through Mr. Shanmugasundaram Pillai (late Supdt) from 28—1—1930 to 4—6—1931. .... | 678 | 1 | 9 | | | |
| Through Village Munsif, Sankarappa Naick from 30—7—1931 to 13—11—1931. .... | 71 | 10 | 4 | | | |
| Through Hukdar Sankarasubramania Datta Barati Gosayee from 26—4—1930 to 28—2—1932. .... | 1662 | 5 | 2 | | | |
| | | | | 2412 | 1 | 3 |
| Rent collections made during the period of Mr. V. Totadri Pillai, present Supdt, from 11—1—1932 to 31—12—1932. .... | 2759 | 8 | 6 | | | |
| Nazar for pattah transfer received from pattadars. .... | 63 | 8 | 6 | | | |
| Quarrying fees, and sale of manure shrubs. .... | 9 | 0 | 0 | | | |
| Cost recovered in summary suits. .... | 63 | 8 | 2 | | | |
| Daistic amount received from V. M. Pandavarmangalam village. .... | 20 | 6 | 5 | | | |
| | | | | 2915 | 15 | 7 |
| Total.... | .... | .... | .... | 5328 | 0 | 10 |
| **DISBURSEMENTS.** | Rs. | A. | P. | Rs. | A | P. |
| Paish kist to Government by late Supt. Mr. Shanmuga sundaram Pillai. .... | 298 | 4 | 0 | | | |
| Do Paid out of collections made by the Hukdar. .... | 242 | 12 | 0 | | | |
| Do Paid by present Supdt. V. T. Pillai. .... | 286 | 4 | 0 | | | |
| | | | | 827 | 4 | 0 |
| Interest on kist for Fasli 1341. .... | .... | .... | .... | 0 | 9 | 0 |
| 25% gross collections Paid to Govt. as per decree in O.S. No. 10/28, in the Sub Court at Tuticorin towards the court-fee-amount. .... | .... | .... | .... | 119 | 0 | 2 |
| Cost ordered in E. P. No. 15/32, by Sub Judge, to be paid to Govt. .... | .... | .... | .... | 15 | 0 | 0 |
| **MUTT EXPENSES.** | | | | | | |
| 1. Maintenance of Hukdar. .... | 148 | 10 | 7 | | | |
| 2. Special festivities in the Mutt. .... | 16 | 4 | 3 | | | |
| 3. Mutt repairs. .... | 33 | 13 | 8 | | | |
| 4. Mutt establishments. .... | 20 | 8 | 0 | | | |
| | | | | 219 | 4 | 6 |
| **TEMPLE EXPENSES.** | | | | | | |
| 1. Daily Padithram. .... | 90 | 13 | 5 | | | |
| 2. Special festivities. .... | 54 | 11 | 9 | | | |
| 3. Vessels and sundry articles .... | 29 | 10 | 0 | | | |
| 4. Temple establishments .... | 53 | 8 | 6 | | | |
| 5. Repairs to temple. .... | 16 | 5 | 0 | | | |
| | | | | 245 | 0 | 8 |
| | | | | 1426 | 2 | 4 |

| | Rs. | A. | P. | Rs. | A. | P. |
|---|---|---|---|---|---|---|
| BROUGHT FORWARD | | | | 1426 | 2 | 4 |
| Maintaining water-shed at Elandope including pay of water-man. .... | .... | .... | .... | 96 | 5 | 4 |
| Sadavirthee to pilgrims. .... | .... | .... | .... | 6 | 15 | 8 |
| Cost of construction of "Sitaram Madai" in the big-tank. | .... | .... | .... | 285 | 3 | 0 |
| Do Do Kalingal Do .... | .... | .... | .... | 168 | 0 | 2 |
| New building for Madapalli attached to temple. .... | .... | .... | .... | 100 | 3 | 3 |
| Tank repairs. .... | .... | .... | .... | 10 | 0 | 0 |
| Summary suit expenses. .... | .... | .... | .... | 179 | 10 | 0 |
| Other suit expenses. .... | .... | .... | .... | 26 | 8 | 0 |
| Pay of Superintendent. .... | .... | .... | .... | 483 | 14 | 1 |
| Do establishments. .... | .... | .... | .... | 373 | 9 | 10 |
| Travelling expenses and Batta. .... | .... | .... | .... | 79 | 12 | 0 |
| Stationery. .... | .... | .... | .... | 44 | 12 | 2 |
| Printing charges. .... | .... | .... | ... | 18 | 13 | 6 |
| Postage. .... | .... | .... | .... | 6 | 0 | 0 |
| Miscellaneous expenses .... | .... | .... | .... | 86 | 7 | 0 |
| Cash with late Supdt. Mr. Shanmugasundaram Pillai, not remitted to the office, and not accounted. .... | 379 | 13 | 9 | | | |
| Do Sankarappa Naik, V. M. Do .... | 71 | 10 | 4 | | | |
| Do Hukdar, Sankarasubramania Datta Barati Gosayee Do .... | 1419 | 9 | 2 | | | |
| | | | | 1871 | 1 | 3 |
| Cash balance with present Supdt. on 31—12—1932. .... | .... | .... | .... | 64 | 11 | 3 |
| Total ... | .... | .... | .... | 5328 | 0 | 10 |

(TRUE COPY)

**V. Totadri Pillai,**
*Receiver & Superintendent.*

**(Sd.) T. M. Sankaranarayana Pillai,**
*Government Certified Auditor.*

ஓம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது

| சிலம்பு கஉ | மெய்கண்டான் யாண்டு-எ௱ய ஆவணித் திங்கள் 1933௵ ஆகஸ்டு௴—செப்டம்பர்௴ | பரல் க |
| --- | --- | --- |

## திருஞானசம்பந்த அடிகள் தேவாரம்.

விண்டொ ழிந்தன நம்முடை வல்வினை
விரிகடல் வருநஞ்சம்
உண்டி றைஞ்சுவா னவர்தமைத் தாங்கிய
விறைவனை யுலகத்தில்
வண்டு வார்குழல் மங்கையோர் பங்கனை
வலஞ்சுழி யிடமாகக்
கொண்ட நாதன்மெய்த் தொழில்புரி தொண்டரோ
டினிதிருந் தமையாலே.

பதவுரை :—

விரிகடல் வருநஞ்சம்—இடமகன்ற கடலினின்றெழுந்த நஞ்சை

உண்டு இறைஞ்சு வானவர்தமைத் தாங்கிய இறைவனை—தானுண்டு (நஞ்சு எங்களைத் தொடர்ந்து கொல்லாது காக்கவேண்டுமென்று) வணங்கின தேவர்களைக் காத்த கடவுளும்,

வண்டு வார்குழல் உமைபங்கனை—வண்டுகள் மொய்க்கின்ற நீண்ட கூந்தலை உடைய உமாதேவியாரை, இடது பக்கத்தில் வைத்திருக்கிறவனும்,

உலகத்தில் வலஞ்சுழி யிடமாகக் கொண்டநாதன்—இவ்வுலகில் திருவலஞ்சுழி என்ற தலத்தைத் தான் உறையுமிடமாகக் கொண்ட தலைவனும் ஆகிய சிவபெருமானுடைய,

மெய்த்தொழில்புரி தொண்டரோடு இனிது இருந்தமையால்—உண்மைப் பணிகளை அன்புடன் விரும்பிச் செய்கின்ற தொண்டர்களோடு கூடி இணங்கி இருந்த காரணத்தால்,

நம்முடை வல்வினை—அடியார்களாகிய நம்மைச் சேர்ந்திருந்த வலிய வினைகளெல்லாம்,

விண்டு ஒழிந்தன—நம்மை விட்டு நீங்கின.

குறிப்புரை:—

வானவர் தமை—தம் - அசை.

மெய்த்தொழில்புரி தொண்டர்—என்பது பிறர் புகழ்தலுக்காக அல்லாமல் தாங்களாகவே மனமுவந்து விரும்பிச் செய்கின்ற தொண்டர்.

நம் உடை வல்வினை—நம்மை நம் வயமாயிருக்க வொட்டாது தன் வயப்படுத்தியிருக்கும் வல்வினை. உடை - உடைத்தாயிருக்கிற நம்மைத் தன் வயப்படுத்தும் வினை வல்வினை எனப்பட்டது.

விண்டு ஒழிந்தன—விட்டு நீங்கின. வினை என்பது சாதியொருமைப் பெயராய வினைகளைக் குறித்தலால் அஃது ஒழிந்தன என்னும் பன்மை வினைகொண்டு முடிந்தது.

இப்பாட்டில் உண்மைப் பணிசெய்யுந் தொண்டர்களுடைய இணக்கத்தினால் வலிய வினைகள் நீங்கும் என்பது கூறப்பட்டது. வண்டுவார் குழல் உமைபங்கன் என்பதனால் சிவபெருமான் அருளுடையவன் என்பதும், விரிகடல் நஞ்சமுண்டு வானவர் தமைத் தாங்கிய என்பதனால் அவன் அந்த அருளை உயிர்களுக்கு இடர் வந்தபொழுது வழங்கி அவைகளினுடைய இடரைத் தீர்த்துக் காக்கிறவன் என்பதும் குறிப்பிடப்பட்டன. பேர் அருளுடைய சிவபெருமான் உயிர்களுடைய நலத்தையே நாடிச் செய்விக்கிறவன் ஆதலின் அவனுடைய உண்மைத் தொழில்புரி தொண்டும் அடியார்களுக்கும் பிற மக்களுக்கும் பிற உயிர்களுக்கும் அருளினாலே பயன் கருதாது செய்யப்படுகிற தொண்டாகவே யிருக்கும். அத்தகைய தொண்டைத் தங்களுடைய மெய்வருத்தம் நோக்காது மனமுவந்து செய்கிற தொண்டர்கள் அருள்விளங்கப் பெற்றவர்களா யிருத்தலினாலே அவர்களோடிணங்கிக் கூடி யிருக்கிறவர்களுடைய வலிய வினைகளும் ஒளிமுன் இருள் நீங்குதல் போல அவர்களை விட்டு நீங்கும் என்பது இப்பாட்டின் கருத்து.

வினை—எழுவாய். ஒழிந்தன—பயனிலை. இருந்தமையாலே என்பதிலுள்ள ஏ, அசை. இறைவனை, பங்கனை என்பவற்றிலுள்ள இரண்டு ஐகளும் அசை.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## காசாக்குடி சாசனம்

### 'பழைய கல்வெட்டும் செப்புப்பட்டயமும்'

[திரு. பி. வி. ஜகதீசய்யர் அவர்கள்.]

காசாக்குடி சாசனம் எனப்பெயர் வழங்குவது, அந்தச் செப்புப்பட்டயம் சோழமண்டலத்திலடங்கிய தஞ்சாவூர் ஜில்லாவில் பிரென்சுக்காரர்களது இராஜ்யத்திலுள்ள காரைக்காலின் அருகிலிருக்கும் காசாக்குடி எனப்படு மிடத்திலிருந்து கிடைத்ததுபற்றியேயாம். ஆனல் இந்தச் செப்புப்பட்டயத்தி லடங்கிய பொருள் சோழ மன்னனது சம்பந்தமில்லாததுமன்றி, அதிலடங்கிய தானமும் அத்தேசத்திலுள்ள நிலத்தைப் பற்றியது மன்று. இது பல்லவ மன்னர்களது என்பது இப்பட்டயங்களைக் கோர்த்துள்ள செப்பு வளையத்தில் போடப்பட்டிருக்கும் இடப முத்திரையிலிருந்து தெரியவரும். இடப முத்திரை தொண்டைமண்டலத்தில் அரசு செலுத்தின பல்லவ மன்னர்களதாகும். இப்பல்லவ மன்னர்களுள் காஞ்சிமாநகரைத் தலைநகராகக்கொண்டு கி. பி. 717 முதல் 779 வரை நீடித்தகாலம், நந்திவர்ம பல்லவ னெனப்படும் இரண்டாவது நந்திவர்ம பேரரசன் அந்நாட்டை மிக்க சிறப்புடன் அரசாண்டு வந்தான். இவனது ஆட்சிகாலத்தில் இருபத்திரண்டாம் ஆண்டில் வெளியிடப்பட்டது இந்தக் காசாக்குடி சாசனம்.

இப்பட்டயத்தில் காணப்பட்டிருக்கும் தானம் "கோடுகொள்ளி" எனப்படும் கிராமத்திலடங்கிய பூமியைப்பற்றியதாகும். இவ்வூர் அந்தகாலத்தில் "ஏகதீரமங்கலம்" எனப் பெயரிடப்பட்டிருப்பது இம்மன்னனது பட்டப்பெயராகிய 'ஏகதீரன்' என்பதிலிருந்தே யாகவேண்டும். இவ்வூர் திருநாமநல்லூரின் அருகிலுள்ளதாகத் தெரியவருகிறது. இம்மன்னனது மந்திரியாகிய பிரம்மஸ்ரீ ராஜன் எனப்படும் பிரம்ம யுவ ராஜாவின் வேண்டுகோளின்மேல் ஜேஷ்ட பாத சோமயாஜின் என்பவருக்கு இக் கிராமத்திலுள்ள நிலம் தான சாசனமாய்க் கொடுக்கப்பட்டது. இத்தானத்தைப்

பெற்ற பிராம்மண சிரேஷ்டர் பாரத்வாஜ கோத்திரத்தி லுதித்தவர். இக் கிராமம் கிடைப்பதற்கு முன்னர் அவர் பூனி எனப்படும் கிராமத்தில் வாசம் செய்தனராம். பூனியே தற்காலம் பூண்டி என்று வழங்கிவரு மிடமா யிருந்திருக்கலாம். அக்காலத்தில் இந்த தான கிராமமாகிய கொடுகொள்ளி ஊற்றுக்காட்டுக் கோட்டத்தைச் சேர்ந்திருந்ததும் செப்புப் பட்டயத்தில் தெரிவிக்கப் பட்டுளது. அவ்வூரின் நான்கெல்லை குறிப்பிட்டிருப்பதாவது :— கிழக்கு, தெற்கில் பாலையூர் (பாலூர்); மேற்கில் மணற்பாக்கம் (மேல்மணப்பாக்கம்), கொள்ளிப்பாக்கம்; வடக்கில் வெளிமா நல்லூர். சர்வ சுதந்தரங்களுடனும் இந்த கொடுகொள்ளி கிராமம் தானம் கொடுக்கப்பட்டதுமல்லாமல் சேயாறு, வேகவதி, திரையனேரி இவைகளிலிருந்து ஆற்றுக்கால் வெட்டிக் கொள்ளவும் அநுமதி அளிக்கப்பட்டுளது. இக்கிராமங்களெல்லாம் காஞ்சீபுரம், செங்கற்பட்டு தாலூகா மத்தியிலுள்ளவைகள்.

இந்த இரண்டாவது நரசிம்ம வர்மன் அறுபத்தைந்து வருஷ காலம் (கி. பி. 710-முதல் 775-வரையில்) இராஜ்யபாரம் செய்து தனது எழுபத்தைந்தாம் வயதிலிறந்ததாகத் தெரியவருகிறது இவனது காலத்தில் கொடுக்கப்பட்ட தான சாசனங்களுள் முக்கியமானவை இந்தக் காசாக்குடி சாசனம், உதயேந்திரம் சாசனம், தண்டந்தோட்டம் சாசனம், கொற்றங்குடி சாசனம் இவைகளே. இவனது காலத்தில் இரண்டாவது விக்கிரமாதித்தன் காஞ்சிமாநகரைத் தாக்கி அவ்விடத்தைப் பிடித்துக்கொண்டான். இது நேரிட்டது நந்திவர்மன் தென்தேசம் படை யெடுத்துப் போயிருந்த காலத்தி லாகவேண்டும். சிலகாலம் காஞ்சிமாநகரைச் சளுக்க விக்கிரமாதித்தன் பிடித்துக் கொண்டாலும், அவ்விடத்தில் கிடைத்த தனத்தை அங்குள்ள கோயில்களுக்கே தானம் செய்தான்! நந்திவர்மன் காஞ்சி திரும்பினதும், விக்கிரமாதித்தன் அவ்விடம் விட்டுத் துரத்தப்பட்டான்.

தட்சிணத்தில் நந்திவர்மன் படை யெடுத்துப் போயிருந்த காலத்தில் கும்பகோணத்தி னருகாமையிலுள்ள நந்திபுரத்தில், தமிழ்நாட்டு மன்னர்களால் முற்றுகை செய்யப்பட்டான். இந்த நந்திபுரமே இப்பொழுது நாதன் கோயில் எனப்பட்டு வருகிறது. இம்மன்னன் சமஸ்கிருதம், தமிழ் இரண்டு பாஷைகளிலும் அதிக

பாண்டித்யம் பெற்றிருந்தான்; பல வித்வான்களை ஆதரித்தான். திருமங்கை யாழ்வார் இவனைத் தமது பாடல்களில் புகழ்ந் திருக்கிறார். காஞ்சீபுரத்திலுள்ள முத்தேசுவரன் கோயில், வைகுண்டப்பெருமாள் கோயில், திருவதிகை வீரட்டானேசுவரர் கோயில், புதுக்கோட்டை சமஸ்தானத்திலுள்ள குன்றாண்டார் கோயில் இவைகளைக் கட்டிவைத்து அவைகளுக்கு ஏராளமான பூமிதானம் செய்திருக்கிறான். இவன் இறந்ததும் இவனுக்கு ராஷ் டிரகூட வம்சத்து இராஜகுமாரத்தியாகிய ரேவா எனப்படுபவ ளிடம் பிறந்த தந்திவர்மன் பட்டம் பெற்றான்.

## சாசனத்தின் விவரம்

பல்லவர்களது வம்சாவளி இப்பட்டயத்தில் விளக்கிக் காட் டப்பட்டுளது. பிரம்மாவின் மானச புத்திரன் அங்கிரசு. இவரது புத்திரன் பிருகஸ்பதி. பிருகஸ்பதியின் புத்திரன் சம்யு. சம்யுவி னிடமிருந்து உற்பத்தியானவர் பரத்வாஜர். இந்த பரத்வாஜ மஹரிஷியின் குலத்தி லுதித்தவர்களே பல்லவர்கள். இப்பல்லவர் கள் தனுர் வித்தையை நன்குணர்ந்தவர்கள். பரத்வாஜரின் புத் திரர் அசுவத்தாமன். எப்படி குளிர்ந்த மேகத்தினிடமிருந்து வெளிவரும் இடி தீக்குணமுடையதாய்க் காணப்படுகிறதோ அப் படியே பிராம்மண வம்சத்தி லுதித்தாலும், அசுவத்தாமன் க்ஷத் திரிய புஜபலம் பெற்றிருந்தான். இந்தப் பல்லவ குலத்தில் தோன் றினவர்களே ஸ்கந்த வர்மன், கலிந்தவர்மன், காணகோபன், விஷ்ணுகோபன், வீரகூர்சி, வீரசிம்மன், சிம்மவர்மன், விஷ்ணுசிம் மன் முதலிய மன்னர்கள். பின்னர் தோன்றிய சிம்மவிஷ்ணு என் பவர் சத்துருக்களிடம் சிம்மம்போலவே காணப்பட்டான். இம் மன்னன் மலயம், களப்பரம், மாளவம், சோழம், பாண்டியம், சிம் மளம், கேரளம் இந்நாடுகளைக் கைக்கொண்டான். அதன் பின் னர் புள்ளலூரில் எதிரிகளை முறியடித்த மஹேந்திரவர்ம னுதித் தான். இவனது புத்திரன் வடதேசம் சென்று வாதாபி (பம்பாய் ராஜதானியிலுள்ள பாதாமி) யில் சத்துருக்களை ஜயித்த நரசிம்ம வர்மன்; நரசிம்மவர்மன் புத்திரன் இரண்டாவது நரசிம்ம வர்ம னெனப்பட்டவனும் சிற்ப மஹிமை வாய்ந்த கோயில் களைக் கட்டியவனுமாகிய இரண்டாவது மஹேந்திரவர் மன். இந்த இரண்டாவது நரசிம்ம வர்மனிடம் பிறந்த பரமேசு

வர போத்தரையனது புத்திரன் மூன்றாவது நாசிம்மவர்மன். இம் மன்னனது புத்திரன் இரண்டாவது பரமேசுவர போத்தரையன். பின்னர் இப்பல்லவ பட்டம் பெற்றவனே பீமனது மரபில் வந்த நந்திவர்ம மன்னன். இவனது காலத்தி லேற்பட்ட இந்த தான சாசனத்தில்,

ஆற்றிலிருந்து கால்வாய் வெட்டிக்கொள்ள
அநுமதி கொடுக்கப்பட்டது

"....இந்நாற் பேரெல்லை யுள்ளும் அகப்பட்ட நீர் நிலனும் புன்செயியும் உடும்பொடி ஆமை தவழ்வதெல்லாம் சேயாற்றாலும் வெஃகாவினாலும் திரையனேரியாலுந் நீரிந்தவழி ஆற்றுக்காலும் வெள்ளக்காலும் தோண்டிக் கொண்டுண்ணப் பெறுவாராக வும். இக்கால்களுக்கு கொல்கலமும் புழுதி பாடும் பெறுவதாகவும். இக்கால்களில் கூடை இறைத்துங் குறங்கறுத்தும் குற்றேத்தம் பண்ணியும் கொண்டுண்டார் கோக்கொள்ளும் தண்டப்படுவா ராகவும்."

---

## மதிப்புரை

சமரச சன்மார்க்க போதம்:—உரைநடை யாசிரியர்களில் தற்காலத்திற் சிறந்தவர்களென்று கருதப்படுவோர்களுள் ஒருவ ராகிய திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் சமரச சன்மார்க்கத்தைப் பற்றித் தனிநூல் ஒன்று இயற்றுமாறு இயற்கை யன்னையால் தூண்டப்பட்டு "நவசக்தி" பத்திரிகை யில் அவ்வப்போது சிறிது சிறிதாக எழுதிவந்த பல கருத்துரை மணிகளைத் திரட்டிச் சேர்த்து வெளியிட்டதே இந்நூலாகும். இதன்கண், சத்தின் இயல், மார்க்கத்தின் விளக்கம் சமரசத்தின் சிறப்பு, குருமார் நிலை, சீர்திருத்தமுறை சங்க அமைப்பு முத லிய பல பெரும்பொருள்கள் சுருங்கிய முறையில் விளக்கப்பட் டிருக்கின்றன. இயற்கை, இறை, துறவறம், பெண்மை, யோகம் முதலியவற்றைக் குறித்துத் திரு. முதலியாரவர்கள் மிகவும் ஆழ்ந்து சிந்தித்து வெளியிட்டிருக்கும் மணியனைய கருத்துகள் சீரிய முறையில் அறிவை வளர்க்கக் கருதும் யாவராலும் கற்றுத் தேர்ந்து தெளிதற் குரியனவாம். இவ்வழகிய சிறு நூலின் விலை அணு எட்டு. வேண்டுவோர், முருகவேள் புத்தகசாலை, 12 கணபதி முதலி தெரு, இராயப்பேட்டை சென்னை என்ற இடத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

---

# புதுக்கவிகள்—Original Poetry

## பொதுப்பள்ளி யெழுச்சி

['மனோன்மணீய' ஆசிரியர் திரு. சுந்தரம்பிள்ளை அவர்கள்
M.A. F.M.U. M.R.A.S. & F.R.H.S.]

ஆசிரிய விருத்தம்.

பரிதியி னொருசிறு கதிர்வரும் வெளியே
பலவணுத் திரளின மிலகுறு முறையே
கருதரு நினதருட் கதிர்வர அடியேங்
கரணமும்[1] புவனமும் புரணமதுறவே[2]
உருவற விழுங்கிய வுறக்கம்விட் டெழுந்தோம்
உன்னருள் பரவிட வுவந்திவ ணிருந்தோம்
இருதயத் தினிச்சகம் ஏறிடு முன்னம்
எம்பெருமா னெம்முள் ளெழுந்தரு ளாயே. (1)

ஒன்றிய விவேகமா முயர்குணம் போக
உண்பது முடுப்பது மேகதி யாக
நின்றுழ லாவகை நெஞ்சினீ நின்று
நிஷ்கள சித்தமே[3] சத்கதி யென்று
நன்றுடன் தீதுணர் நடுநிலைப் பேறே[4]
நல்கிய நின்னருட் கென்னகை மாறே
இன்றுமத் தொல்லரு ளெமையுவந் தாள
எம்பெருமா னெம்முள் ளெழுந்தரு ளாயே. (2)

---

1. கரணம்—கண் முதலிய வெளிக்கரணங்களும் மன முதலிய அந்தக்கரணங்களும்.

2. ஸ்புரணம்—வெளிப்படல், தோற்றல்.

3. நிஷ்களசித்தம்—பரிசுத்த மனசு.

4. நடுநிலைப்பேறு—(Conscience) மனோசாட்சி

நன்றெனத் தீதென நீநடு நின்று
 நல்லொளி காட்டியுஞ் செல்லலற் றின்று
நின்றனம். நடுதறி[1] யொன்றிடக் கட்டி
 நிறுத்திய கயிற்றை யவிழ்த்தும் பின்றட்டிக்
கன்றைநற் றாயிடம் விடுத்திடு மாறே
 காட்டிய நல்வழி கூட்டிவை பேறே
என்றுநின் னல்லரு ளன்றியொன் றெய்தேம்
 எம்பெருமா னெம்முள் ளெழுந்தரு ளாயே. (3)

சித்தநற் சுத்தியே முத்தியின் வித்தாத்
 தேற்றநீ தந்தும்பின் சிற்றின்பம் பற்றாத்[2]
தத்துறு வேமையிச் சழக்கிற்[3] கைதூக்கிச்
 சடத்துவம் போக்கிநின் றன்வய மாக்கி
நித்தமெந் திரிவித கரணநன்[4] னெறிக்கே
 நின்றிட வமைத்தரு ளின்றிநிற் குறுக்கே
எத்தனை வரினுங்கே டத்தனை யுங்காத்
 தெம்பெருமா னெம்முள் ளெழுந்தரு ளாயே. (4)

தப்பரும் பலதொழிற் சாகர நடுவே
 சடலமென் சிறுதோணி விடவொருப் படுவேம்
முப்பெருங் குற்றமா[5] மூன்றுள வோட்டை
 மொழிமுதற் றுணைகளோ[6] வொழிகில சேட்டை
எப்புறம் பார்க்கினுந் தப்பருங் கேடே
 எங்ஙனந் துழாவியா மெய்துவம் வீடே
எய்ப்பினி னின்னரு ளிளவளி[7] யீவான்
 எம்பெருமா னெம்முள் ளெழுந்தரு ளாயே. (5)

---

1. நடுதறி—கட்டுத்தறி; கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்து விடுப்பினும் தாயிடஞ் சேராக் கன்றைத் தட்டி ஏவுதல் வழக்கம்.

2. பற்றா—பற்றி.

3. சழக்கு—மயக்கம்.

4. திரிவித கரணம்—மனம் வாக்குக் காயம்.

5. முக்குற்றம்—காமம் வெகுளி மயக்கம்.

6. மொழி முதற்றுணை—வாக்கு முதலிய கருமேந்திரியம் ஐந்தும் கண் முதலிய ஞானேந்திரியம் ஐந்தும்.

7. இளவளி—இளங்காற்று,

நித்திரை செயுமனை நெருப்புறப் படையும்
　　நெருங்க,விட் டேகுவார் நெஞ்சச்சக் கிடையும்,[1]
உத்திகொண் டோடுநாய்க் கொருமுழங் கூட்டி
　　யோச்சிடுங் கல்லும்போ லூக்கம்பா ராட்டிச்
சித்தத்துஞ் செறியாது தீவினை வெருவிச்
　　சேட்டித காமாதிக் கூட்டமுற் றுருவி
இத்தகை யெம்பணி முற்றிடும் வண்ணம்
　　எம்பெருமா னெம்முள் ளெழுந்த ருளாயே.　　(6)

நல்லது கண்டுமற் றல்லது பற்றும்
　　நாணறு சங்கற்ப நலிபடை சுற்றும்;
எல்லையிலாவெளி மானதக் கோட்டை,[2]
　　இந்திரி யப்படை யிதிற்செயுங் கேட்டைச்
சொல்லவோ வாயிலை; சூழிருண் மூலஞ்
　　சுதந்தர மற்றுளஞ் சோர்ந்திடுங் காலம்
இல்லையுன் னருளெனி லெங்ஙன முய்வோம்
　　எம்பெருமா னெம்முள் ளெழுந்தரு ளாயே.　　(7)

வெங்கதிர்ச் செல்வனுந் திங்களும் விண்ணும்
　　வீசுமா சுகங்[3]கனல் விரிபுனன் மண்ணுந்
தங்குநின் னாணையிற் றந்தொழிற் பரணஞ்
　　சந்ததம் புரிவபோ லெந்த்னு கரணந்
துங்கநல் லறவழி தங்கிநின் றொழுக
　　சுதந்தர மடியேங்க ளகங்கா நழுவ
இங்கு நின்றொல்லரு ளீந்தளித் திடுவான்
　　எம்பெருமா னெம்முள் ளெழுந்தரு ளாயே.　　(8)

குணக்கெழு கதிரவன் குடக்கடை முனமே
　　குறும்புசெய் தழித்திடுங் கொடுநினை வினமே
கணக்கிட வெளிதல. கருத்திடைக் கூடிக்
　　கவலைசெய் யவலமோ கணங்கணங் கோடி

---

1. நெஞ்சச்சக்கிடை = நெஞ்சத்துள்ள அச்சத்தின்றன்மை.
2. மானதக்கோட்டை = மனசாகிய கோட்டை.
3. ஆசுகம் = காற்று.

பிணக்குறு முளத்தினி யழுக்கிவை போகப்
போருட் காந்தத்தி னேரிரும்பாக[1]
இணக்கிநின் பதந்தா விதுவொரு தருணம்
எம்பெருமா னெம்முள் ளெழுந்தரு ளாயே. (9)

தங்கிய விருளிற்சஞ் சரிக்குமின் மினியாச்
சலிக்குஞ்சார் போதமே சதமென மதியா
சங்கைகொ ளுளத்தராத் தலைதடுமாறுந்
தருக்கிகள் போம்வழி யொழித்திது காறும்
பொங்கிய கருவமும் புலமையும் விடுத்தோம்
புத்தியிற்[2] பத்தியே பொருளென வடுத்தோம்
இங்குமற் றெளியேங்கட் கிந்நெறி போதும்
எம்பெரு மானெம்முள் ளெழுந்தரு ளாயே. (10)

---

1. ஆக—என்பதின் எழுவாய் முன்வரியிலுள்ள உளம்.
2. புத்தியில்—புத்தியைவிட.

---

## அருஞ்செய்யுட் பொருட்பகுதி

நாலடியார்

எனதெனது என்றிருக்கும் ஏழை பொருளை
எனதெனது என்றிருப்பன் யானும் - தனதாயின்
தானும் அதனை வழங்கான் பயன் துவ்வான்
யானும் அதனை யது.

இதன் பொருள்: என்னுடையது என்னுடையது என்று (பொருளிடத்து மிகுந்த பற்றுவைத்துச் செலவு செய்யாமல்) இருக்கிற அறிவில்லாத உலோபி (சேர்த்து வைத்துக் கொண்டுள்ள) செல்வத்தை, (அப்பொருளோடு யாதொரு தொடர்புமில்லாத) யானும் என்னுடையது என்னுடையது என்று (பற்று வைத்திருப்பதாகத் தோன்றக்) கூறிக் கொண்டு மகிழ்வுற்றிருப்பேன். (அச்செல்வம்) அவனுடையதா யிருக்குமானால், அவன் தானும் அதனைப் (பிறர்க்குக்) கொடுத்து இன்பப்பயனைத் தான் அடைதல் கூடுமே அது செய்கிறதில்லை; நானும் அப்பொருளை அப்படியே (பிறர்க்கு வழங்கிப் பயன் துய்த்தல் செய்யேன்).

இப்பாட்டு பொருணுட்பம் நிறைந்து நகைச்சுவை பயவாநிற்கின்றது.

# இலக்கண இலக்கியப் பகுதி
## Language & Literature

### பாவினம்

[வித்துவான் G. தேவநேசன் அவர்கள்.]

வடமொழிக்கும் தென்மொழிக்கு முள்ள இயைபு பற்றிய திரிபுணர்ச்சிகளுள், பிற்காலத் தமிழ் நூல்களிற் பெருவழக்கான பாவினங்கள் வடமொழி யாப்புவழிப் பட்டன வென்பது மொன்றும். அஃது எத்துணை உண்மையென ஈண்டாராய்வாம்:—

துறை தாழிசை விருத்தமென்னும் மூவகைப்பாவினங்களுள் விருத்த மொன்றே வடமொழிப் பெயரால் வழங்குவ தாகும். அஃதூஉம் பெயரான் மட்டும் வடமொழியே யன்றி யாப்பா னன்று. மூவகைப் பாவினங்களுள் துறை தாழிசை யென்னு மிரண்டுந் தமிழாயிருக்க, ஏனையொன்று மட்டும் வடமொழியா யிருத்தல் எங்ஙனம்? ஏனை மொழிகட்கெல்லாமில்லாத பரந்த யாப் பிலக்கணம் தமிழிலிருக்கவும், வடமொழியாப்பை வேண்டிற்றென் றல் விந்தையிலும் விந்தையே. "வெண்பா முதலிய செய்யுளிலக் கணமும் இன்னோரன்ன பிறவும் வடமொழியிற் பெறப்படாமை யானும்" என்றார் சிவஞான முனிவரும். ஆங்கிலயாப்புப் பலவ கைப்பாக்கூறுமேனும் தமிழ்போல அத்துணைப் பரந்துபட்டதன்று.

ஒரு மொழியானது காலஞ் செல்லச் செல்ல, அவ்வக்காலத்து மக்கள் இயல்பிற்கும் அறிவிற்கு மேற்றவாறு இலக்கியத்திலும் இலக்கணத்திலும் திரிதல் இயல்பே. அங்ஙனம் தமிழ் யாப்பும் சங்ககாலத்திற் பாவாயிருந்து பிற்காலத்தில் பாவினமாகத் திரிந்தது.

எல்லாப் பாவினங்களும் கலிப்பாவினின்றே தோன்றியவா கும். வெண்பா, ஆசிரியப்பா என்னு மிரண்டும் பெரும்பாலும் வரம்பிறவாதன. வஞ்சிப்பாவும் மருட்பாவும் கலப்புப் பாக்களே னும், அவையும் அவற்றுக் கோதியவாறு ஒருவகை வரம்புபட்ட னவே. ஆனல் கலிப்பாவோ ஓர் கட்டின்றி எல்லாவடியானும் எல்லா வோசையானும் பற்பலவுருப்புப்பெற்று வரம்பிகந்து வரு

வதாகும். அதனுள்ளும் கொச்சகக்கலியோ எனைக் கலிகட்குரிய சீரும் எல்லையும் இகந்து,

"தரவின்றாகித் தாழிசை பெற்றும்
தாழிசை யின்றித் தரவுடைத்தாகியும்
எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றியும்
அடக்கியல் இன்றி அடிநிமிர்ந் தொழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை உடையது" ஆயும்
"தரவும் போக்கும் பாட்டிடை மிடைந்தும்
ஐஞ்சீர் அடுக்கியும் ஆறுமெய் பெற்றும்
வெண்பாவியலான் வெளிப்படத் தோன்று"

வதாயும் பற்பலவாற்றான் மிக்குங் குறைந்துந் திரிந்தும் வருவதாகும். கொச்சகக்கலியுள் ஒருவகையே பரிபாடலென்க.

இற்றைத் தமிழ் நூல்கட்கெல்லாம் முன்னூலாகிய தொல்காப்பியத்தில் பாவினம் கூறப்படாவிடினும், அவற்றின் றோற்றத்திற்குக் காரணமான இயல்களை ஆங்காங்குக் காணலாம்.

துறை: துறையென்பது தொல்காப்பியத்துள்,

"வழக்கியல் மருங்கின் வகைபட நிலைஇப்
பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்
முன்னோர் கூறிய குறிப்பினும் செந்துறை
வண்ணப் பகுதி வரைவின் றாங்கே"

என ஒருவகைப் பாடாண் செய்யுட்குப் பெயராக வந்துள்ளது. அது செந்துறைப்பாடாண் பாட்டெனப்படும். அது கடவுள் வாழ்த்துப்பற்றி வரும் ஒருவகைக் கலிப்பா. வண்ண மென்பதே கலிப்பாவையுங் கடவுள் வாழ்த்தையு முணர்த்தும்.

"மூவா முதலா" என்னும் சிவகசிந்தாமணிக் கடவுள் வாழ்த்துச் செய்யுளை, முன்னோர் கூறிய குறிப்பின்கண் வந்த செந்துறைப் பாடாண்பகுதி யென்றனர் நச்சினார்க்கினியர்.

பாடாண்டிணை தெய்வம் பராவல், மக்களேத்தல் என்னும் இருபாற்பட்டுவரும். அவற்றுள், தெய்வம் பராவல் பெரும்பாலும் கலிப்பாவாலேயே வரும். தெய்வத்தின் பல குணங்களையும் திருவிளையாடல்களையும் வடிவுகளையும் வண்ணித்துப் புகழ்தற்குக் கலியுறுப்புக்கள்போலப் பிற பாக்கள் சிறவாமை காண்க.

ஒத்ததாழிசைக்கலி இருவகையென்று கூறி அவற்றுள் ஒன்று,

"தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே"

என்றார் தொல்காப்பியர்.

சிந்தாமணியினுஞ் சிலப்பதிகாரத்தும் தெய்வம் பராவுஞ் செய்யுட்களெல்லாம் ஒருபோகும் கொச்சகமுமாகக் கலிப்பாக்களாகவே வந்தன. இவ்வழக்குப் பற்றியே தெய்வம் பராவும் கொச்சகங்கள் தேவபாணி, பெருந்தேவ பாணியெனப்படுவன.

கலம்பகத்திற் கடவுள்வாழ்த்து கொச்சக ஒருபோகாற் கூறப்படுவதுங் காண்க. அராகம்! அம்போதரங்கம் முதலிய கலியுறுப்புக்கள் கடவுள் வாழ்த்திற்கே சிறப்பாயுரியன.

இனி, துறையென்பது புறத்திணையியலில் திணைப் பிரிவாகவுங் கூறப்பட்டுள்ளது.

அதனுரையில்,

"மக்களும் மாவும் முதலியன சென்று நீருண்ணுந் துறை போலப் பலவகைப்பட்ட பொருளும் ஒருவகைப்பட்டு இயங்குதலாகு மார்க்கமாதலிற் றுறையென்றார், எல்லாவழியு மென்பதனை எல்லாத் துறையுங் காவல் போற்றினர் என்பவாகலின். எனவே திணையுந் துறையுங் கொண்டாராயிற்று. அகத்திணைக்குத் துறையுட் பகுதிகளெல்லாம் விரித்துக்கூறிப் பின்னும் பன்முறையாற் பரந்துபட்டு வரம்பிகந்தனவற்றையுந் தொகுத்துத் துறைப்படுத்துக் கூறுக என்றற்குச் செய்யுளியலுள் துறையென்பது உறுப்பாகக் கூறினர். புறத்திணைக்கு அங்ஙனம் பரந்து விரித்தோதாது தொகுத்து இலக்கணஞ் செய்தாராயினும் அவையும் அவ்வாறே பலபொருட்பகுதியும் உடையவென்று உணர்த்துதற்குத் துறையெனப் பெயராகக் கொடுத்தார். இதனானே அகப்பொருட் பகுதி பலவாயினும், ஒரு செய்யுட் பல பொருள் விராஅய்வரினும் ஒரு துறை யாயினாற்போலப் புறத்திணைக்கும் அவ்வப்பொருட் பகுதியும் ஒரு துறையாதலும் ஒரு செய்யுட் பல துறை ஒருங்கு வந்தும் ஒருதுறைப்படுதலுங் கொள்க" என்றார் நச்சினார்க்கினியர்.

"அவ்வ மாக்களும் விலங்கு மன்றிப்
பிறவவண் வரினும் திறவதி னாடித்
தத்தம் இயலான் மரபொடு முடியின்
அத்திறம் தானே துறையெனப் படுமே"

என்பது செய்யுளியல். இதனால் துறையென்பது பொதுவாய்த் திணைப்பிரிவும் சிறப்பாய் அகத்திணைப்பிரிவு மென்பது பெற்றாம்.

அகத்திணைக்குச் சிறந்த கோவை நூல்களுள் அகப் பொருட் டுறைகளெல்லாம் கலிப்பாவாலேயே கூறப்படுவன. இதனாற் கலித்துறை யெனப் பெயர் பெற்றது. கலியென்பது செய்யுளையும் துறை யென்பது அகப்பொருட் பிரிவையு முணர்த் தும். கலிப்பாவாற் கூறப்படும் அகப்பொருட்டுறை யென்பது விரிந்தபொருள்,

கலிப்பாவால் அகப்பொருள் கூறப்படுதலை,

"யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது"

என்பதற்குத் தேவபாணியும் காமமுமே யன்றி வீடும் பொருளா மென்பது ஆசிரியர் கருத்தாயிற்று" என்று நச்சினார்க்கினியர் கூறுவதானும்.

கலித்தொகை யானும், கலியின் திரிபாகிய பரிபாடல்

"கொச்சகம் அராகம் சுரிதகம் எருத்தொடு
செப்பிய நான்கும் தனக்குறுப் பாகக்
காமங் கண்ணிய நிலைமைத் தாகும்"

எனப்படுதலானும்,

தலைவனுந் தலைவியும் உறழ்ந்துகூறும் உறழ்கலியானும் அறிந்து கொள்க.

ஆகவே, துறையென்பதற்குரிய செந்துறைப்பாடாண்பகுதி, அகப்பொருட்டுறை என்னும் இருபொருளினும் பெரும்பான்மை வழங்குஞ் செய்யுள் கலியேயென்றும், அகப்பொருளில் வரும் கோவைச் செய்யுள் அளவொத்த நெடிலடி நான்கென்றும் அறிந்துகொள்க. நச்சினார்க்கினியர் செந்துறைப் பாடாண் பகுதி யாகக் கூறிய சிந்தாமணிக் கடவுள் வாழ்த்துச் செய்யுளும் நெடி லடி நான்காகவே நிகழ்வது காண்க.

தாழிசை:

இனித் தாழிசை யென்பது கலிப்பாவுறுப்பென்பது வெள் ளிடை. அது தாழம்பட்ட ஓசையாய் வருதலாற்றாழிசையெனப் பட்டது. அது தரவகப்பட்ட மரபினதாய் ஒரு பொருண்மேல் மூன்றடுக்கிவரும். கொச்சகக் கலியாயின் தனித்தும், பலவாயும், பிறவுறுப்பின்றியும் வரும். மூன்று தாழிசை ஒத்துவரின் ஒத் தாழிசைக் கலியாம். ஒத்தாழிசையை ஒ + தாழிசை யென்று பிரித்து ஒத்தாழிசை யெனக் கூறாது, ஒத்த + ஆழிசை என்று பிரித்து ஒத்து ஆழ்ந்த ஓசையென்றார் நச்சினார்க்கினியர்.

ஒரு தொடர்புபட்ட பொருளைக் கூறுமிடத்து, ஒத்த நியாயங்களையும் நிகழ்ச்சிகளையுங் கூறுதற்குத் தாழிசை போலச் சிறந்த உறுப்புப் பிறிதிலது.

விருத்தம்:

இனி விருத்த மென்பது யாதோவெனின் அது ஒருவகை யாப்பாம். அது தமிழில் மண்டில மெனப்படும்.

"ஒத்தாழிசையும் மண்டில யாப்பும்
குட்டமும் நேரடிக் கொட்டின வென்ப"

என்னுஞ் சூத்திரவுரையில்,

"நாற்சீரடி முற்கைபடத் துள்ளி வருதலே யன்றித் தாழும் பட்ட வோசை பெற்றும் வருமென்றார் . . இனிநாற் சீரடியாய் வருமாசிரியமும் வெண்பாவும் ஈற்றயலடியும் ஈற்றடியும் முச்சீராய் வருமென முன் விதித்தவை ஒருகால் நாற்சீராயும் வருமென்றற்கு மண்டிலயாப் பென்றார். அதுமண்டில வாசிரியப்பாவும் மண்டில வெண்பாவுமாம்.

"வேரல் வேலி வேர்க் கோட் பலவின்
சாரல் செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறு கோட்டுப் பெரும்பழந் தூங்கியாங் கிவ
ளுயிர்தவச் சிறிது காமமோ பெரிதே"

எனவும்,

"அறையருவி யாடா டினைப்புனமுங் காவாள்
பொறையுயர் தண்சிலம்பிற் பூந்தழையுங் கொய்யா
ளுறைகவுள் வேழமொன் றுண்டென்று ளன்னை
மறையற நீர் வாழிய மையிருங் குன்று"

எனவும் மண்டலித்து வந்தன" என்றார் நச்சினார்க்கினியர். மண்டலித்தல் வட்டமாதல். அது மண்டலம் என்னும் தொகைச் சொல்லிற் பிறந்தவினை. மண்டலம் மண்டிலமென மருவியும் வரும்.

மண்டலிப்பாம்பு, சுரமண்டலம், திங்கண்மண்டிலம் மண்டிலச் செலவு (குதிரைச்சாரி) முதலியன வட்ட மென்னும் வடிவுப் பொருளில் வந்தன. (தொடரும்)

---

# பண்டைத்தமிழ் நூற்பண்பு

[திரு. K. சிவராமகிருஷ்ண நாவலர் அவர்கள்]

(கக-ம் சிலம்பு: உ௯-ம் பக்கத் தொடர்ச்சி)

கொன்றை மரம் பொன் போலும் புதுமலரைப் பூத்தது என்பது இரண்டா மடியின் பொருள்: அதனால் தனித்திருந்த தலைவியின் பசலை போர்த்த பொன்மேனியைத் தலைவன் உன்னி வருந்துதல் விளம்பாமல் விளங்குகின்ற தன்றோ? செங்காந்தளின் செவ்விய மலர் அங்காந்த தென்பது மூன்றாமடியின் பொருள். அக்காட்சியால் மங்கையின் மலர்க்கரத்தை மனத் துன்னி மயங்கித் தவித்தல் அறையாமல் போதருகின்றது. ஏனைய அடிகளின் பொருளையும் எழுதி இயம்பப் புகின் ஏடிடந் தாரா தென்றிசைத்துப் பிறிது மாண்பில் புகுவாம். வாழ்க்கை இன்பத்தின் காரணப் பொருளாய் விளங்கும் காதலின் உண்மைப் பண்பையும் பண்டைத் தமிழ் நூற்கள் தெள்ளிதில் விளக்கிக் காட்டுகின்றன. காதல் ஆவது யாது? அதன் உயரிய பண்பு யாது? அஃது தோன்றுமாறு யாங்ஙனம்? என உலக நூலுலகில் வினாக்கள் எழுகின்றன. அவ்வினாக்கட்குப் பல மொழி நூற்களும் விடையளிக்கின்றனவாயினும் தண்டமிழ் நூற்கள் விடையளிப்பது உண்மை காண்போரால் பெரிதும் பாராட்டற்பாலது. "காதலாவது, வடிவும் பருவமும், குணமும், கல்வியும் ஒப்புமை உடைய இருவர் மாட்டுத் தோன்றுவதாயும், அழிவும் குறைவும் அற்றதாயும், இணையி லின்பத்தை இருவர் மாட்டும் எழுப்புவதாயும், உயரிய குணங்களின் காரணப் பொருளாயும், விளங்குவதெனத் தமிழ் நூற்கள் புகல்வது நுட்பமுந் திட்பமும் வாய்ந்ததாம். "இருவேம் ஆய்ந்த மன்றல்" எனக் குறிஞ்சிப் பாட்டில் தலைவி மொழிவதினின்றும், காதல் ஒருவர்மாட்டு நிகழ்வதன்றென்றும், இருவர்மாட்டும் ஒப்ப நிகழ்வதென்றும் உறுதியாய் விளக்கப்படுகின்றது. குறிஞ்சிப் பாட்டு காதலின் இயற்கையைத் தோழி வாயிலாய்ச் செவ்விதின் விளக்குகின்றது. சிலப்பதிகாரத்தில் கோவலன் கண்ணகியைப் போற்றிக் கூறும் மொழிகளிலும் காதலின் இன்பக்கவின் கமழ்கின்றது. ஐங்குறுநூறு, ஐந்திணை ஐம்பது முதலிய இரு சின்னூற்களிலுள்ள இரண்டு செய்யுட்கள் காதலின் பான்மையைக் கழறுதல் கருத்தூன்றிக் காண்டற் குரித்

தாகும். "காதலர் நாட்டுச் சேற்றுநீர் நம் மலைநாட்டுத் தேனோடு கலந்த பாலினுந் தீஞ்சுவை உடைத்து" எனக் காதலி இயம்புவதி னின்றும் காதலின் உயரிய பெற்றி நேர்மையில் துளங்குகின்றது. தலைவி தலைவன் கண்களைப் பொத்திய போது, அன்னோன் "காந் தட் கையால் என் விழி பொத்தியோய்! என் நெஞ்சம் விரும்பி னவர் நீ யலதும் உளர்கொல்லோ?" என ஐங்குறு நூற்றில் கழறு வது, காதலரின் அன்பின் உயர்வை விளக்கமாய்க் காட்டுகின்றது. திருக்குறளின் காதற் செவ்வியும் நேர்மை வாய்ந்ததாம். இத்த கைய பண்டை நூற்களில் வழங்கும் காதல் என்னுஞ் சொல் பிற்காலத்தில் பொருள் வேறுபட்டுப் பன்னூற்களில் காமம் என வழங்கப்பெற் றுளது. அஃது பண்டை நூற்களைப் பலபட ஆராயாத பண்பின்மையால் போந்ததே யாகும். உயரிய வாழ்க் கைக்குரிய ஒழுக்கத்தை உணர்த்தற்கும் செந்தமிழ் நூற்களே செவ்விய ஆற்றல் வாய்ந்தன. ஒழுக்கமின்றி வாழ்க்கை விழுப்ப முறாது. ஆதலின் அவ்வொழுக்கத்தை அறிவுறுத்தா நூற்கள் அரியனவென அறையப்படா. அவைகளால் ஆம் பயன் அறி யாமைக்காரிருளே யன்றி அறிவின் விளக்கமன்று. நேரிய ஒழுக் கத்தைச் சீரிய பண்டை நூற்களில் பதினென் கணக்கே பளிங்கு போல் விளங்குறப் பகர்கின்றன. திருக்குறள் ஒழுக்கத்தின் பெருக்கமாய்த் திகழ்கின்றது.

"ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்"

என அந்நூல் மொழிவது எத்துணை ஏற்றம் வாய்ந்தது! இல் வாழ்க்கை இனிவுறற்கு அன்போ டியைந்த அறமே ஆற்றவும் போற்றப் படுவதென்று அந்நூல் புகல்வது அருமையும், பெரு மையும் அமைந்ததாகும்.

"அன்பும் அறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது."

பிறர் சொல்லும் இன்சொல் பெரிதும் இன்ப மளிப்பதை உணர்ந்த ஒருவன் வன்சொல் வழங்குவனோ எனத் திறம்பட நுவ லும் திருக்குறட் பெருமை இருக்குமிடம் அறிஞர் அகமன்றோ?

" இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

பிறரை ஒறுத்தலால் பெறுமின்பம் ஓர்நாள்; ஆயின், அது புரியாது பொறுப்பார்க்கோ அழியாப் புகழ் எனக் கூறும் அமைவும் ஆற்றவும் ஏற்றமுடையதன்றே!

"ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்"

நாலடியாரும் ஒழுக்கத்தைக் கூறும் நயம் வாய்ந்த நூலாகும். அதனாலன்றோ,

" ஆலும் வேலும் பல்லுக் குறுதி
நாலும் இரண்டுஞ் சொல்லுக்குறுதி"

எனும் பழமோழியும் எழுந்துலாவியது?

ஆக்கள் பன்னிறம் அமைந்தனவாயினும், அவைகளின் பால் வெண்மை நிறத்திலேயே விளங்குதல் போல் உலகில் நல்வினை பலவெனத் தோன்றினும் அதன் பயன் ஒன்றே என அறிவுறுத்தும் பண்பும் அந்நூலில் அமைந்து கிடக்கின்றது. பல சமயங்களின் உட்பொருள் ஒன்றே எனும் உண்மையும் அப்பொருளில் அலர்ந்து விளங்குகின்றதென்பதும் அறிஞர்கள் கருதத்தக்கது. அற்பர் புரிந்த அல்லலைக் குறித்து அறிஞர் சினவாரென்றும், அல்லார், தம்மையே அரியர் என எண்ணியிருப்போராதலின் நொடிக்கு நொடி சினம் மிக்கு நெட்டைத் தூணில் முட்டிக் கொள்வரென மொழியும் பான்மையும் முழுதும் நேரியதாகும்.

"நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்
வேர்த்து வெகுளார் விழுமியோர்—ஓர்த்ததனை
உள்ளத்தா னுள்ளி உரைத்துரா யூர்கேட்பத்
துள்ளித்தூண் முட்டுமாங் கீழ்"

அரசியல் புரக்கு மாற்றையும், அரசினோ டொழுகு மாற்றையும் உரைசால் திருக்குறள் புரையறப் புகல்வது புகுந்து நோக்கிப் பொன்னே போல் போற்றத்தக்கதாகும். சாணக்கிய நூலினும் சால்புசான்ற நூலாய் அரசியல் அமைவை அழகுறப் பகர்கின்றது. ஆங்கில அரசியல் நூற்களினும் அரிய நேர்மையில் அரசி

யல் ஆக்கத்தை அந்நூல் புகல்வது அறிஞர்கள் ஆழ்ந்து கூர்ந்து நோக்கத்தக்கது. முதுமொழிக்காஞ்சியின் முதிய நீதிகள் பேதை யரையும் பேதையாக்கும். செந்தமிழ்க் காப்பியங்களின் செம் மையும் மும்மைசாலுலகில் மெய்ம்மை சான்றதாகும். காப்பியு விலக்கணம் காப்பியரால் கழறப்பெற்ற தாயினும் அதன் உண்மை, உலகநிலையை ஓவியம்போல் காட்டி, அதனுண்மைப் பயனை அறிவுறுத்துவதாகும்.

நாடகக் காப்பியங்களில் பெரிதும் இப்பண்பு பெருகி இருத் தல் வேண்டும். சிலப்பதிகாரத்தில் நாடகத்தமிழுஞ் சேர்ந்திருப் பதால் காப்பிய இலக்கணம் கவின்பெறக் கமழ்கின்றது. பண்டை நாடகக் காப்பியமாய்த் தண்டமிழுலகில் திகழ்வது சிலப்பதிகார மென்ற சீர்மைசான்ற நூலொன்றேயாகும். இந்நூல் கற்கும் போது முன்னே நிகழ்வது போன்றே நிகழ்ச்சிகள் நேர்மையாய் நவிலப்படும்: நூலின் நடையும் நுட்பநுவற்சி நிறைந்ததாகும். காதை இறுதியில் மேதினியோர்க்கு மூதறிவைக்காட்டும் நீதி மொழிகள் ஒதற்கியலா ஒண்மை வாய்ந்தனவாகும். மணிமேகலை யும் இதனேடொத்த மாண்பு பூண்பதாகும். சிறிய சொற்களில் அரிய பொருள்கள் செறிந்து விளங்கும் செவ்வி பண்டை நூற் களில் பரந்து பொலிகின்றது. இதனுண்மையை இனிய பாவொன் ருல் முதன்முதலில் விளக்கினம். உள்ளதை உள்ளவாறே தெள்ளிதில் விளக்கும் உயரிய கலைமாண்பு தண்டமிழ்க்குப் பண்டை நூற்களாலே பெறப்படும். பிற்போந்த கற்பனை வனப் பில் பொருளும் பயனுமில்லை யென்றே புகல்வேம். கற்பனை பகர் வார், கழறும் பொருளின் காட்சியினுண்மை மறந்து கண்டவழி பெருக்கியுரைத்தலே காமருடைத்தெனக் கருதினர் போலும்! இதனை உணர்ந்தன்ரே மனேன்மணீய ஆசிரியர் சுந்தரம் பிள்ளை யவர்களும்,

"பத்துப் பாட்டாதி மனம் பற்றினர் பற்றுவரோ
எத்துணையும் பொருட்கிசையு மிலக்கணமில் கற்பனையே"

எனக் கழறிப் போந்தார். ஆதலின், பண்டைத் தண்டமிழ் நூற்கு, பிற்பட்ட நூற்கள் ஒன்றும் ஒப்புமை ஆகாதென்றும், எம்மொழி நூற்களும் இம்மணி நூற்களின் செம்மைசால் செவ்விக் குச் சிறிது மிணையாகா தெனவுங் கூறி இக்கட்டுரையை இத்துடன் முடிக்கின்ரும்.

# மொழிபெயர்ப்பு-Translation

[திரு. T. B. கிருஷ்ணசாமி முதலியாரவர்கள் M.A., B.L.]

பூதஞ்சேந்தனார்

இயற்றிய

## இனியவை நாற்பது

கடவுள் வாழ்த்து

க. கண்மூன் றுடையான்றாள் சேர்தல் கடிதினிதே
தொன்மாண் டுழாய்மாலை யானைத் தொழலினிதே
முந்துறப் பேணி முகநான் குடையானைச்
சென்றமர்ந் தேத்த லினிது.

## Of Pleasant Things: Forty (Stanzas)

**by**

**Bhuthan Senthanar**

1. It is very pleasant to attain to the feet of thethree-eyed God (Siva); it is pleasant to worship Vishnu who wears the old-time sacred Tulsi garland; it is pleasant to go forth and propitiate the four-faced god (Brahma).

நூல்

உ. பிச்சைபுக் காயினுங் கற்றல் மிகவினிதே
நற்சவையிற் கைகொடுத்தல் சாலவு முன்னினிதே
முத்தேர் முறுவலார் சொல்லினி தாங்கினிதே
தெற்றவு மேலாயார்ச் சேர்வு.

2. It is pleasant to be educated even if one has to beg for it; it is very pleasant if the learning is helpful to one in an assembly of the learned; it is pleasant to hear the soft words of those who smiling display teeth like pearls; it is also pleasant to befriend the great.

ந. உடையான் வழக்கினி தொப்ப முடிந்தான்
மனைவாழ்க்கை முன்னினிது மாணுதா மாயி

னிலையாமை நோக்கி நெடியார் துறத்த
றலையாகத் தானினிது நன்கு.

3. The gift of a rich man is pleasant; if both parties get on agreeably, domestic life is very pleasant; otherwise think of the instability of fortune and without delay turn ascetic; that alone is pleasant.

ச. ஏவது மாறா விளங்கிளைமை முன்னினிதே
நாளு நவைபோகான் கற்றல் மிகவினிதே
யேருடையான் வேளாண்மை தானினி தாங்கினிதே
தேரிற்கோ ணட்புத் திசைக்கு.

4. It is pleasant to have children that do one's bidding without demur; it is pleasant to study daily and refrain from evil; pleasant the husbandry of a peasant who owns his own bulls; and if one thinks of it, it is very pleasant to have friends in the direction in which one proceeds.

ரு. யானை யுடைய படைகாண்டன் முன்னினிதே
யூனைத்தின் றூனைப் பெருக்காமை முன்னினிதே
கான்யாற் றடைகரை யூரினி தாங்கினிதே
மான முடையார் மதிப்பு.

5. It is very pleasant to see a troop of elephants; it is very pleasant not to feed one's flesh with other flesh; it is pleasant to live in a town on the bank of a forest river; it is pleasant too to be respected by men of honour.

சு. கொல்லாமை முன்னினிது கோல்கோடி மாராயஞ்
செய்யாமை முன்னினிது செங்கோல னாகுத
லெய்துந் திறத்தா லினிதென்ப யார்மாட்டும்
பொல்லாங் குரையாமை நன்கு.

6. Not to kill is pleasant; not to swerve from justice is pleasant to the King; to be a just king is pleasant indeed; not to speak harm or bear tales against anyone is good also.

எ. ஆற்றுந் துணையா லறஞ்செய்கை முன்னினிதே
பாற்பட்டார் கூறும் பயமொழி மாண்பினிதே
வாய்ப்புடைய ராகி வலவைக ளெல்லாரைக்
காப்படையக் கோட லினிது.

7. To do good to the extent possible to one is pleasant; the words of wisdom from those who are on the right path are pleasant; it is pleasant to get the help of those who are free from fault and honourable.

அ. அந்தண ரோத்துடைமை யாற்ற மிகவினிதே
பந்த முடையான் படையாண்மை முன்னினிதே
தந்தையே யாயினுந் தானடங்கா னாகுமேற்
கொண்டடையா னாக லினிது.

8. For Brahmins it is pleasant not to forget the Vedas; the prowess of a relation is pleasant; it is pleasant not to listen to the words of one without discipline or self-control even if he be a father.

கூ. ஊருங் கலிமா வுரனுடைமை முன்னினிதே
தார்புனை மன்னர் தமக்குற்ற வெஞ்சமத்துக்
கார்வரை யானைக் கதங்காண்டன் முன்னினிதே
ஆர்வ முடையவ ராற்றவு நல்லவை
பேதுறார் கேட்ட லினிது.

9. It is pleasant to have a strong horse to ride on; it is pleasant to kings to see at times of war, elephants like dark mountains, getting ferocious; it is pleasant to see the affectionate, listening attentively to words of wisdom.

ம. தங்கணமர் புடையார் தாம்வாழ்தன் முன்னினிதே
அங்கண் விசும்பி னகனிலாக் காண்பினிதே
பங்கமில் செய்கைய ராகிப் பரிந்தியார்க்கு
மன்புடைய ராத லினிது.

10. To see all one's dependants prosperous is very pleasant; see the widespread moon-light fill the beautiful heavens is pleasant; to be faultless in one's conduct and to be kind to all is pleasant indeed.

கக. கடமுண்டு வாழாமை காண்ட லினிதே
நிறைமாண்பில் பெண்டிரை நீக்க லினிதே
மனமாண்பி லாதவரை யஞ்சி யகற
லெனைமாண்புந் தானினிது நன்கு.

11. It is pleasant to see people prospering without getting into debt; it is pleasant to drive away unchaste women; it is most pleasant to keep away from those who have not nobility of mind.

கஉ. அதர்சென்று வாழாமை யாற்ற வினிதே
குதர்சென்று கொள்ளாத கூர்மை யினிதே
உயிர்சென்று தான்படினு முண்ணார்கைத் துண்ணாப்
பெருமைபோற் பீடுடைய தில்.

12. It is pleasant not to go about from town to town begging for one's food; scholarship that does not show itself in quiddities and oddities is pleasant; to refrain from going to one's enemies for help even when one is dying of starvation is good.

க௩. குழவி பிணியின்றி வாழ்த லினிதே
கழறு மவையஞ்சான் கல்வி யினிதே
மயரிக ளல்லராய் மாண்புடையார்ச் சேரும்
திருவுந்தீர் வின்றே லினிது.

13. Pleasant it is to have a baby growing up free from illnees; pleasant also the learning of one who is not afraid of an audience; pleasant is the prosperity of tbe noble minded, if it is stable and pure.

கச. மான மழிந்தபின் வாழாமை முன்னினிதே
தான மழியாமைத் தானடங்கி வாழ்வினிதே
ஊனமொன் றின்றி யுயர்ந்த பொருளுடைமை
மானிடவர்க் கெல்லா மினிது.

14. It is not good to outlive one's honour; it is pleasant to live within one's means and save one's status from ruin; to possess much spotless wealth is pleasant to all men.

கரு. குழவி தளர்நடை காண்ட லினிதே
அவர்மழலை கேட்ட லமிழ்தி னினிதே
வினையுடையான் வந்தடைந்து வெய்துறும் போழ்து
மனனஞ்சா னாக லினிது.

15. It is pleasant to see children stumbling in their walk; it is more pleasant than nectar to hear their babble; it is pleasant to be brave when death comes and frowns on one.

௧௫. பிறன்மனை பின்னோக்காப் பீடினி தாற்ற
வறனுழக்கும் பைங்கூழ்க்கு வான்சோர் வினிதே
மறமன்னர் தங்கடையுண் மாமலைபோல் யானை
மதமுழக்கங் கேட்ட லினிது.

16. It is pleasant not to be gazing at another's wife; rain showers are pleasant to parched up crops; it is pleasant for valorous kings to have at their gates big mountain-like elephants and hear them roaring with joy.

௧௭. கற்றார்முற் கல்வி யுரைத்தன் மிகவினிதே
மிக்காரைச் சேர்தன் மிகமாண முன்னினிதே
எட்டுணை யானு மிரவாது தானீத
லெத்துணையு மாற்ற வினிது.

17. To discuss wise matters before the wise is pleasant; to associate with the great is very pleasant indeed; to give away rather than beg is by all considerations very proper and pleasant.

௧௮. நட்டார்க்கு நல்ல செயலினி தெத்துணையு
மொட்டாரை யொட்டிக் கொளலதனின் முன்னினிதே
பற்பல தானியத்த தாகிப் பலருடையு
மெய்த்துணையுஞ் சேர லினிது.

18. To do good to one's friends is pleasant; pleasant to make friends with those who will never join one's enemies; pleasant to have a fort stored with various grains and impregnable to one's enemies.

௧௯. மன்றின் முதுமக்கள் வாழும் பதியினிதே
தந்திரத்தின் வாழுந் தவசிகண் மாண்பினிதே
எஞ்சா விழுச்சீ ரிருமுது மக்களைக்
கண்டெழுதல் காலை யினிது.

19. In the world that is the best spot where wise people live; the nobility of the ascetic who lives according to the laws ordained by the Sastras is most pleasant; more pleasant too to call upon and worship early in the morning one's own worthy parents.

---

(தொடரும்)

# நகையும் உவகையும்
# Wit & Humour

## கூடுவிட்டுக் கூடுபாய்தல்

[மகிழ்நன்]

(கக-ம் சிலம்பு கருஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

செல்வந்திரட்டுதல், இன்பம்நுகர்தல், சுற்றந்தாங்கல் ஆகிய இவற்றில் மூழ்கிக்கிடந்து, வாழ்க்கையின் வேறுபகுதிகளை மறந்திருக்கும் உயிர் கூட்டில் அடைபட்டதாகுமென்பதை முன்னர் எடுத்துக் காட்டினோம். வேறு சில கூடுகளையும் இப்பொழுது பார்ப்போம்.

குடும்பத்திற்கு அடுத்தபடியில் வருகின்ற கூடு, ஒருவர் பிறந்த குழு அல்லது குலமாகும். இக்கூடு நமது இந்திய நாட்டில் மிக வன்மையுடையதாய் அமைக்கப்பட்டிருக்கிறது. பிற நாடுகளில் இதைக் காண்டலரிது. இந்நாட்டில் தோன்றிய மேன்மக்கள் பலர் இக்கூட்டின் வன்மையையும் வெம்மையையுங் கண்டு அதை உடைத்தெறிய முயன்றனர். அவர்கள் முயற்சி பயன்படவில்லை. குலமாகிய கூட்டிற்குள்ளிருந்து எல்லாவற்றையும் நோக்கும் ஒருவர் எங்ஙனம் நெறி திறம்பாது வாழ்க்கை நடாத்தல் கூடும்? ஒரு குலத்துக் கொருநீதி வகுத்தல் தகுமென்று வாதாடுவார் இன்று முளர். தெளிவுபெற்ற அறிவுடையார் இதை ஒருபொழுதும் ஏற்றுக்கொள்ளார். குலநீதி பேசும் அவர்கள் தாமும் வாழ்க்கையை மாணவப்பருவம், இல்லறநிலை, வனத்தில் தவஞ்செய்தல், துறவு எனநான்கு கூறுக்கி இறுதியதாகிய துறவில் குலக்கூட்டிலிருந்து நீங்குதல் வேண்டுமென்று மொழிகின்றனர். வயதுமுதிர்ந்த நிலையில் தழுவப்படவேண்டுமென்று அவர்கள் கூறும் துறவின் பண்பாகிய குலக்கூட்டின் நீக்கம் ஏனைய மூன்று நிலைகளில் நிகழுமாயின் மக்கட்கூட்டத்தில் குழப்பம் உண்டாகி அழிவு நேர்தல் திண்ணமென்று பகர்கின்றனர். அற்றாயின் குலக்கட்டிலாத வேறுநாடுகள் அழிந்திடல்வேண்டுமன்றோ? அவ்வாறு நிகழக்காண்டிலம். ஆகலின் குலக்கூட்டிலிருந்து வெளிப்படுதலைக் கூடிய விரைவில் கைக்கொளலே நன்று. குலத்துக்

கொரு நீதி வகுப்பதால் மக்கட்டன்மை இழிவடையுமேயன்றி உயர்ந்து விளங்காதென்பது உறுதி.

குலத்திற்கடுத்த நிலையில் வருங்கூடு நாடு ஆகும். இயற்கை யாகவோ செயற்கையாகவோ அமைக்கப்பட்ட சில எல்லைகளுக் குட்பட்ட ஒரு நிலப் பரப்பில் வாழ்கின்ற மக்கள் நாளாவட்டத் தில் ஒரு மொழியைப் பேசும் இயல்பினராகின்றனர். இதுபற்றி அவர்களுக்குள் ஓர் இயைபுண்டாக, அவர்கள் தம்மை மற்ற மக் களினின்றும் வேறுபடுத்தித் தமது நலம்வேறு, பிறர் நலம் வேறு என்றெண்ணத் தொடங்கிவிடுகின்றனர். ஒரு மொழியைப் பேசும் மக்கள் தாமும், நிலத்தெல்லைபற்றி வெவ்வேறு பகுப்பின ராய் நின்று ஒருவரை யொருவர் தாக்குவதுமுண்டு. தமிழ் மக் கள், சேரநாட்டினராகவும், சோழநாட்டினராகவும், பாண்டி நாட் டினராகவும் பிளவுபட்டு நின்று ஒருவரோடொருவர் இயற்றிய கடும்போர்களின் முழக்கம் பண்டைத்தமிழ் நூல்களில் இன்றள வும் கேட்கின்றது. அப் போர்களால் நேர்ந்த அழிவையுந் தீமையையும் தமிழறிந்த எவரும் எண்ணி இரங்காதிரார்.

ஐரோப்பாக்கண்டத்தில் ஏறக்குறைய ஒரேமதமும் நாக ரிகமுமுடைய மக்கள், ஆங்கிலர், ஜர்மானியர், பிரான்சியர், இத்தாலியர், இஸ்பானியர் என்ற பல நாட்டினராகவும் சமூகங் களாகவும் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பிரிவினரும் தங்களுடைய நலம் மற்றவர்களுடைய நலத்தினின்றும் வேறுபட்டதென்று பிழைபடவெண்ணிப் பலவாண்டுகளாக நீர்ப்படை, நிலப்படை முதலியவற்றை ஒருவரறியாமல் ஒருவர் பலப்படுத்திக்கொண்டு சென்றதனாலன்றோ 1914-ல் போர் முழக்கங் கிளம்பிற்று? அந்த தனிபெரும்போரால் பிறந்த பயனன்றோ இந்நாளில் உலகெங்குங் குழப்பமும் வறுமையும் மிகுந்திருப்பது? மக்களெல்லோரும் ஒரு வரே, ஒருவர்க்கு வருந் தீமை மற்றவரையும் பற்றும், பிறர்நலமே நமது நலம், எனும் உண்மைகளைக் கடைப்பிடித் தொழுகுவதற்குந் தடைகளாக நிற்கின்ற நாட்டுப்பகுப்பும் சமூகப்பகுப்பும் ஒழிந்தா லன்றி உலகம் அமைதிபெறாதென்பதை நடுவு நிலைமையும் நல் லறிவும் வாய்ந்த மக்களெல்லோரும் உணருகின்றனர். இதனால், இப்பொழுது ஒரு கேள்வியை முடிப்பதற்கு உலகிலுள்ள நாடு களின் பிரதிநிதிகள் ஒன்றுகூடுவது வழக்கமாகிவருகின்றது. இத் தகைய கூட்டங்கள் பெருகப் பெருக மக்களெல்லோருக்கும்

ஒரே துரைத்தனம் ஏற்படுத்தலுங்கூடும். அந் நந்நாள் கடிதில் வருமாறு மாசகன்ற மனத்தார் உழைத்திடுவாராக. இதுகாறும் புகன்றதிலிருந்து நாடுங் கூடாமென்பது தெளிவாகின்றதன்றே ?

இங்ஙனம் ஒருமகனது உயிர் அடைபட்டிருக்கக் கூடிய கூடுகள் பலவாம். இவற்றிலிருந்தெல்லாம் உயிர்வெளிப்படுமாயின் அஃது இறைவன், உலகு, உயிர் என்ற முப்பொருள் உண்மை காணப் பக்குவம் வாய்ந்ததாகும். ஆராய்ச்சிக்குரியன இவை மூன்றே. இவ்வாராய்ச்சியே உயிரைக் கூட்டிலிருந்து வீட்டிற் புகுத்தும்.

இனி, மற்றொருவகையிற் கூடுவிட்டுக் கூடுபாய்தலைக் காண்போம். குமாகுருபரரியற்றிய செய்யுள் ஒன்று ஈண்டு நினைவிற்கு வருகின்றது.

"மலரவள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு"

என்பது அச்செய்யுள். இதில் நான்முகனாற் படைக்கப்படும் மக்களுடம்பைப் புலவோரால் இயற்றப்படுஞ் செய்யுளுக்கு ஒப்பிட்டு, முந்தியது அழியுமென்றும், பிந்தியது அழியாதென்றும் நுவலப்பட்டுள்ளது. புலவர் தமது அழகிய கருத்துக்களை ஆய்ந்தெடுத்த நறுஞ்சொற்களிற் புகுத்தி அமைக்கும் பாடல்கள், மக்கள் உடம்பை ஒத்தனவே. எனெனின், கட்புலனாகாத கருத்துக்கள் ஏறி நிற்குஞ் சொற்களைப்போல் உயிரேறிய உடம்பும் உளது. கருத்திற்கேற்பச் சொல்லை அமைப்பர் ஆழ்ந்தகன்ற அறிவினை உடையோர்; சொல்லால் இழுப்புண்டு கருத்தைக் கைவிடுவர் கற்றும் அறிவில்லார். கருத்திற்கேற்பச் சொல் அமைவதுபோல் உயிருக்கேற்ப உடலும் அமையும். உள்ளிருக்கும் உயிர் கல்வியாலும், நல்லிணக்கத்தாலும், ஆராய்ச்சியாலும் அழகுபெறப் பெற, அதற்குறைவிடமாகிய உடலும் ஒளியுந் தூய்மையும் அடைகின்றது. இதுபற்றியன்றே, 'அகத்தினழகு முகத்தில் விளங்கும்' என்பது. அதிவீரராம பாண்டியர் தமது நைடதத்தில்,

"நல்லெழில் பகருமுன் னூலோர்
இலங்கெழிலளவு குணமென உரைப்பர்"

(நைடதம் : அன்னத்தைத் தூதுவிட்டபடலம்-31.)

என்று கூறினர். ஈண்டு, அழகைக்கொண்டு குணம் துணியப் படுமென முன்னூலோர் மொழிந்தனரென்று கூறப்பட்டது. ‘எழில் பகரு முன்னூலோர்’ கூறுவது அவ்வாராயினும் பிற வாசிரியர் அகத்திற்கேற்கவே முகம் அமையுமென்று விளம்பினர். எங்ஙனமாயினும், அகத்திற்கும் முகத்திற்குமுள்ள நெருங்கிய தொடர்பை மறுப்பார் எவருமிலர். இறைவனால் வகுத்துக் கொடுக்கப்பட்ட இவ்வுடம்பாகிய கூட்டை ஏற்றவாறு திருத்தவும் உயிருக்குத் திறமையுண்டாதலின், ஒருவன் தன் வாழ்நாள் முடியு முனமே ஒருடம்பையே வெவ்வேறு தன்மையுள்ள கூடுகளாக மாற்றுதல் கூடும். நிற்க.

புகழ்படைத்த பெரிய நாடக ஆசிரியர்களெல்லாம் தமது உளத்திட்பத்தினால், ஊனுடம்பில்லாத மக்கள் பலரைப் படைத் திருக்கின்றனர். நாடக ஆசிரியர்களே யன்றி கற்பனைக்கதைகள் எழுதுவோரிற் சிறந்தோரும் இவ்வாறு செய்திருக்கின்றனர். ஆங்கிலப் புலவர்பிரானான ஷேக்ஸ்பியர் இயற்றிய நாடகங்களில் அவர் எத்தனை மக்களை உண்டாக்கி யிருக்கின்றனர்! (Tolstoy) டால்ஸ்டாய், விக்டர் ஹியூகோ, (Victor Hugo) எனும் இரு புலவரும் தாம் எழுதிய கதைகளிற் படைத்திருக்கும் மக்கள் எத்தனைபேர்! இங்ஙனந் தோற்றுவிக்கப்பட்ட மக்களை நினையுங் கால்,

“—மறைவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றவர் செய்யு முடம்பு”

என்பதற்கு மற்றொரு பொருளுந் தோன்றுகின்றதல்லவா?

புலவர்களாற் படைக்கப்பட்ட இம்மக்கள் யார்? உயிருட னிருப்பவர்களைக் காட்டினும் இவர்கள் மிகத் திண்மை வாய்ந்தவ ராய் விளங்குவது என்ன விந்தை! இவர்கள், தம்மைப் படைத்த புலவனின் வேறு உருவங்களன்றி வேறென்ன? நூலியற்றும் புலவன் தனது ஆற்றலால் வெவ்வேறு தொழிலும் வயதும் அறிவு நிலையையுமுடைய மக்களைப்படைத்து அவர்களுட் புகுந்து நின்று பேசுகின்றான், பாடுகின்றான், வினை நிகழ்த்துகின்றான்; இது கூடுவிட்டுக் கூடுபாய்தல் ஆகாது. ஆனால், கூட்டிலிருந்து கொண்டே பல கூடுகளிற் பாய்வதாகும். மனோன்மணீய ஆசிரியர், குடிலன், நடராஜன், வாணி, நிஷ்டாபரர், கருணாகரர் ஆகிய பல மக்களை உண்டாக்கி யிருக்கின்றனர்.

'மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்'
ஒவ்வான், ஒவ்வான்.

கூடுவிட்டுக் கூடுபாய்தல் நிகழும் பிறிதொரு வகையைக் காண்போம். கூடுவிட்டுக் கூடுபாய்தலில் இரண்டு நிலைகள் உள. இவற்றுள் முதலது கூடுவிடுதல், அதாவது, தான் குடி கொண்ட வீட்டிலிருந்து அல்லது கூட்டிலிருந்து உயிர்வெளிப்படுதல் இருந்த இடத்தைவிட்டுப் பெயராது ஒன்று வேறோரிடஞ் செல்லு மென்பது யாண்டும் இசையாது. இருந்த இடத்தைவிட்டுப் பெயர்ந்தே மற்றோரிடம் ஏகவேண்டும். இடம் விட்டு இடம் பெயர்தல் புடை பெயர்ச்சி எனப்படும். தமிழ் இலக்கணத்தில் இடங்கள் மூன்று; அவை தன்மை, முன்னிலை, படர்க்கை எனப் பெயர்பெறும். தன்மை 'நான்' என்பதாலும், முன்னிலை 'நீ' என்பதாலும் படர்க்கை 'அவன்' என்பதாலும் உணர்த்தப்படும். தன்மை எனுஞ்சொல் 'தான்' என்ற முதல் நிலையிலிருந்து வருவது. 'தான்' என்பது அகங்கரித்தலைக் குறிக்கும் (கரித்தல்=மிகுந்து நிற்றல், உப்புக்கரித்தல் என்பதையொக்க.) தான் நான் யான் எனும் மூன்று சொற்களும் பொருளொற்றுமையுடையன. இவற்றிற்குள்ளவேற்றுமையாதெனின், முதற்சொல்லில் வல்லெழுத்தும், இரண்டாஞ்சொல்லில் மெல்லெழுத்தும், மூன்றாஞ்சொல்லில் இடைஎழுத்துந் தோன்றுவது தான். திட்பமுடையதாகிய வல்லெழுத்து ஆணவத்தைக் குறிப்பது சொல்லாதே போதரும். இஞ்ஞான்று வழங்கும் பேச்சிலும் ஒருவனது அகங்காரத்தைச் சுட்டுங்கால் நான், யான் என்ற சொற்களை விலக்கி, 'தான்' என்பதை ஆள்கின்றோம். 'தான்' என்ற கர்வம், 'தான்' என்ற பெருமை, 'தான்' என்ற ஆணவம் என்று மக்கள் பேசுவதை இன்றும் கேட்கின்றோம். இதனால் நாம் அறிவது யாது? தான் என்ற தன்மை நிலையில் இருக்கும் உயிர் ஆணவத்தில் அழுந்திக் கிடக்கும். அது தன்னை முன்னிலைப்படுத்தி நோக்கவும், படர்க்கை இடத்தில் வைத்துப் பார்க்கவும் இயலாததாகின்றது. எதை நினைத்தாலுஞ் செய்தாலும் 'நான்' என்பதை விட்டகலாத உயிர்க்குப் புடை பெயர்ச்சி கிடையாது. அது தோன்றியவிடத்திலேயே கிடந்து கீழே செல்லும் உயிராகும். இதுபற்றியே நான், எனது, என்ற இரு பெரும் பற்றுக்களாற் கட்டுண்ட உயிர்க்கு உய்வில்லை என்றார் சான்றோர். கட்டுண்பதும் கூட்டிலடைபடுவ

தேயாகும். ஆதலின், தன்னைவிட்டு நீங்குதல் உயிரின் வளர்ச்சிக்கு இன்றியமையாது வேண்டப்படுமென்று தெளிக. உயிர் நீங்கியபின் யாதும் பயன்படுதலின்றி மண்ணாகிற கூட்டை நீக்கி வெளிவந்து இயங்கும் ஆற்றல் பெறாது அடங்கிக் கிடக்கும் உயிரினும் இரங்கத்தக்கது வேறொன்றில்லை. கூடுவிடுதல்பற்றி இவ்வளவு சாலும்.

இரண்டாவது; கூடுபாய்தல், அதாவது பிற கூடுகளிற்புகுதல். ஈண்டுப் பாய்தல் என்பதற்குக் குதித்தல் என்று பொருள் கொள்ளாது பெருகிச்செல்லல் என்று கோடல் வேண்டும். (வயலுக்கு நீர் பாய்கிறது என்றாற்போல்). தன்மை இடத்தில் நின்ற உயிர், முன்னிலை, படர்க்கையாகிய ஈரிடத்திற்கும் செல்லக்கூடுமாயின், அது கூடுவிட்டுக் கூடுபாய்தலேயாகும். பிறர்துன்பங் கண்டு அதைத் தமது துன்பமாக நினைத்து வருந்தக்கூடியவர் தன்மை இடத்தை விட்டுநீங்கிப் படர்க்கை இடத்திற்குப் போகின்றவரன்றோ? இப்பெற்றியுடையாரே உலகைச் சீர்திருத்தினவர், திருத்துகின்றவர், திருத்தப்போகின்றவர். இவர்களே மக்களுக்கு நேரும் இன்ப துன்பங்களைத் தம்முடையனவாகக் கருதி, ஒன்றைநீக்கி மற்றொன்றைப் பெருக்கமுயலுகின்றவர். அன்பாகிய வெள்ளம் ஒருவனது உள்ளத்திலெழுமாயின், அது அவனை நான், எனது என்ற ஒடுங்கிய நிலைகளிலிருந்து வெளியே ஈர்த்துக்கொண்டு சென்று பல்லுயிர்களின் உளநிலைகளையும் அவனுக் கறிவிக்கும். ஒருவன் மற்றோருயிரின் உணர்ச்சியொடு தன்னை ஒன்றுபடுத்திக் கொள்வானாயின், அவன் தன் கூட்டிலிருந்து நீங்கி அதன் கூட்டி லிடங் கொள்கின்றான். இதுவே கூடுவிட்டுக் கூடுபாய்தலாகிய அரிய ஆற்றலாவது கண்டுகொள்க.

அந்தண ரென்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்.

---

# வரலாற்றுப் பகுதி:
## History & Biography.

## திருவிதாங்கூர் ஓவியப் பெரும்புலவர் இராஜா இரவி வர்மர்

[திரு. S. ஈசுவரமூர்த்தியாபிள்ளை யவர்கள், ஓவியப்புலவர்]
(ஸ்ரீ ஈசுவர ஓவியப்பள்ளி, பாளையங்கோட்டை)

"மலரினில் நீல வானில் மாதரார் முகத்தில் எல்லாம்
இலகிய அழகை யீசன் இயற்றினன் சீர்த்தி யிந்த
வுலகினி லெங்கும் வீசி யோங்கிய இரவி வர்மன்
அலகிலா அறிவுக் கண்ணு லனைத்தையு நகரு மாறே."
(பாரதியார்)

இயற்கை யன்னை எழில்பெற இலங்கும் நாடு சேரநாடு. இது, நீலத் திரைக்கடல் ஒரு மருங்கும், மஞ்சுசூழ் மலைத்தொடர் மறுமருங்கும் வாய்ந்தநாடு; மலைவீழருவியும், நீர்மலிந்த யாறுகளும் நிறைந்த நாடு; நெடுநல் ஏரியும், கைப்பணிக் கால்களும் திக்கெங்கணுஞ் சிரணி செய்யும் நாடு; பரிதியின் கதிர்கள் பார்மீது படாது தடுத்து நிற்கும் தென்னை, பலா, கமுகு, வாழை, மா முதலிய மரப் பொழில்கள் செறிந்த நாடு; பச்சைப் பசுங்கிளியும், கீதமினிய குயிலும், வரிவண்டினமும் இன்னிசை யெழுப்பும் நாடு; பஞ்சின் மெல்லடிப் பாவையர் பலரும், தமிழ்மொழி பயந்த கவின்மலையாளச் சுவைபெறு சோபனம் நயம்பட வியற்றும் நிகரில்லா வஞ்சிநாடு.

அழகெனும் தெய்வம் இன்ப நடம்புரியும் இந்நாட்டிற் றோன்றிய பாவலரும், இன்னிசைப் புலவர்களும், ஓவியம் வல்லாரும் பலர். அறிவாற்றலிற் சிறந்த பெரும் புலவர் மணிகளுள், ஓவியம் வளர்த்த சீரியச் செல்வர்கள் கிளிமானூர் கோயிற் றம்பிரான் என்னும் அரச குலத்தினர். அக்குல நந்தாமணி விளக்காய்ப் பாரெங்கும் புகழொளி வீசி நன்னரோவியங்கள் தீட்டி நல்கிய பெருமான் இராஜா இரவி வர்மர். இம்மா பெரும் ஓவிய மணியை உலகினி லறியா தாரிலர். மன்னர் மாளிகைகளிலும், ஏழை மக்கள் குடிசைகளிலும், வணிகச் செல்வர் மளிகைகளிலும்

மாண்புற விளங்கும் செம்மை சால் ஓவியங்கள் இவர் பெயரை எஞ்ஞான்றும் நினைவூட்டுகின்றன. ஒல்காப் புகழ்பெற்ற ஓவியப் பெரியாரின் சீரிய வாழ்வை நம் நாட்டுமக்கள் நன்கறிதல் நன்றன்றோ ?

பல நூற்றாண்டுகளாகத் திருவிதாங்கூர் அரசர்களாற் போற்றப்பட்ட ஓவியப் புலவர்களுள் மிக்க புகழ்பெற்றவர் கிளிமானூர் இராஜ இராஜ வர்மா. இவர் மாணவர்களில் தலை சிறந்தவர் நமது இராஜா இரவி வர்மரே. இரவி தன்னிளமைப் பருவத்தே, உள்ளூற ஊறித் ததும்பி நின்ற ஓவியச் சுவையை, கையிற் கிடைத்த கரித்துண்டுகளால் தரைமீதும் சுவர்மீதும் தெற்றிமீதும் ஓவியங்கள் வரையலாயினர். அச்சுவை இராஜ இராஜ வர்மாவாற் பெரிதும் வளர்க்கப்பட்டு, இரவி வர்மரை ஓவியத்துறையில் தனி உயர் நிலையில் நிறுவியது. பின்னையோர் புகழ் அன்னையோர் ஆக்கமே.

இரவி மணியின் காலத்திற்குமுன் திருவிதாங்கூரில் எண்ணெய் ஓவியங்கள் கிடையா. இவரே இதனை முதன்முதற் றொடங்கினவராவர். அற்றை நாள் அந்நாட்டைக் காணச் சென்ற தியோடோர் ஜென்சன் (Mr. Theodore Jenson) என்ற ஆங்கில ஓவியப் புலவர் இவ்வினையியற்றுந் திறனை இவருக்குக் கற்பித்தார். இவர் வாழ்வில் புதியதோர் ஊக்கத்தை யளித்ததும் இவ்வோவியத்திறனே. பன்னாட் பழக்கமும், எந்நாள் முயற்சியும், தூண்டு சுடரேபோல் இவர் கைத்திறனை விளங்கச் செய்தன.

1874-ஆம் ஆண்டில் சென்னையில் நடைபெற்ற கவின்கலைப் பொருட்காட்சி (Fine Arts Exhibition at Madras) யில், நாயர் நல்லாளின் ஒப்பனையை இரவிவர்மர் நீவியக் கிழியில் தூரியங்கொண்டு மிக அழகிதாய் எழுதிய படம் ஒன்று, கவர்னர் துரையவர்களின் தங்கப் பதக்கத்தைப் பெறச் செய்தது. "வல்லவனுக்கு வல்லவன் வையகத்திலுண்டு" என்ற முதுமொழிக்கிணங்க அரசியல் ஓவியப்புலவராகிய இராமசாமி நாயுடு என்ற பெரியார் இவர் திறமைக்குச் சிறிதுந் தாழாது தலைதூக்கி நின்றனர். ஆனால், இவ்விருவரின் ஓவியப் போக்கைத் தாருவி ஆராய்ந்த வல்லுநர்கள் நாயுடு அவர்கள் மக்களுருவச் சாயல் (Portrait) வரைதலில் மேம்பட்டவரென்றும், இரவிவர்மர் கற்பனை ஓவியங்கள் தீட்டுதலிற் றேர்ந்தவரென்றும் கண்டார்கள்.

பெரும்புலவராம் காளிதாசரியற்றிய "சாகுந்தலம்" எனும் உயரிய நாடக நூலில், தலைவி சகுந்தலை தலைவன் துஷ்யந்தனுக் கெழுதிய காதற் கடிதத்தின் அகப்பொருட்டுறையைக் கவின் பெற அமைத்து வரையப்பட்ட ஓவியம், 1878-ஆம் ஆண்டில் நடைபெற்ற சென்னை கவின்கலைக் காட்சியில், கவர்னரின் பொற் பதக்கத்தை முதற் பரிசிலாகப் பெறச் செய்தது. அதன் கவின் கலைத் திறனைக் கண்டு மகிழ்ந்த அம் மாகாணத்தலைவராம் (Duke of Buckingham) பக்கிங்ஹாம் பிரபு பெரும்பொருள் வழங்கி அதனை வாங்கினர். அடுத்த ஆண்டில் அரசாங்க மாளிகை (Government House)க்கே அப் பெருமானின் உருவப்படத்தை வரைந்துதவும் நற்பணி இரவிவர்மர்க்கே கிடைத்தது.

இது முதற்றான் வர்மர்க்குப் புராணங்களிலும் இதிகாசங் களிலும் வரும் நற்கருத்துக்களை ஓவியங்களில் வரைந்து, புகழ் பெறக் காலம் வாய்த்தது. திருவிதாங்கூர் மன்னர் விசாகம் திருநாள் அவர்களால் ஏவப்பெற்று "இராமர் புறக்கணித்த சீதை" (Sita's ordeal of Banishment by Rama) என்ற ஓவியத்தை உயிருடன் ஒளிர்வதே போன்று இவர் சமைத்தார். இவ் ஓவியக் கவின்சிறப்பே இவரை பரோடா அரண்மனைக் கழைத்துச் செல் லக் காரணமாயிருந்தது. ஆண்டுறைந்த நான்கு திங்களில் இவர் தீட்டிய உருவப் படங்கள் பல. இவர் தலைசிறந்த ஓவியப் பெரும் புலவரென்ற பெயர் நாடெங்கும் பரவியது. இவரது ஓவியப் பணியை நாட்டிலுள்ள மக்கள் பலர் விரும்பினுர்கள்.

1890-ஆம் ஆண்டில் பரோடா அரசியலுக்கு இராமாயண காவியங்களின் வரலாற்றுத் துண்டுகளைப் பொருளாகக் கொண்டு பலரும் விரும்பத்தக்க வகையில் 14 படங்கள் வரைந்து உதவினர். இவரது ஓவியப் பணிக்குத் துணைபுரிந்தவர்கள் ஸி. இராஜ இராஜ வர்மா என்ற இவரது உடன்பிறந்தாரும், உடன்பிறந்தாளுமா வர். இவர்களுதவியுடன் வெளிவந்த படங்கள் பலவும் மாசிலா மணிகளாய்த் திகழ்ந்தன. அக்காலை, "தான் பெற்றபேறு யிவ் வையகம் பெறுக" என்ற பெருநோக்கங்கொண்ட இராஜா ஸர். டி. மாதவராவ் அவர்கள் பரோடாவிலிருந்து இரவி வர்ம ருக்கு வரைந்த கடிதம் ஒன்றில் பின்வருமாறு எழுதியுள்ளார்:— "என்னுடைய நண்பர்கள் பலர் நும் சீரிய ஓவியத்திறனைக் கண்டு மகிழ்ந்து அவர்கள் வேண்டுமென்று விரும்புகிற பெருந்

தேவையை நீர் ஒருவரிருவர் துணைகொண்டு வரைகின்ற ஓவியங்களால் நிறைவு செய்ய முடியாது. ஆதலின், நும் ஓவியங்களிற் பொறுக்கி எடுக்கப்பட்ட சிலவற்றை ஐரோப்பாவிற்கனுப்பி அவற்றிலிருந்து பல் ஓவியப் படிகள் அச்சிடுவித்து வருவித்துத் தேவைக்கு வழங்குவது பொருத்தமாயுள்ளது. அதன் வாயிலாய் நும்புகழ் பாவுவதுமன்றி நீவிர் நும் நாட்டிற்கு நற்பணி செய்தவருமாவீர்." இக்குறையை நீக்குவான் வேண்டி பம்பாயில் ஐரோப்பியர்களின் மேற்பார்வையில் படங்களின் படிகள் எடுக்க ஓர் அச்சுப் பொறி நிறுவப்பட்டுள்ளது.

இந்தியாவிலுள்ள பல ஓவியக் கூடங்களிலும் அழகொழுகக் காணப்படும் அவருடைய ஓவியங்கள் சிலவற்றை ஈண்டுக் குறிப்பிடுவது மிகையாகாது. திருவனந்தபுரம் மகாராஜா ஓவியக் கலாசாலையிலுள்ள படங்கள் ஐந்து: அவைகள், "தமயந்தியும் அன்னமும்" "உருக்குமாங்கதனும் மோகினியும்" "சகுந்தலாவும் கௌதமியும்" "கீசகனும் திரௌபதியும்," "திரௌபதியும் சிம்ஹிகையும்" என்பன. நான் அக்கலாசாலையில் ஓவியக்கலை பயின்று வரும்நாளில் இப்படங்களே நாடோறும் என் கண்வழிச் சென்று என் கலைப்பயிற்சிக்குப் புத்துயிரையும், செவ்விய சுவையையும் ஊட்டின. இவற்றை நோக்கியபின் இவற்றின் படிகளைப் பார்வையிடில் இப்படிகள் ஆயிரம் மடங்கு அழகு குறைந்தே தோன்றுகின்றன. ஏனையோர் முடிபும் என் கருத்தை யொத்திருந்தது. "ஆலையில்லா வூருக்கு இருப்பைப்பூச் சர்க்கரை" என்பதே போன்று, குவியல் குவியலாகப் பணமருளி இரவி வர்மா கைப்பட வரைந்த ஓவியங்களை வாங்க இயலாத பொதுமக்கள் குறைந்த பொருட் செலவில் அச்சுப்படிகள் வாங்கி மகிழ்வதேயன்றி வேறென் செய்வது?

பரோடா மகாராஜவின் அரண்மனையை ஒப்பனை செய்யப் பதினான்கு படங்கள் வர்மர் வரைந்தார். அவைகள் (1) "நளதமயந்தி" (2) "திரௌபதி துகிலுரிதல்," (3) "கிருஷ்ணனுந் தேவகியும்," (4) "கிருஷ்ணனும் வாசுதேவனும்," (5) "சுபத்திரையும் அர்ச்சுனனும்" (6)'கம்சனும், மாயையும்' (7) 'இளம் பரதனும் சிங்கக்குட்டியும்', (8) "இராதாகிருஷ்ணன்" (9) "சந்தனுவும் கங்கையும்" (10) "கீசகனுந் திரௌபதியும்", (11) "இராமர் சுயம்வரம்", (12) "விசுவாமித்திரரும் மேனகை

யும்., (13) "அரிச்சந்திரன் சந்திரமதி", (14) "சந்தனுவும் மச்சகாந்தனும்" என்பன.

மிக அண்மையில் வரையப்பட்டனவும், மிகச் சிறப்பாக எண்ணப்பட்டனவுமாகிய, ஒன்பது படங்கள் மைசூர் மகாராஜா அரண்மனையின் ஓவியக் களஞ்சியத்தில் அமர்ந்திருக்கின்றன.

ஆகவே, இரவி வர்மர் புகழ் புவிமீது புயலே போற் பரவிற்று. சிம்லா, பம்பாய், பூனா, கல்கத்தா, சென்னை, வியன்னா, இலண்டன், சிக்காக்கோ, என்னும் பெரு நகரங்களில் நடைபெற்ற கவின்கலைப் பொருட்காட்சிகளி லெல்லாம் இவருடைய ஓவியங்கள் நன்கு மதிக்கப் பெற்றுப் பதக்கங்களும் நற்சான்றிதழ்களும், இவருக்கு வழங்கப் பெற்றன. சுருங்கக் கூறின் இரவி வர்மர் இரவியே என்னப் புகழொளி வீசி அழியாப் புகழுடம்பு தாங்கி மக்களுள்ளத்தில் நிலவுகின்றனர்.

"ஞால வாழ்வினது மாயம் நவின்றிடற் கரியதன்றே"

ஆனால், இன்றோ அவர்,

"அரம்பை யூர்வசி போலுள்ள அமர மெல்லியலார் செவ்வி,
திறம்பட வகுத்த வெம்மான் செய்தொழி லொப்பு நோக்க,
விரும்பியே கொல்லா மின்று விண்ணுலக கடைந்து" விட்டார்.

—(பாரதி)

---

## அண்ணுமலைப் பல்கலைக் கழகம்—தமிழ்க் கிளை

தமிழ்ப் பேராசிரியராயிருந்து விலகிய ஸ்ரீலஸ்ரீ சுவாமி விபுலானந்தரவர்கள் இடத்தில் மதுரை வழக்கறிஞர் திருவாளர் S. சோமசுந்தர பாரதியார் M. A., B. L. அவர்கள் நியமிக்கப்பட்ட செய்தி கேட்டுப் பேருவகையடைகிறோம். நமது இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினருள் ஒருவரும், சிறந்த தமிழறிஞருமாகிய திருவாளர் பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள் தமிழ் உதவியாசிரியராக நியமனஞ் செய்யப்பட்டது பெருமகிழ்ச்சியை விளைப்பதாகும். இவ்விருவரும் தூய தமிழ்மொழியின் முன்னேற்றத்துக்குப் பெரிய ஊன்றுகோல்களாக இருந்து உழைத்து வருவார்களென நம்புகிறோம்.

## சென்னை, நகராண்மைக் கழகம்

தமிழும் சைவமும் இரு கண்ணெனப் போற்றிவரும் திருவாளர் S. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் B. A., L. T. நகராண்மைக் கழகக் கல்வி இலாகாத் தலைவராக நியமிக்கப்பட்டார்களென்பதறிந்து பெரிதும் மகிழ்கின்றோம்.

# அறிவியற் பகுதி—Science

## ஒளி நூல்—(Astronomy)

(திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்)

கண்ணுக்குத் தெரியாமல் ஒளிந்திருக்கும் பொருள்களை புலப்படுத்தும் ஒண்மையுடையதே ஒளி. மறைந்திருக்கும் பொருள்களைச் சோதித்து வெளிப்படுத்துவதால் அது சோதி எனவும் பெயர் பெறும். அதனாலேயே ஒளி, சோதி என்பன மறைபொருள்களைப் புலப்படுத்தும் ஞானத்திற்கும் பெயராயின.

ஒளி, சோதி என்பன இருளில் மறைந்து கிடக்கும் பொருள்களை விளங்கச் செய்யும் ஞாயிறு, திங்களாகிய கோள்களுக்குப் பெயராகி, விண்மீன்களையும் உணர்த்துகின்றன. ஆதலின் ஒளி நூல் என்பது ஞாயிறு, திங்கள் முதலிய கோள்களையும் ஏனைய விண்மீன்களையும் பற்றிக் கூறும் நூலாம். கோள்களும் மீன்களும் வானத்திலே உள்ள பொருள்கள். வானம் என்பது இட ஆகு பெயராய் வானத்தில் இருக்கும் பொருள்களையும் உணர்த்துவதாம். அதனால் வான நூல் என்பதும் ஒளி நூலே.

சோதிப் பொருள்கள் எண்ணற்றன. அவை அளவிட முடியாத தூரத்தில் விண்ணில் உறைவன. அவைகளைப்பற்றி ஆராய்வதென்பது பொதுவாக இயலும் காரியம் அன்று. அவைகளை ஆராய்வதற்கு அளவற்ற அறிவாற்றல் வேண்டும். சோதி நூற்கலையின் பயன்களோ வரம்பில்லாதன. இவ்வாருகச் சிறப்பு வாய்ந்த இக்கலை* உலகில் தோன்றி வளர்ந்து வருகிற வாலாறே இக்கட்டுரையில் கூறப்பெறுவது.

ஒளி நூலைப் போல மிகப்பழைமையானதும் பெரும் பயனுடையதுமாகிய கலை உலகில் பிறிதொன்றின்று. பூமியில் முதன் முதலாகத் தோன்றிய மக்களும் ஞாயிற்றையும் வெண் மதியையு

---

* கலை என்பது கல்வி. இரண்டிற்கும் பகுதி கல் என்பது. கலை என்பது ஐ விகுதி பெற்றது. கல்வி என்பது வி விகுதி பெற்றது. இவை இரண்டும் தொழிற் பெயர்கள்.

மாவது அறியாதிருந்திரார். ஆதலின், உலகத் தோற்றக் காலமே வான நூலின் தோற்றக் காலமாம் என்பது மிகையாகாது.

கிறிஸ்தவர்களுடைய வேதமாகிய பைபிளில் "கடவுள் உலகத்தைப் படைத்து, மதி ஞாயிறுகளையும் படைத்து, இவை காலமாறுபாட்டிற்கு அடையாளமாக இருக்கட்டும் என்று கூறினர்" எனக் கூறப்பெற்றிருக்கிறது. சில யூத அறிஞர் 'உலக முதல் மனிதனாகிய ஆதாம் என்பவன் விண்ணுறை மீன்களின் இயல்பையும் பயனையும் நன்கு அறிந்திருந்தான்' எனக் கூறுகின்றனர். கடவுளின் ஏவலால் வெள்ளம் உலகை அழித்தபின் நோவா என்பான் தன்னைச் சேர்ந்தவர்களோடு ஆசியாவின் வடகிழக்குப் பகுதியாகிய சீனத்திற்குச் சென்று தங்கினான் என்று சில ஆசிரியர் கூறுகின்றனர். "இது சீனர்கள் மிகப் பழைய காலத்திலேயே வானநூலை அறிந்து வளர்த்தமைக்குக் காரணம் ஆகலாம்," என டாக்டர் லாங் என்பவர் கூறுகிறார். ஆனால் சீன மக்கள் தாம் தோன்றிய கால முதலாகவே வானநூற் புலமையுடையரா யிருந்ததாக மொழிகின்றனர். நோவாவின் பேரனாகிய பேரரசர் ஹோயாங்டீ என்பாரே முதன்முதலாக வட துருவத்தைக்கண்டு, திசையறி கருவியையும் உண்டுபண்ணினதாக அவர்கள் சொல்லுகிறார்கள். மேலும் கிறிஸ்து பிறப்பதற்கு ஐந்நூற்றைம்பத்தோ ராண்டுகளுக்குமுன் இருந்த தங்கள் பேரறிஞர் கன்பூசியஸ் என்பவர் முப்பத்தாறு கிரகணங்களைப் பார்த்துக் குறித்து வைத்திருந்தனர் எனவும் அவர்கள் போற்றிப் புகழ்ந்துரையாடுகின்றனர். எது எப்படியாயினும் சோதிநூலுணர்ச்சியை மிகப் பழைய காலத்திலேயே சீனர் கொண்டிருந்தனர் என்பதற்குத் தடையில்லை.

சில ஆராய்ச்சியாளர் ஒளிநூற்கலை சாலடியரிடமிருந்து தோன்றியதாகச் சாற்றுவர்; சிலர் அது இந்துக்களிடம் பிறந்ததாக இயம்புவர்; மற்றும் சிலர் அது எகிப்தியரிடம் முளைத்ததாக இசைப்பர். பிளேபர் என்ற பேராசிரியர் எடின்பரோ நகரத்திய ராயல் சொசைட்டியில் படித்ததொரு ஆராய்ச்சியுரையில், "முதன் முதலாக ஒளிநூன் முறையை நன்றாக ஆராய்ந்து அதன் உண்மைகளை மிகவும் நுட்பமாகத் தெரிந்து கொண்ட பெருமை இந்தியரதே. இந்தியரே பண்டைக்காலத்தில் தலைசிறந்த வானநூற் புலவராக இருந்தனர்" எனக் கூறியிருக்கிறார். இது உண்மையே.

இந்தியர் என்பது இங்கே பண்டைய இந்தியராகிய தமிழ் மக்களையே உணர்த்தும்.

உலகத்தில் முதன்முதலாக மக்கள் தோன்றிய இடம் தமிழகம். அதில் தோன்றிய முதன் மொழி தமிழ். ஆதலின் தமிழ் மக்கள் முதன் முதலாகப் பல்லாற்றிலும் நாகரிகம் பெற்று வாழ்ந்தவர் என்று மொழிவதோடு சோதி நூலாராய்ச்சியினும் ஒப்பற்று விளங்கினர் என்பது வியப்பாகாது! அவர்கள்தான் முதன் முதலாக பூமி ஞாயிற்றைச் சுற்றி வருகிறதென்பதைக் கண்டுபிடித்த வீரகர். இவ்வுண்மை அவர்கள் தம் மாதங்களுக்கு சித்திரை, வைகாசி, ஆனி முதலிய பெயர்களை அமைத்திருப்பதிலிருந்தே புலனாகும். சித்திரை மீனை முதலாவதாக உடைய வீடு சித்திரை வீடு. விசாக மீனை முதலாவதாகிய உடையவீடு வைகாசி வீடு (விசாகம்—வைகாசி.) சித்திரை வீட்டில் பூமி தங்கும் காலமே சித்திரை மாதம். வைகாசி வீட்டில் பூமி தங்கும் காலமே வைகாசி மாதம். இங்ஙனமாகவே ஏனைய மாதங்களும் பெயர் பெற்றன.

ஞாயிறு அசைவற்றிருப்பது. பூமியே ஞாயிற்றைச் சுற்றி வருவது. பூமி சுற்றுவதனால் பூமியிலிருப்போர் அது அசையாமல் இருக்கிறதெனவும், இரவிலே பூமியைச் சுற்றி வருகிறதாகவும் பார்த்தறிவர். பூமி சித்திரை வீட்டில் வாழும்போது அதாவது சித்திரை மாதத்தில் இரவி அதற்கு நேர் எதிர் வீடாகிய ஐப்பசி வீட்டில் தங்குவதுபோலக் காணப்படும். இப் போலித் தோற்றத்தை மெய்யென நம்பிய ஆரிய மக்கள் சித்திரை மாதத்தை ஐப்பசி வீட்டிற்குத் தாம் இட்ட பெயராகிய மேடமதி என வழங்குவர்; வைகாசி மாதத்தை இடபமாதம் என்பர்; இங்ஙனமாகவே பிறமாதங்களையும் தாம் இரவித் தோற்றத்தில் மயங்கிய பெயர்களால் அழைப்பர், இதனுல் ஆரியருடைய நாகரிகத்தின் முன்னரே தமிழ் மக்கள் வானூற்புலவராய் நாகரிக வாழ்க்கையில் ஒப்பற்றிருந்தனர் என்பது வெள்ளிடை மலையேபோல் விளங்குகின்றது.

மைலீடஸ் (Miletus) என்ற தீவினராகிய தேல்ஸ் என்பவரே வானூலை முதன்முதலாக மேல்நாட்டில் பரப்பினவர் எனப்படுகின்றார். அவர் அக்கலையை எகிப்தில் கற்றறிந்தார். மைலீடஸ் என்பது கிரீஸ் நாட்டை ஒட்டியிருக்கிறது. கி. மு. 640-ல் பிறந்தவ-

ராகிய தேல்ஸ் தமது நாட்டினருக்கு இரவும் பகலும் ஏற்றத் தாழ்வாக இருப்பதன் காரணத்தையும், கிரகணங்கள் தோன்றும் விதத்தையும், அவைகளைக் கணக்கிட்டு முன்னரே அறிவிக்கும் வழியையும் காட்டினர். அவர் கூறிய ஒரு இரவி மறைவு (சூரிய கிரகணம்) அவர் மொழிந்தபடியே நிகழ்ந்தது.

அவருடைய மாணுக்கர் அலெக்ஸிமாண்டர் என்பார். அவர் ஸ்பார்டா (Sparta) வில் பகற்போதில் இரவியின் போக்கால் காலத்தை அளக்கும் ஓர் இடத்தைக் கட்டி முடித்து அதன் உதவியால் இரவிவீதியின் சரிவையும், அயனங்கள் தோன்றும் விதத்தையும் தெளிவுபடுத்தினர். அவர் பூமி உருண்டை வடிவினதென ஊகித்தறிந்ததோடு விண்மீன்களின் உருண்டை உருவையும் எடுத்துரைத்தார்.

இந்தியாவிலிருந்து எகிப்திற்கும், எகிப்திலிருந்து கிரீசிற்கும் பரவிய சோதிக்கலை இத்தாலி (Italy) நாட்டிலும் தலைதூக்கத் தொடங்கிற்று. பிதாகோராஸ் என்ற புலவர் அந்நாட்டில் இதை வளர்க்கத் தொடங்கினர். அவர் பூமி உருண்டை வடிவினதே என்பதைப் பல ஏதுக்களால் நிலைநாட்டினர். அவர் ஞாயிறு ஒரே இடத்தில் அசையாமல் நிற்பதையும் அதனைப் பூமி முதலிய கோள்கள் சுற்றிவருவதையும் தெளிவுறுத்தினர்; ஆனல் இதை அவர் தமது மாணவருக்குமட்டுமே புகன்றார். ஏனென்றால் இதை அவர் வெளிப்படையாகக் கூறியிருப்பாரானல் அக்காலத்திய அறிவற்ற மனிதர்களால் பல்லாற்றானும் துன்புறுத்தப்பட்டு அழிந்திருப்பார். அவருக்கு நூற்றுண்டுகளின் பின் இருந்த அனெக்சாகோராஸ் என்பார் சூரியன் ஒரு எரிப்பிழம்பு என்று கூறியதற்காக நாட்டைவிட்டுத் துரத்தப்பட்டார்.

வானநூலுணர்ச்சியில் முதன்மைபெற்றது கால அளவே ஆதலால், அறிஞர் இரவிமதிகளின் பெயர்ச்சிகளைக் கணித்தறிவதிலே ஈடுபட்டு மிக முயன்று வந்தனர். மேடல், யூக்டிமான் என்ற கிரேக்க அறிஞரிருவரும் அரும்பாடுபட்டுப் பல உண்மைகளைக் கண்டறிந்து பத்தொன்பது ஆண்டுவட்டத்தை (Cycle of 19 Years) ஏற்படுத்தினர்கள். இவ்வட்டம் கி. மு. 433 ஜுலை மாதம் 16ம் நாள் ஏற்பட்டு இன்றும் கிரீசில் நடைமுறையில் இருந்து வருகிறது. அது பொன்எழுத்துக்களில் பொறிக்கப்பட்டு இன்றும் பொன்எண் என்று போற்றப்படுகிறது.

பின் கிரீசில் உள்ள சினிடஸ் (Cnidus) என்ற ஊரில் ஈடோக்சஸ் என்ற அறிஞர் தோன்றி அங்கே ஓர் சோதி ஆராய்ச்சி மண்டபத்தைக் (Observatory) கட்டினர். அது அவர் இறந்த பல ஆண்டுகளின் பின்னரே வெளிப்பட்டது. அவர் கிரேக்க நாட்டிற்கு எற்றபடி இரவி மதிகளின் தோற்ற மறைவுகளைக் காட்டக்கூடிய ஓர் உருண்டையை அமைத்தார். அவர் இரண்டு நூல்கள் எழுதியுள்ளார். அவற்றுள் ஒன்று விண்வட்டத்தில் பன்னிரண்டு வீடுகளையும், அவை தம்முள் விண்மீன்களின் நிலை யையும் குறிக்கின்றது; மற்ருென்று அவைகளின் தோற்ற மறை வுக் காலங்களை விவரிக்கிறது. கி. மு. 276-ல் மாசிடன் (Macedon) நாட்டுமன்னராக இருந்த அரேடஸ் என்பார் அவர் காலம்வரை தெரிந்த சோதிநூற் கருத்துக்களை யெல்லாம் ஒன்றுசேர்த்துக் கவிகள் இயற்றினர். அக்கவிகள் இரண்டுபகுதிகளாகப் பிரிக்கப் பட்டு முதற்பகுதி ஈடோக்சஸ் செய்த உருண்டையையும், இரண் டாம்பகுதி கால மாறுபாடுகளை முன்னாலேயே அறிந்துகொள்ளும் விதத்தையும் விவரிக்கின்றன. இந்நூல்கள் இன்றுவரை பேணப் பட்டு வருகின்றன. (தொடரும்)

---

## Arithmetic—எண்ணளவை.

[திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள்]

(கக-ம் சிலம்பு: உஎஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆங்கிலேயரின் முன்னோர்களான டியூட்டன் வகுப்பினர் "பீச்" என்ற ஒரு மரத்தின் பட்டையில் எதையும் எழுதி வந்தார்கள். அதனால் "பீச்" என்பது புக்கே" என்ருகிப் பின் "புக்" என்று ஆங்கிலத்தில் இப்பொழுது வழங்குகிறது.

*Book* சுவடி

சுவடி என்பது சுவடு என்பதினின்றும் பிறந்ததாகும். சுவடு என்பது குறி அல்லது அடையாளம் எனப் பொருள் படும்; அடிச் சுவடு என்பது நோக்குக. தமிழில் "Book" என்பதற்கு இச் "சுவடி" யென்ற விழுமிய பொருள் பொதிந்த பெயரைத் தேடி யளித்த நம் முன்னோர் தம் பெருமை போற்றற்குரிய தன்ருே? ஆங்கிலத்தில் ஒருவன் அவனுடைய முன்னோர்களின் அடிச் சுவடுகளைப் பின்பற்றுகிருன் என்று கூறுவதுண்டு. அரிய பெரிய

கருத்துக்களின் அடிச்சுவடுகளை விட்டு வைப்பதற்கே நூல்கள் எழுந்தனவாகும். எனவே சுவடி என்ற பெயர்ப் பொருத்தம் ஓர்க.

பத்து பழங்கள் என்றால் பழங்களைக் குறித்து நிற்பதனால் பத்து என்ற சொல் பொருளுடையதாக இருக்கின்றது. அவ்வாறின்றி பத்து என்று மட்டும் கூறினால் 'பத்து' ஒன்றுமில்லை என்பதே பொருளாக நிற்கும், ஒரு பருப் பொருளையுங் குறியாது நிற்றலின். அவ்வாறே "இருபது" என்றுமட்டுங் கூறினால் அது "இருபது" ஒன்றுமில்லை என்பதையே குறிக்கும். ஆயினும் "பத்து" ஒன்றுமில்லை என்பதைப்போல் இரண்டு மடங்கானது "இருபது" ஒன்றுமில்லையென்னும் ஓர் அகத்தொடர்புள்ளமை மட்டும் புலனாகும். ஆங்கிலத்தில் இவ்வாறு பருப் பொருளொன்றையுங் குறியாது நிற்கும் எண்ணிற்கு "Abstract numbers" என்று பெயர். குறித்து நின்ற பருப் பொருளைப் பறித்து விடப்பட்ட எண் என்பது Abstract numbers என்பதின் விரிந்த பொருள். எனவே,

*Abstract numbers* ... வெற்றெண்
*Concrete numbers* ... தனைத்தெண்

Quantity என்பது தனைத்து என்னும் பொருளுடையதாதலின் தனைத்து என்னும் பருப்பொருட்டொகை குறிக்குஞ் சொல்லே யடியாக முன்பு quantity என்பதற்குப் பொருள் கொண்டாமாகலின் quantity என்பதைக் குறிக்கும் concrete என்பதற்கும் ஈண்டுத் தனைத்து என்றே பொருள் கொள்ளப்பட்டது.

*Subtraction* ... கழித்தல்
To subract ... கழிக்க
Subtractive ... கழி (உரிச்சொல்)
Subtractive number கழி யெண்.
Subtrahend ... கழியெண், கழிவது.
Minuend ... கழிப்பது (அஃதாவது கழிக்கக் கொடுப்பது)
*Remainder* ... மீதி, மிச்சம், எச்சம், கழிந்தது

முற்காலத்தில் ஒன்று என்பதைக் குறிப்பதற்கு ஒரு விரலையும், இரண்டு என்பதைக் குறிக்க இரண்டு விரல்களையும் அவ்வாறே

மூன்று நான்கு ஐந்து என்பவற்றைக் குறிக்க அவ்வத்தனை விரல் களையும் அதற்கு மேல்வரும் ஆறு ஏழு என்று வருபவற்றைக் குறிக்க மற்றொரு கையின் விரல்களையும் விட்டுக் குறிப்பிடும் வழக்கத்திற்கேற்ப விரல் என்று பொருள்படும் digitus என்னும் சொல்லிலிருந்து Digit என்பது பிறந்ததாகும். அவ்வாறே எல்லா எண்களையுங் கைவிரல்களாலேயே குறிக்கக் கூடுமானால் digit என்ற (விரலைக் குறிக்கும்) சொல்லை வழக்காற்றிற் கொண்டிருப்பது முறையே. ஆனால் அவ்வாறு குறிப்பிட முடியாதிருக்கும் நிலையில் அதை விடாப் பிடியாகக் கட்டிக் கொண்டிருப்பது ஆங்கிலேயரின் குருட்டுப் பழக்கமேயாகும். தமிழில் அவ்வாறு இடர்ப்பட வேண்டியதில்லை. கரும்பு பிரம்பு முதலியவற்றிற்குக் கணுக்கள் இருக்கக் காண்கின்றோம். அதைத் துணையாகக் கொண்டு நாம் முதற் கணு, இரண்டாங் கணு, மூன்றாங் கணு என எளிதிற் குறிக்கலாம். எனவே அச்சொற் சிறப்புடைமை பெறுதும்.

| | | |
|---|---|---|
| *Digit* | ... | கணு |
| *Integer* | ... | முழுஎண் |
| Like | ... | ஒத்த, ஒருமாதிரி. |
| Like quantities | ... | ஒத்த தனைத்துகள் |
| Unlike quantities | ... | ஒவ்வாத் தனைத்துகள் |
| *Value* | ... | மதிப்பு |
| Local value | ... | இடமதிப்பு |
| Intrinsic value | ... | உள்மதிப்பு |
| Numeration | ... | எண்ணிக்கை, எண்ணீடு |
| Notation | ... | குறியிடுகை, குறியீடு |

Figure என்பது எண்ணளவையில் குறியென்றே பொருள் படும், வடிவளவையிற் போன்று ஒரு வடிவைக் குறியாது ஒரு எண்ணையே குறித்து நிற்றலின்.

| | | |
|---|---|---|
| Arabic system | ... | அராபிய முறை |
| Roman system | ... | உரோமானிய முறை |
| Tamil system | ... | தமிழ் முறை |
| Sanskrit system | ... | சமஸ்கிருத முறை |
| *Decimal* | ... | பதின்; பதின் பகுப்பு |
| Decimal notation | | பதின்குறியீடு, பதின் பகுப் புக் குறியீடு |

Decimal point ... பதின்புள்ளி, பதிம்புள்ளி.
Deodecimal ... பன்னீரன் பகுப்பு
Deodecimal notation பன்னீரன்பகுப்புக் குறியீடு.
Vigesimal ... இருபதன், இருபதன்பகுப்பு
*Ordinary* ... வழங்கியலான
Ordinary notation வழங்கியற் குறியீடு
Cypher ... சுன்னம்
Zero ... ஓடு.
Two systems of notation ... குறியீட்டு இருமுறைகள்
Long system ... நெடு முறை
Short system ... குறு முறை.

நெடுமுறை என்பது ஆங்கிலேயரால் பின்பற்றப்பட்டு வருவதும், குறுமுறை யென்பது அமெரிக்கர்களாலும் ஐரோப்பியர்களாலும் பின்பற்றப்பட்டு வருவதுமாகும். தமிழ்முறை குறுமுறையை யொட்டியதே யாகும். அம்முறையே அறிவியற்கொத்த திருந்திய முறையாகும் என்று அறிவியல் வல்லோர் ஒப்புக்கொண்டுள்ளனர்.

Order ... அடுக்கு
First order ... முதலடுக்கு
Second order ... இரண்டாமடுக்கு.

Simple Rules, Compound Rules என ஆங்கிலத்தில் வழங்குமவற்றிற்கு நேர்பொருள் கூறின் நகையை விளைப்பதாகும். அவ்விரு தொடர்களும் அறிவியற் கொத்தனவல்ல ; வழக்கத்தை யொட்டியே பயின்று வருவன.

Simple Rules ... கலவா வெண்ணியங்கியல்
Compound Rules ... கலவை யெண்ணியங்கியல்
Operation ... இயக்கம்.

—காழி. சிவ. கண்ணுசாமி B. A.

---

# சமயமும் தத்துவமும்
# Religion & Philosophy

## * இங்கும், அங்கும்.

(ஆசிரியர். அ. வரதநஞ்சையபிள்ளை, தோரமங்கலம், சலகண்டபுரம்.)

இங்கும் அங்கும் என்னும் இச்சொற்கள் ஏழாம் வேற்றுமை யிடப் பொருளுணர்த்தும் சுட்டுச் சொற்கள். இவற்றில் இங்கு என்பது அணித்தாய இடத்தையும் அங்கு என்பது சேய்மை இடத்தையும் குறிக்கும். ஈண்டு, அவை ஆகுபெயர்ப் பொருள வாகி இவ்விடத்து நிகழ்ச்சிகட்கும் அவ்விடத்து நிகழ்ச்சிகட்கும் உளவாய இயைபுகளை யுணர்த்து வனவாம். 'இவ்விடம்' என்றது நமது கட்புலனுகை இவ்வுடலுடன் இவ்வுலகில் நுகரும் நுகர்ச்சி களையும், 'அவ்விடம்' என்றது காண்டல் அளவைக் கெட்டாததாகி ஆன்றோர்கண்ட உரையளவை முதலியவற்றால் கருதற்குரிய பிறநுகர்ச்சிகளையும் உணர்த்து மென்க.

"இங்கற்றபடியங்கு மெனவறியு நல்லறிஞ ரெக்காலமும் முதவுவா—
ரின்சொ றவரூர் பொய்ம்மையா மிழுக்குரையா ரிரங்குவார்
[கொலேகள் புரியார். . ."

என்றார் தாயுமான வடிகளாரும்.

இவ்வாற்றால், இவ்வுலகின் இயல்பிற் கேற்றவாறு காரணப் பொருட்கள் அருவ நிலையிலுள்ளன வென்றும், அவ்வவர் பயிற் சிக்கேற்ற பயன்களை முடிவில் அடைந்தே தீரவேண்டு மென்றும், இவை இயற்கைச் சட்டத்தின் மாறாத நியதியென்றும் விளங்கு கிறது. இவ்வுண்மையைச் சற்றுக் கூர்ந்து நோக்குவோம்.

---

* இஃது திரிசிரபுரம் சைவசித்தாந்த சபையின் 48-ம் ஆண்டு விழாக் கொண்டாட்டத்தின்போது பண்டிதர் திருவாளர். ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவைத் தலைமையில் நிகழ்த்திய சொற் பொழிவின் சாரம்.

நமது நனவிற்காணும் நிகழ்ச்சிகளே பெரும் பான்மையும் கனவினுந் தொடர்கின்றன.

"உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு"

எனத் தெய்வப்புலவரும், ஈண்டை நிகழச்சிக்கும் ஆண்டைய நிகழ்ச்சிக்கும் ஒருவாறு தொடர்புண்மையை விளக்கினர். காரணத்தின் பண்புகள் காரியத்தின் கண்ணும் தவறாது காணப்படும். தாய்தந்தையரின் உருவ அமைப்புக்களோ நடைநொடிபாவனைகளோ அவர்தம் மக்கள்பாற் சிறிதேனும் தோன்றாதிரா. உயர்ந்த பொன்னாற் செய்யப்பட்ட அணிகலன் மிக்க ஒளியையும், மட்டத் தங்கத்தா லாக்கப்பட்ட நகை குன்றியவிளக்கத்தையும் உடையவாய்த் தங் காரணத்தின் பண்புகளைச் சுட்டுவ தியல்பேயன்றோ? இவ்வேதுவே கருவியாகக் கொண்டு இங்கும் அங்கும் ஒத்த படியை அறிவேமாக. இவ்வுலகில் நம்மைச் சூழ்ந்து சுற்றியுள்ள பொருட்கள் எவையும், தோன்றல், வாழ்தல், முடிதல் என்னும் முத்திறத் தொழிற் பாட்டை மேற்கொண்டு நிகழ்வனவாகக் காண்கின்றோம். அவற்றை முறையே ஆராய்வோமாக.

(க) தோற்றம்.

ஓர் வித்தினின்றும் முளை கிளம்புகின்றது. ஆயினும் அம்முளையை உள்ளுற வளர்த்துப் பின் வெளியிற் றோற்றுவிக்கும் சத்தி, அவ்வித்தில் அருவமாய்ப் பொதிந்து நிற்கின்ற தென்பதனை யாரோ மறுப்பவர்? முட்டையினின்றும் பிறக்கும் பறவைகள் வெளிப்படும்போதே எல்லா வுறுப்புக்களும் நிறைவுற அமைந்து வருகின்றன. அம்முட்டைக்குள் அவற்றை அங்ஙனம் வளர்க்கும் தெய்வ இயற்கை யாற்றல் கரந்துள்ளதன்றோ? தோற்றத்தின் முன்னுள்ளது யாது என்னுங் கேள்விக்கு விடை "இன்மையே." என்பதுதவிர வேறியாது? முடிவின் பின்னுள்ளது யாது என்பதற்கும் இவ்விடையே யன்றி வேறு என் கூறுவது? இதனால் எல்லாப் பொருட்களும் இன்மையினின்று தோன்றி முடிவில் இன்மையாகவே முடிகின்றன என்றறியக் கிடக்கின்றது. இதனைத் தருக்கநூலார் முன்னின்மை, பின்னின்மை யெனக்கூறி இவ்வபாவமும் (இன்மை) ஓர்பொருளென்றெண்ணுவர். ஆ! என்னே புரட்டு! இன்மை ஓர் உண்மையைத் தோற்றுவிக்கு மென்பது முற்றும் முரணன்றோ! எனின்,

ஈண்டு இன்மை என்றது, நம்கட்புலனுகா அருவ வடிவினைக் குறித்ததாமென்றும், அருவமே உருவத்திற்குக் காரணமாமென உணர்த்தியதல்லது முழுவதூஉமின்மையைச் (அத்யந்தாபாவம்) சுட்டியதன்றென்றும் விடுக்க. இவ்வாராய்ச்சியால், ஒருபொருள் அருவநிலை அருவுருவநிலை உருவநிலை என்னும் மூவகையாயுளதா மென்பது தெளியப்பட்டது. அருவினின்றும் அருவுருத்தோன்றி யதன்பின்னரே உருவப்புலப்பா டுளதாமென்றும் கண்டாம். இதுவே தோற்றத்தின் ஒழுங்கு. இஃது நாம் இங்கறிந்தபொருள். நம் சைவசித்தாந்த நூலுள், உலகத்தோற்றமும் இம்முறையானே நிகழ்வது காட்டப்பட்டது. இறைவனது சிவம், சத்தி, நாதம், விந்து என்னும் நான்கு அருவநிலைகளும், சதாசிவம் என்னும் ஓர் அருவுருவநிலையும், மகேச்சுரன், உருத்திரன், விண்டு, பிரமன் என்னும் நான்குருவநிலைகளும் ஆகிய ஒன்பான் நிலைகளும் உலகத் தோற்ற முதலியவற்றிற்குக் காரணமாமென இயற்கைமாருத உண்மை சுட்டப்படுகின்றது. இஃது நாம் அங்கறியும் பொருளாம்.

இன்னுங்காண்மின். ஓர் மகவைப்பெறுவோர் தந்தையுந் தாயுமென்னு மிருவரன்றோ? இவ்வியல்பு, இயங்கியற் பொருள் கட்கேயன்றி நிலையியற்பொருளவாகிய மரம் செடிமுதலிய வற்றிற் கும் பொதுவேயாம். ஆண்சத்து, பெண்சத்து என்னும் இவ் விரண்டும் மரவர்க்கங்களின் உறுப்புக்களிற் றனித்தனி யுள்ள தென்றும், அவை ஒன்றோடொன்று கலந்தவழியே காயும் கனியு மாகிய பயனைப் படைக்கின்றனவென்றும் இக்காலத்து மாநூற் கலைஞரும் கண்டுரைக்கின்றனர். காரணத்தின்றன்மை காரியத்துப் புலனுகுமென முற்குறித்தவாறே இவ்வுலகைத் தோற்றுவித்தற் குப் பால் அல் தன்மையில் வேறுபட்ட இருபொருட்கள் ஒன்றை யொன்று பிரிப்பறப் பொருந்திக் கலந்துளதாதல் வேண்டுமெனக் குறிக்கலாம். இவ்வுண்மையை நாம் இங்குக் கண்டாம், நம் சைவ ஞான நூலும்,

> "சத்தியுஞ் சிவமுமாய தன்மையிவ் வுலகமெல்லா
> மொத்தொவ்வா வாணும்பெண்ணு முயர்குணகுணியுமாகி
> வைத்தன னவளால்வந்த வாக்கமிவ் வாழ்க்கையெல்லாம்
> . . . . . . . . . . . . "

என இதனையே சுட்டுகின்றது.

உயிர்ப்பொருட்கள் ஆண்பெண்ணெனப் பகுப்புற்றுக் கலக்கு மாறே உயிரில் பொருட்கள்யாவும் குணகுணி என்னும் பாகுபா

டுற்றுப் பிரிப்பற நிற்கின்றன. சத்தியும் சிவமும் ஒருங்கியைந்து நின்று உலகமுண்டாக்குதலின் இங்ஙனம் எல்லாப்பொருட்களும் அக்காரணத்தின் அமைப்புமுறையில் வழாது தோன்றுவன வாயின.

மக்களைப் பெறுவதூஉம் பெற்று வளர்ப்பதூஉம் பெண்மைக் குரிய இயல்பாகவே அமைந்ததென்னை? ஆண்மைக்கு இயல்பாக மகப்பேறு தோன்றாமைக்குப் பொருட்டியாது? இதற்குக் காரணங் கூறும் சமயங்கள் சைவமொன்று தவிர மற்றில. சிவம் சுத்த ஞானமயம். சத்தி முழுக்கிரியாரூபம். இறைவன் ஒருருக் கொள்ளவேண்டின் அருட்சத்தியே தரல்வேண்டும், தூலமாகிய தொழில் நிகழ்ச்சிக்கும் தோற்றத்திற்கும் அவளே காரணமாத லின். இவ்வுண்மையை நம் உடல் அமைப்பிலுங் காணலாம்.

அறிகருவிகளாகிய கண் முதலியன பொருளை அறிந்து இச் சையை விளக்கின்றன. அவை சூக்கும வடிவின. அவ்விச்சையை நிறைவேற்றற்கண் கைகால் முதலிய தொழிற் கருவிகள் முனைந்து வினைபுரிதல்வேண்டும். இவை தூலவடிவின இவ்வாற்றால் அறிவு முதிர்ந்த பரம்பொருள் இறைவனென்றும் செய்கைமுதிர்ந்த வலிமை சிவசத்தி என்றும், நமது அறிகருவிகளும் வினைபுரி கருவி களும் சேர்ந்து ஒருங்கு தொழில் நடாத்தி வாழ்வளிப்பது போன்று சிவமும் சத்தியும் கலந்து அம்மையும் அப்பனுமாகி உயிர்கட்கு வாழ்வருள்கின்றதென்றும் இங்கும் அங்கும் பொருள் ஒப்புக் காண்கின்றோம். அறிகருவிகள் தொழில் செய்யா. தொழில் புரிகருவிகள் அவ்வாறறியா. அறிவில்வழிச் செயல் நடவாது. செய்கையில்வழி அறிவாற்பயனின்று. இஃது ஆணில் வழிப் பெண்ணில்லை பெண் இன்றேல் ஆணுமின்று என்னும் வியவகாரத்தோடொத்தது. மாதிருக்கும் பாதியனாக (அர்த்தநா ரீச்சுர மூர்த்தம்) எம்பசுபதி உருக்கொண்டதும் இதனையே குறிப்பதாம். இப்பொருள் யானே கூறும் உத்திவாதமென்று கருதன்மின்!

திருநாவுக்கரையர் விரும்பியவாறு இறைவன் திருவையாற்றிற் காட்டிய கைலைக்காட்சியின் நுட்பம் இஃதேயாம். ஆளுடைய அரசு கைலைக்காட்சியைக் கண்டு வியந்து ஓதியருளிய பாசுரம் யாவரும் அறிந்ததே. அவர் கண்ட காட்சிகள்தாம்யாவை

" காதன்மடப்பிடி யோடுங்களிறு வருவன " கண்டார்.
" கோழிபெடையொடுங் கூடிக்குளிர்ந்து வருவன " கண்டார்.
" வரிக்குயில்பேடையொ டாடிவைகி வருவன " கண்டார்.

பிறவும் இவ்வாறே. இக்காட்சி நமக்கு நினைவூட்டுவது யாது? எங்கும் நிறைந்த சிவத்தின்றன்மை உலகைச் சூழ்ந்து தொழிற் படுத்துகின்றது என்னு மிஃதே யன்றோ?

அறிவாற் சூழ்வுழிச் செய்கையும் செய்கை நிகழுங்கால் அதனைத் திறம்பட ஆற்றற்கேற்ற அறிவும் ஒன்றினொன்று தொடர்ந்து தோன்றல் யாம் இங்கறியும் பொருளன்றோ? இதனையே சிவசத்திகளின் செயல்களினும் காணலாம்.

" சிவம்சத்தி தன்னையீன்றுஞ் சத்திதான் சிவத்தையீன்று
மூவந்திருவரும் புணர்ந்திங் குலகுயி ரெல்லாமீன்றும்
பவன்பிரமசாரியாகும் பான்மொழி கன்னியாகும்........."

என்றோதுதலும் காண்க.

ஓர் பெண்ணுக்கும் ஆணுக்கும் நேர்பட எவ்வெவ்வகையின் முறை கூறலாம்? ஒருத்தி தன் மணாளனுக்குப் பெண்டாட்டியாவாள், மகனுக்குத் தாயாவாள், தந்தைக்கு மகளாவாள். தன்னுடன்பிறந்தோர்க்குத் தங்கை அல்லது தமக்கையாவாள். இதன்மேற்போந்த முறை வேறில்லையன்றோ? இங்ஙனமே எமது பரமனார்க்கு எமது அன்னையாகிய சிவசத்தியும் முறையுடையவளாகின்றாள் என மணிவாசகப்பெருமானார் உரைத்தருளிய பாசுரமுங் காண்மின்!

" ......இமவான்மகட்குத்—தன்றணைக்கேள்வன் மகன்றகப்பன்
றமையனெம்மையன்......"

என்றதன் கருத்தியாது? சிவத்தின் ஆணைவழி நின்று சத்தி தொழிற்படலால் தலைவியை ஒத்தது சத்தியின் வழித்தாய்ச் சிவம் தோற்றலிற் றாயாயிற்று.

ஒரோவழிச் சிவத்தின் அதீனத்தில் அடங்கி நிற்றலின் மகளாயிற்று. ஞானமுன்னும் செயல்பின்னும் நிகழ்தலாற் றங்கையாயிற்று. இங்ஙனம் உலகில் நாம் கொள்ளும் முறைகளை முற்றும் சத்திபெற்றிருப்பது நாம் இங்கும் அங்கும் அறிந்து களிக்கும் பொருளாயவாறு நோக்குக. ஓர் இளமகவு, தன் தாய் காட்டிய பின்பே தந்தையை உணர்கின்றது. அங்கும் " தாயுடன் சென்று பின்றாதையைக்கூடிப் பின்றாயைமறந்-தேயுமதே நிட்டை " என்றார் பட்டினத்தடிகளும். (தொடரும்)

# சிறுகதைகள்-Short Stories

## ஜோன் வரலாற்றுச் சுருக்கம்
## (Life of Joan of Arc)
## (1412—1431)

(வ. சுப்பையா பிள்ளை எழுதியது)

பிரான்சு நகரத்தில் டாம்ரிமி என்னுஞ் சிற்றூரில் ஜோன் என்னும் வீரப் பெண்மணி 1412-ம் ஆண்டில் பிறந்தனள். இவள் தந்தையார் டாம்ரிமிக்கு நாட்டாண்மைக்காரரா யிருந்தனர். இவருக்குச் சில ஆட்டுமந்தைகளுண்டு. இவர் தமது மகளை மிகவும் அருமையாக வளர்த்து வந்தார்.

ஜோன் தனது தந்தையாரால் கல்வி கற்பிக்கப்படவில்லை; எழுதவும் படிக்கவும் தெரியாள். ஆனால் இவள் வீட்டுவேலைகளைச் சுருசுருப்புடன் செய்வள். நூல் நூற்பதிலும், தையல் வேலையிலும் திறமை மிக்கவள். இவள் இயற்கையிலேயே சிறந்த அழகும், உடல் வலிமையும், அஞ்சா நெஞ்சமும் படைத்தவள். ஆனால் கடவுளிடத்தில் அளவில் அன்புடையவள். அதனால் தன் பெற்றோரும் மற்றோரும் அறியாமலே தன் வீட்டிற் கருகேயுள்ள கோயிலுக்குள் அடிக்கடி சென்று கடவுளை வணங்கிவருவள்.

இவள் இத்துணைச் சிறுமியாய் வளர்ந்து வருங்காலத்தில் 1425-ம் ஆண்டில் பிரான்சுக்காரர்க்கும் ஆங்கில நாட்டினர்க்கும் போர் துவங்கியது. ஆங்கிலர் சார்பாகக் கிளம்பிய ஹென்ரி என்னுங் கள்வர் தலைவனொருவன் தன் துணைவர்களுடன் டாம்ரிமிக்குட் புகுந்து ஆடுமாடுகளைக் கவர்ந்து சென்றனன். உடனே பார்தலோமி என்னும் பிரான்சு படைத்தலைவன் அக்கள்வர் தலைவனைத் துரத்தியடித்து ஆநிரைகளை மீட்டுக் கொண்டுவந்து உரியவர்களிடம் ஒப்புவித்தனன்.

அப்போது ஜோன் அதனைப் பார்த்துப் பெருமகிழ் வுற்றனள். அதுமுதல் ஐந்தாண்டு வரையில் அவள் தெய்வக் காட்சியும், தெய்வ ஒலிகளும் கண்டும் கேட்டும் வந்தாள். சில அருண்

முனிவர்களை அவள் நேரிற் கண்டு வணங்கியதுமுண்டு. பின்பு ஜோனும் அவள் தன் ஊரவரும் நியூஷாட்டல் என்னும் ஊரைப் புகலிடமாய்க்கொண்டனர். அப்போது டாம்ரிமி முழுதும் பகைவர்களால் எரிக்கப்பட்டுப் பாழாய்க் கிடப்பதைக் கண்ணுற்று ஜோன் வெயிலிற்பட்ட புழுப்போற் றுடிதுடித்தனள். அப்போது 'ஜோன் தனது நாட்டைப் பாதுகாக்கக் கடமைப் பட்டிருக்கின்றாள்' என்னுந் தெய்வ ஒலி அவட்குப் பலமுறை கேட்டது.

அதுமுதல் ஜோன், "குதிரை ஏற்றமும், போர் முறையும் பயின்றறியாத யான், வாளும் ஈட்டியும் பிடித்தறியாத யான் போர் மேற் செல்வது எவ்வாறு," என்று அடிக்கடி எண்ணினள். எனினும் அவள் படைத்தலைவியாகப் போருக்குச் செல்லத் துணிந்தனள். ஆனால் எங்ஙனம் போவது என்பது அவளுக்குப் புலப்படவில்லை. கடைசியாக ராபர்ட் என்னும் பிரான்சு நாட்டுப் படைத்தலைவரிடஞ் சென்று தனது எண்ணத்தைத் தெரிவித்தாள். அவர், 'இவள் கிறுக்குப்பிடித்தவள்போல் பிதற்றுகின்றாள்' என்று அவளைக் கன்னத்தி லடித்து, அவள் தந்தையாரிடம் போகுமாறு அனுப்பிவிட்டார்.

பின்னர் ஆங்கிலர் ஓர்லீன்சு என்னும் நகரை முற்றுகையிட்டனர். அப்போது ராபர்ட் என்பவர் மனங்கலங்கி ஜோனிடம் வலிய வந்து அரசிளைஞனைக் காணுமாறு அவளுக்கு ஆணையும் கூரிய வாளொன்றும் தந்து அனுப்பினர். பின்பு இவள் எழு போர் மறவர்களோடு பதினொருநாள் குதிரைமேற் சென்று அரசனிருப்பிடத்துக்கு வந்து சேர்ந்தனள். இவள் அழகுமிக்கவளாயிருந்தும் தெய்வத் தன்மையுடையவளாய்க் காணப்பட்டமையின் வழியில் இவள்மீது தவறான அன்பு பாராட்ட இவள் கூட வந்தவர்கட்கு மனம் வரவில்லை என்பது இங்கே உன்னிக்கற்பாலது. அரசிளைஞனும் அமைச்சர்களும் ஜோனின் அருஞ்செயல்களைப் பலவகைக் கேள்விகளாற் சோதித்து உண்மை தேறிப் பின்பு அரசிளைஞன் அவளை ஓர்லீன்சுக்குப் போகுமாறு இருப்புச் சட்டையும், திறமிக்க குதிரைகளும், தகுந்த படையும் கொடுத்து அனுப்பினான். புறப்படுமுன் தெய்வக் கட்டளையின்படி சிறந்த வாளொன்றும் கிடைக்கப் பெற்றாள். நேரே ஓர்லீன்சுக்குச் சென்று ஆங்கிலப் படையைப் பல்லிடங்களில் தோல்வி பெறச் செய்தனள். ஒருநாள் போர்நடக்கும்போது அவள் மார்

பில் ஓர் அம்பு ஊடுருவிப்பாய்ந்து அதனால் குருதிவெள்ளம் பெருக்கெடுத்தது. அவள் அவ்வம்பை இடது கையால் பிடுங்கி விட்டு அதற்கு மருந்தும் இடாமல் போர்மேற் சென்றனள். இவளது மனத்திட்பந்தான் என்னே! இவள் போருக்குச் செல்லும் போதும், போர்துவங்கும் போதும் கடவுளை வணங்கு வள். இவள் தான் முன் உறுதிகூறியபடி ஓர்லீன்சைப் பிரான்சு நாட்டினர்க்கு மீட்டுக் கொடுத்தனள்.

இன்னுந் தன் அரசனுக்கு ரீம்சில் முடிசூட்டவும் பேரவாக் கொண்டு அரசனிடஞ் சென்றாள். அரசன் அவளை மிகவும் அன் போடு வரவேற்றானாயினும் அவள் விருப்பத்திற் கிசையவில்லை. இதற்கிடையில் ஜோன் ஆங்கிலப்படை வலுவுற்றிருந்த யார்கோ என்னுங் கோட்டையைத் தாக்கி வெற்றி கண்டனள். அங்கே ஆங்கிலப் படைத்தலைவர் சிலரைச் சிறைப்படுத்தினர். பிரான்சு படைஞர் அவர்களிற் சிலரைக் கடுங்கொலை புரிந்தனர். அங்ங னம் முறை தவறித் தன் படைஞர் செய்த கொடுஞ்செயலை ஜோன் கண்டித்தனள்.

பின்னர் ஆங்கிலர் கைப்பற்றியிருந்த போஜன்சி, பாத்தே என்னுங் கோட்டைகளையும் போர் செய்து கைக்கொண்டனள். போர்மேற் சென்றுவிட்டால் ஜோன் ஊணும் உறக்கமும் மெய் வருத்தமும் சிறிதும் பாராள். ஒருமுறை அவள் தான் மேற்போட் டிருந்த இருப்புச் சட்டையினை ஆறுநாள் இரவும் பகலும் கழற்று மலே யிருந்தாள்.

முடிவாக அரசன் ரீம்சில் முடிசூட்டப் பெறுதற்கு இசைந்து ஜோனுடன் சென்றான். முடிசூட்டு விழாவும் சிறப்பாக நடை பெற்றது. அன்று ஜோன் தனக்குக் கிடைக்கப் பெற்ற பொருள்களைத் தனக்கென ஒன்றும் மிகுத்து வைக்காமல் ஏழை கட்கும் போருக்குமே பயன்படுத்தினள். ஜோன் வேண்டு கோளின்படி டாம்ரிமி என்னுந் தன் ஊரவர்கட்கு வரிநீக்கமுஞ் செய்யப்பட்டது.

பின்னர், பெட்போர்ட் என்னும் ஆங்கிலத் தலைவன் பாரிசில் ஜோனொடு பெரும் போர் செய்தான். அரசன் அப்போது ஜோனுக்கு யாதொரு உதவியுஞ் செய்ய இசையவில்லை. ஜோன் பாரிசில் போர் புரியும்போது ஒரு கூரிய அம்பு அவள் தொடையை ஊடுருவிச் சென்றது. அத் துன்பத்தையும் பாரா

மல் ஜோன் தன் படையை ஊக்குவித்து அங்கே வெற்றி பெற்ருள். எனினும் இவள் பாரிஸ் முழுமையும் கைப்பற்றவில்லை. இதற்கிடையில் ஜோன் அரசனுல் டெனிசுக்கு அழைக்கப்பட்டாள். ஜோன் நகரங்களிலில்லை என்பதறிந்த ஆங்கிலர் தாங்கள் முன்பு இழந்த சில ஊர்களைத் தமவாக்கிக்கொண்டனர். இதனையறிந்துங்கூட அரசனுக்கு யாதொரு வருத்தமுமில்லை.

பின்பு ஜோன் மேளஸ்டீயரைப் பிடிக்க அனுப்பப்பட்டாள். அதனைக் கைப்பற்றிப் பின்பு மேலன் என்னும் ஊரைத் தாக்கச் சென்றனள். அக்காலத்தில் 'விரைவிற் ஜோன் பகைவர்களால் சிறைப்படுத்தப்படுவள்' என்று அவளுக்குத் தெய்வ வொலி கேட்டது. அப்போது பர்கண்டிச் சிற்றரசன் காம்பீன் என்னும் நகரத்தை முற்றுகை யிட்டனன். அதனைக் கேட்ட ஜோன் ஆங்குச் சென்று மிக்க திறமையோடு போர் புரிந்தனள். இவளுக்கு அக நட்பின்றி முகநட்பினராக இருந்து சிலர் செய்த சூழ்ச்சியினுல் இவள் தோல்வியுற்று ஆங்கிலேயரால் பிடிக்கப்பட்டு மிகவும் உயரமான ஒரு கோபுர அரணில் அடைக்கப்பட்டாள். அக்காலத்தில் தனக்கு முடிசூட்டிப் பல்லாற்ருனும் உதவி புரிந்த இவ்வருண் மாதுக்கு அரசன் உதவி செய்ய முன்வரவில்லை என்பது வருந்துதற் குரியது. பின்பு ஜோன் தெய்வக் கட்டளைக்கு மாருக, காம்பீன் மக்கட்குத் திரும்பவும் உதவிபுரிதற் பொருட்டுக்கோபுரத்தின் உச்சியிலிருந்து கீழே குதித்தனள். அங்ஙனங் குதித்ததால் அவள் உறுப்புக்களுக்கு ஊனமொன்றும் ஏற்படவில்லை. ஆனுல் மூன்று நாட்கள் வரையில் உணர்விழந்து கிடந்தாள். இவள் தானுகவே கீழே குதித்தமைகண்ட ஆங்கிலர் இவளை இருப்புக் கூட்டில் அடைத்து வைத்தனர். இவளுக்கு உணவும் ஏனைய வசதிகளும் கொடுக்கப்படவில்லை. பின்பு இவள் தனக்குப் பகைவரான சில பிரான்சு மக்களால் அறமன்றத்தில் குற்றஞ் சாட்டப்பட்டாள். இவளைக் குற்றஞ் சாட்டுதற்காக இவளிடம் கேட்ட கரவான கேள்விகள் பலவற்றிற்கும் சிறிதும் அஞ்சாது ஏற்ற விடை கூறினள். முடிவாக இவளை மாயக்காரி என்றும், மந்திரக்காரி என்றும் பேய்த்தொடர்புடையவளென்றும், ஆணுடையுடுத்தியது குற்றமென்றும், அருண் முனிவர்களைக் கண்டதும் தெய்வ வொலி கேட்டதும் பொய்ம்மை என்றுங் கூறி அறமன்றத்தினர் இவள்மீது பொய்க்குற்றஞ் சாட்டினர். முடிவாக இவர்கள் பல்லார் முன்னிலையில் இத்தெய்வ அருண்மாதை ஒரு கழுமரத்திற் கட்டி வைத்துத் தீயிட்டுக் கொளுத்திக் கொன்றனர். இப்பொல்லாக் கொடும்பழிச்செயல் உலக முள்ளளவும் மக்களான் மறக்கற்பால தொன்றன்று.



திருவாதவூர்.




திருவாதவூர்.

௭௫-ம் பக்கம் பார்க்க.

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது

| சிலம்பு கஉ | மெய்கண்டான் யாண்டு-ளாய புரட்டாசித் திங்கள் 1933ஆ செப்டம்பர்மீ—அக்டோபர்மீ | பரல் உ |
|---|---|---|

## திருவாசகம்

தேவ தேவன் மேய்ச் சேவகன் தென்பெ ருந்துறை நாயகன்
மூவ ராலு மறியோ ணுமுத லாய வானந்த மூர்த்தியான்
யாவ ராயினு மன்ப ரன்றி யறியோ ணுமலர்ச் சோதியான்
தூய மாமலர்ச் சேவ டிக்கணஞ் சென்னி மன்னிச் சுடருமே.

பதவுரை :—

தேவதேவன்—தேவர்க ளெல்லாருக்கும் தலைவனாகிய மகாதேவனும்,

தென் பெருந்துறை நாயகன்—அழகிய தலமாகிய திருப்பெருந்துறையில் வீற்றிருந்தருளும் ஆத்மநாதனும்,

மூவராலும் அறிஒணு முதலாய ஆனந்த மூர்த்தியான்—அயன் அரி உருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளாலும் அறிய முடியாத முழுமுதற் கடவுளாகிய இன்ப உருவனும்,

யாவராயினும்—உலகில் எத்தகைய சிறப்புக்களை உடையவரா யிருப்பினும்,

அன்பர் அன்றி அறிஒணு மலர்ச்சோதியான்—அகப்பற்று புறப்பற்றுக்களை விடுத்துத் தனது திருவடிகளையே புகலாகப் பற்றியுள்ள மெய்யடியார்களுக்கு அவர்களது நின்மலமான தூயஉள்ளத்தில் அவர்களோடு இரண்டறக் கலந்து பேரொளியாய் உணரப்படுகிறவன் அல்லாமல் ஏனையோர்களுக்கு அறியமுடியாதபடி எல்லா உயிர்களுடைய உள்ளமாகிய தாமரை மலரில் பேரொளியாய் மறைந்து நிற்கப்பட்டவனும்,

மெய்ச் சேவகன்—யாவர்க்கும் மேலாம் அத்துணை அளப்பரும் பெருந்தன்மை யுடையனாயினும் எல்லா உயிர்களுடைய நலங் கருதி இடைவிடாது ஐந்தொழிற் பணிகள் செய்து வருகின்ற உண்மையான பணியாளனும் ஆகிய சிவபெருமானுடைய,

தூய மாமலர்ச் சேவடிக் கண்—பூக்கள்கொண்டு அடியார்கள் வழிபடுகிற தூய்மையும் பெருமையுமுடைய செவ்விய இரண்டு திருவடிகளாகிய மெய் அறிவானது

நம் சென்னி மன்னிச் சுடரும்—மீளா அடிமைகளாய் ஆட்பட்டுள்ள அடியார்களாகிய நமது தலைமேல் நிலையாக நின்று பேரொளி செய்து (பேரின்பம் தந்து) கொண்டிருக்கும்.

விளக்க உரை :—

இந்தப் பாட்டும் இதனுடன் சேர்ந்த ஒன்பது பாட்டுக்களும் மாணிக்கவாசக அடிகள் தாம், மானுட வடிவில் குரு வடிவாய்த் திருப்

பெருந்துறைக்கு வந்த சிவபெருமானால் ஞானதீக்ஷை செய்யப்பட்டு ஆட்கொண்டருளப்பெற்ற உடனே பாடிய பாட்டுக்கள். தீக்கை முடிவில் ஞான ஆசிரியருடைய திருவடிகள் தமது தலைமேல் வைக்கப்பெற்றதும் அதனால் தாம் அடையப்பெற்ற பேரறிவு விளக்கமும் பேரின்ப விளக்கமும் மாணிக்கவாசக அடிகளால் இப்பாட்டுகளிற் கூறப்படுகின்றன. ஞானாசிரியன் திருவடிகளை மாணவகன் தலைமேல் வைத்தலானது தீ இரும்பைத் தன்னிறமாக ஆக்குதல்போல அவர் மாணவகனுடைய உள்ளத்திலுள்ள குற்றங்கள் முழுமையும் போக்கி அதனிடம் சிவம் விளங்கச் செய்து மாணவகனைத் தானாக்கி உண்மை அடிமையாக விளங்குகிற அவனிடத்தில் ஆண்டானாகிய தமது எண்குணங்களும் பதியச் செய்தலைக் குறிக்கின்றது. திருநாவுக்கரசு அடிகள் தாம் பாடிய திருநல்லூர்த் திருத்தாண்டகத் தேவாரப் பதிகத்தில் "நாறுமலர்த் திருவடியென் தலைமேல் வைத்தார் நல்லூரெம்பெருமானார் நல்லவாறே" என்றும், "நலங்கிளரும் திருவடி யென் தலைமேல் வைத்தார் நல்லூ ரெம்பெருமானார் நல்லவாறே" என்றும், "வானோ ரினந்துருவி மணிமகுடத் தேறத் துற்ற வினமலர்கள் போத விழ்ந்து மதுவாய்ப் பில்கி நனைந்தனைய திருவடியென் றலைமேல் வைத்தார்' என்றும், திருவையாற்றுத் திருத்தாண்டகத் தேவாரப்பாட்டு ஒன்றில் 'பிரானாய் அடி யென்மேல் வைத்தாய் நீயே' என்றும் பாடி அருளினமை காண்க.

தேவதேவன்—என்பதனால் உலகிலுள்ள எல்லா உயிர்களுக்கும் ஒப்பற்ற தலைவன் என்பது கூறப்பட்டது. இதனால் அருவ சிவத்தினது நிலை குறிப்பிடப்பட்டது.

தென்பெருந்துறை நாயகன்—அடிகள் தமக்குச் சிவபெருமான் மானுட வடிவில் ஞானாசிரியனாய்த் திருப்பெருந்துறைக்கு வந்து ஆண்டு அருள் செய்ததைக் குறிப்பிப்பார் தென் பெருந்துறை நாயகன் என்றார். உள்ளுறையாகச் சமயங்களெல்லாம் வந்து சேர்கின்ற முடிபிடமாகிய சைவ சமயத் தனி நாயகன் என்றும், எல்லா வுயிர்களும் பொருள்களும் தோன்றுதற்கும் ஒடுங்குதற்கும் இடமாகிய துறை என்றும் பொருள் கொள்ளலாம். "சைவ சமயத் தனிநா யகனந்தி" என்று திருமூலர் 1567-வது திருமந்திரத்தில் கூறி யருளினர். இதனால் உருவ சிவத்தினது நிலை குறிப்பிடப்பட்டது.

மூவராலும் அறிஒணு ஆனந்தமூர்த்தியான்—ஒண்ணு என்பது ஒணு எனக் குறுகியது. ஒண்ணுதல் - இயலுதல், கூடுதல். அறி - முதனிலைத் தொழிற்பெயர். அறிஒண்ணு - அறிதலை முடியாத அதாவது அறிய முடியாத. மாயாபுவனங்களிலிருந்து படைத்தல் காத்தல் அழித்தல் ஆகிய முத்தொழில்களையும் செய்கின்ற மும்மூர்த்திகள் மாயா புவனங்களுக் கெல்லாம் அப்பாலாய் அவர்களுடைய முழுமுதற் கடவுளாய் இன்ப வடிவமான சிறப்பியலை (சொரூப இலக்கணத்தை) உடைய பரம்பொருளை அறியமுடியாது என்பார் மூவராலு மறியொணு ஆனந்தமூர்த்தியான் என்றார். "இன்பதனை யெய்துவார்க் கியுமவர்க்கு உருவம், இன்ப கனமாதலினாலில்" என்று திருவருட்பயன் சிவபெருமானுடைய இன்ப வடிவத்தைக் கூறுதல் காண்க. இதனால் சுத்த சிவத்தினது நிலை குறிப்பிடப்பட்டது.

அன்பரன்றி அறிஒணுமலர்ச் சோதியான்—மலர் என்பது இங்கே உள்ள

மாகிய தாமரை மலரைக் குறிக்கின்றது; "மலர்மிசை ஏகினன்" என்பதிற்போல. மலர்ச் சோதியான் - உள்ளமாகிய தாமரை மலர் மேல் எழுந்தருளி யிருக்கும் சோதியான்; ஏழாம் வேற்றுமைத் தொகை. சோதியான்-பேரொளியை உடையவன், ஆன்ம அறிவொளி யோடு கலந்து விளங்கும் பேரொளியை யுடையவன். "பருவஞ் சேருயிர்க்குத் துங்கவரன் ஞானக்கண் கொடுத் தருளினாலே சோதிக் குட் சோதியாய்த் தோன்றுவன...காணே" என்று சிவஞான சித்தி யார் கக-வது சூத்திரம் அ-வது பாட்டிற் கூறப்பட்டிருத்தல் காண்க. அன்பர் - அன்பினை உடைய அடியார்கள். அன்பு என்பது இங்கே ஒருவர் உயிர்ப்பற்று பொருட்பற்றுக்களைவிட்டு இறைவனிடத்திற் செய்யப்படும் பேரன்பு. இறைவன் உயிர்களுக்கு இடை விடாது செய்து வருகிற பேருதவிகளை ஒருவர் நேரே அநுபவத்தில் நினைப்பு மறப்பு மற்ற நிலையில் அறிந்து அதனால் இறைவன்மீது செய்யும் பேரன்பு. எல்லா உயிர்களிடத்திலும் விளங்கும் பேரொளி யானது மலத்தால் மறைப்புண்ட ஏனைய உயிர்களுக்கு விளங்காதாயினும் மலத்தினின்றும் நீங்கப்பெற்ற பேரன்புடைய அடியார்களுடைய சிவகரணமாய் மாறின தூய உள்ளத்தில் படலம் நீங்கப்பெற்ற கண்ணுக்கு ஞாயிற்றினொளி விளங்குதல்போல, விளங்கும் என்பார் யாவராயினு மன்பரன்றி அறியொணா மலர்ச் சோதியான் என்றார். மலர்ச் சோதியான் என்பதனால் தீவிரதர சத்திநிபாதம்பெற்ற அடி யார்கள் தூய உள்ளத்தில் விளங்குகிற இறைவனது பேரொளி நிறை வில் அடங்கி, பேரறிவு விளக்கம் பெறுதல் கூறப்பட்டது. மலர்ச் சோதியான் என்பது நிட்கள சிவத்தைக் குறிக்கிறது.

தூய மாமலர்ச் சேவடிக்கண்—தூய, மா என்ற அடைமொழிக ளிரண்டும் சேவடி என்ற சொல்லைத் தழுவுகிறது. தூய்மை - மலத்தொடர் பின்மையையும், மா - ஒப்பில்லாத உயர்வையும், இன்பத்தையும் குறிக்கின்றன. சேவடிக்கண் என்பது சேவடியாகிய கண்; கண் என்பது இங்கே ஞானக்கண்; அதாவது மெய் அறிவைக் குறிக்கிறது. செம்மை + அடி = சேவடி, நேர்மையான அடி; இறைவன் தன்னை நேர்மையாக நோக்கி அறிகிற அடியார்களுக்குத் தானும் நேர்மையாக அவரது அறிவு நிலைக்குத் தக்கவாறு அருள் செய்கின்றவன் ஆதலின் அவன் அடி சேவடி எனப்பட்டது. திருநாவுக்கரசு அடிகள் திரு வதிகை வீரட்டானத் திருத்தாண்டகத்தில் "......வஞ்ச வலைப் பாடொன்றில்லா அடி" என்று கூறி அருளினார்.

நம் சென்னி மன்னிச் சுடருமே—சென்னி என்பது தலையி லிருக்கிற பிர மரந்திரத்தைக் குறிக்கின்றது.........மெய்யறிவுப் பேரொளியானது பிரமரந்திர வழியாய் எப்பொழுதும் நிலைபெற்று விளங்கவும் அத னால் ஆன்ம ஒளி அந்தப் பேரொளி நிறைவில் அடங்கி நின்று இறைவ னுடைய எண்குணங்களும் விளங்கப்பெற்று நித்தியமானபேரின்பப் பெருவாழ்வு அடையப்பெற்ற அநுபூதி நிலையை அடிகள் நஞ்சென்னி மன்னிச் சுடரும் என்றருளினர். அப் பேரொளியாகிய மெய்யறி வானது இனித் தம்மைவிட்டு நீங்காது என்பார் மன்னிச் சுடருமே என்றார்.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

# சமயமும் தத்துவமும் :

# Religion & Philosophy

## மும்மையாலுலகாண்ட மூர்த்தி

[திரு.T. P. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் M.A.,B.L.]

ஆளுடைய நம்பி:—மூர்த்தி நாயனர் ஒரு சிவத் தொண்டர். ஆளுடைய நம்பி "மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்" எனப் பாடுவது இப் பெரியாரைப் பற்றித்தான். எனவே, பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே மூர்த்தி நாயனருடைய திருப்பெயர் தமிழ் நாடெங்கும் முழங்கிக்கொண்டிருந்த தென்பதில் ஐயம் இல்லை. மூர்த்தி நாயனருடைய வாழ்க்கையின் சிறப்பாவது யாது? நம்பிகளுடைய கண்ணெதிரே மும்மையால் உலகாண்டமையே முன்வந்து நிற்கின்றது. இவ் வுண்மையின் உயிராக மூர்த்தி நாயனர் உலவினர் என்பதை உட்கொண்டன்றோ, ஆளுடைய நம்பிகள், என்று மிறவாத தமது இன்தமிழ்ப்பாவாம் புகழுடம்பை இப் பெரியாருக்கெனப் படைத்துதவினர்! பின்வந்த நம்பியாண்டார் நம்பியார், இத் திருத்தொண்டத் தொகைக்கே விரிவுரை செய்ய வந்த போதும் வற்புறுத்தாது போன இப் பேருண்மையைக் கண்டுபிடித்துக் காட்டிய பெருமை ஆளுடைய நம்பிக்கே எல்லாவகையாலும் உரியதாகும்.

நம்பியாண்டார்:— அரையடியில் ஆளுடைய நம்பிகள் அடக்கி வைத்துப் பாடிய வரலாற்றை நான்கடிகளாக விரித்துப் பாடுகின்றார் நம்பியாண்டார் நம்பிகள்.

> அவந்திரி குண்டம ணவநின் மாள்வனென் றன்றாலவாய்ச்
> சிவன்திரு மேனிக்குச் செஞ்சந் தனமாச் செழுமுழங்கை
> உவந்தொளிர் பாறையிற் றேய்த்துல காண்டவொண் மூர்த்தி
> நிவந்தபொன் மாட மதுரா புரியென்னு நீள்பதியே. [தன்னூர்

நாயனாரைப் புகழவந்த இப்பாடல், மற்றொன்று விரித்த லாகப் பாண்டிமண்டலச் சதகச் செய்யுளைப்போல மதுரையைப் புகழ்ந்து முடிப்பதை நாம் இங்குக் குற்றம் எனக் காட்டவில்லை. இவ்வாறு மதுரையினையும் மூர்த்தி நாயனாரையும் பிணைத்துப் பாடியதின் நுட்பத்தைச் சேக்கிழார் பெருமான் விரித்துரைக்கும் போது அவ்வழகைக் கண்டு அகமகிழ்வோம். மும்மையால் உல காண்டமை ஆளுடைய நம்பிகளின் கண்ணைக் கவர்ந்ததுபோல, கையையே அரைத்த செய்திதான் நம்பியாண்டாரின் காதைக் கவர்ந்தது. இதனையே இங்குக் குறிக்க விரும்புகின்றோம். நம்பி யாண்டார் தமது நூலில் அடியார்களின் வியத்தகு செயல்களையே முடிந்த முடிபாகக்கொண்டு பாடிப் புகழ்கின்றாராதலின் அந் நோக்கத்திற் கேற்பக் கை தேய்த்தலால் உலகாண்டமையையே பெரிதும் பாராட்டுகின்றார். பொதுமக்களின் மனதைக் கவர முன்வந்த அப் பெரியார் அவ்வாறு தான் பாடவேண்டி யிருந்தது.

வியத்தகு செயல்கள் :—இப்போதும் பொதுமக்கள் "அற்புதங் கள்" என இக்காலத்தே வழங்கும் வியத்தகு செயல்களிலே அன்றோ நாட்டமாய் அலைகின்றனர்? பெரியவர் என்ற சொல்லைக் கேட்டதும் "உண்ணாதிருக்கின்றாரோ? நெருப்பை விழுங்குவாரோ? நீர்மேல் நடப்பாரோ?" என்று கேள்வி கேட்டுக் கனாக்கண்டு அவ் வாறே நூற்றுத் திரித்துக் கயிறு கட்டிவிட்டு வானிடையே ஊசலாடுகின்றனர் அன்றோ ? சம்பந்தரின் பெருமையை என்பைப் பெண்ணாக்கிய குடத்தில் அடைத்து மூடி விடுகின்றனர். அப்பரின் சிறப்பைக் கடலில் மிதந்துவந்த கல்லோடு கட்டிக் கடலில் அழுத்தி விடுகின்றனர். சுந்தரரின் உயர்வை, முன்னே யுண்ட சிறுவனைப் பின்னே கக்கிய முதலையின் வாய்க் கிரையாக்கு கின்றனர். எல்லோரும் எளிதில் எடுத்துக்காட்டும் இவ் வியத்தகு செயல்கள் இப் பெரியோர்கள் அனைவரும் இயற்கையை வென்ற இயல்புடையோர்கள் என்பதனை வற்புறுத்தும் அடையாளங்களே யாம். இயற்கையை எதிர்த்ததோடு கடவுளையும் கண்டு பாடிய ஓர் உண்மையும் உண்டு என்பதை நாம் மறத்தலாகாது. இவ் விரண்டில் எது சிறந்தது என்பதே கேள்வி ? அதுதானுமன்றி, அவ் வியத்தகு செயல்களை அறிவதால் நமக்குப் பயன் என்ன ? நம்பிக்கை விளைதற்கேற்ற நன்செய் நிலம் அவையே என மன் றாடுவார் சிலர். இவ் வரலாறுகளை நம்பாதவர்களும், இவற்றைப் பற்றிய பாடல்களை இடைச் செருகல் என்பவர்களும் இருக்கின்

ரூர்கள் அன்றோ? அத்தகையோர்களையும் அன்பு வலையிற் சிக்க வைப்பது அப் பெரியார்களது அருண் மொழிகளே யன்றோ? அருண் மொழிகளாம் அழகிய பாடல்களே வியத்தகு செயல்க ளனைத்தினும் வியக்கத்தக்கனவாம்.

வாழ்க்கையின் நோக்கம்:—அம்மட்டோ? பெரியோர்களது வரலாற்றை நாம் ஏன் ஓதுகின்றோம்? உலகவாழ்க்கை எனும் மணற்காட்டில் அவர்களுடைய திருவடிச் சுவடுகள் நன்கு புதைந் துள்ளன. அவற்றைப் பின்பற்றி நடந்தாலன்றி அக் காட்டிலே நடந்து செல்ல வேறு வழியைக் காண்பது எங்ஙனம்? காலம் எனும் சுழற்காற்றுப் புயற்காற்றாய் அடித்துக் கொண்டே யிருக் கிறது. எத்துணையோ அடிச்சுவடுகள் மறைந்தொழிந்தன. ஆனால் பெரியோர்களின் அடிச்சுவடுகள் மட்டும், கல்லிற் பொறித்தாற் போல அழியாது திருத்தமாக விளங்குகின்றன. அவ்வடிச் சுவடுகள் அவர்களது நூலிலன்றோ பெரிதும் விளக்கம் பெற்று மின்னிப் பொலிகின்றன! சம்பந்தருடைய பாடல்கள் எத்தகைய உயரிய உண்மைகளை உணர்த்துகின்றனவோ, அவற்றையே அவ ருடைய வாழ்க்கையும் உணர்த்துகின்றதன்றோ? ஆகவே, அவ் வுண்மைகளையறிய அவருடைய பாடல்களை யன்றோ ஓதுதல் வேண்டும்? அவற்றை ஓதாதவரையில் என்பைப் பெண்ணாக்கிய வரலாற்றை ஓதுவதால் ஒருபயனும் இல்லை; அதுவரை அவ் வர லாற்றின் உண்மைப் பொருளைச் சேக்கிழார் பெருமான் அறிந் ததுபோல நாமறிய இயலாது. ஒருகால் பெண்ணான வரலாறு பொய்யாய்ப் போனாலும் அவருடைய பாடல்களும் அவற்றி னிடையே மிளிரும் உயரிய கொள்கைகளும் பொய்யாய்ப் போவது என்று மில்லையாம்.

நம்பியாரின் உள்ளக்கிடை:—இதுபற்றியன்றோ இவ் உண் மையை உணர்ந்த ஆளுடைய நம்பிகள், அவ் வவ்வடியார்களின் அத் தகைய வியத்தகு செயல்களைக் கொண்டாடாது, இத்தகைய உய ரிய கொள்கைகளைச் சுட்டிக்காட்டிப் போற்றுகின்றார். இவற்றை வற்புறுத்துவதே இவருடைய நோக்கமாகும். இந் நோக்க வேறுபாட்டை யுணர்ந்தாலன்றோ ஆளுடைய நம்பிகளது அரை யடியின் அருட்டிறத்தையும் அவரைப் பின்பற்றிப் பாடும் சேக் கிழாரது பல பாடல்களின் பொருட்டிறத்தையும் நாம் நன் குணர்ந்து துய்த்து மகிழக் கூடும். நம்பியாண்டாரும் ஆளுடைய

நம்பிகளும் சைவப் பெரியார்களாய்த் திருமுறையினுள்ளே புகுந்து நின்றாலும் நம்பியாண்டார் நம்பியாண்டாரே! ஆளுடைய நம்பிகள் ஆளுடைய நம்பிகளேயாம். கையை அரைத்த வரலாறு ஒருவகையால் நோக்குமிடத்துத் தற்கொலையின் வரலாருக அன்றோ முடிகின்றது! எந்நாளும் தற்கொலையானது முடிந்த முடிபாவதில்லை யன்றோ? மும்மையா லுலகாண்ட வரலாறே முடிந்த முடிபேயாம். உயரிய நெறியிலே நின்று உலகனைத்தும் வாழ்வதன்றோ எல்லோராலும் போற்றத்தக்கது! அரசாட்சி யன்று பெரியாருடைய நோக்கம்; அவ்வாட்சியை நம்பியாண்டாரும் சுட்டுகின்றார். மும்மை நெறியாம் அருள்வழியே உலகம் செல்கின்ற தென்பதனையே பெரியோர் காணவும் கேட்கவும் மிக விரும்புவர். அந்த நற்செய்தியினையே உலகத்திற் கெடுத்துரைத்து வழிகாட்டுகின்றார் நம்முடைய நம்பிகள்.

நாவலர்குறிப்பு:—நம்பியாண்டார் கூறுவதனைத் தற்கொலை வரலாறு எனப் புறக்கணித்தலாகாது. பிறர் சாவ எண்ணுவதே போறநெறி எனக் கூறுவதினும், நம்பியாண்டார் கூறுவது மிக மிகச் சிறந்ததன்றோ? ஆறுமுக நாவலர் என்ற தமிழ்ப் பெருந் தகையார் தம்முடைய "சூசனத்தில்" அரசன் ஆருகதசமயி ஆகி, சிவனடியார்களுக்கு இடுக்கண் செய்தலால் அவன் கீழ்வாழும் குடிகள் அப்பரமதப் படுகுழியில் வீழ்ந்து எரிவாய் நரகத்துக்கு இரையாதலையும், சைவத்து நிற்பாரும் அரசனால்வரும் இடுக்கண் மிகுதிபற்றி அச்சத்தினாலே சிவபுண்ணியங்கள் செய்யாது வாளா கெடுதலையும் கண்டு இரங்கியன்றோ, அதிபாதகனாகிய இவ்வரசன் இறப்ப, இப்பாண்டிநாடு சைவமன்னரைச் சார்வது எக்காலம் என்று இம் மூர்த்திநாயனார் வருந்துவார் ஆயினர். இதனால் இவரது இரக்கமுடைமை தெளிக. மெய்யுணர்வு உடையார்க்குத் தாம் பெற்ற பேறு உலகம் பெறுதல் வேண்டும் என்பதே உள்ளக் கிடக்கை என்க. "நான் பெற்ற வின்பம் பெறுக இவ்வையகம்" என்றார் திருமூல நாயனார்" என்று மூர்த்திநாயனார் வரலாற்றில் இக்குறிப்பை நாம் மனங் கொள்ளுமாறு வற்புறுத்தி எடுத்துக் காட்டுகின்றார். நாவலர் பெருமானாரது சொற்றொடரைக் சொண்டே மூர்த்திநாயனாரது வரலாற்றின் முடிந்தமுடிபு ஈதே எனப் பிறழஉணர்ந்து விரிவுரை நிகழ்த்துவாரும் உளர் அன்றோ? "அமண் ஆவதில் மாய்வன்" எனப் புறப்படுகின்றார் மூர்த்தி

நாயனர் என்று நம்பியாண்டார் பாடுகின்ருர். "யான்மாய்வன்" என்பதனை "அரசன் மாய்க" என மாற்றிவிடுகின்ருராம் சேக்கிழார்.

"புன்மைச் செயல் வல்லமண் குண்டரிற்போது போக்கும்
வன்மைக் கொடும்பாதகன் மாய்ந்திட வாய்மை வேத
நன்மைத் திருநீற்றுயர் நன்னெறி தாங்கு மேன்மைத்
தன்மைப் புவிமன்னரைச் சார்வதென்று" என்று சார்வார்.

எனவரும் செய்யுளை எடுத்துக் காட்டுகின்றனர். தற்கொலைப் பழி நம்பியாண்டார் தலைமேல் வீழ்வதுபோலக் கொலைப் பழியே சேக்கிழார் தலைமீது வீழ்கிறது. கை கொண்டும் வாள்கொண்டும் சாவச் செய்தல்போல, வாய்கொண்டு சாவ உரைப்பதும் மனங்கொண்டு சாவ நினைப்பதும் தீமையேயன்ருே! "உள்ளத்தால் உள்ளலும் தீதே" என்பதன்ருே தமிழ்மறை!

ஐயம்:—"இவ்வாருே முடிந்தது சைவம்" என நகையாடுவார் சிலர். "ஆளுடைய நம்பிகள் உயரிய கொள்கை சுட்டியதால் யாது பயன்? பழத்தைத் துய்த்தன்ருே பயனறிதல் வேண்டும்! நம்பியாரின் பாடற்கனி யுண்டார் கொலைவெறி கொண்டன்ருே திரிகின்றனர்! அழித்தற் கடவுளை வழிபடுவார் உலகழிதலையே மிகமிக விரும்புவர். ஈதன்ருே இயற்கை? விரை யொன்று விதைத்தால் சுரை யொன்று காய்க்குமோ! என்று விரித்துரைப்பார் சிலர். அன்பும் சிவமும் ஒன்ருனல், சாவோ வாழ்வோ முடிபாவது? பிறர் சாவ நோற்பதோ பேரன்பாவது? தற்கொலையிலே முடிவதோ சைவமாவது? சாவே முடிவானல் சிவனும் சாதல் வேண்டும். "இறவாத இன்ப அன்பு" என்ற அருந் தமிழ்த்தொடரைத் தமிழ்க் குதவிய சேக்கிழாருமோ வாழ்ப் பாடாது சாவப் பாடுவார்?



மெம்னன் என்ற எகிப்தியர் கிறித்துபிறப்பதற்கு 1822 ஆண்டுகட்குமுன் எழுத்துக்களை முதன்முதலாகக் கண்டுபிடித்தார்.

o o o o o

நானூருயிரம் புத்தகங்களைக் கொண்டிருந்த அலெக்ஸாண்ட்ரியன் நூல் நிலையம் கி. மு. 52-ல் எதிர்ச்சையாய்த் தீவாய்ப் பட்டது.

—கா. சிவ. க,

# இலக்கண இலக்கியப் பகுதி
# Language & Literature

## பதிற்றுப்பத்து விளக்கம்

(பண்டித. திரு. அ. நடராஜபிள்ளை அவர்கள்)

(கக-ம் சிலம்பு, கூ-ம் பரல்- உ௬அ-ம் பக்கத்தொடர்ச்சி)

### (6) துயிலின் பாயல்

### (க௬) பாட்டு

கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி
நாடுகண் டன்ன கணைதுஞ்சு விலங்கற்
றுஞ்சுமரக் குழாஅந் துவன்றிப் புனிற்றுமகள்
பூணா வையவி தூக்கிய மதில
நல்லெழி னெடும்புதவு முருக்கிக் கொல்லு
மேன மாகிய நுனைமுரி மருப்பிற்
கடாஅம் வார்ந்து கடுஞ்சினம் பொத்தி
மரங்கொன் மழகளிறு முழங்கும் பாசறை
நீடினை யாகலிற் காண்குவந் திசினே
யாறிய கற்பி னடங்கிய சாய
லூடினு மினிய கூறு மின்னகை
யமிழ்துபொதி துவர்வா யமர்த்த நோக்கிற்
சுடர்நுத லசைநடை யுள்ளலு முரியள்
பாய லுய்யுமோ தோன்ற றவின்று
திருமணி பொருத திகழ்விடு பசும்பொன்
வயங்குகதிர் வயிரமோ டுறழ்ந்துபூண் சுடர்வர
வெழுமுடி கெழீஇய திருஞெம ரகலத்துப்
புரையோ ருண்கட் டுயிலின் பாயல்
பாலுங் கொளாலும் வல்லோய்நின்
சாயன் மார்பு நனியலைத் தன்றே.

பதவுரை

[14. தோன்றல் 14] [1 கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க
ணிஞ்சி நாடுகண் டன்ன கணைதுஞ்சு
விலங்கற் றுஞ்சுமரக் குழாஅந் துவன்றிப்
புனிற்றுமகள் பூணா வையவி தூக்கிய
௫. மதில,

தோன்றல் - அரசனே, கோடு உறழ்ந்து - மலையுள்ள விடங்களிலே அம் மலைதானே அரணாகவும் மலையில்லாத விடங்களிலே மதில் அரணாகவும் மலையோடு மாறுடும்படி, எடுத்த - கட்டப்பட்ட, கொடுங்கண் - வளைந்த கண்கள் போன்ற தோற்றத்தினைக் காட்டும் வாயிலோடு கூடிய, இஞ்சி - புறமதிலையும், நாடு - வளமிக்க நாட்டினை, கண்டு அன்ன - கண்டாற் போன்று வயல்களும் குளங்களு மிக்கு, கணை துஞ்சு - அம்புக் கட்டுகள் நிறைந்த, விலங்கல் - மலைபோன்ற இடைமதிலையும், துஞ்சு மரக்குழாம் - கடக்க முயல்வாரைச் சாவச் செய்யும் கழுக் கோல்களாகிய மரக் கூட்டங்கள், துவன்றி - நெருங்கி யிருக்கப் பெற்று, புனிற்று மகள் - ஈன்றணிமை கொண்ட பெண்மகள், பூணா - அணிய வியலாத, ஐயவி - துலாமரம், தூக்கிய - கதவிற்குக் காவலாக வாயிலின் உட்புறத்திலே தூக்கி விடப்பட்ட, மதில - உண்மதிலையுமுடைய பகைவரின் கோட்டையின் கண்ணே யுள்ள,

நல்லெழி னெடும்புதவு முருக்கிக்
கொல்லு மேன மாகிய நுனைமுரி
மருப்பிற் கடாஅம் வார்ந்து கடுஞ்சினம்
பொத்தி மரங்கொன் மழகளிறு முழங்கும்
பாசறை நீடினை யாகலிற் காண்குவந்
௧0. திசினே,

நல் எழில் - நன்கு அழகுபெற வியற்றிய, நெடும்புதவு - பெரிய கதவுகளை, முருக்கி - உடைத்து, கொல்லும் - அழிக்கும் படியான, ஏனம் ஆகிய - கருவியான, நுனை - நுனிப்பாகம், முரி- சிதைந்துள்ள, மருப்பின் - கொம்புகளோடு கூடி, கடாம் - மதநீர், வார்ந்து - வழியப் பெற்று, கடும் - கொடிய, சினம் - கோபம், பொத்தி - நிறைந்து, மரம்கொல் - மரங்களை வேருடன் கிளப்பி வீழ்த்தும், மழகளிறு - இளமையான ஆண்யானைகள், முழங்கும் -

பிளிறும்படியான, பாசறை - படைவீட்டினிலே, நீடினை - நினது தலைவியை விட்டுப் பிரியுங்காலத்துக் குறிப்பிட்ட காலவளவுக்கு மேலே நீட்டித்துத் தங்கினுய், ஆகலின் - ஆகையாலே, காண்கு - நின்னைக் கண்டு நினது தலைவியின் நிலைமையினைக் கூறுவதற்காக, வந்திசின்- வந்தேன், ஏ இசைநிறை.

யாறிய கற்பி னடங்கிய
சாய லூடினு மினிய கூறு
மின்னகை யமிழ்துபொதி துவர்வா யமர்த்த
நோக்கிற் சுடர்நுத லசைநடை யுள்ளலு
முரியள் 13]

ஆறிய - அமைதியாகிய ஒழுக்கத்தாற் சிறந்த, கற்பின் - கல்வியினையும், அடங்கிய - அடக்க குணத்தாற் சிறந்த, சாயல் - அழகினையும், ஊடினும் - ஊடற்காலத்திலும், இனிய - இன்பமாகிய கருத்துக்களை, கூறும் - எடுத்துக் காட்டும், இன்நகை - இனிய பற்களையும், அமிழ்து - தேவாமிர்தம் போன்ற மொழிகள், பொதி - நிரம்பிய, துவர்வாய் - பவளம் போன்ற வாயினையும், அமர்த்த - ஆராய்வுகள் பலவற்றை யுள்ளடக்கிய, நோக்கின் - பார்வையினையும், சுடர் நுதல் - பிறையினைப் போன்ற நெற்றியினையும், (கொண்ட) அசைநடை - அன்னம் போன்று அசைந்து நடக்கும் நடையினையுடையாளாகிய நினது தலைவி, உள்ளலும் உரியள் - குறித்த காலவளவுவரை நின்னைவற்படியே ஆற்றியிருந்து இப்பொழுது நின்னை நினைத்து வருந்துதற்கு முரியளாயினள்,

[16 பூண் 16] [14 தாவின்று திருமணி
கரு. பொருத திகழ்விடு பசும்பொன் வயங்குகதிர்
வயிரமோ டறழ்ந்து 16] [16 சுடர்வா வெழுமுடி
கெழீஇய திருஞெம ரகலத்துப் புரையோ
ருண்கட் டுயிலின் பாயல் பாலுங்
கொளாலும் வல்லோய்நின் சாயன் மார்பு
உ0. நனியலைத் தன்றே 20] [14 பாய லுய்யுமோ 14]

பூண் - ஆபரணத்தில், தா - வலி (கெட்டித்தன்)மை, இன்று - இன்மையாலே, திருமணி - அழகிய மணிகளுடனே, பொருத - சேர்த்து அணிகள் இயற்றுதற்குத் தகுதியாக, திகழ் - ஓட்டற்ற ஒளியினை, விடு - வெளிவிடுகின்ற, பசும்பொன் - கிளிச்சிறையெனப்

பெயர் பெற்ற பொன்னனது, வயங்கு - விளங்குகின்ற, கதிர் - சுடர்க்கொடிகளை யுடைய, வயிரமோடு - வயிரமணிகளுடனே கூடி, உறழ்ந்து - மாறுபட்டு, சுடர்வா - ஒளியினை வீசும்படி, (அமைக்கப் பட்டுள்ள), எழுமுடி - எதிர்த்த எழு அரசர்களின் எழு மகுடங்க ளாகிய மாலையானது, கெழீஇய - பொருந்திய, திரு - இலக்குமி, ஞெமர் - எழுந்தருளியுள்ள, அகலம் - நினதுமார்பாகிய, புரை யோர் - குலமகளிராகிய நினது காதலியர், உண் - நின்னலனை யுண்டு, கண்துயில் இன் - கண்ணுறங்குதற்கினிய, பாயல் - படுக் கையினை, பாலும் - வேற்றுப்புலஞ் செல்லவேண்டாக் காலத்திற் காதலியர்க்குப் பகுத்துக் கொடுத்தலினும், கொளாலும் - வேற் றுப் புலஞ் செல்லவேண்டிய காலத்திற் காதலியர்பாலிருந்து வாங்கிச் செல்லுதலினும், வல்லோய் - திறமைமிக்கவனே, நின்சா யல் மார்பு - நினது அழகிய மார்பு, நனி - மிகவும், அலைத்தன்று - தலைவியைவருத்தியது, பாயல் - தனிமையான படுக்கையிடத்தே, உய்யுமோ - அவள் தனியே இருந்து பிழைப்பளோ? பிழைக்காள்.

(தொடரும்)

---

## பாவினம்

[வித்வான். திரு. G. தேவநேசன் அவர்கள்]

(கடு-ம் பக்கத் தொடர்ச்சி)

மண்டலம், வட்டமென்னும் சொற்கள் Circle என்னும் ஆங்கிலச் சொற்போல இடப்பகுதிகளையுங் குறிக்கும்.

"ஜயங்கொண்ட சோழமண்டலம்"

"இந்தவட்டத்திற்குள் அவற்கெதிரில்லை"

வட்டமென்பது வட்டகை வட்டார மென்றும் திரியும். மருத்துவ முறையில் நாற்பத் தெண்ணாட் பகுதி ஒரு மண்டல மெனப்படும். காலமுமிடத்தோ டொக்கும்.

இனி, மண்டலம், வட்ட மென்னும் சொற்கள் முழுமைப் பொருளினும் வழங்கும். திங்கள் வட்டமாயிருக்குங்கால் பதினாறு கலைகளும் நிரம்பியிருத்தல் காண்க. ஆங்கிலத்தும் round என்னும் சொல் whole, complete எனப் பொருள்படும். உலகவழக்கில் முழுமைப் பொருளில் 'வள்ளிது' என்றோர் சொல் வழங்கி வருகின்றது. அது வட்டம் என்னும் சொல்போல வள் என்னும் பகுதியினின்று பிறந்ததாகும். வள்ளிதாய்ச் செலவாயிற்று

என்றால் முழுதும் செலவாயிற்றென்பது பொருள். வள்ளிசாய் என்பது கொச்சைப் போலி.

மண்டலம் என்னுந் தொகைச்சொல், மண் + தலம் என விரியும். பண்டைத்தமிழர் கடற்செலவில் தேர்ந்திருந்தாராதலின், உலகெங்கும் கலத்திற்சென்று நிலம் வட்டமாயிருத்தலை நன்கறிந்திருந்தனர். பண்டையுலகத்தை ஏழ் தீவாகப் பகுத்துக் கூறினதும் இதை வற்புறுத்தும். தீவு—கண்டம். வடவைக்கனலை (Aurora Borealis) அறிந்திருந்ததும் மற்றோராதாரம். இலத்தீன் (Latin) ஆங்கிலம் முதலிய மொழிகளிற் கடற்றுறை பற்றிய சொற்கள் பல செந்தமிழாயிருப்பதும் இதற்குச் சிறந்ததோர் சான்றாம்.

| | | |
|---|---|---|
| நாவாய் | ... | L. Navis. Eng. Navy=கடற்படை. |
| கலம் | ... | Eng. Galleon |
| வாரணம் | ... | L. Marina. Sans. வருணு |
| கரை | ... | Eng. Shore. sh=க |
| படகு | ... | Eng. Bark. r=d. c. f. Coorg=குடகு |
| கட்டுமரம் | ... | Catamaran |
| சோழி | ... | Shell |
| நங்கூரம் | ... | Anchor |
| கப்பல் | ... | Ship |

இது நிற்க. இனி நாற்சீரால் நிரம்பிவரும் அளவடியை மண்டில யாப்பென்றார்.

"நாற்சீர்கொண்ட தடியெனப்படுமே" என்பது சூத்திரம். இதனால் இயற்சீரால் துள்ளலிசைபற்றி அளவடி நான்காய்த் தனித்து வருங் கொச்சகக்கலியுறுப்புக் கலிமண்டிலமாயிற்று. மண்டிலம் பிற்காலத்தில் விருத்த மென்னும் வடமொழிப் பரியாயப் பெயரால் வழங்கலாயிற்று. ஆகவே துறை, தாழிசை, விருத்த மென்னும் மூவகைப் பாவினமும் கலிப்பாவானமை பெறப்பட்டது. இவற்றைப் பிற்காலத்தார் பொதுவாகக்கொண்டு, வரம்பு கடந்து வரூஉம் கொச்சகக் கலிகளையெல்லாம் ஒருபுடையொப்புமை பற்றி ஒவ்வோர் பாவிற்கும் மும்மூன்றினமாகப் பகுத்துரைத்தார்.

கலிப்பாப் பலவகையடிகளானும் உறுப்புக் குறைந்தும் மிக்கும் வருமென்பது முன்னரே கூறப்பட்டது. அதினுங் கொச்

சகக்கலியோ கலிப்பாவிற் கின்றியமையாத துள்ளலிசையுங் கெட்டு வருவதாகும். கலித்தல் - துள்ளல்.

இரண்டடி அளவொத்துச் செந்துறைப் பாடாண் பாட்டாய் வருவதை அடித்தொகைபற்றிக் குறட்கினமாக்கி வெண்செந்துறை யென்றனர்.

உ-ம் "ஆத்திசூடி யமர்ந்த தேவனை
ஏத்தியேத்தித் தொழுவோம் யாமே."

3 அடிமுதல் 7 அடிவரை முன்நீண்டு பின்குறுகிவரும் செந்துறைப்பாடாண் பாட்டை ஈறு குறைதல்பற்றி வெண்பாவிற் கினமாக்கி வெண்டுறை என்றனர்.

4 அடியாய் எருத்தடி நைந்தும், குட்டம் பட்டும், இடைமடக்கியும் ஆசிரிய வியலான் வரும் செந்துறைப் பாடாண்பாட்டை ஆசிரியத்துறை யென்றனர். இடைமடக்கல் அம்மானைக் கியல் பென்க.

கோவையில்வரும் கலித்துறைச் செய்யுளை எழுத்தெண்ணிக் கட்டளைக் கலித்துறை யென்றனர்.

குறளடி நான்காய் வரும் செந்துறைப் பாடாண்பாட்டை அடிவகைபற்றி வஞ்சித்துறை யென்றனர்.

கலிப்பாவில் அம்போதரங்க வுறுப்புச் சிந்தடி குறளடிகளும் பெற்றுவரும்.

இனித் தாழிசைக்குச் சிறப்பிலக்கணம், தாழும் பட்ட ஓசையாய் அளவொத்து மூன்று அடுக்கிவருதல். இரண்டடியாய் இறுதியடிகுறைந்து வருவதைக் குறட்டாழிசை யென்றும், மூன்றடியாய் ஈற்றடி சிந்தடியாய் வருவதை வெண்டாழிசை யென்றும், மூன்று கோடியாய் அளவொத்து மண்டில வாசிரியம் போல் வருவதை ஆசிரியத்தாழிசை யென்றும், குறளடி நான்காய் வருவதை வஞ்சித்தாழிசை யென்றுங் கூறினர். இவையெல்லாம் ஒருபொருண்மேல் மூன்றடுக்கியும் தனித்தும் வருவனவாம்.

இனி, விருத்தத்திற்குச் சிறப்பிலக்கணம் அளவொத்த நாலடியாய் மண்டலித்து வருதல்; அதாவது நிரம்பி வருதல்.

3 அடியாயும் 4 அடியாயும் மண்டலித்து வெண்பாவியலிற் றனிச்சொற்பெற்று வருவதை வெளி விருத்த மென்றும், கலிவிருத்தமும், கலித்துறையும் அளவடியாயும் நெடிலடியாயும் வருத

வின் அவற்றுக்குமேல் கழிநெடிலடியாய் ஆசிரியத் தளைதட்டு வருவதை ஆசிரிய விருத்தமென்றும், வஞ்சிப்பாவிற்கு நிரம்பின அடி சிந்தடி யாதலின் சிந்தடியாய் வருவதை வஞ்சி விருத்தமென் றுங் கூறினர்.

கலிப்பாவில் அராக வுறுப்புக் கழிநெடிலடியானும் வரப் பெறும்.

“ அறுசீரடியே ஆசிரியத் தளையொடு
நெறிபெற்று வரூஉம் நேரடி முன்னே ”

“ எழுசீரடியே முடுகியல் நடக்கும்”

என்பவை சூத்திரம். ஆசிரிய விருத்தம் பிற்காலத்தில் பிறதளை யும் தட்டு வந்தது.

விருத்தங்கட் கெல்லாம் நாலடி யளவொத்திருத்தல் பொது விலக்கணமாம். அடிகள் பலவகைப்படு மேனும் நாற்சீரடி அள வாயினாற்போல, பாக்கள் பற்பல அடித்தொகை பெறுமேனும் நாலடிச் செய்யுள் அளவாயிற்று. மோனை எதுகை முதலிய தொடைகட்கும் இசைநிறைவிற்கும் அடியுள் நாற்சீரடி சிறத்தல் போலச் செய்யுளில் நாலடிச் செய்யுள் சிறப்பதாகும். இதனானே வெண்பா பலவடியாய் வருமேனும் நாலடி வெண்பா பெருவழக் காயிற்று. பிற்காலத்துச் செய்யுட்களெல்லாம் பெரும்பாலும் நாலடியாலேயே நடப்பவையாயின. நாற்சீரால் அடிநிரம்பி மண்டில மாயினாற்போல, நாலடியாலும் செய்யுள் நிரம்பி ஒருவகை மண் டில மாயிற்றென்க.

விருத்தங்களில், 26 வரை எழுத்துப் பெற்றுவருபவற்றை விருத்த மென்றும், அதற்குமேல் தாண்டி வருபவற்றைத் தாண் டக மென்றும், இவை சந்தமாகவரின் சந்தவிருத்தம், சந்தத் தாண்டக மென்றுங் கூறினர்.

இங்ஙன மெல்லாம் ஒருபாவிற்குரிய பலவுறுப்புக்களைப் பிற பாக்கட் கினமாக்கியதால், ஓரினம் பிறவினமாயும், ஒரு செய்யுள் பல பாவிற்கினமாயும் வருதற்கேற்று, இன்ன செய்யுளொன் றென்றைத் துணியாது மயங்குதற் கிடனாயிற்று.

" மூவா முதலாவுலக மொரு மூன்றுமேத்தத்
தாவாத வின்பந் தலையாயது தன்னினெய்தி

யோவாது நின்றகுணத் தொண்ணிதிச் செல்வனென்ப
தேவாதி தேவனவன் சேவடி சேர்து மன்றே"

என்னும் சிந்தாமணிக் கடவுள் வாழ்த்துச் செய்யுளுரையில், நச்சினார்க்கினியர்,

"இத்தொடர் நிலைச் செய்யுள் தேவர் செய்கின்ற காலத்திற்குநூல் அகத்தியமும் தொல்காப்பியமு மாதலானும்...அகத்தியத்தின் வழிநூல் தொல்காப்பிய மாதலானும், பிறர் கூறிய நூல்கள் நிரம்பிய இலக்கணத்தன அன்மையானும், அந்நூலிற் கூறிய விலக்கணமே இதற் கிலக்கண மென்றுணர்க.

இச்செய்யுள் முன்னோர் கூறிய குறிப்பின்கண் வந்த செந்துறைப் பாடாண் பகுதியாம்.

இனி, இத்தொடர் நிலைச் செய்யுளை இனமென்ப. அந் நூல்கள் இனமென்று காட்டிய வுதாரணங்கடாம் அவர் சேர்த்த அவ்வப்பாக்கட்கே இனமாகாது, ஒழிந்தபாக்கட்கும் இனமாதற்கு ஏற்றலானும், துறையை விருத்தமாகவும், தாழிசையை விருத்தமாகவும், ஓதுதற்கு அவையேற்றமையானும், "மூவாமுதலா" என்னுங் கவி முதலியன தாழம்பட்ட ஓசையான் விருத்தமாகவும், சீர் வரையறையானும் மிகத்துள்ளிய வோசையானும் துறையாயுங் கிடத்தலின், இதனை விருத்தக் கலித்துறையென்னல்வேண்டும். அது கூறவே துறையும் விருத்தமுமெனப் பகுத்தோதிய இலக்கணம் நிரம்பாதா மாகலானும் இனமென்றல் பொருத்தமின்று. இச்செய்யுட்களின் ஓசை வேற்றுமையும் மிக்குங் குறைந்தும் வருவனவும் கலிக்கே யேற்றலிற் கொச்சக மென்றடங்கின" எனக் கூறியுள்ளார்.

இங்ஙனமே கலிவிருத்தம் துள்ளலிசையாற் கலியினமாயும், சீர்வகையானும் அடிவகையானும், நிலைமண்டில வாசிரியமாயும், நாலசைச் சீர்கொள்ளின், குறளடி வஞ்சிப்பாவாயும் கூறுதற்கேற்று வருதலும், கட்டளைக்கலிப்பா துள்ளலிசையாற் கலிப்பாவாயும் சீர்வகையானும் அடிவகையானும் ஆசிரிய விருத்தமாயுங் கூறுதற்கேற்று வருதலும் கண்டுகொள்க.

இதுகாறுங் கூறியவாற்ால், பாவின மூன்றுந் தமிழ்யாப்பேயென்றும், அவை கொச்சகக்கலியின் திரிபென்றும், பின்னூலார் அவற்றைப் பன்னிரு பாவினமாகப் பகுத்துக் காட்டினரென்றும், சாலை, பண்ணை முதலிய தமிழ்ச்சொற்கள் மறைந்து ரோட்டு,

(இங்கிலீஷ்) ஜமீன்தார் (இந்துஸ்தானி) முதலிய அயற்சொற்கள் வழங்கினாற்போல, மண்டிலமென்னும் தென்சொல் மறைந்து விருத்தமென்னும் வடசொல் வழங்கிற்றென்றும், இலக்கணம் நிரம்பிய பாவியற்றும் அருமை நோக்கிச் சங்ககாலத்திற்குப் பின்னோர் எளிய யாப்பான இனங்களை யியற்றினரென்றும், அவற்றுட் சிறப்புப்பற்றி மண்டிலயாப்புப் பெருவழக்காயிற்றென்றும் தெள்ளிதின் அறிந்துகொள்க.

வடமொழிவிருத்தம் குறளடியானும் வருமேனும், விருத்தமல்லது வேறியாப்பு ஆண்டின்மையானும், அவை பெரும்பாலும் தமிழோடொப்புமையுடைமையானும், பிற்றைத்தமிழ் யாப்பில் விருத்தமே பெருவழக்கானமையானும், தமிழியற்கெல்லாம் தகாது வடநூல்வழி கற்பிக்குமாறு அத்துணை இயைபு அவ்விருமொழிக்கும் ஆனபின்னர் மண்டில மென்னும் பெயர் மறைந்து விருத்தமென்னும் பெயர் வேரூன்றிய தென்க.

---

## புத்த பகவான் பொருண் மொழிகள்

[பண்டித, திரு. அ. நடராஜபிள்ளையவர்கள்]

### 1. பெற்றோர் கடமைகள்:—

பெற்றோர்களே !

1. மக்களைக் கொடிய வழியினின் றொழிப்பீர்.
2. நற்செயல் களையவர் நாடிடச் செய்வீர்.
3. கருந்தனக் கல்வியைக் கற்றிடச் செய்வீர்.
4. பண்புள பதிபத் தினிகளைச் சேர்ப்பீர்.
5. தாயபா கத்தைச் சரிவர வளிப்பீர்.

### 2. மக்களின் கடமைகள்.

மக்காள் !

1. வளர்த்தபெற் றோரைப்பின் வளர்த்திட நினைமின்.
2. மனைவிமக் கட்கா வருந்தி யுழைமின்.
3. குலத்திற் கியைந்த கடமையைக் கொண்மின்.
4. முன்னோர் தேட்டைப் பொன்னெனப் போற்றுமின்,
5. பெற்றோர் நன்றியைப் பெரிதுபா ராட்டுமின்.

---

# மொழிபெயர்ப்பு-Translation

[திரு. T. B. கிருஷ்ணசாமி முதலியாரவர்கள் M. A. B. L.]

## இனியவை நாற்பது

(உச-ம் பக்கத் தொடர்ச்சி)

உ௦. நட்டார்ப் புறங்கூறுன் வாழ்த னனியினிதே
பட்டாங்கு பேணிப் பணிந்தொழுகன் முன்னினிதே
முட்டில் பெரும்பொரு ளாக்கியக்கான் மற்றது
தக்குழி யீத லினிது.

20. Pleasant it is, not to speak ill of one's relations; pleasant to guard one's truth and be modest to all; when in possession of much-well-earned wealth, to give gifts according to capacity is pleasant.

உக. சலவரைச் சாரா விடுத லினிதே
புலவர்தம் வாய்மொழி போற்ற லினிதே
மலர்தலை ஞாலத்து மன்னுயிர்க் கெல்லாந்
தகுதியால் வாழ்த லினிது.

21. Good to keep out the deceitful; pleasant to treasure up the words of the poets; it is pleasant for all mankind on this wide earth to live in a proper and becoming manner.

உஉ. பிறன்கைப் பொருள்வெளவான் வாழ்த லினிதே
அறம்புரிந் தல்லவை நீக்க லினிதே
மறந்தேயு மாணு மயரிகட் சேராத்
திறந்தெரிந்து வாழ்த லினிது.

22. Pleasant to live without coveting another's property; pleasant to do good and refrain from evil; pleasant to know the ways by which one could avoid association even by forgetfulness with fools.

உங. வருவா யறிந்து வழங்க லினிதே
ஒருவர்பங் காகாத வூக்க மினிதே
பெருவகைத் தாயினும் பெட்டவை செய்யார்
திரிபின்றி வாழ்த லினிது.

23. Pleasant to spend within one's means; pleasant to be enthusiastic without being partial; even if producing much good, it is pleasant not to do anything without much thought.

உச. காவோ டறக்குளந் தொட்டன் மிகவினிதே
ஆவோடு பொன்னீத லந்தணர்க்கு முன்னினிதே
பாவமு மஞ்சாராய்ப் பற்றுந் தொழின்மொழிச்
சூதரைச் சோர்த லினிது.

24. It is pleasant to raise a garden and dig a tank for charity it is pleasant to give cows and gold to Brahmins; pleasant to be rid of the wicked who are bent on getting gold without fearing evil-doing.

உரு. வெல்வது வேண்டி வெகுளாதா னோன்பினிதே
ஒல்லுந் துணையுமொன் றுய்ப்பான் பொறையினிதே
இல்லது காமுற் றிரங்கி யிடர்ப்படார்
செய்வது செய்த லினிது.

25. If you desire to conquer, it is desirable not to give way to anger; pleasant is the patience of one who is bent on accomplishing a thing; pleasant instead of attempting the impossible and courting failure, to do what is possible to one.

உசு. ஐவாய வேட்கை யவாவடக்கன் முன்னினிதே
கைவாய்ப் பொருள்பெறினுங் கல்லார்கட் டீர்வினிதே
நில்லாத காட்சி நிறையின் மனிதரைப்
புல்லா விடுத லினிது.

26. It is pleasant to control the desires of the five senses; even when getting lasting wealth, it is good to give up the company of the ignorant; it is pleasant not to associate with those whose learning is of a fleeting kind.

உஎ. நச்சித்தற் சென்றார் நசைகொல்லா மாண்பினிதே
உட்கில் வழிவாழா வூக்க மிகவினிதே
எத்திறத் தானு மியைவ கரவாத
பற்றினிற் பாங்கினிய தில்.

27. It is pleasant not to kill by refusal the desire of those who seek one; pleasant is the desire not to live when living without honour; pleasant not to refrain from giving what is proper to be given to others.

உஅ. தானங் கொடுப்பான் றகையாண்மை முன்னினிதே
மானம் படவரின் வாழாமை முன்னினிதே
ஊனங் கொண்டாடா ருறுதி யுடையவை
கோண்முறையாற் கோட லினிது.

28. The nobility of a donor is very pleasant ; to die if overtaken by dishonour is pleasant ; pleasant without making much of faults, to take only the good of anything.

உகூ. ஆற்றுனை யாற்றென் றலையாமை முன்னினிதே
கூற்றம் வரவுண்மை சிந்தித்து வாழ்வினிதே
ஆக்க மழியினு மல்லவை கூறாத
தேர்ச்சியிற் றேர்வினிய தில்.

29. It is pleasant not to trouble a man to do work for which he is not fit ; it is pleasant to live with a full realisation of the certainty of death ; even when losing all one's prosperity, it is pleasant not to speak lies.

ருய. கயவரைக் கைகழிந்து வாழ்த லினிதே
உயர்வுள்ளி யூக்கம் பிறத்த லினிதே
எளிய ரிவரென் றிகழ்ந்துரையா ராகி
ஒளிபட வாழ்த லினிது.

30. It is pleasant to live without association with the wicked ; it is pleasant to aspire to rise higher and higher ; it is pleasant to live with fame and without despising the poor.

ருக. நன்றிப் பயன்றூக்கி வாழ்த னனியினிதே
மன்றக் கொடும்பா டுரையாத மாண்பினிதே
அன்றறிவா ரியாரென் றடைக்கலம் வெளவாத
நன்றியி னன்கினிய தில்.

31. It is pleasant to be grateful ; it is pleasant in a hall of justice to be impartial ; it is pleasant, since no one knows his appointed time, not to covet property entrusted to one's care.

ருஉ. அடைந்தார் துயர்கூரா வாற்ற லினிதே
கடன்கொண்டுஞ் செய்வன செய்த லினிதே
சிறந்தமைந்த கேள்விய ராயினு மாராய்ந்
தறிந்துரைத்த லாற்ற வினிது.

32. It is pleasant to protect those that seek refuge ; it is proper to do what is essential even by incurring a debt ; it is pleasant even for the very learned to think before they speak.

௩௩. கற்றறிந்தார் கூறுங் கருமப் பொருளினிதே
பற்றமையா வேந்தன்கீழ் வாழாமை முன்னினிதே
தெற்றென வின்றித் தெளிந்தாரைத் தீங்கூக்காப்
பத்திமையிற் பாங்கினிய தில்.

33. It is pleasant to learn the truth of things from those that know; it is pleasant not to live under a cruel King; it is pleasant to do good to those who without thought, have put their trust in us.

௩௪. ஊர்முனியா செய்தொழுகு மூக்க மிகவினிதே
தானே மடிந்திராத் தாளாண்மை முன்னினிதே
வாண்மயங்கு மண்டமருண் மாறுத மாமன்னர்
தானை தடுத்த லினிது.

34. It is pleasant to live so that the wrath of the village is not incurred; it is pleasant not to be lazy but be up and doing; it is pleasant for the king to avert a war where at close quarters the sabres flash and few escape.

௩௫. எல்லிப் பொழுது வழங்காமை முன்னினிதே
சொல்லுங்காற் சோர்வின்றிச் சொல்லுதன் மாண்பினிதே
புல்லிக் கொளினும் பொருளல்லார் தங்கேண்மை
கொள்ளா விடுத லினிது.

35. It is pleasant not to travel at night; it is pleasant when speaking to speak with care and caution; even when forced, it is pleasant not to associate with the worthless.

௩௬. ஒற்றினா னொற்றிப் பொருடெரிதன் முன்னினிதே
முற்றான் றெரிந்து முறைசெய்தன் முன்னினிதே
பற்றிலனாய்ப் பல்லுயிர்க்கும் பாத்துற்றுப் பாங்கறிதல்
வெற்றிவேல் வேந்தர்க் கினிது.

36. It is pleasant for Kings to gain information through spies; it is pleasant to know beforehand and then do what is proper; without attachment to any one, with kindness to all, to do good is pleasant to a victorious King.

௩௭. அவ்வித் தழுக்கா றுரையாமை முன்னினிதே
செவ்வியனாய்ச் செற்றுச் சினங்கடிந்து வாழ்வினிதே
கவ்வித்தாங் கொண்டுதாங் கண்டது காமுற்று
வவ்வார் விடுத லினிது.

37. It is pleasant not to poison the mind of Kings and speak words out of envy; it is pleasant to live hating wrath and keeping a mind unwarped; it is pleasant not to covet whatever is seen, but to forget that one ever liked it.

௩அ. இளமையை மூப்பென் றுணர்த லினிதே
கிளைஞர்மாட் டச்சின்மை கேட்ட லினிதே
தடமென் பணைத்தோட் டளிரிய லாரை
விடமென் றுணர்த லினிது.

38. It is pleasant to regard even one's youth as age and be prepared; it is pleasant to exchange compliments with one's relations; it is pleasant to regard as poison women of ill-fame, though they have shoulders like the bamboo and softness like tender shoots.

௩கூ. சிற்றா ளுடையான் படைக்கல மாண்பினிதே
நட்டா ருடையான் பகையாண்மை முன்னினிதே
எத்துணையு மாற்ற வினிதென்ப பால்படுங்
கற்றா வுடையான் விருந்து.

39. The prowess of one who has an army of youths is pleasant; it is pleasant to see the self-control of one who has many relations; and it is very pleasant to feast with one who has a cow and a calf.

சம். பிச்சைபுக் குண்பான் பிளிறாமை முன்னினிதே
துச்சி லிருந்து துயர்கூரா மாண்பினிதே
உற்றபே ராசை கருதி யறனொரூஉ
மொற்க மிலாமை இனிது.

40. It is proper that a beggar should not lose his temper; it is pleasant not to be a sub-tenant and suffer sorrows; it is pleasant not to deviate from the path of rectitude out of mere covetousness.

சக. பத்துக் கொடுத்தும் பதியிருந்து வாழ்வினிதே
வித்துக்குற் றுண்ணா விழுப்ப மிகவினிதே
பற்பல நாளும் பழுதின்றிப் பாங்குடைய
கற்றலிற் காழினிய தில்.

41. It is pleasant even at ten times the cost to live in one's own place; it is pleasant not to be driven to use paddy-seed for eating; it is pleasant, very pleasant, to study for long without wearying thereof, useful books.

இனியவை நாற்பது முற்றும்

---

# வரலாற்றுப் பகுதி
# History & Biography

## திருவாதவூர்

(மணிவாசகப்பெருமான் பிறந்த இடம்)

(முகப்புப் படம் பார்க்க)

[திரு. ஜே. எம். சோமசுந்தரம்பிள்ளை அவர்கள் பி.ஏ, பி.எல்.]

மதுரைமாநகரத்திற்குக் கிழக்கே பதினைந்து கல் (மைல்) தொலைவில் இருப்பது திருவாதவூர் என்னும் ஒரு சிறிய ஊர். அவ்வூருக்கு உந்துவண்டிகள் (மோட்டார்) போக நல்ல பாதை இருக்கிறது. வழியில் ஆங்காங்குள்ள நெல்வயல்களும், பெரியாற்றுக் கால்வாய்களும், பரந்த வெளிகளும், கற் குன்றுகளும், மலைத் தோற்றங்களும், சிற்றூர்களும் மனக்கிளர்ச்சியுண்டாக்குகின்றன.

2. பன்னாட்குமுன், திருவாதவூர் அப்பெயர் கொண்ட ஒரு "ஜில்லா" வாக விருந்தது. அவ்வூர் திருவாதூர் என்றும் பண்டு வழங்கப்பட்டுளது. வாது என்றால் தருக்கம் என்பது ஒரு பொருள். அக்காலத்தில் அவ்வூரில் பல சமய தத்துவவாதிகள் இருந்ததாகக் கருதப்படுகிறது.

3. அவ்வூரை யணுகும்பொழுதே அதன் அழகு சிறந்து காணப்படும். அவ்வூரின் வடபுறத்திலும் மேற்புறத்திலும் ஒரு பெரிய ஏரி சூழ்ந்திருக்கிறது. அவ்வேரியின் கரைமீதே மேலூருக்குப் போகும் வண்டிப்பாதை போடப்பட்டிருக்கிறது. அப் பாதையிலிருந்து பார்த்தால் ஏரிக்கப்பாலுள்ள அழகர்மலையின் காட்சி கண்களைக் கவரும். பழைய சிவன்கோவிலின் கோபுரம் ஒன்று பச்சென்ற சோலையின் நடுவே ஓங்கி விளங்கும்.

4. அவ்வேரியின் மதகு ஒன்றின்மீது "புருஷாமிருகம்" என்ற ஒரு கற்சிலை வீர உருவத்துடனிருக்கிறது. வேறு எவ்விடத்திலும் இவ்வித தோற்றத்துடன் புருஷாமிருகம் அமைக்கப் படவில்லை யென்று சொல்லப்படுகிறது. புருஷாமிருகம் நீரைத் தூய்மையாக்குவதென்றும், ஊரைக் காப்பதென்றும் நம்பப்படுகிறது. அதற்கு ஆண்டுதோறும் மகாசிவாத்திரி காலத்தில் ஊரா

றெல்லாருங் கூடி ஒரு பெருவிழாக் கொண்டாடுகிறார்கள். அத்திரு விழா நடந்த உடனே மழை பெய்வது வழக்கமாக விருக்கிறது.

5. ஏரிக்கரை கல்லினால் கட்டப்பட்டது. அதன்மேல் கோட்டை மதில்களும், வட்டமான பாசறைகளும் கட்டப்பட்டு, இப்பொழுது அவைகளின் இடிந்துபோன இரண்டொரு பகுதிகள் மட்டும் காணப்படுகின்றன. முற்காலத்தில் அவ்வூர் நாற்புறங்களிலும் கோட்டையால் சூழப்பட்டிருந்ததாகச் சொல்லப் படுகிறது.

6. ஏரியையும், மதிலையுங், கடந்து ஒரு பிடாரி கோவிலிருக்கிறது. அதன் பக்கத்தில் கல்வெட்டுள்ள சில கற்களாலமைக்கப் பட்ட ஒரு சிறு கட்டிட மிருக்கிறது. முன்னொரு காலத்தில் வெங்கம்மாள் என்ற ஒருத்தி, கொலையுண்ட தன் கணவனோடு உடன்கட்டை ஏறினது அவ்விடம் என்று சொல்லப்படுகிறது. அச் செய்தி நிகழ்ந்தபின்னர் அவ்வூர் வளம்பெருகியதாகவுஞ் சொல்லப்படுகிறது.

7. கி. பி. முதல்நூற்றாண்டிலிருந்தவரும் சங்கப்புலவர்களில் சிறந்தவரும், ஐம்பத்தைந்தாவது திருவிளையாடலில் திருவாலவாய்க் கடவுளால் முதற் புலவராகிய மூவருள் ஒருவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவரும், பல உயரிய தமிழ் நூல்களியற்றியவருமாகிய கபிலர் பிறந்த ஊர் திருவாதவூராகும். கடையெழு வள்ளல்களில் ஒருவராகிய பாரி என்பார்க்கு உரிய நண்பராவார் கபிலர். பாரிவள்ளல் ஆண்டுவந்த பறம்புநாடு இதுவென்றே சிலர் கூறுவர். அந்த ஊரிலுள்ள கருப்பண்ணசாமி கோவிலுக்கு "ஏழு வீடுபாரி கருப்பு" என்று பெயர் வழங்குகிறது.

8. அந்த ஊரில் பாரி வள்ளலின்வழிவந்த இருநூறு குடும்பத்தினர்கள் இன்றைக்கும் இருக்கிறார்கள். அவர்கள் வேளாளர்கள். அவர்கள் தங்கள் குடும்பத்தில் பிறக்கும் முதற் குழந்தைக்கு, பெண்ணாயிருந்தாலும் ஆணாயிருந்தாலும், பாரி என்று பெயரிடுகிறார்கள். வேளாளர்களையொழித்த மற்ற இனத்தவர்களும் பாரி யென்ற பெயரை வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

9. மாணிக்கவாசகப் பெருமான் பிறந்தவிடம் அவ்வூராதலால், அஃது இக்காலத்தில் எல்லாராலும் சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது. சைவத் திருமுறைகளில் எட்டாவதாகிய "திருவாசகம், திருக்கோவையார்" என்ற ஒப்புயர்வற்ற நூல்களைப் பாடிய

வர் மாணிக்கவாசகர். "திருவாசகத்தில் உருகாதார் ஒரு வாசகத்திலும் உருகார்" என்பது பழமொழி. அப்பெரியார் நான்காம் நூற்றாண்டிலிருந்தாரென இதுவரையிலும் வெளி வந்துள்ள ஆராய்ச்சியின் முடிவு விளக்குகின்றது.

10. மாணிக்கவாசகர் பிறந்து வளர்ந்த வீடு இருந்த இடமும் அவ் வீட்டின் அடிப்படையும் அவர் ஆண்டுவந்த கிணறும் இன்றுங் காண்பிக்கப்பட்டு வருகின்றன. கற்குழைகளினாலும், முட் செடிகளினாலும் மூடப்பட்டிருந்த அவ்விடத்தைச் செம்மைப் படுத்தி இப்பொழுது அவ்விடத்தில் மாணிக்கவாசகருக்கு ஒரு தனிக்கோவில் கட்டப்பட்டு வருகிறது. இன்னுஞ் சில மாதங்களில் அக் கோவிலுக்கு குடமுழுக்குவிழா நடத்தப் படும்.

11. மாணிக்கவாசகர் தந்தை பெயர் சம்புபாதாகிருதர் என்பதாம். அவர் தாயார் சிவஞானவதியாவர். அவர் அமாத்தியப் பிராமணர் வகுப்பினரென்ப ரொருசாரார். அவர் பதினாறு வயதிற்குள் எல்லாக் கலைகளையும் முற்றுமுணர்ந்து நாடெங்கும் புகழ் பெற்றவரானார். அவருக்குத் திருவாதவூரார் என்பது பெற்றோர்களால் இடப்பெற்ற பெயர்.

12. மதுராபுரியில் ஆண்டுவந்த அரிமர்த்தன பாண்டிய அரசன் திருவாதவூரரைக் காண ஆசைப்பட்டு அவரைத் தம்மிடத்திற்கு வரவழைத்தான். திருவாதவூரார் வந்ததும் அவர் திறமையைக் கண்டு அரசன் வியந்து அவரை உடனே தனக்கு முதன் மந்திரியாக அமைத்து, "தென்னவன் பிரமராயன்" என்ற பட்டப்பெயரையுங் கொடுத்து, அரசாட்சி முழுவதையும் அவர்கையில் ஒப்புவித்துவிட்டான். முதன் மந்திரியான அவர், அந்நிலைக்கேற்ற எல்லாவித செல்வக் கோலத்திலுமிருந்துகொண்டு அரசாட்சியை ஒழுங்காக நடாத்தி வந்தார். அப்படி இருந்த போதிலும் அவர் மனம், பந்தமாகிய இவ்வுலகப் பற்றை விட்டு, சச்சிதானந்த வடிவாகிய சற்குருவைக் காணும் அவாவுடையதாக விருந்தது. அவர் எண்ணம் முற்றுப் பெறுவதற்குக் காலமும் அணுகியது.

13. ஒருநாள் அரசன் தன்னுடைய குதிரைப் படைகளைப் பார்வையிட்டான். அதன்பின் குதிரைகள் புதிதாக வாங்க வேண்டுமென அரசன் கருதினான். அச்சமயம், மேற்குத் துறை

யில் உயர்ந்த குதிரைகள் வந்திறங்கி யிருப்பதாக ஒற்றர்கள் கூறினர். உடனே பாண்டியன் முதன் மந்திரியாரிடம் ஏராள மான பொருளைக் கொடுத்துக் குதிரைகள் வாங்கிவரக் கட்டளை யிட்டான். வாதவூராரும் கட்டளைப்படி திருப்பெருந்துறை எனும் அவ்வூரை அணுகினர்.

14. ஆங்கு ஒரு சோலையினடுவே, குருந்த மரத்தின் கீழே தன் 999 கணங்களோடு, குரு சிஷ்யபாவனையாய்க் கைலாயத்தி னின்று சிவபெருமான் திருவாதவூரரை ஆட்கொள்ள வந்து அமர்ந்திருந்தார். சிவகணங்கள் ஆகமங்களை ஓதும் இன்னிசை, சோலையை அணுகும் திருவாதவூரர் செவியில் பட்டது. அவர் சில ஒற்றர்களை விட்டு அவ்வொலியின் காரணத்தைக் கண்டு வரச்சொன்னர். ஒற்றர்கள் வந்து பார்த்துச் சிவபெருமான் போன்ற ஒரு குருநாதன் தன் அடியார்களுடன் பாடுவதாகச் சொன்னர்கள். உடனே முதன்மந்திரியார் பல்லக்கை விட்டிறங்கி, சோலையுள் புகுந்து குருவைக்கண்டு, அழலினிட்ட மெழுகுபோல் உருகி, அவர் திருவடியில் வீழ்ந்தார். வீழ்ந்த வரை வாரியெடுத்து முறைப்படி தீக்கை செய்து மாணிக்கவாசகர் என்ற பெயரைத் தந்தார் குருநாதன். உடனே மந்திரியாரின் உலகப்பற்று நீங்கிவிட்டது தம் ஆடை அணிகலன்கள், அரசன் கொடுத்த பொருள்கள் எல்லாவற்றையும் குருவினிடத்தில் கொடுத்துவிட்டார்; திருநீறும் கோவணமும் அணிந்து கொண்டார்.

அதைக்கண்ட மற்றவர்கள் முறையிட்டும், முதன் மந்திரியார் அவர்களைப் பொருட்படுத்தவில்லை. அதுகண்ட அவர்கள் மதுரைக்குத் திரும்பிவந்து நிகழ்ந்தவற்றை அரசனிடத்தில் தெரிவித்தார்கள். அதைக்கேட்ட பாண்டியன் சினங்கொண்டு, மந்திரியாரை உடனே திரும்பிவரும்படி கண்டிப்பான கட்டளையை அனுப்பினன். மந்திரியார் அக் கட்டளையைத் தன் குருவினிடத்தில் காண்பித்தார்.

(தொடரும்)

—

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## சோழர்கள் கல்வெட்டுகளிற்கண்ட சில குறிப்புகள்.

[இராவ்சாஹிப். திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள்]

சோழர்களுடைய ஆட்சி தென்னுட்டில் 9-வது நூற்றுண்டு முதல் 12-வது நூற்றுண்டு முற்றும் மிகச் சிறந்திருந்தது. அவர்கள் போர்களில் சிறந்து விளங்கி ஏனைய நாடுகளைத் தங்கள் வசப்படுத்தினது மாத்திரமேயன்றி நாட்டில் அரசியல் திட்டங்களையும் வெகு செம்மையாக ஆராய்ந்து அறிந்து போற்றிவந்தார்கள். அவர்கள் காலத்தில் அரசியல் திட்டங்கள் மிகுந்த பக்குவம் அடைய, அவற்றின் காரணமாக நாட்டுமக்கள் அமைதியும் செல்வமும் பெற்று சிறந்து விளங்கினர்கள். கல்வியறிவும் அவர்கள் பால் பெருகி விளங்குவதாயிற்று. பெரும் புலவர்களும் நாட்டில் தோன்றி அரிய நூல்களை வெளியிட்டார்கள். இவ் விவரங்களை எல்லாம் அவர்கள் காலத்துக் கல்வெட்டுகள் நன்ருக நமக்கு விளக்கிக் காட்டுகின்றன. நாடெங்கும் பரவிக் கிடக்கும் அக் கல்வெட்டுகள் பல அரிய செயல்களை நமக்கு எடுத்துக்காட்டுவனவாகும்; இப்போது அவைகளில் ஒரு தொகுதியாகிய கரூர்க் கல்வெட்டுக்களை மாத்திரம் நாம் இங்கே நமது ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்வோம்.

கரூர் பசுபதீஸ்வரர் ஆலயத்தில் ஐந்து கல்வெட்டுகளை எடுத்துச் சாசன பரிசோதகர் வெகு ஆண்டுகளுக்குமுன் பதிப்பித்திருக்கின்ருர்; என்ருலும் அவற்றிற் கிடக்கும்படியான பல அருமையான குறிப்புகளை உள்ளபடி மக்களுக்கு இதுவரையில் எடுத்து எவரும் சொல்லவில்லை. கரூர் என்பது கொங்குநாட்டில் உள்ள ஏழு பாடல்பெற்ற தலங்களில் ஒன்று. இதனை ஞானசம்பந்தர் பாடியிருக்கின்ருர். கல்வெட்டுகளில் இவ்வூர் ஆலயத்தைத் திருவாநிலை என்ற பெயரால் குறித்திருக்கிருர்கள். இவ்வூர் இருக்கும் நாடு வெங்கால் நாடு என்றும் கொங்கு மண்டலம் அதிராஜராஜ மண்டலம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இங்கே இராஜேந்திர சோழன், குலோத்துங்க சோழன் III

கோனேரின்மைகொண்டான் என்ற அரசர்களுடைய கல்வெட்டுகள் காணப்படுகின்றன. கோனேரின்மைகொண்டான் என்பது ஒரு பட்டப்பெயர். இப் பட்டத்தைக் கொங்கு சோழர்களில் வீர சோழன், வீர ராஜேந்திரன் என்ற இருவர் வகித்து இருந்தார்கள். கரூரில் கிடைத்த கன் மாணர் சாசனம் கொங்கு நாட்டில் வேறு ஐந்து இடங்களிலும் பொறிக்கப்பட்டுள்ளதால் அப்பட்டங் கொண்ட அரசன் கொங்கு சோழனுகத்தான் இருக்க வேண்டுமென்று ஊகிக்கலாம். இவ்வைந்து சாசனங்களிலும் சோழர்கள் காலத்தில் வழங்கிவந்த சில முக்கிய வழக்கங்களைப்பற்றி நாம் நன்ருக அறிய முடியும். அவைகளிற் சிலவற்றை இங்கே குறிப்போம்.

I. வரிகள்—எல்லா அரசியல்களிலும் நடப்பது போலவே சோழர்களும் பலவித வரிகளை வாங்கி வந்தனர். அவைகளில் நில வரியும், தொழில் வரியும் முக்கியமானவை. தொழில் வரிகளில் ஒவ்வொரு சாதிக்கும் தனித்தனி வரி இருந்தது. உதாரணமாகக் குசக்காணம் (குயவர்களுடைய வரி), வண்ணாரப் பாறை (வண்ணார்களின் வரி), தறி இறை (நெய்பவர்களின் வரி), தட்டாரப் பாட்டம் (தட்டார்களின் மீது வரி), இடைப் பாட்டம் (இடையர்களின் மீது வரி), ஈழப்பூட்சி (சாணர்களின் மீது வரி), முதலான பல தொழில்வரிகள் இருந்தன. இவ்விதம் பல வரிகள் இருக்கக் கரூர்ச் சாசனத்தில் கண்டவற்றை இனி ஆராய்வோம். இராஜேந்திர சோழதேவன் காலத்துக் கல்வெட்டில் "இறை, வரி, சிற்ருயம், எலவை, உகவை, மன்றுபாடல், தண்டம், குற்றம் மற்றும் எப்பேர்ப்பட்டனவும்" என்று வரிகளின் தொகுதிகள் குறிப்பிடப்படுகின்றன. இதனுல் எட்டுவிதமான வரிகளின் பெயர்களை நாம் அறிகிறோம். அவற்றைப்பற்றிச் சிறிது விவரமாக ஆராயவேண்டியது அவசியமாக இருக்கிறது.

1. இறை—இதனை Revenue என்று சாசன பரிசோதகர் மொழிபெயர்த்திருக்கிருர். அவ் ஆங்கிலச் சொல் சர்க்காருக்குக் கிடைக்கும் வருமானங்களைக் குறிக்கும். அதற்கும் Tax என்று சொல்லும் வரிக்கும் வித்தியாசம் உண்டு. தமிழில் இறை என்பது இறைவன் நிலத்தின் பேரில் வாங்கும் ஆறில் ஒரு கடமைக்குப் பெயராகும். அதனுல்தான் இறைவனுக்கும் (அரசன்) அப்பெயர் வந்தது. இறை வாங்குபவன் இறைவன் அல்லவா? இவ்

விதக் கடமையை இறைவனுக்குச் செலுத்தாத நிலங்கள் ஆலயங் களுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ருந்தால் இறையிலி தேவதானம் என்று பெயர் பெறும். நாம் ஆராய்ந்து வரும் இச் சாசனத்திலேயே ஒரு நிலத்தை "திருவாநிலை மகா தேவற்கு இறையிலி தேவதான" மாகக் கொடுக்கப்பட்டதாகச் சொல்லப் பட்டிருக்கிறது. அவ்விதம் இறையில்லாத தேவதா நிலத்தை "திரு நாமத்துக் காணி" என்ற பெயரால் வழங்குவார்கள். இச் சொல்லை யும் இந்தக் கல்வெட்டிலேயே காணலாம்.

இவ்விதம் ஆலயத்திற்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட ஒரு நிலம் "இறையிலி" என்று சொல்லப்படுமானால் அந்நிலத்தை உடையவர்கள் இறை கொடுக்கவேண்டிய தில்லையோ என்று கேட்டால், அவ்விதம் அன்று; அந் நிலத்திற்கு இறை அல்லது கந்தாயம் எப்பொழுதும் உண்டு; ஆனால் அக் கந்தாயத்தை இறைவனுக்குச் செலுத்துவதற்குப் பதிலாகத் தானம் செய்யப் பட்ட ஆலயத்திற்குச் செலுத்தவேண்டும் என்பதுதான் அக் காலத்திய அரசியல் நோக்கம். ஆகவே இறை என்பதைக் கந்தா யம் என்ற பொருளில் வழங்கி வந்திருக்கிறார்கள்.

2. புரவு—இதனை Tax என்று சாசனப்பதிவுப் பரிசோதகர் மொழிபெயர்த்து இருக்கின்றார். இவ் ஆங்கில பதம் வரி என்ப தைத் தெரியப்படுத்தும். வரி என்பது நிலத்திற்கு மாத்திரமேயன் றித் தொழிலாளர்களுக்கும், பண்டங்கள்மீதும், விதிக்கப்படும் கடமையாகும். இஃது அரசனுக்கு மாத்திரமேயன்றி ஊர்ச்சபை களுக்கும், ஆலய அதிகாரிகளுக்கும், வியாபாரச் சங்கங்களுக்கும் செலுத்தப்படுங் கடமையாகும். இக் காலத்திலும் இவ்வித வரிகள் ஏற்பட்டிருப்பதைக் காணலாம். நகர்ச்சபை, நாட்டுச் சபை, கிராமச்சபை இவைகள் வரிவிதித்தல் இக் காலத்திலும் உண்டு. இதைப்போலவே சோழர்கள் காலத்திலும் வரிகள் விதிக்கப்பட்டன.

இவ்வித வரிகளுக்குப் புரவு என்ற பதம் பிரயோகிக்கப்பட் டது ஆராயத்தக்கதொன்று ஆகும். புரவு என்பது காப்பது என்ற பொருள் தரும். அது செய்பவனாகிய அரசனுக்குப் புரவலன் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. காக்கும் தொழிலை அரசனே யன்றி ஊர்ச்சபைகளும் தொழிற் சபைகளும் செய்யும்; ஆகவே அவ்விதம் காக்குஞ் செயலுக்காக ஒரு கடமை ஏற்படுத்தி யிருப்

பார்கள். அக் கடமைக்குப் புரவு என்ற பெயர் ஏற்பட்டிருத்தல் வேண்டும்.

3. சிற்றுயம்—இதனை Small toll என்று சாசன பரிசோதகர் குறித்திருக்கிறார். அதாவது சிறிய சுங்கத் தீர்வை என்று பொருள் ஏற்படுகிறது. ஆயம் என்பது பொதுவாகச் சுங்கத் தீர்வைக்குப் பெயர். நாட்டில் ஏற்றுமதி, இறக்குமதிப் பொருள்களுக்குச் சுங்கம் வாங்குவது சோழர்கள் காலத்தில் வழக்கமாக இருந்தது. இக்காலத்திலும் அவ்வித வழக்கம் இருப்பதை நாம் அறிவோம். குலோத்துங்கச் சோழன் காலத்தில் சுங்கத் தீர்வை மிகவும் பளுவாக இருந்தது என்றும், அதனுல் பொது மக்கள் மிகவும் வருந்தினுர்கள் என்றும் கண்டு அவர்களுக்கு நன்மை புரியும் பொருட்டுச் சுங்கத்தை நீக்கிவிட்டபடியால் அச் சோழனுக்குச் "சுங்கம் தவிர்த்த சோழன்" என்ற பெருமை பொருந்திய பெயர் ஏற்பட்டது. ஆகவே அக்காலத்தில் ஆயம் என்ற சுங்கம் நாட்டில் ஏற்பட்டிருந்தது.

(தொடரும்

---

## *திருச்சி மலைக்கோயில்

### மௌனசுவாமிமடத்து விபரங்கள்

ஸ்ரீ மாதுரு பூதேசுவர சுவாமிக்கு உச்சிக்கால சாயரெட்சை நித்தியப்படி, அதிகப்படி உச்சவாதி முதலாகிய துகளுக்கு மவுனத் தம்பிரான் மாரிபம் உண்டாகிய ஊதிபங்களும், திருப்பணி, திருவாபரணங்கள், பாத்திர வகையராக்களும் கிராமவளிகளின் விவரமும், தம்பிரான்கள் பட்டங்களின் விபரங்களும் எழுதியது.

1. சாலியவாகன சகாப்தம் கரு௦கன் விசுவஹு ஆனிமீ முதல் ஷை சகாப்தம் கருசுசுன் பார்த்திபஹு வைகாசிமீ வரை.

முதலாவது மவுனத் தம்பிரான் சுவாமி யவர்களுடைய பட்டம்—ஹு—சுமிரு. மவுனத்தம்பிரான் சுவாமியவர்கள் நாளையில் உண்டாகிய ஊதிபம்—உச்சிக்கால கட்டளைக்காகவும், தெப்ப உத்ஸவத்துக்காகவும், உச்சிப்பிள்ளையார் அபிஷேக நைவேத்தியத்துக்காகவும் உண்டாகியது. சுத்தப்பா பக்கத்தில் கிருஷ்ண

---

*இக்கட்டுரை திரு. S. அனவரதவிநாயகம்பிள்ளை அவர்கள் M.A.,L.T. அனுப்பி வைத்ததாகும். திருச்சி திரு. M. நடேச முதலியார் அவர்களால் திருத்தப்பெற்றது. ஏட்டில் கண்டவாறு படியெடுத்து அச்சிடப்படுகிறது.

சமுத்திரமும், தொண்டமான்பட்டியும், சில்லரைச் செங்காட்டுப் பட்டவர்த்தியும், ஓட்டாங்குறிச்சி பட்டவர்த்தி செய் நமனு வயலும், மணப்பாரை பாளையப்பட்டில் மேல்குடி கிராமமும் க—மாத்தூர் கிராமம் க·ஆலத்தூரில் உச்சிப் பிள்ளையாருக்குப் பட்டவர்த்தி செய் 2.

இதுகளெல்லாம் மவுனத்தம்பிரான் சுவாமியவர்கள் நாளையிலுண்டாகிய ஊழிபங்கள்.

சாலிய வாகன சகாப்தம் கருசுசுன் பார்த்திப ௵ ஆனி ௴ முதல் கருஅசுன் சோபகிருது ௵ வைகாசி ௴ ௵ ௰அ.

2. இரண்டாவது தாயுமானத் தம்பிரான் சுவாமியவர்கள் பட்டம் ௵ ௰அ.

ஷை தாயுமானத் தம்பிரான் சுவாமிகள் நாளையில் உண்டாகிய ஊழிபங்கள் - தளவாய் முதலியாரென்பவர் ஷையார் பேரால் மலைமேல் தளவாய் மண்டபமென்று வஸந்த உத்ஸவத்துக்குப் பதினறுகால் மண்டபமும் கட்டிவைத்து ஷை மண்டபத்தில் வஸந்த உத்ஸவம் நடந்து வரும்படிக்கு ஷை உத்ஸவ செலவுக்காக அபிஷேக முதலிய சகல செலவுக்கும் திட்டம் ஏற்படுத்திவைத்து அதற்காக நாகமங்கலமென்னும் கிராமமும் சோழமாதேவி பட்டவர்த்தி செய் சு சர்வமானியமாக வாங்கி விட்டு வசந்த உத்ஸவம் நடந்து வரும்படிக்கித் தளவாய் முதலியாரால் விடப்பட்டது.

௩. மூன்ருவது நமச்சிவாயத் தம்பிரான் சுவாமியவர்கள் பட்டம் ௵ உ௰௩.

ஷை நமச்சிவாயத் தம்பிரான் சுவாமியவர்கள் நாளையிலுண்டாகியது:—கர்னுடக நாயக்கரவர்கள் நாளையில் அரண்மனையில் கொல்லராயிருந்த சூரப்ப நாயக்கரென்பவர் ஷையார் போல் சூரப் பிள்ளையாரென்று விக்கினேஸ்பரனும் செய்துவைத்து ஷை விக்கினேஸ்பரனுக்கு அபிஷேக நைவேத்தியத்துக்கு கொழுக்கட்டைக்குடி கிராமமும், துர்க்கை அம்மன் அபிஷேக நைவேத்தியத்துக்கு கொட்டப்பட்டிக் கிராமமும் ராஜாங்க நாயக்கரவர்களிடத்தில் சர்வ மானியமாக வாங்கி தாமிர சாசனமும் சிலாசாசனமும் செய்து கொடுத்து ஷை சூரப்பிள்ளையார் துர்க்கை யம்மனுக்கும் நித்தியப்படி அதிகப்படி முதலாகியதெல்லாம் நடப்பிவைத்

துக்கொண்டு வரும்படியாக சூரப்ப நாயக்கரால் விடப்பட்டது கொழுக்கட்டைக்குடியும் கொட்டப்பட்டியும்.

ஷ பட்டத்தில் இலுப்பையூர் காமாக்ஷி நாயக்கன் என்பவர் கோடைத் திருவிளா உச்சபத்திற்கு சுவாமி யெழுந்தருளச்செய்ய வேண்டியதற்காக மலையின்பேரில் பனிரெண்டுகால் மண்டபம் கட்டி வைத்து அதில் கோடைத்திருவிழா நடப்பிவைத்துக்கொண்டு வரும்படிக்கித்திட்டம் ஏற்படுத்திவைத்து ஷ சிலவுகளுக்காகதிரு நல்லூரைச் சார்ந்த நாச்சிக் குரிச்சியில் ஒரு கொளமும் அதைச் சேர்ந்த நஞ்சையில் செய் உ௰உ நிலமும் புஞ்சையில் செய் உ௰உ கலவிரையடிக்காடும் சர்வ மான்யமாக விட்டுக் கொடுத்து அந்த நிலங்களின் வருமானத்தைக்கொண்டு கோடைத்திருவிளா நடப்பி வைத்துக்கொண்டு வருப்படியாக காமாட்சி நாயக்கரால் சர்வ மானியமாக விடப்பட்டது, நாச்சிக்குரிச்சிக் கிராமம்.

ஷ பட்டத்தில் நாயக்கரவர்கள் அரண்மனையில் சேருவை யாயிருந்த செவந்தியாண்டி சேருவைகாரன் என்பவர் அர்த்த சாமத்தில் பல்லக்குச் சொக்கர் எழுந்தருளி வரும்போது பாத பூசைக் கட்டளைக்காக உய்யக் கொண்டான் கிராமத்தில் குட முறட்டிக் கரையோரம் தென்னந்தோப்பு மாந்தோப்பு முதலாகிய பல விருக்ஷம் வைத்து ஷ தோப்பின் வருமானத்தில் பாத பூசைக் கட்டளை நடப்பி வைத்துக்கொண்டு வருப்படியாக செவ்வந்தியாண்டி சேருவை காரனல் விடப்பட்டது உய்யக் கொண்டான் தோட்டம்.

ஷ மூன்ருவது பட்டம் நமச்சிவாயத் தம்பிரான் சுவாமியவர் கள் பட்டத்தில் நாயக்கரவர்கள் அரண்மனையிலிருந்த கோட்டை கெஸ்த்தி சம்போஜிராவ் என்பவர் வீரேசுரத்தைச் சேர்ந்த படுகை யில் பல விருட்சம் தோப்புகள் வைத்து ஷ தோப்பில் சிவலிங் கம் பிரதிஷ்டை செய்து வைத்து ஷ சுவாமிக்கு அபிஷேக நைவேத்திய முதலிய தெல்லாம் தோட்டத்தின் வருமானத்தில் நடப்பிவைத்துக் கொண்டு வரும்படியாக சம்போஜி ராவால் விடப்பட்டது வீரேசுரம் தோட்டம்.

ஷ பட்டத்தில் சித்திரை உத்ஸவம் ஒன்பதாந் திருநாள் இந்திர விமானம் மண்டகப்படியில் அபிஷேக நைவேத்தியமும் சுவாமி வீதியில் எழுந்தருளி வரவும், சகல சிலவுகளுக்கும் பெரி பிள்ளை யென்பவரால் மருதாண்டாக் குரிச்சிக் கிராமத்தில் நஞ்சை

யில் அஞ்சு முக்காலும் புஞ்சையில் கீழ்ப்படுகை மேல்படுகை தோப்புகள் ரெண்டும் விட்டுக் கொடுத்து ஷை வருமானத்தில் கொண்டு இந்திர விமான மண்டகபடி நடப்பிவைத்துக் கொண்டு வரும்படி பெரிய பிள்ளையால் விடப்பட்டது மருதாண்டக்குரிச்சி.

ஷை பட்டத்தில் சித்திரை உத்ஸவம் பத்தாந் திருநாள் வெள்ளை காத்தி மண்டகப்படிச் சிலவுக்காக இருசப்ப செட்டியார் என்பவர் திருத்தான் தோணியில் தென் கண்டத்தில் நஞ்சையில் செய் எ நிலம் விட்டுக் கொடுத்து ஷை நிலத்தின் வருமானத்தைக் கொண்டு ஷை பத்தாந் திருநாளில் சுவாமி வீதி வலம் வந்து அவரோகணமாகிச் சேத்தி வந்ததின்பேரில் இருசப்ப செட்டியார் மண்டபத்தில் சுவாமியை எழுந்தருளப் பண்ணி அபிஷேக நைவேத்தியமாகி மஞ்சநீராடிக் கொண்டு வீதி சுத்திவந்து கோவிலுக்கு எழுந்தருளி கொடி இறக்கிக் கொண்டு சேத்திக்கு எழுந்தருளும்படிக்கு இருசப்ப செட்டியாரால் விடப்பட்டது திருத்தந்தோணி நஞ்சையில் செய் எ நிலம்.

ஷை பட்டத்தில் திருவாதிரை கட்டளை உபயத்துக்காக சதாசிவ முதலியாரென்பவர் திருத்தாந் தோணியில் வட கண்டத்தில் நஞ்சையில் செய் ந நிலம் விட்டு, ஷை நில வருமானத்தில் வரப்பட்ட வருமானத்தைக் கொண்டு திருவாதிரையில் அபிஷேக நைவேத்திய முதலாகியதுகளெல்லாம் நடப்பி வைத்துக்கொண்டு வரும்படி சதாசிவ முதலியாரால் விடப்பட்டது திருத்தந்தோணி வட கண்டத்தில் செய் ந.

· ஷை பட்டத்தில் பானு நாயக்கரென்பவர் சாயரெட்சையில் அபிஷேக நைவேத்தியம் நடப்பிவைத்துக்கொண்டு வரும்படிக்கித் திட்டம் செய்து திருத்தாந்தோணியும் வடகண்டத்தில் நஞ்சை செய் எ நிலம் விட்டுக்கொடுத்து, ஷை நிலத்தில் வரப்பட்ட வருமானத்தில் சாயரெட்சையில் சுவாமி அம்மன் முதலிய........... அபிஷேக நைவேத்தியமும் திருவிளக்கு முதலியதும் போட்டு நடப்பி வைத்துக்கொண்டு வரும்படி ஏற்பட்டது திருத்தாந் தோணி வடகண்டம் செய் எ.

(தொடரும்)

---

# அறிவியற் பகுதி—Science

## ஒளி நூல்—(Astronomy)

(திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்)

(முன் சம்-ம் பக்கத் தொடர்ச்சி)

இங்ஙனமாக கிரேக்கர் ஒளிநூற்புலமையை வளர்த்திருந்த போது சில மேலைநாட்டு அறிஞரும் அக்கலையை வளர்ப்பதில் முன்வந்தனர். மார்சேல்ஸ்* (Marseilles) நகரத்திய பிதியாஸ் என்பார் தமது ஊர் பூமண்டலத்திலிருக்கும் இடத்தைத் தீர்மானிப்பதற்காக ஓர் சூரிய கடிகாரம் அமைத்து அதன் உதவியால் கோடைக்காலத்தில் ஞாயிற்றின் அதிஉச்ச நிலையை அறிந்தார். இயற்கையின் அமைப்பை நுட்பமாக ஆராயும்பொருட்டு அவர் பூமியின் ஏனைய பகுதிகளுக்கும் சென்றுவந்தார். "ஓர் தீவில் ஞாயிறு மறைந்தவுடன் மறுபடி அது எழுந்தது" என அவர் கூறுகிருர். நார்வே (Norway) யிலும், ஐஸ்லாண்ட் தீவிலும் (Iceland) இந்நிகழ்ச்சி காணப்படுவதால் அவர் அவ்விடங்களுக்குச் சென்றிருந்தவராதல்வேண்டும். பிதியாஸ் என்ற அப்புலவர் திலகர் "வடதுருவமீன் பூமியின் வடக்கு முனைக்கு நேராக இல்லை" என்ற உண்மையைக் கண்டுபிடித்தார். பூமியின் சரிந்த நிலைமையால் அது சற்று விலகியே இருக்கிறது. மேலும், அப்பேறறிஞர் கடலின் அலைகளுக்கும் மதியின் பெயர்ச்சிக்கும் உள்ள ஒருமைப்பாட்டை நுணுகி அறிந்தார்.

பெரியார் அலெக்சாண்டர் மன்னர்தமது வெற்றிகளால் வானூற்கலை வளர்ச்சிக்குப் பேருதவிசெய்தார். அவருடைய ஆசிரியராகிய அரிஸ்டாட்டில் என்ற பேரறிஞர் பல நூல்களை இயற்றினர். அவர் டிகாலோ என்ற நூலில் பூமியின் உருண்டை வடிவத்தை நிலைநாட்டுகிருர். அதற்கு அவர் கூறும் காரணங்கள் பின்வருவன:—1. சந்திரகிரகணத்தில் மதியின்மேல் விழும் பூமியின் நிழல் வட்டவடிவமானது; உருண்டையான பொருள்களே வட்ட நிழலை வீசும். 2. அசையாத விண்மீன்களில் ஒன்றைக்

---

*மார்சேல்ஸ் என்பது பிரான்ஸ் நாட்டின் தென்கோடியிலுள்ள துறைமுகப்பட்டினம்.

குறித்துக்கொண்டு குறித்த இடத்திலிருந்து வடக்கோ தெற்கோ சென்றால் அம்மீனின் உச்சநிலை மாறுபடுகின்றது. அரிஸ்டாட்டில் எழுதிய எண்ணற்ற நூல்களில் மற்றொன்று டிமண்டோ. அதில் அவர் அக்காலத்தில் உலகினரறிந்த ஆசியா, ஆப்பிரிக்கா ஐரோப்பா ஆகிய கண்டங்களைப்பற்றி விவரிக்கிறார்.

கி. மு. 142-ல் *நைஸ் (Nice) நகரத்தில் ஹிப்பார்க்கஸ் என்ற பெரியார் தோன்றினர். அவர் வானூற் கலையை வளர்ப்பதில் அரும்பாடுபட் டிருக்கிறார். அவர் காலத்தில் ஓர் ஆண்டு முந்நூற் றறுபத்தைந்து நாட்களும் ஆறு மணிகளும் அளவாகக் கொண் டிருந்தது. அது கொஞ்சம் குறைவதைக் கண்டு அதை அவர் சரிப்படுத்தினர். ஞாயிறு சூரிய வீதியின் வட பகுதியிலுள்ள ஆறு வீடுகளில் வாழுகிற காலம் தென்பகுதியிலுள்ள ஆறு வீடு களில் வாழ்வதைக் காட்டிலும் அதிகமானது என்பதை அவர் கண்டறிந்தார். இதிலிருந்து அவர் சூரிய வீதியின் ஒழுங்கின் மையை அறிந்தார். அப்பெரியார் இதுபோலவே மதியின் பெயர்ச் சியையுங் கணக்கிட்டுத் தமது குறிப்புக்களை வெளியிட்டார். இந்த உண்மைகளிலிருந்து அவர் இரவி மதிகளின் பெயர்ச்சி களைக் கணக்கிட் டறியச் சுருக்கமான வழிகளை ஏற்படுத்தினர். இதுவரை தெரிந்தமட்டில் அவரே முதன் முதலாக இங்ஙனம் வழிகண்டவர் ஆவார்.

விண்மீன்கள் தம்முள் ஒன்றுக்கொன்றுள்ள இடை வெளியை ஒரு சிறிதும் அணுகாமலும் அகலாமலும் பாதுகாத்து எக்காலத்தும் ஒரே நிலையில் நிற்கின்றன ; ஆனால் அவைகளெல் லாம் ஒரு சேர விண்வட்டத்தில் ஆண்டொன்றுக்கு நாற்பத் தெட்டு விகலை வீதம் அசைகின்றன என்ற உண்மையைக் கண்ட வரும் ஹிப்பார்க்கஸ்தான். பூமியிலிருந்து இரவி மதிகளுக்குள்ள தூரத்தைப் பிசகாமல் கண்டறியும் வழியை அரிஸ்டார்க்கசைக் காட்டிலும் நுட்பமாக நிறுவியவரும் அவரே. அவர் காலத்தில் ஒரு சமயம் ஒரு பெரிய விண்மீன் மறைந்ததாக, உடனே அவர் விண்மீன்களை யெல்லாம் கணக்கிட்டு அவைகளின் உருவங்களையும் தூரங்களையும் குறிக்கும் அட்டவணையைத் தயாரித்தார். பூமியின் வடதென் சம கோடுகளை (Latitude)யும், கிழ்மேல் சமகோடு (Longitude)களையும் பயன்படுத்தி ஊர்களின் நிலைகளைக் குறித்

*நைஸ் என்பது மார்சேல்ஸ் நகருக்குச் சற்றுக் கிழக்கே உள்ளது.

தறியும் வழியையும் அவரே பரவச் செய்தார். அறிஞர் உலக மெல்லாம் இவ்வளவு பெருமை வாய்ந்த அவரை இன்றும் புகழ் கின்றது.

அவருக்குச் சிறிது காலத்தின்பின் வாழ்ந்த புலவர் கிளியோ மீடிஸ் என்பவர். பூமண்டலத்தைப்பற்றியும், கோள்கள் இரவி யைச் சுற்றிவரும் காலத்தைப்பற்றியும், அவைகளின் அளவையும் தூரத்தையும் பற்றியும், பண்டைக்காலக் கிரகணங்களைப்பற்றியும் அவர் ஓர் நூல் இயற்றி யிருக்கிறார். அதில் அவர் தாம் அவை களை யெழுதியது பிதகோராஸ், எராடோஸ்தினிஸ், ஹிப்பார்க்கஸ் என்பவர்களின் நூல்களை ஆதரவாகக்கொண்டுதான் என்று கூறுகிறார். இந்நூல் மிகவும் பழைமையானதோர் ஆதாரநூலாக இருத்தலின் போற்றும் பெருமையது.

இதற்கடுத்து யாவரும் கவனிக்கத்தகுந்த பெரியார் உரோமா னியப் பேரரசாக இருந்த ஜூலியஸ் சீசர் என்பார். அவர் கி. மு. 46-ல் உரோமானியப் பஞ்சாங்கத்திலிருந்த பிழை களையெல்லாம் சீர்ப்படுத்தி அதனைப் புதுப்பித்தார்.

சீசர் சிறந்த ஒளிநூற்புலவர். அவர் தம்முடையகாலத்தில் வழங்கி வந்த பஞ்சாங்கத்தில் மாரிக்கால மாதங்களாகக் குறிக்கப் பெற்றிருந்த காலத்தில் இலையுதிர்காலம் வருவதையும், வசந்தகால மாதங்களாகக் குறிக்கப் பெற்றிருந்த காலத்தில் மாரிக்காலம் வருவதையும் கண்டார். இந்த சீர்கேட்டைச் சரிப்படுத்துவதில் தமக்கு உதவிசெய்யும் பொருட்டு அவர் ஏதென்ஸ் நகரத்திலிருந்த சாசென்ஸ் என்ற வானநூற் புலவரை உரோமாபுரிக்கு வரவழைத் தார். அவர் ஓர்ஆண்டினைப் பதினைந்து மாதங்களுடையதாக ஆக்கிக் காலவேறுபாடு சரிப்படும்வரை நடைபெறுத்தினர். பின் னர் அவர் தாம் கண்ட உண்மைப்படி ஆண்டினை முந்நூற்றறுபத் தைந்து நாட்களும் ஆறுமணிகளும் உடையதாக்கினர். இந்த அளவு அக்கால நிலையில் மிகவும் ஒப்பற்றதாகவே விளங்கிற்று. இம் முறை இன்றும் ஜூலியன்ஆண்டு என்று அவர் பெயரால் புகழப்பெற்று வருகிறது.

எகிப்தில் விளங்குவது அலெக்சாண்டிரியா (Alexandria) மாநகரம். அது சிறந்த வானநூற் புலவர் பலருக்கு வாழ்விடமாக இருந்த பெருமையது. ஹிப்பார்க்கசுக்குச் சிறிதுகாலத்தின் முன்னர் எராடோஸ்தினிஸ் என்ற புலவர் அந்நகரில் வாழ்ந்தார்

பிளேடோ என்ற கலைஞரின் ஆசிரியராகிய அர்ச்சிடாஸ் என்பவரே முதன்முதலாக உலகை அளக்க முயன்று ஒருவாறு வெற்றி பெற்ருர். அவருக்குப்பின் செவ்விய முறையில் உலகைக் கிட்டத் தட்டச் சரியாக அளந்தவர் எராடோஸ்தினிஸ்தான். அவர் காலத்தின் பின்னர் எகிப்தில் தக்க வானூற்புலவர் ஒருவரும் தோன்றிலர். அப்பெருங் குறையை நீக்கும் பொருட்டு கி. பி. 140-ல் டாலமி என்ற பெரியார் தோன்றினர்.

டாலமி எகிப்திலுள்ள பெலூசியம் (Pelusium) என்ற நகரைச் சேர்ந்தவர். அவர் கல்வியின்பொருட்டு இளமையிலேயே அலெக்சாண்டிரியாவுக்கு வந்தார். அவர் தம் காலத்திற்கு முற் பட்ட சோதி நூல் ஆராய்ச்சிகளை யெல்லாம் தொகுத்து அவற் ரோடு தமது ஆராய்ச்சி முடிவுகளையும் சேர்த்து "பெருந்தொகுதி" என்ற அரிய நூலை இயற்றினர். அவர் பூமியை நடு இடமாகக் கொண்டு இரவி, மதிமுதலிய கோள்களெல்லாம் சுற்றிவருகின்றன என்ற கொள்கையை உடையவர். அக்கொள்கை "டாலமிமுறை" என்று இன்றும் கூறப்பெறுகிறது. அம்முறை கோப்பர்நிக்கஸ் என்ற பெரியார் தோன்றும் வரை நிலைபெற்றிருந்தது.

பெருந்தொகுதி என்றநூல் அரேபியமொழியில் "ஆல்மா ஜெஸ்ட்" என்று சொல்லப்பெறும். அந்நூலை இயற்றியதோடு டாலமி மற்றொருநூலும் எழுதினர். அது பூகோளநூல். அதில் அவர் ஹிப்பார்க்கஸ் முறைப்படி பூமியின் வடதென்சமகோடு களாலும், கீழ்மேல் சமகோடுகளாலும் ஊர்களின் இருப் பிடத்தைக் குறித்திருக்கிருர். காநோபஸ் நகரிலுள்ள சீராபிஸ் என்ற கோவிலில் வான நூலாராய்ச்சியில் தாம்கண்ட முடிவுகளை யெல்லாம் அவர் சலவைக்கற்களில் பொறித்து வைத்துதவினர். அவரிருந்த காலத்தை நோக்க, உலகத்திலேயே சிறந்தவர் எனப் போற்றத்தகுந்த அறிஞருள் அவரும் ஒருவர் என்பதற்குத் தடையே இல்லை.

(தொடரும்)

---

## மர நூல் (Botany)

[திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள்]

Leaf என்னும் ஆங்கிலச் சொற்கு இலை என்று பொருள் கூறப்படுகிறது. வழக்காற்றில் இப்பொருள் சரியானதொன்றே யாயினும் மரநூல் வழக்கிற்கு இது சரியாகாது; என்னை, அந்

நூலின்கண் Seed-leaf, Flower-leaf, Foliage-leaf என்னும் வேறுபாடுளதாகலின். இலை என்பது Foliage-leaf என்பதையே குறிக்கும். எனவே மூவகைக்கும் பொருத்தமான ஒரு சொல்லைத் தேடியமைத்தல் வேண்டும். இதழ் என்ற சொல் அத்தகைத்தாம். Lip என்றாலும் இதழ் என்று பொருள்படும்.

| | | |
|---|---|---|
| **Leaf** | ... | இதழ் |
| Seed-leaf | ... | விதை யிதழ் |
| Flower-leaf | ... | பூவிதழ் |
| Foliage-leaf | ... | தழை யிதழ் |

Cotyledon என்னும் சொல் Seed-leaf என்பதையே குறிக்கும். அதற்கு "அங்குரதளம்" என்னும் பொருள் கூறப்பட்டு வருகிறது. அங்குரம் என்னும் வடசொற்கு நேர்பொருள் முளை என்பதாகும்; தளம் என்பதோ இலையெனப் பொருள்படும். எனவே அங்குரதளம் என்றால் முளை யிலை அல்லது முளை யிதழ் என்ற பொருள் பெறப்படும். முளையிதழ் என்பது Seed-leaf ஆகாது, ஏனெனில் அது விதையைச் சேர்ந்தது என்று குறிக்கவில்லை யாதலின். விதை யிதழ் என்ற சொல்லோ அதை விளக்கமாகக் குறிக்கிறது. பூவிதழ் என்பது பூவையும் தழையிதழ் என்பது தழையையுஞ் சேர்ந்திருப்பதைக் குறிப்பதுங் காண்க. மேலும் இச்சொல் வழக்காற்றிற்கும் எளிதாயுள்ளதென்பதும் தமிழ்மொழிப் போக்கிற்கு முரணாகாதுள்ளதென்பதும் பின்வரும் எடுத்துக் காட்டால் விளங்கும்.

"குன்றிமணி விதையை இதழிதழாக உதிர்த்துக் கல்லின் மீது உறை" என்று கூறுவதைக் "குன்றுமணி அங்குரத்தை இதழிதழாக உதிர்த்துக் கல்லின்மீது உறை" என்று கூறின் பொருள் சிறவாமை காண்க.

| | | |
|---|---|---|
| **Cotyledon** | ... | விதையிதழ் |
| Dicotyledonous | ... | ஈரிதழ் விதைய |
| Monocotyledonous | ... | ஓரிதழ் விதைய |

அங்குரதளம் என்ற சொற்கொண்டு இவ்வாறு பொருளாக்க முயலல் கடினமாகுமன்றோ? அன்றியும் அங்குரதளம் என்ற ஒரு புதுச் சொல்லை நெட்டுருப்பண்ணுவதைவிட Cotyledon என்ற ஆங்கிலச் சொல்லையே கோட்டிலெடன் என்று தமிழ்ப்படுத்திப் பாடஞ்செய்தல் ஒரு தமிழ்மாணவனுக்கு எளிதாகாதோ?

'கடன் வாங்கியும் பட்டினி' என்று தமிழ்ச் சொற்களிருக்க வட சொல்லைக் கடனாக வாங்கியும் பொருள் சிறவாது தவிப்பானேன்!

Radicle என்பதற்குப் பிரதான தண்டின் கீழ்ப்பகுதி யென்றும் வேர் முனை யென்றும் பொருள் கொள்ளலாமோ என்பது. தண்டு என்பது அடிப்பகுதியைக் குறிக்கும். முனை என்பது வேர் சென்று முடியு மிடத்தைக் குறிக்குமே தவிர வேரின் தொடக்கத்தைக் குறிக்காது.

இது கிடக்க; புச்சம், பிரகண்டம், மூலவஹம்' லசுனம், கந்தம், துவக்கு, குப்பிரம், சனம், வல்கலம், பஹித்துவக்கு, விஷமரேகை, பரியாயம், விருந்தம், மிதுனம், பரிஸாஸ்பர்சம், பிருதக்தளி, சித்திரசலபாக்குருதி, கிலாக்ரம், லம்பனம், புடகபலம், பரிணமம் என்பன போன்ற பலசொற்களைப் பலர் வழங்க முயல்கின்றனர். இவ்வாறு பொருள் கூறுவதனால் மாணவர்கள் எவ்வளவுக்கு இந்நூலை யறிந்து கொள்வரென்று எடுத்துக் கூறவும் வேண்டுமோ? இதை யொழித்து முன்னர்க் கூறியாங்கு ஆங்கிலச் சொற்களையே தமிழ்ப்படுத்தி வழங்கினால் ஆங்கிலங்கற்று அந்நூற்களை ஆங்கிலத்திலேயே படிக்கும்போதாவது அவர்களுக்கு நன்குதவும்.

"Food material" என்பதற்கு ஆஹாரப்பொருள் என்று தமிழ்ச்சொல் வகுத்துளார் ஒருசாரார். வடமொழியில் ஒரு பகுதியையும் ஒரு கிரந்த எழுத்தையும் கடன் வாங்கி இடர்ப்படுவானேன்? தமிழ்க்குடியானவர்கள் "இப்பயிரிற்குஊட்டம்போதாமல் நன்றாய் விளையவில்லை" யென்று கூறுவதிலுள்ள ஊட்டம் என்பது எதைக் குறிக்கும்? 'food material' என்பதையே யன்றோ?"

"அடுத்த ஆண்டு உரம்போட்டுப் பயிர் செய்ய வேண்டும்" என்றும் அவர்கள் கூறுகிறார்கள். உரம் என்ற சொல் எதைக் குறிக்கிறது? எரு வென்று பொருள்படும் "Food-material" என்பதையே யன்றோ?"

இவ்வாறு ஊட்டம் என்றும் உரம் என்றும் கூறுகிற அக் குடியானவர்கள் "எருத்து மாட்டிற்குத் தீனி வை" என்றும் "கோழி இரைதேடித் திரிகிறது; அதன் இரைப்பையில் ஒன்றுமில்லை" என்றுங் கூறுகிறார்கள். இங்கே தீனி என்பதும் இரை என்பதும் ஐயறிவுள்ள விலங்குகள் பறவைகள் முதலியவற்றின்

உணவை முறையே குறிக்கின்றன. இரைப்பை என்பது crop என்பதற்குப் பொருள்.

மக்களிலும் மாக்களுண்டென்று, அஃதாவது ஆறறிவின்றி ஐயறிவே படைத்தவர்கள் உண்டென்று, பண்டைத்தமிழர் நன்கறிந்திருந்தனர். "மாவு மாக்களும் ஐயறிவினவே, பிறவு முளவே அக்கிளைப் பிறப்பே" என்றும் "மக்கள் தாமே ஆறறி வுயிரே பிறவுமுளவே அக்கிளைப் பிறப்பே" என்றும் தோல்காப்பி யங் கூறிற்று.

விலங்கை யொத்துப் பகுத்தறிவில்லா முழுமக்கள் உண்ணும் உணவைத் தீனியென்றே சொல்லப்படுகிறது. "கூலியாட்களுக்கு இது தீனிவேளை" என்பது நோக்குக.

வழக்காற்றில் மேன்மக்கள் அதாவது ஆறறிவும் உண்மை யிற்படைத்த மக்கள் உண்ணும் உணவு "சாப்பாடு" என்று சொல்லப்படுகிறது.—"ஐயா இன்னும் சாப்பிடவில்லை."

தமிழிலேயே நினைத்துத் தமிழிலேயே பேசும் ஒருவர்க்குத் தமிழ்த் தொடர்களும் சொற்களும் முட்டுப்பாடின்றி இயற்கை யாகவே வரும் என்பது எளிதிலுணரப்படும். அதனால் வெள்ளை யர்களிடம் வேலைபார்க்கும் ஒரு ஆதிதிராவிட சமையற்காரன் (பட்லர்) கற்றுத் தேர்ந்த பார்ப்பனரனைய மேற்குல மொழிநூற் பண்டிதர்கள் பலரைவிடச் சிறந்த அறிவாளியென்று துணிந்து கூறலாம். என்னை ? செருக்கினாலோ அன்றி உயர்குலப் பிறப்பி னாலோ சரியான சொற்களைத் தேர்ந்து பயன்படுத்தும் ஆற்றல் அவனிடம் மறைக்கப்பட்டிலதாகலின்.

ஆதிதிராவிடனை யொழித்த ஏனைய குல சமையற்காரர்கள் எல்லோரும் "ஐயா சாப்பிடுகிறார்" என்றுதான் கூறுவார்கள். ஆனால் அவனோ "துரை, தினி தின்னுகிறார்" என்றுதான் கூறு வான். இது அவனது இயற்கையறிவாற் றூண்டப்பட்டுக் கூறப் படுவதாகும். என்னை ? வெள்ளையர்கள் குரங்கைப்போல் இரண்டு கைகளாலும் உணவுப் பொருள்களை யெடுத்தும், அப்பொருள் களைப் பற்களால் கடித்தும் கிழித்தும் தின்னுகின்றனராதலின்.

"தொழுதூண் சுவையின் உழுதூணினிது" என்பது முது மொழி. ஊண் அல்லது உணவு என்பது ஆறறிவு படைத்த மக்கள் உண்ணும் பொருள்களைக் குறிக்கும்.

தமிழில் ஏற்ற சொற்கள் இல்லையென்று ஓலமிடும் முதலை யனையர் இவற்றை நோக்கி உண்மை யுணர்வாராக. தாமே பொருள்பயந்து வேறுபாடுகள் பலவற்றையும் விளக்கி வழக்காற்றிலும் இத்தகைய தமிழ்ச் சொற்கள் இருக்கும்போது இதா திருத்தமற்ற மொழிச் சொற்களைக் கடன்வாங்கிக் கவலைப்படுவானேன் !

## Food material

1. ஊட்டம். (இயற்கையாய் மரஞ்செடி கொடிகட்கு உணவாயமைந்த உணவுப் பொருள்)

2. உரம் (செயற்கையாய் மேற்கண்டவற்றிற்குப் போடப்படும் உணவுப்பொருள்)

3. எரு (பல இடங்களிலுமிருந்து திரட்டிச் சேர்த்துக் கொணர்ந்து போடப்படும் உணவுப் பொருள்)

4. தீனி (ஐயறிவுபடைத்த விலங்குகட்கும் அவைபோன்ற மக்கட்கும் பயன்படும் உணவுப்பொருள்)

5. இரை (ஐயறிவுபடைத்த பறவைகள், ஊர்வன போன்றவற்றிற்கும் அவைபோன்ற மக்கட்கும் பயன்படும் உணவுப் பொருள்.)

6. உணவு (பகுத்தறிவுள்ள திருந்திய மக்கள் உண்ணும் பொருள்கள்)

எனவே Food material என்பது தமிழில் ஊண் அல்லது உணா என்று பொதுப்பொருள் பெற்று வழங்கும். "ஊணற்ற போதே உடலற்றுப்போம்" என்பது நோக்குக. இங்கே உடல் என்பது வளர்தற்குரிய ஆற்றல் படைத்த ஒரு பொருளாய்க் கருதப்பட்டிருப்பதும் ஓர்க. (தொடரும்)

---

## நெருப்பணைக்கும் பொறிகள்

1682-ம் ஆண்டில் முதன்முதலாக நெருப்பணைக்கும் பொறிகளியற்றுந் தொழிற்சாலை நிறுவப்பெற்றது. அதற்கு பீனிக்ஸ் தொழிற்சாலை என்று பெயர். இரண்டடி மூன்றடி பரப்புள்ள நெருப்பையே தோற்குழாய்கள் மூலம் அப்பொழுது அணைக்க முடிந்தது. 1720-ம் ஆண்டில் இப்பொழுது பயன்படும் மூட்டில்லாத பின்னற் குழாய் கண்டு பிடிக்கப்பட்டது. ஒரு நெருப்பணைக்கும் பொறியை முற்காலத்தில் யாராவது இங்கிலாந்திலுள்ள நகரங்களில் வாங்கிப் பரிசளித்துவிட்டால் அவர் உடனே பாராளுமன்றத்தின் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்படுவாராம்.

# நகையும் உவகையும்
# Wit & Humour

## வெறுஞ் சிறு மொழி

### சிறு நகை

வளைந்திருப்பது மகளிர் இயற்கை. வளையல் இதற்கு அறி குறியாயிற்று. இளமையின் பண்பு வளைதலன்றோ? மகளிர் எஞ் ஞான்றும் இளையவர், எளியவர், இனியவர்.

o o o o o

கணவரைப் பிரிந்த மகளிர் வளை கழன்று விழுமென்று முன் னூலோர் பலருஞ் சாற்றினர். குறளுடையாரும் இதற்கிசைந்து மொழிந்துளார். காப்புக் கத்தன்மை யுண்டோ? காப்பே தலை! காப்பே கடை.

o o o o o

பொன்னகையுங் கன்னகை (கல்நகை)யும் வேண்டா மென்று ஒருபொழுதுஞ் சொல்லமாட்டேன்; புன்னகை வேண்டு மென்கின்றேன். பொன்னகை பெரிதாயினுஞ் சிறிதாயினும் புன்னகைக் கிணையன்று.

o o o o o

அகத்தில் தோன்றி முகத்தில் மிளிரும் நகை யில்லாதவர்கள் காதிலுங் கழுத்திலுங் கையிலும் நகைகளைச் சுமப்பதாற் பெறுவ தென்ன? காதில் ஒளிவிடுங் கல்லி னழகு வெண்பல் வெளிப்படும் அழகை ஒக்குமோ?

o o o o o

மடமகள் முதல் மடத்தலைவர் ஈறாக எல்லோர்க்கும் நகை மிக வேண்டும். மடமகள் முகமலர்ந்து விருந்தோம்பல் வேண்டும். மடத்தலைவர் நகைத்துப் புரமெரித்தான் மரபினராதலால் நகை யின்றி யாது பணி இயற்றல் அவரால் கூடும்?

o o o o o

"மகளிர் நிறைகாக்குங் காப்பே தலை" என்று குறள்வல்லார் கூறினர். மகளிர்க்குக் காப்பு வேண்டுமென்பது அவர் கருத்தா யிற்று. காப்பை அகற்றிவிட்டு வளையல் மாத்திரம் அணிந்து கொள்ளத் தொடங்கிவிட்டார் மாதர்.

# சிறுகதைப் பகுதி-Short Stories

## அலைகடலளித்த ஆரணங்கு

[சுவாமிக் கணணன் எழுதுவது]

ஊழிற் பெருவலியாவுள? யாதொன்று மில்லையன்றே? இன்றேல் ஞாயிற்றையுந் திங்களையும் பாம்பு விழுங்குங் கொல்!—பாம்பும் விழுங்கவில்லை பல்லியும் விழுங்கவில்லை! அலகுசால் அறிவுநூல் கல்லாமை யென்ற "ஆமையே" விழுங்குவதாக நினைக்கச் செய்கிறது. கோட் செலவினல் மறைவுறுவதைப் பாம்பு விழுங்குவதாக இற்றைநாளுங் கருதியிருத்தல் ஏழைமையன்ரே? எது எவ்வாருயினும் அம்மறைவு நாளிற் கடல் நீராடல் மட்டும் அறிவியற் கொத்ததென்பது தேற்றம்.

*　　　　*　　　　*

பரிதிமறைவுநாள்—(சூரியகிரகணம்). மக்கள் திரள் திரளாக கடற்கரையில் வந்து குழுமியிருந்தனர். நீராடுவோர் ஒருபுறம்; "தருப்பணம்" செய்வோர் ஒருபுறம். "திடுக்கென" விழித்துத் திகைத்து நிற்போர் ஒருபுறம். ஆ! எத்தனை வகையினர்! எத்துணைத் தொகையினர்! சேய்மை யெங்கும் நீர்ப்பரப்பாயின் அண்மை யெங்கும் மக்கட் பரப்பாகவே தோற்றிற்று.—மறைந்த பரிதி முழுதுந் தோன்றுங் காலவரை குறுகிற்று. கரையிலிருந்த மக்கட் கூட்டம் கடலினுட் படையெடுத்துச் செல்வதுபோல் "திமிதிமி" யென்று நீரிலிறங்கி மேல்வரும் அலைகளிடை அலைவுற்றுநின்றது. எங்கணும் ஒரே கூச்சல்! மக்கட் பேச்சொலியும் அலைகளின் வீச்சொலியும் ஒருபுடை யொத்திருந்தன.

செறிந்த இக்கூச்சலிடை "ஐயோ! ஆ!" என்ற கூக்குரல் ஒன்று ஒரு பகுதியில் கடலினுட் சிறிது தொலைவிற் கேட்டது போலிருந்தது அங்கு ஈண்டியிருந்த மக்களை விலக்கித் தள்ளிக்கொண்டு கட்டிளங்காளை யொருவன் கடலினுட் பாய்ந்து கூக்குரல் வந்த இடம் நோக்கி விரைவாக நீந்திச் சென்றான். அவன் விலக்கித் தள்ளியதும் பாய்ந்ததும் நீந்திச் சென்றதும் மின்னலை யொத்த விரைவோடு கூடியனவாயிருந்ததால் குழுமியிருந்த ஏனையோர்

என்ன நடக்கிறது என்பதை யுய்த்துணரவும் இயலாமல் திகைப் பூண்டு மிதித்தோர்கள்போற் செயலற்று நின்றிருந்தனர். மறுபடி யும் "ஆ! ஆ!" என்ற நிணறலோசை கேட்டது. அடர்ந்த கருங் கூந்தலோடு கூடிய ஒரு தலை சற்றுத் தொலைவில் நீரின்மேற் கிளம்பி வந்து மறுபடியும் அழுந்திற்று. பாய்ந்து சென்ற சிறுவனுக்கும் அத்தலை தோன்றிமறைந்த இடத்திற்கு மிடையில் இன்னும் பத் துப் பதினைந்தடி தொலைதான் இருந்தது. மறுநொடியில், நீராவிப் படகொன்று நிமிர்ந்து தாவிச் செல்வது போன்று சிறுவன் இரண்டு தாவலில் குறித்த இடத்தை அணுகினான். அணுகியவன் சட்டென நீரினுள் மூழ்கிச் சிறிது நேரத்தில் தன் இடக்கை முழுதும் கூந்தலைச் சுற்றிக் கொண்டவனாய் ஒரு பெண்ணின் தலையை நீர்மட்டத்திற்கு மேல் தூக்கியவண்ணம் வெளிவந்தான்.

* * *

"யாராவது உடனே ஓடிச்சென்று அதோதெரியும் வண்டி யின் சக்கரங்களி லொன்றைக் கழற்றித் தூக்கிவாருங்கள்! நொடி யில் வரவேண்டும்! உங்களுக்குப் புண்ணியமாப் போகிறது" என்று கூவிக் கொண்டே சிறுவன் பெண்ணின் உடலை நேர்மையாகத் தாங்கிய வண்ணம் கரைசேர்ந்தான். சிறிது நேரத்தில் வண்டிச் சக்கரம் ஒன்றும் கொண்டுவரப்பட்டது. தூக்கிவந்த பெண்ணை அச்சக்கரத்தின்மீது கிடத்தியபின், சக்கரத்தைக் குயவனொருவன் மட்பாண்டஞ்செய்யத் தன் சக்கரத்தைச் சுற்றுவதுபோல் சிறு வன் விரைவாகச் சுற்றினான். சுற்றச் சுற்ற சக்கரத்தின் மேலிருந்த பெண்ணின் வாய்வழியும் மூக்குவழியும் "குபு குபு" வென்று நீர் வெளிவந்தது. அசைவற்றிருந்த அவள் கைகால்கள் அசைவுற் றன. இறுதியில் "உம்" என்ற ஓசையுடன் ஒரு பெருமூச்சுவிட்டு அப்பெண் மறுபடியுஞ் சோர்வுற்றாள். மங்கியிருந்த சிறுவனின் முகத்தில் ஒளிவிசிற்று; தான் காப்பாற்றிய பெண் உயிருடனிருக் கிறாள் என்பதை அவன் கண்டுகொண்டதாக அவன்முகம் அறி வித்தது. "ஐயன்மீர்! இனி அருள் கூர்ந்து சற்று விலகி நில்லுங் கள்! நன்றாக அப்பெண்மீது காற்று வீச வேண்டும். நான் இவ் வாறு கூறுவதற்கு மன்னித்துக் கொள்ளுங்கள்" என்று அங்குச் சூழ்ந்து நின்ற திரளான மக்களைப் பணிவுடன் வேண்டிக் கொண் டான் சிறுவன்.

* * *

"செந்தினுத், நேற்று உன் பெயர் செய்தித்தாளில் அடிபட்டதே, நிகழ்ந்ததென்ன?" என்றான் வடிவேலன்.

"வடிவேல், உன்னிடங் கூறுமல் நான் வேறு யாரிடங் கூறப் போகிறேன்! நேற்று விடுமுறை நாளா யிருந்தமையால் நானும் கடற்கரைக்குச் சென்று திரள் திரளாக மக்கள் குழுமி யிருக்குங் காட்சியைக் கண்டு களிக்கலாமென எண்ணிச் சென்றேன். எண்ணியதற் கேற்றவாறு எண்ணற்ற மக்களைக் கண்டு மகிழ்ந்தேன். கடற்கரை யோரமே வடமுகமாக நான் சென்றுகொண்டிருக்கையில் இருப்புப் பாலத் தருகில் நாலைந்து இளம்பெண்கள் நீராட வந்திருந்ததைக் கண்டேன். அப்பெண்கள் யாவரும் நம் மினத்தவராய பார்ப்பனப் பெண்களே. அவர்களில் ஒருத்தி மட்டும் நான் என்றுங் கண்டிராத பேரழகு படைத்த பதின் மூன்று பதினுன்கு வயதுள்ள ஆரணங்கெனத் தோற்றினுள். மற்றவர்களும் அழகு வாய்ந்தவர்களாயினும் அவர்களிடை அவள் நின்றிருந்தது தாரகை நடுவண் தண்மதி யமைந்ததை யொத்திருந்தது. மருத்துவக் கல்லூரியிலும் அரசாங்க மருத்துச்சாலையிலும் கணக்கற்ற கட்டிளங் காரிகைகளை நாடோறுங் கண்டுங் கலங்கா திருந்த என் மனம் அவளை அங்குக் கண்ட அக்கணமே நிலை தளர்ந்துவிட்டது. மேலே சென்று காண எண்ணியிருந்த எண்ணம் இருந்தவிடந் தெரியாமற் பறந்து போயிற்று. கால்கள் நின்ற இடத்திலேயே வேரூன்றி விட்டன. அந்நங்கையர் நின்றிருந்த இடத்தின் அருகாமையில் இன்னும் நூற்றுக்கணக்கான மக்கள் இருந்தார்களென்பதும் அவர்களில் யாரேனும் நான் அவ்வாறு நெஞ்சு பறிகொடுத்து நிற்பதைப் பார்த்தால் என்ன நினைப்பார்கள் என்பதும் என் புத்திக் கெட்டவில்லை. இந்நிலையில், அப்பெண்கள் நீரிலிறங்கி முழுகினுர்கள். ஒரு பெரிய அலைவந்து மோதிற்று. மூலைக்கொருவராய் உருண்டு புரண்டு எழுந்தார்கள். மதியனைய அம்மங்கைநல்லாளைமட்டும் காணவில்லை. சற்றுநேரங் கழிந்ததும் கரையிலிருந்து நாற்பதைம்பது அடித் தொலைவில் "ஐயோ! ஆ!" என்ற பெண்குரல் ஒன்று நீரிடை யிருந்து எழுந்தது. உண்மை யுணர்ந்தேன். வந்து மோதிய பேரலை கவர்ந்து சென்றுவிட்டது கட்டழகியை. அவ்வளவுதான். அதன்பின் நான் திடுதிடென ஓடியதும், மக்களை விலக்கிக்கொண்டு நீரிற் குதித்து நீந்திச் சென்றதும், மங்கையை யணுகி அவள் தலை

மயிரைக் கையிற் சுற்றிக்கொண்டு கரையருகே வந்ததும் எப்படி நடந்தன வென்று என்னாற் கூறுவதற்கில்லை. எல்லாம் என்னை யறியாமலே பொறி யியக்கத்தினால் நடைபெறுவதுபோன்று நடைபெற்றது. கரை நெருங்கியதும் அப்பெண்ணைத் தூக்கிக் கொண்டுவந்து ஒரு வண்டிச் சக்கரத்தின்மீது வைத்துச் சுற்றினேன். நீரில் மூழ்கினோர் நீரைக் குடித்திருந்தால் அந்நீரை வெளிப்படுத்துவதற்கு இதுவே ஏற்றவழியென்று கேட்டிருக்கிறேன்......."

வடிவேலன்:—"இதெல்லாம் செய்தித்தாளிற் கண்டேன். இங்கு நீ விரிவாகக் கூறவேண்டாம். அப்பெண்ணுக்குத் தன்னறிவு வந்தபின் என்ன நிகழ்ந்தது?"

(தொடரும்)

* * * *

## புதுக்கவிகள்—Original Poetry

### ஆறு

(திருவாளர் S. தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் பாடியது.)

### கும்மி

கல்லும் மலையுங் குதித்து வந்தேன்—பெருங்
காடும் செடியும் கடந்து வந்தேன்.
எல்லை விரிந்த சமவெளி யெங்கும்—நான்
இறங்கித் தவழ்ந்து தவழ்ந்து வந்தேன். 1

கட்டும் அணையேறிச் சாடி வந்தேன்—அதன்
கண்ணறை தோறும் நுழைந்து வந்தேன்.
திட்டுத் திடர்களும் சுற்றிவந்தேன்—மடைச்
சீப்புகள் மோதித் திறந்து வந்தேன். 2

காயும் நிழத்தழல் ஆற்றி வந்தேன்—அதில்
கண்குளிரப் பயிர் கண்டு வந்தேன்
ஆயும் மலர்ப்பொழில் செய்துவந்தேன்—அங்கென்
ஆசைதீர விளை யாடி வந்தேன். 3

ஏருத மேடுகள் ஏறி வந்தேன்—பல
வரி குளங்கள் நிரப்பி வந்தேன்.
ஊருத ஊற்றிலும் உட்புகுந்தேன்—மணல்
ஓடைகள் பொங்கிட ஓடி வந்தேன். 4

ஆயிரம் காலால் நடந்து வந்தேன்—நன்செய்
அத்தனையும் சுற்றிப் பார்த்து வந்தேன்.
நேயமுறப் புன்செய்க் காட்டினிலும்—அங்கங்கு
நீரை இறைத்து நெடுக வந்தேன். 5

பஞ்சை யரைத்து நூல் நூற்றுவந்தேன்—சீனி
பாகமாய்ச் செய்து கொடுத்து வந்தேன்.
நெஞ்சம் உலர்ந்த நெடுநகரிற்—குழாய்
நீராகவும் சென்று பாய்ந்து வந்தேன். 6

மாங்கனி தேங்கனி வாரி வந்தேன்—நல்ல
வாச மலர்களும் அள்ளி வந்தேன்
தீங்கரும் பாயிரம் தள்ளி வந்தேன்—மிகத்
தேனும் தினையுமே சேர்த்து வந்தேன். 7

அல்லும் பகலும் அலைந்து வந்தேன்—எங்கள்
ஆழி இறைவனைக் காண வந்தேன்
நில்லும், எனக்கினி நேரமில்லை—இன்னும்
நீண்ட வழிபோக வேண்டுமம்மா! 8

---

## நிலக்குப் பொறை

கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோல‌து வல்ல
தில்லை நிலக்குப் பொறை. குறள் 570

கண்ணோட்டத் துள்ள துலகியல் அஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை. குறள் 572

ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை. குறள் 1003

*அறநூல் கல்லாதவர்களைத் தனக்கு அமைச்சர்களாக அமைத்துக் கொண்ட கொடுங்கோல் மன்னனும், கண்ணோட்ட(தாட்சண்யம்) மில்லாத மாந்தர்களும், பொருளையே விரும்பிப் புகழை விரும்பாதவர்களுமே பூமிக்குப் பாரமென்பார் நமது வள்ளுவப் பெருந்தகையார்.*

## குறிப்பு

### தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம், திருநெல்வே

10-9-33 ஞாயிற்றுக்கிழமை மாலை 6-மணிக்கும், 16-9 சனிக்கிழமை மாலை 6-மணிக்கும், திருநெல்வேலி நெல்லையட கோவில் வசந்தமண்டபத்தில் திருவாலங்காடு உயர்திரு. ஆ னந்த யோகி யவர்கள் "ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்" எ பொருள்பற்றிப் பக்கவாத்தியங்களுடன் கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய் அரிய விரிவுரை நிகழ்த்தினார்கள். அவ்வமயம் எண் ணிறந்த தமிழ்மெய்யன்பர்கள் வந்து கேட்டு இன்புற்றார்கள்.

### சைவ சித்தாந்த சபை, தூத்துக்குடி

தமிழ் நாட்டிலுள்ள சைவசித்தாந்த சபைகளில் முதன் முதல் தோன்றியது இதுவேயாகும். இதற்கு இவ்வாண்டோடு ஐம்ப தாவது ஆண்டு நிரம்புகின்றது. இதற்கு நாளை டிசம்பர்த் திங்களில் 'பொன்விழா' நடத்தவும், பெரியார் திருவுருவப் படங்களுடன் 'பொன் மலர்' ஒன்று அச்சிட்டு வெளியிடவும் தீர்மானித்திருப் பதாக இச்சபையின் அமைச்சரும் சித்தாந்த ஆசிரியருமான திரு வாளர். ந. சிவகுருநாதபிள்ளை யவர்கள் எழுதியுள்ளார்கள். இதன் பொன்விழாவி பொருட்டுச் சைவ நன்மக்கள் தங்கள் தங்கள லியன்றபொருளை இதன் அமைச்சரவர்கட்கு அனுப்புவார்களா

---

## மதிப்புரை

### அருணகிரிநாதர் அருளிச்செய்த திருமுறைத்திரட்டு

இது காஞ்சி ஸ்ரீ நாகலிங்க முனிவர் அவர்களாற் புதிய முறையில் தொகுக்கப்பெற்றது. பாராயணத்துக்கும் வழிபாட் டுக்கும் பெரிதும் பயன்படுவது. திருவாளர். கா. நமச்சிவாய முதலியாரவர்கள் எழுதிய முன்னுரையுடையது. உயர்ந்த காகி தத்தில் அச்சிடப்பெற்றுக் கலிக்காக் கட்டிடம் பெற்றுள்ளது. 408 பக்கம் விலை குறைந்த ரூ. 2.

இது ஷை பதிப்பாசிரியரிடத்திலும் நமது கழகத்திலும் விலைக்குக் கிடைக்கும்.

---



திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டதேவர் கோயில்

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது


| | | |
|---|---|---|
| சிலம்பு கஉ | மெய்கண்டான் யாண்டு-எகக ஐப்பசித்திங்கள் 1933ஹு அக்டோபர்௴—நவம்பர்௴ | பரல் ரு |


## சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்

பூணுவதோ ரரவங்கண் டஞ்சேன்
புறங்காட்டி லாடல்கண் டிகழேன்
பேணீராகிலும் பெருமையை யுணர்வேன்
பிறவே ஞகிலு மறவேன்
காணீராகிலுங் காண்பனேன் மனத்தாற்
கருதீ ராகிலுங் கருதி
நானே லும்மடி பாடுத லொழியேன்
நாட்டியத் தான்குடி நம்பீ.

பதவுரை:—

நாட்டியத்தான்குடி நம்பீ—திருநாட்டியத்தான்குடி என்ற தலத்தில் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கின்ற உத்தமனே,

அரவம் பூண் ஆவது (உம்) நாண் ஆவது (உம்) கண்டு அஞ்சேன்—நீர் உமது திருமேனியில் பாம்பை ஓர் ஆபரணமாய் அணிந்திருத்தலையும் திரிபுரங்களை யெய்தற்கு மேருவரையாகிய வில்லுக்கு நாணாகக் கட்டியிருத்தலையும் பார்த்து உம்மை வணங்குதற்கு அஞ்சமாட்டேன்.

புறங்காட்டில் ஆடல் கண்டு இகழேன்—நீர் சுடுகாட்டில் நடனம் செய்வதாக (அருள்நூல்கள் கூறுதலைப்) பார்த்து (சமணசமய முதலிய புறச்சமயிகள் உம்மை இகழ்தல்போல) நான் இகழ்ந்து பேச மாட்டேன்.

பேணீராகிலும் பெருமையை உணர்வேன்—நீர், எல்லா உயிர்களும் உம்மை அடைந்து பேரின்பமடைதல் வேண்டும் என்ற வியாபக வேட்கை (இச்சை) உடையராயிருத்தலன்றித் தனியே என்னைப் பேரின்ப மடைதல் வேண்டுமென்று விரும்பாவிட்டாலும் எனது வியாப்பிய வேட்கை உமது வியாபக வேட்கையில் அடங்கி நின்று தொழிற் படுதலால் விருப்பு வெறுப்பின்றி எல்லா உயிர்களும் பேரின்பமடை தல் வேண்டுமென்ற சங்கற்பத்தால் உயிர்களிடத்தில் அவ் வேட்கையை விளங்கும்படி எப்பொழுதும் பேருதவிசெய்து கொண்டு வரும் பெருமையை நான் எனது உள்ளத்தில் உணர்வேன்.

கருதீராகிலும் நான்வல் கருதி உம் அடிபாடுதல் ஒழியேன்—நீர் எனது சித்துத் தன்மையாகிய அறிவைத் தனியே அறியாவிட்டாலும் நானே உம்மோடு இரண்டறக் கலந்து நீர் எனக்கு வேறாக நின்று அறிவித்தும் உடனாய்நின்று அறிந்தும் வருதலை அறிகிற உமது சித்துத் தன்மையை உணர்ந்து அவ் வுணர்ச்சி காரணமாக உம்மை, எப் பொழுதும் வாயினாற் றேவாரப்பாக்கள் பாடிக்கொண்டிருப்பேன்.

காணீராகிலும் என் மனத்தாற் காண்பேன்—நீர் எனது சத்துத் தன்மை யைத் தனியே காணாவிட்டாலும் உமது வியாபகச் சத்துத் தன்மை யில் அடங்கியிருக்கிற நான் உமது சத்துத் தன்மையை எனது உள்ளத்தில் கண்டுகொண்டிருக்கிறேன்.

பிறவேனாகிலும் மறவேன்—மேலே கூறியவாறு எனது வியாப்பிய வேட்கை அறிவு செயல்கள் முறையே உமது வியாபகவேட்கை அறிவு செயல்களுக்குள் முற்றிலும் அடங்கியிருந்து நான் இப் பிறவி யில் பிறவாத தன்மையை அடைந்தேனாயினும் (முன் கைலாயத்தில் நான் கமலினி அநிந்திதை என்னும் பெண்களை நினைத்ததுபோல அன்றி) நான் உமது திருவடிகளையே எப்பொழுதும் நினைந்து கொண்டிருத்தலன்றி மறக்கமாட்டேன்.

விளக்கவுரை:—

நம்பீ—நம்பி—ஆண்மகனிற் சிறந்தவன்; உத்தமன்; ஈற்று இகரம் நீண்டு நம்பீ என விளிப்பெயராயது.

அரவம்பூண் ஆவது (உம்) நாண் (ஆவதும்) கண்டு அஞ்சேன்—நாட்டியத் தான்குடியிலுள்ள சிவபெருமான் திருமேனியில் பாம்பு ஆபரணம் அணியப்பட்டிருத்தலால் சுந்தரமூர்த்தி அடிகள் அதனைக் கண்டு இங்கே அத்தலத்துப் பதிகம் முதலாவது பாட்டிற் கூறுகின்றார்.

ஆவது—தொழிற்பெயர்—ஆதல். பூண் ஆவது—பூணாக அணிந்திருத் தல். நாண் ஆவது—நாணாகக் கட்டியிருத்தல். ஆவது என்ற சொல்லை நாண், பூண் என்ற இரண்டு சொற்களோடுங் கூட்டுக. எண்ணும்மைகள்

விகாரத்தாற் றெக்கன. அரவம் என்பது இங்கே அரவம்போல மூலாதாரத்தில் விளங்கு இயங்குகிற சுத்தமாயையிலுள்ள குண்டலி சத்தியைக் குறிக்கிறது. சிவபெருமான் அரவத்தைப் பூணுக அணிதல் என்பது அண்டத்தில் சிவபெருமானது அருட்சத்தியானது சுத்தமாயையை இயக்குதலாலுண்டாகும் குண்டலி சத்தியால் நிகழ்கிற உச்சுவாசம் (மூச்சு உள்வாங்குதல்) நிச்சுவாசம் (மூச்சு வெளியே விடுதல்) என்ற பிராண அபானவாயு இயக்கங்களைக் குறிக்கிறது. இவ்வாறு அண்டத்தில் நிகழும் உச்சுவாச நிச்சுவாசங்கள் காரணமாக உயிர்களுடைய பிண்டத்திலும் உச்சுவாச நிச்சுவாசங்கள் நிகழ்கின்றன. இந்த உச்சுவாச நிச்சுவாசங்கள் முறையே பிங்கலை இடைகலை நாடிகளிற் சூரியகலை சந்திரகலைகளாக வலது இடது நாசிகள் மூலமாய் அஞ்சு நாழிகைக்கு ஒருமுறை மாறிமாறி நிகழ்கின்றன. இவ்வாறு இயங்குகிற உச்சுவாச நிச்சுவாசங்கள் காரணமாக மாந்தர் உலகபோக வாழ்வில் திரோத மலம் வயப்பட்டு நல்வினை தீவினைகளைச் செய்து மலபரிபாகம் அடையப் பெறுகிறார்கள். பாம்பு ஆகிய குண்டலி சத்தியானது ஆன்மாக்களைப் பக்குவப் படுத்துகிறதற்காகப் பிண்டத்தில் உச்சுவாசம் நிச்சுவாசங்களுண்டாம்படி செய்து திரோத மலம் வயப்பட்ட நல்வினை தீவினைகளோடு கூடிய உலக வாழ்வை நிகழ்த்துவிக்கின்றது என்பது "வஞ்சப் பெண்ணாங்குகோயில் வாளெயிற்றரவந் துஞ்சா—வஞ்சப் பெண்ணிருந்த சூழல்" என்று திருநாவுக்கரசு அடிகள் தனி—திருநேரிசை 5வது பாட்டிற் கூறியிருத்தல் காண்க. ஆணவ மலத்தை இயக்கி உயிர்களுக்குத் திரோபவம் நிகழ்வித்தல் சிவபெருமானுடைய ஊன நடனத்தால் ஆகிறது. நாண் என்பது சிவபெருமான் திரிபுரங்களை எரிக்க எய்தற்கு மேருவரையாகிய வில்லிற் கட்டப்பட்டிருக்கும் வில்நாண். மேருவரை, முதுகில் சுழுமுனைநாடி இயங்குகிற வீணு தண்டத்தைக் குறிக்கிறது. பிங்கலை இடகலை நாடிகளின் வழியாகச் செல்கின்ற பிராணவாயுவை, அந் நாடிகளின் அடித்துவாரங்களைப் பிராணுயாமத்தால் அடைத்துச் சுழுமுனை நாடி வழியிற் புருவம் நடுவிற் செல்ல விட்டு மேலே சந்திர மண்டலத்திலுள்ள அமிர்தத்தை ஒழுகச்செய்து தனது உடல் முழுதும் தேக்குகிற யோகி ஒருவன் திரோத மலம் வயப்படுதலைக் கடந்து அருள் அறிவைப் பெற்று அவ் வறிவால் மும்மலங்களையும் வென்று பேரின்பம் அடைகிற பருவத்தை அடைகின்றான். (திருவாதவூரடிகள் புராணம் திருப்பெருந்துறைச் சருக்கம் கக௯-வது பாட்டுக் கருத்து நோக்குக.) சிவபெருமான் மேருவரையாகிய வில்லில் பாம்பாகிய நாணைக் கட்டித் திரிபுரங்களை எரித்தலானது ஆன்மாக்கள் திரோத மலத்தினின்றும் நீங்கி அருள் அறிவாகிய மெய் யுணர்வைப் பெற்றுச் சத்திநிபாதமுடையவர்களாய் ஆணவம் வினை மாயை என்ற மும்மலங்களையும் வெல்லுதற்குக் காரணமாயிருக்கிறது. பாம்பு நாணுனது வில்லினுல்

அம்பெய்து திரிபுரங்களை அழித்தற்குக் காரணமாயிருத்தல்போல, பிராண வாயுவைச் சுழுமுனைநாடி வழியில் யோகத்தாற் செலுத்திப் பெறப்படுகிற அருளறிவு ஆகிய மெய்யுணர்வானது மும்மலங்களையும் கெடுத்தற்குக் காரணமாயிருக்கிறது. "முப்புரமாவது மும்மல காரியம்" என்று திருமூலர் திருமந்திரம் 343-வது பாட்டிற் கூறியருளினமை காண்க. பக்குவப்பட்ட உயிர்களுக்குத் திரோபவத்தை நீக்கி அருளலைச் செய்தல் சிவபெருமானுடைய ஞான நடனத்தால் நிகழ்கின்றது.

மேலே கூறியவாறு சிவபெருமான் பாம்பை ஆபரணமாகத் தமது திருமேனியில் அணிந்திருத்தல் ஆன்மாக்கள் உலக வாழ்வில் இன்ப துன்பங்கள் நுகர்தல் காரணமாகப் பக்குவமடைதற்குச் செய்கிற நல்வினை தீவினைகளைக் காட்டுகிற அடையாளமாகவும் சிவபெருமான் தமது கையிலுள்ள மேருவாகிய வில்லில் பாம்பு நாணாகக் கட்டப்பட்டிருத்தல் திரோத மலத்தைக் கடந்து பக்குவப்பட்ட ஆன்மாக்கள் தமது அருள் அறிவைப்பெற்றுப் பேரின்பம் அடைதலைக் காட்டுகிற அடையாளமாகவும் இருத்தலை நன்கு அறிந்து அடிகள் "பூணுணுவதோரரவங் கண்டஞ்சேன்" என்றார். உயிர்கள் மேல் வைத்த பேரிரக்கத்தால் சிவபெருமான் இவ்வாறு அவைகளுக்கு இடைவிடாது செய்துவரும் பேருதவியை உயிர்கள் நினைந்து அவனிடத்தில் அன்பு செய்து வழிபடுதலே அவரை அடைதற்குவழி யன்றி, துன்பஞ் செய்கிற ஒருவனைக் கண்டு அஞ்சுதல் போல அஞ்சுதல் வழியாகாது என்ற கருத்தை அடிகள் கூறி யருளினர்.

புறங்காட்டில் ஆடல் கண்டு இகழேன்—சிவபெருமான் சுடுகாட்டில் ஆடுதல் அவர் உயிர்களை இளைப்பாறச் செய்தற்காக. மாயையினாலாகிய தனுகரண புவன போகங்களை அழித்து அவை அழிந்துகிடக்கிற சுடுகாட்டில் மீளவும் தனுகரண புவன போகங்களைப் படைத்தற்காக அண்டத்திற் செய்கிற சூக்கும நடனத்தையும் பிண்டத்தில் உயிர்களுடைய சுழுத்தி அவத்தையில் அவைகளுடைய வேட்கை அறிவு செயல்கள் விளங்கி அறியாமை நீங்குதற்காக நள்ளிருளிற் செய்யும் சூக்கும நடனத்தையும் குறித்தலால் அதனைத் தமது மெய்யுணர்வில் உணர்ந்த அடிகள் புறங்காட்டில் ஆடல், உயிர்களுக்குச் சிவபெருமான் பெருங்கருணையினாற் செய்யும் பேருதவியாயிருத்தலால் அதனைக் கண்டு புகழ்தலன்றி இகழ்தலுக்குச் சிறிதும் காரணமில்லை என்பார் 'புறங்காட்டிலாடலிகழேன்' என்றார்.

| | |
|---|---|
| பேணீராகிலும் பெருமையை உணர்வேன் (1)<br>கருதீராகிலும் கருதி (2)<br>காண்பீராகிலும் என்மனத்தாற் காண்பன் (3) | இங்கே கூறப்பட்ட சிவபெருமானுடைய(1)பேணுதிருத்தல்(2)கருதாதிருத்தல் (3) காணாதிருத்தல் மூன்றும் அவர் தமது வியாபகத்தில் அடங்கியுள்ள ஆன்மாக்களைத் தனித்தனி |

பேணுதிருத்தலையும் தனித்தனி கருதாதிருத்தலையும் தனித்தனி காணுதிருத்தலையும் குறிக்கின்றன. இவை மூன்றும் முறையே அவருடைய இன்பத் தன்மையையும் அறிவு (சித்து) த்தன்மையையும் உண்மை (சத்து) த்தன்மையையும் குறிக்கின்றன. சிவபெருமான் தனியே யாதொரு விகாரமுமடையாதிருப்ப அவரது அருட்சத்தி சங்கற்பத்தினாலே ஐந்து மூர்த்திகளும் ஐந்து தொழில்களும் செய்தலால் அடிகள் பேணீராகிலும் கருதீராகிலும் காணீராகிலும் என்றார். "பூவண்ணம் பூவின் மணம் போல மெய்ப்போத வின்பம், ஆவண்ண மெய்கொண்டவன்றன் வலியாணை தாங்கி, மூவண்ணல்தன் சந்நிதி முத்தொழில் செய்யவாளா, மேவண்ணல்" என்று பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத்திற் கூறியருளினமை காண்க. மாந்தர் உயிர்கள் ஒன்றொன்றாய் வேட்டு வேட்கை செய்தலும் ஒன்றொன்றாயறிந்து அறிதலும் ஒன்றொன்றாய்ச்செய்து செய்தலும் போலச் சிவபெருமான் வேட்டலும் அறிதலும் செய்தலும் செய்யாமல் ஒருசேர வேட்டு அறிவந்து செய்து உயிர்களுடைய வேட்கை அறிவு செயல்கள் விளங்கும்படி செய்கின்றான் என்ற உண்மையை அடிகள் கூறியருளினர்.

கருதீராகிலும் நான் ஏல கருதி—ஏல - என்னில் என்றால் நீர் கருதீரானுலும் நானே என்றால் உம்மைக் கருதுவேன் என்பது பொருள்.

பிறவேனாகிலும் மறவேன்—இதனால் அடிகள் தாம் முன் கைலாயமலையில் சிவபெருமானை ஒரு கணம் மறந்து கமலினி அநிந்திதை என்ற உமாதேவியார் சேடியர்களை நினைத்ததைக் குறிப்பிடுகின்றார் என்பது தோன்றுகிறது. ஒரு கணம் மறந்திருந்தது சிவபெருமானைப் பிரிந்து இப்பூமியிற் பிறத்தற்குக் காரணமாயிருந்த அநுபவத்தை அறிந்து அவ்வாறு அவர் கூறுகின்றார். அடிகள் தாம் இனிப் பிறவாத தன்மையை அடைந்திருத்தலை "இனிப் பிறவாத தன்மை வந்தெய்தினேன்" என்று நமச்சிவாயப் பதிகம் முதலாவது பாட்டிற் கூறியருளினர்.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை

---

*திமை மலிந்த இவ்வுலகைச் சீர்திருத்துவது எப்படி?*
*நன்மையோடு கூடிய உலகை யுண்டாக்குவதனாலேயே.*

—எமர்ஸன்.

# சமயமும் தத்துவமும் :
# Religion & Philosophy

## மும்மையாலுலகாண்ட மூர்த்தி

(வித்வான் T. P. மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள் M.A., B.L.)

முன் ௬௰௯-ம் பக்கத் தொடர்ச்சி

செட்டிப்புள்ளியில் ஒரு துப்பு:—கொலை நூலோ என்ற ஐயம் எழுந்தபின், இதனை மூடி வைத்துவிட்டுக் கை கழுவிப் போவார் பலர். ஊடுருவி ஆராய்வதற்கு மனம் எவ்வாறு எழும்? ஆகவே மேல்வாரியாக ஆராய்ந்து உடனே ஒரு முடிபிற்கு வந்தாலன்றி, இந்நூலில் ஊக்கம் எழாதன்றோ? மூர்த்தியார் ஒரு செட்டியார் ஆதலின், அவருடைய வரலாற்றைப் பற்றியும் செட்டாக நாம் ஒரு சிறு புள்ளி போட்டுப் பார்ப்பதும் பொருத்தமேயாம். "சேக்கிழார் இவ்வரலாற்றை எத்தனை பாடல்களால் பாடி முடிக்கின்றார்? தற்கொலை என்று பிறர் கூறும் கைதேய்த்த வரலாற்றை எத்துணைப் பாடல்களில் வற்புறுத்துகின்றார்? "அரசன் மாயவேண்டும்" என்ற வேண்டுகோள் எதோ ஒரு மூலை முடுக்கில் பதுங்கிக் கிடக்கின்றதா? புனைந்துரையில் முற்ற முடியப் பரந்து வருகின்றதா? நுண்ணிய நோக்கமின்றி, இவ்வாறு பருத்த நோக்கத்தால் ஆராயும்போதும் மேலெழுந்த ஐயத்திற்கு ஒரு சிறிதும் இடம் இல்லை என்பது வெளியாகின்றது. சேக்கிழார் இப்பெரியாரது வரலாற்றை, 49 செய்யுள்களில் பாடி முடிக்கின்றார்; கை தேய்த்த வரலாற்றை இரண்டுபாட்டில் சுருக்கியும், சாவ நினைத்தலை ஒருபாட்டின் ஒரு மூலையில் ஓரடியின் ஒரு முடுக்கில் மறைத்தும் அமைத்துப் பாடிப் போகின்றார். இவையே முடிந்தமுடிபானால் 21வது பாடலோடு இந்த வரலாறு முடிந்திருத்தல் வேண்டும் அன்றோ? அவ்வாறு முடியாமல் மேலும் 28 பாடல்கள் பாடிப் போகின்ற சேக்கிழார்க்கு வேறேதோ ஒரு நோக்கம் உண்டு என அப்பாடல்களே நமக்குக் கோள் சொல்லவில்லையா? துப்பும் கிடைத்தபோது பின்பற்றி ஆராய்வது துப்பறியும் வரலாறுகள் வழங்கிவரும்

இந்தக் காலத்தில் அருமையல்லவே? அஃதல்லவா பலருக்கும் பொழுதுபோக்காக இருக்கிறது!

சேக்கிழார்க் கோட்டை முற்றுகை :—28 பாடல்களை மேலும் பாடிப்போகும் சேக்கிழாரது நோக்கந்தான்யாது? ஆனால், அந் நோக்கத்தை அறியப்புகும் நம்மைத் தடுத்து நின்று இக்கேள்வி கேட்பதே தவறு என்பார் சிலர். "ஏதோ ஒரு நாயனருடைய வரலாறு அகப்பட்டது அதைப் பாட்டாகப் பாடிவிட்டார். அதிலே போய் இல்லாததொரு முயற்கொம்பை ஆராய்வது என்?" என்பார் ஒருசாரார். "ஈதென்ன? இவ்வரலாறு சேக்கிழாரே கட்டிவிட்டதோ? ஏதோ ஒரு நோக்கத்திற்கேற்பத் தம் வரலாற்றைப் புனைந்துரைத் துரைத்துப் போகின்றார் என்று சொன்னாலும் சொன்ன வாய் புழுத்துப் போகாதா? 'உலகெலாம்' என்று முதலடி எடுத்துக் கொடுத்த திருவருளே பாடிக்கொண்டே போக அதனை இவர் எழுத்தாணியால் ஓலையில் எழுதிக்கொண்டே போனார். இதிலே இவருடைய நோக்கம் எங்கே புகுகின்றது?' என்பார் வேறு சிலர். "சேக்கிழாரோ நாட்டு வரலாற்று ஆராய்ச்சியாளரில் தலைசிறந்தவர். ஏதோ ஒரு நோக்கத்தின் பயனாக வரலாறுகள் ஆராய்ச்சியாளரது மனத்திலே வேண்டும் உருப்பெற்று எழுவது இல்லை. அவ்வாறு திரித்துக் கூறும் கூட்டத்தைச் சேர்ந்தவரல்லர் அப் பெரியார். நடந்ததை நடந்தபடி தமது ஆராய்ச்சியால் கண்டறிந்து எழுதுகிறார்" என்பர் மற்றும் சிலர். இன்னும் சிலர் இந்நூலைச் சிவப்பட்டாம் போர்வையிட்டு மூட்டைகட்டி மூலையில் வைத்துப் பூவும் புகையும் கொண்டு போற்றி நின்று "இந்நூலைத் திறக்கப்போமோ? ஓதியுணரப்போமோ?" என்று மனங் கசிந்துருகுகின்றனர். இந்த நான்கினத்தாரும் நாற்புறமும் முற்றுகையிட்டு நிற்க, பெரிய புராணப் பெருங் கோட்டையினுள்ளே புகுந்து நடுவே நிற்கின்றார் சேக்கிழார்.

புலவரின் படைப்பு :—இவர்கள் சேக்கிழாரை நாம் காணாத படி தடுத்து நின்றாலும், அப்பெரியாரின் புகழொளி அந்த வழியாகப் போகின்றவர்களுடைய கண்ணைக் கவர்கின்றது. பாவே உடலாய் அன்பே உயிராய் அருளொளி பரப்பி அப் புனைந்துரைக் கோட்டையின் மேனின்று புன்னகை புரிந்து அவ்

வழியே போவார்க்குப் புத்துயிரளிக்கின்றார் அப்புலவர் பெருமான். அவரைச் சுற்றி நிற்பாரும் அப்பெரியார் சிறந்த தமிழ்ப் பாவாணர் என்பதனை நமது நல்ல காலத்தின் பயனாகத் தம்மையும் மறந்து ஒப்புக்கொள்கின்றார்கள். கல்லும் கனியும் கலந்துகிடக்கும் காட்டினுள்ளே புகுந்த ஒருவன் கல்லைத் தின்னாமல் கனியையே அருந்துகின்றான்; கண்டதைத் தின்றான் எனச் சொல்லவும் கூடுமோ? அவ்வணமே உலகத்தில் பல பொருள்களும் பரவி நிற்க, அவற்றில் யாதேனும் ஒன்றைப் பாடும் பாவாணனும், அகப்பட்டதைப் பாடுபவன் ஆவானோ? சேக்கிழாரைப் போன்ற கடவுட் புலவர்கள் கைக்கெட்டியதையும் கண்ணுக்கெட்டியதையும் காதுக்கெட்டியதையும் தமது உள்ளத்தோடும் உயிரோடும் ஒருங்கியைய வையாது வாய்க்கு வந்தபடி பாடப் புகுவதில்லை. கருத்துக் கிசைந்ததையே பாட முன் வருகின்றனர். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் பொய்யர்கள் இவர்களல்லர். உள்ளும் புறமும் ஒற்றித்து நின்ற இடமே பாட்டெனப் பெயர் பெறும். எத்தனையோ வரலாறுகள் இருப்ப இப்பெரியார் இவற்றைப் பாடியது என்? இவருடைய உள்ளங் கவர்ந்தெழுந்த வரலாறுகள் இவையேயாம். வரலாறுகள் பலவும் புலவர்களின் உள்ளத்தை உருக்கித் தமக்கேற்ற புனைந்துரை வடிவம்கொண்டு, அங்கே உள்ளத்தினுள்ளேயே தங்கமாட்டாது வெளியே வெள்ளமாய்ப் பொங்கி, அவர்களையும் அறியாமல் பாட்டாக வழிந்து உலகிற் பரவுகின்றன. ஆகவே புலவருடைய பாடலை நாம் ஓதும்போது, அவருள்ளத்தை அவ்வரலாறு எவ்வாறு அடிமை கொண்டதெனவும், எவ்வாறு உள்ளத்தை உருக்கி அதனோடு ஒன்றாகி உருப்பெற்று எழுந்ததெனவும் அறியலாம் அன்றோ? பழைய எழுத்தும், பழைய சொல்லும், பழைய கருத்தும் பழைய வரலாறும் கொண்டே புது வடிவமும், புத்துயிரும் படைத்துப் புனைந்துரை வரலாற்றைப் பாட்டாகப் பாடுகின்றவனே தலைசிறந்த பாவாணனாகும். ஈதன்றோ புதுமை? கற்றச்சன் செதுக்கிய வடிவழகை நோக்காது "ஈதொரு கல்லன்றோ" என இடறி விழுந்தழுவாரைப் போலப், பாவலரின் உண்மைத் திறத்தை உணராது உழல்பவர்கள் அந்தோ மிகவும் இரங்கத்தக்கவர்! இரங்கத் தக்கவர்!

சட்டம் எழுதும் சிறுவர் :—திருவருள் தான் கூறுவதை அப்படியே எழுதிக்கொண்டு போவதற்குச் சேக்கிழாரைத் தேர்ந்தெடுப்பானேன்? மேல்வரிச் சட்டத்தைப் பார்த்துக் கீழ்வரிகளை எழுதும் பள்ளிக்கூடத்துச் சிறுவர்களையே வருத்தமின்றிப் பொறுக்கி எடுத்திருக்கலாமே? இவ்வாறு கூறுவோர் தம்முடைய சிறுவர்கள் சேக்கிழாரினும் சிறந்தவர்கள் எனக் கனுக் காண்கின்றனர் போலும்!

மெய்யா? உண்மையா?—நாட்டு வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் எழுதுவது மெய். பாவாணன் பாடுவது உண்மை. மெய் என்பது இருந்ததை இருந்தவாறே எடுத்துக்கூறுவது. உண்மை என்பதோ உலகில் இருப்பதன் உள்ளீடாய் விளங்கும் உயரிய இயல்பினை எடுத்துக் காட்டுவது. “இந்த ஆண்டு இந்தத் திங்கள் இந்த நாளில் இவர் பிறந்தார்; இதனைச் செய்தார். இந்த நாள் இறந்தார் இப்பெரியார்” என்பதோடேயே ஆராய்ச்சியாளர் வரலாறு தொடங்கி முடிகிறது. ஆனால், ஆண்டும் நாளும் உண்மையாவது என்றும் இல்லையாம். எனினும் அவையன்றோ ஆராய்ச்சியாளரின் முடிந்த முடிபுகள்? காலச் சட்டத்திற்குள் வைத்துப் பார்த்தாலன்றி அவர்களுக்கு ஒன்றும் விளங்குவதில்லை. “இந்தச் சண்டையில் இத்துணைப்படி செந்நீர் பெருகிற்று” என்பர் ஆராய்ச்சியாளர். ஆனால் ஏனாதிநாயனாரும், சீவகனும், இராமனும், செங்குட்டுவனும் நிகழ்த்திய போர்களைக் குறித்துப் பாடத்தக்கார் சேக்கிழாரும், திருத்தக்கதேவரும், கம்பரும், இளங்கோவடிகளுமேயாவர். இப்போர்கள் உலகில் நடந்தனவோ இல்லையோ என்ற ஆராய்ச்சியே வேண்டியதில்லை. அப்புலவர் பெருமக்கள் கூறும் புனைந்துரைவரலாற்றின் உட்போக்காக ஒளிரும் உண்மைகள் எந்நாளும் பொய்யாய்ப்போவன அல்ல. தூய்மை வடிவாம் சிவனெறியில் நின்ற ஏனாதிநாயனாரும், பலவகைச் செல்வத்தோடு மறச்செல்வமும் பெற்ற சீவகனும், அறத்திற்கோ ராளாகிய இராமனும், தமிழ்க்கென வாளேந்திய செங்குட்டுவனும், பாவுலகில் புகழுடம்பு பெற்று எந்நாளும் வாழ்பவர் ஆவர். மெய்யாக வாழ்ந்துலவிய ஏனாதியாரையும், சீவகனையும் இராமனையும் செங்குட்டுவனையும் இவ்வுலகம் மறந்தாலும் சேக்கிழார் முதலியோரின் செல்வப்பிள்ளைகளாகப் பாட்டிலே ஓடியாடி இன்றும் இளமையோடு விளையாடும் ஏனாதிநாயனார் முதலி

யோரை நாம் எந்நாளும் மறக்கமுடியாது. இத்தகைய உண்மை களையே புலவர் பெருமக்கள் தமது கடவுட்டன்மையால் கண்டெழுதுகின்றனர். கருவிலே திருவுடைய புலவர்களனைவர்க்கும் இத்தகைய கடவுட் காட்சியுண்டு. அவர்கள் முனைப்பற்று இயற்கையன்னையின் மடிமீது தவழ்ந்து, இறைவனோடு ஒன்றாய் நின்று பாடுகின்றார்கள். ஆதலின், அவர்கள் மொழியனைத்தும் திருவருண் மொழியேயாம்.

ஆராய்ச்சிக் கடைகால்:—சேக்கிழார் நாட்டு வரலாற்று ஆராய்ச்சியாளரில் தலைசிறந்தவர் என்பதனை மறுப்பதற்கில்லை. ஆனால், அவருடைய திருவருட் சிறப்பும், ஆராய்ச்சித்திறனும் பாட்டாகப் பொங்கி வழிகின்றதென்பதனை நாம் மறத்தலாகாது. இல்லதே கூறினால் மெய்ப்பாடொன்றும் எழுவதில்லை எனக் காட்டுகின்றார் பேராசிரியர். பொருத்தமற்றவையையோ நம்பத்தகாதனவற்றையோ கேட்டபோதும் மெய்ப்பாடொன்றும் எழுவதில்லை. திருவொற்றியூரின் அருகே சீகாழி இருக்கின்றதென்று ஒரு புலவன் பாடினால் அவனுடைய நூலை யாரேனும் ஓதுவாரோ? சிறுத்தொண்டர் இருபதாம் நூற்றாண்டில் புகைக் கப்பலில் ஏறி மேனாட்டாரோடு சண்டையிட்டார் என்று பாடும் புலவனைப் பலரும் பேயன் என்றே புறக்கணிப்பார்கள். ஆகவே பண்டையோர்களைப் பாட வரும் புலவன் நாட்டுவரலாற்றாராய்ச்சி இன்றி அத்துறையில் இழிய இயலாதன்றோ? ஷேக்ஸ்பியர் என்ற ஆங்கிலநாட்டுப் புலவர் பாடிய நூல்களை ஓதும்போது சிற்சில இடத்தே இத்தகைய பிழைகள் கண்டவிடத்து நம்மனத்தெழுந்த மெய்ப்பாடு சிதறுண்டுபோதலை இந்த நாளில் காண்கின்றோம். அத்தகைய ஏமாற்றம் ஒன்றும் சேக்கிழாரை ஓதுகின்றபோது நிகழ்வதில்லை எனலாம். என்றாலும், நாட்டு வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட புனைந்துரை வரலாற்றையே சேக்கிழார் பாடுகின்றார் என்பதனை நாம் மறத்தலாகாது.

சேக்கிழார் பொய்யரா?:—திருஞானசம்பந்தரும், குலச்சிறையாரும், மங்கையர்க்கரசியாரும் உலகில் உயிரோடு உலவி வாழ்ந்தவர்களே யாவர்; பொய்க்கனா உலகத்துப் பொய்ம்மக்கள் அல்லர். எனினும் அவர்கள் பேசிய பேச்சைச் சேக்கிழார் பாட்டாகப் பாடுகின்றார். அந்தச் சொற்களை அந்த முறையில் அவர்கள் அந்தக் காலத்தில் பயன்படுத்திப் பேசினர் என்று எவரேனும்

கூறமுடியுமோ ? சேக்கிழார் முன்னோர்களுடைய காலத்திலேயே மறைந்திருந்து சுருக்கெழுத்தில் எழுதிக்கொண்டதைப் பின் வந்து பாட்டாகப் பாடுகின்றாரோ ? அவருடைய பாடல்கள் நடந்ததை நடந்தபடி கூறுவன அல்ல. "எவ்வாறு நடந்திருக்கக்கூடும்" என்று தமது கடவுட் புலமையால் கண்டுணர்ந்து பாடிய உண்மைப் பாடல்களே யன்றி மெய்ப்பாடல்கள் அல்ல. ஆகவே புனைந்துரை ததும்பும் இனிய கனியே அவருடைய திருநூல். தமது கருத்திற் கேற்ப வரலாறுகள், ஆராய்ச்சி முடிபுகளுக்கு முரண்படாது உருப்பெற்றெழுவதை இவ்வாலாற்றில் போலத் திருக்கண்ணப்பர் புராணத்திலும் நன்றாகக் காணலாம். சேக்கிழார் பாடும் திருக் கண்ணப்பர் வரலாற்றுக்கும், அவர்க்கு முன்னிருந்த கடவுட் புல வர்களாம் நக்கீரர், கபிலர் முதலியோர் பாடிய வரலாறுகளுக்கும் உள்ள வேற்றுமையை யாவரும் அறிவர். பாலை நிலத்தில் பசியால் வாடி வேட்டையாடி அலையும் திண்ணன்—கண்ணெடுத்துப் பார்க்கவும்கூடாதபடி அருவருக்கத்தக்க வடிவுடைய திண்ணன்—சேக்கிழாருடைய உள்ளத்தே கட்டழகு நிறைந்த முருகனாய், விருந்தும், விழாவும் பொலியும் குறிஞ்சி நிலத்தில் செல்வமும் சீருமாக வளரும் திண்ணனாக மாறுகின்றான். நக்கீரரைக் கடவுட் புலவர் அல்லர் என்போமோ ? சேக்கிழார் அதனைத் திரித்துப் பாடியதால் அவரைப் பொய்யர் என்போமா ? பொய்யையும், மெய்யையும் கடந்த உண்மையுலகில் புனைந்துரை மலையில் பொற் குவட்டில் பாட்டெனும் கோயிலுக்குள்ளே இறைவனும் இவரும் ஒன்றாக இயைந்து இன்ப அன்பு மழை பொழிகின்றனர். வாடி வதங்கிய நமது உள்ளப் பயிர்கள் தழைக்கின்றன. அம்மட்டே இங்குள்ளது. இதற்கு மேல் வேறெங்கேனும் உண்டோ ?

கரும்பைத் தின்பதா? காலில் விழுவதா ?:—அவர் திருநூலை ஓதாது, பூவும், புகையும் கொண்டு வழிபடுவது சேக்கிழாரைப் பழிப்பதேயாம். பாட்டைப் பாடவன்றோ அப்பெரியார் பாடினார் ? பட்டுத்துணிக்குள் கட்டி வைத்தால் அவர் மனம் பதையாதோ ? மூட்டை கட்டி மூலையில் வைக்கவேண்டும் என்று அவர் விரும்பி இருந்தால் கல்லையோ கட்டையையோ கொடுத்து விட்டுப் போயிருக்கமாட்டாரோ ? கற்கண்டைச் சுவையாது எதிரே வைத்து வழிபடுவார் அதன் இனிமையை அறிவாரோ ? சேக்கிழார் நூலை வழிபடுவார் அதன் பெருமையை அறிவது எங்ஙனம் கூடும் ?

புனைந்துரைக்கூத்து:—எனவே பட்டுப் போர்வையைக் கிழித்தெறிந்து திறந்துவைத்து ஓதுதல் வேண்டும். கீழ்நிலையுலகங்களாம் பொய்யுலகையும் மெய்யுலகையும் ஆராய்ச்சியுலகையும் கடந்து சென்று திருவருளுலகாம் பாட்டுலகத்தே புகுதல்வேண்டும். திருவருள் இவர் காதிலே ஓதுதல் போக சேக்கிழாரே திருவருளாக மாறி நின்று பாடி வீற்றிருக்கும் திருவோலக்கக் காட்சியைக் காணுதல்வேண்டும். இப்பொய்த்திரைகள் கிழிந்தொழிந்தபோதன்றோ புனைந்துரையின் பொன்னம்பலக்கூத்தைக் காண்கின்றோம்! அவ்வின்பக்கூத்தின் பொருள் யாது?

---

## புத்தபகவான் பொருண் மொழிகள்

[பண்டித. திரு. அ. நடராஜ பிள்ளையவர்கள்]

(முன் கூகூ-ம் பக்கத் தொடர்ச்சி)

### 3. மாணவர் கடமைகள்

*மாணவர்காள்!*

1. ஆசிரி யரைக்கண் டன்புட னெழுமின்.
2. இருகை கூப்பி யிணையடி தொழுமின்.
3. ஏவுகட் டளைக்கே யெதிர்பார்த் திருமின்.
4. காணிக்கை கொடுக்குங் காலந் தவறன்மின்.
5. போதித் திடுநற் பொருண்மொழி போற்றுமின்.

### 4. ஆசிரியரின் கடமைகள்

*ஆசிரியர்காள்!*

1. மாணவர் தமைநல் வழியிற் பயிற்றுமின்.
2. உலகறி வனைத்து மொழியா துணர்த்துமின்.
3. இலக்கிய விலக்கண வெழில்பெறச் செய்மின்.
4. காணு விடத்தவர் கல்வியைப் புகழ்மின்.
5. இம்மை மறுமை யிடையூ றகற்றுமின்.

---

# இலக்கணமும் இலக்கியமும்:
## Language & Literature

### ஊழும் முயற்சியும்

[திரு. S. சகாதேவ முதலியாரவர்கள்]

உலகின்கண் இன்ப துன்பங்கள் எந்நாளுங் காணப்படுகின்றன. மக்கள் இன்பங் காணுங்கால் உவகையுடன் ஏற்று உள் மகிழ்கின்றனர்; துன்பங் காணுங்கால் முனிவெய்தித் துயரில் மூழ்குகின்றனர். ஒருவனுக்கே இன்ப துன்பங்கள் ஒரே காலத்திலும் இடையிட்ட காலங்களிலும் நிகழ்கின்றன. வாழ்நாளெல்லாம் இன்பே கொள்பவனும் அன்றித் துன்பே அடைபவனும் இங்குக் காணப்படுகின்றானில்லை. மேலும், இன்பம் அடையத் தக்கவனென எதிர்பார்க்கப்படுகிறவன் துன்ப மடைதலையும், துன்பமடையத் தக்கவனென எதிர்பார்க்கப்படுகிறவன் இன்ப மடைதலையும் நாம் காண்கின்றோம்.

உலகத்தில், முக்கியமாய் முந்திய நாடென்னும் நம் இந்திய நாட்டில், ஆதிகாலத்தில் வாழ்ந்துவந்த மக்கள் இவ் வேறுமாறான இன்ப துன்பங்கட்கு இவ்வுலகத்தைப் பொறுத்தமட்டில் எத்தகைய காரணமும் காணமாட்டாதாவர்களாயினர். இப் பொருள் பற்றி நமது பெரியோர்கள் மனம் வெகுகாலம் அமைதியின்றியே அல்லற்பட்டது. அவர்கள் காலஞ் செல்லச் செல்ல ஆழ்ந்தாழ்ந்து ஆராய்ந்து, மக்களது மனச் சஞ்சல மொழிக்க இவ்வின்ப துன்பங்களைப்பற்றி ஒரு முடிவு கட்டிவிட்டனர். அஃதாவது:—

ஆன்மா என்று சொல்லப்பட்ட உயிர் அநாதியானதும் நித்தியமானதுமா யிருக்கின்றது. இவ்வான்மாவுக்கு ஆசைப்பற்றுள்ளவரையில் பிறப் பிறப்புக்கள் தொடர்பாய் உள்ளன. ஒரு பிறப்பிற் செய்த நல்வினை தீவினைகளை அவ்வான்மா அப்பிறப்பில் அநுபவித்தது போக மறு பிறப்பில் அவ்வெச்சத்தின் பயனை அடைந்தே தீரவேண்டும்.

"சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா
உறுகாலத் தூற்றுகா வாமிடத்தே யாகுஞ்
சிறுகாலைப் பட்ட பொறியு மதனு
லிறுகாலத் தென்னை பரிவு"

என்றார் ஒரு பெரியார்.

"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை"

என்னும் திருக்குறட்கு "அறத்தின் பயனிதுவென்று யாம் ஆகம அளவையான் உணர்த்தல் வேண்டா; சிவிகையைக் காவு வானோடு செலுத்துவானிடைக் காட்சியளவை தன்னானே யுண ரப்படும்" என்று பொருள் கொண்டார்கள் பிற்காலத்து வந்த பரிமேலழகர் முதலாய உரையாசிரியர்கண்மார். ஆகவே இன்ப துன்பங்கள் ஒருவனுக்கு வந்தே தீரும்; அதனை அநுபவித்தே ஆகவேண்டும்; இதனைப்பற்றிக் கவலைப்படுதல் மக்கள்தம் அறியா மையே என்பதாம். நிற்க,

"ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி"

என்ற வள்ளுவர்,

"அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்"

என்றும்,

"மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள்"

என்றும், இன்னும்,

"மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு"

என்றும் அவரே வாய்மலர்ந்ததன் காரண மென்னோ? மேலும்,

"நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
னுண்மை யறிவே மிகும்"

என்றவர்,

"ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து"

என்றதேன்? பிறகு,

"பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம"

என்று சொல்லி

"ஆக்க மதர்வினுய்ச் செல்லு மசைவிலா
வூக்க முடையா னுழை"

என்றும்,

"ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்க
மொருவந்தங் கைத்துடை யார்"

என்றும்,

"குடியென்னுங் குன்ரு விளக்க மடியென்னு
மாசூர மாய்ந்து கெடும்"

என்றும் சொல்வானேன் அவர்? கடைசியாக,

"ஊழிற் பெருவலி யாவுள மற்ரென்று
சூழினுந் தான்முந் துறும்"

என வற்புறுத்திச் சொற்றவர்.

"ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்"

எனவும் வற்புறுத்திச் சொற்றதன் பெற்றியாது?

இவ்வாறு கண்டவாற்ருல், உலகின்கண் காணப்பட்ட இன்ப துன்பங்களின் ஏறுமாறுகளைக் கண்ட மூதாதையர் அவற்றிற்கோர் சமாதானங் காணவேண்டி ஊழ் என்ப தொன்றுண்டென்று முடிவு கட்டினர் என்றும், அவர்கட்குப்பின் வந்த மக்களெல்லோரும் அம்முடிவையே அடியாகக் கொண்டு அதனை உலக வழக்காற்றிலும் நூல் வழக்காற்றிலும் கொண்டு வந்துவிட்டனர் என்றும், இதற்கு முற்றும் ஒருப்படாத திருக்குறள் ஆசிரியராய நம் திருவள்ளுவ நாயனுர் 'ஊழ்' என்பதனை ஒரே அதிகாரத்திற் காட்டி முடித்துக்கொண்டு அதனை முன்னே வைத்துப் பின்னுக, ஊழை யொரு பொருட்டாக எண்ணப்படாதென்று மக்கட்கு வற்புறுத்திக் காட்டுவான் வேண்டி, ஊக்கமுடைமை, மடியின்மை, ஆள்வினையுடைமை, இடுக்கணழியாமை யாகிய, அவ்வூழைப் புறங் காணும் மனவலி யளிக்கத்தக்க இந்நான்கு பொருள்களைக் கொண்ட நான்கு அதிகாரங்களை, ஊழின் பக்கம் உறுதிபூண்டிருந்த மக்கண் மனப்பாங்கை மாற்றி அது முயற்சியின் பக்கமே முறுகித்

திரும்பப் பேரவாக் கொண்டு, பிறர்தம் மத மேற்கொண்டு களைந்து அதனெடு படாஅது தம் மதமே நிறுவ வைத்துக் காட்டினர் என்றும் கண்டாம்.

ஆன்மா அனுதி யென்பதற்கும், அதன் கருத்துச் செயல்களின் பயன் அதனுடனே விடாது செல்லுமென்பதற்கும் நாம் உடன்பட்டுள்ளோம். அக் கருத்துச் செயல்களின் பயனேயன்றி அவைகளே ஆன்மாவின் உடன்செல்லும் என்பது ஒவ்வாத தாகும். மனிதன் ஒரு பிறப்பிற் செய்த ஒருவகைப் பாவத்தினுல் மறு பிறப்பில் ஆறறிவிற் குறைந்த விலங்காதிகளாகப் பிறக்கின்ருனென்பதும்; ஒரு பிறப்பில் ஒருவனைக் கொன்றவன் மறு பிறப்பில் மற்றவனுற் கொல்லப்படுவான் என்பதும்; கூத்துப் பார்ப்பவன் கூத்தாடியாய்ப் பிறப்பான் என்பதுமாகிய இவைகளும் இவைபோன்றவைகளும் மூட நம்பிக்கைகளே யாகும். பணக்காரிற் பெரும்பாலார் மெய்யறிவு பெருதவர்களாயும், ஏழைகளிற் பெரும்பாலார் அது பெற்றவர்களாயும் இருக்கக் காண்கின்ருேமன்ருே! எனினும், அவர்களை முற்பிறப்பிற் புண்ணியஞ் செய்தவரென்றும், இவர்களை அது செய்யாதவர்களென்றும் கருதுவது முற்றும் பொருத்தமாகக் காணப்படவில்லை. பணத்தைப் பொருளாகக் கொள்வது உண்மையறிவிற்குப் பொருந்தாத தொன்ருகும். ஒருவனது அறிவு முதிர்ச்சி முதிராமை களுக்குக் காரணம் முற்பிறப்புக்களில் அவனது பயிற்சி முயற்சியின் உண்மையு மின்மையுமே யாகும். ஆகையால் அவன் இப்பிறப்பிலேனுந் தன்னிடமுள்ள குறைவை நிறைக்க முயல வேண்டியதே யன்றி, "நான் இவ்வளவுதான் கொடுத்து வைத்தேன்" என்று சொல்லி முயற்றின்மையை மேற்கொண்டு அவ்வின்மை யிலேயே புகுந்து வாளாவிருப்பது அறிவிற்கு வறுமை யாகும்.

ஒருவன் இப்பிறப்பின் கண்ணே அமைந்திருக்கும் நிலைமைக்குக் காரணம் அவன் பிறந்திருக்கும் இடமும் காலமும் அவனைச் சூழ்ந்திருக்கும் மக்களும் அவர்களின் பழக்க வழக்கங்கள் குணகுணங்கள் முதலியவைகளும் முற்பிறப்பின் கருத்துச் செயல்களின் பயனும் எல்லாம் சேர்ந்த தொன்ருகுமே யொழிய அவனது நிலைமைக்கு ஊழ் என்பதொன்றே காரண மென்று நினைப்பது தவறேயாகும். ஒருவன் ஒரு காரியத்தில் முயன்று

அது முற்றுப்பெருவிட்டால் அஃது அவனுடைய அறிவின் குற்றமும், முயற்சியின் குறைவுமேயாகும். அறிவின் இழுக்கு அவன் அதற்கு முற்பிறப்பிற் கொடுத்த பயிற்சியின் குறைவினலானதென்று சொல்லக்கூடுமாஞலும் அவன் அக்குறைவைக் கல்வி கேள்விகளால் நிரப்பிக்கொள்ளலாம். முற்பிறப்பின் பயனுல் ஒருவனுடைய அறிவு எவ்வளவு குறைவுங் குற்றமு முற்றிருப்பினும் அதனை அவன் அகங்கார மமகாரங்களை ஒழித்து, அறிவிற் றெளிவும் முதிர்ச்சியுமுடைய பெரியோர்கள் சொற்படி அடங்கி நடந்து கொள்வானுயின் அவன் தொடுக்குந் தொழில்களில் நாளா வட்டத்தி லாயினும் தோல்வியுரு னென்பது திண்ணம்.

ஒரு நாட்டு மக்கள் மற்ருெரு நாட்டினை ஆட்சி புரிகின்ருர்கள். அதனுல் ஆள்வோருக் கெல்லாம் ஆகூழ் என்றும், ஆளப்படுவோர்க் கெல்லாம் போகூழ் என்றும் சொல்லிக்கொண்டு வாளாவிருத்தல் நன்ருகுமோ? ஆளப்படுவோர் அறிவை வளர்த்திக் கொண்டு தமது நாட்டைத் தாமே ஆள முயற்சி செய்ய வேண்டுமே யொழிய ஊழின்மேற் பழியைச் சுமத்தி, அன்பின்மை, நடுநிலை யின்மை, அடக்கமின்மை, அழுக்காறு, வெஃகுதல், புறங்கூறல், கூடாவொழுக்கம், கள்ளற்றன்மை, பொய்ம்மை, கொடுமை, கல்லாமை முதலிய இழிவுகளையும், குறைபாடுகளையும் மேற்கொள்ளாது, ஒற்றுமையை நற்றவமாகக் கொள்வார்களாயின் அந்நாட்டின் மனத்தை ஆட்சிசெய்துகொண்டு வந்த ஊழிற்குக் கடையூழியன்ருே கடுகக் கிட்டும்! மக்களது ஊக்கமின்மை, மடியுண்மை, ஆள்வினையின்மை, இடுக்கணழிதல் முதலாகிய குற்றங்களினுலன்ருே ஊழானது பெருவலி பெற்று முந்துகின்றது! மடுத்தவாயெல்லாம் பகடன்னுனிடம் ஊழானது இடுக்கட்பட்டு இடர்ப்படுமன்ருே!

உலகின்கண் பல்வேறு தொழில்கள் காணப்படுவதுபோல மக்களறிவும் பலதிறப்பட்டிருக்கின்றது. ஒருவனுக்கே எல்லா வகை அறிவும் பொருந்தியிருப்பது அருமையே. எவனெவனுக்கு எவ்வெத்தொழிலில் அறிவு செல்கின்றதோ அவனவன் அவ்வத் தொழிலை மேற்கொள்ளவேண்டும். ஓவியத்தில் அறிவு செல்லும் ஒருவனை இலக்கிய இலக்கணப் பண்டிதனுக்க முயலுதலும், உழவுத்தொழிலில் ஊக்கமுடைய ஒருவனை உத்தியோகத்தில்

வைக்க ஆங்கிலப் பள்ளிக்கு அனுப்புதலும், ஏவுதொழில் செய்யவே சிற்றறிவுடைய ஒருவனை எஜமானனுக்கி வைத்தலும், அவர்கள் அத்தொழில்களில் இடர்ப்பாடுற்றால் அஃது ஊழ் என்பதும், அடாததொன்றே யாகும். உயர் குடியிற் பிறந்த பிள்ளைகள் இழி தொழில்களில் இறங்கிவிடுவதும், மனைத்தக்க மாண்புடைய பெண்ணை ஆய்ந்தாய்ந்து கொள்ளாது அதனைத் தீராத்துயரில் ஆழ்த்துவதும், அளவறிந்து அழித்துண்ணாது கடன்பட்டுக் கலுழ்தலும் முதலாகிய பாழ்படு செயல்களெல்லாம் ஊழ்படுவனவாமென்பது ஆழ்படு அறிவின்மையே யாகும்.

சிவிகைமேற் செல்பவன் பெருவாழ்வும், பேரின்பமும் உடையான் என்பதும், அச்சிவிகையைக் காவுவோன் அற்ப வாழ்க்கையும், ஆழ் துயரு முற்றவனென்பதும் அறிவின் மயக்கே. கூழுக்கு உப்பில்லை என்பானும், பாலுக்குச் சர்க்கரை இல்லை என்பானும் ஒருதன்மையர்களே. குடிசையிலுள்ள குறவனுக்கும், மாளிகையிலுள்ள மகாராஜனுக்கும் உள்ள இன்ப துன்பங்களை அவரவர் நிலையிலிருந்து நடுநிலையிலுள்ளான் ஒருவன் ஆராய்ந்து தூக்கிப் பார்க்கும்போது அவை ஏற்றத்தாழ்வு இன்றியே காணப்படும். நுண்ணிய ஆராய்ச்சியின் பயன் இவ்வாறிருக்க ஊழ், ஊழ் என்று மக்கள் மனந்தடுமாறுவானேன்?

"வெள்ளத் தனைய இடும்பை யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும்"

என்பதைமேற்கொண்டு மக்கள் யாவரும் "நமது ஊழ் முயற்சியே" என்று உறுதி கொண்டு வென்றாலும் தோற்றாலும் மனத் தளர்ச்சியடையாமல் மேலும் மேலும் அறிவை வளர்க்கவேண்டும்.

"வேண்டினும் வேண்டா விடினு முறற்பால
தீண்டா விடுத லரிது"

ஆகையால், ஊழினிடம் நமக்கு ஒரு வேலையும் இல்லை. அதனைக் கனவிலும் நினைக்கவேண்டியது இன்று; ஆனால்,

"நன்னிலைக்கட் டன்னை நிறுப்பானுந் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானு—நிலையினு
மேன்மே லுயர்த்து நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்."

என்பதே நமது கடைப்பிடி.

---

# தமிழ்மொழியின் ஒலிகளும் எழுத்தும்

[ஈப்போ. திரு. தியாகராயன் அவர்கள்]

(11-ம் சிலம்பு உ௬அ-ம் பக்கத் தொடர்ச்சி)

இதில் உடலிற்கும் உயிருக்கு மிருக்கும் புணர்ச்சியை உபமானமாகக் கொண்டதன்றி, தன்னை உடலாகவும், தன் காதலியை உயிராகவும் உபமானித்ததால் அக்காதலியாகிய உயிர் இன்றேல் உடலாகிய தான் இயங்கேன், அதாவது மரித்துப் போவேன், எனவும் கூறப்பட்டது.

மெய்யுடன் உயிரொன்று மியல்பு இவ்வுயிர் மெய்யெழுத்துக் களுக்குமன்றி, மெய்யீற்றுச் சொல்லும் உயிர் முதல் மொழியும் அடுத்தடுத்து வருங்காலும் அம்மெய்யும் உயிரும் சேர்ந்தே வொலிக்கும். உதாரணம்:-அவனும் + இவனும் = அவனுமிவனும். அதாவது நிலைமொழி யீற்றிலிருக்கும் மகர வொற்று வருமொழி யின் முதலிலுள்ள இகர உயிருடன் புணர்ந்து மி என ஒலித்தது. இத்தன்மையை "புள்ளியீற்று முன்னுயிர் தனித்தியலாது மெய் யொடுஞ் சிவணு மவ்வியல் கெடுத்தே" என்னும் சூத்திரம் விளக்கியது. (தொல். புணர்)

மெய்யொடு உயிர்புணர்ந்து உயிர்மெய்யா யியலுந் தன் மையைப் பின்வரும் விதி விளக்கியது.

"புள்ளி விட்டவ்வொடு முன்னுரு வாகியும்
　　ஏனையுயிரொடு ருவுதிரிந்தும்
உயிரளவாயதன் வடிவொழித் திருவயிற்
　　பெயரொடும் ஒற்றுமுன் னாய்வரு முயிர்மெய்"

(பவண. எழு. சூ 34)

(இ. பொ.) ஒரு மெய் அகரத்தோடு முன்னுருவே யாகியும், ஒழிந்த உயிர்களோடு உருவு வேறுபட்டும், சேர்ந்த உயிரினளபா யொலித்தும், உயிரின் வடிவத்தை மறைத்து இரண்டின் பெய ரோடும், உச்சரிக்குங்கால் ஒற்று முன்னதா யொலிக்குந் தன்மை யுடனும் வருவது உயிர்மெய்.

இவ்வாற்றால், ஈரெழுத்துக்களின் ஒலியைக் குறிக்க ஓர் எழுத்தாய் நிலவதும், இந்நிலையினால் ஓரொலியையே உணர்த்து வதும் இவ்வுயிர்மெய்களின் தன்மையும் சிறப்புமாம். எவ்வா றெனின் ஆங்கிலத்தில் k × a என்பதை க எனவும் k × i என் பதை = கி எனவும் ஓரொலியை ஈரெழுத்துக்களா லுணர்த்து வதைத் தவிர்த்தும், l × y என்பதை லி எனவும் லை எனவும்

ஒரே ஈரெழுத்துக்கள் பல ஒலியைத் தராமலும் ஒரெழுத்திற்கு ஓர் ஒலியாய் நிலைவதும் இவ்வுயிர் மெய்களின் பயனும் சிறப்புமாம்.

## English Consonants

[Guide to the English Language p. 26 etc.]

Below is a list of the sounds of modern English with examples of words in which each occurs. It will be noticed that the same sound is very often spelt in a number of different ways and that the same letter sometimes represents a number of different sounds. In order to prevent confusion it is necessary to have a special symbol for each particular sound, and to use it for no other.

| *Sound* | | | | *Words in which it occurs* |
|---|---|---|---|---|
| 1 | P | Labial | [voiceless] | Pass |
| 2 | B | | [voiced] | Bar |
| 3 | T | Dental | [voiceless] | It |
| 4 | D | | [voiced] | Day |
| 5 | K | Guttural | [voiceless] | King |
| 6 | G | | [voiced] | Go |
| 7 | W | Semi vowel | | Win, One |
| 8 | F | Fricatives | | Fan, Enough |
| 9 | V | | | Very, Of |
| 10 | R | Vibrant | | Red |
| 11 | S | Sibilant | | Sit, City, Ice |
| 12 | Z | | | Zebra, Is, Dogs |
| 13 | L | Liquid | | Long, Fill |
| 14 | M | Nasal | | Man |
| 15 | N | | | Now |
| 16 | H | Aspirate | | Horse |

In addition to the above, there are the following Consonants which have special symbols. It will be noticed that the symbols 17 and 18 are taken from old English, where, however, they are used without consistency for both the sounds here distinguished. (தொடரும்)

---

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## சோழர்கள் கல்வெட்டுகளிற் கண்ட சில குறிப்புக்கள்

[இராவ்சாஹிப் திரு. C. M. இராமச்சந்திர செட்டியாரவர்கள்]

(முன் எகூ-ம் பக்கத் தொடர்ச்சி)

அவ்விதச் சுங்கங்களில் சிற்றுயம் என்பது சிறுபொருள் களின்மீது வாங்கப்பட்ட குறைவான தீர்வையாகும். அல்லது அதிகமாக செலாவணியாகாத நுண்மைப் பொருள்களின்மீது விதித்த சிறு தொகை கொண்ட சுங்கமாக இருக்கும். இவ்விதச் சிற்றுயம் எவ்விதப் பொருள்களின்மீது விதிக்கப்பட்டது என்பதையும், எக்காலத்தில் விதிக்கப்பட்டது என்பதையும், நாம் அறிவதற்குப் போதுமான ஆதாரங்கள் கிடைக்கவில்லை.

4. எலவை :—இப்பெயருக்கு என்ன பொருள் என்பது தெரியாதவராய் சாசன பரிசோதகர் எலவை என்றே ஆங்கிலத்திலும் எழுதிவிட்டார். இப்பெயர் ஒரு வகையான தீர்வையாயிருக்கும் என்பதில் ஐயம் இல்லை. ஆனால் அஃது எவ்வகைத் தீர்வை என்பதற்கு ஆதாரம் கிடைக்கவில்லை. பழையகாலத்து அம்மானைப் பாடல்களில் சோழர்களுக்குக் குறுநிலமன்னர்கள் செலுத்தும் வரிகள் குறிக்கப்பட்டுள்ளன. கள்ளழகர் அம்மானை என்ற நூலில் சோழனுக்குப் பொன்னழகர் பாதி காவல் பணமும்* பகுதிப்பணமும் உலுப்பையுடனே செலுத்தச் சென்றார் என்று கண்டிருக்கிறது. இதில் † உலுப்பை என்பது எலவை, உகவை என்ற பதங்களின் திரிபு ஆக இருக்கலாம். இஃது ஒருவகைப் பகுதிப்பணம் அல்லது கடமைப்பாடு ஆக இருக்கலாம்.

---

* இஃது 'பாடி காவற்பணமும்' என்று இருத்தல் வேண்டும் போலும்.

† உலுப்பை என்பது இக்காலத்திலும் பெரும் பொங்கற் புது நாளன்று 'பண்ணையாட்களினல் பண்ணைக்காருக்குச் செலுத்தப்படும் காய் கறி வகைகள் நெய் தேங்காய் முதலியவற்றிற்குப் பெயராக வழங்குகிறது. —கா. சிவ. க.

5. உகவை :—இதற்குஞ் சாசனப் பரிசோதகர் ஆங்கில மொழி எழுதவில்லை. இதனுடைய பொருளும் சரியானபடி விளங்கவில்லை. இதற்கும் மேலே எலவைக்குக் குறித்த விரிவுரையே பொருந்தும்.

6. மன்றுபாடு:—இது மற்றொரு சாசனத்தில் 'மன்றுபாடல்' என்ற சொல்லால் குறிக்கப்பட்டுள்ளது. சாசன பரிசோதகர் இதனையும் இதற்கு அடுத்த தெண்டம், குற்றம் என்பவைகளையும் சேர்த்து 'மூன்று அபராதங்கள்' என்று சொல்லியிருக்கின்றார். ஆனால் இதைப்பற்றி எழுதின K. V. சுப்பிரமணி ஐயர் அவர்கள் தம் பழைய தக்ஷண சரித்திரம் (Historical Sketches of Ancient Deccan) என்னும் நூலில் "மன்றுபாடு," "சபாவிநியோகம்" என்ற இரண்டு பதங்களையும் ஒன்று சேர்த்து அவைகளுக்குக் கிராமச் சபைகளை வைத்து நடத்துவதற்காகக் கொடுக்கும் பங்கு என்று பொருள்படுத்தி யிருக்கிறார்.

மன்று என்றால் பொதுச்சபை என்று பொருள். முன் காலத்தில் கிராமங்களில் ஊருக்குப் பொதுவான மரத்தடியில் கிராமத்தார் சபை கூடி வழக்குகளைத் தீர்ப்பதுண்டு. அவ்விதச் சபைக்கு மன்று அல்லது மன்றம் என்று பெயர். அச் சபைகளில் தலைமை வகிப்பவர்களுக்கு மன்றாடி என்ற பெயருண்டு. இப்பொழுது இதனைப் பட்டப் பெயராகச் சிலர் வைத்துக்கொண்டு இருப்பதை நாம் அறிவோம். கொங்கு நாட்டில் பழையகோட்டை பட்டக்காரரும் புரவிப்பாளையம் ஜமீன்தாரும் மன்றாடியார் என்ற பட்டத்தை வகித்திருப்பதும், சேர நாடாகிய பாலக்காட்டுக்கு அருகில் வடச்சேரி குடும்பத்தினர்கள் மன்றாடியார் (மன்னாடியார்) என்றபெயரை வகித்திருப்பதும் குறிப்பிடத்தக்கது. மன்றம் என்ற பெயரை மன்னம் என்று மலையாளத்தில் இப்போதும் வழங்குகிறார்கள். இவ்விதம் ஊர்ப் பொதுவாக நடந்துவந்த சபைகளுக்கு அச்சபைகளை நடத்துவதற்காக, வழக்குக் கொண்டுவருபவர்களிடம் ஒருவிதக் கட்டணம் வாங்கி வந்தார்கள். இப்போதும் வகுப்புக் கூட்டங்களில் இருதிறத்தினர்களிடமிருந்தும் இவ்விதக் கட்டணம் வாங்குவதுண்டு. இதைத்தான் மன்றுபாடு என்று அக்காலத்தில் வழங்கி இருக்கலாம். இதற்குச் சமமாக இப்போது வழங்குவது Court fees என்ற கட்டணம் என்று சொல்லலாம். (பெரிய புராணத்தில் சுந்தரரை வழக்குக்கு இழுத்த கிழவரைப்

"பழைய மன்றுடி போலும்" என்று சுட்டிக் காட்டியது அறியத்தக்கது ஆகும்.)

7. தெண்டம்:—இதனையும் சாசனப் பரிசோதகர் அபராதம் (fine) என்கிறார். மேலே காட்டிய மன்றம் என்ற ஊர்ச்சபைகளில் எக்கட்சியாராவது தப்புச் செய்தவர்களென்று சபையோர்கள் முடிவுசெய்தால், அவர்கள் ஒரு தொகையைக் குறிப்பிட்டு அதனைக் கட்டிவிடவேண்டுமென்று தீர்மானித்து விடுவார்கள். இவ்வகைத் தெண்டங்கள் இக்காலத்திலுங்கூட வகுப்புச் சபைகளில் சாட்டிவிடுவது வழக்கம்.

8. குற்றம்:—இதனையும் சாசனப் பரிசோதகர் அபராதம் என்ற வகுப்பில் சேர்த்திருக்கின்றார். இதுவும் தெண்டத்தைப் போன்றதொன்றாகும். இப்போதும், வகுப்புக் கூட்டங்களில் வகுப்பொழுக்கத்திற்கு மீறினவர்களை விசாரித்து அவர்கள் குற்றம் செய்தவர்களாய் ஏற்பட்டால் அவர்களிடமிருந்து ஜாதிக் குற்றம் என்ற ஓர் அபராதத்தை விதித்து வாங்குவதுண்டு. இதைப்போலவே முன்காலத்திலும் மற்றச் செய்கைகளிலும் நாட்டில் வழங்கி வந்த விதிகளுக்கு மாறாக நடந்துவந்த ஜனங்களைத் தண்டித்து வாங்கின அபராதத்திற்குக் குற்றம் என்ற பெயர் ஏற்பட்டிருக்கலாம்.

ஆகவே மேற்சொல்லிய எட்டுவகை வருமானங்களும் சோழர்கள் காலத்தில் விதிக்கப்பட்டு வந்தன என்று அறியலாம். நாட்டின் பாதுகாப்புகருதி அவசியமாகச் செய்யவேண்டிய செலவுகளுக்காக அக்காலத்தில் விதித்த வரிகளையும் மற்ற வருவாய்களையும் எட்டு விதமாகப் பிரித்துக் காட்டி யிருப்பது நோக்கத் தக்கதாகும். இவைகளையன்றிக் குலோத்துங்கச் சோழனது மற்றொரு கல்வெட்டில் "இந் நிலத்தால்வந்த இறை, வரி, சிற்றாயம், எறச்சோறு கூற்றரிசி எப்பேர்ப்பட்டனவும்" என்ற பதங்கள் பிரயோகிக்கப் பட்டிருக்கின்றன. இதனால் பூமியிலிருந்து அரசாங்கத்திற்கு வரும் வருமான வகைகளில் இறை, வரி, சிற்றாயம் என்பவைகளோடு எறச்சோறு, கூற்றரிசி என்பவையும் சேர்க்கப் பட்டிருப்பதை அறியலாம். சாசனப் பரிசோதகர் "எறச்சோறு" என்பதற்குப் பொருள் விளங்காமல் விட்டுவிட்டார். "கூற்றரிசி" என்பதை Pounded Rice due from the land என்று பொருள் படுத்துகிறார். அது கூத்தரிசி என்றும் காணப்படுகிறது என்று

சொல்லுகிறார். அது குத்தின அல்லது புடைத்த அரிசியாம். ஒவ்வொரு நிலத்திலும் விளைந்த நெல்லின் ஒரு (கூற்றைப்) பாகத்தைப் பிரித்து அதனைக் குத்தி அரிசியாக்கிக் கொடுப்பது வழக்கம் என்று இதனால் அறிய வேண்டியிருக்கிறது. இது தனி யாக ஒரு வரியாகுமோ அல்லது ஆலயங்களுக்குக் கொடுக்க வேண்டிய ஒரு முறைமையோ தெரியவில்லை. (தொடரும்)

---

## திருச்சி மலைக்கோயில்

### மௌனசுவாமி மடத்து விபரங்கள்

(முன் அகூ-ம் பக்கத் தொடர்ச்சி)

ஷை ௩-வது பட்டத்தில் நாயக்கரவர்கள் அரண்மனையில் பொக்கிஷம் வேலை கம்மாளனால் சிவன் ராத்திரி நாலாம் சாமத்தில் அபிஷேக நைவேத்தியம் நடப்பிவைத்துக் கொண்டு வரும்படிக்கித் திட்டம் செய்து வைத்து ஷை சிலவுக்காக தென்னூரில்...பிள்ளை யார் கோட்டை வாசல் நிலத்தில் தாதன் செய் க—ஆண்டி செய் க—இவ்விரண்டு செய்யும் வீதிவடங்கன் செய் உ இயும் ஆக செய் ச இயிலும் வரப்பட்ட வருமானத்தைக் கொண்டு சிவன் ராத்திரி நாலாம் சாமம் அபிஷேக நைவேத்தியத்துக்காக கம்மாளனால் விடப்பட்டது தென்னூரில் செய் உ. வீதி விடங்கனில் செய் ௨. இ

மூன்றுவது பட்டம் நமசிவாயத் தம்பிரான் சுவாமிகள் மாரிபத்தில் உண்டாகிய ஊதிபங்கள், கள்ளிக்குடி, கீழ் மாரிமங்க லம் திருத்தவத்துறை பட்டவர்த்தி, கொழுக் கட்டகுடி, கொட் டப்பட்டி, நாச்சிக்குரிச்சி, வீர சுர தோட்டம், உய்யக் கொண் டாங் தோட்டம், மருதாண்டக்குரிச்சி பட்டவர்த்தி, திருத்தாங் தோணி பட்டவர்த்தி, வீதிவிடங்கன் பட்டவர்த்தி, இந்த ஊதி பங்களெல்லாம் நமச்சிவாயத் தம்பிரான் நாளையிலுண்டாகிய ஊதி பங்கள்.

ஷை நமச்சிவாயத் தம்பிரான் சுவாமியவர்கள் செய்த திருப் பணிகள், அம்மன் கோவில் முன் பள்ளமா யிருந்ததை உயர்த்தி முழுமையும்...சிலைபோல் வேலை செய்தும், நவராத்திரி மண்டப மும், சித்திரை மண்டபமும் இந்தத் திருப்பணிகளெல்லாம் நம சிவாயத் தம்பிரான் சுவாமி யவர்கள் காலத்தில் நடந்தது.

சித்திரை மண்டபம் வேலைக்கித் துறையூர் ரெட்டியாரவர்களிடம் திருப்பணி செலவுக்குப் பணம் வாங்கி, திருப்பணி வேலை முடித்து ஷ்டி...மலையில் தென்புர மதிளில் ஷ்டி ரெட்டியாரவர்களையும் தளவாயையும் திருவுருச் செய்து வைத்திருக்கிறது. ஷ்டி ரெட்டியாரவர்களை வரவழைத்து ஷ்டி திருப்பணிகளெல்லாம் காண்பிவித்து, இதுகளெல்லாம் தங்களுடைய தருமமென்று சொன்னதின்பேரில் ரெட்டியார் ரெம்ப சந்தோஷப்பட்டு அப்போது பண்ணைவட்டம் பாதி காவலுக்கு நடக்கப்பட்ட நிலங்களில் கள்ளிக்குடியில் நஞ்சை செய் ௰௬ம் அதைச்சேர்ந்த புஞ்சையும் திருத்தவத்துறையில் நஞ்சை செய் ௩வ-ம் விடப்பட்டது.

சாலிவாகன சகாப்த்தம் ௬௬௱என் அக்ஷய ௵ வைகாசி௴ முதல் ௧௬௱௰௩ன் யுவ௵ சித்திரை௴ நாலாவது தில்லை நாயகத் தம்பிரான் பட்டம். இது ஷ்டியார் பட்டத்தில் ஊதிபங்கள் ஒன்றுங் கிடையாது. திருப்பணி முதலானதுங் கிடையாது.

சாலிய வாகன சகாப்த்தம் ௧௬௰௩ன் யுவ௵ சித்திரை௴ முதல் ௧௬௱௩௨என் துன்முகி௵ ஆனி௴ மங்கம்மாள் இராஜரீகத்தில் ௫வது சிதம்பரநாதத் தம்பிரான் சுவாமியவர்கள் பட்டம் ௵ ௨௰௨.

திருமங்கலம் கிராமத்தில் பண்டாரவாடை பங்கு 16ல் பண்டாரவாடை அல் பாக்கி பங்கு அம் பேரைய்யன், ராமய்யன், சாஸ்திரியார் வகையரா பங்கு நாலும் தாயுமான சுவாமிக்குப் பூசை கட்டளைக்கு என்று தத்தம் பண்ணி அதுமுதல் கும்பினி சப்தியாகிற வரையிலும்...பத்தாயிருந்ததினாலே மேல்வாரம் சர்க்காருக்குப் போக குடிவாரத்தில் உளவடை சுவந்திரம் முதலியதும், கொடுத்து, மீதி ஐவேசியைக்கொண்டு சுவாமிக்கு அபிஷேகம் நைவேத்தியம் நடப்பிவைத்துக் கொண்டு வருகையில் கும்பினி சப்தியானதின்பேரில் தாயுமான சுவாமி போரால் பட்டா கோசம் ஏற்பட்டு அதன்பேரில் கோவில்ப் பண்ணையாக வைத்துக் கொண்டு சர்க்கார் கெஸ்தி செலுத்தி வைத்து மற்ற அய்வேசு முழுவதும் மடத்தில் வந்து சேர்ந்து சுவாமிக்குக் கிரமமாய் அபிஷேக நைவேத்தியம் நடப்பி வைத்துக்கொண்டு வந்தார்கள்.

ஷ்டி ௫வது பட்டத்தில் மங்கம்மாளிடத்திலிருந்த கத்திக் கோபால் ராஜா என்பவர் மங்கம்மாளிடத்தில் கேட்டு சர்வமானியமாக பொத்தம்பட்டி கிராமம் வாங்கி தாயுமான சுவாமி

யின் பூசைக்கட்டளைக்காக விடப்பட்டது என்று கிராமத்தில் ஷையார் பேரால் சிலா சாசனமும் போட்டுக் கொடுத்து தம்பிரானிடத்தில் தாம்பிர சாசனம் செய்து கொடுத்து தாயுமான சுவாமிக்குப் பூசை கட்டளைக்குக் கத்தி கோபால் ராஜாவால் விடப்பட்டது பொத்தம்பட்டி கிராமம்.

ஷை மங்கம்மாள் ராஜரீகத்தில் ஷை ரு-வது பட்டம் சிதம்பரநாதத் தம்பிரான் சுவாமி யவர்கள் மாரிபமாய் மேலேத்துவாக்குடி நாட்டார்கள் ஷையார் பேரால் பத்துக்கட்டாயிருந்த கிராமங்களில் தேனேரிப்பட்டிக் கிராமம் க—உழுந்துணி கிராமம் க—பூவாங்குடி கிராமம் க—இந்த கிராமங்கள் மூன்றையும் தாயுமான சுவாமியின் பூசைக் கட்டளை அபிஷேக நைவேத்நியத்துக்காக மங்கம்மாளிடத்தில் கேட்டு வாங்கி மேலத்துவாக்குடி நாட்டாரவர்களால் விடப்பட்டது தேனேறிப்பட்டி, உழுந்துணி பூவாங்குடி.

ஆக ரு-வது பட்டம் சிதம்பரநாதத் தம்பிரானவர்கள் நாளையில் உண்டாகிய ஊதிபங்கள்—திருமங்கலம் பங்கு ௪-ம் பொத்தப்பட்டி கிராமம் க-ம் தேனேறிப்பட்டி கிராமம் க-ம் உழுந்துணி கிராமம் க-ம் ஆகக் கிராமம் ௪.

ஷை பட்டத்தில் கோவில் திருமதில் வடபுறத்தில் வரிகளில் நழுகியிந்தகைப் பற்றி ஷை மதிலுக்கு ஆதாரமாக வடக்கு வீதியில் பூமியிலிருந்து திம்மிகட்டி அந்தத் திம்மியில் தீர்த்ததொட்டி வரைக்கும் வெகு பணங்களை செலவு செய்து அரிதான திருப்பணி செய்தது.

சாலியவாகன சகாப்தம் கசுளஙஎ-ன் துன்முகி ஷு ஆடி மீ முதல் கசுளஎஅ-ன் வெகுதானிய வருஷம் ஆவணி மீ:—

சு-வது அருணாசலத் தம்பிரான் பட்டம் ஷு க. ஷை யார் பட்டத்தில் வருமானங்கள் பூச்சியம் திருப்பணிகள் முதலாகியது ஒன்றும் கிடையாது.

நவாபு சாயபு ராஜரீகத்தில் எ-வது பட்டம் வைத்திலிங்கத் தம்பிரான் சுவாமி யவர்கள் சாலிவாகன சகாப்தம் கசுளஎசு-ன் மேல் செல்லா நின்ற வெகுதானிய ஷு அற்பிசை மீ முதல் களாஉஉ ஷுத்திய துந்திமி ஷு புரட்டாசி மீ ஷு சயசு

(தொடரும்)

# அறிவியற் பகுதி-Science

## ஒளிநூல்—(Astronomy)

[திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்]

(முன் அகூ-ம் பக்கத் தொடர்ச்சி)

டாலமிக்குப்பின் அரேபியர் காலம்வரை அலெக்சான்டிரியாவிற் பிறந்த தீயான் என்பவரைத் தவிர சிறந்த புலவரொருவரும் தோன்றிலர். கி. பி. 395-ல் டாலமியின் பெருநூலுக்குத் தீயான் அழகுபெற விரிவுரை எழுதியிருக்கிறார்.

அரேபியருள் ஒப்புயர்வற்ற வானநூற்புலவர் பலர் இருந்திருக்கின்றனர். ஏனைய துறைகளிலும் ஒளிநூற்றுறையில் அவர்கள் மிகவும் ஈடுபட்டு அருப்பாடு பட்டதே அதற்குக் காரணம். ஆதலின் அவர்களைப் போல ஒளிக்கலைப் புதுமைகள் எண்ணிறந்தன கண்டுபிடித்தோர் மிகச் சிலரே. அவர்களுடைய மன்னரும் அத்துறையில் ஆழ்ந்த அறிவுடையவராக இருந்ததோடு அதனை வளர்ப்பதிலும் மிக முனைந்து நின்றனர். இரவி வீதியின் சரிவைப்பற்றி டாலமி கூறியது சற்று அதிகமாக இருப்பதைக் கண்டு அவர்கள் பலவாறு முயன்று அதனைச் சரியாகக் கண்டு பிடித்தார்கள். அஃது இக்காலப் புலவர்கள் கூறுவதை மிக ஒத்திருக்கிறது.

வெற்றிமாலையன் அல்மான்சர் என்ற அரசர் ஒளிநூற் புலவருள் முதன்மையாக வைத்து எண்ணத் தகுந்தவாறு அவ்வளவு விரிந்த ஆராய்ச்சியுடையவர். அவர் கி. பி. 754-ல் பட்டத்திற்கு வந்தார். அவருடைய பேரனே பெரும் புகழ்பெற்ற ஹாரூன் என்பவர். ஹாரூன் கி. பி. 786 முதல் 809 வரை செங்கோலோச்சினர். அவர் ஒரு நீர்க்கடிகாரத்தைச் செய்து சார்லிமேனுக்கு (Charlemagne)ப் பரிசாக அனுப்பினர். அக்கடிகாரம் அக்காலத்தில் ஐரோப்பா முழுவதையும் வியப்புக் கடலுள் ஆழ்த்தியது. அதன் மேற்பகுதியில் பன்னிரண்டு சிறு கதவுகள் இருந்தன. அவை பன்னிரண்டு மணிகளையும் அறிவுறுத்தின.

ஒவ்வொரு கதவும் தான் குறித்த மணிநேரம் வந்ததும் திடீரெனத் திறக்கும். உடனே உள்ளிருந்து சில சிறு உருண்டைகள் வெளிவந்து பக்கத்திலிருந்த பித்தளை மணிமேல் விழுந்து குறித்த மணியை அடித்தன. திறந்த கதவுகள் பன்னிரண்டுமணி ஆகும் வரை திறந்தே இருக்கும். பன்னிரண்டடித்தவுடன் குதிரைமீதேறிய பன்னிரண்டு சிறு வீரர்கள் தோன்றி அதனைச் சுற்றி வந்து அக்கதவுகளை அடைத்து விடுவார்கள்.

ஹாரௌனுக்குப் பின் அவர் மகன் அல்மைமான் அரசராயினர். அவரும் சோதிநூற்கலையைப் பெரிதும் பேணி வளர்த்தார். அவர் காலத்தில் பேர்பெற்ற கணிகள் பலர் வாழ்ந்துவந்தனர். அவருள் அல்பிராகன் என்பவர் பல கணித நூல்கள் இயற்றி " கணி " என்ற பட்டத்தைப் பெற்றார்.

மிக மேலான அரேபியப் புலவருள் அல்பாடேனி என்பவரும் ஒருவர். அவர் ஆண்டின் அளவை நுணுகிக் கண்டறிந்தார். அவர் அப்போது கண்டறிந்த அளவு அதற்கு அறுநூறு ஆண்டுகளின் பின் டாக்டர் ஹால்லே என்பவர் கண்டறிந்ததினும் இரண்டு விநாடிகளே குறைந்திருக்கிறது.

கி. பி. 1020-ல் அரேபியர் ஸ்பெயின் (Spain) நாட்டினைப் படைகொண்டு சென்று வென்றபோது, அந்நாட்டில் பல ஆராய்ச்சிச்சாலைகளை நிறுவினார்கள். அங்கே ஆராய்ச்சி செய்தவருள் ஒருவராகிய அல்ஹேசன் என்பவர் கண்ணூல் (Optics) ஒன்று எழுதியிருக்கிறார். இந்நாளில் நிலைநாட்டப்பெற்று வழங்கிவருகிற எதிர்ஒளி (refraction), இரவும் பகலும் சந்திக்கும்போதுள்ள சந்தி வெளிச்சம் (twilight) ஆகிய கோட்பாடுகளை அந் நூலில் அவர் விளங்கக் கூறுகிறார்.

பாரசீகருள்ளும் பல பெரும் சோதி நூற்புலவர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்கள் ஆண்டின் அளவை வரையறுப்பதில் அரும்பாடுபட்டு அதனை முந்நூற்றறுபத்தைந்து நாட்களும் ஆறு மணிகளும் என வரையறுத்தார்கள். அவர்களுள் முதன்மையானவர் பெரும் புகழ்பெற்ற தாமர்லேன் (Tamerlane) என்பவருக்குப் பேரனாகிய உலூக்பெக் Ulugh Beg என்ற அரசரே. அவர் அரசராகிய தமக்குரிய கடமையின்படி பலகலைகளையும் வளர்த்துவந்ததோடு தாமும் அவைகளில் விரிந்த அறிவையுடையவராகத் திகழ்ந்தார். அவர் தமது தலைநகரமாகிய சமர்கண்ட்

(Samarcand) என்ற பேரூரின் வடதென் சமகோட்டினை (Latitude)க் கண்டுபிடிப்பதற்காகப் பெரு முயற்சி செய்தார். அவர் விண்மீன்களின் அட்டவணை யொன்று எழுதிவைத்திருப்ப தோடு, அக்காலத்தில் பிழையற்றனவெனத் தீர்மானிக்கப்பெற்ற பல கணித வழிகளின் குறிப்பையும் இயற்றினர். அவர் தமது மகனால் கொல்லப்பட்டார்.

கி. பி. 800 முதல் பதினான்காம் நூற்றாண்டின் முடிவுவரை ஐரோப்பா முழுவதும் அறியாமை யிருளில் மூழ்கிக்கிடந்தது. ஸ்பெயின் நாட்டிற் குடியேறிய அரேபியர்மட்டும் வாளா இருந்தி லர். அலெக்சான்டிரிய நகரத்து அழிந்துபோன நூல்நிலையத் திலிருந்து தாம் கைப்பற்றிவந்த நூல்களைத் துணையாக வைத்துக் கொண்டு பல கலைகளிலும், முக்கியமாக வானநூற்கலையில், அவர் கள் நுட்பமான ஆராய்ச்சிகளைப் புரிந்து வந்தனர்.

கி. பி. 1423-ல் பர்பாகியஸ் (Purbachius) என்ற அறிஞர் தோன்றினர். அவர் நுண்ணறிவிற் சிறந்தவர். அவர் டாலமியின் பெருநூலுக்கு ஒரு சுருக்கம் செய்யத் தொடங்கினர். அது முடிவதற்குள் அவர் இறந்துபோனர். அதனை அவருடைய மாணவராகிய ஜான் முல்லர் என்பவர் எழுதிமுடித்தார். அவர் பல உண்மைகளைக் கண்டுபிடித்ததோடு பண்டைக்கால வானநூற் புலவர் எழுதிய நூல்களையெல்லாம் திரட்டினர். அவர் முன்னர்க் கூட்டியே முப்பதாண்டுகளுக்குப் பஞ்சாங்கம் வெளிப்படுத்தினர்; கோள்களையும் வால் வெள்ளிகளையும் பற்றிய ஆராய்ச்சிக் குறிப்புகள் எழுதினர். அப் புலவர் கி. பி. 1476-ல் இறந்தனர்.

அவருக்குப்பின், கி. பி. 1473-ல் பிறந்தவராகிய நிக்கோலாஸ் கோப்பர்நிக்கஸ் என்பார் பேரும் புகழும்பெற்று முன்னணியில் வந்தார். அவர் நிலைநாட்டிய சோதிக்கலைக் கொள்கைகள் இன் றும் அவர் பெயரால் "கோப்பர்நிக்கஸ் முறை" என்று அழைக்கப் பெறுகின்றன. பிதாகோராஸ் என்பவரால் கண்டு பிடிக்கப்பட்டு டாலமி காலமுதல் மறைந்து கிடந்த பழைய கணிதநூல் முறை களை அவர் எடுத்துரைத்தார். அவர் கூறிய காரணங்கள் மிகப் பொருத்தமா யிருந்தபடியால் டாலமிமுறையின் தவறுகள் உலகி னருக்குத் தெளிவுறுவன வாயின. தாம் புகன்றவற்றுள் இருந்த பிழைகளையும் அவர் நாளடைவில் திருத்திக்கொண்டார். அவர்

இடைவிடாது பண்டைக்கால ஆசிரியரது நூல்களை ஆழ்ந்து கற்பதும் அவைகளிற் கூறியுள்ள உண்மைகளை நேரில் காண முயலுவதுமாகச் செய்த பெருமுயற்சியின் பயனாக அவர் நிறுவிய முறையானது இந்நாளில் உண்மையென உலகினர் கொள்ளும் முறையாக விளங்கி வருகின்றது. அவரது சிறந்த முதன்மையான கணிதநூல் கி. பி. 1543-ல் ஸ்கூனர், ஆசியான்டர் என்ற இருவர் முயற்சியால் அச்சேறியது. அவ்வாண்டில் மே மாதம் 23உ தமது எழுபதாவது வயதில் அவர் இறந்தார்; தாம் இறப்பதற்குச் சில மணிநேரங்களுக்கு முன்னர்தான் அவர் அச்சேறிய அந்நூலின் பிரதி யொன்றைப் பெற்றார். (தொடரும்)

---

## மரநூல் (Botany)

[திரு. பா. வே. மாணிக்கநாயக்கர் அவர்கள்]

(முன் கஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

"புரோட்டீஃட்" (Proteid) என்ற சொல்லுக்குப் பொருள் காண்போம். அது ஒரு பொருளுக் கேற்பட்ட பெயர்ச்சொல்லாயுமின்றி, பொருள் விளக்கவொண்ணா மந்திரச் சொல்லாயு மில்லாதிருப்பதனால் அதனை அப்படியே தமிழில் வழங்கவேண்டுமென்ற நியதியில்லை.

புரோட்டீஃட் என்பது முதல் என்று பொருள்படும் Protos என்ற சொல்லிலிருந்து பெறப்பட்டதாகும். இப்பொருளை யடிப்படையாகக் கொண்டு உணவுப்பொருள்களில் இன்றியமையாது காணப்படும் சத்துப்பொருளுக்கு அதைக் குறியீடாக ஆங்கிலத்தில் வழங்கிவருகின்றார்கள். தமிழில் முதல் என்ற சொல், இன்றியமையாது வேண்டப்படும் முதன்மையான பொருளைக் குறிக்கவே வழங்குவது நூன்மரபாகும்; "வினை முதல்", "கைம் முதல்" "முதல்வோன்" "முதனூல்" என்ற சொற்களை நோக்குக. அவை போன்று உணவுப்பொருள் அல்லது உணாப்பொருள்களுக்கு இன்றியமையாத சத்துப்பொருளா யமைந்துள்ள முதற்பொருள் 'உணாமுதல்" என்ற பெயர் கொண்டு Proteid என்பதற்கு நேர் பொருளாகாதோ? இத் தமிழ்ச் சொல் ஆங்கில முதற்சொல்லை

விடப் பொருட் சிறப்பும் பொருத்தமுங் கொண்டுள தென்பது யாவராலும் ஒப்புக்கொள்ளப்படும்.

*Proteid*                    உணுமுதல்.

Radicle என்பது வேரின் தோற்றுவாயாகும். எனவே வேர்முதல் என்று அதைக் குறிப்பது நேரிதாம்.

*Radicle*                    வேர்முதல்

Plumule என்பது முளையின் தோற்றுவாயாகும். எனவே முளைமுதல் என்று அது குறிக்கப்படும்.

| | |
|---|---|
| *Plumule* | முளைமுதல் |
| *Crop* } Craw } | இரைப்பை, தீனிப்பை, இரைக்கூடு |
| *Gizzard* | அரைப்பை |
| *Root* | வேர் |
| Laternal root | பக்க வேர் |
| Branch root | கிளை வேர் |
| Branching | கிளைக்கும், கவடுபடும் |
| Branching root | கிளைக்கும்வேர், கவடுபடும்வேர் |

System என்னும் சொல் வடமொழியில் சமூகம் என்று நேர்பொருள்படும். அதைத் தமிழில் இயற்கையாயமைந்த தொன்றைக் குறிக்கும்போது அமைவு என்றும் முயற்சியால் அமைக்கப்பட்ட வொன்றைக் குறிக்கும்போது அமைப்பு என்றும் கூறலாம்.

| | |
|---|---|
| System | அமைவு, அமைப்பு. |
| Root system | வேரமைவு. |

Root - hairs என்று ஆங்கிலத்தில் உள்ள சொல் அவ்வளவு சிறந்ததாகத் தோற்றவில்லை. வேருக்கு மயிர் போன்ற சில அமைவு களிருப்பினும் அவற்றை மயிரென்றே குறிக்கவேண்டியதில்லை. தமிழில் Hair என்பதற்கு மயிர், மைர் என்று பொருள் கூறுவர். மசிரு என்று தமிழில் வழங்கும் சொல் வடமொழியில் யாகக் கிரியைகளில் வழங்கும் "ம்ஸ்ரு" என்னும் சொல்லிலிருந்து பெறப் பட்டதாகும். முற்குறித்த மைர், மயிர் என்பது மை, மய் என்ற தாதுவினடியாப் பிறந்ததாம். எனினும் மரநூலில் மயிர் என்ற சொல்லைக் கோடல் வேண்டுமா என்பது கேள்வி.

"பிள்ளை வளர்ப்பான்" (வசம்பு) என்பது ஒரு மருந்துவேருக் குத் தமிழ்ப் பெயர். அது மயிர்கள் போன்ற சிறு அமைவுகளை

நிறையக் கொண்டிருக்கும். குழந்தைகளுக்கு அதனைச் சுட்டு விளக்கெண்ணெயிலோ தேனிலோ கொடுப்பது தமிழர் தம் கைச் சிகிச்சையாகும். அதை வேடிக்கையாக "மயிர் முளைச்சாங் கட்டை" என்று கூறுவதுமுண்டு. 'பிள்ளை வளர்ப்பானை (அல்லது வளர்த்தியை)ச் சிலிம்பு போகத் தேய்த்து' என்று வழக்காற்றிற் கூறுவதுண்டு. அந்த "சிலிம்பு" என்னுஞ் சொல் மயிர் என்ற Hair என்பதையே குறிக்கும். சிலிம்பு, சிலிர், இலிர் என்பன ஒருபொருட் சொற்கள். இஃதன்றி Bryonia Scabra என்ற செடி தமிழில் முசுமுசுக்கை அல்லது மொசுமொசுக்கை என்று பெயர்பெறும். அதற்கு மயிர் போன்ற அமைவுகள் உண்டு.

மயிர் நிறைந்த இந்தியன் மல்பெர்ரி (Indian Mulbery) என்பது தமிழில் முசுக்கட்டை என்று பெயர்பெறும்.

மயிர் நிறைந்த புழுவினத்தைச் சேர்ந்த ஒன்றிற்கு முசுக் கட்டைப் பூச்சி என்று பெயர்.

Iponoca Candiabs என்பது முசுட்டை.

Cassampelos Pareira என்பது பொன் முசுட்டை.

மயிர் அடர்ந்த சிலிர்ந்த எருதின் hump முசுப்பு எனப்படும்.

எனவே முசுவென்பது hair என்னும் சொல்லுக்குப் பொருளாகி இடக்காற்றதாகவு மிருக்கிறது.

தமிழில் செங்குத்தாயுள்ளது சிலிம்பு என்றும் சாய்வாயுள்ளது சிலாம்பு என்றும் குறிக்கப்படுகின்றன.

| | |
|---|---|
| *Hair* | சிலிம்பு, சிலிர், இலிர், சிலாம்பு, முசு |
| Hairy | சிலிம்பிய, சிலிர்த்த, இலிர்த்த, முசுத்த, சிலாம்பிய |
| Glabrous | சிலிம்பா, சிலிரா, இலிரா, முசுக்கா, இலிரில்லா, சிலாம்பில்லா, சிலிரில்லா. |
| Pubescent | முசுமுசுத்த, மொசுமொசுத்த |
| *Root hair* | வேர்ச் சிலிம்பு, வேர் முசுக்கை. |
| Root cap | வேர்க்கொப்பி, வேர்க்கவிப்பு. |
| Aerial Root | விழுது. |
| Tuber | கிழங்கு. |
| Tuberous | கிழங்குள்ள. |
| Tuber formation | கிழங்கு விழுதல். |
| *Tendril* | சுருளை. |

—காழி. சிவ. கண்ணுசாமி

---

## இயற்கைப் பொருணூல்--Natural Science

### உயிரினங்களின் நிற வேறுபாடுகள்

[திருமதி குணமாணிக்கத்தம்மையார் M.A.]

என் நல்வினைப் பயனால் எனது அருமைத் தந்தையார் திருவாளர் பா. வே. மாணிக்க நாய்க்கரவர்கள் எனக்கு உயர்தரக் கல்வியை ஈந்ததன் பயனாக யான் இயற்கையின் வியத்தகு காட்சிகளை ஒருவாறு ஆராய்ந்து இன்புறும் பெரும் பேறு பெற்றேன். 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற திருமூலர் அருண் மொழியை இச் செந்தமிழ்ச் செல்வியின் பதிப்பாளர் எடுத்துக் காட்டி என்னைச் செந்தமிழ்ச் செல்விக்குக் கட்டுரை எழுதுமாறு ஊக்கியதனால் யான் இக் கட்டுரையை வரைய முன் வந்துளேன். இதன்கண் குறை நீக்கிக் குணங் காண்பது அறிஞர் கடன்.

இங்கே யான் ஆராய்ந் தெழுதுவது 'உயிரினங்களின் நிற வேறுபாடுகளும் அவற்றின் காரண காரியமும்' ஆகும்.

நாம் ஒவ்வொருவரும் நுண்ணூலாராய்ச்சியாளரோ அல்லரோ ஆயினும், சிற்சில காலங்களிலாவது இயற்கை யழகில் ஈடுபடுகின்றோம். இயற்கையில் தோன்றும் பல்வகை நிறங்கள் நம் கண்ணையும் கருத்தையுங் கவர்கின்றன. கதிரவன் கீழ்த்திசையில் எழும் போதும் மேற்றிசையில் விழும்போதும் நீனிறவானம் நொடிக் கொருமுறை மாறிமாறி வெவ்வேறு நிறங்களைத் தோற்றுவிக்கக் கண்டு பெருவியப் பெய்துகிறோம்.

வானத்தில் தோன்றும் நிறங்கள் நம் மனத்தைக் கவர்ந்து ஒருவகை உள்ளக் கிளர்ச்சியை உண்டாக்குவதேபோல் பல செடிகளும், மலர்களும், பறவைகளும், விலங்குகளும் தாம் கொண்டுள்ள பல் வேறு நிறங்களினால் நமது கண்களைக் கொள்ளை கொள்ளுவது மல்லாமல் நமக்கு ஓர் உவகையையும் உண்டாக்குகின்றன.

முதல்நாட் காலையில் அரும்பாக இருக்கும்போது கண்களுக்குப் புலப்படாததோர் நிறமுடையனவாக இருந்து, மறு

நாட்காலையில் மலர்ந்தபோது கண்களைக் கவரத்தக்க நிறங்காட்டும் பூக்கள் பல உள. இம்மலர்களைப் போன்று வண்ணாத்திப் பூச்சியும் முதல்நாளில் எவ்வித அசைவுமற்ற கூட்டுப்புழுவாக இருந்து அடுத்தநாளில் திடீரென்று பல்வகை அழகிய நிறங்களுடன் பட்டுப் பூச்சியாக விளங்குகிறது. பட்டுப் பூச்சி, சிறுவர் முதல் பெரியோர்வரை எல்லோர் கருத்தையும் தன் அழகிய நிறங்களால் ஈர்க்கின்றது.

பட்டுப் பூச்சியையும் மலரையும் போலல்லாமல் பலவிலங்குகள் தாம் பிறக்கும்போதோ அல்லது பிறந்து சில நாட்களுக்குள்ளோ சிறிது சிறிதாக நிறம் மாறி ஒரு நிலையை அடைந்து இறக்கும் வரையில் அதே நிலையில் இருக்கின்றன.

எனவே, உயிர்வகைகளிடத்தில் இவ்வாறான நிறவேறுபாடு என் இருத்தல் வேண்டும்? அஃது இவ்வுயிர்களுக்கு எவ்வகையிலாவது பயன் தருகின்றதா? என்னும் வினாக்கள் இயல்பாய் எழுகின்றன. இவ் வினாக்களுக்கு விடையைச் சிந்திப்போமாயின், கண்ணால் நிறங்களைப் பார்த்து ஏது தெரியாமல் அடையும் வியப்பினைவிட நமக்கு உவகையும் வியப்பும் அளவு கடந்து எழும். இதைப்பற்றிச் சிறிது ஆராய்வாம்.

உயிர்வகையின் நிறங்கள், கால வேறுபாடு, இட வேறுபாடு முதலியவற்றை யொட்டிப் பலவகையான மாறுதல்களை அடைவனவாக இருக்கின்றன. மாம்பழம் பிஞ்சாக இருக்கும்போது பச்சையாகவும், பழுத்தபோது மஞ்சளாகவும் அல்லது சிவப்பாகவுமோ இருப்பதேன்? நம் நாட்டுக் கரடிகள் கருமையாகவும், துருவ மண்டிலக் கரடிகள் தூய வெண்மையாகவும் இருப்பதேதனால்?

செடி, மரம், பூச்சி, புழு, பறவை, விலங்கு முதலியவற்றின் நன்மைக்காகவே இயற்கையில் இப்படிப்பட்ட நிற வேறுபாடுகள் இருக்கின்றன.

நிறங்களை அவற்றின் பயன் நோக்கிப் பல பிரிவுகளாகப் பிரிக்கலாம். அஃதாவது, தற்காப்பு நிறம் (Protective coloration), என்றும், குறிப்பு நிறம் (Recognition marks) என்றும், ஒப்புமை நிறம் (Mimicking coloration or Mimicry) என்றும், எச்சரிக்கை நிறம் (Warning coloration) என்றும், போலி நிறம் (Imitative coloration) என்றும், கவர்ச்சி நிறம் (Alluring coloration) என்றும் அவற்றை வகைப்படுத்தலாம். இவற்றில் எச்சரிக்கை நிறம், போலி நிறம், குறிப்பு நிறம் முதலியவை செடிமரங்களைக் காட்டிலும் விலங்குகளிடத்தில் மிகுதியாய் விளங்குகின்றன.

இனித் தற்காப்பு நிறம் என்பதைப் பற்றி ஆராய்வாம். எல்லாச் செடி மரங்களின் பிஞ்சுகளும் காய்களும் பச்சையாக இருப்பது எல்லோருக்கும் தெரிந்ததே. அவைகளின் மலர்களும் பழங்களும் பல் வேறு நிறங்களையுடையனவா யிருக்கின்றன. ஒவ்வொரு மரத்தின் பூவும் பழமும் வேறு வேறு நிறங்களாக இருக்க அவ்வவற்றின் பிஞ்சுகளும் காய்களும் பச்சையாகவே இருப்பானேன்? இஃது அப்பிஞ்சுகளிலுங் காய்களிலுமுள்ள விதைகளின் பாதுகாப்புக்காகவே யாகும்.

பிஞ்சுகளிலும் காய்களிலும் உள்ள பிஞ்சு விதைகள் அவை முதிர முதிர முற்றி, பிறகு வித்துக்களாகின்றன. இவ் வித்துக்கள் நன்றாக முதிராவிட்டால், அவற்றினின்றும் முளைகள் கிளம்பா. ஆகையால் அவை நன்றாக முற்றும்வரையில் ஒருவர் கண்ணுக்கும் படாமல் பாதுகாக்கப்பட வேண்டியது இன்றியமையாத தாகின்றது. இக்காய்கள் இலைகளைப்போலவே பச்சையாக இருந்தால் அவை இருக்குமிடம் தெரிந்துகொள்வது கடினம். பறவை, விலங்கு முதலியவை இக் காய்கள் மரங்களின் இருக்குமிடம் தெரிந்துகொள்ள இயலாததால், அவற்றை அழிக்கமாட்டா. இவ்வாறாகப் பாதுகாப்புக்கு ஏற்பட்டுள்ள நிறங்களே தற்காப்பு நிறம் என்னும் வகுப்பில் அடங்கும்.

வித்துக்கள் சரியாய் முதிர்ந்தபோது, காய்கள் தம் பசுமை நிறத்தைச் சிறுகச் சிறுக இழந்து அந்தந்தப் பழவகைக்கேற்ற நிறத்தை அடைந்து பழங்களாகின்றன. இப்போது அப் பழங்கள் யாவர் கண்களுக்கும் தெளிவாகப் புலப்படுகின்றன. அப் பழங்களின் சுவையை விரும்பி, பறவை விலங்கு முதலியவை அவற்றைத் தின்கின்றன. அவ்வாறே மக்களும் அவற்றைப் பறித்துத் தின்கிறார்கள். பழங்களைத் தின்றுவிட்டு, கொட்டைகளை எறிந்து விடுவதால் அவை வெவ்வேறிடங்களில் விழுந்து, செடி மரங்களாக முளைக்கின்றன. ஆகையால் இந்த நிலையில் இப் பழங்கள் மறைந்திருப்பது தீங்கே ஒழிய நன்மை இல்லை; அவ்வாறு மறைந்திருப்பதால் செடிகள் செழித்துப் பல்கிப் பெருகுதற்கு வேண்டிய பரவுதல் முடியாதாகும். செடி மரங்கள் அசையாது ஓர் இடத்திலேயே இருப்பதால் அவை தாமே தம் விதைகளை வேறிடஞ்செலுத்துதற்கு இயலா. காற்று, நீர், பறவை, விலங்கு முதலியவற்றின் உதவியையே நாடவேண்டும். காற்றாலும் நீராலும் பரவச் செய்யப்படும் விதைகளுக்கு நிறம் வேண்டுமென்பது இல்லை. ஆனால், பறவை விலங்குகளால் பரவச் செய்யப்படும் விதைகள் அவற்றின் கருத்தைத் தம்மிடம் ஈர்த்தல் வேண்டும். இங்ஙனம் ஒட்டிப் பரவும் விதைகள் பல வித்துக்களைக் கொண்டுள்ள பழங்கள் பல நிறங்காட்டி, மணமுங்கொண்டு

இனிமையான சுவையையும் ஏற்று, மனிதன் விலங்கு பறவை முதலியவற்றை அழைக்கின்றன. இப்படியாகத் தம்மிடம் வரும் படி இழுக்கும் நிறத்தைக் கவர்ச்சிநிறம் என்று சொல்லலாம். தன்செயல் நிறைவேற வேறு ஒன்றைத் தன்னிடம் இழுக்க ஏற்பட்டுள்ள நிறம் கவர்ச்சி நிறம். இப்படிக் கவரப்படும் விலங்கோ பறவையோ ஏதாவதொரு எதிர் உதவியை அடைகின்றது.

விலங்குகளிடத்தும் இவ்விரண்டு வகுப்பான நிறங்களைக் காணலாம். ஒட்டகமும் இன்னும் மற்றப் பாலைவன விலங்குகளும் ஏன் பழுப்பு நிறமாக இருக்கின்றன? விலங்குகளையோ அல்லது பறவைகளையோ அவை வசிக்கும் இடத்தைவிட்டுப் பெயர்த்து, உயிர்க்காட்சிச் சாலையில் கூண்டுகளில் வைத்துப் பார்த்தால் அவைகளின் நிறத்தின் பயன் புலப்படாது. ஒட்டகத்தைப் பாலைவனத்தில் பார்ப்போமானல் உடனே அது பழுப்பு நிறமாக இருப்பதற்குக் காரணம் விளங்கிவிடும். ஒட்டகம் பாலைவனத்தில் படுத்திருந்தால் தொலைப் பார்வைக்கு மணற் குன்று போல் தெரியுமே ஒழிய, ஒரு விலங்காகக் காணப்படாது. அஃது இம்மணல் வெளிகளில் மரஞ்செடிகளின்மையால் மறைவாகப் படுத்துறங்குவதற்கில்லை. ஆகையால் அஃது இப் பழுப்புநிறத்தால்தான் தன்னைத்தானே காப்பாற்றிக்கொள்ள இயலும்.

இடைப்பூச்சி (இடையன் பூச்சி) என்னும் பூச்சி மிகவும் விநோதமானது. செடி செத்தைகளின் நடுவிலிருந்தால் அஃது அங்கே இருக்கிறதென்று தெரிந்திருந்தாலும் அதைக் கண்டுபிடிப்பது அரிது. குச்சிபோல் அதன் உடல் கால்கள் எல்லாம் மெல்லியனவாய் அக்குச்சியின் நிறத்தையே உடையனவாய் இருக்கின்றன.

நம் நாட்டில் காலிமா (Kallima) என்னும் ஒரு பட்டுப்பூச்சி உண்டு. அதன் சிறகுகளின் மேற்பக்கத்தில் சிவந்த மஞ்சளும் ஊதாவும் கலந்து இருக்கும்; அவற்றின் அடிப்பாகம் நிறத்திலும் உருவத்திலும் காய்ந்த இலையை ஒத்திருக்கும். அது பறக்கும் போது அவற்றின் மேற்பாகமும், தங்கும்போது அடிப்பாகமும் வெளியில் தெரியும். இப்பூச்சி காய்ந்த கிளைகள் மீது தங்குவது வழக்கம். இலையின் நரம்புகளைப் போலவும், காய்ந்துஅழுகின இலைகளில் இருக்கும் பூசணத்தைப் போலவும்கூட இறகின் அடிப்பாகத்தில் காணப்படும். இவையெல்லாம் தற்காப்புக்காக அமைந்த நிறங்களே. (தொடரும்)


காலிமா

# வரலாற்றுப் பகுதி
## History and Biography.

### திருவாதவூர்

[திரு. J. M. சோமசுந்தரம்பிள்ளை அவர்கள் B.A., B.L.]

(முன் எஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆவணி மூலத்தன்று குதிரைகள் வந்து சேருமென்று அரசனிடத்தில் தெரிவிக்கும்படியாகவும், விலை மதிக்கப் பெறுத ஒரு மாணிக்கத்தை அரசனிடந் தரும்படி யாகவுங் கொடுத்து, குருவானவர் தன் புது அடியாரை விடைகொடுத் தனுப்பினர். மந்திரியார் அரசனையடைந்து, அவனிடம் மாணிக்கத்தையளித்து, குதிரைகள் ஆவணி மூலத்தில் வருமென்று கூறினர். அரசன் மாணிக்கத்தைக் கண்டு வியந்து மந்திரியாரை நம்பி, அவரை முன்னிருந்த பதவியி லமர்த்தினன். (இது 58-வது திருவிளையாடல்.)

16. ஆயினும், பொறுமைகொண்ட மற்ற மந்திரிகளும், பிறரும் திருப்பெருந்துறையில் குதிரைகளில்லை யென்று அரசனிடம் தெரிவிக்க, அதன் உண்மையை ஒற்றர்கள்மூலம் அறிந்த, அரசன் மாணிக்கவாசகரைத் துன்புறுத்துவானுனன். அதற்குள் குதிரைகள் தொலைவில் வரும் ஓசை கேட்டது. அவைகள் வருவதனல் கிளம்பும் தூசிகளும் மேகம்போல ஊருக்கப்பால் தோன்றின. காட்டிலுள்ள நரிகள் பரிகளாகவும், தன் கணங்கள் ஏவற்காரர்களாகவும், தான் குதிரை வியாபாரியாகவும், வேதம் வெள்ளைக் குதிரையாகவும் அமைத்துக் கொண்டு சிவபெருமான் மதுரைக்கு வந்துசேர்ந்தார். அதனை யறிந்து மந்திரியை விடுவித்தான் அரசன், மந்திரியிடங் கொடுத்த பொருள்களைக் காட்டிலும் எட்டு மடங்கு அதிக விலையுள்ளனவாய்க் காணப்பட்டன குதிரைகள். குதிரைத் தலைவன் குதிரையின் குணங் குறிகளைப்பற்றி அரசனிடம் விவரித்துக் கூறினன். பிறகு, அரசன் கயிறுமாறிக் குதிரைகளை வாங்கித் தன் இலாயத்திற்கு அனுப்பிவிட்டான். அரசன் கொடுத்த சன்மானங்களைப்பெற குதிரைத் தலைவன் மறுத்துத் திரும்பினன். (இது 59வது திருவிளையாடல்.)

17. ஆனால், அன்றிரவே குதிரைகளெல்லாம் நரிகளாகமாறி, உண்மைக் குதிரைகளைத் தின்றும், குதிரைச் சேவகர்களைக் கொன்றும் ஊரைப் பாழ்படுத்திக் காட்டுக்கு ஓடிப்போய்விட்டன. இதைக் கண்டு, மந்திரியார் ஏமாற்றினதாக எண்ணி அரசன் மந்திரியைச் சிறையிலிட்டான். தன் அடியாரின் துன்பத்தைப் பொறுதவராகிச் சிவபெருமான் மதுரையை யழிப்பதுபோன்ற பெரிய வெள்ளம் வைகையாற்றில் வரும்படி செய்தார். அவ் வெள்ளம் மாணிக்கவாசகருக்காக அனுப்பப்பட்டதென்று நினைத்து அரசன் மாணிக்கவாசகரைச் சிறையினின்று விடுவித்தான். (இது அறுபதாவது திருவிளையாடல்.)

18. பிறகு ஊரை வெள்ளத்தினின்று பாதுகாக்க அரசன் முயன்றான். ஊரிலுள்ள ஒவ்வொரு ஆணும் பெண்ணும் ஆற்றங்கரையை உயர்த்த மண் வெட்டிக் கொட்ட வேண்டுமென்ற கட்டளை பிறப்பிக்கப்பட்டது. ஆனால் ஒரு திக்கற்ற கிழவி, தானாகவாவது, கூலியாள் வைத்தாவது தனக்கு ஏற்பட்ட வேலையைச் செய்யச் சக்தியற்றவளாயிருந்தாள். பிட்டு சுட்டு விற்பவளாகிய அவள் கடவுளை வேண்டினள். சொக்கநாதர் ஒரு கூலிப்பையனாக வந்து, உதிர்ந்த பிட்டுக்காகக் கூலிபேசி, கரையை உயர்த்த அமர்ந்தார். எல்லாப் பிட்டுகளும் திருவருளினால் உதிர்ந்து போயின. அவற்றை எல்லாம் அடிக்கடி வந்து தின்றுவிட்டு ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் கூலிக்காரப் பையனாய் வந்த பெருமான் தூங்கிவிட்டார். அரசன் கரையைப் பார்த்துக்கொண்டு வரும்பொழுது கூலிக்காரன் தூங்கிக்கொண்டிருப்பதைக் கண்டு, அவனை யெழுப்பி ஒரு பிரம்பால் அடித்தான். அந்த அடி அரசன் மீதும், உயிருள்ள எல்லாப் பொருள்கள்மீதும் பட்டு வருத்தத்தை யுண்டாக்கியது. உடனே கூலிக்காரப் பையன் மறைந்துவிட்டான். வெள்ளமும்



வாதவூரர் சிலை.

அடங்கிவிட்டது. அரசன் மாணிக்கவாசகரின் பெருமையை அறிந்து, அவரடி பணிந்து அவர் திருஉள்ளப்படி இனி நடக்கலா மென்று கூறினன். மாணிக்கவாசகர் கடவுளுக்குத் தொண்டுபுரிய வேண்டு மென்று தெரிவித்து மதுரையைவிட்டுப் புறப்பட்டுப் போனர். (இதுதான் 61-வது திருவிளையாடல்.)

19. பிறகு மாணிக்கவாசகர் திருப்பெருந்துறைக்குச் சென்று கடவுளைக் கண்டு களித்துப் பாடல்கள் பாடினர். பின் பல திருக்கோயில்களையுங் கண்டு பாடல்கள் பாடிக் கடைசியிற் சிதம்பரத்தில் வந்து தங்கினர். அங்கு இலங்கையி லிருந்துவந்த புத்த அரசனும், அவன் ஊமைப் பெண்ணும், மற்ற புத்தர்களும் சமய வாதஞ்செய்ய, மாணிக்கவாசகர் புத்தர்களைத் தோற்கடித்து, ஊமைப் பெண்ணையும் பேச வைத்து, புத்தர்களைச் சைவர்க ளாக்கினர். பிறகு கடவுளே வந்து மாணிக்கவாசகரிடம், திருவர்சகம் முழுவதையும் சொல்லச் செய்து, அதனை எழுதி, நடராஜர் பீடத்தில் வைத்துச் சென்றூர். அப்புத்தகத்தை யெடுத்துத் தில்லை மூவாயிரவர், அதற்குப் பொருள் கூறுமாறு மாணிக்கவாசகரைக் கேட்க மாணிக்கவாசகர் நடராஜரே பொருளென்று காட்டி ஜோதியில் கலந்துகொண்டார். இத்துடன் மாணிக்கவாசகர் வரலாறு முடிந்தது.

20. இனித் திருவாதவூர் சிவன் கோவிலைப்பற்றி விவரிப்பாம். கோவிலுக்குமுன் ஒரு திருக்குள முண்டு. ஒரு சிறிய தேரும் இருக்கிறது. கோவிலின் முதற் கோபுரத்தைத் தாண்டியதும், வலது புறத்தில் இடிந்து போன மண்டபம் ஒன்றிருக்கிறது. அதனுடைய வேலைப்பாடு மிகவும் வியக்கத்தக்கது. அதனுடைய கொடுங்கைகள், அவ்வளவு பெரிதாகவும், அவ்வளவு விசித்திரமாகவும் வேறெங்கும் காணமுடியாது. அஃது ஆறடி நீளமாகவும், மேற் பக்கத்தில் இரண்டு வளைவுகளுடனும், அடிப்புறத்தில் ஆழமாகக் குடைந் தெடுக்கப்பட்டதாகவும், மரத்தில் செய்ததுபோலக் காணும்படியாகவும், மண்டபத்தின் நடுவிலிருந்து கிரணங்கள் பாய்ந்ததுபோலவும் கருங்கல்லிற் செய்யப்பட்டிருக்கின்றது. இடதுபுறத்தில் மற்றொரு திருக்குளம் சிதைவுண்டிருக்கிறது. இரண்டாம் பிரகாரத்திற்குள், நடுவில் "வாதபுரீஸ்வரர்" கோவிலும், இடதுபக்கம் "வேதநாசி" அம்மன் கோவிலும், அதற்குப் பின்னல் 1895-ம் வருடம் புதுப்பிக்கப்பட்ட மாணிக்கவாசகர்

கோவிலும் இருக்கின்றன. இரண்டாம் பிரகாரம் வலது பக்கத்தில் நடராஜர் சன்னிதி இருக்கிறது. நடராஜர் விக்கிரகம் அதிக அழகாக அமைக்கப் பட்டிருக்கிறது.

21. ஆவணி மாதத்தில் இவ்வூரிலிருந்து மாணிக்கவாசகர் மதுரைக்கு எழுந்தருளுகிருர். அப்பொழுது மதுரையில் நரியைப் பரியாக்கிய திருவிளையாடலை, உயிருள்ள நரியைக் கொண்டுவந்து நடத்துகிருர்கள். பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடலையு மப்பொழுதே வைகை யாற்றங்கரையில் நடத்துகிருர்கள். இலட்சக் கணக்கான ஜனங்கள் பல வூர்களிலிருந்து வந்து இத் திருவிழாக்களைக் கண்டு மகிழ்கின்ருர்கள்.

---

## ஐவகைக் காட்சியவர்

இலமென்று வெஃகுதல் செய்யார் [1] புலம் வென்ற
புன்மையில் காட்சி யவர். குறள்-174

பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் [2] மருள்தீர்ந்த
மாசறு காட்சி யவர். குறள்-199

இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார்
[3] கடனறி காட்சி யவர். குலள்-218

இடுக்கட் படினும் இளிவந்த செய்யார்
[4] நடுக்கற்ற காட்சி யவர். குறள்-65

கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
[5] துளக்கற்ற காட்சி யவர். குறள்-699

1. ஐம்புலன்களையும் வென்ற குற்ற மில்லாத அறிவுடையவர்.
இவர் வறுமை காரணமாகப் பிறர்பொருள் கவர்தலை விரும்பார்.
2. மயக்கமில்லாத தூய அறிவினை யுடையவர்.
இவர் மறந்தும் பயனில்லாத சொற்களைச் சொல்லார்.
3. தமது கடமையை யுணரும் இயற்கை யறிவினை யுடையவர்.
இவர் தமக்குச் செல்வஞ் சுருங்கிய காலத்தும் பிறர்க்கு உதவி செய்தற்குத் தளரமாட்டார்.
4. கலங்காத அறிவினை யுடையவர்.
இவர் தாம் இடர்ப்பட்டாலும், அதனைத் தீர்த்தற்கு முன் செய்தார்மாட்டு இழிவான செயல்களைச் செய்யார்.
5. நிலைபெற்ற அறிவினை யுடையவர்.
இவர் அரசனுல் நன்கு மதிக்கப்பட்டோம் என்று நினைத்து அவன் விரும்பாததைச் செய்யமாட்டார்.

வ. சுப்பையாபிள்ளை

# அருஞ்செய்யுட் பொருட்பகுதி

## சீகாளத்தி புராணம்

### பொன் முகரிச் சருக்கம் (அகூ)

[சென்னை. திரு. கோ. இராமலிங்கத்தம்பிரான் அவர்கள்]

கலித்துறை

நிறை யுடைப்பொல முகரிதான் செலவினி னீங்கா
துறுமு வர்ப்பொடு சிலேத்தலே தன்பதி யுடனோ
ரிறை வெறுப்புமின் றொழுகுமா னிலேபெயர் வில்லாச்
செறிகு லத்துதித் தார்க்கது புதுமையோ தெரியின்.

(ப - ரை) நிறையுடை - (நீர்) நிறைதலேயுடைய, பொலம் முகரி - பொன் முகரியாறுனது, செலவினில் நீங்காது - செல்லுதலினின்றும் நீங்காது, உறும் உவர்ப்பொடு - உற்ற உவர்ப்புடனே, சிலேத்து - ஒலித்து, அலே - அலேகின்ற, தன் பதியுடன் - தன் பதியாகிய கடலிடத்தில், ஓர் இறை - ஒரு சிறிதும், வெறுப்பும் இன்று - வெறுப்புமில்லாமல், ஒழுகும் - செல்லாநிற்கும்; நிலே பெயர்வு இல்லா - நிற்றலினின்றும் பெயர்தலில்லாத, செறி குலத்து - நெருங்கியகுலத்து (மலேக்குலத்து) உதித்தார்க்கு - தோன்றினவர்க்கு, தெரியின் ஆராயின், அது புதுமையோ - அங்ஙனஞ் செல்லுதல் புதுமையாகுமோ. (ஆகாதென்றபடி.)

சிலேடையால், நிறையுடைப் பொல முகரி - கற்பினேயுடைய பொன்முகரியாகிய பெண், செலவின் நீங்கா - ஒழுக்கத்தினின்றும் நீங்காது, உறு உவர்ப்பொடு - உற்ற வெறுப்பொடு, சிலேத்து - (தன்னே) அதட்டி, அலே தன் பதியுடன் - அலேக்கின்ற தன் நாயகனுடன், ஓர் இறை - ஒரு கணப் பொழுதும், வெறுப்பும் இன்று ஒழுகும் - வெறுப்பும் இல்லாமல் ஒழுகும். கற்புநிலே பெயராத செறிந்த குலத்திற் பிறந்தார்க்கு ஆராயுமிடத்து அங்ஙனம் ஒழுகுதல் புதுமையோ என்றபடி. இது வேற்றுப்பொருள் வைப்பணி. அலேதன்பதி என்பதில் கடலுக்காங்கால், அலே தன் வினேயாகவும், நதிக்காங்கால் பிறவினே மேற்றும் கொள்க.

---

# சிறுகதைப் பகுதி-Short Stories

## அலைகடலளித்த ஆரணங்கு

[சுவாமிக் கண்ணன் எழுதுவது]

(முன் ௧௮-ம் பக்கத் தொடர்ச்சி)

செந்திநாதன்:—"அறிவு திரும்பியவுடன், தன்னைச் சுற்றி யிருந்த மக்கட் டிரளைப் பார்த்து, அவள் அஞ்சி உடற்குன்றியதைக் கண்டேன். அவளுடன் வந்த ஏனைய பெண்கள் எங்கிருந்தார்கள் என்று கண்டுபிடிப்பதற்கில்லை. எனவே, உடனே அப் பெண்ணைத் தூக்கி என்னுடைய "ஆஸ்டின்" உந்துவண்டி (Motor Car)க்குக் கொண்டுசென்றேன். அவளை எங்கே அழைத்துச் செல்வதென்று தெரியவில்லை. நேரே என் வீட்டிற்கே கொண்டு செல்லலாமென்ற கருத்துடன் உந்துவண்டியை விரைவாகச் செலுத்தினேன். வண்டி சென்ற விரைவினால் நல்ல காற்று முகத்திற் படவே, அம்மங்கை சற்று நேரத்திற்குள் நல்லுணர்வு பெற்றாள் போலும்! "நண்பரே! தாங்கள் இன்று செய்த பேருதவி கருதியே என் நாணத்தைவிட்டு யான் தங்களிடம் முதன்முதலாகப் பேசத் துணிவு கொள்கிறேன். எல்லாம் வல்ல இறைவன் தங்களுக்கு நன்மையே யளிப்பாராக! யான் இருப்பது மயிலாப்பூரைச் சேர்ந்த மந்தைவெளியிலுள்ள காரணேச்சுரர் வீதியின் கீழ்கோடி யாகும். அருள் கூர்ந்து என்னை நேரே என் வீட்டிற்குக் கொண்டு செல்லுங்கள்" என்று இசைத்தாள் அவ்வெழிலாள். என் செவி மாந்திய அந் நல்லிசை யாஞ் சொல்லிசையில் ஈடுபட்டவனாய் யான் மறுமொழி கூறாமல் நேரே குறித்த இடத்திற்கு வண்டியைச் செலுத்தினேன். காரணேச்சுரர் தெரு கீழ்கோடிக்குச் சென்றதும் கூரைவேய்ந்த ஒரு சிறு வீட்டைக் காட்டி "அதுவே என் இல்லம்" என்றாள் மங்கை. வண்டியை நிறுத்தினேன். வாய்மொழி யொன்றுங் கூறாது அந் நங்கை நல்லாள் வண்டியைவிட் டிறங்கி உள்ளே சென்றாள். சற்று மனத் தளர்ச்சி யுற்றவனாய் உள்ளே செல்லலாமா வேண்டாமா என்று நான் சிந்தித்துக்கொண் டிருக்கும்பொழுதே வீட்

டின் வாயிற் கதவு திறக்கப்பட்டு "ஐயா, உள்ளே வாரும்" என்ற ஒரு குரல் கேட்டது. உட்சென்றேன். ஒரு கயிற்றுக் கட்டிலின் மீது எழுபது எழுபத்தைந்து வயதிருக்கும் என்று மதிப்பிடக் கூடிய ஒரு முதியவர் சாய்ந்துகொண்டு உட்கார்ந்திருந்தார். அவரது இடக்கையில், உட்கார்ந்திருந்த அந்நிலையிற்கூட, ஒரு கட்டையான மூங்கிற்றடியைப் பிடித்திருந்தார். நான்கடி நீளமுள்ள அத்தடியின்மீது ஏதோ சில சித்திரங்கள் செதுக்கப்பட்டிருந்தன. திருப்பதிக்குச் சென்று வருவோர் வாங்கி வரும் மூங்கிற்றடிபோல் அது காணப்பட்டது. நான் உட்சென்றதும் என்னை, "உட்கார்" என்றுகூடச் சொல்லாமல் அப்பெரியவர் "நீரில் அமிழ்ந்தி யிறந்திருக்கவேண்டிய என் பேத்தியை நீ காப்பாற்றியதாக அவள் சொன்னாள். ஒருவிதத்தில் அஃது எனக்கு மகிழ்ச்சியையே அளிக்கிறது. ஆயினும் விரைவிற் பருவமடைய விருக்கும் அப் பெண்ணை நீ பலாறியத் தூக்கிவந்து வண்டியில் வைத்து ஓட்டிவந்தது எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. போனது போகட்டும்; நான் பரம ஏழை. உனக்கு ஏற்றவாறு பரிசளிப்பதற்கு என்னிடம் ஒன்றுங் கிடையாது. ஒருயிரைக் காப்பாற்றினோம் என்ற மகிழ்ச்சியே உனக்குப் பரிசாக இருக்கட்டும். நீ என் பேத்திக்கு உதவி செய்ததை இன்றுடன் மறந்துவிடு. அவள் உடல்நலத்தைக் கேட்டறியக் கருதி மறுபடி இப்பக்கம் வருகிற எண்ணத்தை இதோடு விட்டுவிடு. கடவுள் உனக்கு நன்மையே யளிப்பார். சரி! இனி இங்கு நிற்கவேண்டாம், போய் வா" என வெட்டி மொழிந்தார். இப்படியும் உலகில் நன்றி மறப்போர் இருப்பார்களா என்று நினைத்தவண்ணம் உள்ளெழுந்த ஆத்திரத்தை யடக்கிக்கொண்டவனாய்த் துண்ணென வெளிவந்து என் வண்டியிலேறி வீடுவந்து சேர்ந்தேன். ஆயினும் அப்பெண்ணின் நினைவு என்னைவிட்டு நீங்கவில்லை."

வடிவேலன்:—"அந்த நினைவில் உன் எம்.பி. பி.எஸ். தேர்தலை மறந்துவிடாதே."

செந்திநாதன் :—"அத்தேர்தலின் தலையில் இடி விழட்டும். அதிற் றேர்ச்சி யடைந்து நான் பெறவிருக்கும் பயன் என்ன?"

வடி:—"என்ன உளறுகிறாய் !"

செந்தி:—"நானா உளறுகிறேன். மணந்தால் அப்பெண்ணை மணப்பது; இன்றேல் மணமில்லாமலேயே இம்மண்ணைத் துறப்பது; இஃது உறுதி."

* * * * *

“அம்மா ஞானம், உன் எண்ணம் இன்னதென நான் நன்கறிவேன். பரிதி மறைவுநாளன்று பலரறிய உன்னைத் தொட்டுத் தூக்கிய அச்சிறுவனையன்றி மற்றெவனையும் மணக்க உன் கற்பிற் சிறந்த தூய உள்ளம் இசையாது என்பது நானறியாததன்று. ஆயினும் என் செய்வது? முடவன் கொம்புத்தேனுக் காசைப் படுவது போலன்றோ இருக்கிறது உண்மை! அச்சிறுவனைப் பற்றித் தீர உசாவினேன். சென்னை அரசாங்கத் தலைமைப் பொறிவலாளர் (Chief Engineer to the Govt. of Madras) திவான்பகதூர் சங்கரநாராயணய்யரின் மூத்த பிள்ளையாம் அவன். எம். பி, பி. எஸ், என்ற உயர்தர மருத்துவத் தேர்தலுக்குப் படிக்கிறான். வயது இருபத்திரண்டுதான் ஆகிறது. அவன் படிக்கும் மருத்துவக் கல்லூரியில் நடக்கும் காற்பந்து, கோற்பந்து முதலிய விளையாட்டுகளில் அவனே முதன்மைபெற்றுப் பல பரிசுப் பதக்கங்கள் வாங்கியுள்ளானும். நல்லொழுக்கத்திற்கும் நற்குணத் திற்கும் அவன் நிலைக்களன் என்பதை நானே துணிந்து கூறுவேன். என்ன இருந்து மென்? அவன் தந்தை, இருபதினுயிரம் ரூபாய் எவன் கொடுக்கிறானே அவன் பெண்ணைத்தான் . கட்டுவதென்று முடிவு கட்டியுள்ளாராம். நாமிருக்கும் நிலையில் இருபதினுயிரம் ஓட்டாஞ்சில்லிகூடக் கொடுக்கமுடியாது என்பது உனக்குத் தெரியும். பாக்கம் புகைவண்டிச் சேதத்தில் உன் தாய்தந்தைக ளிருவரும் மடிந்தபின் இந்தப் பதினன்கு ஆண்டுகளாக —உன்னை ஒருவயதுக் குழந்தையாக அவர்கள் விட்டுச் சென்றார்கள்— நான் படாதபாடுபட்டு வளர்த்தேன். திங்களுக்கு மறுவிருந்தாலு மிருக்கும்; உனக்கு எத்தகைய மறுவுங் கூற முடியாதென்பதை இம் மந்தைவெளியிலுள்ளார் எல்லோருங் கூறுவார்கள். அவ்வாறு பெண்மக்களுக்கே எடுத்துக்காட்டா யிலகுமாறு உன்னை வளர்த்துப் பொருளாசைப் பேய்பிடித்த ஒருவன் வீட்டில் உன்னைக் கொண்டுய்க்க எனக்கு எள்ளளவும் விருப்பமில்லை. ... ...”

ஞானம் :—“தாதா, என்னை மன்னியுங்கள். அவரை மணந்தால் மணப்பது; இன்றேல் கன்னியாகவே என் காலத்தைக் கழிப்பது என்று உறுதி செய்துவிட்டேன். ஆகையால் என் மணத்தை யொட்டிய கவலையைத் தாங்கள் ஒழித்துவிடுங்கள். இறைவனருள் கூடின் கைகூடாத தொன்று முண்டோ?”

பெரியவர்]:—"உண்மை. அச்சிறுவனும் உன்னையன்றி யொருவரையும் மணப்பதில்லை யென்றும் அதனால் தனக்கு வரவிருக்கும் நூறாயிரரூபாய் பெறும்படியான சொத்தைத் தானிழப்பதாயினும் கவலையுறப் போவதில்லை யென்றும் தன் நண்பன் வடிவேலனிடங் கூறிக்கொண்டிருக்கிறதாகக் கேள்விப்பட்டேன். ஆ! அவன் கூறுவதுமட்டும் உண்மையாயிருந்தால்...அவனும் ஒன்று மிழக்க வேண்டியதில்லை; நானும் எற்ற கணவனுக்கு உன்னை யளித்து விட்டேன் என்ற நினைவுடன் அமைதியாக இறப்பேன்.—"

ஞானம்:—"நீங்கள் அமைதியா யிறப்பது சரி; அவர் எப்படி ஒன்றும் இழக்கவேண்டியதில்லை என்று கூறினீர்கள்?"

பெரியவர்:—"ஒன்றுமில்லை. நான் ஏதோ சொல்மாருட்டமாகக் கூறிவிட்டேன். அதையொரு பொருளாக் கருதிக் கேட்க வேண்டாம்"

* * *

ஒருநாள் மாலை வெளிவந்த "உண்மை யுரைப்போன்" என்ற நாள் தாளில் (Daily) கொட்டை கொட்டையான எழுத்தில் பின்வருமாறு ஓர் அறிக்கை வெளியிடப்பட்டிருந்தது:—

## முக்கிய அறிவிப்பு

"என் மூத்த மகன் ச. செந்திநாதன் (எம். பி. பி. எஸ். தேர்தலுக்குப் படிக்கும் மாணவன்) பரம ஏழையான ஒரு பருவமடைந்த பெண்ணை என் நோக்கத்திற்கும் குல வழக்கத்திற்கும் மாறாக மணக்கப்போவதாக முடிவுகட்டிக் கூறுவதால் எனக்கும் அவனுக்குமுள்ள தொடர்பை இதனால் விலக்கிவிடுகிறேன். நான் என் சொந்த உழைப்பினாற் சேர்த்துள்ள சொத்தில் அவனுக்குச் சேரவேண்டிய நூறாயிர ரூபாய் பெறும்படியான பகுதியும் அவன் அப்பெண்ணை மணக்கவில்லை யென்றோ அல்லது அப்பெண் வீட்டார் என் குடும்ப உயர்நிலைக் கேற்றவாறும் மாப்பிள்ளை மேற்படிப்பு படிப்பதற்காகவும் கொடுக்க வேண்டிய தொகையைக்கொடுக்க இசைந்துள்ளார்களென்றோ கூறினாலொழிய அவனுக்குக் கொடுக்கப்படமுடியாது. இன்றுமுதல் அவனுக்குக் கொடுக்கப்படும் கடன் தொகைகளுக்கு நான் பொறுப்பேற்றுக் கொள்ளமாட்டேன் என்பதைத் திண்ணமா யறியவும்.

இப்படிக்கு,

தி. சங்கரநாராயணய்யர்

(திவான்பகதூர்)

சென்னை யரசாங்கத் தலைமைப் பொறிவலாளர்.

* * *

இரவு ஏழுமணி யிருக்கும். காரணேச்சுரர் கோயில் வீதியி லுள்ள பெரியவர் வீட்டின் கதவு தாழிடாமல் மூடப்பட்டிருந்தது உள்ளே எண்ணெய் விளக்கு எரிந்துகொண் டிருந்தது. கட்டிலின் மீது பெரியவர் கடுமையான காய்ச்சலினுல் அங்குமிங்கும் புரண்டு கொண்டிருந்தார். ஞானம் அவருக்கு ஆறுதல் கூறிக்கொண்டு ஒரு குவளையில் வெந்நீர் கொடுத்துக்கொண்டிருந்தாள்.

அடைத்திருந்த கதவு திறந்தது. முகவாட்டத்தோடு கூடிய ஓர் உருவம் உள்ளே வந்தது. வந்தவன் செந்திநாதனே. அவன் கையில் "உண்மை யுரைப்போன்" என்ற நாள் தாள் இருந்தது. வாய் மொழி யொன்றுங் கூருமல் மெல்ல நடந்துவந்து அத்தாளில் "முக்கிய அறிவிப்பு" என்ற செய்தி யிருந்த ஏட்டைப் பெரியவரின் கையில் அவன் கொடுத்தான். அவன் நினைவு அவனுக்கு இருப்ப தாகவே தோற்றவில்லை. காய்ச்சலால் வருந்திக்கொண்டிருந்த பெரியவர் "அம்மா, அதிலென்ன எழுதியிருக்கின்றது, படி, கேட்கலாம்" என்ருர். ஞானம் இனிமையான குரலில் செய்தி யைத் தெளிவாகப் படித்தாள். அவள் படித்து முடிந்ததும், "அலைகடலளித்த இவ்வாரணங்கிற்காக என் தந்தையை வெறுத் துத் தாயபாகத்தைத் துறந்து ஒட்டாண்டியாய் இங்கு வந்துளேன். என்னை இந்நிலையில் ஏற்றுக்கொள்ள மறுத்தால் நேரே அவ்வலை கடலுக்கே சென்று என்னுருயிரை விடுவேன். முக்கண்ணன்மீது ஆணை" என்று தழுதழுத்த குரலிற் கூறினுன் செந்திநாதன்.

"ஆ" என்ற ஓர் ஓசை பெரியவர் வாயிலிருந்து புறப்பட் டது. உடனே பெரியவர் கட்டைபோற் சாய்ந்துவிட்டார். மங்கை நல்லாள் மதிகலங்கி விம்மி யழலானுள். பெரியவர் நெஞ் சடைப்புண்டிருக்கிருர் என்பது கண்ட செந்திநாதன் சட்டென எழுந்து குவளையிலிருந்த நீரை அவர் முகத்திற் றெளித்தான் பின் கதவைச் சற்றுத் திறந்துவைத்துக் கட்டிலை அதனருகே இழுத்துப்போட நினைத்து அதை வலிவாக இழுத்தான். கட்டிற் காலுக்கும் சுவருக்கு மிடையே குறுக்காக மாட்டிக்கொண்டிருந்த பெரியவரின் மூங்கிற்றடி "மளார்" என முறிந்தது. திடுக்கிட்டுப் போய்ச் செந்திநாதன் முறிந்த அக்கழியை வெளியே யெடுத்தான். முறிந்த துண்டொன்றினுள் கற்றையாக ஒரு தாட்சுருள் இருந்தது. அதை வெளியிலெடுத்துப் பார்த்தான். ஆயிரம் ரூபாய் நோட்டுகளாக நூறு நோட்டுகள் இருந்தன. அதே

சமயத்தில் "செந்தினைத்; அதுவே என் பேத்திக்கு நான் கொடுக்கும் "ஸ்ரீதனப்" உன் தந்தை கொடுக்கவேண்டிய நூறுயிரரூபாய்க்குப் பதிலாக இதை யெடுத்துக்கொள். இத்துடன் விலைமதிக்கவொண்ணாத இம்மங்கை நல்லாளையுங் கைக்கொள். வேறெந்நோக்கமுமின்றி இவளையே மணக்கும் விருப்பமுடைய ஒருவற்குக் கொடுக்கவென்றே இப்பொருளைச் சேர்த்துவைத்திருந்தேன். அப்பொருள் இருந்ததனால்தான் நான் எந்நேரமும் அம் மூங்கிற்றடியைக் கைவிடுவதில்லை. பதினான்கு ஆண்டுகளாய் என் கையை விட்டகலாதிருந்த இம்மூங்கில் இன்று முறிந்தது 'சேரவேண்டிய இடத்திற்குப் பொருள் சென்று சேர்ந்துவிட்டபடியால் என் கவலை யொழிந்தது' என்பதைக் குறிக்கவேபோலும்," என்று திருத்தமாய் மொழிந்தார் பெரியவர். காரிகை யெய்திய பெரும்பேறு கண்டு அவர் காய்ச்சல் மாய்ந்தொழிந்தது போலும்! திறந்த கதவின் வழியாக நிறைமதி தண்கதிர் வீசி வெள்ளொளி பரப்பி நின்றது தெரிந்தது. ஞானத்தின் முகவொளிதானோ அஃது என்று வியப்புற்றான் செந்தினைதன்.

முற்றிற்று.

## குறிப்பு:

### தென்னிந்திய தமிழ்ச்சங்கம், திருநெல்வேலி

#### தனித் தமிழ்த்தேர்வுகள் தேர்ச்சிக் குறிப்பு

இற்றைக்குப் பத்தாண்டுகட்கு முன்னர் ஏற்பட்டுள்ள இச் சங்கம், 1926-முதல் ஆண்டுதோறும் தனித் தமிழ்த் தேர்வுகளைப் பல முக்கிய தலைநகர்களிலும் நடத்தி, முதல் வகுப்பில் முதன்மையாகத் தேர்ந்தவர்க்குப் பதக்கப் பரிசும் இரண்டாம் மூன்றும் வகுப்புகளிற் றேர்ச்சியுற்றவர்கட்குத் தேர்ச்சி இதழ்களும் சங்கத் தலைவர், நம் மாகாண மாஜி வளர்ச்சி நெறி அமைச்சர். திருவாளர். சர். தி. நெ. சிவஞானம்பிள்ளை பி. ஏ. அவர்கள் கையெழுத்துடனும் சங்க முத்திரையுடனும் கொடுத்துள்ளது.

இதுவரை, இச்சங்கத் தேர்வுகள் மூன்றுக்கும் விண்ணப்பித்தவர்கள் 135-பேர் இவர்களில் தேர்ச்சியுற்றவர்கள் கலாசாலைகளில் தமிழாசிரியர்களாக வேலைபார்த்து வருகின்றார்கள்.

நாளது 1933 ஜூலைமீ 26, 27, 28-க்குச் சரியான எ௱ய ஆடித்திங்கள் ௰க, ௰உ, ௰ங, புதன், வியாழன், வெள்ளிக்கிழமைகளில் நடந்த தமிழ்த் தேர்வுக்கு விண்ணப்பித்தவர் நால்வர். எழுதியவருந் தேர்ந்தவரும் இருவர். விபரம் அடியிற் கண்டபடி.

## தமிழ்த் தேர்வு மூன்றும் வகுப்பு

1. பதிவெண், 97. P. நடேசமுதலியார், உபாத்தியாயர், 26 புஜன்னராவ் வீதி, வாலாஜாபேட்டை, வடஆற்காடு ஜில்லா.
2. ,, 95. மா. கா. முத்துசாமிதேசிகர், மானுபரநல்லூர், வீரவநல்லூர். S. I. R. திருநெல்வேலி ஜில்லா.

இச்சங்கத்தின் தேர்வுகட்குரிய பாடங்கள் 1935 ஜுன் முதல் மாறுதலடையும். மாற்றப்பட்ட பாட அட்டவணை அடுத்த இதழில் வெளியிடப்பெறும். தமிழகத்தில் தமிழறிஞர்களைப் பலராக்க முயலும் இச்சங்கத் தேர்வுகட்கு வினுத்தாள் குறித்தும், விடைத்தாள் திருத்தியும், தேர்வுகளை ஆங்காங்கு மேற்பார்த்து நடத்தியும் உதவிபுரிந்த தமிழ் மெய்யன்பர்கட்குச் சங்கத்தின் நன்றி பெரிதும் உரித்தாகின்றது. விண்ணப்பதார்களும் பலராகப் பெருகித் தேர்ச்சிபெற்றுச் சிறப்பாராக.

அன்புள்ள

திருநெல்வேலி
31-10-1933

பு. சி. புன்னைவனநாதன்
அமைச்சர்
தென்னிந்திய தமிழ்ச் சங்கம்.

## பிரிவாற்றுமை

பிரமஞான சங்கத் தலைவர் டாக்டர் அனிபெசண்டு அம்மையார் அவர்கள் 1933-ம் ஆண்டு செப்டம்பர் திங்கள் 20-ம் நாள் மாலை நாலு மணிக்கு இந்தப் பூதஉடல்நீத்து என்றும் அழியாப் புகழுடம்பு எய்தினுர்கள். அவர்களது நீண்டகால விழுமிய உலக வாழ்க்கை, உலகிலுள்ள பல நாட்டு நன்மக்களுக்கு, கடவுட்பற்று மெய்அறிவு மெய்அன்பு, உண்மை, பொறுமை, அமைதி எவர்க்கும் உதவியே புரியும் செயல் முதலிய நற்பண்புகளுக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக இருந்து அவர்களை எல்லாம் அந் நற்பண்புகளை உறுதியாய்க் கடைப்பிடித்து, ஒழுகச்செய்த பெருமை வாய்ந்தது. அவர்கள் தங்கள் நீண்டகால நல்வாழ்க்கை முழுவதும் எண்ணிறந்த சொற்பொழிவுகள் வாயிலாகவும் எண்ணரிய புத்தகங்கள் வாயிலாகவும் பல பத்திரிகைகள் வாயிலாகவும் வேறு பல வழியாலும் பயன் கருதாது இடைவிடாது செய்துவந்த மக்கட் பேருதவிச் செயல்களுக்குப் பொதுவாக இந்த உலகம் முழுவதும், சிறப்பாக நமது தாய் நாடாகிய இந்தியாவும் என்றும் மறவாது நன்றி செலுத்தக் கடப்பாடு உடையவைகள். அவர்களது நற்புகழ் இனி வருங்காலத்திலும் அழியாது நின்று நிலவி உலகை நல்வழிப் படுத்தி உய்யச் செய்வதாக.

23—10—1933          மா. வே. நே.

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது

| | | |
|---|---|---|
| சிலம்பு கஉ | மெய்கண்டான் யாண்டு-எகக கார்த்திகைத் திங்கள் 1933ஹு நவம்பர்மீ—டிசம்பர்மீ | பரல் ச |

## திருவாசகம்

உற்ற வாக்கையி லுறுபொரு ணறுமல ரெழுதரு நாற்றம்போற்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொரு ளப்பொருள் பாராதே
பெற்ற வாபெற்ற பயனது நுகர்ந்திடும் பித்தர்சொற் றெளியாமே
அத்த ஞண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே.

பதவுரை:—

நறுமலர் எழுதரு நாற்றம்போல்—மணம் பொருந்திய பூவின்கண் உண்டாகிற மணம்போல

உற்ற ஆக்கையில் உறுபொருள்—நான் முற்பிறப்புக்களிற் செய்த வினையின் பயனுக எனக்குக் கிடைத்திருக்கிற இந்த உடலில் உள்ளும் புறமும் நிறைந்திருக்கிற பொருளாயும்

பற்றல் ஆவதோர் நிலையிலாப் பரம்பொருள்—அவ்வாறு உடலில் நிறைந்திருப்பினும் அந்த உடலை அதுவதுவாய் நின்று பற்ருமல் அதனை விட்டு நீங்கி வேருயிருக்கின்ற மேலான பொருளாயும் சிவனிருக்கின்ருன் (என்று நான் அருள்நூல் அறிவினுல் அறிந்திருக்கிறேன்.)

அப்பொருள் பாராது (உம்)—அப்பேர்ப்பட்ட சிறப்புப் பொருளாயுள்ள சிவனை (என்னுடைய உடலின்கண் உள்ளத்தில் வைத்து) ஆராய்ந்து அறியாமலும்

பெற்றவா பெற்ற பயனது நுகர்ந்திடும் பித்தர்சொல் தெளியாமே (உம்)—சிவஞானப் பித்தர்கள் தாங்கள் சரியை கிரியை யோகம் ஞானம் என்கிற நான்கு வழிபாட்டு வழிகளில் எந்த வழியில் சிவனை வழிபட்டு அவ் வழிபாட்டு உறைப்பினுல் தங்களுடைய உள்ளத்தி

லுணர்ந்து சிவனுடைய இன்பத்தை நுகருகின்றூர்களோ அந்த வழியில் தாங்கள் நுகருகின்ற இன்பத்தைப்பற்றி எனக்குச் சொல்லி நான் கேட்ட அறிவுரைகளை(ச் சிந்தித்து)த் தெளியாமலும்

அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாம்—(அசட்டையாயிருந்த என்னை) எனது ஆருயிர்த் தந்தையாகிய சிவபெருமான் அடியார் கூட்டத்தோடு மானிட குரு வடிவில் திருப்பெருந்துறைக்கு வந்து எனக்கு ஞான தீக்கை செய்து என்னை அடிமையாக ஆண்டு பேரின்பம் அருளிய புதுமையைக் கண்டாம் [சிவபெருமான் என்மேல் வைத்த பேரிரக்கம்தான் என்னே!]

விளக்கவுரை:—

நறுமலர் எழுதரு நாற்றம்போல்—நறுமலர்—நாற்றம் ஏழாம் வேற்றுமைத் தொகை. நறுமலரின்கண் நாற்றம். எழுதரு—எழும் உண்டாகும். நறுமலர் எழுதரு நாற்றம் என்ற உவமையால் நாற்றமானது அம்மலர் அரும்பா யிருக்கும்பொழுது தனது நாற்றத்தை அகத்தே முற்றிலும் அடக்கி வைத்திருத்தலும், விரியாது குவிந்திருக்கும் மொட்டாயிருக்கும்பொழுது தன்னை மூக்கில் வைத்து மோந்து பார்க்கிறவர்களுக்குத் தனது நாற்றத்தைச் சுருங்கிய அளவில் காட்டுதலும், விரிந்திருக்கும்பொழுது தனது நாற்றத்தை விரிந்த அளவில் நன்கு விளங்கக் காட்டுதலும் செய்தல்போல எல்லா மாந்தருடைய உடலிலும் உடலின்கண்ணுள்ள உயிரிலும் எப்பொழுதும் பிரியாது நிறைந்திருக்கும் இறைவன் அவர்களுடைய அறியாமைக்காலத்தில் முற்றிலும் மறைந்தும், அவர்கள் அருள் நூல்களைக் கற்றுக் கேட்டு நுணுகி ஆராயுங்காலத்தில் தனது உண்மையையும் பொது இயலையும் அவர்கள் கருவி அறிவில் விளக்கியும் சரியை, கிரியை, யோக, வழிகளில் தவம்செய்து அதனுல் அருள் அறிவு கிடைக்கப் பெறுகிறவர்களுக்குத் தனது சிறப்பு இயலை அவர்கள் அருள் அறிவில் விளங்கச் செய்தும் அருள் செய்கின்றுன் என்பது கூறப்பட்டது. "பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்" என்றும் "கந்த மலரிற் கமழ்கின்ற நந்தியை" என்றும் திருமூலர் திருமந்திரம் 1459,1460-ம் பாட்டுகளிற் கூறியருளினமை காண்க. இங்கே மலர் உடலுக்கும் நாற்றம் இறைவனுக்கும் உவமப் பொருள்களாயின.

உற்ற ஆக்கையின் உறுபொருள் பாராது—"உடம்பினலாய பயனுவதெல்லாம், நிடம்பட வீசனைத்தேடு" என்று ஔவையாரும், "உடம்பினுள்ளே யுறுபொருள் கண்டேன்" (திருமந்திரம் பாட்டு 725) என்று திருமூலரும் கூறி யருளினமை காண்க. அடிகள்தாம் உடலை அது

வதுவாய் அழுந்தி அறிந்து உடலையே தாம் என்று அறிந்ததுமல்லா மல் அவ்வுடலைவிட்டு உடலின்கண்ணுள்ள உயிரினுள் விளங்குவ தாகிய சிவத்தை நாடித் தேடிக் காணவில்லை என்பார் 'உற்ற ஆக்கை யின் உறுபொருள் பாராது' என்றார்.

பற்றலாவது ஓர் நிலையிலாப் பரம்பொருள்—சிவபெருமான் உலகிலுள்ள எல்லாப் பொருள்களிலும் நிறைந்திருப்பினும் அவற்றினடங்காமல் அவற்றின் வேறாயும் விளங்குவார் என்பார் 'பற்றலாவதோர் நிலை யிலாப் பரம் பொருள்' என்றார். சிவன் யாதொரு பொருளையும் பற்றாது நிற்கின்ற தன்மையை உடையவன் என்பதைப் பண்டைத் தமிழ் நூல்கள் 'கந்தழி' என்ற பெயராற் கூறுகின்றன. பற்றலா வது ஓர்நிலை—பற்றுதலால் உண்டாவதொருநிலை—உடலைப்பற்றி அதுவதுவாய் அதனுடன் அடங்கி நில்லாத மேலான பொருளாத லின் அதனைப் 'பரம்பொருள்' என்று கூறினர். 'உண்மையுமாய் இன்மையுமாய்' என்றும் 'உன்னை அன்றி ஒன்றில்லை' 'ஒன்றும் நீ யல்லை' என்றும் அடிகள் பிற இடங்களிற் கூறிய கருத்தும் இதுவே. சிவபெருமான் நறுமலரெழுதரு நாற்றம்போல் உற்ற வாக்கையி னுறு பொருளாயும் பற்றலாவதோர் நிலையில்லாப் பரம்பொருளாயு மிருக் கின்றான் என்று இலக்கண முடிபு செய்க. சிவபெருமான் தோன்றா எழுவாய். உறுபொருள் பரம்பொருள் இரண்டும் பயனிலைகள்.

அப்பொருள்—அப்பேர்ப்பட்ட சிறப்புடைய பொருள்.

பாராதே (உம்) பார்த்தல்—நுணுகிப் பார்த்தல், ஆராய்தல்; அறிவு நூல் களில் நான் கற்றறிந்ததை ஆராய்ந்து அறியாமலும். அறிவு நூல் களிலுள்ள பொருள்களை நுணுகி ஆராயாதவர்களுக்குச் சிவனுடைய பொது இயல் விளங்காது என்பது கருத்து. அடிகள் "ஓராதாருள்ளத் தொளிக்கு மொளியானை" என்று சிவபுராண அகவலிற் கூறியரு ளினர். ஏ-அசை. தொக்குநிற்கிற உம் விரித்துப் பொருள் உரைக் கப்பட்டது.

பெற்றவா பெற்றபயன்—பெற்றவாறு என்பது பெற்றவா என ஈற்றுயிர் மெய் கெட்டது. ஆறு—வழி. ஞானத்திற் சரியை, ஞானத்திற் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம் என்னும் வழி கள். பெற்ற பயன் என்பது ஞானச்சரியை முதலிய நான்கு வழி களிலும் பிராணாயாமம், அஞ்செழுத்தோதல், சிவோகம்பாவனை முதலிய பயிற்சி உறைப்பினால் உள்ளத்திலே தோன்றுவதோர் அரு ளொளியாற் பெறப்படும் இன்ப உணர்ச்சி.

பித்தர்சொல் தெளியாமே (உம்)—பித்தர்—ஞானப் பித்தர்; அதாவது, உலகப் பற்றுக்களைவிட்டுச் சிவனை அடைதலிலேயே நாட்ட முடை யவர்களாய் அவனிடத்திற் பற்றுவைத்திருக்கிற ஞானிகள். இந்த

ஞானிகள் தங்கள் சுவாநுபூதி நிலையில் உணர்ந்த அறிவுரைகளை எனக்குச் சொன்னபொழுது அவ்வுரைகளைக் கேட்ட நாம் அவைகளின் உண்மையைச் சிந்தித்துத் தெளியவில்லை என்று கூறுவார் 'பித்தர்சொல் தெளியாமே' என்றார். தெளியாமே என்பதிலுள்ள 'மே' எதிர்மறை யிடத்துவரும் எதிர்கால வினையெச்ச விகுதி. உம் விகாரத்தாற் றொக்கது. 'பாராதே' என்பதனால் கற்றல் அறிவினால் சிவனுடைய பொது இயலை அறியும் ஆராய்ச்சி அறிவும், 'தெளியாமே' என்பதனால் அறிந்தார்பாற் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் களால் சிவனுடைய சிறப்பு இயலை அறியும் மெய்யறிவும் கூறப்பட்டன. "கற்றல் கேட்ட லுடையார் பெரியார் கழற்கையாற் றொழுதேத்த" என்று திருஞானசம்பந்த அடிகள் 'தோடுடைய செவியன்' என்ற பாட்டில் கூறியிருத்தல் காண்க.

ஆண்டு—ஆண்டு என்ற சொல்லுக்குமுன் 'அசட்டையாயிருந்த என்னை' என்ற சொற்கள் அவாய் நிலையால் தொக்கு நிற்கின்றன. அவற்றை வருவித்துப் பொருள் உரைக்கப்பட்டது.

அடியரிற் கூட்டிய—சிவபெருமான் தீக்கை செய்து அடிமையாக ஆண்டு கொள்ளப் பெற்றவர்கள் அவனால் அடியார் கூட்டத்திற் சேர்க்கப் படுதலால் ஆண்டு 'அடியரிற் கூட்டிய' என்றார்.

அதிசயம் கண்டாம்—அதிசயம் - புதுமை. முன் காணாதிருந்த ஒன்றைக் காணும் புதுமை. சிவபெருமானால் ஆண்டு அருளப் பெற்றலின் அடிகளுக்கு உண்டான பேரின்ப உணர்ச்சியானது முன் இல்லாதிருந்து இப்பொழுது புதுமையா யிருத்தலால் 'அதிசயம்' என்றார். அடிகளுக்குத் தமது உள்ளத்திலுண்டான பேரின்ப உணர்ச்சியானது தாம் சேர்க்கப்பட்ட அடியார் கூட்டத்துடன் சேர்ந்து உணரப்படுதலால் 'கண்டாம்' என்று பன்மையிற் கூறினார். ஏ-ஈற்றசை. உடம்புவழியில் ஆன்மா சிவனைக் காணலாம் என்பது

"உடம்பெனு மனையகத்து ளுள்ளமே தகழியாக
மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
இடம்படு ஞானத்தீயா லெரிகொள விருந்துநோக்கிற்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே"

என்று திருநாவுக்கரசு அடிகள் தனித்திரு நேரிசை 4-வது பாட்டிற் கூறியிருத்தல் காண்க.

ஆன்மாவானவன் அசத்தாகிய உலகத்தைச் சாராது சத்தாகிய சிவத்தைச் சார்ந்து பக்குவமடைந்த பொழுது ஞானதீக்கையால் மும்மலங்களும் நீங்கப்பெற்று ஆன்மபோதம் தோன்றாதபடி பேரொளிச் சிவசொருபத்திலடங்கிச் சிவமே தானாய் நிற்றல் முத்தி என்பது இந்தப் பாட்டிற் கூறப்பட்டது.

மா. வே. நெல்லையப்பபிள்ளை.

---

# சமயமும் தத்துவமும் :
## Religion & Philosophy

### மும்மையாலுலகாண்ட மூர்த்தி

(முன் ககஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

(வித்வான் T. P. மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள் M.A., B.L.)

கண்ணாடிக் காட்சி:—இப் புனைந்துரைக் கூத்தினுள் பொதிந்து விளங்குவது யாது? இதனை யறிவதற்குமுன் சேக்கிழார் பாடிய வரலாறு தான் யாது என அறியவேண்டாமா? இதனை உமாபதி சிவனார் ஒரு பாட்டிலே சுருக்கிப் பாடியுள்ளார்.

வழங்குபுகழ் மதுரைநகர் மூர்த்தி யாராம்
வணிகர்திரு வாலவாய் மன்னர் சாத்தத்
தழங்குதிர முழங்கைதரத் தேய்த்த வூறும்
தவிர்ந்தமணர் வஞ்சனையுந் தவிர மன்னன்
இழந்தவுயி ரினனாக ஞால நல்க
எழில் வேணி முடியாக விலங்குவேட
முழங்கு புகழணியாக விரைநீ றாக
மும்மையுல காண்ட ருளின் முன்னினாரே.

மூர்த்தியார் மதுரையில் வாழ்ந்த ஒரு செட்டியார். இறைவனுக்குச் சந்தனத் திருத்தொண்டு செய்து வந்தார். அவ்வூர் அரசனோ அமணன்; ஆதலின் இவருடைய திருத்தொண்டிற்கு முட்டுப்பாடு நேரச்செய்தான். அப்போது மூர்த்தியார் தமது முழங்கையையே தேய்க்கத் தொடங்கினார். கடவுளாலும் காணக் கூடவில்லை. தேய்த்த வூறும் தீர்ந்தது: அரசனும் இறந்தான். இவரே அரசரானார். திருநீற்றினைச் சாந்தாகவும், திருமுடியை அரசனுடைய மணிமுடியாகவும், திருமணியைத் திருக்கோலமாகவும் கொண்டு மூன்றுலகையும் ஆண்டார். அருளொடு ஒன்றாகினார். இவ்வளவே இவ் வரலாறு. பெரிய பொருளைச் சிறிய கண்ணாடிக்குள் காண்பதுபோல 49 பாடல்களில் வரும் வரலாற்றை உமாபதி சிவனாரது ஒரு பாட்டில் நாம் காண்கின்றோம்.

மூன்று அடையாளங்கள்:—இவ் வரலாற்றின் நுட்பம் என்ன? அதனையே ஆளுடைய நம்பிகள் 'மும்மையால் உலகாண்ட மூர்த்தி' என்று விளக்குகின்றார். ஈதே மூர்த்திநாயனாருடைய உலகிலே அவர் கண்ட அம்பலக் காட்சி. மூன்றுவன யாவை? திருநீறு திருமுடி திருமணி என்பவையேயாம் எனச் சேக்கிழார் விரிவுரை செய்கின்றார்.

நுதலின்கண் விழித்தவர் வாய்மை நுணங்குநூலின்
பதமெங்கு நிறைந்து விளங்கப் பவங்கண்மாற
வுதவுந்திரு நீறுயர் கண்டிகை கொண்ட வேணி
முதன்மும்மையி னாலுல காண்டனர் மூர்த்தி யார்தாம்.

எனப் பாடுதல் காண்க. இம் மூன்றும் மூன்று பெருண்மைகளைக் குறிக்கும் அடையாளங்களேயாம். தூய்மையைச் சுட்டுவதே திருநீறு. இறைவனின் அருட் கண்ணின் அன்புத் துளியாம் திருமணியே இன்ப அன்பினைச் சுட்டுவது. பற்றற்ற நீத்தார் பெருமையைச் சுட்டுவதே திருமுடி.

மாசிலாத மணிதிகழ் மேனிமேற்
பூசுநீறுபோ லுள்ளும் புனிதர்கள்

என்றும்,

ஆரங் கண்டிகை யாடையுங் கந்தையே
பார மீசன் பணியல தொன்றிலார்
ஈர வன்பினர் யாதுங் குறைவிலார்
வீர மென்னால் விளம்புந் தகையதோ

என்றும் திருநீற்றின் உண்மையையும் திருமணியின் நுட்பத்தையும் சேக்கிழார் பெருமான் விளக்கி யருளுதல் காண்க.

கேடு மாக்கமுங் கெட்ட திருவினர்
ஓடுஞ் செம்பொனு மொக்கவே நோக்குவார்
கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினர்.

என்ற பாடல் அடியார்களிடத்தும் நீத்தார் பெருமை கொழுந்துவிட்டெரிகிற தென்பதை விளக்குகின்றது. நீத்தார் பெருமைக்கோர் அறிகுறியாகும் திருமுடியின் பெருமையே இங்குக் கூறப்பட்டதெனலாம். அகமும் புறமும் தூயவராய் எல்லா உயிர்களிடத்தும் அன்புடையவராய் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராய் உலகை யாண்டுவந்தார் மூர்த்தி நாயனார் என்ற நற்செய்தியே

ஆளுடைய நம்பிகள் நம்மவர்களுக்குத் தெரிவிப்பது. அறவோர் அரசரான வரலாறே மூர்த்திநாயனார் வரலாறு. இதனை மூர்த்தி நாயனாரின் வாயில் வைத்தே அழகுபடப் புனைந்துரைக்கின்றார் சேக்கிழார்.

"வையம் முறைசெய் குவனாகில் வயங்கு நீறே
செய்யு மபிடே கமுமாக செழுங்க லன்கள்
ஐயன் னடையா ளமுமாக வணிந்து தாங்கு
மொய்புன் சடைமா முடியேமுடி யாவ தென்றார்"

எனவருதல் காண்க. திருநீறு முதலியவற்றின் உட்பொருளைக் கருதாது விடின் இப்புனைந்துரையின் நுட்பத்தை அறியாதவர்களாவோம்.

"வேண்டுமாறு விருப்புறும் வேடத்தர்
தாண்டவப் பெருமான் றனித்தொண்டர்கள்"

என்று சேக்கிழாரே பாடுவதால் இக்கோலந்தான் இன்றியமையாததெனக் கூறுவதற்கில்லை. ஒரு கோட்பாடு பற்றி மூர்த்தியார் இவ்வடையாளங்களை மேற்கொண்டார் ஆதலின் அவை எவற்றின் அடையாளமென ஆராய்ந்து அவ்வழகிலும் அவ்வுண்மையிலும் ஈடுபடுதல் வேண்டும்.

ப்ளேடோவின் கனா:—ப்ளேடோ என்ற யவன நாட்டறிஞர் "மெய்யுணர்வு கைவந்த அறவோனே அரசனாய் உலகை யாள வேண்டும்; அப்போதே நாடு சிறந்தநிலையில் விளங்கும்" எனக் கனாக் காண்கிறார். அரசன் தன்னுடைய நாட்டினர்க்குக் கையும் கண்ணும் உடலும் உயிருமாய் விளங்குதல் வேண்டும். "இவன் வேறு இவனுடைய நாடுவேறு" என்ற எண்ணம் இவனுள்ளத்தோ பிறருள்ளத்தோ எழவே கூடாது. இத்தகைய உயரிய நிலையை எங்குக் காணுதல் கூடும்? எல்லோரையும் அரசராக்கினால் காணலாம் எனக் குடியரசினை நாட்ட முன் வருகின்றனர் இந்தக் காலத்தார். பொன்னுக்கும் கள்ளுக்கும் தம் பிறப்புரிமையை விற்பார் தம்முடைய நன்மையை எவ்வாறு அறியக்கூடும் என்று கேட்பார் சிலர். எல்லாம் அறிந்த பெரியோன் தன்னலமற்று அரசனானால் இம் முட்டுப்பாடு ஒன்றும் இல்லையாம். அறவோனே அரசனானபோது உலகம் உயர் நிலையை அடையக்கூடும் என்றார் ப்ளேடோ என்ற பெரியோர். பொய்த்துறவு பூண்டொழுகுவோர் அற்றம்பார்த்து அரசானால், கூடா வொழுக்கத்தால்

பழியே பெருகும். உண்மைத் துறவு நிலையிலே உயர்ந்து நின்றவர்கள், உலக நன்மையைக் கருதி உலகை ஒருகுடைக் கீழ் ஆள முன் வருவார்களானுல் உலகமே நன்மையடையும். மற்றைய அரசர்கள் தாம் என்ற முனைப்புக் கெட வாழ்தல் அருமையினும் அருமை. தம் மக்கள் தம்மனைவியர் தாம் என்ற எண்ணங்கள் வரும்போது மற்றைய அரசர்கள், தம்மையும் தம் நாட்டினரையும் வேறு பிரித்தே எண்ணுவர். இவ்வாறு எண்ணுதிருக்கக் கூடிய அரசன் அவ்வாறு ஒற்றுமைக் காட்சியிற் பழகிய அகத் துறவியேயாகும். அதுபற்றியே ப்ளேடோ அனைத்துயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகி அவாவற்று மெய்யுணர்வு பெற்ற அந்தணர் என்னும் அறவோரே அரசராய் வருதல் வேண்டும் என வற்புறுத்துகின்ருர்.

நெருப்பாறும் மயிர்ப்பாலமும்:—ஜநகர் என்ற அரசர்பெருமானை அறியாதார் இல்லை. அவர் வரலாறு ஒன்று இருக்கவும் மூர்த்திநாயனர் புராணத்தால் ஆவது என்ன? ஆவதோர் நுட்பம் உண்டு. ஜநகர் அரசர் குடியிலே பிறந்து அரசராய் வாழ்ந்து வருகையிலேயே ஐயுணர்வும் மெய்யுணர்வும் பெற்றவரே யன்றித் துறவியாய் மெய்யுணர்வுபெற்று அதன் பின்னர் ப்ளேடோ கண்ட கனவிற்கிணங்க அரசரானவர் அல்லர். அரசசெல்வத்திலேயே திளைத்திருந்தும் நெருப்பாறும் மயிர்ப்பாலமுமாக நன்னெறியில் நடந்து சென்று பற்றற்று நின்ற பெருந்தகையார் ஆவர் அவர். ஆதலின் அவர் வரலாறு ஒருபோக்கு என்க.

குருதிக்கடலில் அன்புக்கதிரவன்:—அசோகர் என்ற அரசர் பெருமானும் கலிங்கப்போரில் பல உயிர்கள் அழிந்தது கண்டு மனநைந்து உயிர்க்கொலையை முற்றும் வெறுத்து அன்புக் கொள்கையை உலகனைத்தும் பரப்ப முன்வந்தார். இவராளுகையின்கீழ் இந்நாடு என்றும் இல்லாத சீருஞ் சிறப்போடு பேரும்புகழும் பெற்றது. ப்ளேடோவின் கனு பெரிதும் உண்மையாகிவிட்டதெனலாம். ஆனுல் ப்ளேடோவினுடைய கொள்கைகள் அனைத்தையும் அசோகரிடம் காணமுடியாது. அசோகர் மெய்யுணர்வு பெற்ற அறவோரோ என்பது ஐயத்திற்கிடமே. ஆதலின் அவர் வரலாறும் வேருெரு போக்கேயாம்.

(தொடரும்)

---

# இலக்கணமும் இலக்கியமும் :
## Language & Literature

### * தமிழகம்

உலகே லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

1. மாட்சிமை தங்கிய அமைச்சரவர்களே! செந்தமிழ்ச் சீரியர்களே! பெரியோர்களே! மற்றுமுள்ள அன்பர்களே!

2. இப்பெரும் நன்னாளில் தமிழகம் என்னும் அரிய பொருள் பற்றி இச்சிறியேனை விரிவுரை நிகழ்த்துமாறு கட்டளை யிட்டமைக்குப் பெரிதும் கடப்பாடுடையேன்.

3. தமிழகத்தின் தொன்மையைப் பற்றி அறிஞர்கள் ஆராய்ச்சி செய்துகொண்டு வருகின்றனர். யான் இவ்வாராய்ச்சியில் இறங்குமுன்னர் பெரியோர்களுக்கோர் வேண்டுகோள். எடுத்துக்கொண்டுள்ள பொருள் பல்லூழி காலங்கட்கு முற்பட்ட செய்தியைக் குறித்தது. இதில் இஞ்ஞான்று காட்டப்படும் முடிபுகள்தாம் முடிந்த உண்மைகள் என்று நிலைநாட்டப் போந்தேனல்லேன். ஆராய்ச்சியாளரின் நுண்ணறிவிற்குத் தக்கவாறு, புதுச்சான்றுகள் தோன்றத் தோன்ற இவை மாறுதலடையக் கூடியவைகளே. இதுபோழ்து பல துறைகளில் கிடைக்கக் கூடிய ஆதாரங்களை ஆராய்ந்து பின்வருமாறு யூகிக்க இடமேற் படுகிறது.

---

* கோவைத் தமிழ்ச்சங்கம் 38-வது ஆண்டு நிறைவு விழாவில் சென்னை அரசாங்கக் கல்வி மந்திரி திவான்பஹதூர். S. குமாரசாமி ரெட்டியாரவர்கள் தலைமையில் கோவை முனிசிபல் ஊமைப் பிள்ளைகள் பள்ளிக்கூட ஆசிரியர் S. நடராஜன்.B.A. நிகழ்த்திய சொற்பெருக்கு.

### நூற் சான்றுகள்

4. வானநூல் (Astronomy) நிலநூல் (Geology) மொழி நூல் (Literature) தொல்லுயிர் நூல் (Anthropology) ஆய நுண்ணூல் (சாஸ்திரங்)களிலிருந்து பல சான்றுகள் கிடைக்கின்றன. இவைகளைச் சீர்தூக்கி நாம் தமிழ்நாட்டின் தொன்மையைப் பற்றி ஒரு முடிவுக்கு வருதல் கூடும்.

### ஞாலம் ஓர் கோள்

5. தொலைநோக்காடி (Telescope) கொண்டு நாம் விண்ணைத் துருவி நோக்குங்கால் எண்ணில் பல ஞாயிறுகளும் அவற்றைச் சுற்றும் உலகங்களும் (Planets) புலனாகின்றன. ஞாயிற்றையும் அதைச் சுற்றும் உலகங்களையும் ஓர் அண்டமெனலாம். இதை ஆங்கிலத்தில் (Solar system) என்பர். நாம் வசிக்கும் இம் மண்ணுலகமானது செவ்வாய், புதன், வியாழம், வெள்ளி, சனி, யுரானஸ், நெப்டியூன் முதலிய ஞாயிற்றைச் சுற்றும் மற்றக் கோள்கள்போன்ற (Planets) * ஒன்றாகும்.†

### ஞாலத்தின் தோற்றம்

6. இஞ்ஞாலமானது, சுழலும் ஞாயிற்றினின்றும் சிதறி வீழ்ந்த ஓர் திவலையாம். எவ்வாறு எரிகின்ற விளக்கினின்றும் உதிர்கின்ற பொறி சிறிது போழ்து எரிந்துகொண்டிருந்து, பின்னர்க் குளிர்ந்துவிடுகிறதோ அதேபோன்று ஞாயிற்றினின்றும் சிதறிவந்த பொறியாகிய இம்மண்ணுலகமும் ஆதியில் எரிந்து கொண்டிருந்து இதுபோழ்து குளிர்ந்து வருகிறது. இஞ்

---

*Planets:—Mercury, Mars, Venus, Earth, Jupiter, Saturn, Uranus, Neptune.

†"எல்லை மருவா நெறி அளிக்கும், வாதவூரெங்கோன், திருவாசகம் என்னும் தேனில்",

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன ;
இன்னுழை கதிரின் துன்அணுப் புரையச்
சிறியவாகப் பெரியோன் ;

என அருளினமை இத்துடன் கருதற்பாலது.

ஞான்றும், கோள வடிவமான இவ்வுலகின் மேற்பரப்பிலிருந்து சுமார் 30 கல் (Mile) உட்சென்ருல் அப்பாகம் எரிந்து கொண்டிருப்பதைக் காணலாமெனவும் சுமார் 100 கல் ஆழத்தி அகன்ற நெருப்பு மாக்கடல்கள் இருக்கின்றன எனவும் நில நூலார் கூறுகின்றனர்.

## படைப்பு

7. படைப்பைப்பற்றி பல்வேறு சமயத்தினர் பல்வேறு வகையாகக் கூறுவர். நிலநூல், தொல்லுயிர்நூல்வல்லார் பஞ்ச பூதத்தின் செயல் என்பர். நந்தமிழர் *"வான், முதலாவதாகவும், பின் காற்றும், அதற்குப் பின் தீயும், அதற்குப்பின் நீரும், இறுதியாக நிலனும் உண்டாயின" என்பர். பரிபாடல் 2-ம் பாட்டினுள்,

"விசும்பிலூழி யூழூழ் செல்லக்
கருவளர் வானத் திசையிற் ரேன்றி
உருவறி வாரா வொன்ற னூழியும்
முந்துவளி கிளர்ந்த வூழூ ழூழியும்
செந்தீச் சுடரிய வூழியும் பனியொடு
தண்பெய றலைஇய வூழியு மவையிற்
றுண்முறை வெள்ள மூழ்கி யார்தருபு
மீண்டும் பீடுயர் பீண்டிய வற்றிற்கு
முள்ளீ டாகிய இருநிலத் தூழியும்"

என்றமை காண்க. "நாம் வசிக்கும் இம்மண்ணுலகம், ஆதியில் அக்னி ஜ்வாலா ரூபமாக சிருஷ்டிக்கப்பட்டும்; பிறகு ஐம்பது லக்ஷ வருஷங்களான பிறகு கேவல ஜல ரூபமாக மாற்றப்பட்டும் பிறகு முப்பத்தைந்து லக்ஷ வருஷங்களான பிறகு இப்போ திருக்கும் படியான பிரகிருதி (மண்) ரூபமாக மாற்றப்பட்டும் வந்ததென்று பூததத்துவ சாஸ்திரம் முறையிடுகிறது"† இவ்வாறு நெருப்பாய், நீராய், நிலமாய், மாறிக் குளிர்ந்துவந்த உலகின் மேற்பரப்பு மக்களினந் தோன்றுதற்குமுன் சுட்டு ஆறின கத்தரிக்காயின் மேற்றேல்போல், மேடும் பள்ளமுமாய் அமைந்ததென்றும், அவ்வாறு அமைந்ததில் முக்கால்பாகம் நீர்ப்பரப்பு, கால் பாகம் நிலப்பரப்பு என்பர் நிலநூலார்.

---

* திரு. கா. சுப்பிரமணியபிள்ளை அவர்களது தமிழ் இலக்கிய வரலாறு

† Hindu Holy Bible.

## நிலத்தோற்றம்

8. இவ்வுலகானது, ஆதியில் அழற் பிழம்பாக இருந்தகாலை, ஓர்வகை அனல் வாழ் உயிர்கள் படைக்கப்பட்டும்; அவைகள் மடிந்தபிறகு, அவற்றின் உயிர்க்காற்று, நச்சுக்காற்றுகளால், நீர்வடிவாக மாற்றப்பட்டும்; இவ்வாறு நீர்வடிவாக மாற்றப் பட்டதில் பல கோடிக்கணக்கான நீர்வாழ் உயிர்கள் படைக்கப் பட்டும், பின்னர், நீர்வாழ் உயிர்களின் தோல், நரம்பு, நிணம் குடல், எலும்புக்கூடு முதலியவைகள், படிப்படியாகப் படிந்து, இறுகி, நிலப்பரப்பு உண்டாயிற்றென்றும்; நிலநூலார் கருது கின்றனர். இதற்குச் சான்று இஞ் ஞாலம் நீர்வடிவான காலத்து உண்டான நீர்வாழ் உயிர்களின் உடற் கூடுகளாய கிளிஞ்சில்கள், பலகறைகள், சங்குகள், நத்தை ஓடுகள், பவளத்தண்டுகள், மீன் சப்பட்டைகள் முதலானவைகள் நிலத்தின் அடியில் இருப்பதை நிலநூல் அளவைக்காரர்கள் (Geological Surveyors) ஆங் காங்கு நிலத்தை அகழ்ந்து நோக்குங்கால் காண்பதேயாம்.

## மக்கள் தோற்றம்

9. இவ்வாறு, மாறி, குளிர்ந்து, இறுகி வந்த ஞாலத்தின் மேல் பரப்பில் நடுக்கோட்டுப் பகுதியே (Equatorial regions) முதலில் குளிர்ந்து நிலப்பரப்பாகக் கூடியது என்பது நிலநூலார் துணிபு. இதனுல் மற்றப் பகுதிகளில் மக்களினம் பின்னர்த் தோன்றக் கூடாதென்பதன்று. ஞாயிற்றின் ஒளியும், வெப்பமும் சாலவும் பெற்று, உயிர்கள் தோன்றிப் பல்குவதற்கு ஏற்ற நடுக்கோட்டுப் பகுதியில், மக்கள் முதலில் தோன்றி இருந்தால், மற்றப் பகுதிக ளில் அவ்வசதிகள் வாய்க்கையில் மக்கள் பின்னர்த் தோன்றி யிருக் கலாமென்பது தவறுகாது. ஆதலால், மத்திய ஆசியாவிலோ, அல் லது கடல்கொண்ட குமரிக் கண்டத்திலோதான் மக்கள் தோன் றிப் பின் மற்றைய பாகங்களுக்குச் சென்று இருக்க வேண்டும் என்பார் கூற்று பொருத்தமுடையதன்றும். உடற்கூற்றுவல்லார் (Ethnologists) கூறும் மூவகை மக்கள் இனமாகிய காகேசியர், மங்கோலியர், நீக்ரோவர் என்பார் மூவரும் மூவேறு இடங்களில் தோன்றியிருத்தல் வேண்டும்.

(தொடரும்)

---

# வெண்ணெய் அண்ணல்

[பண்டிதர். திரு. மா. இராசமாணிக்கம் அவர்கள்]

பேறலருங் குணங்கள் தம்முட் செய்ந்நன்றியறிதலும் ஒன்றென ஆன்றோர் கூறியுள்ளனர். செய்ந்நன்றி யறிதலிற் றலைசிறந்தவர் கன்னனும் கும்பகர்ணனுமே யாவரென்பது ஆன்றோர் கருத்தாகும். ஆனால், இராமகாதையைத் தமிழிற் பாடியருளிய உம்பரும் போற்றும் கம்பர் பெருமானும் மேற்கூறப் பெற்ற கன்னன் கும்பகர்ணன் இருவரோடு வைத்துக் கூறத் தக்கவ ராவர்.

சடையப்ப வள்ளல் என்பார் வெண்ணெய்நல்லூரில் வாழ்ந்துவந்த தாளாண்மையிற் சிறந்த வேளாண் மரபினர். அப் பெருந்தகை, எந்நாட்டு வறிஞராயினும் தம்மை நாடிவரும் அவர்கட்கு ஈதலில் தவறார். அப்பெரியாரே நம் புலவர் பெருமானாய கம்பரைச் சிறுபருவமுதற்கொண்டே பேரன்புடன் பாதுகாத்தவர்; கம்பரைச் சோழ வேந்தனிடம் அறிமுகப்படுத்தி, அவரது அளப்பரும் புலமையைத் தமிழ் நாட்டில் நிலவச் செய்தவரும் அவரேயாவர். வள்ளலே கம்பர் இராமாயணம் பாடி முடித்தற்கும் பெருங் காரணரா யிருந்தனர் எனின், அவர் கம்பர்பால் வைத்த அன்பின் திறத்தினை யாதென் றறைவது!

அண்ணல் தமக்குச் செய்த நன்றியை மறவாதுளங்கொண்ட கம்பர், ஒருவராலும் பெறுதற்கரிய பேற்றைத் தாம் செய்யும் பிரதி நன்றியாக அண்ணலுக் களித்துளார்; உலகம் உள்ளளவும் கம்பர் பெயரும் அவர் பாடியருளிய இராமகாதையும் நிலைநிற்பதே போல வள்ளல் அறச்செயலும் அருங்குணமும் இராமகாதையில் ஒளிருமாறு செய்துள்ளார். அண்ணல் செய்த உதவியைவிடப் பன்னூறுயிரம் மடங்கு பெரிதெனக் கருதுமாறு கம்பர் தம் பிரதி நன்றியை அண்ணலுக்கு எவ்வாறு அளித்துளர் என்பதை ஈண்டுக் காண்க.

கம்பராமாயணம் வேள்விப்படலத்தில், கோசிகன் இராமனுக்குப் படைக்கலம் அளித்தமை இன்னபடி யிருந்ததெனக் கூறுகின்ற கம்பர், 'ஊழி பெயரினும் தாம் சொன்ன சொற்களைச் சோரவிடாத பெருமை வேளாளர்க்குரியது; எம் அண்ணல் சடையப்பருக்கும் அஃதே' என உவமை முகத்தால் விளக்குகின்றார்.

'விண்ணவர் போய பின்றை விரிந்தபூ
மழையி னாலே
தண்ணெனுங் கான நீங்கித் தாங்கருந்
தவத்தின் மிக்கோன்
மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தெனச்
சடையன் வெண்ணெய்
அண்ணல்தன் சொல்லே யன்ன படைக்கல
மருளி னானே'

—வேள்விப் படலம்

'மண்ணுலகத்தாரது வறுமை என்னும் நோய்க்கு மருந்து போன்ற வெண்ணெய் அண்ணலது சொல்லுக்கு நிகரான அத்திரங்களைக் கோசிகன் சிராமனுக் களித்தான்,' என்று கூறிக் கம்பர் மகிழ்கின்றார். சடையப்பர் வழங்கும் சொற்கள் வாய்மையுடையன; அவை சிறிதுங் கெடாமல் கருதிய பயனைத் தருவன; அவை போன்றே கோசிகன் அளித்த படைக்கலங்கள் எய்குறி தவறாது வெற்றியைத் தருவன; இத்தகைய வள்ளல் சொற்களுக்கு நிகரான அத்திரங்களை முனிவன் கோசலக்குரிசிலுக்கு நல்கினான்—என்னும் கூற்றில் கம்பர், 'சடையப்பரது சொல் வாய்மை தவறாதது' என்பதை வலியுறுத்துதல் காண்க.

அடுத்தபடியாக, 'அண்ணல் வறுமைப் பிணியைப் போக்குந் திறத்தால் உண்டான புகழ் உலகெங்கணும் பரவியதாம். அங்ஙனமே வெண்ணிலா உலகெலாம் பரவியது' எனக் கம்பர், வெண்ணிலா, தன் விரிகதிர்களை விரித்த மாண்பினுக்கு வள்ளல் புகழை உவமையாகக் கூறுதல் எத்துணைப் பொருத்தமுடைத்து! ஏற்ற விடங்களில் வள்ளல் பெருமையை யமைத்துப் பாடும் பேராற்றல் பெற்றவர் கம்பரல்லரோ? தம்மைக் காத்த வேந்தரைப் புகழேந்தியாரும் வில்லிபுத்தூரரும் தாம் பாடிய நூல்களிற் பாடியுள்ளாரேனும், உயர்வுநவிற்சியணி தோன்ற வைத்தே பாடியுள்ளனர். கம்பரோ அங்ஙனமின்றி, வள்ளலது ஏற்றத்தை யுள்ளவாறே உரிய விடங்களிற் பாடி யுள்ளார். வள்ளலைச் சிறப்பிக்க இயலாத வொன்றைப் புதிதாய்ப் புகுத்தக் கம்பர் விழைந்தாரில்லை; விழைய இடமுமில்லை, பூணுக்குப் பூண் ஏற்றுக்கு?

'வண்ண மாலை கைபரப்பி
உலகை வளைந்த இருளெல்லாம்
உண்ண எண்ணித் தண்மதியத்
துதயத் தெழுந்த நிலாக்கற்றை

விண்ணு மண்ணுந் திசையனைத்தும்
விழுங்கிக் கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்றன்
புகழ்போ லெங்கும் பரந்துளவால்'

—உண்டாட்டுப்படலம்

'விண்ணையும் மண்ணையும் எல்லாத் திசைகளையும் தன்னுள் அடக்கிக்கொண்ட விரிந்த நன்னீரையுடைய பண்ணைகள் வாய்ந்த வெண்ணெய்நல்லூரில் வாழும் சடையன்றன் புகழ்போலத் தண்மதியின் கிரணங்கள் எங்கும் பரவின' எனக் கம்பர் கூறும் உவமையும் பொருளும் எண்ணி யெண்ணிக் களிக்கத் தக்கவை யல்லவோ? இதனுல், வள்ளலது புகழின் விரிவு அங்கைக் கனியெனத் தெள்ளிதில் விளங்குகின்றமை காண்க. 'நிலாத் தோன்றுவதற்கு முன்னர் எங்கும் இருள் சூழ்ந்திருந்தது,— அதுபோல வள்ளலுக்கு முன்னர் வறுமைநோய் உலகெங்கணும் பரவி யிருந்தது; நிலாத் தோன்றிய பின்னர் இருள் இருந்தவிடம் தெரியாவாறு மறைந்தொழிந்தது—அதுபோல வள்ளல் தோன்றிய பின் வறுமைப் பிணி யொழிந்தது. நிலா வெளிச்சம் உலகெலாம் பாவி மக்களை இன்புறுத்துவதுபோல வள்ளலது வள்ளற்றன்மை உலகெங்கும் பாவி மக்களை இன்புறச் செய்கின்றது' என இத்துணை ஆழ்ந்த கருத்துக்களைக் கம்பர் ஒரு சிறு கவியில் செறிய வைத்துள்ள திறத்தினைப் புகழ்வேமோ? அன்றி, அவர் அண்ணலை அழகுறப் புகழ்தலைப் புகழ்வேமோ? யாதே யாம் செய வல்லோம்! (தொடரும்)

---

## தமிழ் மொழியின் ஒலிகளும் எழுத்தும்

[ஈப்போ. திரு. தியாகராயன் அவர்கள்]

(முன் கஉ0-ம் பக்கத் தொடர்ச்சி)

| Symbol | Sound represented |
|---|---|
| 17 *P* | th in think, both |
| 18 *F* | th in this, breathe |
| 19 *S* | Sh in Sheet, Machine, Nation |
| 20 *Z* | The sound in Vision, Azure |

21 J Y as in you, the same sound in Beauty, few

22 *D* Ng in long

| Organs of Speech Lips | | Front of tongue | Back of tongue |
|---|---|---|---|
| Stop Consonants | P.B. | T.D.<br>*P* (th) both<br>*F* (th) Soft-this | K.G. |
| Open<br>Consonants | W.<br>F.V. | I R<br>S Z<br>*S* sheet,<br>*Z* vision<br>J beauty | |
| Nasal Consonants | M. | N | *D* long |

There are several points to be noted about the Consonants.

The aspirate H is not included in this table because H is merely breath and not a voice.

C is absent because its sound as in City is represented by S.

CH as in Church is a combination of T and S, ie., tsh.

C as that in Cut is found in K.

J as that in gem.

Dg as in judge consists of dz i.e. D× (the sound in vision.)

Q represents QU or KW as quite.

X represents K S as in fix, excite, or G Z as in exist,

Y is represented by I as in fly I or simply.

(Thus if C, J, Q, X, & Y are added to the first list the consonantal sounds in English will be 27).

So C, J, Q, X & Y are redundant Consonants.

Yet to represent these 22 sounds, there are 11. consonantal diagraphs in addition.

## ஈரெழுத் தோரொலி (மெய்கள்)
## Consonantal Diagraphs

ch, gh, ng, ph, pp, rh, rr, sc, sch, (trigraph), sh, as, th என்பனவாம். இக் கூட்டெழுத்துக்களின் ஒலிகள் முற்கூறிய 22 எழுத்துக்களிலு முளவாம். அன்றியும் இக்கூட்டெழுத்துக்கள் வெவ்வேறிடங்களில் வெவ்வேறு ஒலியுடனும் சில இடங்களில் ஒலியின்றியும் (silent) நிலையும். உதாரணமாக ch என்னுங் கூட்டெழுத்து ச் எனவும் (church), ஷ (chagrin) எனவும், க் எனவும் (epoch), yacht என்னும் சொல்லில் ஒலியற்றும் நிகழ்வதைக்காண்க. இவ்வாறே ஏனைய கூட்டெழுத்துக்களுக்கும் உதாரணங் கொடுக்கின் பெருகுமென விடுத்தாம்.

மேற்கூறியவாறு ஆங்கில மொழியின் ஒலிகளும் அவற்றைக் குறிக்கு மெழுத்துக்களும் ஒத்து இயங்காத் தன்மையுடையனவாகையால் அம்மொழியில் 26 எழுத்துக்களே யுள்ளனவாயினும் அவற்றின் ஒலிகளை விளக்கிக்காட்ட 158 தலை விதிகளும் ஏறக்குறைய ஆயிரத்து நானூறு உதாரணங்களும் உள்ளன.

இப்பெருங் குறைவை ஆங்கிலேயர்களும் மற்றவர்களும் மிகக் கண்டித்து எழுதியிருக்கிறார்கள். சில பின்வருமாறு:—

Austin K. Grey: (A Guide to the English language)

"1. ஒருயிர் பல் உயிர்களைப் போன்றொலிப்பது.

2. ஒருயி ரொலியைக் குறிக்க ஈரெழுத்துகள்.

3. ஓர் மெய்யொலியைக் குறிக்க இரு மெய்யெழுத்துக்கள் வருவது.

மேற்கூறிய குறைகளுக்குக் காரணம் யாதோவெனின் நம் மெழுத்துக்களின் போதாத்தன்மையேயாம். நம் மடமையே காரணமாக இன்னும் பல குறைகளுமுள்ளன."

இக்குறைவு ஆங்கிலமக்களின் மடமைக்கும் மனப்போக்கிற்கும் சோம்பலுக்கும் இடங்கொடுத்து ஒரு சொல்லையே பலவிதமாக யெழுதுந்தன்மை ஓர் காலத்திலிருந்து வந்தது உதாரணமாக scissors என்னுஞ் சொல்லை ஏறக்குறைய 50 வகையில் எழுத்துக் கூட்டி எழுதினார்களாம். Shakespeare என்னும் ஆங்கிலக் கவிஞரும் தன் பெயரை ஆறு வகைக்கு மேற்பட எழுதினாராம். இக் காலத்திலும் இக்குற்றம் நிகழ்ந்துவருகின்றது. உதாரணம்:— Jennens என்னும் பெயர் இக்காலத்தில் Jenens, Jennings,

Jeninge, Jenny, Jenney, Genanes, Ganney எனப் பல்வகையில் எழுத்துக்கூட்டி வழங்கப்படுகிறது. முதலில் குறித்த Jennens என்னும் பெயருடையவர் 1798-ம் ஆண்டில் உயில் எழுதிவைக்காமல் இறந்துவிட்டார். அவர் பொருளைப் பங்கிட்டுக் கொள்வதற்குப் பிற்கூறிய எழுவகைப் பெயருடையவர்களும் தாம் தாம் உரியவர் என நீதிமன்றத்தில் வாதாடினார்களாம்.

ஆங்கில இலக்கண நூலாசிரியரான J. C. Nesfield என்பவர் "நம் மொழியில் உயிரொலிகள் அதிகமாகவும் அவற்றைக் குறிக்கும் உயிரெழுத்துக்கள் குறைவாகவுமிருப்பதால் ஒருயிரொலியை ஈரெழுத்துக்களால் குறிக்கின்றோம். அன்றியும் ஈரெழுத்தின் கூட்டொலியை ஓரெழுத்தாலுங் குறிக்கின்றோம். அவ்வாறே ஒரு மெய்யொலியை இரு மெய்யெழுத்துக்களாலும் இரு மெய்களின் கூட்டொலியை ஓரெழுத்தாலும் குறிக்கின்றோம். இவ்வகைக் குற்றமுடையது நம்மொழி (Such is the perversity of our spelling)" எனக் கூறியுள்ளார்.

Websters அகராதி இயற்றியோர்,

"முற்காலத்தில் ஆங்கிலமொழி, சொல்வதுபோல் எழுதுவதாயும் எழுதுவதுபோல் சொல்லுவதாய தன்மையும் வாய்ந்திருந்ததேயாயினும் தற்காலத்தில் எழுத்தும் ஒலியும் ஒத்தியங்காத் தன்மையுடன் நம்மொழி வழங்குகிறது. (In modern English, however, the spelling of many words is so far from phonetic that it scarcely even suggests its pronunciation)" எனக் கூறியுள்ளார்.

Rabindranath Tagore. (Modern Review June 1931 p. 621.)

"Most of the Englishmen and Americans are blissfully unconscious of the mercilessness of their language. They will admit, however, that neither its spelling nor its syntax is perfectly rational"

This state of affairs drove some one to write the following:—

If an S and an I and an O and a U with an X at the end spell SU—And an E and a Y and an E spell I, Pray what is a fellow to do?—And if an S and an I and a G—

And HED spell *Sighed*—There is nothing much for a speller to do--But go and

commit $\frac{\text{Sioux}}{\text{(Su)}}$ $\frac{\text{—eye—}}{\text{(i)}}$ $\frac{\text{Sighed''}}{\text{(cide)}}$.

மேற்கூறியவற்றிலிருந்து ஆங்கிலமொழி ஒரொலி குறிக்க ஒரெழுத்தென்னும் விதியைத் தழுவாத மிகக் குறைவுபட்ட மொழியாம். தன் மொழியிலுள்ள சொற்களையே ஒலிக்கேற்ப எழுத்துக்களால் குறிக்கும் தன்மையற்ற இம்மொழியாளர் பிற மொழிச் சொற்களின் ஒலிகளைத் தம்மெழுத்துக்களால் குறித்து எழுதின் எவ்வாறாகுமென்பதை இதைப் படிப்போர் ஊகித்தறியட்டும்.

என்மட்டில் ஆங்கிலேயர் நம்மொழியாகிய செம்மொழியை இவ்வாறு ஈவிரக்கமின்றிக் கொலைபுரிகிறார்க ளென்றே சொல்லுவேன். (தொடரும்)

---

# புத்த பகவான் பொருண் மொழிகள்

[பண்டிதர் திரு. அ. நடராஜ பிள்ளையவர்கள்]

(முன் கசஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

## 5. கணவனின் கடமைகள்.

பெருந்தகாய் !

1. மனைவியை யுடைமையாய் மதித்திட வொண்ணு.
2. மனைவியை யன்பால் வணக்கிடல் வேண்டும்.
3. பிறபெண் நாடும் பெற்றியுங் கூடா.
4. கொண்டவள் பேரில் வீண்குறை கூறேல்.
5. உண்டியும் நகையும் உடையும் உதவு.

## 6. மனைவியின் கடமைகள்.

பொற்றொடீ !

1. இற்பணி யனைத்தும் நற்பணி யெனக்கொள்.
2. விருந்துஞ் சுற்றமும் மருந்தென லாகு.
3. கணவனைக் கருத்திற் கண்டுகொண் டொழுகு.
4. சிக்கன மாகத் தேட்டைச் செலவழி.
5. திறமையுங் கவலையுஞ் செயல்களிற் காட்டு.

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## சோழர்கள் கல்வெட்டுகளிற் கண்ட சில குறிப்புக்கள்

[இராவ்சாஹிப் திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள்]

(முன் கஉச-ம் பக்கத் தொடர்ச்சி)

### II. பத்திர வாசகம்

மனிதர்கள் ஒருவருக்கொருவர் பேசிமுடித்துக் கொள்ளும் ஒப்பந்தங்களை நிரந்தரமாகச் செய்ய வேண்டிக் கடிதத்தில் எழுத்து மூலமாக ஆக்குவது உலக வழக்கம். அவ்விதம் அதற்கு ஏற்பட்ட கடிதத்தில் எழுத்து மூலமாகப் பதிப்பித்து விட்டால், அதனைச் சாசனம் அல்லது பத்திரம் என்கிறோம். இவ்விதம் எழுத்துமூலமாகப் பதிக்கும்போது ஒப்புக்கொண்ட ஒப்பந்தத்திற்கு தகுந்தபடி பத்திரவாசகம் ஏற்படுவதுண்டு. கிரயம், அடைவு, குத்தகை, பரிவர்த்தனை முதலியவைகளுக்கு வெவ்வேறு வாசகங்களை நாம் கொண்டிருக்கிறோம். அவ்வித வாசகங்கள் நாட்டுப் பழக்க வழக்கங்களை ஒத்து இருக்கின்றன. ஆங்கிலம், உருது முதலிய மொழிகளில் வெகு காலமாய்ப் பிரயோகிக்கப்பட்டும், சட்டங்களில் திட்டப்படுத்தப் பட்டும் உள்ள மொழித் தொகுதிகளையே உபயோகிக்கவேண்டும். அவ்விதம் திரண்ட மொழிகள் தமிழில் ஏற்படாமல் போனபோதிலும், சில மொழித் தொடர்களாவது திட்டமாகப் பழக்கத்தில் ஏற்பட்டுவிட்டன. உதாரணமாக, சுத்தகாலக் கிரயம் செய்யும் போது, இக்காலத்தில் பத்திரங்களில் "புத்திர பௌத்திர பாரம் பரியமாகத் தானாதி விக்கிரய வினியோகங்களுக்குப் பாத்தியப்பட்டு நிதி நிட்சேபன பாஷாணங்களுடன்," என்று எழுதுவது வழக்கமாய் விட்டது.

மேலும், கிரயமோ அல்லது தானமோ செய்யும் சொத்துக்களைக் குறிக்கும் சொத்து விவரத்தில் சில பதத்தொகுதிகளை அவசியமாகச் சேர்த்துக் கொள்ளுகிறோம். அச் சொத்து ஒரு வீடு ஆயின் அதற்கு நாற்புறத்து எல்லைகளும் கூறி " இந் நான்கு

எல்லைக்குட்பட்ட இவ்வளவு அங்கணமுள்ள வில்லை வீடு அல்லது தார்சு கட்டிடமும் அதைச்சேர்ந்த கதவு, நிலவு, கட்டுக்கோப்பு, அட்டாலிப் பலகை, முன்வாசல், பின்வாசல், பிறவடை, சேந்து கிணறு சகிதம்'' என்று குறிப்பது வழக்கம். அச் சொத்து நிலமாயிருக்குமானால், கிராமத்தையும் மஜராவையும் சொல்லி சில சமயங்களில் எல்லையையும் குறித்து நன்செய் அல்லது புன் செய் என்பதையும் வகுத்து "மாவடை, மரவடை, தூஸ்துக் கிணர் அல்லது சிகிஸ்துக்கிணர், வாய்க்கால் பாத்தியம் சகிதம்'' என்று எழுதுவது வழக்கம். இவ்வித மொழித் தொடர்களை வெகுநாள்முதல் நமது நாட்டில் எழுதுவது வழக்கமாய்விட்டது.

இனி, இவ்வித மொழித்தொடர்கள் பண்டைக்காலத்துச் சோழர்கள் ஆட்சியிலும் வழக்கத்தில் இருந்துவந்தன. உதாரண மாக, கரூர்ச் சாசனங்களில் "உடும்போடி, ஆமைதவழ், புற்று எழுந்த இடம், கற்றுப்புல், பொகர முற்றாட்டும் இருப்பதாக'' என்றும், ''மேனோக்கிய மரம் கீழ்நோக்கிய கிணறும்'' என்றும் கண்டிருக்கின்றன. இவ்வார்த்தைகள் நான்கு எல்லையை எடுத்து எழுதி அவற்றின் பிறகு எழுதப்பட்டுள்ளன. இவ்வார்த்தைகளின் பொருள்களைச் சிறிது ஆராய்வோம்.

1. உடும்போடி:—இதனைச் சாசன பரிசோதகர் where the Iguana runs என்று பொருள் படுத்தி யிருக்கின்றார். உடும்பு பொதுவாக குடியிருக்கும் வீடுகளிலும் வேளாண்மை செய்யும் நிலங்களிலும் ஓடமாட்டாது. ஆகவே, வேளாண்மை யில்லாத நிலமாகிய புறம்போக்கு நிலமாக அஃது இருத்தல்வேண்டும்.

2. ஆமைதவழ்:—இதற்கு where the tortoise crawls என்று பொருள் கூறப்படுகிறது. வீடுகளில் ஆமை நுழைந்தால் அவ் வீடு பாழாகப்போகும் என்பது தமிழரின் கொள்கை. இதற்கு ஒரு பழமொழியும் உண்டு. "ஆம்பல் பூத்த அடுப்பும் ஆமை தவழ்ந்த வீடும் பாழ்'' என்பார்கள். ஆகவே ஆமை தவழும் நிலம் விளைவு இல்லாத நிலம் எனக் கொள்ளல்வேண்டும். ஆமை நீரிலும் நிலத்திலும் வாழும் பிராணி. ஆதலால் அது தவழும் நிலம் நீர்வசதி அதிகம் உள்ள நிலமாக இருத்தல்வேண்டும். நீர்வசதி அதிகமிருந்து நிலமும் பயிருக்கு உதவாதிருக்கும் ஆகில் அந்நிலம் உவர் நிலமாகவோ சதுப்பு நிலமாகவோ இருத்தல் வேண்டும்.

அவ்வித நிலமும் பெரும்பான்மையாக புறம்போக்கு நிலமா இருக்கும்.

3. புற்று எழுந்த இடம்:—இதற்கு where an ant hill rises என்று பொருள் படுத்தப்பட்டிருக்கிறது. கறையான் புற்றுகள் எழுவது பொதுவாக விளைவில்லாத இடங்களிலே யாகும். ஆகவே இவ்விடங்களும் புறம்போக்கு இடங்களாக இருக்கும். கறையான் புற்றுகள் மிகப் பெரியவைகளாகவும் அழியாதவையாகவும் இருப்பன. ஓர் இடத்தில் ஓர் புற்று எழுந்த பிறகு அதனை எளிதில் அழிக்கமுடியாது. எவ்வளவு தோண்டிப் பார்த்தாலும் பின்னும் அதே இடத்தில் அது முளைத்துவருவது நாம் அறிந்ததே. ஆகவே, புற்று இருந்த இடங்களில் வேளாண்மை செய்வது முடியாத காரியமாகும். மேலும் புற்றுகள் வெகுகாலம் அழியாமலும் நிலத்தின்மேல் உயர்ந்தும் வளருவதினால் புற்றுகளை அடையாளப் பொருள்களாக நம் முன்னோர்கள் கொள்வதுண்டு. நிலம் அல்லது கிராமம் இவைகளின் எல்லைகளைக் குறிக்கும்போது பெரிய மரங்களையும் புற்றுகளையும் எல்லைகளாகக் கொள்வார்கள். மரங்களேனும் ஒரு காலத்தில் அழியும். ஆனால் புற்றுகள் வெகு காலம் அழியாமல் இருப்பதால் நிலங்களின் எல்லைக்கற்களுக்குப் பதிலாகப் புற்றுகளை முன்காலத்தில் எடுத்து ஆண்டுவந்தார்கள்.

மேலும் புற்றுகள் கறையான்களால் எழுப்பப்பட்டன எனினும், அவைகளில் பாம்புகள் குடிபுகுவது வழக்கம். பாம்புகளில் நல்ல பாம்புகளாகிய நாகங்கள் தெய்வத்தன்மை யுடையனவாகப் போற்றப் பட்டு வருவதினால் புற்றுகளுக்குப் புனிதம் ஏற்பட்டு விடுகிறது. நாக பஞ்சமி என்ற விரத நாள்களில் புற்றுகளுக்குப் பொங்கலிட்டு வணங்குவதுண்டு. மார்கழி மாதத்தில் சில வகுப்பார்கள் புற்றுகளுக்குக் கோழி பலியிட்டு, பொங்கலிட்டு, பலியிட்ட கோழித் தலைகளை புற்றுகளின் வாயில்களில் போட்டு வருவதுண்டு. இவ்விதமாகப் புற்றுகளுக்கு ஆராதனை ஏற்பட்டு வருகிறதனால் புற்று எழுந்த இடத்தை குறிக்கத்தக்க ஓர் இடமாக முன்னாளில் கொண்டார்கள்.

புற்றுகளுக்கு உள்ள பெருமை தமிழ் நாட்டில் மாத்திரமேயன்றி கேரளநாட்டிலும் அதிகம். பல புற்றுகள் உள்ள சிறு சோலைகளைக் கேரளத்தார் காவு என்று சொல்லுவார்கள்.

அக்காவுகளை மிகுந்த பயபக்தியோடு போற்றி வருவார்கள். சில தலங்களில் புற்றுகளையே தெய்வங்களாகவும் இலிங்கரூபங்களாகவும் வழிபடுவதுண்டு. புற்றுக்கு வடமொழியில் 'வான்மீகம்' என்று பெயர். ஆகவே வான்மீகநாதர் ஆலயங்கள் உள்ள திருவாரூர், திருவொற்றியூர் முதலிய தலங்களில் புற்றுகளே ஆதியில் ஏற்பட்டு இருந்தன. துளுவ நாட்டிலுள்ள சுப்பிரமணியம் என்ற பெயர் பெற்ற தலத்தில் புற்றுகளே ஆராதனைக்கு ஏற்பட்ட பொருள்களாகி இருக்கின்றன. இவ்வளவு சிறப்போடு புற்றுகளை நம் முன்னோர்கள் பாராட்டி வந்ததினால் அதனைத் தனியாக சாசனங்களில் கூறினார்கள் எனக் கொள்ளலாம்.

4. கற்றுப் புல்:—இதனை the grace for the cows என்று மொழிபெயர்த்திருக்கின்றார்கள். கன்று என்ற பதம் இடைவலிந்து கற்று என்றாயிற்று. ஆகவே கற்றுப் புல் என்பது கன்றுகள் மேய்வதற்கு விடப்பட்ட புல் என்று பொருள் படும். அதாவது மேய்ச்சல் நிலம். நமது நாட்டில் ஒவ்வொரு கிராமத்திலும் கன்று காலிகள், கால்நடைகள் இவைகள் மேய்ப்பதற்காக நிலங்களைச் சாகுபடி செய்யாமல் விடுவது வழக்கம். இது விவசாயத்திற்கு அவசியமானது. இப்பொழுதும்கூட அதிகம் நிலம் படைத்தவர்கள் தங்கள் கால்நடைகளுக்காக ஒரு பாகத்தை வேளாண்மை செய்யாமல் மேய்ச்சல் நிலமாகப் புல் முளைக்க விடுவதுண்டு. முன் காலத்தில் கிராமப் பொதுவிலேயே இவ்விதம் நிலங்களை விடுவதுண்டு. இக்காலத்தில் அம்மேன்மையான கொள்கைகளை அதிகார வர்க்கத்தார் மறந்துவிட்டு மேய்ச்சல் நிலங்களில் கள்ளி, சப்பாத்தி முதலியவைகள் முளைக்கவிட்டும் மற்றும் குடிகளுக்கு வேளாண்மை செய்யவோ அல்லது வீடுகட்டவோ கொடுத்துவிட்டும் மேய்ச்சல் நிலம் இல்லாமல் செய்து விடுகிறார்கள். இது குடியானவர்களுக்கு ஏற்பட்ட ஒரு துர்ப்பாக்கியம் என்று சொல்ல வேண்டும்.

சாசன வாசகத்தில் கற்றுப்புல் என்பது மாத்திரம் குறிப்பிட்டிருப்பது நோக்கத் தக்கது. பசு, எருது, எருமை இவைகளுக்கு ஏற்பட்ட மேய்ச்சல் நிலத்தை குறிக்கவில்லை. ஆகவே நிலங்களை தானம் செய்யும்போது அப்பேர்ப்பட்ட பெரிய கால் நடைகளுக்கு ஏற்பட்ட மேய்ச்சல் நிலங்களைத் தானம் செய்வதில்லை என்று நாம் ஊகிக்கவேண்டும்.

நிலங்கள் தானம் செய்யப்படும்போது கன்றுக்குட்டிகள் மேய அவசியமாக இருக்கவேண்டிய புல் நிலத்தை மாத்திரம் அந் நிலத்தோடு கொடுக்கப்பட்டதே ஒழிய, மற்ற மேய்ச்சல் நிலம் கொடுக்கப்படவில்லை. ஆகவே பெரிய மேய்ச்சல் நிலங்களைத் தனி யாக விற்பனை முதலியவைகள் செய்துவந்தார்கள் எனக் கொள்ள லாம். அல்லது அந் நிலங்களை விற்பனை செய்வதே கூடாது என்றும் கொள்ளலாம்.

(தொடரும்)

---

## திருச்சி மலைக்கோயில்

### மௌனசுவாமி மடத்து விபரங்கள்

(முன் கஉகு-ம் பக்கத் தொடர்ச்சி)

எ-வது பட்டம் வைத்திலிங்கத் தம்பிரான் சுவாமியவர்கள் நாளையில் துரை ஜமீன்தாரவர்கள் சார்வரி ஹூ கலாபத்துக்கு திருச்சினுப்பள்ளிக்கு வந்திருக்கும்போது மேற்படி ஜமீன் ரெட்டி யாரவர்களை அனுசரித்து அவர்களிடத்தில் தாயுமான சுவாமியின் உச்சிக்காலக் கட்டளை அபிஷேகம் நைவேத்தியத்திற்காக சர்வ மான்யமாக கரட்டாம்பட்டி கிராமத்தை விட்டுக் கொடுத்து விசு வாசு ஹூ சிலாசாசனம், தாம்பிரசாசனம் செய்து கொடுத்து ஷ கரட்டாம்பட்டி கிராமத்தை சுவாமிக்குத் தத்தம்பண்ணி அந்தக் கிராமத்தின் வருமானத்தில் சுவாமி அம்மனுக்கும் அபிஷேக நிவேத்திய முதலாகியதுகள் நடத்திவைத்துக்கொண்டு வரும்படி யாக சர்வ மானியமாக ரெட்டியார் அவர்களால் விடப்பட்டது கரட்டாம்பட்டி கிராமம். ஷ கட்டளைக்கு படிக் கட்டளை சாமான் முதலாகியதும் அலாதியாய் வைத்துக்கொண்டு நடப்பி வைக்கும் படியாகக் கம்பத்தடியில் ரெட்டியார் அவர்கள் பேரால் அறையும் கட்டிவைத்து சிறப்பாக சுவாமிக்கு நடப்பி வைத்துக்கொண்டு வருகிறது. உச்சிக்காலக் கட்டளைக்காக ரெட்டியாரவர்களால் சர்வமான்யமாக விடப்பட்டது கரட்டாம்பட்டி கிராமம்.

ஷ எ-வது பட்டத்தில் முன் தொண்டமானுரவர்கள் கட்ட ளைக்கு சிவஞானபுரந் துரையவர்கள் நாளையில் சாயரெட்சைக் கட்டளையில் அபிஷேக நைவேத்தியத்துக்காக திருக்கோகாணம் கோயிலில் சாமான்களும் கீரனூர் சுங்கத்தில் ரொக்கச்செலவுக்குப்

பணமும் கொடுத்து நடந்து வருவதில் மேற்படி சாமான்களையும் பணமும் வாங்க மனுஷாள் புதுக்கோட்டைக்குப் போய் வாங்கி வருவதில் இவ்விடமிருந்து போக்குவரத்து அவ்விடத்தில் காத்திருப்பதிலும் படிச்செலவில் தானே அதிகமாய்ச் செலவாகிப் போகிறதென்று துரையவர்களிடத்தில் சொல்லிக்கொண்டதில் அதின் பேரில் கோமங்கலம் கிராமம் மேற்படி ரூ. ௬௩௰க்கு சர்வ மான்யமாக விட்டுக்கொடுத்தார்கள். அந்தப்படிக்குக் கொஞ்ச நாள் நடந்து வருகையில் துரையவர்கள் செலவுக்கு கட்டி வருகிறதா என்று கேட்டதில் செலவுக்குப் பத்தவில்லை என்று சொன்னதின்பேரில் உ௬௩௰க்கு சர்வ மானியமாக விட்டுக் கொடுத்தது மன்னியில் மாத்தூர், மேக்குடி, கொட்டப்பட்டி, கொழுக்கட்டக்குடி, பிடங்கப்பட்டி, ஆதன்பட்டி, பொத்தப்பட்டி இந்த கிராமங்களிலெல்லாம் பாதி காவலாய் இருந்ததெல்லாம் எங்நேரமும் பாதி கவலென்றே எங்நேரமும் தொந்திரவு செய்கிறார்கள் என்று துரையவர்கள் சொல்லிக்கொண்டதில் ஷை பாதிக் காவல் வரும்படியும் ஷை மான்யம் கொட்டம்பட்டியில் செய் உம் மாத்தூரில் செய் உம் ஆக நஞ்சை செய் ச ம் விட்டுக்கொடுத்து பாதி காவல்காரரையும் கோவில் கிராமத்தின் சோலிக்குப் போக வேண்டாமென்று உத்திரவு செய்தார்கள். மேற்படி வருமானங்களெல்லாம் சேர்த்து உச்சிக்காலத்தில் சுவாமி அம்மனுக்கும் அபிஷேக நைவேதனமும் செம்மையாய் நடத்தி வைத்துக்கொண்டு நிவேத்தியமான பிரசாதத்தில் தினம் பனிஇரண்டுபேர் தேசாந்திர பிராமணாளுக்கு சனத்துக்கு இரண்டு சாதம் வீதம் கோவிலில் கொடுத்துக்கொண்டு வரும்படியாகத் திட்டஞ்செய்து நடந்து வருகையில் ஷை வைத்திலிங்கத் தம்பிரான் சுவாமிகள் யோசித்துப் பரதேசி பிராமணாள்கள் வெரும் அன்னத்தை வாங்கிக் கொண்டு போய் சாப்பாட்டிற்கு அவதிப்படுகிறார்களென்று மடத்தில் தானே தொண்டமானர் போல் சத்திரங் கட்டிவைத்துப் பிராமணாள் 12 பேருக்கும் அன்னம் பூர்த்தியாய்க் கொடுக்கும்படியாக கமல பாத்திரஞ் செய்து கோவிலில் அன்னம் வடிசில் செய்து ஷை கமல பாத்திரத்தில் எடுத்து வைத்து அந்த அன்னத்துடனே நாலு கறியும் பாசி பருப்பும் நெய் தயிர் பாயசமும் இதுவெல்லாம் வைத்து சுவாமிக்கு நைவேத்தியமாகிய பின் சத்திரம் கொண்டுவந்து சேர்த்து சத்திரத்தில் குழம்பு ரசம் செய்து தின காலம் பணத்து

மோரும் இதுவெல்லாம் சத்திரத்தில் தயார் செய்து வைத்துக் கொண்டு பரதேசி பிராமணுளாகப் பார்த்துச் சத்திரத்தில் விட்டு போசனம் செய்த உடனே சந்தனம் சுகந்தம் தாம்பூலங்களும் கொடுத்துப் புதுக்கோட்டைத்தொண்டைமான் அவர்கள் பேரால் ஆசீர்வாதம் செய்யச்சொல்லி இப்படியாக நடந்துவருகையில் இது விஷயத்தை இவ்விடத்திலிருந்து போக்குவரத்தாய் இருக்கப் பட்ட பிராமணுள்கள் தொண்டமானிடத்தில் சொல்லிக்கொண்டு வந்தநினுல் மடத்தில் அப்போது கார்வாராயிருந்த சுப்பிரமணிய பிள்ளை புதுக்கோட்டை தொண்டமான் அவர்களிடத்துக்குப் போயிருக்கும்போது ஷ தொண்டமான் அவர்கள் மடம் கார்வார் சுப்பிரமணிய பிள்ளையைப் பார்த்து நாம் பிராமணபோஜனத்துக்கு ஊதிபங்கள் ஒன்றும் விடவில்லையே நம்முடைய பேரால் பிராமண போஜனம் நடக்கிற வயணம் என்ன ? தங்களுடைய சமஸ்தானம் நன்ருய் செழித்துப் பிரபலமாய் இருக்கவேண்டுமென்று வைத்தி லிங்க மௌனத் தம்பிரான் இவ்விடம் அரண்மனை யவர்களின் பேரால் சத்திரமும் கட்டிவைத்துஷ சத்திரத்தில் தினம் 12 பேர் பிராமணுளுக்குப் போஜனம்நடத்திவைக்கிறதென்று சொன்னதின் பேரில் சந்தோஷப்பட்டுக்கொண்டு உடனே வெண்ணமங்கலம் கிராமமும், கொழுப்பட்டியில் புஞ்சையில் 16 அடிக்கோலால் குழி உ௰எகூஅா ரையும் சாயரட்சை அபிஷேக நைவேத்தியத்துக்கும் பிராமண போஜனத்துக்குமாக ஷ கிராமங்களை விடச்சொல்லி உத்திரவாகி காளயுக்தி ஹூ ஷ வெண்ணமங்கலம், கொழுப் பட்டி புஞ்சையும் இதற்கு முன் நடந்த கோமங்கலம் இடையப் பட்டியும்; பாதி காவல் வருமானமும் இதுவெல்லாம் ஒன்ருய் சேர்த்து ஷ வருமானங்களுக்குத் தகுந்தபடி அபிஷேக நைவேத் தியங்களுக்கும் பிராமண போஜனத்துக்கும் கோவில் மாகாணம் கிராம ஆள் மாகாணத்திற்கும் திட்டக்கணக்கு எற்படுத்தி அந்தக் கணக்குப்படிக்கு கட்டளை நடத்திக்கொண்டு வரும்படிக்கும் சுப்பிரமணிய பிள்ளைக்கு ஹூக்கு சம௰உ ஸ்தானுதிபதி சம்பள மென்று எற்பாடுசெய்து அந்தப்படியே தொண்டமானவர்கள் உத்திரவு செய்து தாம்பிரசாசனமும் சிலாசாசனமும் காளயுக்தி ஹூத்தில் செய்துகொடுத்தார்கள். அந்தப்படியே நடப்பிவைத்து வருகின்றது.

ஷை எ-வது பட்டம் வைத்திலிங்கத் தம்பிரான் சுவாமியவர்கள் நாளையில் லெக்கய நாயக்கரவர்கள் தாயுமான சுவாமி பூசைக் கட்டளைக்கென்று ஷையார் சீமையைச் சேர்ந்த மாவனூர் சொந்தக்கறிச்சாம்பட்டி கிராமத்தை சர்வ மான்யமாக லெக்கய்ய நாயக்கரால் விடப்பட்டது.

ஷை எ-வது பட்டத்தில் பூச்சய நாயக்கர் தாயுமான சுவாமியின் அபிஷேக நைவேத்தியத்துக்கு பூச்சய நாயக்கரவர்கள் ஷையார் சீமையில் கோவில்ப் பட்டியைச் சேர்ந்த தில்லம் பட்டிக் கிராமத்தை சர்வ மானியமாக விடப்பட்டு சுவாமியின் பூசைக் கட்டளை நடப்பிவைத்துக் கொண்டு வரும்படியாக வைத்திலிங்கத் தம்பிரான் சுவாமிகளிடம் பூச்சய நாயக்கரவர்கள் சர்வ மானியமாக விடப்பட்டது தில்லம்பட்டி கிராமம்.

ஷை எ-வது பட்டத்தில் தாயுமான சுவாமியின் அபிஷேகத்துக்காக கத்தலூர்—என்பவர் ஷை கத்தலூரில் நஞ்சையில் செய் ரு-ம் புன்சையில் பதிங்கல விரையடிக் காடும் ஷை வைத்திலிங்கத் தம்பிரான் அவர்கள் மாரிபமாக சர்வமான்யமாக விடப்பட்டது கத்தலூர் பட்டவர்த்தி.

நவாபு சாயபு அவர்கள் ராஜரீகத்தில் எ-வது பட்டம் வைத்திலிங்கத் தம்பிரான் அவர்கள் நாளையில் உண்டாகிய ஊதிபம் காட்டாம் பட்டிக் கிராமம்-க கோமங்கலம் கிராமம்-க இடையப்பட்டி கிராமம் க. வெண்ண மங்கலம் கிராமம் க. பொத்தம் பட்டிக் கிராமம் க. கொழுப்பட்டியில் புஞ்சையில் உ௱எசூஅா குளி நிலமும் தொண்டமானூர் பாதுகாவல் பொருப்புப் பணமும், தில்லன் பட்டிக் கிராமமும், கறிச்சான் பட்டிக்கிராமமும் கத்தலூர் பட்டவர்த்தியும் இந்த ஊதிபங்களெல்லாம் வைத்திலிங்கத் தம்பிரானவர்கள் நாளையில் உண்டாகிய ஊதிபங்கள்.

(தொடரும்)

---

"இப் பொழுது உண்மையை மறக்கவேண்டாம்: நம்மை நாமே வருத்திக் கொண்டே அல்லலுழக்கின்றோம்; அஃதாவது நம்முடைய எண்ணங்களே நம்மை நெருக்கி அல்லலுழக்கச் செய்கின்றன."

—எப்பிக்டேட்டஸ்.

---

# அறிவியற் பகுதி—Science

## ஒளிநூல்—(Astronomy)

[திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்]

(முன் கூ௯௰-ம் பக்கத் தொடர்ச்சி)

அப் பெரியார் பிரிந்தபின்னர், அறிஞர் பலர் தோன்றிச் சோதிக்கலையை வளர்ப்பாராயினர். தென்மார்க் (Denmark) நாட்டினராகிய டைகோ பிராகி (Tycho Brahe) என்பவர் எண்ணற்ற ஆராய்ச்சிகளைச் செய்து அவர்களுள் முதன்மை பெற்றார். டாலமி முறையை ஒருவாறு தழுவிய ஒரு புது முறையை அவர் தோற்றுவித்தார். கோப்பர் நிக்கஸ் முறையை மறுத்து, தம் கொள்கையை நிலை நாட்ட அவர் வீணாக முயன்றார். அவர் எழுதிய கணக்கிறந்த நூல்கள் அவருடைய போற்றலை எடுத்துக் காட்டுகின்றன. அவருடைய மட்டற்ற அறிவும் முயற்சியும் தவறான வழியிலே போய் வீணாயின. அவர் மண்ணுலகத்தை அசைவற்ற பொருளாக்கி அதனை இரவி மதிகள் சுற்றிவருவதாக மொழிந்தார். ஏனைய கோள்களும் பூமியையே சுற்றிவருகின்றன என்ற டாலமியின் கூற்றுக்கு மாறாக அவர் அவைகள் இரவியைச் சுற்றிவருவதாகப் புகன்றனர். ஆனால் அவர் சோதிகளைப்பற்றிக் கண்டறிந்துள்ள பல மெய்க்கொள்கைகளின் முன் இப்பிழைகள், பெரும் பிழைகளேயாயினும், மிகச் சிறியனவாகவே தோன்றுகின்றன. டைகோ பிராகியைப்போல சோதிக்கலையை அணி பெறச் செய்தோர் என்றும் இருந்ததில்லை.

டைகோ காலத்தில் வாழ்ந்த சிறந்த வானநூற்புலவருள் ஒருவர் புகழ்பெற்ற கெப்ளர் என்பவர். கோள்களின் அயனங்களை உண்மையாகக் கண்டறிந்தவர் அவரே. இரவி மண்டிலத்திலுள்ள கிரகங்களின் அசைவின் தன்மையையும், அவைகள் ஒன்றுக்கொன்று உள்ள தூரத்தையும் மெய்ம்மையாகக் கணித்துணர்ந்தவர் அவரே. அவர் தெளிந்து வெளிப்படுத்திய உண்மைகளே இக்காலத்தில் மிளிரும் ஒளிநூற்கலைக்கு அடிப்படையாயின. கெப்ளர் கி. பி. 1571-ல் பிறந்து 1631-ல் இறந்தார்.

அவருக்குப் பின் புகழ்பெற்றவர் கலிலீயோ என்ற மூதறிஞர். அவர் கி. பி. 1564ல் பிறந்தார். அவர்தான் முதன்முதலாக தொலைநோக்காடி (Telescope) யைப் பயன்படுத்தத் தொடங்கியவர். அவர் அதுவரை ஒருவரும் கண்டறியாத பல காட்சிகளை அதன் மூலமாகக் கண்டார். அவருடைய மெய்க்காட்சிகளால் கோப்பர் நிக்கஸ் முறையானது வலிபெற்று விளங்குவதாயிற்று. கோப்பர் நிக்கஸ் முறையை மெய்ப்பிக்க அவர் செய்த முயற்சிகள் போப்புமதக் கோட்பாடுகளுக்கு (Papacy) மாறாக இருந்தபடியால் அவைகளைக் குருட்டுத்தனமாக நம்பி யிருந்தவர்களுடைய சினத்திற்கு அவர் ஆளானார். அதனால் அவர்கள் அவரை ஓர் இருட்டறையில் அடைத்து வைத்துத் துன்புறுத்தினார்கள். ஆனால் ஓராண்டின் பின், அவர் தமது கொள்கையைப் பிறருக்குக் கூறுதிருப்பதோடு தாமும் விட்டுவிடவேண்டு மென்ற கட்டுப்பாட்டுடன் விடுதலை பெற்றார். அவர் கி. பி. 1642ல் மாண்டனர்.

பூமி சுற்றுகிற தென்ற உண்மையை மக்கள் தெளிவாக அறிந்து கொள்ளத் தொடங்கினர். அதனால் அதற்குத் தடையாகச் செய்யப்பட்ட கொடுமைகளெல்லாம் நாளடைவில் பயனற்றனவாயொழிந்தன.

கலிலீயோ காலத்தில் வேறு சில ஒளிநூற் புலவரும் இருந்தனர். அவருள் பேஅரன் (Baron) பட்டம்பெற்ற நேப்பியர் (Napier) என்பார் ஒருவர். அவர் லாகரிதம்ஸ் (Logarithms) என்று பெயர் பெற்ற கணக்கு அட்டவணைகளை கி. பி. 1614ல் பதிப்பித்தார். பேயர் (Bayer) என்பார் யுரானோமீடிரியா (Uranometria) என்ற நூலை வெளிபடுத்தி இசை பரப்பினார். அந்நூலில் அவர் விண்மீன்களைக் குறிப்பதற்கு இட்ட அடையாளங்களாகிய கிரேக்க எழுத்துக்களே இன்றும் பயன்பெற்று நடைமுறையில் இருக்கின்றன.

காசண்டி என்ற பிரெஞ்சுப் புலவர் இரவிமண்டலத்தின் அருகே புதன் (Mercury) என்ற கிரகத்தைக் கண்டார். ஹாராக்ஸ் என்ற ஆங்கிலப் பேரறிஞர் கி. பி. 1633ல் தமது நண்பராகிய கிராப்டிரீயிடம் "கி. பி. 1639 நவம்பர்மீ 24உ யன்று வெள்ளி (Venus) இரவிமண்டலத்தைக் கடந்து செல்லும்" என்று கூறினார். வெள்ளி குறித்தநாளன்று இரவிமண்டிலத்தைத் தாண்டிப் போனதை அவர்களிருவரும் கண்ணாரக் கண்டனர். இத்தகைய நிகழ்ச்சியை முதன்முதலாகக் கண்டறிந்தவர் அவ்விருவரே.

ஹாராக்ஸ் தமது ஆராய்ச்சியில் முதிர்ந்தவராய், திங்களைப்பற்றிய ஒரு புதுக் கொள்கையை மொழிவாராயினர். அது பெருகிய நுண்ணறிவின் விளைவாக இருந்ததனால் சர் ஐசக் நியூட்டன் என்ற பெரியாரின் கவனத்தைக்கூடக் கவர்வதாயிற்று. ஆனால், அம் மணியை ஒளிநூற்புலவருலகம் விரைவில் இழந்தது. அப்போறிஞர் கி. பி. 1640ல் தமது இருபத்துநான்காவது வயதில் இறைவ ரடியை எய்தினர்.

டான்ட்ஸிக் (Dantzic) என்ற நகரத் தலைவராக இருந்த எவீலியஸ் (Hevelius) என்பார் அந்நகரில் ஓர் ஆராய்ச்சிச்சாலையை நிறுவினர். அதில் அவர் பல அரிய கருவிகளை அமைத்திருந்தார். ஞாயிற்றின்மேலுள்ள களங்கங்களைப்பற்றியும், வால்வெள்ளி களின் இயற்கையைப்பற்றியும் அவர் பலவாறு ஆராய்ந்து பல முடிவுகளைக் கண்டார். அசையாதிருக்கும் விண்மீன்களைப்பற்றி அவர் தயாரித்த அட்டவணை மிகவும் நுட்பமாகவும் சரியாகவும் இருக்கிறது. திங்களின் உடலிலுள்ள களங்கங்களைப்பற்றித் திட்டமாக விவரித்துரைத்தாருள் முதல்வர் அவரே.

தொலைநோக்காடி (Telescope) யில் செய்யப்பெற்ற சீர்திருத்தங்கள் மேலும் பல புதுமைகள் வெளிப்படுவதற்குக் காரணமாயின. புகழ்சிறந்த ஹியூஜென்ஸ் (Huygens) என்பார் இரண்டு உயர்ந்த கண்ணாடிகளைச் செய்தார். அவற்றுள் ஒன்று பன்னிரண்டடி நீளமும், மற்றது இருபத்துநான்கடி நீளமும் உடையவை. அவைகளின் உதவியால் அவர் சனி (Saturn)யின் நான்காவது மதி (Satellite) யைக் கண்டுபிடித்தார். அதன்பின் அவர் இடைவிடாது முயன்று அச் சனிக்கோளைச் சூழ்ந்திருக்கும் வளையத்தையும் பார்த்தறிந்தார். கடிகாரத்தை இயக்கும் தொங்கட் டானை (Pendulum) அமைத்துக் கடிகாரம் செய்யும் விதத்தை முதன்முதலாகப் பயன்படுத்தியவர் அவரே. அவர் தமது அறுபத் தாறுவது வயதில், கி. பி. 1695ல் விண்ணுலகடைந்தார்.

அக்காலத்தில்தான் இலண்டன்மாநகரத்தில் உள்ள அரசாங்க ஆராய்ச்சிக்கழக (Royal Society of London) மும், பாரிஸ் நகரத்திலிருக்கிற பெரியார் ஆராய்ச்சிக் கழக (Royal Academy of Paris) மும் தோன்றின. அவைகளில் அறிவாற்றலிற் சிறந்த பல புலவர்கள் விளங்கினர். பாரிஸ் ஆராய்ச்சிச்சாலையில் முதன்முத லாகத் தலைமை பூண்டார் டாமினிக் காசினி (Dominic cassini) என்பவராவர். அவர் தலைமை பூண்ட சின்னாளில் சனிக்கோளின் முதலாவது, இரண்டாவது, மூன்றாவது, ஐந்தாவது மதிகளைக் கண்டுபிடித்தார். மேலும், வியாழன் (Jupiter), செவ்வாய் (Mars), வெள்ளி (Venus) ஆகிய கோள்கள் நமது பூமியைப்போலத் தம்மைத்தாமே சுற்றிக்கொள்கின்றன என்ற உண்மையையும்

அவரே பார்த்தறிந்தார். அவர் கி. பி. 1712-ல் இறைவர் திருவடி நீழலை எய்தினர்.

ஒளி இடையீடில்லாமல் தொடர்ந்து பரவும் தன்மையது என்ற உண்மை ரூமர் (Roemer) என்ற தென்மார்க் நாட்டினரால் வெளிப்படுத்தப் பெற்றது. சோதிநூற் கலையில் இஃது ஒப்பற்ற அடிப்படையான உண்மையானதால் ஒளிக்கலை யுலகில் ரூமர் அழியாப் புகழ்பெற்று விளங்குகின்றார். (தொடரும்)

---

# இருவகைச் செல்வம்.

## க. பயனுடைச் செல்வம்

1. ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. (குறள்-215)
2. பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கட் படின். (குறள்-216)
3. மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கட் படின். (குறள்-217)

1 பேரறிவாளனது செல்வம் ஊரா ருண்ணும் குளம் நிறைந்தாற் போல்வதாம்.
2. பிறர்க்கு உதவுவானது செல்வம் ஊர் நடுவில் பயன்படு மரம் பழுத்தது போல்வதாம்.
3. பெருந்தகைமையுடையானது செல்வம் தன் எல்லா உறுப்புக்களாலும் பிணிகளுக்கு மருந்தாகியுதவும் மரத்தைப் போல்வதாம்.

## உ. பயனிலாச் செல்வம்.

1. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று. (குறள்-1000)
2. அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று. (குறள்-1007)
3. நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சுமரம் பழுத் தற்று. (குறள்-1008)

1. பண்பிலானது செல்வம் ஆவின்பால் கலத்தின் குற்றத்தினால் இன்சுவைத்தாகாது கெட்டாற்போல்வதாம்.
2. ஒரு பொருளு மில்லாதவர்க்கு உதவாதவனது செல்வம் வீணே கழிதல் மிகவும் அழகுள்ள ஒரு பெண் தன்னைக் கொடுப்பாரின்மையால் கணவனில்லாது மூப்படைவது போல்வதாம்.
3. பிறரால் இச்சிக்கப்படாதவனது (உலோபி) செல்வம் ஊர் நடுவே எட்டி மரம் பழுத்தது போல்வதாம்.

வ. சுப்பையா பிள்ளை.

# இயற்கைப் பொருணூல்--Natural Science

## உயிரினங்களின் நிறவேறுபாடுகள்

[திருமதி. குணமாணிக்கத் தம்மையார் M.A.]

(முன் கூஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

தற்காப்பு நிறத்தை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். அஃதாவது :— 1. குறிப்பு நிறம் 2. ஒப்புமை நிறம்.

குறிப்புநிறம், கூட்டங் கூட்டமாக வசிக்கும் பறவைகளினிடத்தும், விலங்குகளினிடத்தும் காணப்படும். முயல்கள் கூட்டங் கூட்டமாக வசிக்கும். கூட்டத்திலிருந்தால் தான் அவைகளுக்கு நன்மை. முயல்வாலின் அடிப்புறம் வெண்மையாக இருக்கிறது. முயல்கள் பல கூடி ஓரிடத்தில் மேய்ந்து கொண்டிருக்கும் போது ஏதாவது ஓசை உண்டானால் அவ்வோசையைக் கேட்ட முயல் தன் வாலை மேலே தூக்கிக்கொண்டு தன் வளையினிடம் ஓடும். இங்ஙனம் அஃது ஓடும் போது அதன் வாலின் அடிப்பாகத்திலுள்ள வெண்மை நிறம் வெளியே தெரியும். அதைக்கண்ட மற்ற முயல்கள் ஏதோ கெடுதி உடனே வரப்போகிறதென்று அறிந்து தத்தம் வளைகளிற் போய்ச் சேரும்.

கூட்டங் கூட்டமாக, ஊர் ஊராக, வெப்பதட்ப நிலையைப் பொறுத்துச் செல்லும் பறவைகளுக்குச் சிறகுகளிலும் வாலிலும் இத்தகைய குறிப்புநிறம் உண்டு. பறந்து செல்லும் போது இது வெளியில் தெரியும்; பின்னால் வரும் பறவைகள் அவை தம்மினமென்று தெரிந்து பின் தொடர்ந்து செல்லும்.

ஒப்புமை நிறம் பட்டுப் பூச்சிகளினிடத்துச் சிறப்பாய்த் தோன்றுகிறது. இப்பூச்சிகளில் சில பறவைகளுக்குத் தகுந்த உணவாகவும் சில அல்லன வாகவும் உள. உணவாகக் கூடிய பூச்சிகளில் சில வகைகள் (Species) ஆகாரத்திற்கு உதவாத பட்டுப் பூச்சிகளின் நிறத்தை உடையன. இதைக் காணும் பட்சி, தனக்காகாத பூச்சிகளென்று அவற்றைப் பிடித்துக் கொல்லாமல் இருந்து விடும். இப்படியே நஞ்சில்லாச் சில பாம்புகள் நஞ்சுள்ள பாம்புகளை ஒத்திருக்கின்றன.

இனிப் போலி நிறத்தைக் கருதுவாம். புலி ஏன் வரிகளை யுடைய (Stripes) தாக இருக்கிறது? இது புல்லடர்ந்த காட்டில் புதரினிடையே இருக்குமேயானால் இதைக் காண்பவர் புல்லென ஏமாறுவர். புலி, ஓட்டையைப் போல் தற்காப்புக் கல்லாமல், பிற உயிர்களை வஞ்சிக்க ஏதுவாக இவ்வாறான அமைப்பைப் பெற்றிருக்கிறது. அது புதரினிடையே பதுங்கி இருக்கும் போது, அதைப் புல்லென எண்ணிப் பல சிறுவிலங்குகள் அச்ச மின்றி அவ்வழியே செல்ல, தன் மறைவிடத்திலிருந்து, அப்புலி அவை மீது பாய்ந்து அவற்றைக் கொன்று உதிரத்தை உறிஞ்சி விடுகிறது. ஓட்டையின் நிறம் தற்காப்பு நிறமாகும், புலியினது நிறம் போலி நிறமாகும்.

தீங்கிழைக்க மாட்டா தென்று எண்ணக் கூடிய தன்மையை யுடைய புலியைப் போன்றிருப்பது மல்லாமல் தமக்கு இரையாகும் உயிரினத்துக்கு விருப்பமான உணவோ அல்லது வேறு ஒரு பொருளோ போல் தோன்றி, அதைத் தம்மிடம் இழுக்கும் உயிர் வகையும் உண்டு. பார்ப்ஸ் (Mr. Forbes) என்ற மேனாட்டறிஞர் தாம் கண்ணால் கண்ட இத்தகைய நிகழ்ச்சியைக் கூறியுள்ளார்.

அவர் ஒரு வண்ணாத்திப் பூச்சியைப் பிடிக்குமாறு கையில் பிடித்த வலையுடன் அதைப் பின் தொடர்ந்து சென்றாராம். அஃது ஒரு பறவையின் மலத்தின்மேல் போய்த் தங்கிற்றாம். இவ்வளவு அழகுள்ள இந்தப்பூச்சிக்கு அந்த உணவில் என்ன சுவை இருக்கு மென்று எண்ணிக்கொண்டே அஃது என்ன செய்கிறதென்று பார்க்க, அவர் கையில் வலையுடன் மெதுவாக அதனருகில் சென் றார். அவர் மிக்க அருகில் வந்தும் அஃது அசையவில்லை; பறந்து ஓடவுமில்லை. அதனை அவர் மெதுவாகப் பிடித்தார். அப்பொழு தும் அஃது அசைவற்று இருந்தது. ஆனால், அவர் அதனை இலையி னின்றும் எடுக்க முயன்றபோது அஃது அம்மலத்தில் ஒட்டிக் கொண்டு வரவில்லை. அம்மலம் பசையுள்ளதோ என்ற ஐயம் ஏற்படவே அவர் அதனைத் தம் விரலால் தொட்டார். அவர் தொட்டவுடனே அது மலமன்று என்றும், ஓர் உயிருள்ள பூச்சி யென்றுங் கண்டு திடுக்கிட்டார். அஃது ஒருவகையான சிலந்தி. அது தன் இரையைப் பிடிக்கத் தனது பல உறுப்புக்களிலும் தக்க நிறங்காட்டி, பறவையின் மலத்தை ஒப்ப இருந்து, பட்டுப்பூச்சி

களை ஏமாற்றி வந்தது. இச்சிலந்தியைக் கவர்ச்சி நிறமுள்ள உயிரினங்களோடு தான் சேர்த்தல்வேண்டும்.

சில உயிரினங்கள் எச்சரிக்கை நிறத்தைக்கொண்டுள்ளன. இவை நஞ்சாலோ அல்லது வேறுவகையாலோ தீங்கிழைக்கக் கூடியனவாக இருக்கின்றன. கொட்டும் குளவிகளும், ஈக்களும் பளிச்சென்று விளங்கும் நிறங்களையுடையன. அவை "என்னிடம் வந்தால் நான் கொட்டிவிடுவேன். என்னை என் நிறத்தால் அறிந்துகொள்ளுங்கள்" என்று எச்சரிக்கை செய்வதுபோன்ற நிறமுடையனவாக இருக்கின்றன. ஒரு முறை கொட்டுண்டவர் இக்குளவியைக் கண்டால் ஒதுங்கிச் செல்வர்.

இப்படியே நாகப்பாம்பின் படமும் எச்சரிப்புக்காக உள்ளது. கடவுள் தமக்குக் கொடுத்திருக்கும் இயற்கை அறிவாலும், அந் நாகப்பாம்பின் நஞ்சால் இன்னொரு உயிர் இறந்ததைக் கண்ட பழக்கத்தாலும், இப்படமுடைய பாம்பைக் கண்டதும் அதை எதிர்க்க வல்லமையில்லாத உயிர்வகைகள் விலகித் தொலைவிற் செல்கின்றன.

இதுவரை, நிறங்களால் இன்னின்ன பயன்கள் உண்டென்று கண்டுவந்தோம். ஆனால், சிலவகை நிறவேறுபாடுகளுக்குக் காரணந் தெரிந்திலது. எடுத்துக்காட்டாகப் பறவைகளை எடுத்துக்கொள் வோம்.

புள்ளினத்தில் ஆண்பறவைகள் அழகிய நிறங்களையுடைய வாகவும் பெண்பறவைகள் அங்ஙனம் இல்லாமலும் இருப்பது நம் எல்லோருக்கும் கண்கூடாகத் தெரிந்ததே. ஆண்மயில் எவ்வளவு அழகான தோகையை உடைத்தாயிருக்கிறது. பெண்மயிலுக்கு அத்தன்மையதான தோகை ஏன் இல்லை?

பெண்பறவை முட்டையிட்டுக் குஞ்சு பொரித்தல் வேண்டும். இது முடிவெய்தும்வரையில் எதிரிகள் கண்ணுக்கு அகப்படாமல் இருப்பது இன்றியமையாதது. இதனாற்றான் இஃது ஆணைப் போல வனப்புடையதாக இல்லை. ஆணும் பெண்ணும் ஒத்த வனப் புடையதாக இருக்குமேயானல், அவை சந்துகளிலும், பொந்து களிலும் கூடுகட்டி முட்டையிடுபவையாக இருக்கும். கூட்டில் இருந்தால் பெண்பறவை வெளியில் தெரியாது. அதனால் அஃது அழகாகவே இருக்கலாம்.

சில பறவைகளில் ஆணைவிடப் பெண் ஒளியும் பொலிவு முள்ள நிறங்களையுடையன. இவைகளை ஊன்றிப் பார்த்தால், நாம் வியக்கும்படியான ஓர் உண்மை வெளிப்படுகிறது, அஃதாவது இவ்வினத்தில் பெண்பட்சிக்கு முட்டையிடுவது தவிரப் பின் அதைக் காப்பாற்றும் வேலை இல்லை. அஃது முட்டையிட்டவுடன் ஆண்பட்சி அந்த முட்டைகளின்மீது உட்கார்ந்து அடைகாக்கிறது. இவ்வேளைகளில் ஆண் மறைந்திருக்க வேண்டியிருக்கிறது. ஆகையால் அது பொலிவற்றிருக்கிறது.

அழகின்மைக்கு ஒருவாறு காரணம் தெரிகிறது. ஆனால் அழகுடைமை ஏன்? இதைப்பற்றி ஒரேமுகமான கொள்கை இல்லை. நுண்ணூலாராய்ச்சியர் பலரும் பல கொள்கைகளைக் கொண்டுளர்.

டார்வின் (Darwin) என்பவர், பெண்பறவை ஆணிடம் அசி னுடைய பொலிவிற்காகக் கூடுகிறதென்றும் அதனாற்றான் ஆண் இப்படி அழகுடையதாய் விளங்குகிறதென்றும் கூறியுள்ளார்.

சிலர் வேறுகாரணம் காட்டுகின்றனர். அஃதாவது பெண் பறவைக்கு முட்டையிடுவதிலும் குஞ்சு பொரிப்பதிலும் அதன் வலிமை குறைந்துவிடுகிறதென்றும், ஆணிற்கு இவ்வலிமை குறையாமல் நிற்கிறதென்றும், இந்த அளவற்ற வலிமை, நிறமும் கொண்டை முதலிய உறுப்புக்களும் உண்டாக்குவதில் செலவாக்கப்படுகிறதென்றுங் கூறுகின்றனர். இன்னுஞ் சிலர் வெவ்வேறு காரணங்களைக் காட்டுகின்றனர், அவைகளை ஆராயப் புகுவோமாயின் மிகவும் விரியும்.

பறவைகளின் நிற அமைப்பிற்குக் காரணம் விளங்காவிடினும், பட்டுப்பூச்சி மலர் முதலியவை நிறத்தில் ஒளிர்வது இன்ன தற்காக என்று ஒருவாறு துணிவாகச் சொல்லலாம், அஃதாவது தம் இனத்தின் பெருக்கத்திற்கேயாம்.

கூட்டுப் புழுவாக இருந்து, பட்டுப்பூச்சியான பிறகு, அது மிகக் குறைந்த வாழ்நாளைக் கொண்டிருக்கின்றது. இந்தக் குறுகிய வாழ்நாளில் அது தன் இனத்தைப் பெருக்க வழிதேடல் வேண்டும். அதற்காக ஆணும் பெண்ணும் கூடுதல் வேண்டும். நிறத்தில் மிளிர்ந்தால் தமக்கிருக்கும் குறுகிய காலத்தில் ஒன்றையொன்று கண்டு கூடுவது எளிது.

மலர்களும் மரத்தின் இன வளர்ச்சிக்காகவே பல நிறங்களைக் கொண்டுள்ளன. பூக்களிலும் ஆண்பூவும் பெண்பூவும் உள. இவற்றின் தாது கலந்தால்தான் மலரில் கரு உண்டாகும். இப்படிக் கலப்பதற்கு வண்டுகளும், பூச்சிகளும், குருவிகளும் உதவியாயிருக்கின்றன. அவற்றைத் தம்மிடம் வரும்படி செய்ய, மலர்கள் தம்முள் தேனுண்டாக்கி, நறுமணத்துடனும் அழகிய நிறங்களுடனுங்கூடி விளங்குகின்றன. இங்ஙனம் மணத்தானும் நிறத்தானும் இழுக்கப்பட்டுப் பூச்சியோ பறவையோ வண்டோ அவற்றினிடஞ் செல்கின்றன. அவ்வுயிரினங்களின் கால்களிலோ உடம்பிலோ அப்பூக்களின் தாது ஒட்டிக்கொள்கிறது. பிறகு அவை வேறு மலர்களிடஞ் சென்றால் அவற்றின் மேல் ஒட்டியிருக்கும் தாது அம்மலர்களின் தாதோடு கலக்கிறது.

இரவில் மலரும் பூக்களுக்கு நிறம் இருப்பதில் யாதொரு பயனுமில்லை. ஆகையால், அவை வெண்மையாக இருக்கின்றன. ஆனால் அவை நிறத்திற்குப் பதிலாகப் பகலில் அலரும் பூக்களைக் காட்டிலும் நறுமணத்தை மிகுதியாகக் கொண்டிருக்கின்றன.

“ - - - நிசியலர் மலர்க்கு
வெண்மையும் நன்மணம் உண்மையும் இலவேல்
எவ்வணம் அவற்றின் இட்டநா யகராம்
ஈயினம் அறிந்துவந்து எய்திடும்? அங்ஙனம்
மேயிடில் அன்றோ சாய்தருங் கருவாம்?
இவ்விதம் நோக்கிடில் எவ்விதத் தோற்றமுஞ்
செவ்விதிற் பற்பல காரணச் செறிவால்
அவ்வவற் றுள்நிறை யன்பே ஆக்கும்”

—மனோன்மணீயம்

(தொடரும்)

---

“ ஒரு நாளேனுஞ் செல்வழி யறியேன்; ஆயினும், அறிந்தது ஒன்றுண்டு; அஃதென்னெனின், நாள்தனை நல்கும் நல்லோன் நலமுடன் நல்வழி யுய்ப்பான்; நம்பியே அருங்கவல் ஒழிக.”

—ஜான் ஆக்ஸென்ஹாம்.

---

# மொழிபெயர்ப்பு-Translation

[திரு. T. B. கிருஷ்ணசாமி முதலியாரவர்கள் M.A.,B.L.]

கபிலர்

இயற்றிய

## இன்னா நாற்பது

## Of Unpleasant Things: Forty (Stanzas)

By

KAPILAR.

---

கடவுள் வாழ்த்து

க. முக்கட் பகவ னடிதொழா தார்க்கின்னா
பொற்பனை வெள்ளையை யுள்ளா தொழுகின்னா
சக்கரத் தானை மறப்பின்னா வாங்கின்னா
சத்தியான் றடொழா தார்க்கு.

1. It is unpleasant not to worship the feet of the Triple-eyed Lord Siva; it is unpleasant not to contemplate Brahma, whose vehicle is the beautiful swan; it is unpleasant to forget the Lord, who wields the wheel, Vishnu; likewise it is unpleasant not to worship the sacred feet of God Kumara.

நூல்

உ. பந்தமில் லாத மனையின் வனப்பின்னா
தந்தையில் லாத புதல்வ னழகின்னா
அந்தண ரில்லிருந் தூணின்னா வாங்கின்னா
மந்திரம் வாயா விடின்.

2. A house without kinsmen is unpleasant; the beauty of an orphan is unpleasant; to eat in the house of a brahmin is unpleasant; likewise unpleasant is good counsel when it is unavailable.

ங. பார்ப்பாரிற் கோழியு நாயும் புகலின்னா
ஆர்த்த மனைவி யடங்காமை நன்கின்னா

பாத்தில் புடைவை யுடையின்னு வாங்கின்னு
காப்பாற்ரு வேந்த னுலகு.

3. It is unpleasant to have dogs and fowls entering the house of brahmins; very unpleasant is unruliness in a wedded wife; unpleasant it is, not to have spare clothes for a change; likewise very unpleasant is the realm of an unprotecting King.

ச. கொடுங்கோன் மறமன்னர் கீழ்வாழ்த லின்னு
நெடுநீர் புணையின்றி நீந்துத லின்னு
கடுமொழி யாளர் தொடர்பின்னு வின்னு
தடுமாறி வாழ்த லுயிர்க்கு.

4. It is unpleasant to live under the rule of wicked tyrants; it is unpleasant to cross deep waters without a raft; the friendship of those who speak harsh words is unpleasant; unpleasant it is to live with a mind always agitated.

ரு. எருதி லுழவர்க்குப் போகிர மின்னு
கருவிகண் மாறிப் புறங்கொடுத்த லின்னு
திருவுடை யாரைச் செறலின்னு வின்னு
பெருவலியார்க் கின்னு செயல்.

5. The farmer without bulls finds the wetness of the fields unpleasant; it is unpleasant to lose use of weapons and turn one's back to the enemy; it is unpleasant to quarrel with the fortunate; most unpleasant, to do harm to the powerful.

சா. சிறையில் கரும்பினைக் காத்தோம்ப லின்னு
உறைசேர் பழங்கூரை சேர்ந்தொழுக லின்னு
முறையின்றி யாளு மரசின்னு வின்னு
மறையின்றிச் செய்யும் வினை.

6. Unpleasant to guard a hedgeless crop of sugar-cane; unpleasant to live in a thatched roof full of holes; unpleasant is unlawful rule; unpleasant whatever is done without proper thought.

எ. அறமனத்தார் கூறுங் கடுமொழியு மின்னு
மறமனத்தார் ஞாட்பின் மடிந்தொழுக லின்னு
இடும்பை யுடையார் கொடையின்னு வின்னு
கொடும்பா டுடையார்வாய்ச் சொல்.

7. The hard words of the just are unpleasant; the laziness of soldiers on the battle-field is unpleasant; the gift of the poor is painful; the harsh words of the cruel are unpleasant also.

அ. ஆற்ற லிலாதான் பிடித்த படையின்னா
நாற்ற மிலாத மலரி னழகின்னா
தேற்ற மிலாதான் றுணிவின்னா வாங்கின்னா
மாற்ற மறியா னுரை.

8. The weapons borne by a man without energy are unpleasant; the beauty of a scentless flower is unpleasant; the starting of a business by one, who has no clear idea of it, is unpleasant; unpleasant too is the speech of one who observes not etiquette.

கூ. பகல்போலு நெஞ்சத்தார் பண்பின்மை யின்னா
நகையாய நண்பினர் நாரின்மை யின்னா
இகலி னெழுந்தவ ரோட்டின்னா வின்னா
நயமின் மனத்தவர் நட்பு.

9. It is unpleasant when people whose heart is clear as daylight have not some other good qualities also; uupleasant if good friends are heartless; it is unpleasant for those who set out for a battle to retrace their steps fleeing before the enemy; unpleasant the friendship of the evil-minded.

ம. கள்ளில்லா மூதூர் களிகட்கு நன்கின்னா
வள்ளல்க ளின்மை பரிசிலர்க்கு முன்னின்னா
வண்மை யிலாளர் வனப்பின்னா வாங்கின்னா
பண்ணில் புரவி பரிப்பு.

10. To drunkards, an ancient city without a toddy shop is unpleasant; absence of donors is unpleasant to beggars; the beauty of the miserly is unpleasant; unpleasant the riding of a horse without a saddle.

கக. பொருளுணர்வா ரில்வழிப் பாட்டுரைத்த லின்னா
இருள்கூர் சிறுநெறி தாந்தனிப்போக் கின்னா
அருளில்லார் தங்கட் செலவின்னா வின்னா
பொருளில்லார் வண்மை புரிவு.

11. To recite poetry before those, who understand not the meaning of words is unpleasant; unpleasant to walk along a dark and narrow path, alone; unpleasant to seek the ungracious; unpleasant too the desire of the destitute to give away gifts.

(தொடரும்)

# புதுக்கவி—Original Poetry

## நடுகல்

[வித்துவான் திரு. இலர்தைச் சாம்பசிவன்]

### ஒரு வீரன் அடக்கம்

1. முரசமும் முழங்க வில்லை
முன்னொரு வார்த்தை யில்லை
விரைவுடன் கொண்டு சென்றே
வீரனைப் புதைப்பான் புக்கார்
பாவிடும் வீரர் தாமும்
பகர்வெடி வெடித்தா ரில்லை
கரைசெய வரிய துக்கக்
கலக்கமே மிகுந்து நிற்க ;

2. இருளுறு வேளை தன்னில்
இசைபெறு வீரன் தன்னை
மருள்தரு மிருளை நீக்கு
மீனொளி வானிற் காண
நிரைதரு வீரர் சூழ
நிலவொளி மங்கித் தோன்றப்
புரையில்லை விளக்கும் மங்க
வீரனைப் புதைப்பான் புக்கார்.

3. இசைபெறு வீரன் தன்னை
இலங்கிழை யாடை தன்னால்
நசையுட னணிசெய் தாங்கே
நட்பினைக் காட்டி னரில்
திசைபுக ழிசையே சூழ்ந்து
திகழ்ந்திட வவன்றன் மேனி
விசையுட னெடுத்துச் சென்று
வீரனைப் புதைப்பான் புக்கார்.

4. அருஞ்சமர் முடிந்த வாற்று
லருங்கிளைப் பாற்றிக் கொள்வா
னிருப்புவி யதன்மேல் வீழ்ந்தே
இறந்தவன் கிடந்தான் மன்னே!

பெரும்புகழ் படைத்த வீரன்
பிறங்குநன் முகத்தைக் காணு
வரும்பெற லன்பு பூண்ட
வனைவரு மூக ரானூர்.

5. மனங்கரைந் துருக வீரர்
வாய்மொழி புகன்று ரில்லை
குணங்களிற் சிறந்த வீரன்
குவலயம் போற்ற மாய்ந்தான்
சினங்கெழு பகைவர் தாக்குஞ்
செய்தியை நினைந்து வீரர்
மனங்கவன் றுரையா நின்றூர்
மாற்றலர் சூழ்ச்சி யாய்ந்தே.

6. கடவுளைத் தொழுதா ரல்லர்;
கல்லிடைப் படுத்த வீரன்
அடலுறு செயலைக் கண்டும்
அணிந்துரை நிகழ்த்தி னூரில்
உடலெலாம் நடுங்க வீரற்
குறுகுழி தோண்டி; வீரன்
உடலினைப் புதைத்தா ருண்மை
யுறுபுகழ் புதைத்தா ரல்லர்.

7. புவிதொடு குழியே பாயல்;
புவிபுகழ் இசையே ஆடை;
கவிபல கழறு வாரும்
கரைந்துவாய் குழற நின்றூர்
புவியினிற் றேன்றி வீரன்
புகழினைப் பரப்பி மீண்டும்
புவியினிற் புதைந்தா னன்றே
புல்லுடம் பழிவு காட்டி.

8. வீரனைப் பயந்த தாயும்
விழிமலர் சிவப்ப வைந்து "நல்
வீரனைப் பயந்தேன் இன்றே
வீறுபெற் றுயர்ந்தே" னென்று

சீர்பெறு மார்பிற் றைத்த
செஞ்சரங் கண்டின் புற்றே
ஆர்தரு மாவல் பொங்க
வணைத்துபா லீந்தா ளன்றே.

9. அரசனும் வந்து நின்றான்
அமைச்சரும் வந்து நின்றார்
வரிசையாய் வீரர் நிற்க
வந்தனள் வீர னில்லாள்
விரிகுழல் சோகங் காட்ட
விழிக்கணீர் வடிக்க விம்மித்
தரைமிசை கிடக்கும் வீரன்
றணையனைத் தேங்கி னாளால்.

10. யாவரும் புலம்ப ; வீரன்
எடுத்தநற் குழியிற் றாங்கச்
சாவினைத் தவிர்ப்பா ரில்லை
தாணியி லென்று சாற்றி
ஓவிய மனைய வீரன்
உருவினைக் கல்லிற் செய்தே
மேவிய புகழ்பொறித் தாங்கே
மேம்பட நாட்டிப் போந்தார்.

11. எலும்பொடு நரம்பு மேதை
யிரத்தமுஞ் சேர்ந்த யாக்கை
புலம்பொடு குழியிற் போகும்
புன்மையை வெறுத்த வாபோல்
நிலம்புகழ் கீர்த்தி நிற்க
நெடிதுநா ளுழைத்த வீரன்
நிலந்தனி லோய்வு கொள்ள
நீத்தவர் வந்தா ரன்றே.

12. 'நடுகல்' பெற்றுயர் நற்புகழ் வீரனும்
தொடுக டற்புவி தொழப்பெறு தெய்வமாய்
வடுவி லாதவர் வணங்கியே வாழ்த்திட
நடுகல் கொண்டுமே நற்பெயர் நாட்டினன்.

---

# வரலாற்றுப் பகுதி:
# History & Biography.

உ

சிவமயம்

அறிவுநூற் புலவர் (Professor of Philosophy)

ராய்பகதூர் P. சுந்தரம்பிள்ளை (எம்.ஏ.) அவர்கள்

## வரலாற்றுச் சுருக்கம்

நீர்வளம் நிலவளஞ் செறிந்த சேரநாடாகிய திருவிதாங்கூரைச் சேர்ந்தது துறைமுகப் பட்டினமாகிய ஆலப்புழை என்னும் ஊர். இவ்வூரில், வேளாளர் மரபில் திருவாளர் சுந்தரம்பிள்ளையவர்கள் கி. பி. 1855-ம் ஆண்டு (1030 M.E.) பங்குனித் திங்கள் 28-ம் நாள் பிறந்தனர். இவர் தந்தையார், பெருமாள் பிள்ளை என்னும் இயற் பெயர் வாய்ந்தவர்; ஒரு பெரிய துணி வணிகர். இவர் மிகுந்த கடவுட் பற்றும் நுட்பமான அறிவும் அமையப் பெற்றவர்; தேவாரம், திருவாசகம், திருக்குறள், திருவிளையாடற் புராணம் முதலிய அருட்பெரு நூல்களை நெட்டுருச் செய்து சொல்லுந் திறமுடையவர். மாடத்தி என்பது இவர்தம் மனைவியார் பெயர். தங்கட்கு நெடுங்காலம் பிள்ளைப் பேறில்லா திருந்தமையால் தாய் தந்தையரிருவரும் மிக வருந்தினார்கள். மதுரைமா நகரில் திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கும் தம் குலதெய்வமாகிய சோமசுந்தரக் கடவுளை நோக்கித் தவங் கிடந்தனர். அத் தவத்தின் பயனாகச் சில காலத்தில் ஓர் அழகான ஆண்மகவு இவர்கட்குப் பிறந்தது. இம் மகவுக்குச் சுந்தரம் என்னும் அப்பிரானது திருப்பெயரை அவர்கள் இட்டு வழங்கிவந்தனர்.

பெற்றோர்கள் இச்சிறு மகவை மிக அருமையாகப் பாராட்டி வளர்த்தார்கள். குழவிப் பருவம் நீங்கிப் பிள்ளைமைப்பருவம் அடைந்து ஐந்து ஆண்டு நிரம்பியதும், இவரை, இவர் தந்தையார்

தமிழ்க்கல்வி கற்க ஆலப்புழையில் உள்ள ஒரு பள்ளியில் வைத்தனர். பள்ளிக்கூடத்திற் பயிலும்போதே, இவர் தந்தையார் இவருக்கு ஆத்திசூடி, கொன்றைவேந்தன், நல்வழி, மூதுரை, நன்னெறி, நீதிநெறிவிளக்கம் முதலிய நீதி நூல்களையும், தேவாரம், திருவாசகம் முதலிய அருட் பாடல்களையும், திருக்குறள் முதலிய அறிவுப் பெரு நூல்களையும் ஒழுங்காகக் கற்பித்து வந்தனர். இதன் பயனாக இவர் தமது பன்னிரண்டாம் ஆண்டிலேயே தாய்மொழியாகிய தமிழ்மொழியிற் பேசவும் எழுதவும் வல்லுநராயினர். பின், ஆலப்புழையிற் புதிதாக அமைக்கப்பட்ட ஆங்கிலக் கல்விச்சாலையில் ஆங்கிலங் கற்கத் தொடங்கி (Pre - Entrance) பிரவேசத் தேர்ச்சிப் படிப்புவரை கல்விகற்றனர். அக்காலத்தில் அக்கல்விச்சாலைத் தலைவராயிருந்த மிஸ்டர் பீல் (Mr. Peel) என்னுந் துரைமகனார் பிள்ளையவர்களுடைய அறிவு நுட்பத்தையுஞ் சுருசுருப்பையும் ஆராய்ச்சி யறிவையுங் கண்டு வியந்து, இவர் பின்வாழ்க்கையில் பெரும்புகழ் எய்துவர் என்று பலமுறையும் பலரிடத்துங் கூறியுள்ளார்.

அதன் பின்னர், இவர் திருவனந்தபுரம் மகாராஜா கல்லூரியிற் சேர்ந்து உயர்தரக் கல்வி பயிலப்புகுந்தனர். அவ் வாண்டில் பத்தாவது வகுப்பில் இவர் முதல்வகுப்பில் முதலாவதாகத் தேர்வு பெற்றனர். அதனால், அரசியலார் இவருக்குத் திங்கள்தோறும் எட்டு ரூபாய் உதவிப்பணங் கொடுத்து வந்தனர். இவ் வுதவித் தொகை இவருக்கு (B.A.) பி. ஏ. தேர்வு முடிவுவரை கொடுக்கப்பெற்று வந்தது. இவர் ஒவ்வொரு வகுப்பிலுந் திறமையாகக் கல்விகற்று வந்தனர். இவருடைய கல்வித் திறமையினையும், கூர்த்த மதியினையுங் கண்ட கல்லூரி யாசிரியர்கள் இவர்பாற் பேரன்பு பூண்டனர்.

இவர், 1876 ௵. ஆண்டில், திருவனந்தபுரத்தில் முதன்மையாகவும், சென்னை மாகாணத்தில் நான்காவதாகவும் பி. ஏ. தேர்வு தேறினர். இவர் மாணவராயிருந்த பொழுது, தம் தாய்மொழியாகிய தமிழ் மொழியைப் பயில்வதிலும், அறிவு நூல்களை ஆராய்வதிலும் அவாமிக்குடையராய் விளங்கினர். பி. ஏ. தேறியதும் இவர் கல்வித் திறமையறிந்த மிஸ்டர் ராஸ் (Mr. Ross) என்னுங் கல்லூரித்தலைவர், இவரை அக் கல்லூரியிலேயே எப். ஏ., பி. ஏ. வகுப்புக்களுக்கு வரலாற்று நூலும் (History), பி. ஏ. முதல்

வகுப்புக்கு அறிவு நூலும் (Philosophy) கற்பிக்கும் ஆசிரியராக அமர்த்தினர். இவர் மாணவர்கட்குக் கல்வி கற்பிப்பதிற் றிறமை மிக்கவராக விளங்கினர். இவர் கல்வி கற்பிக்கும்பொழுது, மாணவர்கள் இவரது விரிவுரையிற் பெரிதும் ஈடுபட்டிருந்து கேட்டு மகிழ்வார்கள். ஆசிரியர்வேலையில் அமர்ந்தபின், இவர் தம் இருபத்தோராம் ஆண்டில் (1877-ஆம் ஆண்டு தைத்திங்கள்) நற்பண்புகள் நிரம்பிய சிவகாமி என்னும் பெண்ணரசியை மணந்து இல்லறவாழ்க்கை நடத்தி வந்தனர்.

அக்காலத்தில், சென்னைக் கல்வித்துறைத் தலைவராயிருந்த டாக்டர்டன்கன் (Dr. Duncan) என்னுந் துரைமகனர், திருவனந்தபுரம் அரசர் கல்லூரித் தலைவர் (மிஸ்டர்) ராஸ் (Mr. Ross) துரையவர்களைத் திருநெல்வேலி ஆங்கிலத்தமிழ்க் கல்விச்சாலைக்குத் தக்க ஒரு தலைவரைத் தெரிந்து அறிவிக்கும்படி கூறினர். இதுகேட்ட ராஸ் துரையவர்கள் சுந்தரம்பிள்ளையவர்களே அவ் வேலைக்குத் தக்கவரெனக் குறிப்பிட்டனர். அவ்வாறு அவர் குறிப்பிடவும், கல்வித்துறைத் தலைவரவர்கள் 1877-ம் ஆண்டிறுதியில், திருநெல்வேலி ஆங்கிலத் தமிழ்க் கல்விச்சாலைக்குச் சுந்தரம்பிள்ளையவர்களைத் தலைவராக அமர்த்தினர்கள். இவர் தலைவராயமர்ந்து அக் கல்விச் சாலையை மிக்க திறமையுடன் நடத்திவந்தார். இவர் அங்குச் செய்த பெருமுயற்சியின் பயனைப் பத்தாவதுவகுப்பு வரையிருந்த அக்கல்விச்சாலை எப். ஏ. (F.A.) வகுப்பமைந்த இரண்டாவது வகுப்புக் கல்லூரி (Hindu College) யாக மாறியது.

இவர் திருநெல்வேலியி லிருந்தபொழுது, கோடகநல்லூர் உயர்திரு. சுந்தரசுவாமிக ளென்னும் பெரியாரைக் கண்டு, அவரொடு பழகி, அவரது தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபட்டு அவருக்கு மாணவராயினர். இன்னும், பிள்ளையவர்கள் தம் ஆசிரியரிடம் சமய நூல்கள் பல கற்று, அவைகளில் அறிவு நிரம்பப் பெற்றார். இக்காலத்திற்றான் இவர், மனோன்மணீயம், நூற்றொகை விளக்கம் என்னும் அரிய நூல்களை எழுதத் தொடங்கினர். இவர் மனோன்மணீயம் என்னும் அரிய தமிழ் நாடகநூலை யியற்றி, அந் நூலின் சிறப்புப்பாயிரத்தில் "தமிழ்த்தெய்வ வணக்க"ங் கூறி, அதில் தமிழ்மொழியின் சிறப்பை மிக அழகுபெற எடுத்துக் காட்டியிருக்கின்றார். இவர் பாடியிருக்கின்ற அச் சில பாக்களி

னாலேயே இவர் செய்யுளமைக்குந் திறமை மிக்கவரென்பது நன்கு புலனும். தமிழ்த்தெய்வ வணக்கப் பாக்கள் சிலவே யாயினும், அவை பொருட் செறிவும் இன்சுவையும் பொருந்தி மிளிர்கின்றன. இவர், தம் ஆசிரியரிடத்து வைத்திருந்த பெரும் பற்றையுஞ் செய்ந்நன்றியறிதலையுங் காட்டும்பொருட்டு, மனோன்மணீயத்தில் தம் ஆசிரியர் சுந்தரமுனிவரை ஒரு சிறந்த நாடக உறுப்பாக அமைத்திருக்கின்றார். இவருடைய கல்வித் திறமையை யறிய விரும்புவோர் இவரது அரும்பெரு நூலாகிய மனோன்மணீயத்தைப் பயின்றறிதல் ஒன்றே போதும். இக்காலத்தில் இவர்தம் ஆசிரியர் சுந்தர முனிவரியற்றிய "நிஜானந்த விலாசம்" என்னும் நூலை இவரும் இவர்தம் நண்பர் திரு. மாவடி சிதம்பரம் பிள்ளையவர்களுமாக அச்சிட்டு வெளியிட்டார்கள்.

1878-ம் ஆண்டு மாசித்திங்கள், இவர்தம் அருமை அன்னையார் திருநெல்வேலியில் சிவபிரான்றிருவடிநீழ லெய்தினர். ஆதலால், இவர்தம் தந்தையாரைப் பேணும் பொறுப்பு இவர்க்கு இயல்பாகவே அமைந்துவிட்டது. 'தந்தை தாய்ப் பேண்' என்று ஔவைப் பிராட்டியார் கூறிய முதுமொழிக்கிணங்க, இவர் தம் பெற்றோரிடத்தில் பேரன்புவைத்து ஒழுகிவந்தனர். புறக்கண்ணாற் காணப்படுந் தாய்தந்தையரிடத்து வைக்கும் அன்பே, அகக்கண்ணாற் காணப்படும் கடவுளிடத்துக் காட்டும் அன்புக்கு அடிப்படையென்பதை இவர் நன்குணர்ந்தவர். தம் ஆசிரியத் தொழிலிலிருந்து வரும் ஊதியம் முழுவதையுமே, தம் அருமைத் தந்தையிடங் கொடுத்துத் தம் சிறு செலவுகளுக்குக்கூடத் தந்தையிடங் கேட்டுத்தொகை பெறுவது இவர் வழக்கம். இவருடைய ஆங்கிலப் படிப்பானது, பண்டைத்தமிழர் வழக்கத்திற்கிணங்க, இவர் தம் பெற்றோரிடங் காட்டி வந்த வணக்கத்தையும் பணிவையும் ஒரு சிறிதுங் குறைக்கக் காரணமாயிருக்கவில்லை.

1879-ம் ஆண்டில், திருவனந்தபுரம் மகாராஜா கல்லூரியில் சிறந்த அறிவுநூற்புலவராயிருந்த டாக்டர் ஹார்வி (Dr. Harvey) துரையவர்கள் தம் தாய்நாடு செல்லும்போது, நமது சுந்தரம்பிள்ளையவர்களைத் தாமிருந்த வேலையில் அமர்த்திச் சென்றனர். அதன்பின், 1880-ம் ஆண்டில், இவர் எம். ஏ. (M.A.) தேர்வு பெற்றார். இக்காலத்தில் இவர், தம் ஆசிரியத் தொழிலைச் செவ்வனே நடத்தி வந்ததுமன்றி, தமிழிலக்கியவளர்ச்

சிக்கான உழைப்பிலும் தலைசிறந்து நின்றார். இவர் திருநெல்வேலியிலிருந்தகாலை, எழுதத் தொடங்கிய மனோன்மணீயம், நூற்றொகை விளக்கம் என்னும் நூல்களைச் செவ்வனே எழுதி முடித்தனர். திருவிதாங்கோட்டின் பல பகுதிகளிலுமுள்ள பழைய திருக்கோயில்களிற் பாழடைந்து பாதுகாப்பற்றுக் கிடந்த கல்வெட்டுக்களைப் பிள்ளையவர்கள் தமது பொருட் செலவிலேயே ஆராயத் தொடங்கினர். (தொடரும்)

——

## குறிப்பு

தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையின்

### ஐம்பதாவது ஆண்டு நிறைவுப் பொன்விழா

நிகழ் 1933ஆ டிசம்பர்மீ 24, 25-ஆம் (மார்கழித் திங்கள் 10, 11-ஆம்) நாட்களில் ஷை விழா மகிபாலன்பட்டி சைவத் திருவாளர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெறும். கோயமுத்தூர் வழக்கறிஞர் சைவத் திருவாளர் C. K. சுப்பிரமணிய முதலியார் B.A., F.M.U. அவர்களால் விழா மகாநாடு திறந்து வைக்கப்பெறும்.

ஷை முதலியாரவர்களால் ஆளுடைய பிள்ளையார் அருள் மொழிகள், வாகீசர் காட்டிய வழி, ஆவினிப்பட்டி சிவஸ்ரீ. வ. மு. இரத்தினேஸ்வரய்யரவர்களால் சிவ வழிபாடு, சைவத் திருவாளர்கள் சென்னை மயிலை. சுப்பிரமணிய முதலியாரவர்களால் ஆலவாயிலான் பாலதாயினர், மேலைச்சிவபுரி மு. அருணாசலம் பிள்ளை யவர்களால் திருக்கோவையார், தோரமங்கலம் ஆசிரியர் அ. வரதநஞ்சையபிள்ளை அவர்களால் பதியும் பசுவும், ஐந்தொழில் நடனம், நாகர்கோவில் K. ஆறுமுகம்பிள்ளை யவர்களால் கடவுள் ஒருவரே, சிவகதி விளைவு என்னும் சொற்பொழிவுகள் நடைபெறும்.

தென்னார்காடு ஜில்லா 26-ம் நாள் கிழக்குமருதூர் மிராசுதார் சைவத்திருவாளர் தி. கு. கி. நாராயணசுவாமி நாயுடு அவர்கள் தலைமையில் ‘சைவ இளைஞர் மகாநாடு’ம், சென்னை திருவளர் செல்வியார் மாணிக்கவாசக சரோஜினி அம்மையா ரவர்கள் தலைமையில் ‘சைவ மங்கையர் மகாநாடு’ம், உயர்திரு. சுந்தர ஓதுவாமூர்த்தி அவர்களால் கதாப் பிரசங்கமும் நடைபெறும்.

விபரமான நிகழ்ச்சிக் குறிப்பு அமைச்சர்களிடம் பெற்றுக் கொள்ளலாம்.

---

# தமிழ் அன்பர் மகாநாடு

கோல மழை பொழியக் குளிர்ந்திருக்கும் ஒரு நாட்டிற் பல்லாண்டு கோடை வறட்டிக் கொடுமை விளைக்குங்கால் வானம் சுரந்து சிறுதுளி சிதறினும் "வாய்ப்பு வாய்ப்பு" என்று கொள்ளாரோ மக்கள்? அற்றே, குறிஞ்சியும் முல்லையும் பாலையும் நெய்தலும் நெடுநல்வாடை வீச, பாமழை பொழிய, சிலம்பும் மேகலையும் வளையுங் குண்டலமும் அணிந்த மக்கள் எற்றமும் இறைவையும் போற்றலும் தூற்றலும் அழுகையும் தொழுகையும் பாட்டாய்ப் பாடித் தூய தமிழ்வளங் கொழித்த இத்தண்டமிழ் நாட்டில், வேற்றுமொழி யாட்சியும் மாற்றலர் சூழ்ச்சியும் கோடையாய் வறட்ட, தூய்மை மங்கிக் கொச்சை பொங்கும் கொடுமை மிகவிருக்கும் இக்காலத்தில் தமிழன்பர் மகாநாடு என்ற சிறு தூறல் தூறுவதும் நற்குறி யன்றோ? உண்மை நலங் கனிந்த தண்டமிழ்த் தொண்டர்களாம் மறைமலை யடிகளார் கா. சுப்பிரமணிய பிள்ளை M.A.,M.L., பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், ச. சச்சிதானந்தம் பிள்ளை, ந. மு. வேங்கடசாமி நாட்டார் ஆதிய பெருமக்கள் ஆதரவு கொண்டு இம்மகாநாடு நடைபெறுவதாயின் இதைச் சிறுதூறல் என்னாது பெரும் பெயலென்றே கூறியிருப்போம். எனினும் இம்மகாநாடும் தமிழ்மொழியின் தூய்மைக்கும் தனிப் பெருமைக்கும் உலைவைக்காதும், தமிழ் மக்களின் ஒழுக்க மேம்பாட்டினைக் கிழறுக்காமலும் தமிழ்மொழி யாக்கத்திற்குத் தமிழ்மரபு சிதையாமல் வழிகோல முயலுமேல் நாட்டிற்கு நலம்பயக்க மேற்கொள்ளும் முயற்சிகளில் சிறந்ததொரு நன்முயற்சியாகவே இதனைக் கருதிப் போற்றுவோம்.

---

## பிழையும் திருத்தமும்

செல்வி 2-வது பரலில் வெளிவந்த திருவாதவூர் என்னும் படங்கள் திருப்பரங்குன்றப் படங்களாம். ஆதலால் திருப்பரங்குன்றம் என்று திருத்திக் கொள்வார்களாக.

---

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது

| | | |
|---|---|---|
| சிலம்பு கஉ | மெய்கண்டான் யாண்டு-எகக மார்கழித் திங்கள் 1933ஹு டிசம்பர்மூ—1934 ஜனவரிமூ | பரல் ரு |

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

என்னி லாரு மெனக்கினி யாரில்லை
என்னி லும்மினி யானொரு வன்னுளன்
என்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கு மின்னம்ப ரீசனே.

பதவுரை:—

என்னில்—என்னைப் பார்க்கிலும்

எனக்கு யாரும் இனியார் இல்லை—எனக்கு இனியராவார் எவரும் (மக்களுக்குள்) இல்லை

என்னிலும்—ஆனால் என்னைப் பார்க்கிலும்

இனியான் ஒருவன் உளன்—எனக்கு இனியனாவான் ஒருவன் இருக்கின்றான்

என் உள்ளே (உம்)—(அவன் யார் என்னில்) எனது உடலினுள்ளே தங்கியும்

புறம்போந்து (உம்)—எனது உடலுக்குப் புறத்திலே சென்றும்

புக்கு (உம்)—புறத்திலிருந்து உடலினுள்ளே வந்தும்

உயிர்ப்பாய்—(எனது உடலிலுள்ள உயிர்க்கு ஆதாரமாய் இயங்குகின்ற) மூச்சுப்போல்

என் உள்ளே நிற்கும்—எனது உயிருக்கு ஆதாரமாய் அதனோடு ஒன்றாகிக் கலந்தும் வேறாகி நின்று அறிவித்தும் உடனாகி நின்று அறிந்தும்

எனது உள்ளத்தினுள்ளே பேரொளிப் பொருளாய், அதனை நிலை பெற்று நிற்கின்ற

இன்னம்பர்ஈசன்—திரு இன்னம்பர் என்ற தலத்தில் திருக்கோவில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் சிவபெருமான்.

விளக்கவுரை:—

இனியார் இல்லை என்னினும் இனியான் ஒருவன் உளன்—இனிமையை உடையவர் இனியார் ஆவார். எது உயிரினுக்கு நிலையான நலம் தருமோ அது இனிமையாகும். பெற்றோர் உற்றோர் உறவினர் முதலிய மக்கள் பலராயிருத்தலின் 'இனியார்' என்று பன்மையிலும் முழுமுதற் கடவுளான சிவபெருமான் ஒருவரா யிருத்தலின் 'இனியான்' என்று ஒருமையிலும் கூறினர். பகுத்தறிவுடைய மக்களெல்லாரும் உலக வாழ்வின் இன்ப நலத்தையே வேட்கை (இச்சை) யாலே நாடி அறிவினாலேதேடி செயலாலே கூடுகிறவர்களானாலும் உலக நெறியில் அவர்களுடைய வேட்கை அறிவு செயல்கள் திரோத மலத்தால் மறைப்புண் டிருத்தலினாலும் வீட்டு நெறியில் இருவினை யொப்பு மலபரிபாகம் சத்திநிபாதம் நிரம்பும் காலம்வரை அருள் விளக்கம் குறைவா யிருத்தலாலும் தங்களுக்கு உண்மையான இன்ப நலம் இன்னது என்று அறியமாட்டார்கள். ஆதலின் அவர்கள் வேட்கையோ டொன்றாகிக் கலந்து வேட்கையை விளக்கி வேட்பித்து அறிவுக்கு வேறாய் நின்று அறிவில் விளக்கி அறிவித்தும் விடயப் பொருளோடு உடனாய் நின்று அவர்களுக்கு விடயங்களை விளக்கி அறிந்தும் வருகின்ற முற்றறிவினனாய்ச் சிவபெருமான் அவர்களுக்கு உண்மை நலத்தை நாடி அறிந்து என்றும் பொதுவாய் எல்லா மக்களுக்கும் கூட்டுவிப்பான் என்ற உண்மையைத் தன் மேலேற்றி அடிகள் கூறினர். "எனக்கு வேண்டத்தக்க நலத்தினை நீயே நன்கு அறிவாய்" "நீயே அதனை எனக்குச் செய்தருள்வாய்' என்று ஒருவர் தன் நலத்தைப் பெருமானிடம் ஒப்புவிப்பாரானால் அவன் அவரது உண்மை நலத்தை நன்கு அறிந்து முன்னின்று செய்விப்பன் என்பது கருத்து.

என் உள்ளே (உம்) புறம்போந்து (உம்) புக்கு (உம்) உயிர்ப்பாய்—தொக்கு நின்ற உம்மைகளை மூன்றிடங்களிலும் விரித்து உரைக்க. என் உள்ளே—எனது உடலின் உள்ளே. உயிர்ப்பாய் என்பதிலுள்ள ஆய் உவமப் பொருளில் வந்தது. சிவஞானபோதம் 7-ம் சூத்திரம் 'அருவுருவ மன்றாகும்' என்ற வெண்பாவில் அருஉரு ஆய் என்பதில் ஆய் உவமப்பொருளில் வந்தது என சிவஞான சுவாமிகள் உரை கூறி யருளியதும் காண்க. 'ஆள்வாரிலிமாடாவேனோ' என்ற திரு

வாசகச் சொற்றொடரிலும் ஆய் உவமப்பொருளில் வந்தது காண்க. உயிர்ப்பாய் என்ற உண்மையால் மூச்சு உள்ளே வாங்குதலும் புறத்திலும் விடுதலும் எவ்வாறு உடலில் உயிர் நிற்பதற்கு ஆகாரமா யிருக்கிறதோ அவ்வாறு சிவபெருமான் உயிர்களோடு ஒன்றாய் நிற்றலும் வேறாய் நிற்றலும் உடனாய் நிற்றலும் உயிர்கள் வேட்கை அறிவு செயல்களை நிகழ்த்தி இயங்குதற்கு ஆதாரமாயுள்ளன என்று கூறப்பட்டது. உயிர்ப்பாய் என்பதற்கு உயிர்ப்பாக என்று பொருள் கொண்டு சிவபெருமான் பிராணவாயுவை இயக்குகிற சத்தியாக நின்று மூச்சை உள்ளே இழுத்தும் வெளியே விடுத்தும் உள்ளே தங்கியும் உடலில் அதனுடன் சேர்ந்திருக்கின்றான் என்று பொருள் கூறினும் பொருந்தும். 'உயிர்ப்புளே வருதியேனும்' என்று திருநாவுக்கரசு அடிகள் தனித்திருநேரிசைப் பதிகம் 7-வது பாட்டிற் கூறியிருத்தல் காண்க. ஆனாற் பதவுரையிற் கூறப்பட்ட பொருள், இப்பொருளினும் சிறப்புடையது.

என்னுள்ளே நிற்கும்—என்னுள்ளே—எனது உயிரினுள்ளே, நிற்கும்—எப்பொழுதும் நீங்காம லிருக்கும்.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

## ஆலூர்மூலங்கிழார் பாக்களின் அருங்கருத்துக்கள்

---

1. செங்கோல் மன்னனது நாடு துறக்க வுலகினுஞ் சிறந்தது.

2. வேந்தே! நீ காட்சிக் கெளியனாயும் கடுஞ்சொல் அல்லனாயும் இருப்பாயாக.

3. பலநாள் உடல் உலரக் காத்திருந்து பெருஞ் செல்வரிடத்துப் பெற்ற யானை முதலிய பரிசில்களைக் காட்டிலும் ஒருவன் அன்புடனளிக்கும் உணவைக் காலையிற் பனம்பட்டையில் உண்ணல் மிகச் சிறந்தது.

4. பெருமானே! கையிலுள்ளதைக் கொடுத்தலும், இல்லாததை இல்லையென்றலும் உலகியற்கை; அங்ஙனமின்றிப் பரிசிலரை அலைக்கழித்தல் உனக்கு நன்றன்று.

---

# சமயமும் தத்துவமும் :
# Religion & Philosophy

## மும்மையாலுலகாண்ட மூர்த்தி

(முன் கடுஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

(வித்வான் T. P. மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் M.A., B.L.,)

கஞ மெய்யானமை:—ஆனுல் மூர்த்திநாயனுர், மெய்யுணர்வு கைவரப்பெற்ற அறவோராய் வாழ்ந்தபின்னரே அரசராய் உலகை ஆண்டார் ஆதலின் ப்ளேடோவின் கொள்கையை மெய்ப்படுத் தற்குத் தக்க எடுத்துக்காட்டாக விளங்குகிறுர்.

தலைகீழான தலைமுறை:—அம்மட்டோ? மூர்த்திநாயனுரைச் சேக்கிழார் பெருமான் செட்டிக்குடியில் பிறப்பிக்கின்றுர். இவர் பொதுமக்களில் ஒருவராய் வாழ்ந்து சிவனை வழிபடும் நோன்பு நோற்று அறவோராய்ப் பின் அரசராகின்றுர். செட்டிமகனுர் தொண்டுநிலை பூண்டு அந்தணராய்ப் பின் அவ்வருள்வழியே அரச ராகின்றுர். குடிப்பிறப்பை இவ்வாறு சேக்கிழார் தலைகிழாகத் திருப்புவதன் நுட்பத்தை உற்று நோக்குதல்வேண்டும். செட்டிக் குடியில் பிறந்தார் தொண்டராகின்றுர். அந்தணர் நிலையில் வாழ்ந்த பின் அரசராகின்றுர். நாற்குடி ஒழுக்கமும் முறை பிறழ்ந்தேனும் இவ்வாறு இவரிடம் ஒருங்குதிரண்டு விளங்குகின்றது. இறைவ னது தொண்டராய் உலகினரையும் நடமாடுங் கோயிலாகக் கொண்டு வழிபட்டனராதலின் உலகிற்கும் தொண்டராய் விளங் கினமையால் நாலாம் குடியின் ஒழுக்கமும் இவரிடம் உண்டு. செட்டிக்குடியிற் பிறத்தலின் மூன்றுங்குடி ஒழுக்கமும் உண்டு. அரசராய் ஆளுதலின் இரண்டாங்குடி ஒழுக்கமும் உண்டு. அனைத் துயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகுதலால் அந்தணர் எனப் படுவோர் இவ்வறவோரே யாதலின் முதற்குடி ஒழுக்கமும் இவ ரிடம் உண்டு. இவ்வாறு எல்லாக்குடி ஒழுக்கமும் ஒருவனிடத்தே ஒருங்கு திரளுதல்வேண்டும் என்கிறுர் சேக்கிழார். ஆதலின் இவர் ப்ளேடோவைவிட பலபடிகள் உயரச் சென்றுள்ளார்.

"ஒன்றே குலமும்":—குடிமுறையைத் தலைகீழாகத் திருப்புவதால் குடிப்பிறப்புக் கொள்கைகளைச் சேக்கிழார் முற்றும் ஒப்புக்கொண்டவரல்லர் என்பது வெள்ளிடை. பிறப்பாலேயே அரசனாதல்வேண்டும்; பிறப்பாலேயே அந்தணனாதல் வேண்டும். 'இக்குடி யுயர்ந்தது முதலாவது; இக்குடி தாழ்ந்தது நான்காவது' என்ற கொள்கையை மூர்த்திநாயனார் வாயிலாகச் சேக்கிழார் மறுக்கின்றார் எனலாம். நாற்பாற்குடியினரின் ஒழுக்கங்களும் மேற்கண்டபடி விளங்குமாயின் அவையனைத்தும் தலைசிறந்தனவே என்பதனையும் அவையனைத்தும் ஒருவனுடைய உயர்நிலைக்கு இன்றியமையாதன என்பதனையும் மூர்த்திநாயனார் வாழ்க்கை நன்கு வற்புறுத்துகின்றதல்லவா? இவ்வாறு கொண்டாலன்றோ "ஒன்றே குலமும் ஒன்றே தெய்வமும்" என்பது மெய்யாகும்.

அரசனும் அடிமையே:—அரச செல்வத்தில் அனைவர்க்கும் உரிமையுண்டு. ஆனால் அதற்குத் தகுதியாளரே அச்சுமையைத் தாங்குதல்வேண்டும். அரசன் இல்லையானால் நாடே இல்லையாம். ஆனால், அவன் பொதுமக்கள் நன்மையையே கருதி யாளுதல் வேண்டும். அரசசெல்வ மனைத்தும் பொதுமக்களின் செல்வமே யாகும். அரசன் ஒரு செயலாளனேயாம்.

'தாழுஞ் செயலின் றொருமன்னவன் தாங்க வேண்டும்
சூழுங் குடியு முதலாயின கொள்கைத் தேனும்
சூழும் படைமன் னவன்றோ ளிணைக்காவ லின்றி
வாழுந் தகைத் தன்றிந்த வையகம் என்று சொன்னார்.'

'பன்முறை யுயிர்கள் எல்லாம் பாலித்துஞாலங் காப்பான்
தன்னெடுங் குடைக்கீழ்த் தத்த நெறிகளிற் சரித்து வாழும்
மன்னரை யின்றிவைகும் மண்ணுல கெண்ணுங் கல்லை
இன்னுயி ரின்றி வாழும் யாக்கையை ஒக்கும் என்பார்.'

என அமைச்சர்கள் வாய்வைத்துச் சேக்கிழார் கூறுவது காண்க. இவ்வாறு வாழ்ந்தார் மூர்த்திநாயனார் என்பதே நோக்கு. சேக்கிழார் கண்ட அரசியனுட்பம் ஈது.

காசே கடவுள்:—அறவோர் அரசான வரலாறு மற்றோர் உயரிய உண்மையையும் வற்புறுத்துகின்றது. துறவென்றால் எல்லாவற்றையும் விட்டுவிட்டுக் காட்டுக்குள்ளே போய் ஒளிந்து கொள்வதெனப் பலர் கருதுகின்றனர். அக்கொள்கையை இப்புனிதநுரை வரலாற்றிற் சேக்கிழார் மறுத்துரை யாடுகின்றார்.

திருவையும் தாயாகக்கொண்டு வழிபடுகின்ற நாடு இந்த நாடு என்பதைப் பலர் மறந்துவிடுகின்றனர். தீயோர்கள் நம்முடைய அன்னையாம் திருவினை ஆட்டிப் படைக்கும்போது காடு சென்று ஒளிப்பதோ அறவழி? உலகத்தை ஆள்பவள் திருப் பிராட்டியாதலின் அவளுடைய வழிபாடு நமக்கு இன்றியமையாததாம். தமக்கெனத் திருவினைத் தேடித் துய்ப்பார் தாயைத் தழுவிய கொடியோர் ஆவர். உலக நன்மையின் பொருட்டுத் திருவினை வழிபடுவார் தாய் வழிபாடு செய்வோர் ஆவர். இவ்வகையிலே செல்வராய் வாழ்தல் ஒவ்வொருவருடைய கடமையே யாம். துறவென்பது அகத்துறவே யாகும். பொன்னையும் பொருளையும் தனக்கெனத் தேடாது உலகுக்கெனத் தேடுதலும் துறவேயாம். அதற்கேற்ப மூர்த்தி நாயனர் இறைவனுடைய அருள் வழியே நின்று கொடியோருடைய கையில் சிக்கிய திருப்பிராட்டியாரை விடுவித்துச் சிவப்பெருநெறியில் உலாப்போக வைத்துத் தாமே அரசராய் முன்னின்று தாய் வழிபாடு செய்தமை காண்க. தமக்கென வாழாப் பிறர்க்குரியாளர்கள், தாம் செல்வராயபொழுதும், பழையபடியே தொண்டு செய்து வயிற்றை வளர்த்து வருவார்களே யன்றி, நாயுருவிபோலப் பற்றுக்கோடையே தின்று தீர்ப்பதில்லை.

மடைமாற்றிப் பாய்ச்சுதல்:—ஐம்புலனுலும் ஆரத் துய்க்கும் அரச செல்வத்திலே ஐம்புலனையும் அடக்கும் துறவிகள் எப்படி வாழக்கூடும்? பொய்த் துறவுக் கொள்கைகள் பரவிய பின்னரே இத்தகைய கேள்வி எழுகின்றது. தூங்கி மகிழும் குளத்தின் பச்சிலைப் பரப்பின் நடுவிலே பச்சைக்கல் மேடையின் நடுவே மணி விளக்குப்போல அழகிய தாமரைப்பூவானது காட்சி தந்து, இறைவனது அழகிய உண்மை வடிவம் இதனூடே இன்பக் கூத்தாடுவதனையுங் காட்டி இன்பக் கடலில் கண்டோரை அழுத்திவிடுகின்றது.

‘மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதம்.’

யானையின் வடிவம் செதுக்கிய கட்டை யொன்றைக் கண்டு அதன் அழகினை உணராமல் கட்டை என்றே கொண்டு இடறி

விழுவார் பலர். அழகு வெள்ளம் பொங்கி வழியும் இறைவன் வடிவமாக உலகம் நம் எதிரே நிற்கிறது. இதனை உண்மையறிவின்பு வடிவாகக்கொண்டு வழிபடமாட்டாதார் கல்லென்று கதறியும் நஞ்சென்று எண்ணி உயிர் இழந்தும் வருந்துகின்றனர். இவை யனைத்தையும் இன்பமாகக் காணக் கூடுமானல் பின் நமக்கு வேண்டுவதுதான் என்ன ? அவ்வாறு வழிபடுவான் ஐம்புலனும் ஆரத் துய்ப்பது ஆண்டவனது அழகு வடிவத்தே பொங்கி வழியும் இன்பத்தேனையே யாதலின், அங்கே ஐம்புலனை என் அடக்குதல் வேண்டும்? கடவுளைக் காணது மாறிநின்று கல்லைக்கண்டு முட்டிக்கொள்வதையன்றோ அப்புலன்களின் பெருவஞ்சனை என்று பெரியோர்கள் பழித்தனர்.

"மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னு ளெழுபரஞ் சோதி
உள்ளவா காணவந் தருளாய்"

என மணிவாசகப் பெருமானர் பாடுவது காண்க. கடவுட் காட்சி கைவரப் பெற்றால் புலன்கள் வேறு வழியில் இயங்குவதனை மடைமாற்றம் என்ற அழகிய சொற்றொடரால் விளக்குகின்றார் திருமூலர்.

'தானே புலனைந்துந் தன்வச மாயிடும்
தானே புலனைந்துந் தன்வசம் போயிடுந்
தானே புலனைந்துந் தன்னின் மடைமாறும்
தானே தனித்தெம் பிரான்றனைச் சந்தித்ததே'

இவ்வாறு மடைமாற்றுவதே வேண்டப்படுவது. ஐம்புலனையும் அடியோடு அடைத்துவிடுவது அறிவுடைய மக்கள் செயல் அன்று. இதுதான் வேண்டப்படுவதானல், கடவுள் நம்மைக் குருடாகவும் செவிடாகவும் படைத்திருப்பான்.

'அஞ்சு மடக்கடக் கென்ப ரறிவிலார்
அஞ்சு மடக்கும் அமரரும் அங்கில்லை
அஞ்சு மடக்கில் அசேதன மாம் என்றிட்
டஞ்சும் அடக்கா அறிவறிந் தேனே'

எனத் திருமூலர் முழங்குவது காண்க. இதனாலல்லவா, ஐம்புல அறிவைப் பழியாது,

'ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயனென்னும்
மெய்யுணர் வெய்தாக் கடை'

என்று பாடி ஐம்புல வுணர்வால் சிறப்பின்பம் பெறுவது, மெய் யுணர்வு கைவந்தபோதுதான் என வற்புறுத்துகின்றார் தமிழ் மறைபாடிய திருவள்ளுவனார்.

பல்லைப் பிடுங்குதல்:—அழகிய தாமரைப்பூவைக் கண்டு அக மகிழும்போது கேடொன்றும் புகுவதில்லை. பின் அவ்வின்பம் தணிந்ததும், "நான்" என்ற முனைப்பெழவே அதனைப் பின்பற்றிச் சென்று உலகிற் கொரு முதலாய் நின்ற அப்பூவைத் தமதாக்க எண்ணிப் பறிக்கச் சென்று கொடிக்குள்ளே கால் சிக்கி இறக் கின்றார்கள். இக்கொள்ளைக் கூட்டத்தார் தமக்கென்றும் தம் பெண்டு பிள்ளைக்கென்றும் எழுகின்ற இந்த அவாப் பேய் நமது பிடர் பிடித்து உந்தாதிருக்குமானால், இப்புலன்கள் பல்லற்ற பாம்புபோல விளையாட்டுப் பொருளாக விளங்குகின்றன. புலன் கள் என்ற பாம்புகளின் பற்று என்ற பற்களைப் பிடுங்கிவிட வேண்டும். இவ்வாறு பல்லைப் பிடுங்குவதனையே திருமூலரும்,

'அஞ்சுள சிங்கம் அடவியில் வாழ்வன
அஞ்சும்போய் மேய்ந்து தம்அஞ்சக மேபுகும்
அஞ்சின் உகிரும் எயிறும் அறுத்திட்டால்
எஞ்சா திறைவனை எய்தலும் ஆமே'

என்ற பாட்டில் கூறுவது காண்க. இதனையே புலனடக்கம் என் றும் புலவென்றி யென்றும் நம்மவர் வழங்கிவருகின்றனர்.

உயிர் ஓவியம்:—காசையே கடவுள் எனக்கொண்டு வழி பாடு செய்தாலும் தனக்கென வாழாப் பிறர்க்குரியாள னாகவே இருந்தும் அரசனென வாழ்ந்தாலும், தன்னைப் பொறுத்தமட்டில் தொண்டுசெய்து அடிமையாகவே நின்றும், அரச செல்வத்தில் வீற்றிருந்து ஐம்புலனும் ஆரத் துய்த்தாலும், அப்புலன்களின் வழியே ஆண்டவ னழகிய இன்பக் கட லிடையே எழுந்து விளங்கும் உண்மை மலையின் மேலே சுடர் விட்டெரியும் அறிவு விளக்கைக் கண்டு இன்பக் கூத்தே ஆடியும் வாழ்வது ஒருகாலத்தும் தவறல்ல; ஆதலின் அவ்வழியில் அரச செல்வத்தில் வீற்றிருந்த மூர்த்தி நாயனாரிடத்தும் எள்ளளவும் குற்றம் இல்லையாம். இத்தகைய உயிர் ஓவியத்தையே தமதுள்

ளத்தே அழகொழுக எழுதிப்பார்த்து மனமும் நாவும் பழகியபின் னர்ச் சேக்கிழார்பெருமான் இப் பாடல்களைப் பாடி யருளினர்.

ஏலங்கமழ் கோதையர் தந்திறமென்று நீங்கும்
சீலங்கொடு வெம்புலன் தெவ்வுடன் வென்று நீக்கி
ஞாலந் தனிநேமி நடாத்தி நலங்கொள் ஊழி
காலம் உயிர்கட் கிடரான கடிந்து காத்து.

பாதம் பரமன்னவர் சூழ்ந்து பணிந்துபோற்ற
வேதம் பிணியாவகை யிவ்வுலகாண்டு தொண்டின்
பேதம் புரியா வருட் போரசாளப் பெற்று
நாதன் கழற் சேவடி நண்ணினர் அண்ணலாரே.

என்று சேக்கிழார் பாடுதல் காண்க. அரச செல்வத்தே யிருந் தும் ஐம்புலனையும் வென்றமையை "வெம்புலன் வென்று" என்ப தாலும், அரசராய் வீற்றிருந்தும் அடிமைத்தொழிலைக் கைவிடாது பற்றி வாழ்ந்தமையை "தொண்டின் பேதம் புரியா" என்பதா லும் "காசே கடவுள் என வழிபட்டாலும்" தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராய் விளங்கினமையை "அருட் போரசாளப் பெற்று" என்பதாலும் குறிப்பது காண்க.

புதிய உலகம்:—இவ்வாறு சேக்கிழார் பெருமான் ஆளு டைய நம்பிகள் காட்டிய வழியைப் பின்பற்றிச் சென்று ஒரு புதிய உலகத்தைப் படைத்துக் கொடுக்கின்றார். புதிய குடி முறை, புதிய அரசியல், புதிய துறவுநிலை, புதிய திருப் பிராட்டி வழிபாடு, புதிய துப்புரவு நிலை என்பவற்றை அந்தப் புதிய உல கத்தே நிலைகாட்டியுள்ள பெருமையினையும் அவருடைய நோக் கத்தின் அகலத்தையும் அறிவின் ஆழத்தையும் அறிவது அருமை யினும் அருமையாகும். இந்நாளில் இவ்வுலகிற்கு இன்றியமை யாததொரு புனைந்துரை வரலாறல்லவா ஈது? இவ்வுயரிய கொள்கைகளை இவ் வரலாற்றில் எவ்வாறு நுழைத்து வைத்தார்? "அப்பம் எப்படிச் சுட்டாளோ, அதனுள் தித்திப்பை எப்படி நுழைத்தாளோ!" என்று கேட்கும் இளங்குழந்தைகளின் முனைப் பற்ற இன்ப வமைதி நிலையிலிருந்து நாமும் வியப்போமாக.

ஓவியக் கூத்து:—இத்தகைய உயரிய ஓவியத்தை எழுத வேண்டிப் பொதுமக்களிடையே பொது மகனை ஒருவனை எடுத்து நல்லதோர் நாட்டில் பிறக்க வைத்துச் சிவத்துறையில் பழக்கி, அன்பராக்கி, அவ்வன்பு வளர்ந்தபோது அவனுக்கே முடிசூட்டித் திருவோலக்கத்தில் சிவத் துறவுநிலை மாறாது தொண்டராய்த் தன்னுயிர்போல மன்னுயிரை எண்ணி அரசாள்வதனை இவ்வுயிரோவியக் கூத்திலே காட்டுகின்றார். இக் கூத்து எவ்வாறு மொக்கு விட்டு அரும்பிப் பூத்துக் காய்த்துப் பழுத்துத் தித்திக்கின்றதெனக் காணுதல் வேண்டாவோ?

(தொடரும்)

# இலக்கணமும் இலக்கியமும் :
## Language & Literature

### தமிழகம்

[திரு. S. நடராஜன், B. A.]

(முன் கசுஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

### பண்டைத் தமிழகம்

10. இவ்வாறு, முதலில் குளிர்ந்து நிலமாகமாறி முதலில் மக்களினம் தோன்றிய பகுதியில்தான், தமிழகம் உளது. பண்டைத் தமிழகம், குமரி முனைக்குத் தெற்கே வெகுதூரம் பரவியிருந்து, இதுபோழ்து கடல்கொண்ட, இலங்கை, அல்லது இலமூரியா என்னும் குமரிக் கண்டமேயாம். இதுபோழ்து * தமிழர்களின் தாய்நாடாய்த் திகழும், இத் தென்னிந்தியா பண்டைத் தமிழகத்தின் வடபாகமாகும். மற்றைய பாகங்கள் கடல்வாய்ப் பட இப் பகுதி மட்டும் எஞ்சிற்று. எனவே தென்னிந்தியா ஓர் பழைய நிலப்பரப்பெனல் வெள்ளிடை.

### தென்னிந்தியா பழைய நிலப்பரப்பெனல்

11. i. நிலநூற் சான்று: நிலநூல், தென்னிந்தியா பழைய நிலப்பரப்பென்பதற்கு அளிக்குஞ் சான்றுகளைக் கவனிப்பாம். நிலநூலார் ஒரு நாட்டின் தொன்மையை, அந்நாட்டின் பாறைகளின் இயல்பால் உணர்வர். ஏனைய பாறைகளைக் காட்டிலும் நந்தமிழ் நாட்டுப் பாறைகளே மிகவும் பழைமையானவைகளா மென்பது மேலைநாட்டு ஆராய்ச்சியாளரின் கருத்து. கிழக்குத் தொடர்ச்சி மலைப் பாறைகளே வயதளவில் இமயமலையினும் முதியவையாம்.

12. ii. தொல்லுயிர்நூற் சான்று: இனித் தொல்லுயிர் நூல் பகரும் சான்றுகளை ஆராய்வாம். இந்நூலார், கிளிஞ்சல் மீன், நண்டு, பாம்பு, ஆமை, பறவை, விலங்கு, குரங்கு, மனிதன் என்னும் படிப்படியான ஓர் வளர்ச்சிமுறைப் (evolution)படி மக்கள் உண்டாயிருக்கவேண்டும் என்பர். மண்ணுலகெங்கும் மங்காப்புகழ்

---

*தமிழர் என்பார் Non-Nordic Cacasians known as Mediterranean Rae

பெற்ற Huxley, Spencer, Lemark, Walise, Heckel, Charles Darwin, முதலிய நிலநூல், தொல்லுயிர் நூல் வல்லார், முன் குறித்த வளர்ச்சி முறைப்படி குரங்குகளினின்றும் மனித னாக மாறி 250,000 வருடங்கள் ஆகிறதென்றும், இந்த உண்மையை நிலைநாட்ட உலகில் 224,000 ஆண்டுகட்குமுன் அவர்கள் கை யாண்ட கல், கொம்பு, தந்தம் முதலான முரட்டுக் கருவிகளும் மானிடதேக எலும்புகளும், கண்டுபிடிக்கப்பட்டு இருக்கின்றன என் றும் கூறுகின்றனர். (Vide The Prehistoric Anthropology by Mon. Gabriel-de-Martillet.) மேலும் இன்னோர் கூற்றுப்படி பழைமையான ஒரு நிலப்பகுதியைத் தோண்டிப்பார்க்குங்கால் எலும்புக் கூடுகள் தொகையிலும், வகையிலும், தொன்மையிலும், அதிகமாய் இருத்தல்வேண்டும். உலகின் மற்றைய பாகங்களைவிட தென்னிந்தியாவில்தான் இம்மாதிரி கிடைத்திருக்கிறது. தென் னிந்தியாவில் கிடைத்த ஒரு மானிட மண்டை ஓடே பிற நாடுக ளில் அகப்பட்டவைகளில் தொன்மையானதாம். *

13. எனவே தொல்லுயிர் நூலும், நிலநூலும் தென்னிந் தியா ஒரு பழைய நிலப் பரப்பென்பதை வலியுறுத்துகின்றன. இனி, ஏனைய பாகங்கள் கடற்கோட்பட இப்பகுதி எஞ்சிற்று என் பதற்கு நில நூலும், மொழிநூலும் கூறும் சான்றுகளை ஆராய் வோம்.

### கடற்கோட்படுதல்

14. உலகின் மேற்பரப்பில் நிலப்பகுதி எப்போதும் ஒரே வடிவாயிருந்ததில்லை. கடல் இருந்த இடத்தில் நிலமும், நிலம் இருந்த இடத்தில் கடலும் மாறிமாறி வருவதுண்டு. பல்லாயிரம் ஆண்டுகளாகவே, இம்மாதிரி கடல் நிலமாகவும், நிலம் கடலாக வும், மாறிக்கொண்டு வந்திருக்கிறது. இன்றும், நாம் சில தீவுகள் மறைவதையும் புதுத் தீவுகள் தோன்றுவதையும் காண்கிறோம். ஞாலத்தின் வயிற்றில் கொதித்துக்கொண்டிருக்கும் நெருப்புக் குழம்பானது, சில சமயங்களில் பல காரணங்களால் சில பகுதிகளை மேல்நோக்கி முட்டித் தாக்குவதுண்டு. இதைப் பூகம்பம் என்பர். இவ்வாறு இடியுண்ட பாகம் உயரக் கிளம்பிப் பெருமலையாயும் புதிய நிலப் பரப்பாயும் மாறும். ஒருபாகம் உயர்ந்தால் மற்றொருபாகம் தாழ்ந்து கடற்கோட்படும். இது நிலநூல் கூறும் உண்மை. இவ்

* P. V. Manicka Naicker's Tamilagam in Senthamil Selvi.

வாறு கடல்வாய்ப்படுதலை கடற்கோள் என்பர். 1819-ம் ஆண்டில் உண்டான பூகம்பத்தால் குச்சு நாட்டில் 70 கல் நீளமும் 16 கல் அகலமுமுள்ளபூமி 10 அடி உயரம் எழும்பிவிட்டது. 1822-ம் ஆண்டு தென்ஆப்பிரிக்காவின் மேல்கரையில் 1200 கல் தூரத்துக்குப் பூகம்பம் உண்டாகித் தரையைப் பல அடிதூரம் எழுப்பிவிட்டது. 1855-ம் ஆண்டில் லிஸ்பன் பட்டணத்தில் பூகம்பம் உண்டாகி ஊரையே பாழாக்கிவிட்டது. தற்சமயம் சென்னையின் வடபாகத்தில் கடல் ஏறிவருவதும், இம்மாதிரி ஏறிவந்தால் இன்னும் சுமார் 25 ஆண்டுகளில் திருவொற்றியூர் சாலைவரைக் கடல்வாய்ப்படும் என்பதும் நிலநூலாரின் கூற்றுகளாகச் சென்னைத் தினசரித்தாளாகிய ஹிந்துவில் வெளியாயிருந்தது. உலகில் மிகப்பழைய இனத்தாராகிய தமிழர், யூதர்களுடைய இலக்கியங்களிலும் கடற் பெருவெள்ளங்கள் கூறப்பட்டிருக்கின்றன. யூதர்களின் மறையும் கிறித்தவர்களின் பழைய ஏற்பாடும் ஆகின்ற (Old Testament)ல் நோவா என்பவர் காலத்தில் ஒரு பெருவெள்ளம் கூறப்பட்டுள்ளது. தமிழ் இலக்கியங்களில் குமரிமுனைக்குத் தெற்கே இருந்த பல நாடுகளும் நகரங்களும், ஆறுகளும், மலைகளும் இரு பெருவெள்ளங்களால் அழிக்கப்பட்டனவெனக் கூறப்பட்டுள்ளது. இவ்வுண்மை இற்றைநாள் நவீனராய நமக்கு மாத்திரமன்று; பண்டைக்காலத்து ஆன்றோருக்கும் புலனாயதேயாம். அஃது "ஓர் இடமழியப் பின்னும் ஓரிட நிற்கும்." † என்னும் சித்தியார் செய்யுளாற் பெறப்படும்.

நான்கு ஊழி

நிலநூலார், காலத்தை, நான்கு ஊழிகளாகப் பிரித்து ஒவ்வோர் ஊழியிலும் நிலப்பரப்பு இன்ன வடிவோடிருந்திருத்தல் வேண்டும் என யூகித்துப் படங்களமைத்திருக்கிறார்கள். இப்படங்

---

†. P. V. Manicka Naicker Tamilagam in Senthamil Selvi

உயரிலங்கு முலகிற் பல வூழிகள் தோன்றும்பொழுதெல்லாம்
பெயரிலங்கும் பிரமாபுரம் ... ... ... —சம்பந்தர்

வானந் துளங்கிலென் மண்கம்பம் ஆகிலென் மால்வரையுந்
தானந் துளங்கித் தலைதடுமாறிலென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென்.......... —அப்பர்

கருமைபெற்ற கடல்கொள்ள மிதந்ததோர்காலம் மிதுவென்னப்
பெருமைபெற்ற பிரமாபுரம்...... —சம்பந்தர்

எனவரும் பாசுரங்கள் ஒப்புநோக்கத்தக்கன.

களில் முதல் மூன்று ஊழியில் தென்னிந்தியாவிற்குத் தெற்கே ஒரு நிலப்பகுதி யிருந்ததாகவும் அதற்கு லெமூரியா எனவும் பெய ரிட்டிருக்கிறார்கள். இந்த லெமூரியாவே தமிழகமாகிய குமரிக் கண்டமாம். மூன்றும் ஊழியினிறுதிவரை சீனக்கடலிலிருந்து வடகடல்வரை ஒரே நீர்ப்பகுதியா யிருந்திருக்கிறது. அக்காலத்தில் இமயமலை, சிந்து கங்கைச் சமவெளி, பாரசீகம், அரேபியா, பாலஸ்தீனம், எகிப்து முதலிய நாடுகளும் மலைகளும் கடலின் அடியில் இருந்திருக்கின்றன. மூன்றும் ஊழியினிறுதியில் மாறுத லடைந்து இக்கால வடிவை அவை அடைந்துள்ளன. இமயமலையை கிழக்குத்தொடர்ச்சிமலையினும் இளமலையாகக் கருதுவதும், அதன் உச்சியில் கடல்வாழ் உயிர்களின் எலும்புக் கூடுகளும், சிப்பிகளும் காணப்படுதலும் அஃது கடலினுள் இருந்ததற்குச் சான்றுகளாம். இஞ்ஞான்றும் சகாராபாலைவனம் தொடங்கி கோபி பாலைவனம் ஈறாகத் தொடர்ச்சியாகப் பாலைநிலம் காணப்படுதல், இப்பாகம் கடலினுள் இருந்ததற்கு ஓர் சான்றெனவும் பகர்வர். சில மேற் றிசைச் சான்றோரின் கூற்றுகள் இதனுடன் கருதற்பாலன.

(தொடரும்)

---

## வெண்ணெய் அண்ணல்

[பண்டிதர். திரு. மா. இராசமாணிக்கம் அவர்கள்]

(முன் கனுரு-ஆம் பக்கத் தொடர்ச்சி)

வானர வீரர்கள் கடலில் அணையைக் கட்டுகையில் உயர் வெற்புகளைத் தூக்கி வானரத் தச்சனாகிய நளன் என்பானிடம் வீச, அலைப்புண்டு வந்த அப் பருப்பதங்களை நளன் ‘அஞ்சேல்’ எனச் சொல்லி, அவற்றைத் தாங்கி முறையாகவும் அமைதியாக வும் அடுக்கினன். அங்ஙனம் நளன் செய்தமை ‘தஞ்சமென் றடைந்தோரைத் தாங்கித் தக்கவாறு பாதுகாக்கும் அண்ணலது காருணியச் செயலை யொத்திருந்தது’ எனக் கம்பர் கூறுவது சால அழகியதன்றோ ?

‘ மஞ்சினில் திகழ்தரு மலையை மாக்குரங் (கு)
எஞ்சுறக் கடிதெடுத் தெறியவே, நளன்
விஞ்சையில் தாங்கினன் சடையன் வெண்ணெயில்
தஞ்சமென் றோர்களைத் தாங்குந் தன்மைபோல் ’

—சேதுபந்தனப் படலம்

'மேகநாதன் வானர சேனையை நாக பாசத்தாற் பிணித்து விட்டனன். அந் நாக பாசம் கருடனைக் கண்டதும் இற்று ஒழிந்தது. அஃது, வடமொழி வறிஞரையும், தென்மொழி வறிஞரையும் பிடித்திருந்த வறுமைப்பிணி வெண்ணெய்வாழ் அண்ணலைக் கண்டதும் இற்றொழிந்ததை யொத்திருந்தது' என்று கம்பர் கூறும் உவமையையும் பொருளையும் எண்ணிப் பாருங்கள். இதனால், வள்ளலின் வள்ளற்றன்மை குன்றின்மீதிட்ட விளக்குப் போலாம்! கம்பர் வீணுகச் சடையப்பரை ஏன் இக்காதையில் இழுக்கின்றார் என்று நாம் எண்ணிச் சலிப்படையாவாறு, உவமை வாயிலாகச் சடையரின் அரிய செயலையும் குணத்தையும் கூறித் தமது செய்ந்நன்றி யறிதலையும் விளக்குவது கம்பர்மாட் டமைந்த தனிப்பெரும் ஆற்றலே யன்றோ!

'வாசங்கலந்த மறைநாள நூலின்
வகையென்ப தென்னை மழையென்
றாசங்கைகொண்ட கொடைமீளி யண்ணல்
சரராமன் வெண்ணெ யணுகும்
தேசங்கலந்த மறைவாணர் செஞ்சொல்
அறிவாள ரென்றிம் முதலோர்
பாசங்கலந்த பசிபோ லகன்ற
பதகன் துரந்த உரகம்'

—நாகபாசப் படலம்

இக்கவியால், அண்ணலது ஈத்துவக்கும் செவ்வியும், வடமொழி, தென்மொழிப் புலவர் என்ற வேறுபாடின்றி வழங்கும் ஈகைக்குணமும், தாளாண்மையிற் சிறந்த வேளாண் மக்களின் மாண்பும் இற்றென இனிது விளங்கும்.

இறுதியாகக் கம்பர் தம்மை வளர்த்து உயர்நிலைக்குக் கொணர்ந்த வள்ளலாரை உலகறிய உயர்ந்த நிலையில்—எவர்க்கும் எட்டாத உயர்நிலையில்—அழகுற வைத்துப் பெருமைப் படுத்தியுள்ளார். 'இராமனுக்குக் கோசலத்தின் மௌலி சூட்டிய மாண்புறு விழாவில் இராமனைத் தாங்கும் அரியணையை அநுமன் தாங்கினன்; அங்கதன் உடைவாளேந்தி நின்றான்; பரதன் கொற்றக் குடையைக் கவித்து நின்றான்; இலக்குவனும் சத்துருக்கனனும் கவரி வீசிநின்றனர்; வாசனை கமழும் கூந்தலையுடைய சானகி உவகையோடு அருகிருந்தனள். இந் நிலையில்

வெண்ணெய் அண்ணலின் மரபில் வந்த வேளாண்குடிப் பெரு மக்கள் கிரீடத்தை யெடுத்துத் தம் அநுமதியோடு தர— அதனை வசிட்டன் வாங்கிச் சீராமனுக்குச் சூட்டினன்,' என்று, கம்பர் அழகினும் அழகுபடக் கூறியுள்ளார். இவர் கூற்றில் விழு மிய வேளாளர் தத்துவம் என்னும் தரு சீருடன் விளங்கக் காணலாம்.

'அரியணை அநுமன் தாங்க, அங்கதன் உடைவாளேந்தப்,
பரதன்வெண் குடைக விக்க இருவரும் கவரி வீச,
விரைசெறி குழலி யோங்க, வெண்ணெயூர்ச் சடையன் றங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி'
—திருவபிஷேகப் படலம்

இங்ஙனம் ஈடும் எடுப்பும் இல்லாதவோர் வகையில் தம் வள்ளலைக் கம்பர் புகழ்வதைக் காண, அவர் வெண்ணெய் அண்ண லிடம்கொண்டிருந்த பெருமதிப்பு இற்றெனவிளங்குகிறதன்றோ! 'இனி, நீர் சீராமனுக்கு முடிசூட்டலாம்' என்று வசிட்டனுக்கு அநுமதி கொடுத்தற்கேற்ற பெருமைபெற்றவர் 'சடையப்ப அண்ணலின் முன்னோர்' என்று கூறுமுகத்தான் வேளாளரே அரசனுக்கு உயிர்போன்றவர்' என்னும் உண்மையைக் கம்பர் விளக்குகின்றார். இக்கருத்தைக் கொண்டே ஔவையாரும் 'குடி உயரக் கோன் உயரும்' என மொழிந்தார்.

'மேழி பிடிக்குங் கையே
ஆழி வேந்தரை யாக்குங்கை'

என்பது அரசியலின் அடிப்படையான தத்துவம் அன்றோ?

---

## தமிழ்மொழியின் ஒலிகளும் எழுத்தும்

[ஈப்போ. திரு. தியாகராயன் அவர்கள்]

(முன் ௧௯௯-ம் பக்கத் தொடர்ச்சி)

## தமிழெழுத்துக்களின் தொகை

### முதலெழுத்து

"உயிரு முடம்புமா முப்பது முதலே"

(பவண. எழு. சூ. 58)

சார்பெழுத்தின் விரி

"உயிர்மெய் யிரட்டு நூற்றெட்டு, உயராய்தம் எட்டு, உயி ரளபு எழுமூன்று, ஒற்றளபெடை ஆறேழ், அஃகும் இ முப்பா னேழ், உகரம் ஆறாறு, ஐகான் மூன்றே ஔகா னொன்றே, மஃகான் மூன்றே ஆய்த மிரண்டொடு, சார்பெழுத்துறுவிரி ஒன் றொழி முந்நூற்றெழு பானென்ப"

(பவண. எழு. சூ. 60)

மேற்காட்டிய சூத்திரங்களின்படி

| | |
|---|---|
| உயிர் | 12 |
| மெய் | 18 |
| உயிர் மெய் | 216 |
| விகாரப்படாத ஆய்தம் | 8 |
| உயிரளபெடை | 21 |
| ஒற்றளபெடை | 42 |
| குற்றிய லிகரம் | 37 |
| குற்றிய லுகரம் | 36 |
| ஐகாரக் குறுக்கம் | 3 |
| ஔகாரக் குறுக்கம் | 1 |
| மகரக்குறுக்கம் | 3 |
| ஆய்தக்குறுக்கம் | 2 |
| ஆக | 399 |

மேற்கூறியவற்றுள் உயிர், மெய், உயிர்மெய் ஆகிய 246 ஒலிகளுக்கும் தனித்தனி எழுத்துக்களுள்ளது யாவருமறிந்ததே.

இலக்கண விதிப்படி சொற்களில் எண்வகையில் நிறுவப் பட்ட ஆயுதங்கள் முற்றுப்தங்களாம். எனினும் அவ்வெட்டு வகையிலும் அவ் வாய்தங்கள் ஓரே யொலியுடன் நிகழ்வதால் ஓரெழுத்தே அவற்றைக் குறித்தது.

மேற்கூறியவாறே இலக்கண விதிப்படி 63 இடங்களில் உயிர், மெய்கள் அளபெடுக்கும்.

உயிரளபெடை

"இசைகெடின் மொழி முதலிடை கடைநிலை நெடில்
அளபெழு மவற்றவற் றினக்குறில் குறியே"

(பவண. எழு. சூ. 90)

## ஒற்றளபெடை

"ஙஞண நமன வயலள வாய்தம்
அளபாங் குறிலிணை குறிற்கிழிடை கடை
மிகலே யவற்றின் குறியாம் வேறே"

(பவண. எழு. சூ. 91)

என்னுஞ் சூத்திரங்களின்படி மேற்கூறியவாறு அளபெடுத் தொலிக்குங்கால் அவ்வவற்றின் இனக் குறில்களும், ஒற்றுகளும் குறியாய் நின்று அளபை யுணர்த்துவதால் இவைகளுக்கேற்ற குறிகளுமுண்டாம்.

மகரந்தவிர்த்த குற்றியலிகர முதலிய குறுக்கங்களான 79ம், இலக்கண விதிப்படி நிகழும் வகையைக் குறித்து 79 ஆயினவே யன்றி ஒலிவகையில் அவை ஐந்தே.

பவணந்தியார் நன்னூலில் "எழுத்தினுருவம்" என்னுஞ் சூத்திரத்திற்கு உரையெழுதிய சாமிநாதையர் "அறிதற்பொருட்டுக் குற்றுகரக் குற்றிகரங்களுக்கு மேற்புள்ளி கொடுப்பாரு முள ரெனக் கொள்க" என உரைத்தார்.

உதாரணம்:—நாகீயாது, வரகு

எனவே மேற்காட்டிய குறியை நாம் குற்றுகர இகரங்களுக்கு மாத்திரமன்றி ஐகார, ஔகார, ஆய்தக்குறுக்கங்களுக்கு மியைப் பின் அஃகு (குறையும்) மொலிகள் யாவற்றிற்கு மேற்ற குறியுண் டாம்.

ஆனல் மகரக் குறுக்கத்திற்கு மேற்கூறிய குறி கொடுப்பின் மகர வொற்றை யொத்து (ம் என) ஐய முண்டுபண்ணும். ஆகலின் தொல்காப்பியம் எழுத்தியல் 13-வது சூத்திரத்தில் "அரையளவு குறுகன் மகாமுடைத்தே— இசையிட னருகுந் தெரியுங்காலை" என்று கூறி அடுத்த சூத்திரத்தில்

"உட்பெறுபுள்ளி யுருவாகும்மே" என்ருர். எனவே இம் மகரக் குறுக்கத்தின்குறி "ம" என எழுதப்பட்டு அதன் ஒலியைக் குறிக்கும்.

இவ்வாருக முன்சொன்ன எழுத்தின் தொகை 399-ன் ஒலிக் கும் எற்ற குறிகளுண்டாம்.

எனவே ஓரொலிக் கொருகுறி யென்னுஞ் சிறந்த விதியை வழுவாது தழுவிய மேன்மையுடைத்தாம் நந்தமிழ்மொழி. இக்

கூற்ருல் இம்மொழியைச் செம்மொழியென வுரைத்தல் சாலத் தக்கதே.

## சீர் திருத்தம்

பவணந்தியார் நன்னூலி னிறுதியில்
"பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவலகால வகையினுனே"

(சூ. 461)

எனக் கூறப்பட்டிருக்கிறது.

தொல்காப்பியனரும்
'கடிசொலில்லைக் காலத்துப்படினே'
எனவுங் கூறியுள்ளார்.

மேற்கூறிய விதிகளைத்தழுவி நாமும் இக்காலத்திற்கு ஒப்ப நம்மொழியின்கண் சீரிய திருத்தங்களமைப்பின் நம்மொழி இன்னு மிகத் திகழ்ந்து வளரும். எங்ஙனம் ஒரு மகன் தந்தை ஈட்டிய பொருளை நல்வழியாற் பெருக்குவது கடனே அஃதேபோல் நாமும் நம்முந்தையோர் நமக்களித்த தமிழ்ச் செல்வத்தைச் சீரிய வகையில் சிறப்பிப்பது நமது கடனே.

மெய்யெழுத்துக்களின் ஒலியை முன் விளக்கிக் காட்டிய பொழுது வல்லெழுத்துக்களைத் தழுவி மெல்லோசையுட னெலிக்கு மெனக் கூறினேன். அவ்வொலிகளைக் குறிக்க ஏற்ற குறிகள் தமிழில் தற்போது கிடையா. அன்றியும் 'செய்பவன்', 'பசித்தல்,' 'உகுதல்', என்னுஞ் சொற்களிலுள்ள 'ப', 'சி', 'கு' என்னு மெழுத்துக்களில் நிகழும் ஒலிகளுக்கேற்ற குறிகளும் தமிழில் இல்லை.

ஆனல் வடமொழிச் சொற்கள் தமிழில் மிகப் புகுந்தகாலத் தில் அச்சொற்களின் ஒலிகளைக் குறிக்க ஜ, ஸ, ஷ, ஹ, க்ஷ என்னு மெழுத்துக்களை நாம் ஏற்று, நம் அரிச்சுவடியிலு மிவற்றைக் கூட்டிக்கொண்டோம். இவ்வகை காலத்திற்கேற்கப் புதியமொழி களையும், அம்மொழிகளின் ஒலிகளைக் குறிக்கப் புதிய எழுத்துக்களை யும் புகுத்ததால் முற்கூறிய குறியற்ற சில ஒலிகளுக்கு ஏற்ற குறிகள் தமிழில் உண்டாயின. எவ்வாறெனின்:

பசித்தல் என்னுஞ் சொல்லில் 'சி' என்னுமெழுத்திற்குள்ள 'ஸி' என்னு மெழுத்தால் குறிக்கப்பட்டது.

(தொடரும்)

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## சோழர்கள் கல்வெட்டுகளிற் கண்ட சில குறிப்புக்கள்

[இராவ்சாஹிப் திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள்]

(முன் கஎச-ஆம் பக்கத் தொடர்ச்சி)

5. பேரகர முற்றூட்டு:— இதற்கு the land enjoyed in full by the great village என்று சாசனப் பரிசோதகர் பொருள் கூறுகிறார். இம் மொழித் தொடரை பேர்—அகரம்—முற்றூட்டு என்று பிரிக்கவும். அதாவது, பெரிய கிராமத்தினுடைய முழுமையான அனுபவம் என்று பொருள் ஏற்படும். அதனைக் கிராமத்துப் பெரிய குடிகளெல்லாம் பூரணமாக அனுபவிக்கும் உரிமைகள் என்று கொள்ளலாம். இதனை மற்றொரு சாசனத்தில் "கணி முற்றூட்டு" என்று கண்டிருக்கிறது. ஆகவே கிராமங்களில் உள்ள முழுமையான உரிமை அல்லது பாத்தியம் என்று இப் பதத்தினால் ஏற்படுகிறது எனக் கொள்ள முடியும்.

6. மேனோக்கியமரம்:—இதனை Trees over ground என்கிறார். இக்காலத்தில் நாம் எழுதும் பதங்களாகிய மாவிடை, மரவிடை என்பவை இதில் அடங்கும். சாசனத்தில் கண்ட இடத்தில் இருந்த மரங்கள் எல்லாவற்றையும் அதற்குள் சேர்த்ததாகப் பொருள்பட வேண்டி, இத்தொடர் சேர்க்கப்பட்டுள்ளது.

7. கீழ்நோக்கிய கிணறு:—Wells under ground, நிலத்தின் கீழே வெட்டப்பட்ட கிணறுகள் சேர்த்துத் தரப்பட்டன என்பது பொருள். இக்காலத்தில் "தூஸ்துக் கிணர் இகிஸ்துக் கிணர் சகிதம்" என்பார்கள். அல்லது "இரண்டு துலைக்கிணர் மூன்று துலைக்கிணர்" என்பார்கள். "மேனோக்கிய மரமும் கீழ்நோக்கிய கிணறும்" என்ற பிரயோகம் எதுகை நோக்கி எழுதப்பட்டன போலும்.

8. முளைப்பன:—Where sprouts grow. இப்பதம் ஒரு சாசனத்தில் அதிகமாகக் கண்டிருக்கிறது. இதனால் வேளாண்மை செய்யும் நிலம் என்ற பொருள்ப்டும். புற்று எழுவன, முளைப்பன

என்று அச் சாசனத்தில் கண்டிருப்பதால், இவைகள் சொல்லணியாகிய இயைபுத் தொடையை நோக்கி எழுதப்பட்டன போலும்.

மேலே சொல்லிய சாசன வாசகத்தைக் கரூர்ச் சாசனங்களில் மாத்திரமே யல்லாமல் அநேக ஆலயச் சாசனங்களிலும் செப்பேட்டுகளிலும் காணலாம். ஆகவே இவ் வாசகம் தமிழ்நாடெங்கும் பரந்திருந்தது எனக் கொள்ளலாம். உதாரணமாக, காசாக்குடி சாசனம் என்ற நந்திவர்மன் II (717-779 கி. பி.) என்ற பல்லவ அரசனுடைய சாசனத்தில் "இந்நாட் பேரெல்லை உள்ளும் ஆகப்பட்ட நீர்நிலம் புன்செய்யும் உடும்பொடு ஆமை தவழ்வதெல்லாம் சேயாற்றுலும் வெஃகாவினுலும் திரைய னேரியாலும் நீர்ந்த வழி ஆற்றுக்காலும் வெள்ளக்காலும் தோண்டிக்கொண்டுண்ணப் பெறுவனுகவும்" என்று கண்டிருக்கிறது. ஆகவே "உடும்பொடு ஆமைதவழ் இடம்" புறம்போக்கு நிலமாகக் கொண்டிருத்தல் வேண்டும்.

மேலும், தானம் செய்த நிலத்தினுடைய எல்லைகளை அடியில் கண்டவாறு விவரித்திருக்கின்றூர்கள்.

"அதிராசராஜ மண்டலத்து வெங்காலநாட்டு கணவதிநல்லூர் கீழ்பாக்கெல்லை எருத்துக்குளத்துக்கு மேற்கும், வடபாக்கெல்லை நாட்டுப் பெருவழிக்குத் தெற்கும், தென்பாக்கெல்லை ஆற்றுக்கு வடக்கும், மேல்பாக்கெல்லை இராஜமகேந்திரன் வதிக்குக் கிழக்கும், இந்நான்கெல்லைக் குட்பட்ட நிலம் நன்செய் புன்செய்." இவ் வாசகத்தால் எல்லைகள் எவ்விதமாக எடுத்தாளப்பட்டன என்பது தெரியவரும். குளம், ஆறு, வழி இவைகள் எல்லைகளாகக் கொண்டிருந்தார்கள் என்றும் நன்செய் புன்செய் என்ற பாகுபாடு பல்லாயிரம் ஆண்டுகளாகவே இருந்தது என்றும் அறிகிறோம்.

## III. நில மாறுதல்களின் நிபந்தனைகள்

இக்காலத்தில் கிரயம், அடவு, ஒப்பந்தம் முதலியவைகளில் பல நிபந்தனைகளை(Covenants)க் கண்டு பத்திரங்கள் எழுதுவதுண்டு. அதைப்போலவே சோழர்கள் காலத்திலும் நிபந்தனைகளைக் கொண்டிருந்தார்கள். இறையிலியாக நிலங்களை ஆலயங்களுக்குத் தானம் செய்தபோதிலும் அந்நிலங்களுக்கு இறைகள் இல்லாமல் போகவில்லை என்றும், அவ்விறைகள் தானம் கொடுக்கப்பட்ட ஆலயங்களுக்குச் சேரும் என்றும், முன்னமே கூறியிருக்கின்றோம். ஆனல் சில தானங்களில் அவ்வித இறைகள் அல்லது

வரிகள் சில குடிகளுக்கு நீக்கப்பட்டன வென்றும் சில சாசனங்களினால் அறிகிறோம். உதாரணமாக, ஆலயத்திற்கு தேவதானம் செய்யுங்காலத்தில் அவ்வாலயத்துத் திருமடை விளாகத்தில் குடியிருந்த சில குடிகளின்மீது குறிப்பிட்ட சில வரிகளை விதிக்கக்கூடாதென்றும் நிபந்தனை ஏற்படுத்துவதுண்டு. கரூர் கோனேரின்மைக்கொண்டான் சாசனத்தில் "இந்நாயனார் கோயிலுக்கு நம் பெயரால் இயற்றின வீர சோழன் திருமடைவிளாகத்தில் குடியிருந்த தவசியர்க்கும் சிவப்பிராமணருக்கும் தேவரடியார்க்கும் உவச்சர்க்கும் பல பணி நிபந்தக்காருக்கும் சீவனசேஷமாகத் தென்கரை ஆதனூரான வீர சோழ நல்லூர் கொடுத்து இவ்வூரால் வந்த இறையும் எலவையும் உகவையும் கொள்ளாதோமாக. விட்டு மற்றுள்ள குடிமைப்பாடும் எப்பேர்ப்பட்டதும் இந்நாயனார் கோயிலுக்கு செய்து," என்று கண்டிருக்கிறது. இச்சாசனத்தினால் கோயிலுக்கு அடுத்த திருமடை விளாகத்தில் குடியேறி இருந்த தவசிகள் (சந்நியாசிகள்) சிவப் பிராமணர்கள் (ஆதிசைவர் என்ற குருக்கள்) தேவரடியார் (கணிகையர்) உவச்சர் (வாத்தியம் வாசிப்பவர்) நிபந்தக்காரர் (கோயில் வேலைக்காரர்கள்) ஆகிய இந்த திருப்பணியாளர்கள் இறை, எலவை, உகவை என்ற மூன்று வரிகளைக் கொடுக்கவேண்டியதில்லை என்றும் மற்ற வரிகளாகிய குடிமைப்பாடுகள் வசூலித்துக்கொள்ளலாம் என்றும் நிபந்தனைகள் ஏற்படுத்தப்பட்டன.

2. மேலும், நிலங்களைத் தானம் செய்யும்போது நீர்ப்பாய்ச்சல்களைப்பற்றிச் சில நிபந்தனைகள் ஏற்படுத்துவதுமுண்டு. உதாரணமாக, குலோத்துங்க சோழதேவனுடைய சாசனத்தில் "செந்நீர் வெட்டி செய்யக்கடவதல்லை ஆகவும், புந்நீர்விட்டுப் பாய்ச்சிக் கொள்வதாகவும், இப்படி சம்மதித்து இறையிலி தேவதானமாகக் கல் வெட்டிக் கொடுத்தோம்." என்று கண்டிருக்கிறது. இதற்கு சாசன பரிசோதகர் Shall not be permitted to waste the good water but shall use the dirty water for irrigation. என்று பொருள்படுத்துகிறார். வாய்க்காலில் வரும் நல்ல நீரை வேளாண்மைக்கு உபயோகப்படுத்தக்கூடாது என்றும், அசுத்த நீரை உபயோகப்படுத்திக்கொள்ளலாம் என்றும் பொருளாம். ஆனால் வாய்க்காலில் வரும் நீரை எவ்விதமாக நல்ல நீர் கெட்ட நீர் என்று பிரிப்பதோ தெரியவில்லை. வாய்க்காலிலும் ஆற்றிலும்

வெள்ளம் வரும்போது கலங்கிய நீர் வரும். அதைப் பாய்த்துக் கொள்ளலாம்; மற்றக் காலங்களில் நீர் சுத்தமாக வரும், ஆனால் குறைந்துவரும்; அப்போது இந்நிலங்களுக்கு அந்நீர்ப் பாய்ச்சல் கூடாது, என்று பொருள்படுத்தலாம். இவ்வித நிபந்தனைகள் இக்காலத்திலும் உண்டு. மேட்டூர் அணைத்திட்டமும் இந்தப் பாகு பாட்டை அனுசரித்தே உள்ளது அல்லவா?

இவ்வாசகத்தில் மற்றொரு பொருளும் கொள்ளமுடியும். கிராமங்களில் குடிதண்ணீர்க்கிணறு, குளிப்பாட்டும் நீர்க்கிணறு என்ற இரண்டுவகைக் கிணறுகள் உண்டு. குடிதண்ணீர்க் கிணற்றி லிருந்து நிலத்திற்கு நீர் பாய்ச்சக்கூடாது. குளிப்பாட்டுக் கிணற்றிலிருந்து நீர்ப்பாய்ச்சிக்கொள்ளலாம் என்றும் இதனால் நாம் பொருள் கொள்ளக்கூடும். இவ்விதமான நிபந்தனைகள் காசாக்குடி சாசனத்திலும் இருத்தல் காண்க. அவை வருமாறு "இக்கால்களுக்குக் கொங்கலமும் புழுதிபாடும் பெறுவதாகவும். இக்கால்களில் கூடை இறைத்துங் குறுங்கறுத்தும் குற்றேத்தம் பண்ணியும் கொண்டுண்டார் கோக்கொள்ளும் தண்டப்படுவா ராகவும்" என்ற நிபந்தனைகளை நோக்குக.

3. நிலங்களை ஆலயங்களுக்குத் தானம் செய்யும்போது இன்ன காரணத்திற்காகத் தானம் செய்யப்பட்டதென்றும் கண் டிருக்கிறது. உதாரணமாக, "திருவாநிலை மகாதேவர்க்கு வேண்டும் நிமந்தங்களும் பூசைக்கும் திருப்பணிக்கும் மேல்படி நிமந்தத்துக்கு மாக திருநாமத்துக் காணியாக.........கொடுத்தோம்" என்று கண்டிருக்கிறது. இங்கே "நிமந்தங்கள்" என்றால் செலவுகள் என்ற பொருள்படும். இப்பதம் இக்காலத்தில் பிரயோகிப்பது அரிது. "ஆலயத்திற்குச் செய்யத்தக்க செலவுகளுக்கும் பூசைக்கும் மராமத்து வேலைக்கும் தானம் செய்யப்பட்டது" எனக் கண்டிருக் கிறது. இவ்விதமான காரியங்களுக்கு உபயோகமாவதற்கு "பன் மாகேஸ்வர ரக்ஷை" என்ற காப்பும் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வித காப்பு மாத்திரமன்றி, சில சாசனங்களில் தானத்தின் நிபந்தனைகளைத் தடை செய்பவர்கள் "கங்கைக் கரையில் காராம் பசுவைக் கொலைசெய்த பாவத்திற்கு உட்படுவார்கள்" என்ற ஆணையும் விதிக்கப்பட்டுள்ளது. மேலும் இத்தர்மத்தைக் காப்ப வர்கள் "ஸ்ரீபாதம் என் தலைமேலே" என்ற பெருமையும் கொடுக்கப்பட்டிருக்கிறது. (தொடரும்)

# திருச்சிமலைக் கோயில்

(முன் களஎ-ம் பக்கத் தொடர்ச்சி)

எ-வது பட்டம் மவுனம் வைத்திலிங்க சுவாமியவர்கள் செய்து வைத்தத் திருப்பணி திருவாபரணம் வாகனங்கள் பாத்திரங்கள் முதலாகியதுகளின் விபரங்கள் சாலியவாகன சகாப்தம் கசூாகூஉன்மேல் செல்லாநின்ற கர ஹுத்தில் வாணப்பட்டரை பத்திக் கொண்டதில் ஆயிரக்கால் மண்டபத்தில் பாவுகல்லுகள் உத்தரங்கள் முதலாகியதுகளை பேத்து வாரிக் கொண்டு போய் போட்டதில் அந்தக் கல்லுகள் வந்து விழுந்ததில் திருவனந்த வாசலுக்குள்ளே வட புறத்து மண்டபத்தில் பாவு கல்லுகள் சேதமாகிப் போனதையும் கம்பத்தடியில் துஜஸ்தம்பத்தில் பட்டரைக் கல்லுகள் சேதமாகிப் போனதையும் இந்தசேதமான கல்லுகளெல்லாம் உடனே எடுத்துப் போட்டு அதுகளுக்குத் தகுந்தபடி பாவுகல்லுகள் உத்திரங்கள் மலையடி யடித்துக்கொண்டு வந்து சேர்த்து உயர எத்திக்கொண்டு போய் சேதமானதெல்லாம் போட்டு தீர்மானஞ் செய்தும் அப்பால் சித்திர மண்டபத்தில் நெத்திக்கண் முதலாகியதுகளிலும் சித்திரங்கள் எழுதியும் மறுபடி கம்பத்தடி வாசல் முன் சின்னதாயிருந்ததில் சபாபதி யெழுந்தருளினால் வாசற்படிக்கு அறுகாமையில் வந்தவுடனே சுவாமியைக் கேடகத்துடனே ஓரப்பாட்டில் வாசலுக்கு வெளியில் வந்ததின் பேரில் கொம்பு சாத்தி சுவாமி எழுந்தருளுகிறது. இப்படிக்கு வருத்தப்பட்டிருந்ததைப் பார்த்து ஷை வாசப்படியை எடுத்துப் போட்டு பெரிய நிலைகால் வைத்துக் கட்டியும் கதவு போட்டுந் தீர்மானமான உடனே சுவாமிகோவில் கதவும், அம்மன்கோவில் கதவும், திருவநந்த வாசல் கதவும் இந்த மூன்று கதவுகளுக்கும் பித்தளை யாணியும் வெங்கல மணியும்போட்டுத் தீர்மானஞ்செய்து ஆனதின் பேரில் அம்மனுக்குப் பித்தளைத் திருவாசியும் செய்து வைத்து அப்பால் சுவாமி கோயில் திம்மியில் அம்மன் சந்நிதிக்கு எதிரில் மேலமூலை மேல் மண்டபங்கல்கள் நழுகி இருந்ததுக்கு அடியிலிருந்து மேலருதிக்கு உதைவுகட்டி தீர்மானஞ் செய்தது.

திருவாபரணங்களின் விபரம்:—ஷை வைத்திலிங்க சுவாமியவர்கள் முன் கர்நாடக முதலாயிருந்த திருவாபரணங்களையும் திருமஞ்சனத் தங்கக்குடம் வெள்ளிக்குடம் பாத்திரம் வகையறாக்

களை யெல்லாம் கலாபக்காரர்களால் கொள்ளையடித்துக்கொண்டு போய்விட்ட படியினலே அதன்பேரில் இப்போ திருவாபரணங்களில் சுவாமியின் நெத்திப் பட்டமும் அதில் தொங்கு வில்வக் களையும் உச்சவாதிகளுக்கு சாத்துப்படியாகிற வில்வக்களையும் அம்மனுக்குப் பாதாதிகேசம் முதலாகிய கவசமும் மோகனமாலையும் குண்டு பவடித் தாவடமும் பதக்கங்களும் நாயகர், சீவில நாயகர், சந்திரசேகரர், சுப்பிரமணியர், வள்ளியம்மை, தெய்வயானை முதலாகியதுக்கெல்லாம் வெள்ளிக்கவசமும் ஷை கிரீடம் அபயஸ்தம் சீர்பாத முதலாயதும் சபாபதி ஷை அம்மனுக்கும் அபயஸ்த்தம் சீர்பாதமும் நாயகர் அம்மனுக்கு முத்துக் கொண்டை சந்திர பிறை சூரிய பிறை நெத்திச் சுட்டியும் மூலஸ்தான அம்மனுக்கு நெத்திப்பட்டமும் அதில் தொங்கல் மூக்குத்தியும் வெள்ளிமேல் தங்க மொலாம் செய்த தோடும் செய்துவைத்ததுவுமல்லாமல் சுவாமிக்குத் திருமஞ்சனம் எடுக்கிறதற்கு துறையூர் ஷாப் நஞ்சுண்ட செட்டியார் அவர்கள் ஷை வைத்திலிங்கத் தம்பிரான் அவர்கள் முன்னிலையாய் சுவாமிக்கு உபயமாகச் செய்து வைத்தது வெள்ளித் திருமஞ்சனக்குடம்.

ஷை சுவாமியாரவர்கள் முன்னிலையில் குருநாத செட்டியாரவர்கள் உபயமாக செய்தது திருமஞ்சன வெள்ளிக்குடம் க.

ஷை வைத்திலிங்க சுவாமியவர்கள் சாலிவாகன சகாப்தம் களஎஅ கலியுக சகாப்தம் சகஅஎஅ௰என் மேல்செல்லா நின்ற பராபவ ஷூ வைகாசி மீ சுவாமி அஷ்டபந்தனமும் மண்டலாச்சமும் பிராமண போஜனமும் ஷை வைத்திலிங்க மௌன சுவாமிகள் செய்துவைத்த சகல செலவுகளும் சொந்தத்தில் போட்டு செய்தது. ஷை சுவாமியவர்கள் செய்துவைத்த வாகன விபரம். சுவாமிக்குப் பெரிய வெள்ளி ரிஷபவாகனம். க. வெள்ளிக்குடை க. கமலவாகனம் 1. கற்பகவிருக்ஷம் 1. கிளிவாகனம் 1. அன்ன வாகனம், மயில்வாகனம் இந்த வாகனங்களெல்லாம் சொந்தத்தில் செய்துவைத்ததுவு மல்லாமல் ஷை சுவாமியின் முன்னிலையில் போசா வெங்கடாஜலபதி முதலியார் அவர்கள் சுவாமிக்கு பிரதோஷ ரிஷபவாகனம் வெள்ளி வாகனமாக உபயமாய்ச் செய்து வைத்தார்.

தொடரும்)

# அறிவியற் பகுதி—Science

## ஒளிநூல்—(Astronomy)

[திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்]

(முன் கஅக-ம் பக்கத் தொடர்ச்சி)

இங்கிலாந்தில் கி. பி. 1635-ல் ஹூக் (Hook) என்பவர் பிறந்தார். அவர் சிறந்த ஒளிநூற் புலவராகி இலண்டன் மாநகரத்திய வானூற் சங்கத்திற்குத் தலைமை பூண்டார். அவர் பல துறைகளிலும் புலமை பெற்று, பூமியின் அயனத்தில் நிலைமாற்றம் உண்டா, இல்லையா? என்பதைக் கண்டு பிடிப்பதற்கு உச்சக்கருவி (Zenith Sector) என்ற கருவியைத் தோற்றுவித்தார். கோள்களின் அசைவிற்குக் காரணம் அவை அகன்று போகமுயலும் விசையுடன் இரவியின் கவர்ச்சி சேர்வதுதான் என அவர் எடுத்தியம்பி, பின்னால் நியூட்டனுடைய ஆராய்ச்சிக்கு அடிகோலினர். ஹூக் தமது அறுபத் தேழாவது வயதில் (கி. பி. 1702) மாண்டார்.

ஹூக்கின் காலத்தில் பிளேஅம்ஸ்டேட் (Flamstead) என்ற சோதிநூற் புலவரும் வாழ்ந்திருந்தார். அவர் கி. பி. 1646-ல் பிறந்து 1720-ல் இறந்தவர். அவர்காலத்தில்தான் இலண்டன்மாநகரத்திற்கு அருகிலுள்ள கிரீனிச் என்ற இடத்தில், இப்போது உலகத்திலேயே ஒப்பற்றதாக விளங்கும் அரசாங்கச்சோதி ஆராய்ச்சிச்சாலை (Royal Observatory at Greenwich) கட்டப்பெற்றது. அது கட்டிமுடிந்தவுடன் அப்போது இங்கிலாந்துக்கு அரசராக இருந்த இரண்டாவது சார்ல்ஸ் அரசர் (King Charles II) அவருக்கு அரசாங்க ஒளி நூற்புலவர் (Astronomer Royal) என்ற பட்டத்தைச் சூட்டி அவரை அவ்வாராய்ச்சிச் சாலைக்குத் தலைவராக்கினர். அவர் செய்த பெரிய வேலை யாதெனில் தாமறிந்த மூவாயிரம் ஆகாய விண்மீன்களைக் குறிக்கும் ஓர் அட்டவணை தயாரித்ததே.

அவருக்குப் பின் அரசாங்க ஒளி நூற்புலவரானவர் டாக்டர் ஹாலி (Dr. Halley) என்பார். அக்காலத்தில் அவர் ஒப்புயர்வற்

றவராக விளங்கினர். பூமியின் தென்பகுதியிற் காணப்படும் விண்மீன்களின் அட்டவணை யொன்று தயாரிப்பதற்காக அவர் இரண்டாவது சார்ல்ஸ் மன்னரால் செயின்ட் ஹெலீனு (St. Helena) என்ற தீவிற்கு அனுப்பப் பெற்ருர். அவ்வட்டவணை 1679-ல் வெளியிடப்பட்டது. ஹாலி அத்தீவிலிருந்து ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கும் போது ஒரு சமயம் இரவிமண்டிலத்தைத் தாண்டிப் புதன் போவதைக் காண நேர்ந்தது; அதிலிருந்து இரவியின் பெயர்ச்சியைக் கணித்தறிவதற்கு அவர் வழிகண்டார்.

டாக்டர் ஹாலி செயின்ட் ஹெலினுவை விட்டுப் புறப்பட்டு இலண்டனை நோக்கிச் சென்றுகொண்டிருக்கும்போது பாரிசிற்கும் கலே (Calais) கோட்டைக்கும் இடையில் ஒரு பெரிய வால் வெள்ளி (Comet) யைப் பார்த்தார். உடனே அவருக்கு வால் வெள்ளிகளைப் பற்றி ஒரு நூல் எழுத வேண்டுமென்ற எண்ணம் தோன்றிற்று. அவர்கண்ட வெள்ளி முன் கி. பி. 1680-ல் தோன்றியது. அவர்தாம் எழுதிய ஆராய்ச்சிநூலில் அவ்வெள்ளி மறுபடி 1759-ல் தோன்றுமெனக் குறிசொல்லி யிருக்கிருர். அவர் அறிவித்தபடியே அவ்வால்வெள்ளி கி. பி. 1759-ல் தோன்றிற்று. அவர் தாம் கிரீனிச்சிலிருந்த ஒன்பது யாண்டுகளில் ஆயிரத்தறுநூறு காட்சிகளைக் கண்டு ஆராய்ச்சி செய்தார். அப்பெரியார் அக்காலத்தில் ஐரோப்பாவி லிருந்த வானநூற் புலவர்கள் அனைவரையும் நேரிலும் எழுத்து மூலவாகவும் அறிந்து பழகியிருந்தார். அவர் 1742-ல் தமது எண்பத்தாருவது வயதில் இறந்தனர்.

அவருக்குப்பின் தலைவரானவர் டாக்டர் பிரேஅட்லி (Dr Bradley) என்பவர். அவர் இரண்டு பெரிய உண்மைகளைக் கண்டு பிடித்தார். அவையாவன:—ஒளியின் நிலைமாறித் தோன்றும் தன்மை (aberration of light) யும், பூமி உருவணி (Earth's axis) யின் அசைவும் ஆம். அசையாத விண்மீன்களுக்கு ஏதாவது நிலைமாற்றம் உண்டா எனக் கண்டுபிடிப்பதற்கு எண்ணற்ற ஆராய்ச்சிகளைச் செய்தார். அவர் 1762-ல் மடிந்தார்.

இரண்டுவில் கி. பி. 1642 டிசம்பர் மாதம் 25வ. இங்கிலாந்தின் லின்கான் மாகாணத்தில் உல்ஸ்ட்ரோப் (Woolstrope) என்ற நகரில் உலகப் புகழ் பெற்ற ஓர் புலவர் தோன்றினர். அவரே சர் ஐசக் நியூட்டன் (Sir. Isaac Newton) என்பார். ஒளி

நூல் வளர்ச்சிக்கு முன் நின்றது போலவே அவர் கணிதத்திலும் இயற்கைச் சித்தாந்த (Natural philosophy) த்திலும் அரிய ஆராய்ச்சிகள் செய்து முதன்மைபெற்று விளங்கினர். அவர் பூநடுக்கவர்ச்சி (Gravitation) யைக் கண்டுபிடித்ததானது அது வரை காரணம் கூற முடியாதிருந்த பல உண்மை நிகழ்ச்சிகளுக்குத் தக்க காரணம் கூற ஏதுவாயிற்று. அவர் இயற்றிய ஒப்பற்ற பிரின்சிபியா (Principia) என்ற நூல் 1686-ல் வெளிவந்தது. அவர் கண்ட உண்மைகள் எண்ணிறந்தன. கோபர்நிக்கஸ் என்பவரால் புதுப்பிக்கப்பெற்று இப்போது வழங்கிவரும் இரவி வரிசைமுறை (Solar System) நியூட்டனுடைய முறையையே பின்பற்றியதாக இருக்கிறது.

நியூட்டனுக்குப்பின் பல புகழ்பெற்ற புலவர்கள் இருந்தார்கள். அவர்களில் முதன்மையானவர் டாக்டர் ஹெர்ஷெல் (Dr. Herschel) என்பவர். அவர் கி. பி. 1781 செப்டம்பர் மாதம் 13உ ஜியார்ஜியம் சைடஸ் (Georgium Sidus) என்ற கிரகத்தைக் கண்டுபிடித்தார். 1787-ம் ஆண்டில் அக்கோளைச் சுற்றிவரும் இரண்டு மதிகளை (Satellites) அவர் கண்டார்; பின் அவர் 1790-ல் ஒன்றும், 1794-ல் ஒன்றுமாக வேறு இரண்டு மதிகள் அதனைச் சுற்றி வருவதைத் தமது ஆராய்ச்சியால் அறிந்து வெளிப்படுத்தினர். இம் முடிபுகள் ஒளிநூல் உலகத்தில் ஒரு புத்துணர்ச்சியைத் தோற்றுவித்தன.

அரசாங்க ஒளி நூற்புலவராக இருந்த டாக்டர் மெஅஸ்கலேன் (Dr. Maskelyne) என்பவர் மிகப் புகழ்பெற்று விளங்கினர். அவரே நாவிகர் பஞ்சாங்கம் (Nautical Almanac) என்பதை வெளிப்படுத்துமாறு தூண்டியவர். (நாவிகர் - கப்பலோட்டிகள்). இப்பஞ்சாங்கம் கி. பி. 1767-ல் முதன் முதலாகத் தொடங்கப்பெற்று ஆண்டுதோறும் இன்றுவரை வெளிவந்துகொண்டிருக்கிறது. இஃது உலகத்திற்கு ஓர் பேருதவியாகி, கப்பலோட்டிகளுக்கு ஒப்பற்ற தோழனுகத் துணைபுரிகின்றது. (தொடரும்)

---

"செல்வியைப் போற்றுவார்
செந்தமிழை வளர்ப்பார்."

# மொழிபெயர்ப்பு-Translation

[திரு. T. B. கிருஷ்ணசாமி முதலியாரவர்கள் M.A.,B.L.]

க பி ல ர்

இயற்றிய

## இன்னா நாற்பது

## Of Unpleasant Things : Forty (Stanzas)

By

KAPILAR

(முன் கஅகூ-ம் பக்கத் தொடர்ச்சி)

கஉ. உடம்பா டிலாத மனைவிதோ ளின்னா
இடனில் சிறியாரோ டியாத்தகண் பின்னா
இடங்கழி யாளர் தொடர்பின்னா வின்னா
கடனுடையார் காணப் புகல்.

12. A disagreeing wife is unpleasant; friendship with the unintellectual is unpleasant; association with those who delight in drink forgetting it is poison, is unpleasant; unpleasant for debtors to go before their creditors.

கங. தலைதண்ட மாகச் சுரம்போத லின்னா
வலைசுமந் துண்பான் பெருமித மின்னா
புலையுள்ளி வாழ்த லுயிர்க்கின்னா வின்னா
முலையில்லாள் பெண்மை விழைவு.

13. To go into a wilderness at the risk of one's head is unpleasant; the pride of the fisherman who has to carry a net is unpleasant; meat-eating is unpleasant to many creatures, (that are killed for meat); unpleasant the femininity of a woman without breasts.

கச. மணியிலாக் குஞ்சரம் வேந்தூர்த லின்னா
துணிவில்லார் சொல்லுந் தறுகண்மை யின்னா
பணியாத மன்னர்ப் பணிவின்னா வின்னா
பிணியன்னார் வாழு மனை.

14. It is unpleasant for a king to ride on an elephant hat has no bells, to announce his approach; unpleasant are the courageous words of cowards; the yielding of unyielding kings is unpleasant; unpleasant the house where the women are as troublesome as disease.

கரு. வணரொலி யைம்பாலார் வஞ்சித்த லின்னா
துணர்தூங்கு மாவின் படுபழ மின்னா
புணர்பாவை யன்னார் பிரிவின்னா வின்னா
உணர்வா ருணராக் கடை.

15. It is unpleasant to be cheated by women whose curly and radiant locks are tied up in five different ways; unpleasant is the fruit that has fallen on the ground from the hanging bunch of the mango; unpleasant is separation from woman beautiful as a statue; unpleasant when those who are. intelligent do not understand.

கசு. புல்லார் புரவி மணியின்றி யூர்வின்னா
கல்லா ருரைக்குங் கருமப் பொருளின்னா
இல்லாதார் நல்ல விருப்பின்னா வாங்கின்னா
பல்லாரு ணாணப் படல்.

16. Unpleasant to ride on the grass-eating horse without sounding bells; unpleasant the meaning of things as set forth by the ignorant; unpleasant for beggars to wish for costly things; unpleasant the shyness which prevents speech before a large audience.

கஎ. உண்ணாது வைக்கும் பெரும்பொருள் வைப்பின்னா
நண்ணாப் பகைவர் புணர்ச்சி நனியின்னா
கண்ணி லொருவன் வனப்பின்னா வாங்கின்னா
எண்ணிலான் செய்யுங் கணக்கு.

17. Unpleasant is the large fortune amassed by starving oneself; association with enemies is very unpleasant; the beauty of a blind man is unpleasant; unpleasant the accounts cast by one who is ignorant of numbers.

கஅ. ஆன்றவிந்த சான்றோருட் பேதை புகலின்னா
மான்றிருண்ட போழ்தின் வழங்கல் பெரிதின்னா
நோன்றவிந்து வாழாதார் நோன்பின்னா வாங்கின்னா
ஈன்றாளை யோம்பா விடல்.

18. It is unpleasant for a fool to go into the company of the earned; very unpleasant to go forth on a journey when the sky gets dark; unpleasant the penance of those who are not accustomed to endurance; very unpleasant not to protect one's own mother.

கசூ. உரனுடையா னுள்ள மடிந்திருத்த லின்னா
மறனுடை யாளுடையான் மார்பார்த்த லின்னா
சுரமரிய கானஞ் செலவின்னா வின்னா
மனவறி யாளர் தொடர்பு.

19. Unpleasant it is if an intelligent man's mind lies fallow; it is unpleasant if one who has others to fight for him, himself goes forth and taps his chest in challenge; unpleasant to travel in forests and deserts; unpleasant the frienship of those that don't understand you.

உ0. குலத்துப் பிறந்தவன் கல்லாமை யின்னா
நிலத்திட்ட நல்வித்து நாறாமை யின்னா
நலத்தகையார் நாணாமை யின்னாவாங் கின்னா
கலத்தல் குலமில் வழி.

20. It is unpleasant for one born in a good family not to be educated; unpleasant is the sown seed that does not sprout; it is unpleasant for good people not to be ashamed of doing harm; unpleasant too is an alliance with those who are not born in a good family.

உக. மாரிநாட் கூவுங் குயிலின் குரலின்னா
வீர மிலாளர் கடுமொழிக் கூற்றின்னா
மாரிவளம்பொய்ப்பி னூர்க்கின்னா வாங்கின்னா
மூரி யெருத்தா லுழவு.

21. Unpleasant is the voice of the Koel in winter; the harsh words of the unloving are unpleasant; unpleasant are clouds that do not pour down rain; unpleasant too, ploughing with an old buffalo.

உஉ. ஈத்த வகையா னுவவாதார்க் கீப்பின்னா
பாத்துண லில்லா ருழைச்சென் றுணலின்னா
மூத்த விடத்துப் பிணியின்னா வாங்கின்னா
ஓத்திலாப் பார்ப்பா னுரை.

22. It is unpleasant to give to those who are not satisfied with what is given; unpleasant to go as a guest to those who are no hospitable; unpleasant is disease in old age; unpleasant are the words of a Brahmin who has not studied the Vedas.




## கடை மருந்துகளைப் பயன்படுத்து முறை

## அரிசி. (Rice)

("காசிகன்" எழுதுவது)

அரிசி யாவருமறிந்ததொரு பொருள்; நந்நாட்டு உணவுப் பொருள்களில் பொதுப்படையான சிறந்ததொருபொருள். இப்பொருள் உடல்நலக் கேடுற்ற காலத்து மருந்தாகவும் பயன்படுவதொன்றாகும்.

குடி நீர்:—

அரிசி குடிநீராகப் பயன்படும். நன்றாகத் தீட்டிக் கழுவிச் சுத்திசெய்த புழுங்கலரிசியைச் சிறிதெடுத்துத் தண்ணீர் விட்டு வேகவைத்து வடிகட்டிக் குடிநீராக அருந்தலாம். காய்ச்சல்களுக்கும் வைசூரி சிச்சிலுப்பை முதலிய அம்மை நோய்களுக்கும் மிகுந்த சூட்டினாலேற்படும் ஏனைய நோய்களுக்கும் இது நலந் தருவதாகும்.

இந் நீருடன் சிறுபுளிப்புத் தரவல்ல எலுமிச்சம்பழச் சாற்றையும், நாட்டுச் சருக்கரையையும் சேர்த்து வேண்டுமானாலும் உட்கொள்ளலாம். நோயாளிகள் நிறைய இக் குடிநீரை உட்கொண்டால் நல்ல பலன் உண்டு.

சிறுநீர் குறைவாகவும் மஞ்சள்நிறமாகவும் போகும் சில சுரங்களுக்கு இந் நீருடன் ஏறக்குறைய அரை ரூபாவெடை வெடியுப்பைக் கலக்கி உட்கொள்ளலாம்

காய்ச்சலுடன் இருமலும் உள்ள சில நோய்களுக்குக் குடிநீருடன் வெடியுப்புச் சேர்ப்பதோடு குன்றிவேர் என்று சொல்லும் நாட்டு அதிமதுரத்தில் சிறிது தட்டிப்போட்டுக் காய்ச்சிக் கொடுக்கலாம். அவ்வேர் அரிசி வேகுமுன்னர்ப் போடப்படல்வேண்டும்.

அரிசிமா:—

நன்றாகப் பொடித்த பச்சரிசிமாவை வைசூரி பூட்டியவர்களின் தோல்மேல் தூவலாம். மற்றும் மிகுந்த சூட்டினால் தோலின்மீது காணும் நோய்களுக்கும் இவ்வாறே தூவலாம். மாவைச் சிறிது கனமாகத் தூவினால் அது குளிர்ச்சியைக் கொடுத்து நோயின் வலியையுங் குறைக்கும். தீயினாற் சுடப்பட்ட புண்ணுக்குக் கூட வேறொரு மருந்துங் கையிலில்லாவிடத்து அரிசிமாவை அடுத்தடுத்து நீர் வடியாதபடியும் மா இளகாதபடியும் தூவிவந்தால் புண்ணில் காற்றுப் படாமல் பார்த்துக்கொள்ளலாம். இம் மாத் தூவல் கெட்டியாகி வலியுண்டானால் கீழ்வரும் அரிசிமாக் கிளறல் (போல்ட்டிஸ்) வைத்துக் கட்டி இளக்கிக்கொள்ளலாம். அதன் பின் சுண்ணாம்பு நீர்த் தயிலமாவது 'மெழுகுப் பிளாஸ்திரி' யாவது இட்டு ஆற்றிக்கொள்ளலாம்.

அரிசிமாக் கிளறல் (Poultice):—

அரிசியைப் பயன்படுத்துவதில் மூன்றாவது வகை கிளறிக் கட்டல் என்பதாகும். அரிசிமாவுடன் கொதிக்கிற வெந்நீரைச் சேர்த்தாவது, தண்ணீரைவிட்டுக் கலக்கிச் சிறு தீயில் வைத்து அடிக்கடி கிளறிவிட்டு இறுகியவுடன் எடுத்தாவது ஒரு துண்டுத் துணியின்மீது கனமாகத் தடவிக் கட்டலாம். பருக்கள், குருதிக் கட்டிகள், (விப்புருதிகள்) சீழ்கொள்ளுகிற காயங்கள் முதலியவற்றிற்கு இவ்வாறு நாடோறும் நாலைந்து தடவை மாற்றிமாற்றி வைத்துக் கட்டுவது நலந் தருவதாகும். வலியும் சூடுமுள்ள பருத்த மூல முளைக்கும் இது பயன்படும் என்று கூறுவர்.

சுடுகாயங்கள் (Burns & Scalds):—

தீப்பட்டாவது கொதிநீர் ஊற்றியதனாலாவது உண்டாகும் புண்களுக்குச் சுண்ணாம்புத்தண்ணீரும் நல்லெண்ணெயும் சமனளவு எடுத்துக்கொண்டு அதில் ஒரு சிறுதுண்டுத் துணியை நனைத்துக் கட்டி அடிக்கடி நனைத்தும் துணியை மாற்றியும் வர நல்ல பலனுண்டாகும். இஃதில்லாவிடத்து மையப்பொடித்த அரிசிமாவைத் தூவி வரலாம். புண் சற்று ஆறத் தொடங்கியவுடன் "மெழுகுப் பிளாஸ்திரி" போட்டுக்கொள்ளலாம்.

---

# வரலாற்றுப் பகுதி:
# History & Biography.

அறிவுநூற் புலவர் (Professor of Philosophy)

## ராய்பகதூர் P. சுந்தரம்பிள்ளை (எம்.ஏ.) அவர்கள்

## வரலாற்றுச் சுருக்கம்

(முன் ககஎ-ம் பக்கத் தொடர்ச்சி)

இங்ஙன மிருக்குங்கால், 1882-ம் ஆண்டு இறுதியில், மாட்சிமை மிக்க விசாகந் திருநாள் மகாராஜா அவர்கள் இவரது கல்விப் பெருமையை நன்குணர்ந்து தம் அரண்மனையில் பிறவகை சிரஸ்தார் (Commissioner of Separate Revenue) என்னும் உயர்ந்த வேலையில் இவரை அமர்த்தினர். இவர்தம் பெருங் கல்விக்கும் மனநிலைமைக்கும் மடிமிக்க அவ்வேலை பொருந்தியதாயில்லை. ஆனால் அவ்வேலையில் அமர்ந்திருக்கும்பொழுது இவர் சட்டக்கல்லூரியில் சட்ட நூல் பயின்றுவந்தார். அத்தருணத்தில் அரசர்கல்லூரித்தலைவர் (Principal) (மிஸ்டர்) ராஸ்துரையவர்கள் தாய்நாடு செல்ல நேர்ந்தமையின், அத் தலைமையாசிரியர் பதவியில் டாக்டர் ஹார்வி துரையவர்கள் அமர்ந்தார்கள். டாக்டர் ஹார்வி துரையவர்கள் தாம் முன் பார்த்து வந்த அறிவுநூற் புலவர் வேலைக்குத் தக்கார் சுந்தரம்பிள்ளையவர்களே என்று கண்டு அவரை அவ்வேலையில் 1885-ம் ஆண்டில் அமர்த்தினர். பிள்ளையவர்கள் அக்காலமுதல் தம் இறுதிக்காலம் வரை அப்போசிரியர் வேலையிலேயே யிருந்து, அறிவுநூற்பொருள்களை மாணவர்கட்கு அவாவுண்டாம்படி பெருந்திறமையுடன் கற்பித்து வந்தனர். அவருடைய விரிந்த எண்ணங்களும், நகைச்சுவை தோன்றப் பேசுந்திறனும், யாற்றொழுக்குப்போற் சொற்களமைக்கும் ஆற்றலும், சொல்வன்மையும், இயற்கை நுண்ணறிவும் கல்லூரி யாசிரியர்களாலும், மாணவர்களாலும், ஏனையோராலும் பெரிதும் பாராட்டிப் பேசப்பட்டன.

1884-ம் ஆண்டு, பிள்ளை யவர்கள், வழக்கறிஞர் சாமிநாத பிள்ளையவர்கள், இசைப் புலவர் திரு. T. இலக்குமணப் பிள்ளையவர்கள் தந்தையார் வலிய மேலெழுத்துத் திரவியம் பிள்ளையவர்கள், (உண்டியல் கடை) சு. கணபதிப் பிள்ளையவர்கள் தந்தையார் சுப்பிரமணிய பிள்ளையவர்கள் முதலியவர்களுடன் சேர்ந்து, சைவசமய விளக்கத்தையும், தமிழ்மொழி வளர்ச்சியையுங் குறியாகக் கொண்டு, 'சைவப் பிரகாச சபை' என்னும் பெயரிய ஒரு சபையை நிறுவி, அதன் வாயிலாகப் பணி செய்து வந்தார்கள். அச் சபைக்கு ஒரு கட்டிடம் அமைப்பதற்கு எல்லோருஞ் சேர்ந்து ஓர் இடம் வாங்கி, அதில் 1885-ம் ஆண்டில் ஒரு கட்டிடமுங் கட்டி முடித்தார்கள். அதற்குச் சுந்தரம் பிள்ளையவர்கள் ரூ. 500 நன்கொடை யளித்திருக்கிறார்கள். அச் சபைக் கட்டிடம் இன்றும் திருவனந்தபுரத்தில் நிலவி விளங்குகின்றது. கல்லூரிகளிலும், பள்ளிக்கூடங்களிலும் நடை பெற்றுவந்த பரிசளிப்புகட்கு அவர்கள் நன்கொடை வழங்கி வந்ததாகத் திருவிதாங்கூர் அரசியல் கல்வி யிலாகா அறிக்கைகள் பகருகின்றன. 1886-ம் ஆண்டு, அவர் தந்தையார் பெருமாள் பிள்ளையவர்கள் மண்ணுலகு நீத்து விண்ணுல கெய்தினர்.

பிள்ளையவர்கள் தமிழிலக்கிய வரலாற்றாராய்ச்சியிலும், சமய நூலாராய்ச்சியிலும், திருவிதாங்கூர் பண்டைய அரசர் கால ஆராய்ச்சியிலும் பெரிதும் உழைத்து, அவ்வப் பொருள்கள்பற்றிப் பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் ஆங்கிலத் திங்கள் இதழ்களில் எழுதி வந்தார்கள். தமிழ்மொழி வளர்ச்சிக்காகவும், அறிவு வளர்ச்சிக்காகவும் பிள்ளையவர்கள் பல சொற்பொழிவுகள் நிகழ்த்தி யிருக்கின்றார்கள். இதுவுமன்றி, திருவிதாங்கூர் அரசியலாரால் அமைக்கப்பட்ட போதுமக்கள் சொற்பொழிவு சங்கத் (Public Lecture Committee) தில் அமைச்சரா யமர்ந்து, அதிலும் பல சொற்பொழிவுகள் நிகழ்த்தி யிருக்கின்றார்கள். பிள்ளையவர்கள் தம் மேனாட்டு அறிவு நூலாராய்ச்சித் திறத்தினாலே, மேனாட்டுப் பெரியாருடைய விழுமிய கருத்துக்களை நமது நாட்டாருக்கும், நம் நாட்டு அறிவு நூலாராய்ச்சித் திறத்தினாலே நம் நாட்டு முன்னோருடைய சிறந்த கருத்துக்களை மேனாட்டுஅறிஞர்கட்கும் அறிவுறுத்தக்காரணராயிருந்திருக்கிறார்கள். இவரெழுதிய நூற்றொகைவிளக்கம், 1888-ம் ஆண்டு மேத்திங்கள் அச்சியற்றி வெளியிடப்பட்டது. அந்நூல் முக

வுரையில் ஆசிரியரவர்கள் கீழ்வருமாறு கூறியிருக்கிறார்கள் : 'தற்கால நிலைமைக்கேற்பச் சாத்திரங்களை எத்தனை வகுப்பாய் வகுக்கலாமென்பதும், அவற்றின் முக்கிய முறைமையும் பொருளும் என்னவென்பதும் ஆம்வகை எடுத்து விளக்குவதே இந் நூல் பொதுவியலின் தலைமையான உத்தேசம். இது திருவிதாங்கோட்டு கவர்ன்மெண்டாருடைய நூதன பிரசங்க ஏற்பாட்டின்படி திருவனந்தபுரம் சர்வகலாசாலையில் வாசிக்கப்பட்டது' என்பதாகும். தமிழ் உரைநடை நூலுக்கு இஃது ஓர் எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

இந் 'நூற்றொகை விளக்கம்' வெளிவந்த மூன்றாவதாண்டாகிய 1891-ம் ஆண்டு மார்ச்சுத்திங்களில், மனோன்மணீயம் வெளிவரலாயிற்று. அக்காலத்தில் வெளிவந்த தமிழ்நூல்களில் மனோன்மணீயம்' முன் அணியில் வைக்குந் தகுதியுடைய தென்பதற்கு (Rev. Dr. G. U. Pope M.A., D.D.) டாக்டர் ஜி. யு. போப் துரையவர்கள், ஆசிரியர் P. அரங்கநாத முதலியாரவர்கள் M.A., சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் B.A, B.L. முதலானவர்கள் தந்த மதிப்புரைகளே தக்க சான்றாகும். இக்காலத்தில், பிள்ளையவர்கள் (Madras Christian College Magazine) சென்னைக் கிறிஸ்துவ கலாசாலைத் திங்கள் இதழில் பத்துப்பாட்டு என்னும் பொருள்பற்றியும், ஞானசம்பந்தர் காலவாராய்ச்சி (The Age of Gnanasambandar) என்னும் பொருள் பற்றியும், ஆங்கிலத்திற் சில கட்டுரைகள் எழுதி வந்திருக்கிறார்கள். பின் 1894-ம் ஆண்டில், திருவிதாங்கூர் பண்டைமன்னர் காலவாராய்ச்சிக் கட்டுரைகளும் மேற்குறித்த திங்கள் இதழில் வெளியிடப்பட்டுப் பின் புத்தக உருவிலும் வெளிவந்தன. 1895-ம் ஆண்டில் திருஞானசம்பந்தர் காலவாராய்ச்சியும் புத்தக வடிவில் வெளிவந்தது. பிள்ளையவர்கள் செய்த ஞானசம்பந்தர் கால வரையறை, பின்னால் அதனைப்பற்றிப் பலரால் செய்யப்பட்ட ஆராய்ச்சிகளால் வலுப்பட்டதே யன்றி, ஒருசிறிதும் மாறுதலடையாதிருந்தது பிள்ளையவர்களின் ஆராய்ச்சித் திறனுக்குச் சான்றாகும். இந்தியாவிலும், மேனாட்டிலும் மேற்குறித்த இரு ஆங்கில நூல்களையும் கற்ற அறிஞர்கள் அவைகளின் மேன்மைகண்டு புகழ்ந்து பாராட்டி எழுதியிருக்கிறார்கள். இந்நூல்களின் வழியாக அவர்களெல்லாரும் இவர்தம் நட்பிற்கு உரிய

ரானார்கள். இவர் கல்வித் திறமையினை யறிந்த ஜெர்மனியிலுள்ள ஒரு பல்கலைக்கழகத்தார் (Gottingham University) இவர் ஆறு திங்கள் அங்குப் போந்து அக் கலாசாலையில் தங்கியிருப்பாரானால் அறிவுநூற் பெரும்புலவர் (Doctor of Philosophy) என்ற பெரும் பட்டம் வழங்குவதாக வாக்களித்ததனாலேயே இவர்பால் மேற்கு நாட்டார் கொண்டிருந்த நன்மதிப்பு தெள்ளிதிற் புலனாம்.

சர் எம். இ. கிராண்ட் டப் (Sir M. E. Grant Duff என்ற சென்னை மாகாண அரசியற் றலைவர் (Governor of Madras) அவர்கள் தூண்டுதலின்மேல் இலண்டனிலுள்ள வரலாற்றுராய்ச்சிக் கழகத்தார் (Royal Historical Society) இவருக்கு F.R.H.S. என்னும் பட்டத்தையும், ஆசியாத் தொடர்பான ஆராய்ச்சிக் கழகத்தார் (Royal Asiatic Society) M.R.A.S. என்னும் பட்டத்தையும் வழங்கி இவரைப் பெருமைப்படுத்தினர். இவர் செய்த தென்னிந்திய வரலாற்றுராய்ச்சியின் திறமையைக் கண்ட சென்னை அரசியலார், 1896-ம் ஆண்டில் 'ராய்பகதூர்'' என்னும் பட்டத்தை இவருக்கு அளித்தனர். 1891-ம் ஆண்டில் இவரைச் சென்னைப் பல்கலைக்கழகத்தார் பல்கலைக் கழக உறுப்பின (F.M.U.) ராக அமைத்துக்கொண்டனர். அதுமுதல் இவரைப் பல்கலைக் கழகத்தார் பல ஆண்டுகளில் தமிழ் (Tamil), வரலாறு (History), அறிவுநூல் (Philosophy) இவைகட்குத் தேர்வாளராக அமைத்துச் சிறப்பெய்துவித்தனர். திருவிதாங்கூர் பண்டை யரசர் கால வாராய்ச்சி எழுதும்பொருட்டுப் பிள்ளையவர்கள் எடுத்துக்கொண்ட பேருழைப்பை நன்குணர்ந்த மாட்சிமிக்க திருவிதாங்கூர் அரசர் பெருமான் அக்கால முதற்கொண்டே பிள்ளையவர்களின் ஒரே புதல்வரான திருவாளர் நடராஜ பிள்ளை அவர்கட்குத் திங்கள்தோறும் ரூபாய் இருபது நன்கொடையாக அளித்துவருகிறார்கள்.

* சுந்தரம்பிள்ளையவர்கள், தம் இளமைக் காலத்தில், நாகபட்டினம் இயற்றமிழ் ஆசிரியராகிய, புத்தகக்கடை திருவாளர் நாராணயசாமிப் பிள்ளை அவர்களிடந் தமிழ்க் கல்வி பயின்றவர்கள். நாகை R. S வேதாசலம்பிள்ளை (இப்பொழுது சுவாமி

---

*மறைத்திரு சுவாமி வேதாசலம் அவர்கள் எழுதிய சிந்தனைக் கட்டுரையினின்றும் எடுக்கப்பட்டது.

வேதாசலம் என்னும் மறைமலையடிகள்) அவர்களும் அவ்வாசிரியரிடத்தே தம் இளமைக் காலத்தில் தமிழ்க் கல்வி பயின்றவர்கள். சுந்தரம்பிள்ளையவர்களியற்றிய 'மனோன்மணீயம்' என்னும் நாடகக் காப்பியத்தை, திருவாளர் வேதாசலம்பிள்ளை யவர்கள் கண்ணுற்று, சுந்தரம் பிள்ளையவர்கட்குத் தம்மைப்பற்றியும் தம் ஆசிரியர் நாராயணசாமிப் பிள்ளையவர்களைப் பற்றியும் 1895-ம் ஆண்டில் ஒருகடிதம் அகவற் பாவில் வரைந்து விடுத்தார்கள். அதனைக் கண்டு இறும்பூதுற்ற சுந்தரம் பிள்ளை யவர்கள் ஆசிரியர் நாராயணசாமிப்பிள்ளை யவர்களையும், திருவாளர் வேதாசலம் பிள்ளை யவர்களையும் திருவனந்தபுரத்திற்குத் தம்பால் வரும்படி விரும்பி யழைத்தனர். அவ்வழைப்பினுக்கு மிக மகிழ்ந்து திருவாளர் வேதாசலம்பிள்ளை யவர்கள் தம் ஆசிரியருடன் 1895-ம் ஆண்டு நவம்பர்த் திங்கள் இறுதியில் திருவனந்தபுரத்துக்குச் சென்று சுந்தரம் பிள்ளையவர்களைக் கண்டார்கள். சுந்தரம் பிள்ளை யவர்கள், திருவாளர் வேதாசலம் பிள்ளையவர்கள் அகவற்பாவில் எழுதிய கடிதத்தைக் கண்டு அவர்களை ஆண்டில் முதியராகவே எண்ணியிருந்தனர். ஆனல் திருவாளர் வேதாசலம்பிள்ளை யவர்கள் மிக இளைஞரா யிருத்தலைச் சுந்தரம் பிள்ளையவர்கள் நேரிற் கண்ட அளவானே பெரிதும் வியப்புற்றுத் தாம் முன் எண்ணியதனை அவரிடங் கூறினர்கள். சிலநாள் சுந்தரம் பிள்ளை யவர்கள் திருவாளர் வேதாசலம்பிள்ளை யவர்களோடு நட்பினல் அளவளாவியிருக்கையில், அவர்கள் பழைய சங்கத் தமிழிலக்கண இலக்கியங்களிலும் பழந் தமிழ்க் காப்பியங்களிலும் வல்லுநராயிருத்தலை ஆராய்ந்து பார்த்து, அவர்களின் அறிவின் நுட்பத்திற்கும், நிறைந்த கல்விக்கும், சிறந்த ஆராய்ச்சிக்கும், அவர்களை மிக வியந்து பாராட்டி அதற்கு அடையாளமாக ஒரு நற்சான்று இதழும் எழுதித் தந்தனர். திரும்பவும் 1896-ம் ஆண்டில், சுந்தரம் பிள்ளை யவர்கள், திருவாளர் வேதாசலம் பிள்ளை யவர்களைத் திருவனந்தபுரத்துக்கு அழைத்து, அப்போது மார்த்தாண்டன் தம்பி என்பவரால் வைத்து நடத்தப்பட்ட ஓர் ஆங்கிலக் கல்விச்சாலையில் அவரைத் தமிழாசிரியராக அமர்த்தி வைத்தார்கள். திருவாளர் வேதாசலம்பிள்ளை யவர்கள் திருவனந்தபுரத்திலிருந்த இரண்டரைத் திங்களுக்கிடையில், செப்டம்பர் 12 ம் நாள், திருவனந்த

புரம் அரசர் கல்லூரியில் சுந்தரம்பிள்ளையவர்கள் வேண்டுகோட் கிணங்கி அவர்கள் தலைமையின்கீழ் "நாடகத் தமிழ்" என்னும் சிறந்த பொருளைப்பற்றி ஒரு விரிவுரை நிகழ்த்தினர். அவ் விரிவுரையின் சிறந்த அறிவாராய்ச்சி நுட்பங்களைச் சுந்தரம் பிள்ளையவர்கள் மிகவும் வியந்து பேசினர். அதன்பின், திருவாளர் வேதாசலம்பிள்ளை அவர்கள் தம் இருபதாம் ஆண்டிற் சுந்தரம் பிள்ளையவர்களிடமிருந்து பரிசுபெற்று நாகை மீண்டனர். சுந்தரம்பிள்ளையவர்கள் அளித்த நற்சான்றிதழே திருவாளர். வேதாசலம்பிள்ளை யவர்கட்கு அக்காலத்தில் கிறித்தவ கலாசாலைத் தமிழாசிரிய வேலையைப் பெறப் பெருந்துணை புரிந்தது.

சுந்தரம்பிள்ளை யவர்கள் தமது பிள்ளைமைக்காலத்திலேயே மிகுந்த கடவுட் பற்றுடையவர். ஆதலால், இவர் நாடோறும் புலரிக்காலையில் பிள்ளையார் பெருமானுக்கு வழிபாடு செய்தே பள்ளிக்குச் செல்வர். பள்ளியிலும், இவர் அங்கிருந்த பிள்ளையார் பெருமானுக்கு அன்புடன் வழிபாடு செய்தபின்பே கல்வி கற்கத் தொடங்குவது வழக்கம். இன்னும் இவர், தம் இளமைக்காலத்திருந்தே கடவுட் பற்றிலும், தாய்மொழிக் கல்வியிலும், ஆடம்பரமில்லா வாழ்க்கையிலும் பற்றுடையவராய் வளர்க்கப்பட்டு வந்தாராதலின், ஆங்கிலக் கல்வியில் ஒப்பற்ற பெரும்புலவராய காலத்தும், தம் சமயக் கொள்கையையும், தாய்மொழிக் கல்வியையும் ஒரு சிறிதும் மறவாது அவைகளின் முன்னேற்றத்திற்காகத் தம் இறுதிக்காலம்வரைப் பெரும்பாடு பட்டனர். இவர் வீண் ஆரவாரமான செலவுகள் செய்யமாட்டார். ஆனால், கல்வி கற்பதிற் பெருவிருப்பும் பேரவாவுமுடைய ஏழை மாணவர் எவர்க்கும் இவர் பொருளுதவி செய்வர். அவ்வாறு சிலர்க்குப் பெரும்புலமைப் பட்டம் எய்தும்வரைப் பொருளுதவி புரிந்துவந் திருக்கின்றனர். பொதுவாக இவர், மக்களைப் பொருட் செல்வ நிலையுன்னி மதிப்பவரல்லர். செல்வராயினும் எளியவராயினும் அவரவரிடத்துக் காணப்படும் திருவருள் விளக்கத்தையும் நற்பண்புகளையுமே பாராட்டும் இயல்பினர். இவர் நாடோறும் பத்து அல்லது பன்னிரண்டு மணி நேரத்திற்குக் குறையாமல் உழைக்கும் இயல்பினர். கல்லூரிப் பேராசிரிய வேலையோடு அறிவுநூலாராய்ச்சி, தென்னிந்திய வரலாற்றாராய்ச்சி, கல்வெட்டாராய்ச்சி முதலியவை

களிற் றம் காலத்தைப் பொதுநலத்துக்குப் பயன்படக் கழித்து வந்தனர். இவர் ஆண்டுதோறும் வரும் கோடைவிடுமுறை காலங்களில் பெரும்பாலும் பாடல்பெற்ற திருக்கோயில்களுக்குச் சென்று கடவுளை வழிபடுவர். இதுவுமன்றி அக்கோயிற் சுவர்களில் எழுதப்பட்டிருக்கும் கல்வெட்டுக்களையும் ஆராய்ச்சி செய்தே திரும்புவர்.

இத்தகைய பேருழைப்புமிக்க பிள்ளையவர்கள் நாளடைவில் உழைப்பின் காரணத்தால் உடல்வலிமை குன்றியே வந்தார். அதன் பின்னர் நோய்மிகுதியால் திடீரெனத் தமது இளமைக் காலமாகிய 42-ம் ஆண்டிலேயே (அதாவது 1897-ம் ஆண்டு எப்ரல் 26-ம் நாள், கொல்லம் ஆண்டு 1072 சித்திரை 14 ம் நாள்) திங்கட் கிழமை காலை 8 மணிக்கு நவமி திதியில் பெரும்புலவரான சுந்தரம் பிள்ளையவர்கள் இம்மண்ணுலக வாழ்வை நீத்து என்றுமழியா விண்ணுலக வாழ் வெய்தினர்.

இவர் தமது 23-வது ஆண்டில், கோடகநல்லூர் உயர்திரு. சுந்தர சுவாமிகளை நட்புக்கொண்டதுமுதல் காலையில் முழுகி, தேவார முதலிய தமிழ்மறைகள் ஓதி வழிபாடு செய்தபின்னரே உணவருந்தி வேலைமேற் செல்வது வழக்கம். இவ்வழக்கத்தை அவர் தமது இறுதிக்காலம்வரை கைநெகிழ விடவில்லை. மேனாட்டு அறிவுநூற் பயிற்சியும் நாகரிகமும் அவர்களுடைய கடவுட்பற்றையும் மொழிப்பற்றையும் நல்லொழுக்கத்தையும் வலுப்படுத்தியனவேயன்றிச் சிறிதுங் குறைக்கவில்லை. இவர் எவர்க்குங் காட்சிக் கெளியராய், அவரவர்க்குத் தம்மால் இயன்ற உதவி செய்துவரும் எளிமையும் விழுமையும் செழுமையும் உடைய வாழ்க்கை வாழ்ந்து வந்தார்.

இவர் தமக்கு எத்தகைய சிறு நன்றி செய்தாரையும் மறவாது நன்றி பாராட்டும் இயல்புடையவர். தமக்கு உதவிபுரிந்த தம் ஆங்கில அறிவு நூற்புலவர் டாக்டர் ஹார்வி துரையவர்கட்கு நன்றி பாராட்டும் அறிகுறியாகத் தாம் குடியிருந்துவந்த மனைத் தோட்டத்திற்கு இவர் ஹார்விபுரம் என்று பெயரிட்டு வழங்கினார். அப்பெயர் இன்றும் நிலவிவருகிறது. இதுவுமன்றி, தாமியற்றிய 'மனோன்மணீயத்தை'த் தம் ஆசிரியர் ஹார்விதுரையவர்கட்கே உரிமைப்படுத்தி வெளியிட்டிருக்கிறார்.

'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற முது மொழிக்கு இணங்க இவர் தம் வாழ்நாள்முழுமையுங் கழித்து வந்தனர். வாழ்க்கையின் வெற்றியானது மிக்க பொருள் தேடி ஆடம்பரமாய் வாழ்தலினுலாவதன்று; கடவுட் பற்றுடன் நல்லறிவு, நல்லொழுக்கம், பிறர்க்குப் பயன்பட வாழ்தலாகிய இவைகளா லேயே ஆவது. பிள்ளையவர்களுடைய இத்தகைய வெற்றி வாழ்க் கைக்கு அவர்களுடைய கடவுட்பற்றே காரணமாயிருந்தது. உலகத் தினுடைய முன்னேற்றமானது பிள்ளையவர்களைப் போன்ற பெரி யார்களுடைய சிறந்த வாழ்க்கையின் பயனுலேயே யுண்டாகின் றது. இவர் வரலாறு அதனைக் கற்கிறவர்களுக்கு இவர்தம் வாழ்க் கையைப்போன்ற தூயவாழ்க்கையை நடத்த வழிகாட்டியா யிருக்குமென்பது திண்ணம். இப்பெரியாருடைய உலக வாழ்க்கை நலம் எல்லாம்வல்ல இறைவனருளால் இந்நூலைக் கற்கும் மாணவர் கட்கும் பிறர்க்கும் உண்டாவதாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

---

## உஞற்றுபவரும் உஞற்றிலவரும்

உஞற்றுபவர்.

க. ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர். (குறள்-620)

உ. சூழாமல் தானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழாது உஞற்று பவர்க்கு. (குறள்-1024)

க. கருதியதை முடிக்க அயர்வின்றி மேன்மேலும் முயல்கின்றவர் வலிமிக்க விதியினையும் புறங்காண்பர்.

உ. தமது குடி சிறப்படைதற்குரிய முயற்சியை விடாது முயல்கின்ற வர்கட்கு, அஃது எதிர்பாராதவண்ணம் முடிவுபெறும்.

உஞற்றிலவர்.

க. இடிபுரிந்து எள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர். (குறள்-607)

உ. குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட உஞற்றி லவர்க்கு. (குறள்-604)

க. சோம்பலில் மூழ்கிக்கிடப்பவர் பிறரால் மிகவும் கடுமையாக இகழ்ந்துரைக்குஞ் சொல்லைக் கேட்பர்.

உ. சோம்பலில் மூழ்கி முயற்சி செய்யாதவருடைய குடியுங் கெட்டுக் குற்றமும் பல்கிப் பெருகும்.

—வ. சுப்பையா பிள்ளை.

# மாணவர் பகுதி

## கல்வியும் நூல்நிலையமும்

(திரு. நாகை. த. குமாரசாமி அவர்கள்.)

கல்வியாவது கற்றற்குரிய நூல்களைக் கற்றலாம். கல் என்னும் பகுதி தோண்டு எனப் பொருள்படும். மக்கட் கமைந்த அறிவு இறைவன் அறிவு போலத் தூயதா யிராமல், ஆணவ இருளிற் புதைந்து கிடப்பது. அவ்விருட் படலத்தைச் சிறிது சிறிதாகக் கல்லி எடுத்து அகற்றுவதே கல்வி யெனலாம். அவ்விருள் குறையக் குறைய, இறைவன் திருவருட் சாயலால் மக்களினுள்ளே மறைந்து கிடந்த அறிவு வெளிப்பட்டுத் தோன்றும். இதுபற்றித்தான் ஆசிரியர் திருவள்ளுவரும்,

> "தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
> கற்றனைத் தூறு மறிவு"

என்றார்.

கல்வி, அறிவுநூற் கல்வி யென்றும், உலகநூற் கல்வி யென்றும் இருவகைப்படும். அவற்றுள் அறிவுநூற் கல்வி, மெய்யுணர்தற்குக் கருவியாய் வீடு பயப்பது. உலகநூற் கல்வி, அவ்வவர் தொழிலுக் கேற்பப் பலதிறப்பட்டு, இம்மையில் மிகவும் பயன் படுவதாகும். ஆகவே இவ்விருதிறக் கல்வி நூல்களையும் மக்கள் கற்று அறிவு நிரம்பப் பெற்று இம்மை மறுமைப் பயன்களை எய்த வேண்டுமல்லவா?

தங்கள் வாணாளை வீணாளாக்காமல் பயன் படுத்தவேண்டுமானால், மக்கள் அறிவுடையவர்களாக வேண்டும். அறிவு முதிர்ச்சியடை வடைய நாகரிகம் மேன்மையுறும். நாகரிகமுண்டானால், மக்கள் தங்களுக் கெனமட்டும் வாழாது, பிறர்க்கும் பயன்பட்டு, ஒழுக்கத்திற் சிறந்து, பொய் பொருமை முதலிய கொடிய பேய்களுக்குத் தப்பி, அன்பும் கருணையும் உடையவர்களாய், நிலையற்ற இவ்வுலக வாழ்க்கையை நிலையுள்ளதென மயங்கிக் கண்டதே காட்சி கொண்டதே கோலமெனத் திரியாமல், இறைவன் திரு

வருட் குறிப்புக் கிணங்க நடந்து, பேரும் புகழும் பெருவாழ்வும் பெற்று நன்மை அடைவார்கள் அன்றோ?

இங்ஙனம் வாழ்க்கைக்கு இன்றியமையாத அறிவைப் பெறுதற்குக் கல்வியைவிடச் சிறந்தவழி வேறொன்றில்லை. கல்வியின் பெருமையை எடுத்துக் கூறவந்த குமரகுருபர சுவாமிகள்.

"அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்;
புறங்கடை நல்லிசையு நாட்டும்—உருங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்கும்; கல்வியுனுங்கில்லைச்
சிற்றுயிர்க் குற்ற துணை."

என்று சுருங்கக்கூறி, விளங்க வைத்தார்கள். கல்வியாகிய கடலுக்குக் கரையில்லை. நம்முடைய வாழ்நாளோ, மிகவும் குறுகியது. அற்ப ஆயுள் பெற்ற மனிதன், உறக்கத்திலும் உண்டாட்டுக் களியாட்டங்களிலும் தன் ஆயுளில் அரைப்பங்கை இழந்துபோகிறான். எஞ்சிய அரைப்பகுதியில் ஏதாவது பயன் அடையவேண்டுமானால் கல்வியே சிறந்தவழியாகும். தக்க நூல்களைக் கற்று அந் நூல்கள் கூறிய நெறியானே அறஞ் செய்து, பொருள்சேர்த்து, இன்பம் நுகர்ந்து, இறைவனடி மறவாது ஒழுகிவரல் வேண்டும்.

வாழ்க்கைக்கு இன்றியமையாதது அறிவு. அவ்வறிவு பெறுதற்குப் பெருந்துணையாய் நிற்பது கல்வி, அக் கல்வியை ஆசிரியர் மாட்டும், தாமே பல நூல்களைக் கற்றலாலும் பெறலாம். ஆசிரியரைக் கொண்டே எல்லா நூல்களையும் கற்க வேண்டும் என்பதில்லை. அப்படிக் கற்பதும் இயலாததாகும். கல்வியின் சிறப்பையும், அதன் இன்பத்தையும், அதனால் பெறும் பயனையும், அதைக் கற்கவேண்டிய வழிகளையும் ஆசிரியர் தம்முடைய அனுபவத்தின் பயனால் எடுத்துக்காட்டுவர். ஆசிரியர் அன்புடன் காட்டிய வழியைப் பின்பற்றிக் கல்வி கற்பதுதான் மாணவர் கடமை. ஆசிரியர் கற்பித்ததன் துணைகொண்டு பின்னுங் கற்றற்குரியவற்றை மாணவர் தாமே கற்பதற்குச் சாதகமாய் அமைந்த இடமே நூல்நிலையமாகும்.

(தொடரும்)

---

## இந்திய மருத்துவக் கல்லூரி
### சித்தவைத்திய ஆசிரியர்
## வைத்தியரத்தினம் C. S. முருகேச முதலியாரவர்கள்

(முகப்புப் படம் பார்க்க.)

இவர் 1871-ம் ஆண்டு ஜூலைத்திங்கள் 20-ம் நாள் பொன்னேரி உயர் துளுவ வேளாள குலத்தில் பிறந்தவர். இவர் சென்னை, திருவல்லிக்கேணி ஹிந்து ஹைஸ்கூலில் படித்து, சென்னை சர்வகலாசாலை நுழைவுத் (Matriculation) தேர்வில் தேரியபின் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் காலேஜ் வகுப்பில் சேர்ந்தார். சேர்ந்து, எப். ஏ. வகுப்பில் இரண்டு ஆண்டுக்குரிய பாடங்களை முடித்த பிறகு 1893-ம் ஆண்டில் அரசாங்க அலுவலில் அமர்ந்தார். இங்ஙனம் இவர் அரசாங்க அலுவலில் இருக்கும்போதே இவருக்கு அரசாங்க அலுவலைப்பார்க்கிலும் பிணிப்பட்ட ஏழைமக்கட்கு மருத்துவஞ்செய்து நோய் நீக்குதலே சிறந்த கடமையாகத் தோற்றிற்று. இதற்குக் காரணம் இவர்களின் முன்னோர்களுக்குச் சித்தவைத்தியத்தில் மிகுந்த ஆற்றலிருந்ததேயாம். இவர் இளமை முதல் சித்த மருத்துவர்களிடத்திலும், யோகிகளிடத்திலும், முனிவர்களிடத்திலும் மிகுந்த பணிவும் அன்பும் காட்டி அவர்களிடமிருந்து அரிய 'மருந்து செய்முறைகளைக் கற்றுக் கொண்டார். 1911-ம் ஆண்டில் இவர் அரசாங்க அலுவலினின்றும் விடுதி பெற்றுத் தம் முழு நேரத்தையும் சித்தவைத்தியத்திலேயே செலவழித்து வந்தார். இவர் ஆயுள்வேதவைத்தியம், யூனானி வைத்தியம் ஆகிய இவைகளையும் நன்கு போற்றிவந்தார். பின் சித்தவைத்தியத்தைஅறவே ஒழிக்க வேண்டுமென்று ஏற்பட்ட கிளர்ச்சியை அடக்கி, இவர் சென்னையில் பல இடங்களில் பெருங் கூட்டங்களைக் கூட்டிச் சித்தவைத்தியத்தின் அருமை பெருமைகளை நன்கு எடுத்து விளக்கி நிலைநாட்டினர். இந்நேரத்தில் இந்திய வைத்தியத்தை ஆதரிக்க வேண்டுமென்ற கிளர்ச்சி தலைகாட்டியது. அதற்காக அரசாங்கத்தினர் ஒரு கமிட்டியை ஏற்படுத்தினர். இந்தக் கமிட்டி ஏற்படுவதற்கு 30 ஆண்டுகட்கு முன்னிருந்தே சென்னையில் இலவச வைத்தியசாலை நடாத்தியவரும் 1914-ம் ஆண்டில் ஏற்படுத்திய தென்னிந்திய ஆயுள்வேத வைத்திய சங்கக் காரியதரிசியும்,

இச்சங்கத்தின் சார்பாக நடாத்திவந்த வைத்திய கல்விச் சாலை உபாத்தியாயர்களி லொருவரும், சென்னை லோகல் செல்ப் கவர்ன்மெண்ட் 1924-பிப்ரவரி 24-ம் நாள் விடுத்த உத்திரவின்படி ஏற்படுத்திய அட்வைசரி போர்டின் உறுப்பினரு மாகிய இவர் மேற்படி கமிட்டியில் ஓர் உறுப்பினராகத் தெரிந் தெடுக்கப்பட்டார். இவருடைய சிறந்த உழைப்பின் பயனாக இந்திய மருத்துவக் கல்லூரி ஒன்று சென்னையில் நிலைநிறுத்தப் பட்டு அதன்கண் சித்த வைத்தியமும், ஆயுள் வேதமும், யூனானி வைத்தியமும், மேனாட்டு வைத்தியமும் சொல்லிக் கொடுக்கப்படு கின்றன. இவற்றுள் இவர் சித்த வைத்தியத்திற்குத் தலைமை யாசிரி யராக நியமிக்கப்பட்டார். பின் இக் கல்விச்சாலையை ஒட்டிய மருத்துச்சாலையில் வைகுவைத்தியரா (Resident Physician)யும் நியமிக்கப்பட்டு அவ்வேலைகளைத் திறம்படப் பார்த்து வருகின் றனர். நிற்க, சித்த வைத்திய பாடநூல்களை எழுதும் கமிட்டி யுடன் தாம் உழைத்ததுமன்றிக் குறித்த காலத்திற்குப் பின் கமிட்டி கலைந்த பின்னரும், இவர் தமக்குள்ள அளவுகடந்த வேலை கட்கிடையில் கிடைத்த நேரத்தில் அக்கமிட்டியாரால் எழுதப் பெற்ற மருத்து நூல்களை வகுத்தும் தொகுத்தும் விரித்தும் ஒழுங்குபடுத்தி அரசாங்கத்தாரால் அச்சிடச் செய்து வருகின் றனர். இதுகாறும் பாலவாகடம், நஞ்சுநூல் என்ற இரண்டு நூல் கள் வெளிவந்திருக்கின்றன. 27-12-1933-ல் சென்னையில் கூடிய அகில இந்திய சித்த வைத்திய மகாநாட்டில், 'சித்த வைத்திய சரபம்' என்ற பட்டமும், அப்பட்டத்திற்குரிய பாகையும் அங்கியும் இவருக்கு அளிக்கப்பட்டன.

1934-ம் ஆண்டு ஜனவரி முதல் நாளன்று இம்பீரியல் அர சாங்கத்தார் 'வைத்திய ரத்னம்' என்னும் அரிய பட்டத்தை இவர் அரும் பெரும் வேலைகளைப் பாராட்டி அளித்துளார்.

இப்பெரியாருக்கு நீடுவாழ்வும், குறைவற்ற செல்வமும் கொடுத்தருளுமாறு பொதுவாகத்தமிழர்கள் யாவரும் சிறப்பாகத் தமிழ்ச் சித்தவைத்திய உலகமும் எல்லாம்வல்ல இறைவனை எப் போதும் போற்றுங் கடப்பாடுடையார் என்று கூறுதல் மிகை யாகாது.

---

# குறிப்பு

## கார்த்திகை கடும்புயல்

வட வெள்ளாற்றிற்கும் தென் வெள்ளாற்றிற்கும் இடையினுள்ள புனல் நாடும், அதன் வடக்கே தென்பெண்ணை ஆறு வரையிலுள்ள (மகதநாடு, பெண்ணைநாடு, சேதிநாடு, திருமுனைப்பாடிநாடு ஆகிய பகுதிகளடங்கிய) நடு நாடும் தொன்று தொட்டே இருபதாண்டுகளுக்கு ஒருமுறையும் அதற்குள்ளும் ஒவ்வொரு குருவட்டத்திலும் காற்றினற் பெருஞ்சேதமடைவதுண்டு. ஈரான், கச்சான், சோழன்வாடை முதலிய காற்றுக்களால் கார்த்திகை பங்குனித் திங்களில் ஒரோவோரமயத்தில் இந்நாடுகளில் வெள்ளச்சேதமும் நிகழ்வதுண்டு. பண்டைக் காலத்தில் காற்றின் கொடுமையைத் தடுத்தற்கேற்றவாறு நகரங்கள் அமைக்கப்பெற்று வந்தன. புதுச்சேரி, கூடலூர், பரங்கிப்பேட்டை, திருமுல்லைவாயில், தரங்கம்பாடி, காரைக்கால் நாகூர் முதலிய இடங்களின் பழைய அமைப்புகளை நோக்குவோர்க்கு இவ்வுண்மை புலப்படும்.

கி. பி. 10 - 11 - 1681, 1853, ஏப்ரல் 1859, 6 - 11 - 1871, 12 - 11 - 1899, ஜூலை ஆகஸ்டு 1900, 1916 ஆகிய காலங்களில் புயற்காற்றினல் புனல் நாடும், நடுநாடும் பெருஞ் சேதமுற்றமைக்குக் குறிப்புகள் உள்ளன. கி. பி. 1874, 1880, 1882, 1884, 1887, 1891, 1893, 1898 ஆகிய ஆண்டுகளில் வெள்ளத்தினல் சேதம் ஏற்பட்டதும் குறிக்கப்பட்டுள்ளன. கி. பி. 1891-ம் ஆண்டின் கடைசியிலும் 1896 ஜூலை ஆகஸ்டு மாதங்களிலும் சீகாழி, மாயூரம், திருக்குடந்தை ஆகிய நகர்கள் வெள்ளக்காடா யிருந்தன.

இனி, சென்ற 15 - 12 - 1933ல் அடித்த பெருங்காற்று மழையினல் இந் நாடுகள் மீண்டும் பெருஞ்சேதமுற்றன. காற்றின் பேரிரைச்சலும் கடுவிசையும் யாவரையும் நடுநடுங்கச் செய்தன. காழியிலுள்ள பள்ளிக்கூடங்கள், வீடுகள், கோயில்கள் மிகுந்த சேதமுற்றன. மக்கள் இரவெல்லாம் உணவும் உறக்கமுமின்றித் திகைத்திருக்க வேண்டியதாயிற்று. மரங்கள்

பல்லாயிரக்கணக்காய் வீழ்த்தப்பட்டன. கால்நடைகளும் கோழி வாத்து முதலியவைகளும் இறந்துபட்டமை கணக்கில. ஏறக்குறைய நூற்றைம்பதின்மருக்கு மேற்பட்ட மக்கள் காற்றுக்கிரையாயினர். காழிஞானசம்பந்த அடிகளாரின் திருக்கோயில் கலசமும் சிதம்பரம் நடராஜப்பெருமானுர் கோயில் கலசங்களும் பெயர்த் தெறியப்பட்டன. எண்ணிறந்த ஏழைமக்கள் குந்தவும் இடமற்றுத் திண்டாடினர். காழியிலும் அதன் சுற்றுப்புறங்களிலும்மட்டும் நேர்ந்த சேதம் ஏறக்குறைய ரூபாய் நூருயிரத்திற்கு மேலாகுமென்று மதிப்பிடப்படுகிறது.

— காழி. ப. அ. முத்துத்தாண்டவராயன்

---

குறிப்புக்கள் :

## தமிழன்பர் மகாநாடு

சென்ற திங்களிதழில் நாம் எழுதியது போலவே, டிசம்பர் 23, 24-ம் நாட்களில் தமிழன்பர் மகாநாடு கூடிற்று, சிறுதூறல் தூறிற்று. நாம் குறித்த மறைமலையடிகளார், திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் முதலிய தமிழ்ப் பெரியார் ஒருவரும் கலந்து கொள்ளவில்லை பெருமழையாகப் பொழிய விருந்தது சிறு தூறலாகவே தூறி யொழிந்தது. இம் மகாநாட்டினுல் விளைந்த பயனே, விளையக்கூடிய பயனே என்ன வென்பதை யெளிதில் அறுதியிட்டுக் கூறுதற்கில்லை. நந்தமிழ்த்தாயின்பால் ஓர் புதிய பரிவைப் பலர் உள்ளத்திலுங் கிளறி விட்டது என்பது மட்டும் உண்மை. இப்பரிவு வீண்போகாமல் உண்மைத் தமிழ் மக்கள் ஒருங்குகூடி விரைவில் ஏற்றன புரிவார்களென்று எதிர்பார்க்கிறேம்.

தமிழன்பர் மகாநாட்டு முதன்மையாளர் திரு. கே. வி. கிருட்டினசாமி ஐயர் அவர்கள் பல்லாவரம் பொதுநிலைக் கழக ஆசிரியர் மறைமலை யடிகளாருக்கு 22-12-33 காலை அனுப்பிய தந்தியின் மொழி பெயர்ப்பு :—

"தயைகூர்ந்து தமிழன்பர் மகாநாட்டுக்கு வரவேண்டுமெனத் தங்களைப் பரிவுடன் வேண்டுகிறேன்."

பல்லாவரம் பொதுநிலைக் கழக ஆசிரியர் மறைமலையடிகளார் திரு. கே. வி. கிருட்டினசாமி ஐயரவர்கட்கு அனுப்பிய மறுமொழியின் மொழிபெயர்ப்பு :—

"எனக்கு அனுப்பிவைத்த கடிதங்கள், அழைப்புகள், தந்தி முதலியவற்றிற்காகத் தங்களுக்கும், டாக்டர். உ. வே. சாமிநாத ஐயரவர்களுக்கும் நன்றி செலுத்துகிறேன். தமிழ் மொழியின் தூய்மையைப் பாதுகாத்து முன்னேற்றுங் கருத்தில்லாத எந்தத் தமிழ்க் கூட்டத்திலுங் கலந்துகொள்ள எனக்கு விருப்பமில்லை யென்பதை மிகவும் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். பண்டைக்காலச் செம்மொழிகள் பலவற்றுள்ளும் தமிழொன்றே தன் தனிப்பெருமையை இற்றைநாள் வரை இழவா திருந்து வருகிறது. பிறமொழிச் சொற்களைக் கலத்தலால் தமிழ் மொழியின் தூய்மைநலங் கெடுவதோடன்றி அதன் வளர்ச்சியுரனும் தடைபடு மென்பதே என்னுடைய முடிந்த முடிபாகும். எனவே அம் முடிபுடன் ஒவ்வாததாகத் தோற்றும் உங்கள் கூட்டத்திற்கு நான் வாராமைக்குப் பொறுத்திடுக." மறைமலை யடிகள்.

---

## திரு. பா. வே. மாணிக்க நாயக்கரின் இரண்டாவது ஆண்டுவிழா

காலஞ்சென்ற சிவபுரம் பெருநிலக் கிழவரும், அரசாங்கக் கண்காணிப் பொறிவலாளருமான திருவாளர் பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்களின் இரண்டாவது ஆண்டுவிழா சென்ற டிசம்பர்த் திங்கட் கடைநாளன்று நமது கழக அலுவற்சாலை மேடையின்மீது சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. திரு. ஸி. ஆர். நமசிவாய முதலியாரவர்கள் தலைமை வகிக்க, திருவாளர் ராவ் பகதூர் ஸி. நடேச முதலியார் எம். எல். ஸி. அவர்களும், திருவாளர் க. ப. சந்தோஷம் அவர்களும் நாயக்கரின் அரும் பெரும் ஆற்றல்களைக் குறித்துப் பெருஞ்சொல் நிகழ்த்தினர். நாயக்கர் அவர்களின் ஞாபகக் குறியாக எஞ்சினீயரிங் கல்லூரியில் அவருடைய திருவுருவப்பட மொன்றை யெழுதித் திறந்து வைப்பதென்றும், அவர் ஆங்கிலத்தில் எழுதி முடித்துள்ள "கால்குலோகிராப்" (Calculograph) என்ற எஞ்சினீயரிங் நூலை அச்சிடுவதற்கான முயற்சி செய்வதென்றும், "ஓம்" என்ற மந்திர எழுத்தைக் குறித்து அவர் ஆங்கிலத்தில் எழுதியுள்ள ஆராய்ச்சி நூலைத் தமிழில் மொழிபெயர்த்து அச்சிடுவ

தென்றும் மூன்று தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. முடிவில் குலசை அப்பாசாமி ஓதுவா மூர்த்தி அவர்களால் ஜலதரங்கம் வாசிக்கப்பட்டது.

## பாராட்டு

சென்னை இந்திய மருத்துவக் கல்லூரி ஆசிரியர் C. S. முருகேச முதலியாரவர்களுக்கு அரசாங்கத்தார் வைத்தியரத்தினம் என்ற புத்தாண்டுப்பட்ட மளித்ததை மிகவும் பாராட்டுகிறோம். இவருக்கு இப்பட்டம் காலந் தாழ்த்து வந்ததொன் றென்பதே எம் கருத்தாகும். பட்டம் பெற்ற பெரியாரின் வரலாற்றுக் குறிப்பினையும் உருவப் படத்தையும் இவ்விதழ் பிறபக்கங்களிற் காண்க.

---

## பிரிவாற்றுமை

சைவசித்தாந்தச் சாத்திர அறிஞரும், முதன் முதலாக சிவாஞான பாடியத்தையும் தேவார அடங்கன் முறையையும் திருத்திய பதிப்புகளாக வெளியிட்டவரும், தருமபுர ஆதின வித்வ சிரோன்மணிப் பட்டம்பெற்றவருமான உயர்திரு. சுவாமிநாத பண்டித ரவர்கள் சென்ற 6வ சனிக்கிழமை யன்று சிதம்பரத்தில் சிவபிரான் திருவடி நீழலடைந்தமை கேட்டு நாம் ஆற்றெணுத் துயரடைகின்றோம். பொதுவாகத் தமிழுலகமும் சிறப்பாகச் சைவ உலகமும் இப்பெரியாரின் மரணத்தினல் தம் ஊன்று கோல்களில் ஒன்றை யிழந்து கையற்று நிற்கின்றன வென்பதே எம் கருத்தாகும். பூவுலகு நீத்துப் புகழுல கெய்தியபெரியாரின் திருநாமம் என்றென்றும் நின்று நிலவுவதாக. இவர்தம் வாலாற்றுக் குறிப்புகள் 'செல்வி'யில் விரைவில்வெளிவரும்.

---

பத்தக வரவு :

மண்ணியல் சிறு தேர்—இது பண்டித மணி. கி. கதிரேசசெட்டியாரவர்கள் எழுதியது. இதன் மதிப்புரை அடுத்த இதழில் வெளிவரும்.



தொல்காப்பியர்.

(உஅஅ-ம் பக்கம் பார்க்க)

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது


சிலம்பு ௧௨ } மெய்கண்டான் யாண்டு-௭௧௧ தைத் திங்கள் 1934௵ ஜனவரி௴—பிப்ரவரி௴ { பரல் ௬


## திருவாசகம்.

செஞ்சுடர்ச் சோதிபவளத் திரடிகழ் முத்தனைய
நஞ்சணிகண் டனல்லூ ருறை நம்பனைநா னொருநாள்
துஞ்சிடைக்கண்டு கனவின்றலைத் தொழுதேற் கவன்றான்
நெஞ்சிடை நின்றகலான் பலகாலமு நின்றனனே.

பதவுரை :—

செஞ்சுடர்ச் சோதிப் பவளத்திரள் - சிவப்பு நிறமான தீயின்கண்ணுள்ள ஒளிபோல விளங்கும் பவளத் தொகுதியையும்;

திகழ் முத்து(த்திரள்)—ஒளி விளங்குகின்ற முத்துக்களின் தொகுதியையும்;

அனைய - போன்று விளங்கும் ;

நஞ்சணி கண்டன் - கடலினின்றெழுந்த ஆலகால நஞ்சைத் தரித்த கழுத்தை உடையவனும் ;

நல்லூர் உறை நம்பனை - திருநல்லூரில் திருக்கோயில் கொண்டெழுந்தருளிய நண்பனுமாகிய சிவபெருமானை ;

ஒருநாள் - முன் ஒரு நாளில் ;

நான் துஞ்சிடைக் கனவின் தலைக்கண்டு கைதொழுதேன் - நான் உறங்கும்போது கனவினிடத்துக் கண்டு கைகளிரண்டையும் கூப்பி வணங்கினேன் ;

அவன் - (அவ்வாறு நான் வணங்கிய நாள் தொட்டு) சிவபெருமான் ;

நெஞ்சிடை நின்று அகலான் - எனதுநெஞ்சை விட்டு நீங்காதவனாய்;

பலகாலமும் - எப்பொழுதும் ;

நின்றனன் - நிலைபெற்று நிற்கின்றான்.
தோழீ! இஃது என்ன வியப்பு என்பது குறிப்பெச்சம்.

விளக்கவுரை :—

இந்தப் பாட்டு ஒரு தலைவி தன் தலைவனைப் பற்றித் தோழிக்குக் கூறிய கூற்றாக அகப்பொருட்டுறையில் வைத்துப் பாடப்பட்டது. மயக்க அறிவு நீங்கித் தெள்ளிய அருள் அறிவு விளங்கப் பெற்ற அடியார்களுடைய தூய நெஞ்சில் சிவபெருமான் எப்பொழுதும் பேரொளியாய் விளங்குகின்றான் என்பது இப்பாட்டின் கருத்து. செஞ்சுடர்ச் சோதிப் பவளத்திரள் - சுடர் என்பது இங்கே ஆகு பெயராய்ச் சுடரையுடைய தீயைக் குறிக்கிறது; சோதி - ஒளி. பவளத்திரள் - பல பவளங்கள் சேர்ந்த தொகுதி. பவளம் தீயைப்போல ஒளி விளங்கும் சிவந்த நிறமாயிருத்தலின் செஞ்சுடர்ச் சோதிப் பவளத்திரள் என்றார்; திகழ்முத்து - திரள் என்ற சொல்லை முத்துக்கும் கூட்டுக. முத்துத்திரள்போல வெண்மை நிறம் சிவத்தினது தன்னியலுக்கும் பவளம்போலத் தூய சிவந்த நிறம்பொது இயலுக்கும் உவமைகளாகக் கூறியவாறும். வெண்மை என்பது எல்லா நிறங்களும் சேர்ந்த தன்றித் தனித்ததொரு நிறம் அன்று. வெண்ணிறமான பளிங்கானது தான் எந்த எந்த நிறப்பொருளைச் சாரினும் அந்த அந்த நிறப் பொருளாய்க் காட்டுதலன்றி அப்பொருள்களினது நிறம் யாதின்பாலும் தோயாதிருத்தல்போல சிவம் எந்த உயிர்ப் பொருளைச் சாரினும் தான் அதனைப் பற்றாது அதனைக் கடந்து மிக்காய் விளங்குதலை வெண்மை நிறம் குறிக்கிறது; பவளநிறம் போன்ற தூய சிவப்பு நிறம் தூய அன்பைக் குறிக்கிறது. சிவம் எல்லா உயிர்களுடனும் வேறறக் கலந்து அவ்வுயிர்களேயாய் அவ்வுயிர்களெல்லாம் தன்னைப் போற் பேரின்பம் அடைதல் வேண்டும் என்னும் பேரன்பை உடையவனா யிருத்தலைத் தூய சிவப்பு நிறம் குறிக்கிறது.

நம்பன் - நம்பன் என்ற சொல் நண்பன் என்பதன் மரூஉ; அன்பன். பகரத்துக்கு முன் ணகர வொற்றுக்குப் பதிலாக அதன் இன வெழுத்தாகிய மகரவொற்று வந்தது. வன்பு, வம்பு எனவும், மேன்பாடு, மேம்பாடு எனவும் வருதல் காண்க. தண்பு என்ற சொல் உலகவழக்கில் தம்பு என வருதலுங் காண்க. இன் - சாரியை. கனவின் தலை - தலை ஏழாம் வேற்றுமை யுருபு. கை தொழுதேற்கு - கைதொழுதேன் + கு. கு - சாரியை. பல்காலம் - பல்லாண்டு என்பது எக்காலத்தையும் குறித்தல்போல, பல காலம் என்பதும் எக்காலத்திலும் என்று பொருள் படும். நின்றனன் - இயல்புபற்றி அல்லது தெளிவுபற்றி நிகழ் காலத்தாற் கூறற்பாலது இறந்தகாலத்தாற் கூறப்பட்டது. இருள்

மல நிலைக்குக்கீழ் 32-வது பாட்டு "உள்ளத்தே நிற்றி யேனும் கள்ளத்தேநிற்றி" என்று கூறுதலாலும் அருள் நிலைக்குக் கீழ் 35, 37 பாட்டுகள் "(வந்து) புறம்பயம் நம்மூரென்று போயினரே" என்று கூறுதலானும், 38-வது பாட்டு "வெள்ளரோமென்று நின்றார்", என்று- கூறுதலானும் அருளுரு நிலைக்குக்கீழ் 47-வது பாட்டு "புல்லிய மனத்துக் கோயில் புக்கனர்" என்று கூறுதலானும் அறியும் நெறிக்குக்கீழ் இந்த 53-வது பாட்டு "நெஞ்சிடை நிறைகலான் பல்காலமும் நின்றனனே" என்று கூறுதலாலும் விளங்குகிற வேற்றுமைக் கருத்துக்களின் அழகை நோக்குக. இவ்வேற்றுமைக் கருத்துக்கள் பல்வேறு நிலைகளிலுள்ள உயிரின் பக்குவங்களுக்கு ஏற்ற இறைவனது அருட்செயலைக் குறிக்கின்றன.

---

## புத்தர் பிரான் பொருண்மொழிகள்

[பண்டிதர். திரு. அ. நடராச பிள்ளை அவர்கள்.]

### 7. அன்பனின் கடமைகள்

அன்பனே !

1. பொருள்கொடுத் துதவியுன் நண்பரைப் போற்று.
2. நேசரைப் புறத்தே நெஞ்சா ரப்புகழ்.
3. நண்பர்தந் நலனை நாடொறும் நாடு.
4. நேசரைத் தனக்கு நிகராய் நடத்து.
5. ஊதியத் தேயவர்க் கொருபங் கினைக்கொடு.

### 8. நண்பர்களின் கடமைகள்,

நண்பர்காள் !

1. அன்ப னுயிரை யருமையாய்ப் போற்றுமின்.
2. அன்பன் பொருளழி வுறாதே யகற்றுமின்.
3. இடுக்கட் படுங்கால் எதிர்வந்து காமின்,
4. அன்பனை வறுமையி லகலவொண் ணாது.
5. நண்பன் சுற்றம் நமதெனக் கொண்மின்.

# சமயமும் தத்துவமும் :
## Religion & Philosophy

### சைவர் மகாநாடு

திரு .ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் தலைமையுரை

சென்ற டிசம்பர்த் திங்கள் இறுதியில் தஞ்சையில் கூடிய சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 28-ம் ஆண்டு விழாவில் தலைமை வகித்த திருவாளர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் நிகழ்த்திய தலைமை உரை :—

சமயம்

அன்பர்களே! மன்பதைகள் உய்ந்திடுதல் வேண்டிக் கடவுளருள் பெற்ற பேரறிவுடைய பெருமக்கள் கண்ட நெறியே சமயம் எனப்படுவது. ஆதலின் அது கடவுள் வகுத்தது எனினும் அமைவுடைத்தே. உலகிலே சமயம் என்பது இன்று நேற்று உண்டாயதன்று; பல்லாயிரம் ஆண்டுகளாகவே உளது. யாதானுமோர் ஒழுங்கிற் குட்பட் டொழுகும் மக்கள் வாழ்க்கை, என்று தொட்டுளதோ அன்று தொட்டே சமயம் என்பதும் உளதாம். சமயத் தொடர்பு சிறிதும் இல்லாத நாட்டினரையோ கூட்டத்தினரையோ நாம் ஒரு பொழுதும் கண்டதுமில்லை; கேட்டது மில்லை. இடத்தானும் காலத்தானும் பல்வேறு குழுவினராகப் பிரிந்த மக்களின் அறிவு செயல்களின் வேறுபாட்டிற்கேற்பவும், நெறி வகுத்தோர்களின் அறிவு அகக்காட்சிகளுக் கேற்பவும் சமயம் பலவாயின. எல்லாச் சமயங்களும் மக்கள் உயர்நிலை யடைய வேண்டு மென்னும் பெரு நோக்கமுடையனவே. அவை யாவற்றிற்கும் பொதுவான அறங்களும் ஒழுக்க நெறிகளும் உள்ளன. உலோகாயதம் தொடங்கிப் படிப்படியாக உயர்ந்துள்ள சமயங்கள் பலவும் பண்டைக்காலந் தொட்டே யுள்ளன. எந்தச் சமயத்தினரேனும் அந்தச் சமய நெறியில் ஒழுகுவரேல் மேன்மையுறுவது ஒருதலை. எனினும், சமயங்கள் யாவும் ஒருநிகரானவே என்றுதல் ஒரு பெற்றியுடைய பயன் விளைப்பன என்றுதல் கூறுதல் பொருந்தாது. ஒரு மொழியின்கண் நெடுங்கணக்கு முதல்

அறிவுநூல் இறுதியாக உள்ள அனைத்து நூலும் அம்மொழி யாளர் பயிலுதற் குரியனவும், அவர்கட்கு இன்றியமையாதனவு மாம். எனினும், அறிவு நூல்களின் துறைபோகிய ஒருவன் மீட்டும் நெடுங் கணக்கும் சிற்றிலக்கியமும் பயிலுதல் அவமாதல் போல, முடிந்த உண்மைகளைக் கூறும் சமய நெறியுற்றோன் ஒருவன் மீட்டும் கீழ்ப்படியிலுள்ள சமயங்களை நோக்கிச் சேறல் அவமே யாகும்.

## சைவம்

திருநெறிச் செல்வர்காள்! உலகிலே பல்வேறு சமயங்க ளிருப்பினும் நாம் முதன்மையாகச் சைவத்தை ஆராயும் கடமைப் பாடுடையோம். சைவ சமயம் எப்பொழுது உண்டாயதெனக் காலவரை யறைக்குட் படுத்துரைக்க வியலாத அத்துணைப் பழமை யுடையதாக வுள்ளது. தமிழிலும் வடமொழியிலு முள்ள தொன்னூல்க ளெல்லாம் சைவத்தின் தொன்மைக்கும் முதன் மைக்கும் சான்று பகர்கின்றன. பண்டைத் தமிழ்ச்சங்கத்துச் சான்றோர் பலரும் பல கடவுளரைக் கூற நேர்ந்த இடங்களி லெல்லாம் சிவபெருமானையே முதற்கண் வைத்துக் கூறுவாரா யினர். அதுவே யன்றி இன்றியமையாக் கடவுள்தன்மையாகிய பிறப்பிறப்பின்மையைச் சிவபெருமானுக்கே உரியமையாக்கியும் கூறியுள்ளனர். சிலப்பதிகார ஆசிரியர் 'பிறவா யாக்கைப் பெரி யோன்" என்றதனல் பிறப்பின்மையும், சிவ சத்தியாகிய கொற் றவையைக் கூறுமிடத்தே, "விண்ணோர் அமுதுண்டுஞ் சாவர் ஒருவரும் உண்ணாத நஞ்சுண்டிருந்தருள் செய்குவாய்" எனச் சார்த்தி யுரைத்தமையால் இறப்பின்மையும் கறைமிடற் றிறை வர்க்கே உரியவாகக் குறித்தவாறு காண்க. இங்ஙனம் சிவபெருமா னது முழுமுதன்மையைக் குறிப்பிடுஞ் சான்றுகள் மற்றும் எண் ணிறந்தன வுள்ளன. முதுகுடுமிப் பெருவழுதி என்பவன் பஃ றுளியாறு கடல் கோட்படா திருந்த பழங்காலத்தில் விளங்கிய ஓர் தமிழ் வேந்தன். அவனைப் பாடிய புலவர் ஒருவர் 'முக்கட் செல்வர் கோயிலை வலஞ்செய்தற்கண் நின் குடை தாழ்க' எனப் பணித்தமையால் பல்லாயிரவாண்டுகளின் முன்பே சிவபிரானுக்குத் திருக்கோயிலிருந்த செய்தி வெளியாகின்றது. அகத்தியர், பதஞ் சலி, புலிக்காலர், உபமன்னியு, மார்க்கண்டர் முதலிய முனிவர்கள் சிவபெருமானை வழிபட்டுப் பேறு பெற்ற சீரடியார்களாவர்.

பண்டைக்காலத்து முனிவர்கள் பலருமே சிவ வழிபாடுடைய ரென்பதனை வியாச பாரதத்து அநுசாசன பருவம் முதலியவற்றால் அறியலாகும். மான்தோல், புலித்தோல், சடைமுடி முதலிய சிவ சின்னங்களுடைய ராகவே அவர்கள் கூறப்படுதலுங்காண்க. சுருங்கக் கூறுமிடத்து இமயமுதற் குமரிகாறும் பாதகண்ட முழுதும் பண்டை நாளில் விளங்கிய வேந்தர்களும் முனிவர்களும் ஏனை மாந்தர்களும் முழுமுதற் பொருளாகக்கொண்டு வழிபட்ட கடவுள் சிவபெருமானே; அவர்கள் ஒழுகிய நெறி சைவமே எனல் சாலும். அயல்நாடுகளிலும் சிவலிங்க வழிபாடு போல்வதொரு வழிபாடே இருந்ததென்பதற்கும் ஆதாரவுகள் உள்ளன. உண்மை இவ்வாறாகவும் சிலர் நடுநிலை திறம்பிச் சிவனையும் சைவத்தையும் இகழ்ந்து நிரயத்துக்காளா கின்றனரே எனப் பரிந்தன்றோ

"கூவ லாமை குரைகட லாமையைக்
கூவலோ டொக்கு மோகட லென்ப போல்
பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவதேவன் சிவன்பெருந் தன்மையே"

என்று திருநாவுக்கரசுகள் அருளியதூஉ மென்க.

## சமய நூல்கள்

இனி, இங்ஙனம் பழம் பெருமை வாய்ந்த சைவ சமயத்தின் இயல்புகளை யெல்லாம் நமக்குத் தெளிய அறிவுறுத்தும் தமிழ் நூல்கள் திருமந்திரமும், திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞான போதம் முதலிய மெய்கண்ட நூல்கள் பதினான்குமாகும். பன்னிரு திருமுறையுள் திருமந்திர மொழிந்த முதற் பத்தும் இறைவனை வழுத்தும் துதிகளாகவும், பெரிய புராணம் திருத்தொண்டர்களின் வரலாறு கூறுவதாகவும் இருப்பினும், அவற்றுள்ளும் சைவ சமயத்தின் உண்மைகளே ஆண்டாண்டுப் பொதிந்து கிடக்கின்றன. எனவே, சைவர்கட்குப் பிரமாணமாக உள்ள நூல்கள் பன்னிரு திருமுறைகளும், பதினான்கு சித்தாந்த நூல்களுமாம். இவையன்றித் திருக்குறள் என்னும் தமிழ் மறையும் சைவர்கட்குப் பிரமாண நூலே யாகு மென்க. வடமொழியிலுள்ள ஆரணவாகமங்கள் சைவமுதற் பிரமாணங்களேயாயினும் அவற்றின் ஞானகாண்டப் பொருளை மயக்கமற அறிவுறுத்துஞ் சிறப்பினாலும், சைவ சமயத்தை நிலைநாட்டிய பெருமையாலும், யாவரும் ஓதி உய்தி பெறுதற்குரிய எண்மையாலும், தமிழ் நூல்

களே முதன்மையாகப் போற்றற் குரியனவாம். சைவம் உலகில் இன்று நின்று நிலவுவதற்குத் திருஞானசம்பந்தர் முதலிய பெருமக்கள் தோன்றித் திருப்பதிகங்கள் பாடிப் புறச் சமயங்களை வென்று சிவபிரான் முழுமுதன்மையை நிலைநாட்டினமையே காரணம் என்பதனை அன்று என்பார் யாவர்? இனி, இத்தகைய சைவ சமயத்தின் உண்மைகள் யாவை யென்னின், அவற்றை இங்கு யான் விரித்துரைக்கக் கருதிற்றிலேன்.

## சைவ சமய உண்மை

"பதிபசு பாச மெனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாச மனாதி
பதியினைச் சென்றணு காபசு பாசம்
பதியணு கிற்பசு பாசநில் லாவே,"

என்னும் திருமந்திரச் செய்யுள் சைவத்தின் கோட்பாடு இன்னதென்பதைச் சுருக்கமாக அறிவுறுத்துகின்றது. இங்கே விரிவுரை யாற்ற வந்திருக்கும் பெரியோர்கள் சைவத்தின் உண்மைகள் பலவற்றை விளங்க எடுத்துரைப்பார்களாதலின்; அவற்றைக் கேட்டுணர்ந்து பயனுறுவோமாக. சைவச் சார்புள்ள பொதுவகையான சில கருத்துக்களை மட்டும் இங்கே நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகின்றேன்.

சைவம் என்பது துவைதம் என்றும், சைவசித்தாந்திகள் துவைதிகள் என்றும், தாங்களே பழுத்த அத்துவைதிகள் என்றும் சிலர் கூறுவதுண்டு. சைவசித்தாந்த நூல்களில் யாண்டும் அது துவைதம் என்று கூறப்படவில்லை. 'அத்துவைதம்' என்னும் சொற்கு ஏனையோர் கொண்ட பொருள்களின் வேறாய தொரு மெய்ப்பொருள் கண்டமையினாலேயே சிவஞான போத ஆசிரியர்க்கு மெய்கண்டார் என்னும் திருப்பெயர் உளதாயிற் றென்பதனை

"பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ"

என்னும் தாயுமான வடிகள் திருவாக்கு விளக்குதலும் காண்க. சைவ சித்தாந்தத்தை அத்துவிதம் என்றலே அமையுமெனினும் விசிட்டாத்துவிதம் முதலியவற்றின் வேறுபாடு தோன்றச் சுத்தாத்துவிதம் என ஆன்றோர் வழங்குவாராயின ரென்க.

உலகினுள்ள சமய வாதியரில் சிற்சிலர் கடவுள் அருவப் பொருளே யன்றி உருவப்பொரு ளன்றென்பர். அருவமும் உரு வத்தின் நுண்மையே யென்பதனையும், விசும்பு போலும் சடப் பொருளும் அருவ மாதலின் அருவம் என்பதனுற் கடவுளுக்கு ஓர் ஏற்றமின் றென்பதனையும் அவர்கள் ஓர்ந்திடல் வேண்டும். அருவம், உருவம், அருவுருவம் என்னும் மூன்றுங் கடந்ததே கடவுளின் உண்மை நிலையென்றும், உயிர்கள்மேல் வைத்த கருணை யால் அம் மூவகை வடிவையும் இறைவன் எடுத்தருள்வ னென்றும் சைவ சித்தாந்தம் கூறும். இறைவன் நினைத்த தொரு வடிவினை எடுத்துக் கொள்ள மாட்டாத குறைபா டுடையனல்ல னென்பத னையும், அதனல் அவன் இன்னவாறு வந்திடான் என்று அவனது பேராற்றலுக்கு இழுக்குண்டாகக் கூறுதல் தகவன் றென்பதனை யும் உணர்தல் வேண்டும்.

## உருவ வழிபாடு

இனி, சில சமயத்தினர் உருவ வழிபாடு கூடா தென்றும், அது தாழ்ந்த நிலையென்றும் கூறுவர். பிரமசமாசம் போன்ற கூட் டத்தினரும் அங்ஙனம் கூறுவர். மக்கட்கு உருவ வழிபாட்டினுல் வரும் இழுக்கு இன்று என்பதனையும், அஃது இன்றி யமையாச் சிறப்பின தென்பதனையும் விளக்கலுறின் இம்முகவுரை விரிந்து விடுமகாலின் வாளாவிடுகின்றேன். ஆனல், உருவ வழிபாடு கொள்ளற்பாலதா, தள்ளற்பாலதா என நாம் புதுவதாக ஆராய்ந்து முடிவுகட்ட வேண்டியதில்லை யென்பதனை நம்மவர்கள் கருத்தில் வைக்க வேண்டும். இதனை மிக மிக வற்புறுத்தியவர்கள் நம்சமய குரவர்கள். மெய்யுணர்வின் முற்றுப் பேறுடையாராய், இறைவனுல் வலிதின் விருப்பி ஆட்கொள்ளப் பெற்றோராய், அவனது எல்லை யில்லாத பேரருளைப் பெற்று யாவர்களும் செய்ய வொண்ணுத செயல்களைச் செய்தோராய் விளங்கி நமது சமயத்தை நிலைநாட்டிய அருட்குரவர்கள் தங்கள் பதிகங்களால் உருவ வழிபாட்டை வற்புறுத்தி யதனேடு அமையாது தாங்களும் பதிகள் தோறுஞ் சென்று வழிபாடு செய்து போந்தன ரென்றுல், அவர்கள் காட்டிய வழியே நாம் உய்யும் நெறியாகக் கடைப்பிடித்து ஒழுகலே நமது கடமையாம். அது தாழ்ந்த நிலையென்று நினைப்பது அறியாமையே யாம்.

(தொடரும்)

# மும்மையாலுலகாண்ட மூர்த்தி

(வித்வான் T. P. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் M.A.,B.L.,)

(முன் உாஎ-ம் பக்கத் தொடர்ச்சி)

கதைக்குக் கால்:—மூர்த்திநாயனர் வரலாற்றைப் புனைந் துரைக்கப் புகுந்த சேக்கிழார் முதலில் அவர் வாழ்ந்த பாண்டி நாட்டையும் மதுரையினையும் புனைந்துரைக்கின்றார். மூர்த்திநாயனருடைய வாழ்க்கைப் போக்கிலே எந்த உயரிய உண்மைகள் விளங்குகின்றனவோ, அந்த உண்மைகளனைத்தும் தமிழ் நாட்டின் தனிப்பெருஞ் சிறப்பியல்புகளாக விளங்குவதைச் சுட்டி அத்தகையார் பிறந்து வளர்ந்து வாழத்தக்க நாடு அந்த நாடே எனக் குறிக்கின்றார். அந்த உயரிய கொள்கைகள் மறைந்தொழிந்து போகிற நிலையிலே அப்பெரியாரைத் தோற்றுவித்து அந்நாடு நிலைகுலையாதபடி செய்விக்கின்ற புதுமையை நாம் உற்றுநோக்குதல் வேண்டும். அந்த உயரிய கொள்கைகளுக்கு மாறுபட்ட கொள்கைகளை அமணர்களில் ஒருசிலர் உயிரெனப் போற்றி உலகத்திலே பரப்பி வந்தனர். அவர்களை வென்றே மூர்த்திநாயனர் அரசர் ஆகின்றார். அவர்களது கொள்கைகள் அந்நாட்டிற்கே முற்றும் முரண்பட்டவை என்பது தோன்ற அந்நாட்டைப் புகழ்ந்துரைப்பது பாராட்டத்தக்கதாம். மூர்த்திநாயனர் பிறந்த நாடும், காலமும், நாயனரோடு ஒருங்கு பிணைந்து விளங்குவதனைச் சேக்கிழார் அழகாகப் புனைந்துரைக்கின்றார். நாயனரே உலகத்திற் கொரு வழிகாட்டியாகும்போது அக்காலமும் அந்நாடும் கடவுள்வழி நின்று அவருக்குப் பணி செய்யவேண்டாவா? அவையே இவ் வாலாற்றுக்குக் கால்களாக நின்று தாங்குகின்றன எனலாம்.

அமணக்கோள்கை:—நாயனர் தமிழ்நாட்டி னியல்புக்கு ஒரு சிறிதும் பொருந்தாத அமணக்கொள்கைகளை வேரறக் களைந்து சிவக்கொள்கையை நிலைநாட்டினர். ஒருவகையால் நோக்குமிடத்து அவ்வமணக் கொள்கைகள் உண்மையான அமணக் கொள்கைகளே அல்ல; போலியமணக் கொள்கைகளேயாம். அமணர்களது கொள்கைகளிற் சிலவற்றையே சிவனடியார்கள் மறுத்துரையாடுகின்றனர். நமது தமிழ்நாட்டிற் பரவிய சமணர்கள் அரசாங்கத்தையே கைப்பற்றித் தமது கொள்கையைப் பரப்ப முயன்றனர் என்பதே சிவனடியார்களுடைய முறையீடு.

"அரசன் எவ்வழி அவ்வழி குடிகள்" என்ற பழமொழியின் நுட்பத்தை நன்குணர்ந்தவர்கள் அமணர்களேயாம். அவர்கள் உடையிலாதவர், வெள்ளுடையார் என்ற இரு பிரிவினரில் உடையிலாத பிரிவைச் சேர்ந்தவர்கள். கட்டுந் துணியும் ஒரு கட்டே யாதலால் அந்தக் கட்டும் அறப் பெறுதல் வேண்டுமென எண்ணினர். உடம்பும் மிகையாதலின் பட்டினி கிடந்து இறக்கும் வழியாலேனும் அதனை ஒழித்துக்கொள்வதே மேலென எண்ணி அங்ஙனமே உயிர் துறந்தோர் பலர். இசைப்பாட்டு முதலியன காதலைத் தூண்டுவன என்று கொண்டு அவற்றைப் பழித்தனர் பலர். "வீணைச்செல்வம்" என்பது காதலுக்குப் போயிற்று.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலு
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.

என்றபடி இயற்கை யழகைக் கண்டு பேரின்ப மடையாது பூமாலையைக்கண்டு பூண்டு மகிழாது பாம்பென அஞ்சிப் பதைபதைப் பாரைப்போல வருந்தியுழன்றனர். துணியை நீத்து உலவுதல் பெண்களுக்குக் கூடா வொழுக்கமாய் முடிதலின், அவர்களுக்கு அப்பிறவியில் வீடு பேறில்லை என்றனர். பெண்களைத் துறப்பதே பெருந் துறவு என்றனர். பொன்னைத் தொடவும் மனம் புழுங்கினர். சிவனடியார்கள் இவர்களுக் கெதிரிடையாக அன்பே சிவம்; உலகமே தாய் என வற்புறுத்திப் பெண்ணை அருளம்மையின் வடிவமாக்கி வழிபட்டு வந்தனர். இசைப் பாட்டினாலேயே மன மொருமுகப்பட்டு மாசகன்று உயர்நிலை யடையும் என்றனர். அகப் பொருளாராய்ச்சியே அன்பாராய்ச்சி என வற்புறுத்தினர். பெண்களும் வாழ்க்கைத் துணையாகி வீட்டிற்கும் வழிகாட்டுவர் என விளக்கி வைத்தனர். திருத்தக்க தேவர் முதலியோர் பாவாணர்களாதலின் அவ்வகையில் அவர்கள் தம்மையும் மறந்து சிவக் கொள்கையாம் தமிழ்க் கொள்கைகளை வற்புறுத்துகின்றார்கள் எனலாம். இந்நுட்பம் அறியாதார் திருத்தக்க தேவரைத் துறவியோ எனவும் அவர் நாளிலேயே ஐயுற்றார்களன்றோ?

தமிழ் நாட்டின் இயல்பு:—சிவக் கொள்கைகள் இயற்கையாகப் பரவி யிருந்த தமிழ் நாட்டிலே யல்லவா அமணக்

கொள்கை பரவத் தொடங்கியது என்பதுபட நாட்டைப் புனைந் துரைக்கின்றார் சேக்கிழார். பெண்களையும், இயலிசையினை யாரா யும் புலவர் பெருமக்களின் கழகத்தினையும், அகப்பொருள் நூலின் நுட்பத்தினையும், ஒருங்கியைய வைத்துத் தமிழ் நாட்டைப் புனைந்துரைக்கின்றார். அவையே தமிழ் நாட்டின் இயற்கை யழகு எனக் காட்டுகின்றார். மணி விளக் கொன்று விளங்கித் திகழ்கின் றது; அதன் இயல்பைக் கெடுக்க அதனை மூடி வைப்பாரை எவ் வாறு வெறுப்போமோ அவ்வாறே தமிழ் நாட்டின் இவ்வழகைக் கெடுப்பாரையும் வெறுப்போம் அன்றோ? மற்றோர் நுட்பமும் இங்கு உண்டு. மூர்த்திநாயனார் நிலைநாட்டிய உண்மைகள் புதியன வல்ல; தமிழ் நாட்டின் இயல்பாக விளங்கும் மிகப் பழைய கொள்கைகளேயாம் என்பதாயிற்று. பழைய காலைத் தூர்த்துப் புதுக்காலை வெட்டி விட்டாரல்லர்; தூர் வார்தலே அவர் செய்தனர் என்பதாயிற்று.

புகழ்ப் போர்வை:—

சீர் மன்னு செல்வக்குடி மல்கு சிறப்பினோங்கும்
கார் மன்னு சென்னிக் கதிர்மாமணி மாடவைப்பு
நார் மன்னு சிந்தைப் பல நல்துறைமாந்தர் போற்றும்
பார் மன்னு தொன்மைப் புகழ் பூண்டது பாண்டி நாடு.

என்று பாண்டிநாட்டைப் புகழத் தொடங்குகின்றார் சேக்கிழார். நத்தப்பாழான நாடோ அது? மக்கள் நிறைந்தநாடு. நாட்டின் பெருமையனைத்தும் அந்நாட்டின் மக்களையன்றோ பொறுத்திருக் கிறது? "எவ்வழியாடவர் நல்லவர் அவ்வழி நீயும் நல்லை" என்று நாட்டினை விளித்து அவ்வையார் கூறுவது காண்க. குடிமல்கு சிறப்பே நாட்டிற்குச் சிறப்பாகும்; அந்நாட்டுக் குடிகளோ செல் வத்திற் சிறந்தவர்கள்; செல்வக்குடிகள். அந்தச் செல்வமும் இன்று நேற்றுவந்த செல்வம் அன்று. நிலைபேறு பெற்று மன்னிய செல்வ மாகும். களவாலும் காவாலும் வந்த செல்வமன்று அஃது. நேரிய வழியால் வந்ததாதலின் சீரியதாய்த் திகழும் செல்வமாகும். அவர் கள் வாழும் வீடுகளோ, அவர்கள் 'ஓ' என ஓங்கி வாழ்வது போல, ஓங்கிவளர்ந்து வானை யளாவி மழைமுகிலை மணிமுடியாகக் கவிழ்த்து நிற்கின்றன. அன்பின் குளிர்ச்சியைச் சுட்டுவார், முன்னரே மழைக் குளிர்ச்சியைக் குறிப்பாகக் காட்டுகிறார். ஒளி நிறைந்த

பெரிய மணிகள் இழைத்த வீடுகளே எங்கும் உள்ளன. அவை இவ்வாறு ஓங்கியும் ஒளிர்ந்தும் இருப்பதாலே அதிலே வாழ்வோர்க்கு ஒரு சிறப்பும் இல்லை. அதில் வாழ்வோர் மிகச் சீரியராதலின் அவர்களாலேயே அவ்வீடுகளும் சிறப்படைகின்றன. மேலோர் வாழ்தலே வீட்டிற்கு அழகு. மற்றைய வளனெல்லாம் இதை நோக்கியே சிறப்புறுகின்றன. இத்தகைய சீரிய மாந்தரின் சிறப்பும் முடிவடைந்து விடவில்லை; ஒரேநிலையில் தேங்கிப் புழுத்துப் போகவில்லை. நாளுக்குநாள் முன்னுக்குவந்து ஓங்கிக் கொண்டே போகின்றது. அத்தகையார் வாழும் அத்தகைய நாட்டைப் புகழாதார் யார்? புகழ்வது மட்டுமா? கடவுள் நாடு எனக் கொண்டு போற்றுகின்றார்கள் அல்லவா? தொலைவிலிருப்பார்க்கும் புகழொளி பரப்பிக் காட்சி தருவதாகப் பாண்டி நாட்டைக் காண்கிறார் சேக்கிழார்.

(தொடரும்)

---

## தேவார வைப்புத் தலங்கள்

பேரூர்:—இதனை மேலைச் சிதம்பரம் என்பர். அப்பரும் சுந்தரும் பாடிய திருத்தலம். கோயமுத்தூர் புகைவண்டி நிலையத்திலிருந்து மூன்றுகல் தொலைவிலுள்ளது. திருக்கோவில்கொண்டுள்ள சிவபெருமான் குளப்படிச் சுவடும் கோட்டுச்சுவடும் உடையவர். இத்தலத்திலோடும் நொய்யலாறு கலிகன்மநாசினி என்று வடமொழியிற் கூறப்படும்.

நல்லக்குடி:—இஃது குயிலாலந்துறை எனப் பெயர்பெறும்; மாயூரத்திற்கு ஒருகல் தொலைவிலுள்ளது; அப்பர்பாடப்பெற்றது.

கஞ்சாறு:—இஃது ஆனந்தத் தாண்டவபுரம், ஆனைதாண்டவபுரம் என வழங்குவது. "உஞ்சேனை மாகாளம்" என்னும் பதிகத்தில் திருநாவுக்கரசு அடிகளாற் குறிக்கப்பட்டது. மானக்கஞ்சாற நாயனர் தோன்றிய திருப்பதி. பாரத்துவாசாசிரமும், பாரிசாதவனமுமாம்.

கருந்திட்டைக்குடி:—கருந்தட்டாங்குடி என வழங்குவது. தஞ்சாவூர் நிலையத்தில் இறங்கிச் செல்லற்பாலது.

—கா. சிவ. க.

# இலக்கணமும் இலக்கியமும்
## Language & Literature

### தமிழகம்

[திரு. S. நடராஜன் அவர்கள் B. A.]

(முன் உகக-ம் பக்கத் தொடர்ச்சி)

16. ஸ்காட் எலியெட்: ஸ்காட் எலியெட் (Scott Elliot)† என்னும் நிலநூல்வல்லார் தம்முடைய "இழந்த லெமூரியா" என்னும் நூலில், தென்னிந்தியாவிலும், இலங்கையிலும் உள்ள பாறைகள் மிகப் பழைமையான காலத்தில் உண்டானவை யென்றும் ஒரு பெரிய மலைத்தொடர் இந்தியாவின் மேற்கரையிலிருந்து தெற்கே சென்று மேற்கும் கிழக்குமாக இருந்ததென்றும் கருதுகின்றார். இவர் இவ்வுலகில் ஐந்து கடற்பெருவெள்ளங்கள் நிகழ்ந்துள்ளன எனவும், லெமூரியா இருமுறை கடற் கோட்பட்டதெனவும் கூறியுள்ளார். தமிழ் இலக்கியங்களிலும் இருகடற் கோள்கள் கூறப்படுகின்றன. இவர் கூறும் பெரு வெள்ளங்களும் நம் தமிழ்நாட்டுப் பண்டை நூல்களிற் கூறப்படும் ஊழி முடிவுகளோடு ஒப்பிட்டு நோக்கத் தக்கன.

17. ஹேக்கல்: ஹேக்கல் என்னும் ஜெர்மானியப் புலவர் குமரி முனைக்குத் தெற்கேயுள்ள ஞாலத்தின் நடுக்கோட்டிற்கு

---

† "All the Mountain chains such as the Alps, Pyrenees, Carpathians and Himalayas into the composition of whose central and loftiest parts the nummulitic Strata enter bodily could have had no existence till after the Middle Eocene period. During that period the sea prevailed where these chains now arise, for nummulites and their accompanying testacea were unquestionably inhabitants of salt water".

"In the south of India also at Pondicherry, Virdachellem and Trichinopoly, Messrs. Kayee and Egerton have collected fossils, cretaceous system."

Manual of Elementary Geology.

*By Sir Charles Lyell, M.A., F.R.S.*

Cretaceous system is older than the Eocene period.

இருமருங்குமிருந்த நிலப் பகுதிகளே, மக்கள் வாழ்விற்குத் தக்க நிலையை முதற்கண் அடைந்தன வென்றும், அவண் மக்கள் முதற்கண் தோன்றி நாகரிகத்துக்கு வித்திட்டனர் எனவும் கூறியுள்ளார். இவர் சந்தாதீவுகள் முதல் ஆசியாக்கண்ட எல்லையோடு ஆப்பிரிக்கா வரை ஓர் நிலப்பகுதி இருந்ததென்றும் கூறுகிறார்.

18. மெஅக்லீன்: டாக்டர் C. மெஅக்லீன் என்பார் தனது சென்னை ராஜதானி அட்மினிஸ்டிரேஷன் மானுயலில் "பௌதிக சாஸ்திரமும் தாதுப் பொருள்களின் சரிதையும் மானிட அறிவுக்கு உட்பட்ட ஒரு காலத்தில் தென்னிந்தியா ஆசியாவோடு சேர்ந்த நாடு அல்லவென்று தெளிவுபடுத்துவதாய் எழுதியிருக்கிறார்."*

19. எனவே, மக்கள் தோன்றிய பின்னர் எத்தனையோ மாறுபாடுகள் கடலிலும் நிலத்திலும் ஏற்பட்டன வென்பதும், கடற்பெரு வெள்ளங்கள் குமரி முனைக்குத் தெற்கேயுள்ள தமிழ் நாடுகளைக் கொள்ளைகொண்ட தென்பதும், தென்னிந்தியா பண்டைத் தமிழகத்தின் எஞ்சிய பாகமென்பதும், வடக்கே பல நாடுகள் நீரினுள்ளிருந்து வெளிப் போந்தன வென்பதும் வெளிப்படை.

தமிழகம் குறுகினமை

20. மக்களினந் தோன்றி முதல் முதல் நாகரிகத்திற்கு வித்திட்ட பழம் பகுதியாகிய குமரிக்கண்ட முழுவதிலும் வதிந்து வந்த தமிழர், தற்காலம் தென்னிந்தியாவில் வசித்துவரும் வாலாற்றைக் கூறுவாம்.

நாகரிக வளர்ச்சிமுறை

21. உலகில் மக்கட் டோன்றி சில காலம் கழிந்தபின்னரே பேச்சு உண்டாயிருத்தல் வேண்டும். "மக்கள் தோன்றி இரண்டு லக்ஷம் வருஷம் மிருகங்களோடு திரிந்தும், பிறகு 30,000 வருஷ காலமாக மீன்பிடித்துத்தின்று காலங்கழித்தும், பிறகு கிழங்கு காய்கனிகளைத் தின்றும், வேளாண்மை, கல்வி, கடவுள் நம்பிக்கை முதலானவைகளற்று, கேவலம் நிர்வாண பிராணிகளாகத் திரிந்ததாகவும், இப்படி அநேக ஆயிரம் வருடங்கள் ஆனபிறகு மழை வெயிலுக்குத்தங்க, மரக்கிளைகளில் கேவலமான குடிசைகளைக் கட்டிக்கொண்டும், குளிருக்காக மரப்பட்டை நார் கொடிகளைப் போர்வைகளாகவும், ஆகாரத்திற்காக அடிக்கடி அநேக இடங்களில்

* செந்தமிழ் தொகுதி. 12, பக்கம் 152.

போய் அலைந்து நொந்து முடியாமல் நீர்வளம் நில வளமுள்ள ஓர் இடத்தில் தங்கி, காய்கனி, பயிர் பச்சைகளைப் பயிர்செய்து குடியானவர்களாகிவிட்டார்கள் என பூதத்துவ சாஸ்திரிகள் சொல்லியிருக்கின்றனர் * ''

காலம்

22. சரித்திரக்காரர்கள், காலத்தை (Pre-Historic) சரித்திரத்திற்கு முற்பட்ட காலம், (Historic-Ancients) சரித்திராரம்பப் பண்டைக்காலம், (Middle Ages) மத்திய காலம், (Modern Times) நிகழ்காலம் எனப் பிரித்திருக்கின்றனர். மக்களின் நாகரிக வளர்ச்சியை, பழங்கற் காலம், புதுக்கற்காலம் செம்புக்காலம், வெண்கலக்காலம், இரும்புக்காலம் என அவ்வப் போது அவர்கள் வழங்கிய கருவிகள் செய்யப் பயன்பட்ட நிலக் கனிகளை வைத்து வரையறுப்பர். ஸ்காட் எலியெட் என்பார் உலகத்திற்கு இற்றைவரை நேர்ந்துள்ள பிரளயங்களில் முதன்மையானது சுமார் 11,00,000 ஆண்டுகளுக்கு முன்னர் எனவும், இரண்டாவது வெள்ளம் சுமார் 8,00,000 ஆண்டுகளுக்கு முன்னர் எனவும், மூன்ருவது வெள்ளம், 2,00,000 ஆண்டுகளுக்கு முன்னர் எனவும், நான்காவது வெள்ளம் 80,000 ஆண்டுகட்கு முன்னர் எனவும், ஐந்தாவதுவெள்ளம் 9500 ஆண்டுகட்குமுன்னர் எனவும் கூறுகிருர். இரண்டாவது வெள்ளத்திற்குப் பின்னர்தான் மக்கள் பேச்சுக் கற்ற காலமும் பழங்கற் காலமுமாக இருக்கலாம். நடுக்கோட்டுப் பகுதியில் தோன்றிய மக்கள் பிற்காலத்தில் தங்கள் நாடு கடல்வாய்ப் படுவதைக் கண்டு வடக்கேயும், கிழக்கேயும், மேற்கேயும் சென்றிருத்தல் வேண்டும். (தொடரும்).

---

## தமிழ்மொழியின் ஒலிகளும் எழுத்தும்

[ஈப்போ. திரு. தியாகராயன் அவர்கள்]

(முன் உ௪௯-ம் பக்கத் தொடர்ச்சி)

நகுதல் என்னுஞ் சொல்லில் 'கு' என்னு மெழுத்திற்குள்ள ஒலி 'ஹு' என்னு மெழுத்தால் குறிக்கப்பட்டது.

எனவே மேற்கூறிய சொற்களை 'பஸித்தல்' எனவும் 'நஹுதல்' எனவும் எழுத ஒலியுங் குறியு மொத்து இயங்கும்.

---

*Hindu Holy Bible.

இவ்விரண்டோசைகளும் இவ்வாறொழிய, இன்னும் 7 ஓசைகள் ஏற்ற குறிகளின்றி நிகழ்கின்றன. அவையாவன :—'பங்கம்' (ga) 'பஞ்சம்' (ja) 'பண்டம்' (da) 'பந்தம்' (tha voiced as in this) 'கம்பம்' (ba) 'கன்று' (ru nasal) 'செய்பவன்' (soft ப).

எனவே இவ்வேழு ஒலிகளுக்கும் ஏற்ற குறிகள் வேண்டும்.

நம் நாட்டில் ஆங்கிலமொழி பள்ளிக்கூடங்களிற் கற்பிக்கப் படுவதாலும், இம்மொழி கற்ற நம்மவர் அம்மொழியின் சொற்களை வரம்பின்றித் தழுவுவதாலும், ஆங்கிலங் கற்காதவரிடமும் பல ஆங்கிலமொழிகள் சாதாரணமாக வழங்குகின்றன. அன்றியும் தொழிற்சாலை, பண்டகசாலை, நீதிமன்றம் முதலிய பல துறைகளினும் இம்மொழியின் பல சொற்கள் இன்றியமையாததாயின. "கடிசொலில்லை காலத்துப்படினே" என்னும் விதிக்கேற்கத் தற்காலத்தில் சாதாரணமாக வழங்கும் ஆங்கில மொழிகளை நாம் ஏற்றுக்கொள்வது தகுதியே. மேலும் நம் நாட்டார், இக்காலத் தியங்கும் மிக விரிவான பல சாத்திரங்களைக் கற்றுணர்ந்து மேன்மைபட வேண்டுமெனில் ஆங்கிலச் சொற்கள் பலவற்றை நாம் ஏற்றுக் கொள்ளவேண்டியது அவசியமே. இவ்வகைச் சொற்களை ஏற்று இச்சாத்திரங்களைத் தமிழில் எழுதினாலன்றி இச்சாத்திரங்களின் ஞானம் (scientific knowledge) நம் மக்களிடையே எளிதில் பரவாது. இன்னும் பல காரணங்களுள வெனினும் இக்கட்டுரைக்கு இவையே போதும்.

ஆகையால் இம்மொழிச் சொற்களை நாம் ஏற்று அச்சொற்களின் ஒலிகளைக் குறிக்கத்தக்க குறிகள் தமிழில் இல்லையெனில், நாம் புதிதாகக் குறிப்புகளைப் புகுத்து அச்சொற்களை ஆங்கிலேயர் மொழிவது போலவே நாமும் மொழிவது சிறந்ததாகும். எனவே, அம்மொழியின் உயிரொலிக்கேற்ற உயிரொலிகளும் அவ்வொலிகளைக் குறிக்க எழுத்துக்களும் நம் மொழியில் உளவென முன்பே காட்டியுள்ளேன். இனி ஆங்கில மெய்யெழுத்துக்களின் ஓசைகளுக்கு ஏற்ற தமிழ் ஓசைகளும் குறிகளும் உளவோ என ஆராய்வோம்.

ஆங்கில அரிச்சுவடியில் 21 மெய்யெழுத்துக்களே யுள்ளன. அவைகளில் c, j, q, x and y என்னு மைந்தெழுத்துகளும் மிகைபட்ட வெழுத்துக்களென முன்னம் எடுத்துக்காட்டினேன். எனவே இவைகளைத் தவிர்ப்பின் 16 எழுத்துக்கள் மிஞ்சும். இவற்றுடன் தகுந்த குறியின்றி நிகழும் 6 ஒலிகளையும் கூட்ட ஆங்கிலத்

தில் 22 மெய்யொலிகள் நிகழ்கின்றனவாம். (ஆங்கிலமெய்யெழுத்துகளை (English Consonants) முன்னால் விரித்துரைத்த போது இவ்வொலிகளை 17 முதல் 22 வரையிலுள்ள இலக்கங்களால் காட்டப்பட்டிருக்கிறது.)

| ஆங்கில மெய்களினொலிகளைக் குறிக்கும் எழுத்துகள். | அவ்வொலிகளுக்கேற்ற தமிழ் மெய்கள். | குறிப்பு. |
|---|---|---|
| B | இல்லை | |
| D | ,, | டகரத்தின் மெல்லோசை |
| F | ,, | வகரத்தின் வேற்றோசை |
| G | ,, | ககரத்தின் மெல்லோசை |
| H | ,, | கண்டத்தியங்கும் காற்று |
| J | ,, | வடமொழி ஜ் |
| K | க் | |
| L | ல் | |
| M | ம் | |
| N | ந் | |
| P | ப் | |
| R | ர் | |
| S | இல்லை | வடமொழி ஸ் |
| T | ட் | |
| V | வ் | |
| W | இல்லை | பின்னால் விவரிக்கப்படும் |
| Z | ,, | சகரத்தின் மெல்லோசை |
| P | த் | |
| D | இல்லை | தகரத்தின் மெல்லோசை |
| SH | இல்லை | வடமொழி ஷ் |
| Y | ,, | ழகரத்தின் வேற்றோசை |
| J | ய் | |
| N | ங் | |

மேற்கூறிய அட்டவணையிலிருந்து H, S, F, என்னும் மெய்யொலிகள் முறையே கண்டத்திலும், இடைநா இடையண்ணத்திடையும், மேற் பல் கீழிதழிடையிலும் வெளிவரும் காற்றேயாம்.

ஆகவே இவைகள் ஒலிகளின் விதியைத் தழுவாததால் தமிழ்மொழி முன்காலத்தில் இவைகளை ஏற்கவில்லை. எனினும் அவைகளை ஓசை எனக்கருதி H, S, என்னும் எழுத்தோசைகளை வடமொழிச் சொற்களையேற்ற பொழுதே ஹ, ஸ என்னும் எழுத்துக்களைப் புகுத்ததால் அவ்வொலிகளுக்கேற்ற குறிகள் உண்டாகிவிட்டன.

F ஒன்னும் ஒலி வகரத்தைப் போலவே மேற்பற் கீழிதழ் இயக்கத்தால் பிறப்பதாகையால் அவ்வொலியின் வேற்றொலியாகக்கருதி ஓர் குறியமைக்க வேண்டும்.

B, D, G, Z, Q, என்னும் ஒலிகள் வல்லெழுத்துகளின் மெல்லோசைகளெனவும் அவ்வோசைகளைக் குறிக்கத்தக்க குறிகளில்லையெனவு மெடுத்துரைத்தேன்.

SH இக்குறியினோசை ஷகரத்தால் தமிழில் முன்னமேயே தழுவப்பட்டிருக்கிறது.

W, Y என்னும் எழுத்துக்கள் (Semi vowels) அரை உயிரென முன்ன முரைக்கப்பட்டது. இவைக்கேற்ற தமிழ் எழுத்துக்கள் முறையே வகர யகரங்களாம். இம் மெய்களைத் தமிழில் 'உடம்படு' மெய்களெனப் பெயரிடப்பட்டிருக்கிறது. உடம்படு என்பதை உடன்படு எனப்பிரித்து பொருள்களின் ஈரெழுத்துக்களை இணைத்தொலிக்க உடன் படுத்தும் மெய்களென்றேற்படும். இதுஎவ்வாறெனின், அவனை + அடித்தான் என்னும் சொற்களில் நிலைமொழி ஈற்றுயிராகிய ஐகாரத்தையும் வருமொழி முதலுயிராகிய அகரத்தையும் இணைத்தொலிக்க வேண்டுமாயின் யகர ஒற்று இடையே புகவேண்டும். இவ்வாறு வகுப்பின் அவனை + ய் + அடித்தான் என நின்று, நிலைமொழியீற்றின் ஐகாரம் முன்பே 'ன்' என்னும் மெய்யுடன் புணர்ந்திருப்பதால் அப்புணர்ச்சி மாறாமல் அவ்வாறே நிற்க, நடுவே புகுத்தப்பட்ட யகர ஒற்று வருமொழி முதலில் தனியாயியங்கும் அகர உயிரோடு புணர்ந்து, யகரமாய், முற்கூறிய சொற்களிரண்டையும் 'அவனையடித்தான்' எனப் பிணைத்து மொழிய இடங்கொடுத்தது. எனவே இப்புணர்ச்சிக்கு உடன்பட்ட யகர ஒற்றை உடம்படு மெய்யெனக் கூறுதல் தகுதியே.

(தொடரும்)

---

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## சோழர்கள் கல்வெட்டுகளிற் கண்ட குறிப்புக்கள்

[இராவ்சாஹிப் திரு. C. M. இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள்]

(முன் உ௨௰-ம் பக்கத் தொடர்ச்சி)

### IV. மன்னர்களின் விருதுகள்.

சோழன் வீரராஜேந்திர தேவன் ஆகவமல்லனைப் போரில் வென்றபோது அவனுடைய விருதுகளை எல்லாம் கவர்ந்து கொண்டு வந்ததாகச் சாசனம் கூறுகிறது. அவ்விதம் கவர்ந்து கொண்ட விருதுகள் அடியில் வருமாறு கூறப்பட்டுள்ளன:—

"நண்ணிய ஆகவமன்னனும் அவர்க்கு முன்னோட தன் வேக வெங்களிற்றினை விலக்கி வாகை கொண்டு அங்கு அவர் தாரமும் அவர் குலதனமும் சங்கும் முன்தொங்கலும் தாரையும் பேரியும் மேகடம்பமும் வெண்சாமரையும் காக்கைக் கொடியும் மகா தோரணமும் புட்பகப்பிடியும் போர்க்களிற் றீட்டமும் பாய் பரித்துறைகளும் பறித்து செய்யொளிர் விஜயமணி மகுடம் மிசையொடும்" என்ற அடிகளில் அரசர்கள் கொண்ட விருதுகளை வரிசையாக குறித்திருக்கின்றனர். அவற்றில்:—

1. தாரம் என்பது பெண்சாதி அல்லது மனைவி. அக்காலத்தில் பெண்டிரை யுத்தங்களில் சிறைப்படுத்துதலும் உண்டு எனத் தெரிய வருகிறது.

2. குலதனம் — பூர்வீகமாக வம்ச வழிவந்த பொருள்.

3. சங்கு—அரசர்கள் தாம் புறப்படும்போது பராக் சொல்லி ஊதும்படியான சங்கு.

4. முன் தொங்கல் — அரசர்க்கு மேல் அழகாகத் தொங்க விடும் குஞ்சங்கள்.

5. தாரை — அரசன் வருவதை ஒலித்துக் காட்டும் பறை*

6. பேரி — பெரிய நகாரா.

---

*தாரை யென்பது ஊதுங்கருவியே யாதல் வேண்டும். தாரை, பேய்த்தாரை, வங்கா என வழக்காற்றில் உள்ளமை காண்க (ப-ர்)

7. மேகடம்பம் — அரசனுக்கு மேலே அலங்காரமாக நிறுத்தும் விதானம் அல்லது மேற்கட்டி.

8. வெண்சாமரை — வெள்ளை மயிரினால் செய்யப்படும் சாமரை.

9. காக்கைக்கொடி — இதனைச் சூகாக்கொடி என்பதுதான் சரியானதாம். காட்டுப்பன்றி அல்லது வராக உருவம் கொண்ட கொடி என்று பொருள். இது ஆகவ மன்னனின் கொடி.

10. மகா தோரணம் — அரசர்கள் பவனி வரும்போது முன்னால் கொண்டு செல்லும் அலங்கார தோரணம்.

11. புட்பகப்பிடி — பெண் யானை.

12. போர்க்களிறு — போரில் செல்லும் யானை.

13. பாய்பரித் துறை — குதித்துத்தாவும் குதிரைகள்.

14. செய்யொளிர் விஜயமணி மகுடம் — சிவந்த ஒளிவீசும் படியானதும், வெற்றியைத் தரும்படியானதும், இரத்தினங்கள் பொதிந்ததுமான கிரீடம்.

மேற் சொல்லிய விருதுகளை எல்லாம் ஆகவ மல்லன் கொண்டிருந்தான். வீரராஜேந்திரன் அவனை வென்றபோது அவைகளை எல்லாம் வெற்றிப் பொருளாகக் கவர்ந்து கொண்டான்.

## V. பொது மக்களுடைய விருதுகள்.

மேலே சொன்னபடி அரசர்களுடைய விருதுகள் ஏற்பட்டிருக்க, சாதாரண மக்களும் தங்கள் தங்கள் குலத்துக்கு ஏற்றபடி சில விருதுகளைக் கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு சாதிக்கும் வெவ்வேறு விருதுகள் உண்டு. இச்சாதிகள் இடங்கை வலங்கை என இரண்டு பெரும் பகுப்புகளைக் கொண்டிருந்தார்கள். ஒரு சாதியினுடைய விருதை மற்றொரு சாதியார் எடுத்துக் கொள்ளக்கூடாது. அவ்விதம் ஒருவருடைய உரிமையினை மற்றொருவர் எடுத்துக் கொள்ளாதபடி அரசன் பாதுகாப்பான். வெவ்வேறு சாதியார்களும் தங்கள்தங்களுக்கு ஏற்பட்ட விருதுகளையும் உரிமைகளையும் விட்டுக் கொடுக்க இசையமாட்டார்கள். யாராவது வழக்கத்தை மீறினால் உடனே கலகம் ஏற்படும். அக்கலகத்தினைக் கொஞ்சமேனும் தயையின்றி மன்னன் அடக்கி விடுவான். இவ்விதமாகத்தான் முன் காலத்தில் சாதி உரிமைகளைப் பாதுகாத்து வந்தார்கள்.

இப்படி யிருக்க ஏதாவது ஒரு சாதியார் அல்லது வகுப்பார் அரசனுக்கோ அல்லது நாட்டிற்கோ பெருத்த உதவியைச் செய்திருப்பார்களானால் அரசன் அவர்கள்மீது பிரியப்பட்டு அவர்களுக்குச் சில உயர்ந்த விருதுகளையோ அல்லது உரிமைகளையோ கொடுப்பதுண்டு. அவ்விதம் கொங்கு நாட்டில் கொங்கு சோழர்களில் கோனேரின்மை கொண்டான் என்ற பட்டப்பெயர் பெற்ற ஒரு கொங்கு சோழன் காலத்தில் அவனுக்கு உதவிபுரிந்த கண்மாளர்க்குச் சில உரிமைகளை அளித்தான். அவ்வுரிமைகளை அக் கண்மாளர்கள் அவ்வரசனது 15-வது ஆண்டு ஆடிமாதம் முதல் இட்டுக் கொள்ளலாமென்று சாசனம் செய்து அதனைக் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளலாம் என்றும் கட்டளை இட்டான். அதின்படிபே இச்சாசனம் கொங்கு நாட்டில் ஐந்து கோயில்களில் வெட்டப்பட்டிருக்கக் காணலாம். வெங்கால நாட்டிற்குக் கரூரிலும், வடகொங்கிற்குப் பாரியூரிலும், மேல்கொங்கிற்குப் பேரூரிலும், தென் கொங்கிற்குக் கீரனூரிலும், கீழ் கொங்கிற்கு முடச்சூரிலும், இதே சாசனப் பிரதிகள் இருக்கக் காணலாம். இதனைக் கார்மேகக் கவிஞரும் தன் கொங்கு மண்டல சதகத்தில் அடியிற் கண்டவாறு எடுத்தாண்டிருக்கிறார்:—

"இருப்புற்ற வீட்டுக்குச் சாந்திட்டுக்கொள்ள விரண்டுசங்கு
விருப்புற்ற வாழ்விலுஞ் சாவிலு மூதவெளி நடைகாற்
செருப்பிட்டுச் செல்லப் பெறுவீர்களென்னவச் செய்யினால்
வரைப்பத்திரம் பெற்ற கம்மாளருங் கொங்கு மண்டலமே"

மேற் சொல்லியபடி கண்மாளர்களுக்கு அளித்த உரிமைகளாவன:—

1. "தங்களுக்கு நன்மை தின்மைகளுக்கு இரட்டைச் சங்கும் ஊதி பேரிகை உள்ளிட்டவை கொட்டுவித்துக் கொள்ளவும்"—இங்கே நன்மை தின்மை என்றால் 'நலம், பொலம்' என்று நாம் வழங்குபவை; அதாவது கல்யாணம், மரணம், என்பவைகள். இந்த இரண்டு காலங்களிலும் இவ்வகுப்பார் இரட்டைச் சங்கு ஊதிக் கொள்ளலாம்; பேரிகை அடித்துக் கொள்ளலாம்.

2. "தாங்கள் புறப்பட வேண்டும் இடங்களுக்குப் பாதரக்ஷை கோர்த்துக் கொள்ளவும்"—அதாவது வெளியில் போகும் போது காலுக்குச் செருப்புப் போட்டுக் கொள்ளும் உரிமை இவர்களுக்குக் கொடுக்கப்பட்டது. சில தாழ்ந்த வகுப்பார் செருப்பு

அணியப்படாதென்ற விதி இருந்தது. இப்பொழுதும்கூட நாட்டுப் புறங்களில் சில ஊர்களில் சில வகுப்பார் செருப்பு அணியக்கூடாது; அவ்விதம் அணிந்தால் குற்றம். இது பட்டக்காரர்கள் அதிகாரம் செலுத்தும் கிராமங்களில் அதிக மும்முரமாக நடைபெறுகின்றது.

3. "தங்கள் வீடுகளுக்கு சாந்து இட்டுக் கொள்ளவும்":— ஊர்களில் குடியிருக்கும் வீடுகளுக்குக் காறை பூசிச் சுண்ணும்பு அடித்தலும் ஒரு உரிமையாக அக் காலத்தில் கருதப்பட்டது. இதைப் படித்தால் நாம் வியப்புறுவோம். ஆனால் அக்காலத்தில் வீடுகளுக்குச் சாந்து பூசுவது அரிதான ஒரு பெருமை என்று எண்ணப்பட்டது. ஏழைகள் வீடுகளும் தாழ்ந்த வகுப்பார் வீடுகளும் காறையையும் சுண்ணும்பையும் கண்டிரா. ஆகவே, இதனைச் சில வகுப்பார் உரிமையாகக் கொண்டிருந்தார்கள். இந்தக் காலத்திலும் நகரபரிபாலன சபையின்கீழ் வாழும் குடிகள் தங்கள் வீடுகளைப் பழுது பார்க்கவும் சுண்ணும்பு அடிக்கவும் சபையாரிடமிருந்து உத்தரவு வாங்கவேண்டியது அவசியமல்லவா? அவ்வுத்தரவுக்கும் ஒரு கட்டணம் கட்ட வேண்டியதும் விதியாக ஏற்பட்டுவிட்டது. அப்படியிருக்கையில் சோழர்கள் காலத்தில் வீட்டிற்குச் சாந்து பூசிக்கொள்ள உரிமை பாராட்டுவதும் அவ்வுரிமையினை அரசன் அளிப்பதும் ஒரு வியப்பாக நாம் கருதக்கூடாது.

ஆகவே அரசருடைய உரிமைகளும் பொதுமக்களின் உரிமைகளும் எவ்விதமாய்ச் சோழர் காலத்தில் இருந்து வந்தன என்பதைக் கரூர்ச் சாசனங்கள் மூலமாக நாம் தெளிவாக அறிந்தோம். இச்சாசனங்களில் இன்னும் பல விஷயங்கள் ஆராய்ச்சிக்குத் தகுந்தவைகளாக இருக்கின்றன. உதாரணமாக, சோழர்கள் எடுத்த படையெடுப்புகள், புரிந்த போர்கள், வென்ற நாடுகள், தோற்கடித்த அரசர்கள், அளித்த நன்கொடைகள் முதலியவைகள் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. மேலும், அக்காலத்தில் அரசனுடைய உத்தியோகஸ்தர்களின் பெயர்களும், சாசனங்களுக்குச் சாட்சிகள் போட்ட மக்களின்பெயர்களும், பொதுமக்கள் இட்டுக்கொண்ட பட்டப் பெயர்களும் ஆகியவைகளைத் தெளிவாக அறியலாம். அவைகள் ஏனைய ஊர்ச்சாசனங்களிலும் இருப்பதாலும், இவ்வூர்ச் சாசனங்களில் அவைகளில் வேறுவித சிறப்புகளைக் காணுததினுலும் அவைகளைத் தனியாக இங்கு எடுத்து ஆராயவில்லை. (முற்றும்)

## திருச்சிமலைக்கோயில்

(முன் உஉஉ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

### ௮ வது பட்டம்

சாலியவாகன சகாப்தம் ௧௭உ௳ன் மேல் செல்லா நின்ற துந்துபிஹூ அற்பிசிமீ முதல் பார்த்திபஹூ தைமீ ௳வுன சிதம்பரநாதத் தம்பிரான் அவர்கள் பட்டம் ஹூ உ௪.

ஷையார் சுவாமி கோவில் கெர்ப்பக்கிரகமும் முன் மண்டபமும் சித்திர மண்டபம் முதலாகியதெல்லாம் தட்டோடு போட்டு வெள்ளை வைத்து தீர்மானஞ் செய்து சித்திரமண்டபத்தின் மதில்களெல்லாம் வெள்ளை வைத்து சுத்தம்பண்ணி அதில் சில பூதகணங்களெல்லாம் திருவுரு எழுதிவித்து பின்பு உச்சவாதி மண்டபத்திற்கும் மேலே தட்டோடு போட்டு தீர்மானஞ்செய்தது. பின்பு அம்மனுக்கு வெள்ளி ரிஷபவாகனமும் சுவாமிக்கு யானைவாகனமும் செய்துவைத்ததுவுமல்லாமல் ஷை சுவாமியவர்கள் மாரிபத்தில் முதலிச்சி தைலம்மை அண்ணியென்பவள் யாசகம் செய்து அம்மனுக்கு ரெத்தினஞ் செய்து வைத்தாள்.

### ௯-வது பட்டம்

சாலியவாகன சகாப்தம் ௧௭௪௬ன் மேல் செல்லாநின்ற பார்த்திப ஹூ தைமீ 22உ முதல் ௧௭௫௪௳ன் சர்வசித்து ஹூ சித்திரைமீ அம்பலவாணத் தம்பிரானவர்கள் பட்டம் ஹூ௧ மீ ஷை அம்பலவாணத் தம்பிரான் சிறு பிள்ளையாகவும் துஷ்டசாவகாசமாகவும் இருந்ததைப்பற்றி ஷை அம்பலவாணத் தம்பிரானை தள்ளுபடி செய்து சிதம்பரநாதத்தம்பிரான் பண்டார சந்நிதியால் நேமகஞ் செய்து அனுப்பி கலெக்டர் துரை யவர்களுக்கு அர்ஜியும் எழுதியனுப்பினபடியே ௧௮௭உ௭ ஹூ ஜூன்மீ 14உயில் சந்தாச்சுது.

### ௰வது பட்டம்

சாலியவாகன சகாப்தம் ௧௭௫௪௳ன் சருவசித்துஹூ சித்திரைமீ முதல் சோமகிருதுஹூ தைமீ ௰உஉ வரைக்கும் சிதம்பரநாத தம்பிரானவர்கள் பட்டம் ஹூ ௰௬ மீ ௧.

ஷையார் அவர்கள் முன்னிருந்த கடன்களில் அநேக கடன்களெல்லாம் தீர்த்தும், ௧ா ஹூத்தில் சுவாமிக்கு அஷடபந்தனத்துக்கு ரூ. ௧௰ா சிலவுக்குப் போட்டு விமானத்துக்கு தங்கமுலாத்

துக்கு ரூ.க000ம் போட்டும் எடுபிடிகள் ஆலவட்டம்மகரதோரணம் சண்டா ஈயோட்டி முதலாகியதும் வெகுவாச் செய்துவைத்தும், தங்கப் பல்லக்குகள் சேதமாய்ப்போய்விட்டதுக்கு ரூ. க000வரை யில் தங்கங்கள் வாங்கி அநேக வேலைகளும் செய்துவைத்து, மடம் பழுதாயிருந்ததற்குப் பழுது பார்த்தும், புதுக்கட்டடம் கட்டவும் பாவுகல்லு, உத்திரம், போதிகை, தூண் முதலாகியும் கிரயங் கொடுத்து வாங்கியும் ஷை வகையரா சிலவுகளுக்காக ரூ. உ000 அமானத்தில் கையிருப்பில் வைத்து ஷை பல்லக்கு வேலை செய்து மட்டக் கட்டட வேலை நிறைவேறுவதற்கு முன்னமே ஷை தம் பிரானவர்களுக்குப் புடனியில் பனிச்சை கண்டு உபத்திரமாக இருக்கையில் கோவில் திருவாபரணம் வெள்ளி ரிஷபவாகனங்கள் வெள்ளிக்குடம் வெள்ளிக்குடை பித்தளை கொப்பரை தாம்பிர கொப்பரை ஷை குடங்கள் தவலை தாம்பாளம் முதலாகிய பாத்தி ரங்களுக்கும் மடத்திலிருக்கப்பட்ட கொப்பரை, தவலை, கெடாரம், தாம்பாளம், சொம்புகள் இருப்புப் பாத்திரங்கள் பூசைமடம் பாத் திரம் முதலியவைகளுக்கும் களஞ்சியம் இருப்புக் கலம் உ௱00ம் உக்கிரான இருப்புச் சாமான்கள் முதலாகியதுக்கும் கணக்குகள் முதலாகியதுக்கும் பேரிஸ்து முதலாகிய கணக்குகளும் தயார் செய்து ஷை கணக்கில் ஷை தம்பிரானவர்களும் கையெழுத்து வைத்தும் இவ்வித விபரங்களைக் கண்டு தர்மபுரம் பண்டார சந்நிதி யவர்களுக்கும் விண்ணப்ப பத்திரம் எழுதி யனுப்பிவைத்து இந்த மலைமடம் கட்டளை விசாரணையைத் தனக்குப்பின் ஷை வேலை யைத் தனெப்பந்தம் சுவாமி காரியம் செம்மையாய்ப் பார்க்கத் திறமையுள்ளவரான திருபுவனம் கட்டளையில் வேலை பார்க்கப் பட்டவரான அருணசலத் தம்பிரானென்பவரை அனுப்பிவைக்க வேண்டுமென்று தர்மபுர ஆதீனம் பண்டார சந்நிதிக்கும் காசி மடத்துக்கும் விண்ணப்ப பத்திரம் எழுதி தபால் மார்க்கமாக அனுப்பிவைத்த மூன்றாம்நாள் தெய்வகதி யடைந்தார். அதின் பேரில் இவ்விடத்தில் வந்து வீடுகளில் யாசகஞ்செய்து சாப்பிட் டுக்கொண்டிருந்த வைத்திலிங்கத் தம்பிரானென்பவர் ம-ா-ா-ஸ்ரீ பாலசுப்பிரமணிய முதலியாரவர்களிடத்தில் போய் ரொம்பவும் மாரீசம்பண்ணியும் சுவாமி காரியத்தில் மிகுந்த உண்மையாகவும் பயபக்தியோடும் கட்டளை வேலையைச் செம்மையாய் நடப்பி வைத் துக்கொண்டு உங்கள் உத்திரவுப்படியே நடந்துகொண்டு வருகி

றேன். என்பேரில் தயவு வைத்து தர்மபுர மாதீன பண்டார சந்நிதி யவர்களுக்குங் காசிமடத்தார் அவர்களுக்கும் தாங்கள் எழுதி யனுப்பி உத்திரவு வரவழைத்தும் மடத்தில் வேலை பார்க்கப்பட்ட காரியஸ்தாளைக்கொண்டும் எனக்கு வேலை கிடைக்கும்படி செய்ய வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டதில் ஷ முதலியாரவர்கள் பண்டார சந்நிதிக்கும் எழுதியதுமல்லாமல் மடத்தின் வேலை காரியஸ்தர்களைக்கொண்டு இவ்விடத்திலிருக்கும் வைத்திலிங்கத் தம்பிரானைத்தானே கட்டளை வேலை பார்க்கும்படியாக உத்திரவு அனுப்பவேண்டுமென்று எழுதச் சொன்னதின்பேரில் ஷ முதலியாரவர்கள் ஸ்தலகாரரும் சொல் தட்டாமல் ஷயார் பண்டார சந்நிதி யவர்களுக்கு எழுதினதில் ஷ காரியஸ்தரைக் கோபித்துக் கொண்டு மறுபடி இவ்விடத்திலிருந்த வைத்திலிங்கத் தம்பிரானை நேரில் தருமபுரத்திற்கு வரவழைத்து ஷ கட்டளை வேலை பார்ப்பதற்கு வேண்டிய ஆதாவுகளெல்லாம் எழுதிக் கொடுக்கச்சொல்லி ஸ்டாம்பில் வாங்கிக்கொண்டு அதன்பேரில் இந்த வைத்திலிங்கத் தம்பிரானை நேமகம் செய்து அனுப்பலானது.

---

## இடும்பை தருவன நான்கு

1. நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும். (குறள் 138)
2. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும். (குறள் 508)
3. தேரான் றெளிவுந் தெளிந்தான் கணையுறவுந்
தீரா இடும்பை தரும். (குறள் 510)
4. பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாரால்
பேரா இடும்பை தரும். (குறள் 892)

1. ஒருவனுக்கு நல்ல வொழுக்கம் அறத்திற்குக் காரணமாய் இருமையினும் இன்பம் பயக்கும்; தீய வொழுக்கம், பாவத்திற்குக் காரணமாய் இருமையினும் துன்பம் பயக்கும்.

2. தன்னோடு இயைபுடைய னல்லாதானைப் பிறப்பு முதலியவற்றானும் செயலானும், ஆராயாது தெளிந்த அரசனுக்கு, அத் தெளிவு தன் வழிமுறையினும் நீங்காத துன்பத்தைக் கொடுக்கும்.

3. அரசன் ஒருவனை ஆராயாது தெளிதலும், ஆராய்ந்து தெளிந்தவன்மாட்டு ஐயப்படுதலும், இவ்விரண்டும், அவனுக்கு நீங்காத துன்பத்தைக் கொடுக்கும்.

4. ஆற்றல்களால் பெரிய ராயினாரை, வேந்தர் நன்குமதியாது, அவமதித்து ஒழுகுவாராயின், அவ்வொழுக்கம் அப்பெரியாரால், அவர்க்கு என்ஞான்றும் நீங்காத துன்பங்களைக் கொடுக்கும்.

ஒரத்தி - எம். முனுசாமி ஆச்சாரி.

# அறிவியற் பகுதி - Science

## ஒளி நூல்—(Astronomy)

[திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்]

(முன் உஉ௫-ம் பக்கத் தொடர்ச்சி)

ஐரோப்பாவின் ஏனைய நாடுகளிலும் பல சிறந்த புலவர்க ளிருந்தனர். பிரான்சில் லா கேய்லி (La Caille) என்ற அறிஞர் 1713-ல் தோன்றினர். அவர் 1751-ல் பூமியின் தென் பகுதி யிற் காணப்படும் விண்மீன்களின் அட்டவணையை நிறைவு செய் யும் நோக்கத்துடன் புறப்பட்டு ஆப்பிரிக்கா (Africa) கண்டத் தின் தென்கோடியிலுள்ள நன்னம்பிக்கை முனை (Cape of Good Hope) யை அடைந்தார். பூமியின் தெற்கு முனைக்கும் (South Pole) மகரச் சக்கரத்திற்கும் (Tropic of Capricorn) இடையே காணப்பெறுவனவற்றுள் 9800 விண்மீன்களைக் கண்டு அவர் ஓர் அட்டவணை எழுதினர். இரவிப் பெயர்ச்சியைக் கணிப் பதற்குப் புது வழியாம் அட்டவணையைத் தயாரித்ததோடு, புதன், சுக்கிரன் ஆகிய கோள்களின் பெயர்ச்சியையும் அவர் ஆராய்ந்தார். அவர் 1762-ல் இறந்தார்.

அவ்வாண்டிலேயே மற்றொரு புலவர் காட்டிஞ்சன் (Gottingen) நகரில் மடிந்தார். அவர் பெயர் பேராசிரியர் மேயர் (Professor Mayer) என்பது. அவர் திங்கள் முதலிய கோள்களின் போக்கைக் கணிப்பதற்கு அட்டவணைகள் தயாரித்தார். அவை கள் மிகவும் நுட்பமானவைகளாய் நாவிகர் பஞ்சாங்கம் (Nautical Almanac) கணிப்பதற்குப் பேருதவியா யிருக்கின்றன. அவர் தமது நாற்பத்தோராவது வயதில் விண்ணுலகடைந்தார். அவ ருடைய அட்டவணைகளுக்காக ஆங்கில அரசாங்கத்தார் அவ ருடைய மனைவிக்கு மூவாயிரம் பவுன்கள் பரிசாகக் கொடுத்தார் கள்.

அயன சலனத்தைப் பற்றிய கொள்கையை உறுதியாக வெளிப்படுத்தியவர் டி அலெம்பர்ட் (D'Alembert) என்ற புலவர். அவர் கி. பி. 1783-ல் மறைந்தார்.

யூலர் (Euler) என்ற புலவர் அளவிறந்த புதுமைகளைக் கண்டறிந்தார். லா கிராஞ்ஜ் (La Grnage) என்ற பெரியாரொருவர் 1736-ல் டியூரின் (Turin) நகரில் பிறந்தார். அவர் வியாழன் என்ற கோளின் மதிகளை நன்கு ஆராய்ந்ததோடு கோள்களில் ஒன்றற்கொன்றுள்ள தொடர்பையும் அவைகளின் பெயர்ச்சியையும் மிகநுட்பமாகக் குறித்துணர்ந்தார்.

லா பிளேஸ் (LaPlace) என்பவரும் ஒப்புயர்வற்ற புலவரே. அவர் மதிப்பெயர்ச்சிக் கணித அட்டவணையில் சில புதிய சீர்திருத்தங்களைச் செய்ததோடு அயன சலனத்தையும் நுண்ணிதின் ஆராய்ந்தார். ஆராய்ச்சிக்கேற்ற பல நுட்பமான கருவிகளைச் செய்தவர் ட்ரேளட்டன் (Troughton) என்ற அறிஞர். அவருடைய கருவிகளில் ஒன்றேனும் இல்லாத சோதிக் காட்சிச் சாலையே கிடையாதென்று துணிந்து கூறலாம். இனி, இந்தியாவின் வானநூல் வளர்ச்சி வரலாற்றை ஆராய்வாம்:

இந்தியாவின் பண்டைமக்களாகிய தமிழரே உலகில் வானநூல் வளர்ச்சிக்குத் தலைவர் என்றும், அவர்களிடத்திலிருந்து எகிப்து முதலிய இடங்களுக்கு இக்கலை பரவிற்றென்றும் இக்கட்டுரைத் தொடக்கத்தில் விளக்கினம். ஆரியர் தமிழ்நாட்டிற் புகுந்து தமிழரோடு கலந்தபின்னர் தமது செல்வாக்கை நிலைநாட்டத் தொடங்கி தமிழில் இருந்த நூல்களை வடமொழியில் மொழிபெயர்க்கத் தொடங்கினர். மயன் என்பவனுக்கு இரவி என்பவனால் கூறப்பெற்ற இரவி சித்தாந்தம் என்ற நூல் இற்றைக்கு 21,65,031 யாண்டுகளுக்கு முன் இயற்றப்பெற்றதெனத் தெரிகிறது. இது இப்பொழுது வடமொழியில் இருக்கிறது. இது மிகப் பழமையானது என்பதுதான் இது எழுதி 21,65,031 யாண்டுகளாகின்றன என்பதன் கருத்து. இது பூர்வ சூர்யசித்தாந்தம் என இப்போது பெயர் பெற்றுள்ளது.

திருக்குறள் என்பது திருவள்ளுவநாயனாரால் தமிழில் இயற்றப்பெற்றது. இதனை இப்போது சிலர் வடமொழியில் அரைகுறையா மொழிபெயர்த்துக்கொண்டு வடமொழியின் மொழிபெயர்ப்பே தமிழ்த் திருக்குறள் என்று துணிந்து வெளிப்படையாகக் கூறவும் தலைப்பட்டிருக்கின்றனர். முதல் நூலாகிய பெரிய புராணத்தையும் அங்ஙனமே கூறுவர். சிவஞான போதத்தையும் அவ்வாறே சிலர் கூறுகின்றனர். அறியாமையிருளால் மூடுண்டு

கிடக்கும் தமிழரிற் சிலரும் அவ்வேமாற்றுக் கூற்றுக்கு உடன்படுவர். இங்ஙனமாகப் பல தமிழ் நூல்கள் வடமொழியில் பெயர்க்கப் பெற்று வழங்குவனவாயின. பல பிரதிகள் செய்யப்பெற இயலாத அக்காலத்திய நூல்கள் பல தோன்றித் தோன்றிமறைந்தன.

நான்முகன் என்பவன் ஒரு நூல் இயற்றியதாகத் தெரிகிறது. அது பிரமசித்தாந்தம் எனப்பெயர் பெறும். பின்னர், கால மாறுபாட்டிற்கு ஏற்றவாறு கோள்களின் கதிகள் மாறுபடுவதை யுணர்ந்து அவ்வப்போது பலர் பல நூல்கள் இயற்றுவாராயினர். அவருள் முதன்மையானவர் வியாசர், வசிட்டர், அத்திரி, பராசரர், காசியபர்,நாரதர், கருக்கர், மரீசி,மனு, ஆங்கிரசர், உலோமர், புலிசர், சியாவனர், யவனர், பிருகு, சௌனகர் முதலியோராவர்.

சாலிவாகனன் என்ற அரசன் கி. பி. 78-ல் பட்டத்திற்கு வந்தான், அவன் சோதி நூற் கலைக்கு ஒரு ஊன்றுகோல் போல, தன்காலம் வரை உள்ள மாறுபாடுகளைக் களைந்து கணிதவழிகளைச் சரிசெய்தான். அவன் பெயரால் அவன் முடிசூடிய நாள் தொடங்கி சாலிவாகனன் ஆண்டு என ஒன்று வழங்கி வருகிறது. அவனுக்கு 134 ஆண்டுகளுக்குமுன், அதாவது கி. மு. 56-ல், இருந்த விக்கிரமாதித்தன் என்ற மன்னனும், கி. பி. 40-ல் இருந்த போசன் என்ற அரசனும் ஒளிநூல் வளர்ச்சியில் மிக ஈடுபட்டு ஒளிநூற் புலவர்களைப் போற்றி வந்தனர். ஆதலின் அவர்களுடைய பெயர்களாலும் ஆண்டுகள் வழங்கிவருகின்றன.

கி. பி. 427-ல் இருந்த சாலிவாகனன் என்ற மற்றொருமன்னன் பிரபவ என்பது முதலாக அட்சய முடியஉள்ள அறுபது ஆண்டு வட்டத்தை ஏற்படுத்தினன். அதுமுதல் இன்றுவரை அவ்வாண்டுப் பெயர்கள் இந்தியாவில் வழங்கிவருவன வாயின.

கி. பி. 522-ல் ஆரியப்பட்டர் என்ற அறிஞர் ஒருவர் இருந்தார். அவர் ஆரியப்பட்டீயம் என்ற நூலை இயற்றினர். அவர் கி. பி. 1322-ல் இருந்ததாகச் சில ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். சூரியன் என்ற பெயரையுடைய மற்றொருவர் கி. பி. 1068-ல் சூரிய சித்தாந்தம் என்ற நூலை எழுதினர். முன்னரே உள்ள சூரிய சித்தாந்தத்திற்கு இது வேறுபட்டது.

பாஸ்கரன் என்ற ஒருவர் கி. பி. 1150-ல் பாஸ்கரீயம் என்ற நூலியற்றினர். உள்ளமுடையான் என்ற மன்னர் கி.பி. 1234-ல் உள்ளமுடையான் என்ற கணிதநூலை யாத்தனர்.

கி. பி. 288 லிருந்த பிரதாபருத்திரன், கி. பி. 1301 லிருந்த இராமதேவன், கி. பி. 1529 லிருந்த கிருஷ்ணராயன் ஆகிய மன்னவர் சோதிநூற் புலவரை ஆதரித்து வந்த காரணத்தால் அவர்கள் பெயர்களால் ஆண்டுகள் கணக்கிடப்பட்டு வருவன வாயின. கி. பி. 1506-ல் வரருசி என்பவர் ஒரு நூல் இயற்றினர்.

மலையாள நாட்டின் தலைநகராக இருந்த பதுமனுபபுரத்தில் பல கணிதப் புலவர்க ளிருந்ததாகத் தெரியவருகிறது. அவருள் மேழத்தூர் நாராயணபட்டர் என்பவர் நாரயண விரசிதம் என்றநூலை இயற்றினார். அந்நாட்டில் இன்னும் பல கணிதம் வல்ல புலவர்கள் பலர் இருக்கின்றனர்கள். (தொடரும்)

---

## பொருணூல்—(Economics)

## சென்னை மாகாணப் பொருளாதார நெருக்கடி*

## (1820—1854)

[திரு. B. நடராஜபிள்ளை யவர்கள் B. A.]

பெருமலை பிளந்திடப் பிறங்குமோர் பெருவிடர்
விடரகத் தொளிரும் விளங்குபொன் மண்நுரை.

—டென்னிஸன்.

சரியாக நூறாண்டுகட்கு முன்னர் இந்தியாவில் பெரியதொரு பொருளதார நெருக்கடி உண்டாயிற்று. அது 1820-ம் ஆண்டில் தொடங்கி, பல ஏற்றத்தாழ்வுகளுடன் 1854-ம் ஆண்டுவரை யிருந்தது. அது இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் இருந்ததேனும், "ரயத்துவாரி" நிலத்திட்ட மமைந்த சென்னை, பம்பாய் ஆகியமாகாணங்களில்தான் மிகவும் கொடுமையாக இருந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் சென்னைமாகாணம் நிறுவப்பட்டது. அது நிறுவப்பெற்ற சில ஆண்டுகளுக்குள்ளேயே கொடியதொரு பொருளாதார நெருக்கடி உண்டாயிற்று; அரசாங்கத்தின் பொருள் நிலை ஆட்டங் கொண்டது. மக்கள் தம் பொருணிலை பெரிதுங்

---

* இஃது சென்னைப் பல்கலைக் கழகப் பொருணூற் பேராசிரியரான டாக்டர் பி. ஜே. தாமஸ் என்பாரும், பல்கலைக் கழக ஆராய்ச்சி மாணவரான திரு. B. நடராஜபிள்ளை என்பாரும் அண்ணமலை நகரில் நடந்த இந்தியப் பொருளாதார மாநாட்டிற்கு எழுதியனுப்பிய ஓர் ஆராய்ச்சிக் கட்டுரையின் மொழி பெயர்ப்பாகும்.

குலைந்தது. மாகாணம் முழுதும் மட்டற்ற துன்பம்! 1825-க்கும் 1854-க்குமிடையில் அகவிலை வரவர இறங்கிக்கொண்டே வந்தது. எனினும் 1840-க்கும் 1845-க்கும் இடையே இறங்கிய இறக்கமே மிகவுங் குறைந்ததாகும். அதற்கு இருபத்தைந்து ஆண்டுகட்குமுன் இருந்த விலையை நோக்க இவ்விறக்கவிலை சரிபாதியே யாகும்.

1820—1854 பொருளாதார நெருக்கடிக்கும் 1920-ல் தோன்றி இன்றும் நிகழும்நெருக்கடிக்கும் பல ஒற்றுமைகள் உள. இந்நெருக்கடிகளின் எது நோக்க வேற்றுமை தோன்றினும் அவற்றின் போக்குகளிலும் அவை விளைக்கும் பலன்களிலும் ஒற்றுமை சிறந்து விளங்குகின்றது. இருநெருக்கடிகளும் வருவாயைக் குறைத்து, வாணிபத்தைக் குலைத்து. அரசாங்கத்தைத் தயங்கச் செய்தன. இரண்டாலும் வேளாண்மையே கழிபெருங் கேடுற்றது. வரி வாரம் வட்டிமுதலிய சுமைகள் குறையாததால் வேளாண்மைக் காரர்களே தவிக்கலுற்றனர். 1820-முதல் 1854 வரை நிகழ்ந்த நெருக்கடியின் கொடுமைகளைத் தணிக்கவே, வாளாவிருப்பதே பெருநீதி யெனக் கொண்டிருந்த அரசாங்கத்தார், அக்கொள்கையினைச் சிறிதுமாற்றி நீர்ப்பாசனங்கள் அமைத்தல், சாலைகள் போடுதல் முதலிய வேளாண்மை வளர்ச்சித்துறைப் பணிகளிற் சற்றே தலையிட்டனர். ஏழை உழவர்களின் வரிப்பளுவை எளிதாக்கும் நோக்கத்துடனேயே 1860-ல் புதியதோர் நிலவரித்திட்ட முறை நிறுவப்பட்டது. சென்ற நூற்றாண்டுகளில், நிலைமைகள் எவ்வளவோ மாறுதலடைந்திருக்கின்றன. எனினும், இற்றைய நெருக்கடியோடு நாம் போரடுவதற்கு 1820—54 நெருக்கடியின் அநுபவங்கள் ஒருசிறிது உதவியளிக்கவல்லதாகவே இருக்கும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தியாவிலே எழுந்த நெருக்கடிகளுள் இதுவே மிகப் பெரியது என்றாலும், இந்தியப் பொருளாதார வரலாற்றில் தலைமையான இந்நிகழ்ச்சியின் மீது பொருளாதாரப் பண்டிதர்கள் தம் கருத்தைப் போதியவாறு செலுத்தவில்லை. இதைக் குறித்தெழுதப்பட்டன வெல்லாம், திரு. சினிவாசராகவ ஐயங்கார் என்பவர் 1892-ல் தொகுத்த "சென்ற 40 ஆண்டிற் சென்னை மாகாணத்தின் முற்போக்கு" (Memorandum on Progress of the Madras Presidency during the 40 years) என்ற நூலிற் காணும் ஒன்றிரண்டு பந்திகளும், பெடர் என்பார் இந்தியாவின் ஒழுக்க, செல்வ முற்போக்கு அறிக்கை (Report

of the Moral & Material Progress) களின் 1882-83-ம் ஆண்டு வெளியீட்டில் வரைந்துள்ள ஒருசிறு குறிப்புமேயாம். இப்பொருள் குறித்த எட்டுச் சான்றுகளை ஆராய்ந்து வருகின்றோம். விரிந்த ஒருநூல் விரைவில் வெளியிடப்படும். எனவே இக்கட்டுரையில் 1820-54 பொருளாதார நெருக்கடியின் ஏதுகள் மட்டும் ஆய்ந்து விளக்கப்படும்.

## விலைமலிவின் காரணங்கள்

திரு. சீனிவாச ராகவய்யங்கார் 1820-முதல் 1854 வரை நிகழ்ந்த நெருக்கடி இந்தியாவில் மட்டுந்தான் சிறப்பாக இருந்த தென்று கருதி அதற்கு உள்நாட்டுப் பொருளாதார நிலையே காரணமென்று கூறிப்போந்தார். ஆனால் இங்கிலாந்திலும், ஏனைய மேலை ஐரோப்பிய நாடுகளிலும் அத்தகைய நெருக்கடி இருந்த தென்பதை அவர் உணர்ந்தாரில்லை. உலகம் முழுவதையுமே ஒரோவோர் காலத்தில் தாக்கும் விலை மாறுதல்களில் அதுவும் ஒன்றாகும். பதினாறும் நூற்றாண்டில் அமெரிக்காவிலிருந்து ஐரோப்பாவுக்கு வெள்ளியானது, என்று வரத்தொடங்கிற்றோ அன்று முதற்கொண்டு ஐரோப்பாவில் பல நீடித்த விலை மாறுதல் களும் உண்டாயின. உலகின் பல பகுதிகளும் வாணிபத்தால் பிணைக்கப்பட்டிருக்கவே, இவ்விலை மாற்ற இயக்கங்களும் எங்க ணும் பரந்து காணப்பட்டன.

ஐரோப்பாவுக்கும் இந்தியாவுக்கும் மிக நெருங்கிய தொடர் பில்லாத காலங்களாகிய 16-ம் 17-ம் நூற்றாண்டுகளிற்கூட ஐரோப் பாவில் விலைகள் ஏறியபோது இந்தியாவிலும் விலைகள் ஏறின. அக்காலத்தில் முகலாய மன்னர்கள் தலைமுறை தலைமுறைதோறும் வரிகளை மிகுதியாக ஏற்றிவந்ததே அப்பொழுதைய விலையேற்றத் திற் கேதுவாகுமெனக் கருதப்பட்டது.

பொருளாதார நிலைச் சுழற்சியிலே விலை ஏற்றமும் விலை இறக்கமும் வாணிப ஊக்கமும், வாணிபச் சுணக்கமும் ஒன்றன் பின் ஒன்றாக மாறிமாறிக் குறிப்பிட்ட சில காலவட்டங்களுக் கொருமுறை தோன்றுகின்றன என்று சில பொருளாதார நூல் வல்லுநர் கருதுகின்றனர். இதனை அவர் 'வாணிபச் சக்கரம்' என்பர். இது ஒப்போ தப்போ என்றாராய்வதை நாம் ஈண்டு மேற்கொள்ளவேண்டா. பண்டைக்கால விலை மாறுதல்களுக்குப்

பணப் பெருக்கமோ சுருக்கமோதான் தலையாய ஏதுவாகக் கருதப்பட்டுவந்தது. இந்நாளில் பொன்னுக்கும் பொருள் விலைக்கு முள்ள தொடர்பு சுருங்கிவிட்டது. 19-ம் நூற்றாண்டிலும் அதற்கு முற்காலத்திலும் பொன், வெள்ளி முதலாகிய அரிய உலோகங்களுக்கும் பண்டங்களின் விலைகளுக்கும் இருந்த தொடர்பு மிக நெருங்கிய தொன்றாகும். உண்டியல்களும் நாணயத் தாள்களும் (Currency notes) வெகு சுருக்கமாக அக்காலத்தில் வழங்கிவந்தமையால் தங்க நாணயங்களும் வெள்ளி நாணயங்களுமே அக்காலத்திற் செலாவணியாகி வந்தன.

நீண்டகால விலை இறக்கத்தைப் பற்றி நுண்ணிதில் ஆராய்ந்து வந்த ஸர் வால்டர் லேயிட்டன் என்பவர் 1820-முதல் 1854 வரை ஐரோப்பாவில் நிகழ்ந்த நெருக்கடியைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்:—

"1810-ம் ஆண்டிற்கு முன்பு, ஐரோப்பாகண்டம் தனக்குத் தேவையான அரிய உலோகங்களை மத்திய அமெரிக்காவிலும் தென் அமெரிக்காவிலுமிருந்த ஸ்பெயின் குடியேற்றநாடுகளின் கனிகளிலிருந்து பெற்றுக்கொண்டிருந்தது. ஆனால் பிரெஞ்சுப் புரட்சிப் போர்நடந்த காலத்தில் மேற்கூறிய குடியேற்ற நாடுகள் தம் அடிமைத்தளைகளை உடைத்துத் தன்னுரிமை பெற்றன. பின்னர் 15-ஆண்டுகள் வரை அந்நாடுகளில் குழப்பமும் உள்நாட்டுப் போரும் நிலவின. அதனால் உலோகக்கனிக ளெல்லாம் அகழ்வாரின்றிப் பாழ்பட்டுக் கிடந்தன. எனவே தங்கம் வெள்ளி ஆகிய அரிய உலோகங்களின் உற்பத்தியிற் பெரிய குறைவு ஏற்பட்டது." டெல்மார் என்பவர் போட்ட புள்ளியின்படி ஸ்பெயினைச் சார்ந்த அமெரிக்கக் குடியேற்றநாடுகளி லிருந்து அகப்பட்ட தங்கமும் வெள்ளியும், பிரெஞ்சுப் புரட்சிப் போர்த் தொடக்கத்திற்கு முந்திய ஆண்டில் 72லக்ஷம் பவுன் பெறுமானதாயிருந்தது, 1825-ல் 50 இலட்சமாகவும், 1829-ல் 40லட்சமாகவும் குறைவுற்றது. அதுவே ஐரோப்பாவில் எழுந்த நெருக்கடிக்குத் தலையான காரணமாகும்.

தங்கம் வெள்ளி ஆகிய அரும்பொருள்களின் குறைவு ஐரோப்பாவை எவ்வாறு தாக்கியதோ அதுபோலவே இந்தியாவையும் தாக்கியது. இந்தியாவில் போதுமான பொற்சுரங்கங்களோ வெள்ளிச்சுரங்கங்களோ இல்லாமையாலே, இவ்விரு உலோகங்

களும் அயல்நாடுகளிலிருந்தே ஈண்டு வரவேண்டியதாயிருந்தன. வெளிநாடுகளில் அவற்றின் உற்பத்தி குறையவே, இந்தியாவில் அவை இறக்குமதியாகும் அளவும் குறைந்தது. அக்காலத்தாயினுஞ் சரி, இக்காலத்தாயினுஞ் சரி, எல்லாப் பண்டங்களின் விலையும் ஒருங்கே மலிவதற்குப் பணத்தின் உற்பத்தி முன்னிலும் குறைந்ததாகவேனும், இன்றேல் உற்பத்தியி னளவு முன்போலதாகவிருக்க, தேவை அதற்கு அதிகமாகவேனும், அன்றி இவ்விரண்டுஞ் சேர்ந்தேனும் ஏதுவாக அமையவேண்டும். 1800-ம் ஆண்டிற்குப் பின்னர் இந்தியாவில் பணத்தின் தொகை பல்வேறு காரணங்களாற் குறைவுபட்டது. ஆனால் அதே வேளையில், முன் பணத்தாலன்றி பண்டமாற்றலால் முடிவுபெற்ற பல பணிகளுக்கும் இப்பொழுது பணம் வேண்டப்படவே அதன் தேவையும் மிகுதியாயிற்று. இது எவ்வாறு நிகழ்ந்ததெனக் காண்பாம். (தொடரும்)

---

## பச்சை குத்துதல்

மக்கள் தம் உடலின் பல பகுதிகளிலும் தேள், பாம்பு, ஆண்மகன், பெண்போன்ற பச்சை குத்திக்கொள்ளும் வழக்கத்தை இந்நாட்டில் இன்றுங் காணலாம். பெரும்பான்மையாகப் பெண்களும் சிறுபான்மை ஆண்களும் இவ்வாறு அழகு செய்துகொள்வர். பச்சையுடன் சிவப்பு சேர்த்துக் குத்திக்கொள்வதும், இத்துறையில் பின்னர்ப் புகுந்த வளர்ச்சியைக் குறிக்கும். நாவாய்களில் வேலைசெய்யும் மாலுமிகளும் கப்பற்படை வீரர்களும் இவ்வாறு சிவப்பும் பச்சையுங் கலந்து குத்திக்கொண்டிருப்பதைக் காணலாம். இஃது பிறநாடுகளில் நாகரிகம் முதிராதவர்களாகக் கருதப்படும் சூலூக்கள் மையோரியர்கள் முதலிய பண்டைக்கால மக்களைப் பார்த்துக் கற்றுக்கொண்ட பழக்கமென்று சிலர் கூறுவர். இங்கிலாந்தில் சார்லஸ் மன்னன் காலத்தில் (17-ம் நூற்றாண்டு) பச்சைக்கு மாறாகக் கறுப்பு குத்திக்கொள்ளுதல் பெருவாரியாக ஆங்கிலப் பெண்மக்களிடங் காணப்பட்டது. பிரான்சுநாட்டிலும் ஏறக்குறைய இப்பழக்கம் அக்காலத்தில் இருந்து வந்தது. ஞாயிறு, திங்கள், விண்மீன், சிலுவை போன்ற உருவங்களை முகங்களில் குத்திக்கொண்டதுடன் குதிரைகள் பூட்டிய நாற்சக்கரவண்டி (கோச்), நாவாய் போன்ற உருவங்களையுஞ் சிலர் குத்திக்கொண்டனர். அப்பழக்கம் இப்பொழுது பெரும்பாலும் மறைந்துவிட்டதாயினும் "அழகுப்புள்ளி" (Beauty Spot) என்று முகத்தில் ஒரோ வோரிடத்தில் கறுப்புப் புள்ளி குத்திக்கொள்ளும் வழக்கம் இன்றும் அவர்களிடம் காணப்படுகிறது.

—கா. சிவ. க.

# மொழிபெயர்ப்பு-Translation

[திரு. T. B. கிருஷ்ணசாமி முதலியாரவர்கள் M.A., B.L.]

கபிலர்

இயற்றிய

## இன்னா நாற்பது

## Of Unpleasant Things: Forty (Stanzas)

By

KAPILAR

(முன் உஉஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

உ௩. யானையின் மன்னரைக் காண்ட னனியின்னா
ஊனைத்தின் றூனைப் பெருக்குதன் முன்னின்னா
தேனெய் புளிப்பிற் சுவையின்னா வாங்கின்னா
கான்யா றிடையிட்ட வூர்.

23. It is unpleasant to see kings without elephants; it is unpleasant to feed oneself with meat; it is unpleasant if ghee and honey turn sour; unpleasant to live in a village enclosed by a forest river.

உச. சிறையில்லா மூதூரின் வாயில்காப் பின்னா
துறையிருந் தாடை கழுவுத லின்னா
அறைபறை யன்னவர் சொல்லின்னா வின்னா
நிறையில்லான் கொண்ட தவம்.

24. It is unpleasant to mount guard over an unprotected old city; unpleasant to wash clothes on the banks of tanks; unpleasant too the voice of those who talk loud like a drum and unpleasant the penance of one who has no self-control.

உரு. ஏமமில் மூதூ ரிருத்தன் மிகவின்னா
தீமை யுடையா ரயலிருத்த னன்கின்னா
காம முதிரி னுயிர்க்கின்னா வாங்கின்னா
யாமென் பவரோடு நட்பு.

25. It is unpleasant to live in an unprotected old city; it is unpleasant to live in the neighbourhood of the wicked; excess of passion is prejudicial to the soul's safety; likewise it is unpleasant to be friend the conceited

உ௬. நட்டா ரிடுக்கண்கள் காண்ட லினியின்னா
ஒட்டார் பெருமிதங் காண்டல் பெரிதின்னா
கட்டில்லா மூதா ருறையின்னா வாங்கின்னா
நட்ட கவற்றினாற் சூது.

26. It is unpleasant to behold the sorrows of friends; it is unpleasant to see the pride of the enemy; it is unpleasant to live in an old town which lacks unity; most unpleasant is gambling.

உ௭. பெரியாரோ டியாத்த தொடர்விடுத லின்னா
அரியவை செய்து மெனவுரைத்த லின்னா
பரியார்க்குத் தாமுற்ற கூற்றின்னா வின்னா
பெரியார்க்குத் தீய செயல்.

27. It is unpleasant to give up the association with the good and the great; to promise merely to do great things is unpleasant; it is unpleasant to tell one's woes to those who are not friendly; most unpleasant to do harm to the great.

உ௮. பெருமை யுடையாரைப் பீடழித்த லின்னா
கிழமை யுடையார்க் களைந்திடுத லின்னா
வளமை யிலாளர் வனப்பின்னா வின்னா
இளமையுண் மூப்புப் புகல்.

28. It is unpleasant to make the dignified lose their dignity; it is unpleasant to disown those who have a claim upon one; the beauty of the ungracious is unpleasant; most unpleasant is premature old age.

உ௯. கல்லாதா னூருங் கலிமாப் பரிப்பின்னா
வல்லாதான் சொல்லு முரையின் பயனின்னா
இல்லார்வாய்ச் சொல்லி னயமின்னா வாங்கின்னா
கல்லாதான் கோட்டி கொளல்.

29. It is unpleasant for a horse to be ridden by one ignorant of horsemanship; the words of one who has not studied his subject are unpleasant; unpleasant is the use of fine language by the needy; unpleasant it is for an illiterate man to go into the assembly of the learned.

௩௰. குறியறியான் மாநாக மாட்டுவித்த லின்னா
தறியறியா னீரின்கட் பாய்ந்தாட லின்னா
அறிவறியா மக்கட் பெறலின்னா வின்னா
செறிவிலான் கேட்ட மறை.

30. It is unpleasant for a man not versed in the art, to make a big snake dance; it is unpleasant for one not adept in swimming to jump into and play in water; it is unpleasant to beget stupid children; unpleasaut and painful to tell secrets to one who has no secrecy. (தொடரும்)

---

*ஆலகசாலி என்னும் அராபியப் பெரியாருடைய

# தத்துவ ஞானக் கொள்கைகள்

[இராவ்சாகிப் V. P. சுப்பிரமணிய முதலியார் அவர்கள்.]

ஆலகசாலி என்பவர் கி. பி. 1058-ஆம் ஆண்டு பிறந்தவர். (அவர் ஞானம் அடைந்ததைப்பற்றி) அவரே கூறுவதை நாம் கேட்போமாக. அவர் குழந்தைப் பருவத்திலே தாம் கொண்டிருந்த எண்ணங்களை விட்டு விலகுவதற்குச் செய்த முயற்சிகளைப்பற்றிப் பின்வருமாறு விளக்கிக் கூறுகிறார்:—

"நான் என்னுள்ளே சொல்லிக்கொண்டதாவது:—பொருள்களின் உண்மையறிவதே எனது நோக்கம்; ஆகையால், அறிவு இன்னதென்று உறுதிப்படுத்துவது எனக்கு இன்றியமையாததாக விருக்கிறது. தெரியவேண்டிய பொருளைப்பற்றியுள்ள ஐயப்பாடுகள் முழுவதும் நீங்கும்படி ஓர்ந்துணர்ந்து, அதனால் பின் எக்காலத்தும் அப்பொருளைப்பற்றி எவ்வகைத் தப்பெண்ணமாயினும், மாறுபட்ட கருத்தாயினும் உண்டாகாதிருப்பதே உறுதியான உண்மை யறிவு என்பது தெளிவாயிற்று. நாம், அவ்வாறு அறியும் அறிவின் உறுதியானது, நமது உணரும் ஆற்றல்களின் முயற்சி எதுமின்றியே நமது மனத்தில் திடனுறுகின்றது; அன்றியும் தவறு வாராது காக்கும் முறைகளுக்கும் அறிவுக்கும் இயல்பாக உள்ள நெருங்கிய தொடர்பினால், அவ்வறிவு

* Translated from Draper's Intellectual Development of Europe.

பொய்யானதென்று காட்டும்படி எளிதிற் புலப்படும் சான்று எதாயினும் கொண்டுவரப்பட்டாலும், அது யாதொரு ஐயத்தை யும் உண்டாக்கமாட்டாது. ஏனெனில், அவ்வறிவு தப்பாயிருக் குமோ என்று யாதொரு ஐயமும் நிகழ்வது கூடாமையா யிருக் கிறது. பத்து, மூன்றுக் கதிகமென்று நான் ஒத்துக்கொண் டிருக்கும்போது, 'அப்படியல்ல, மூன்று பத்தினு மதிகம், நான் சொல்வதை மெய்ப்பிப்பதற்கு இதோ என் கையிலிருக்கும் கைத் தடியைப் பாம்பாக்குகின்றேன்' என்று ஒருவன் சொல்லி அப்ப டியே மாற்றினுலும் அவனுடைய பிழையைப்பற்றிய, என்னு டைய உறுதியான எண்ணம் சிறிதும் மாறுபடமாட்டாது. அவ னுடைய ஆற்றல் என்னுடைய மனத்தில் வியப்பை விளைக்குமே யன்றி என்னுடைய அறிவைப்பற்றி ஐயங்கொள்ள இடந்தராது.

"இவ்வித உறுதிப்பாட்டுடன் இல்லாத அறிவு என் மனத்தில் நம்பிக்கையும் உறுதிப்பாடும் உண்டாக்கத்தக்க வலிமை யில்லாத தென்றும், உறுதிப்பாடில்லாத அறிவு அறிவென்னும் பெயரை வகித்தற்கே தகுதியற்றதென்றும் உறுதிகொண்டேன்.

"யானறியாத அறிவுகளின் தன்மைகளைத் தனித்தனி ஆராய்ந்ததில், புலன்கள் மூலமாக அறியும் அறிவையும் (மூன்றி லும் பத்ததிகம் போன்ற)மறுக்கக் கூடாத மூலதத்துவங்களையும் தவிர, அவ்வறிவுகளெல்லாம் இப்போது கூறிய (உறுதிப்பாடான) தன்மைகளில்லாதவைகளென்று காணப்பட்டன. அப்பால் யான் என்னுள்ளே சொல்லிக்கொண்டதாவது: இந்த நம்பிக்கையின்மை யில் அமிழ்ந்ததனுல், மறுக்கக்கூடாத உறுதியான அறிவையடை வதற்குப் புலனுணர்ச்சியையும் விலக்க வொண்ணுத தப்பாத உண்மைகளையும் அடிப்படையாகத் தழுவுவதைத்தவிர வேறு நம்பிக்கையில்லை. அவைகளின் தன்மைகள் ஐயுறக் கூடாதன வென்று தோன்றியது. ஆயினும் புலனுணர்ச்சியினுலும் ஆராய்ச் சியினுலும் அறியும் பொருள்களில் ஐயத்துக் கிடமிருக்கக் கூடுமோ வென்று ஆராயத் துவங்கினேன். அப்போது ஐயங்கள் ஒன்றன் பின்னென்றாய்த் திரண்டுவந்து என்னுடைய உறுதியின்மையை வலுப்படுத்திவிட்டன (முற்றுவித்து விட்டன). அப்படியானல் புலன்களின் வழியாக அறியும் பொருள்களைப்பற்றி யுண்டாகும் நம்பிக்கைக்கு ஏதுவென்ன? (என்று ஆராயப் புகுந்தேன்.) நம்மு டைய புலன்களெல்லாவற்றிலும் கட்புலன் சிறந்த ஆற்றலுள்ளது.

ஆயினும் ஒரு நிழலைப் பார்த்து அது நிலையானதாகவும் அசைவற்ற தாகவுங் கண்டு, 'அசையுந்தன்மை யில்லையென்று உறுதிப்படுத்து கின்றோம். அப்படி உறுதிபண்ணியும், அந்நிழலிருந்த இடத்தை ஒரு நாழிகை கழித்து வந்து பார்க்கும்போது, அது, விரைவாக மறையாமல் படிப்படியாகவும் சிறிது சிறிதாகவும், எக்காலும் நிலை கொள்ளாதவண்ணமாக மறையும் இயல்புடையதாதலால் இருந்த இடத்தினின்றும் எடுபட்டுப் போகிறதென்று பழக்கத்தால் அறி கிறோம். விண்மீன்களைப் பார்ப்போமானால், அவைகள் சிறுநாண யங்கள் போலத் தோன்றுகின்றன; ஆனால் கணிதநூல் அவைகள் நிலவுலகினும் பெரியவைகளென்று நமக்குச் சான்று பகர்கின்றன: இப்போது சொல்லியவைகளும் அவைபோன்ற மற்றவைகளும் புலன்களால் உண்மையானவைகளாக உறுதி செய்யப்பட்டா லும் அறிவினால் பொய்யானவைகளென்று தள்ளிவிடப் படுகின் றன. ஆகையால் புலன்கள் வெளியிடும் உண்மைகளில் வைத்த நம்பிக்கை உறுதி யில்லாமற் போனதைக் கண்டு அவைகளைக் கைவிட்டு விட்டேன்.

"இவ்வாறு ஆராய்ந்தபின் என்னுள்ளே சொல்லிக்கொண்ட தாவது:—'மூன்றினும் பத்ததிகம், ஒரே பொருள் படைக்கப் பட்டதாகவும் என்றென்றும் அநாதியாக உள்ளதாகவும் இருத் தல் கூடாது, ஒரு பொருள் ஒரே காலத்தில் உள்ளதாகவும் இல்லாததாகவும் இருத்தல் கூடாமை என்பவை போன்ற மூல தத்துவங்களாகிய அறிவின் கொள்கைகளே யன்றி வேறு உறுதி யான தொன்று மில்லை' யென்பதே.

"இதன்மேல் புலன்கள் பின்வருமாறு மறுமொழி கூறின. 'அறிவின் தன்மையில் உனக்குள்ள நம்பிக்கை எங்கள்மேல் நீ வைத்திருந்த நம்பிக்கையைப் போன்றதன்றென்பதற்கு உனக்கு என்ன சான்று இருக்கிறது? நீ எங்களை நம்பியபோது, அறிவு உன் முன்வந்து தோன்றி எங்களைப் பொய்யாக்கியது; அறிவு தோன்றி யிராவிட்டால், நீ எங்களை விடாது நம்பிக்கொண்டிருப் பாய். நல்லது, அறிவு எங்கள் சான்றைக் கண்டித்தபடியே, (தான் வெளிப்பட்டு வந்தால்) அறிவின் உறுதிப்பாடுகளை மறுக் கக்கூடிய அறிவினு முயர்ந்த வலியுடையோன் இருக்கலாகாதோ? அத்தகையொருவன் வெளிப்படாமையே அவனில்லாமைக்குச் சான்றன்று.

"இத்தடைகளை மறுக்க வீணே முயன்றேன்; முயன்று உறங்குவதைப்பற்றிச் சிந்தனை செய்யப் புகுந்தபோது என்னு டைய மலைவுகள் மிகுந்தன. அதன்மேல் யான் நினைத்ததாவது: உறக்கம் நிகழும்போது நீ காணும் காட்சிகள் உண்மையும் பொருத்தமு முள்ளவைகளாக நீ கருதி (அவ்வுறக்கம் நிகழுமள வும்) அவைகளின் உண்மையைப்பற்றி ஐயப் படுகிறதில்லை. விழித்தபின், அக்காட்சிகள் வெறுந்தோற்றங்களே யன்றி வேறொன்றுமல்ல வென்பது உனக்குத் தெரிய வருகிறது. நீ விழித்திருக்கும்போது உணருகிறவைகளும் அறிகிறவைகளும் ஆகிய எல்லாம் உண்மையாகவே இருக்கின்றன வென்பதற்கு உனக்கு என்ன ஏது விருக்கின்றது? அவ்வுணர்தலும் அறிதலும் நிகழும், அந்நேரத்தில் உள்ள நனவு நிலையில் அவை எல்லாம் உண்மையே; ஆனால் கனவு நிலைக்கு நனவு நிலை எப்படி யிருக்கிறதோ, அப்படியே நனவு நிலைக்கு வேறொரு நிலை இருக்கக்கூடும். இந்த உயர்ந்த நிலையோடு ஒத்துப் பார்க்கில் நனவு நிலை கனவு நிலையே யென்று சொல்லும்படி ஆகிறது."

இவ்வாறு தத்துவ விசாரத்தில் உண்டாகும் ஐயங்களை இந்த அராபியப் பெரியார் கூறி யிருக்கிறதிலும் தெளிவாக எந்த ஐரோப் பிய நூலும் கூறுவதைக் காண்பது கூடாமையானது. உறுதி யாகவே, இந்த வழக்கை இவர் கூறியதிலும், சிறப்பாக மனதில் அழுந்தும்படி கூறுவது கூடாததே. பல தத்துவ நூலாசிரியர்கள் மயங்கக் கூறுவதை நோக்குமிடத்து இவருடைய விளங்கக்கூறல் வியப்பா யிருக்கிறது.

"என்னுடைய நிலைமையைப்பற்றிச் சிந்தனை செய்தபோது இந்த உலகத்தோடு பல்லாயிரங் கட்டுகளாற் பிடிக்கப் பட்டவனா கவும் பல இடங்களினு மிருந்து செய்யப்படும் பலசோதனைகளுக் கும் உட்பட்டவனாகவும் நானிருப்பதாகத் தெரிந்தேன். அதன் மேல் என்னுடைய செயல்களை ஆராயப் புகுந்தேன். அவற்றுள் போதனையும் கல்வி கற்பித்தலும் சிறந்தவைகளா யிருந்தன. அவைகளும், மறுமைக்கு முற்றும் பயனற்ற, முதன்மையில்லாத நூல்களின், தன்மையில் சொல்லப்பட்டனவென்று தெரிந்தேன். கல்வி பயிற்றுவதில் எனக்குள்ள நோக்கத்தைப்பற்றிச் சிந்தனை செய்தபோது, அது ஆண்டவன் கருத்துக்கேற்ற தூய்மையுடைய தன்றென்றறிந்தேன். எனக்குப் பெருமையைத், தேடிக்கொள்ளு

தலுக்காகவே என்னுடைய முயற்சிகளும் யாவும் தூண்டப் பட்டன வென்றும் கண்டேன். ஆகையால், சொத்துக்களைப் பிறர்க்கீந்துவிட்டு பாக்தாது (Bagdad) நகரத்தை நீங்கி ஸிரியாவில் (Syria) தன்னந்தனியாக ஒதுங்கி வாழ்ந்தேன். அங்கு, (உயிரைப் பற்றி ஆராய்ச்சி செய்யப் புகுந்து) தனிமையாக மனத்தோடு போராடி, ஆசைகளை வெல்ல முயன்று மனந் தூய்மை செய்வதி லும் மறுமையை யடைதற்குத் தகுதியாகப் பண்ணுவதிலும் இரண்டு ஆண்டுகள் கழித்தேன்."

இது உண்மையும் ஊக்கமும் உடைய ஒருவருடைய மனப் போராட்டத்தை நன்கு விளக்குகின்றது.

இவ்வித எண்ணங்கள் தோன்றியவர் ஆலகசாலி யொருவர் தான் என்பதில்லை. ஆனால் தம் பயிற்சியை மற்ற யாவரிலும் நன்கு தெரிவிக்கும் சொற்கள் அவருக்குதவின. அவர் என்ன முடிவைக்கண்டு பிடிக்கின்றாரென்றறிவோம். "முதலாவது குழந்தைப் பருவம் (கண் முதலிய புலன்களா லுணரக்கூடியவை களை யுணரும்) புலனுணர்ச்சி யொன்றே நிகழும் பருவம்; எழா வது வயதில் ஆரம்பிக்கும் இரண்டாவது பருவம் (அப்புலனுணர்ச் சியாலறியப் பட்டவைகளைப்) பகுத்தறியும் பருவம்; மூன்றாவது பருவம் இன்னது (பத்து மூன்றுக் கதிகமென்பதுபோல) விலக் கக்கூடாதது இன்னது விலக்கக் கூடியது இன்னது மற்ற எதன் அடிப்படையையும் வேண்டாதது என்று தெரிவதன்றி மனத்துக் கெட்டாத எல்லா உயர்ந்த பொருள்களையும் தெரியும் அறிவு நிகழும் பருவம். பருவங்கள் இம்மட்டோடு நிற்கவில்லை. இப்பருவங்களுக்குப்பின் நான்காவது பருவமொன்றுளது. அதில் (ஞானக் கண்ணாகிய) வேறொருகண் திறக்கப்பட்டு, அதனால் ஒருவன், பகுத்தறிவினா லுணர்ந்தவைகள் புலனறிவுக்குப் பொரு ளாகாதிருந்தது போலவும், அறிவுக்கு எட்டாதவைகளாய் (பொதுவறிவுடையவர்களாகிய) மற்றவர்களுக்கு மறைபட்டி ருக்கிறவைகளாயுள்ள வருங்காலத்து நிகழும் யாவற்றையும், அறிகிறான். இதுவே 'முக்காலமுங்காணும் வலிமை.' இவ் வாறு, ஆலகசாலி (நம்முடைய ஆயுள் காலத்தில் செய்துவர வேண்டிய) வாழ்க்கை நெறிகளுக்குத் தத்துவ நூல் வழி எது கண்டு பிடித்து, மதத்தையும் தத்துவநூலையும் (ஒன்றுக் கொன்று

பொதுவாகத் தோன்றுகிறபடி, மாறுபட்டனவல்ல வென்று காட்டி) ஒற்றுமைப் படுத்துகிறார்.

---

# அருஞ்செய்யுட் பொருட்பகுதி

[சிரபுரம் கனகசபாபதிப் பிள்ளை அவர்கள்.]

## வெறிவிலக்கு (தோழிகூற்று)

இம்மை யறையனைய வேசூர மாதருமா
இம்மையுமை யிம்மையையோ என்செய்த—தம்மைமதன்
மாமாமா மாமாமா மாமாமா மாமாமா
மாமாமா மாமாமா மா.

—இராமலிங்க அடிகள்.

இச்செய்யுள் தங்கள் குமரிக்குச் சங்காதோஷம் பிடித்திருக்கின்றதெனத் தவறி யுணர்ந்து பிடாரிக்குப் பலியிடவேண்டுமென்று பெற்றோர்கள் கருதியபோது தோழி உண்மையைத் தெரிவிக்கிற கூற்று.

பதவுரை

1. இம்மையல் - இந்த மயக்கங்கொண்ட, தையல் - பெண், நைய - (காம வேதனையினால்) வருந்த, சூர் - ஒரு பெண்தெய்வம் (துர்த்தேவதை), தருமா - சுகந்தருமா? (தராது என்றபடி); 2. இம் - இந்த, மை - ஆட்டுக்கிடாவானது, உமை - உங்களை, இம்மை - இப்போது (இவ்வுலகத்தில்), என்செய்தது - என்ன தீங்கு செய்தது? (நீவிர் பலியிடுவதால்), அம் - அழகிய, மை - இருண்ட, மதன் - மன்மதன்; 3-4. *அஞ்சுமா - பயப்படுவானா? ஆறுமா - சாந்தியடைவானா? எட்டுமா - (உங்கள் பெண்ணை விட்டு) எட்டி விடுவானா; அகன்றுவிடுவானா?

---

*பின்னிரண்டடியில் 'மா' என்னும் எழுத்து 19 தரம் படிக்கப்படுகின்றது. இதை 5+6+8=19 எனப் பிரித்து அஞ்சுமா, ஆறுமா, எட்டுமா என்று ஆக்கப்பட்டது. முதலடியிலுள்ள ஏ, அசை; அமா, ஆச்சரியச் சொல்.

37

# வரலாற்றுப் பகுதி: History & Biography.

## தொல்காப்பியர்

(முகப்புப் படம் பார்க்க)

[வித்வசிகாமணி. ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்கள்]

காப்பியக்குடி யென்பது சிலப்பதிகாரம் முதலிய சங்கம் மருவிய நூல்களுள்ளும் இளம்பூரணர் முதலிய ஆசிரியர் இயற்றிய உரைகளுள்ளும் காணப்படுமோர் பழம்பதி; பழைய புகார் நகரத்திற்கு ஏறக்குறைய ஒரு காவத தூரத்தில் அஃது இருத்தல் வேண்டும் என்பதைச் சங்கநூல்களால் அறியலாம். அந்நூல்களால் இக்காப்பியக்குடி தெய்வத்தன்மை பொருந்தியது என்று எத்திக் கூறப்படுகின்றது. சீகாழி தாலூகா அரசூர் (S. I. R.) வட்டம் மதுராவைச்சேர்ந்த பிடாகையாய் யிருப்பது இந்தக் காப்பியக்குடி. இந்தப் பிடாகையின் நத்தமும் நன்செய் புன்செய் நிலங்களும் பண்டைக் கோவிலும் அதைச் சேர்ந்த திருக்குளம் முதலியனவும், காழிப் பெருநிலக்கிழவர் திரு. கி. சிதம்பரநாத முதலியார் அவர்கட்குச் சொந்தமானவை. இப்பழைய கோவில் தற்போது பாழாகி இருந்த இடம் தெரியாம லிருக்கின்றதாயினும் இதன்கண் மூன்று சிவலிங்கங்கள இன்றும் காணப்படுகின்றன. இக்கோவிலைப் புதுப்பிக்க திரு. முதலியார் அவர்கள் நோக்கங் கொண்டிருப்பது பெரிதும் போற்றற் குரியதாம்.

இற்றைக்கு ஐம்பது ஆண்டுகட்குமுன் இத்தலத்தைத் தரிசிக்க எண்ணங்கொண்டு, சிலர் அங்குச் சென்றிருக்கையில், அவ்வாலயத்திற்கு மேற்றிசையில், எக்கல் முதலியார் குடும்பத்தினரான வயது முதிர்ந்த அண்ணியார் ஒருவர் அக்கோவிலைப்பற்றிய இரண்டொரு சிறப்பியல்புகளை அவர்களுக்குத் தெரிவித்தனர். அக்கோவிலின் தென்புறத்தில் இப்போதுள்ள சிவலிங்கத்தின் பக்கலில் முகப்புப் படத்திற்கண்ட திருவுருவின் கற்சிலை யிருந்தது. இச்சிலை சின்ன முனிவர் என்றும், இவர்தம் குருவாகிய பெரிய முனிவர் சிகாழியில் இருக்கிறார் என்றும், இந்தச் சின்ன முனிவர் பெரிய முனிவரின் மனைவியாரை அழைத்து வருங்காலத்துக் குருவின் ஆணையை மீறி ஒரு கோலைப்பற்றச் செய்து அழைத்து வந்தபடியால் பெரிய முனிவரின் ஆணையால் இங்கேயே (காப்பியக்குடியிலேயே) தடைபட்டு நின்று இப்பழைய ஆச்சிரமத்தில் சிவலிங்கத்தைத் தாபித்துப் பூசித்து வருகின்றார் என்றும் அவ்வண்ணியார் கூறினார்கள். இக் கூற்றை ஆராய்ந்தால் இந்தச் சிறுமுனியே

திரணபிந்து என்னும் தொல்காப்பியனுர் என்றும், பெருமுனிவர் அகத்தியர் என்றும், அன்னியார் கூறிய வராலாறு ஆக்கிநேயம் முதலிய புராணங்களிலும், நச்சினர்க்கினியர் உரையிலும் கண்ட வரலாற்றுடன் ஒத்து நடப்பதொன்றென்று விளங்குமன்ருே?

சோழநாட்டில் கொள்ளிடநதி முதல் அரிசிலாறு வரையில் உள்ள கீழ்ப்பக்கத்துப் பெரு வெளிகளில் எங்கு நோக்கினும் வைதிக முனிவர் திருவுருவங்களும், பௌத்தசமண முனிவர்களின் திருப்பள்ளிகளும் எண்ணிறந்தவை காணப்படுகின்றன. இந்நாட்டில் இவ்வைதிக முனிவர் வைதிக சமயங்களேயும், பௌத்த சமண முனிவர் அவ்வச் சமயங்களேயும் நிறுவியவர்கள் ஆவார்கள். இந்நாட்டுச் சைவத்திருக்கோயிற் புராணங்களே நோக்குங்கால் அவர்கள் அகத்தியர், துருவசு, ததீசி, கண்ணுவர், பார்க்கவர், திரணபிந்து, காச்யபர் முதலியோர் ஆவார். காச்யபர் என்றவர் வைதிக முனிவர். பார்க்கவர் என்பவரும் அன்னரே. அவர் குடியிற் பிறந்தவர் வாழ்ந்த இடமே காப்பியக்குடி. மற்ருெரு காச்யபர் பௌத்த மதாசாரியர். இவர் தெளிச்சேரி, பொன்பற்றி முதலிய இடங்களில் வாழ்ந்து காச்யபக் குடியில் (காசாக்குடி) பெரிய மடங்களே அமைத்திருந்தார். அம்மடங்கள் வீரசோழன் காலம் வரையில் இருந்து பின்னர்ச் சைவாதீனத்திற்குட்பட்டு, இப்பொழுது க்ஷீணதசையில் இருக்கின்றன. ஜமதக்கினி, ரேணுகை இவர்பால் தோன்றின ஜாமதங்கிகளாகிய தன்னுவர், அநுமர், விச்சுவாவசு, பரசுராமர், திரணபிந்து என்பாரும், பிருகுவிற்கும் கியாதிக்கும் பிறந்த பார்க்கவி (லக்ஷ்மி) பார்க்கவர் (காவ்ய கோத்திரத்தார்) என்பாரும் இப்பதிகளில் சிறப்புற்றிருந்தனர் என்பதற்குப் பல புராணவரலாறுகள் உள. காழித் திருப்பிரமபுரக் கோவிலில் நின்ற திருக்கோலமாக, பெரிய திருவுருவத்தோடு சிறு முனிவரான திரண தூமாக்நியான தொல்காப்பியருங் காணப்பட்டனர். இவர் திருமேனிகளுள் மேற்காட்டிய தொல்காப்பியர் திருவுருவமும் சீகாழியில் சண்பைப்பதியில் (அதாவது திருஞான சம்பந்தராலயத்தில்) அமைக்கப்பட்டிருந்த கிருட்டினர் சிலேயும் மங்கையர்க்கரசியார் திருவுருவமும் சாஸனங்கள், புராணங்கள், ஐதிகங்கள் வாயிலாக இப்போது காணப்படுகின்றனவேயன்றி சிலேயுருவங்களாக மறைந்திருக்கின்றன. பெருந் திருவினராய சைவமடாதிபதிகளும், சீகாழி முதலியார் அவர்களும், கடக்கை விநாயகநல்லூர்ப் பிள்ளேயவர்களும், பிறரும் நன்முயற்சி செய்து, இப்பழைய ஆலயங்களேயும், இவற்றிற்குரிய திருவுருவச் சிலேகளேயும் புதுப்பித்துத் திருமயிலாடி, வைணவபுரி, காப்பியக்குடி, திருச்சிற்றம்பலம் முதலிய திருத்தலங்களின் மான்மியங்களேயும் வெளியிட்டருள்வார்களாக.

---

## சென்னை மாகாணத் தமிழர் மாநாடு

### அறிக்கை 1.

நிகழும் 1934 மார்ச்மீக் கடைசியில் வரும் ஈஸ்டர் விடு முறையில் சென்னை மாகாணத் தமிழர் மாநாடொன்று திருநெல் வேலியில் கூட்டப்பெறும்.

மாநாட்டுத்தலைவர். தமிழ்ப் புரவலர் திருவாளர் த. வே. உமா மகேசுவரம்பிள்ளையவர்கள் B. A., B. L., தஞ்சை.

வரவேற்புத் தலைவர் : திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், M.A.,M.L. தாகூர் சட்டப் பேராசிரியர்.

வரவேற்புத் துணைத்தலைவர்கள்: மறைத்திருவாளர் சாமி. விருதை. சிவஞானயோகி யவர்கள், தமிழ்ப் பிரமசூத்திர ஆசிரியர்.
திரு. M. S. பூரணலிங்கம் பிள்ளையவர்கள் B. A., L. T.

அமைச்சர்கள் : திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்கள்.
வித்வான். திரு. பு. சி. புன்னைவனநாத முதலியவர் அவர்கள்.

பொருளாளர்கள் : திரு. தி. மு. சங்கரலிங்கம் பிள்ளையவர்கள் B. A.
திரு. காருடை. சு. சூரியமூர்த்திப்பிள்ளையவர்கள்.

உறுப்பினர் : திரு. மா. வே. நெல்லையப்பப் பிள்ளையவர்கள் B. A. திரு. தி. சு. வள்ளிநாயகம் பிள்ளையவர்கள் B.A., திரு. முருகப் பிள்ளையவர்கள், திரு. அ. முத்தையபிள்ளையவர்கள் B A.,B.L. திரு. வள்ளல். சோ. சிவஞானதேசிகரவர்கள்.

மாநாட்டின் நோக்கம் : "சென்னை மாகாணத் தமிழர் சங்கம்" ஒன்று நிலைபெறச்செய்து அதன் வாயிலாக 1. நூல்களும் மொழி பெயர்ப்புக்களும் தனித்தமிழில் வெளிவருமாறு செய்வதும், 2. அடிக்கடி தமிழர் மாநாடுகள், தமிழ்ப் புலவர் மாநாடுகள் கூட்டித் தமிழ்மக்களிடை அறிவும் அன்பும் ஒற்று மையும் மல்கச் செய்வதும் ஆகும்.

தமிழ்ப் பெருமக்களனைவரும் வேண்டும் துணைபுரிந்து மாநாட்டைச் சிறப்பாக நடத்தித் தரும்படி வேண்டுகிறோம்.

இ. மு. சுப்பிரமணியபிள்ளை,
மாநாட்டு அமைச்சர்.

திருநெல்வேலி வசந்த மண்டபத்தில் 7-1-1934 மாலை 4 மணிக்கு, ஓய்வுபெற்ற தாசில்தார் திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை யவர்கள் B. A., தலைமையில் கூடிய தமிழர் பொதுக் கூட் டத்தில் நிறைவேறிய முடிபுகள் (Resolutions):—

சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் சென்ற 1933 டிசம்பர் 23, 24-ம் நாட்களில் கூடிய தமிழன்பர் மாநாட்டில் நிறைவேறிய முடிபுகள் வாசிக்கலாயின :—

க. "புதிய அறிவு நூல்கள் (நவீன சாஸ்திர நூல்கள்) தமிழில் எழுதப்பட்டுப் பள்ளிக்கூடங்களில் தமிழிலேயே கற்பிக்கப்படவேண்டு மென்று இம்மா (மகா) நாடு கருதுகின்றது.

உ. "பழந்தமிழ் நூல்கள் தகுந்த ஆர்வத்துடன் (சிரத்தையுடன்) படிக்கப்பட வேண்டுமென்றும், அதில் ஊக்கும் ஏற்பாடுகளைச் செய்யவேண்டு மென்றும் இம்மா (மகா) நாடு தீர்மானிக்கிறது."

ங. "இக்கால (தற்கால)ப் பள்ளிச்சிறுர்களுக்கு ஏற்றமுறையில் பழந்தமிழ் நூல்களைத் தொகுத்தும் திரட்டியும் வெளியிட வேண்டுமென இம்மா (மகா) நாடு தீர்மானிக்கிறது."

ச. "தமிழில் பல்பொருள் விளக்க நூல் ஒன்று அமைக்க (தயாரிக்க) வேண்டுமென்று இம்மா (மகா) நாடு தீர்மானிக்கிறது."

ரு. "தமிழ் உயர்தனிச் சிறப்புடைய தென்பதை உணரும்படி செய்வதற்கான முயற்சிகளைக் கையாள வேண்டு மென்றும், அரசியலார் (சர்க்கார்) தமிழ் மொழிக்கு (பாஷைக்கு) முதன்மை (பிராதான்யம்) அளிக்கவேண்டு மென்றும், தமிழாசிரியர்களை மற்ற ஆசிரியர்களின் நிலைமையில் (அந்தஸ்தில்) வைக்கவேண்டு மென்றும் இம்மா (மகா) நாடு தீர்மானிக்கிறது."

சூ. S. S. L. C. வகுப்பு வரையிலாவது எல்லாப் பாடங்களையும் (ஆங்கிலத்தைத் தவிர்த்து) கட்டாயமாகவே தமிழில் கற்றுக் கொடுத்துத் தேர்வு செய்ய (பரீட்சிக்க) வேண்டு மென்று இம்மா (மகா) நாடு தீர்மானிக்கிறது."

மேலேகண்ட க, உ. ங, ச, ரு, சூ ஆகிய ஆறு முடிபுகளையும் இப்போதுக் கூட்டம் ஒப்புக்கொள்கிறது."

எ. "தமிழில் தக்க சொற்கள் (பதங்கள்) இல்லாத இடத்து வழக்கத்திலுள்ள சொற்களை (பதங்களை)ப் பயன் படுத்தல் ஏற்றதென்று (உபயோகித்தல் உசித மென்று) இம்மா (மகா) நாடு தீர்மானிக்கிறது."

இப்பேரவை இம் முடிபை மறுத்து அடியில் வருமாறு முடிவு செய்கிறது.

"மேலை நாட்டு அறிவு நூல்களைத் தமிழில் மொழி பெயர்க்குமிடத்து உரிய சொற்களைச் சங்கநூல் சித்தர்நூல் முதலிய பழந்தமிழ் நூலாராய்ச்சி வாயிலாகத் திரட்டியும், தமிழ்ப் பகுதிகளை அடிப்படையாகக் கொண்டு சொற்களை ஆக்கியும் தமிழ்ச் சொற்றொகுதியை வளம்படுத்த வேண்டும்."

அ. "தமிழ் நெடுங்கணக்கிலுள்ள 216 எழுத்துக்களில் பல எழுத்துக்கள் பயனற்றவை (உபயோக மற்றவை)யாயும், அச்சுக் கோப்பவர்களுக்கு வீண் சிரமத்தை உண்டுபண்ணுகின்றவையாயும் இருக்கின்றன. மேலும் சில ஒலி (சப்தங்)களுக்குச் சரியான எழுத்துக்களும் இல்லை. ஆதலால், வேண்டாத எழுத்துக்களை நீக்கி வேண்டிய எழுத்துக்களைச் சேர்க்க வேண்டுமென இம்மா (மகா) நாடு தீர்மானிக்கிறது" என்ற தீர்மானத்தை இப்பேரவை மறுக்கின்றது.

"தமிழ் நெடுங்கணக்கிலுள்ள 256 (216 அல்ல) எழுத்துக்களும் பயனுடையனவே என்றும், ஒலிநூன் முறைப்படி எல்லா எழுத்தொலிகளையும் தமிழெழுத்துக்களினுதவியைக்கொண்டே எழுதுதல் கூடுமாதலால் பிறமொழிகளினின்றும் எழுத்துக்களை எடுத்து வழங்குதல் மிகையும் பொருத்தமின்மையும் ஆகுமென்றும் இப்பேரவை முடிவு செய்கிறது."

---

## செய்திகளும் குறிப்புகளும் (News and Notes)

இத்திங்கள் கூடிய சென்னை சட்டசபையில், தற்போது இம் மர்காணம் இருந்துவருங் கையறுநிலையை நோக்கி, குடிகளின் நிலங்களுக்கு விதிக்கப்பட்டுள்ள நிலவரி நீர்வரி முதலியவைகளில் காற்பங்கு குறைத்து விடவேண்டுமென்று கொண்டுவரப்பட்ட முடிவு பெரும்பான்மையான அங்கத்தினர்களால் ஒத்துக் கொள்ளப்பட்டு நிறைவேறிற்று. ஒத்துக்கொண்டவர்களின் தொகை 59; எதிர்த்தவர்களின் தொகை 21. இம்முடிபை அரசாங்கத்தாரும் ஒத்துக் கொண்டு ஏற்றது புரிவார்களென நம்புகிறோம்.

* * *

1934-ம் ஆண்டு தொடங்கும் பொழுதே கண்ணீருங் கம்பலை யுமாகத் தொடங்குமென்று எவரும் எதிர்பார்த்திருக்க முடியாது. மக்கள் சீறினும் வேந்தர் சீறினும் தடுத்தோ, ஒதுங்கியோ தப்ப லாம்; தெய்வமே சீறின் நமக்கு ஆந்துணையு முண்டோ? இவ் வுண்மையைப் புலப்படுத்தக் கருதியே போலும் நிலப் பேரதிர்ச் சியால் பீஹார் மாகாணத்திலுள்ள முஸாபர்புரி, பாடலிபுரம், மாங்கீர், நேபாளத்திலுள்ள காட்மாண்டு முதலிய இடங்கள் பெரும் பாழுற்றன. பொருளிழப்பும், உயிரிழப்பும் அளவுவரை யற்று நேர்ந்துள்ளன. அவ்வூர்களின் இரங்கத்தக்க நிலையைச் செய்தித்தாள்கள் வாயிலாகப் படிப்பதே ஆருத்துயரையளிக் குமெனின் மிகைபடக் கூறல் வேண்டுமோ! இக்கருணத்தில், கடவுளருளால் அத்தகையதோர் நிலவதிர்ச்சியினின்றும் தப்பிய நந்நாட்டவர் தத்தம்மாலியன்ற பொருளுதவி செய்து தமிழ்நாட் டின் கொடைத்திறனை உலகம் புகழுமாறு விளக்குவர் என எதிர் பார்க்கிறோம்.

* * *

முக்கட் செல்வனின் அருள் பெற்றிலகும் நம் இந்தியாவிற்கு மூன்று கண்களாக விளங்குவது, பம்பாய், வங்கம், சென்னை ஆகிய மூன்று தலை மாகாணங்களேயாம். அத்தகைய தலைமை மாகாணங்களின் அரசாங்கத் தலைவர்கள் இதுகாறும் வெள் ளையர்களாகவே இருந்துவந்துள்ளனர். அவ்வாறிருக்க, நம் சென்னை மாகாணத்தின் தலைவர் பதவிக்கு, விரைவில், அரசாங்க உள்நாட்டு உறுப்பினராயிருக்கும் இந்நாட்டவராகிய ஸர் முகம் மது உஸ்மான் சாயபு அவர்கள் உயர்த்தப் படுவார்களென்று அறிந்து கழிபேருவகை யெய்துகின்றோம். அப் பெரியார் தலைவ ராக இருக்கப் போவது தற்போது அறிவிக்கப்பட்டுள்ளபடி சில திங்கள்களேயாயினும் அச்சிறுபோதிலும் தமிழ்நாட்டின் பெருமை சிறந்து விளங்குமாறு இறைவன் அருள்புரிவானாக.

* * *

சென்னையிற் கூடிய தமிழன்பர் மகாநாட்டினால் தமிழ் நாட் டில் தமிழ்மொழியின்மாட்டுப் புதியதோர் பரிவு உண்டாகியுள்ள தென்றும் அப்பரிவு வீண்போகாவாறு அதைப் பயன் படுத்திக் கொள்ளத் தமிழ்மக்கள் முன்வரவேண்டுமென்றும் சென்ற இதழிற்

குறித்திருந்தோம். அதற்கேற்ப இன்னும் இரண்டு திங்கள் களுக்குள் திருநெல்வேலியில் ஒரு பெரிய தமிழர் மாநாடு கூடுவ தற்கான முயற்சிகள் தக்கோரால் எடுக்கப்பட்டு வருகின்றன வென்பதை உவகையுடன் தெரிவித்துக் கொள்கிறோம். அம்மா நாட்டைக் குறித்த அறிக்கைகளை முன்னர்க் காணலாம். தமிழ் மொழிப்பற்றுடைய யாவரும் அம்மாநாட்டுக்கு ஒருங்கு திரண்டு சென்று கலந்துகொள்ளக் கோருகிறோம்.

---

தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின் பொன்விழா மிகச் சிறப்பாக 1933ஆ டிசம்பர்மீ 24உ முதல் மூன்று நாட்கள், சைவத் திருவாளர் பண்டிதமணி-மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் தலைமையில் நடை பெற்றது. முதல் நாள் மாலை 3-மணிக்குத் திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் பேரவையைத் திறந்து வைத்தார்கள். பின்னர்த் தலைவர் நியமனமும் வரவேற்பும் நடைபெற்றன. பிறகு தலைவரவர்கள் தமது தலைமையுரையை இலக்கியச் சுவை நிரம்பி வழியுமாறு நிகழ்த்தினார் கள். பிறகு திருவாளர்கள் அ. வரதநஞ்சைய பிள்ளை, மாணிக்கவாசக சரோஜனியம்மையார், C. K. சுப்பிரமணிய முதலியார், கே. ஆறுமுகம் பிள்ளை ஆகிய பேரறிஞர்கள் முறையே, பதியும் பசுவும், பெண்களும் சமயக் கல்வியும், ஆளுடைய பிள்ளையார் அருண்மொழிகள், கடவுள் ஒருவரே என்பனபற்றி அரிய விரிவுரைகள் நிகழ்த்தினார்கள்.

இரண்டாம் நாள் காலை திரு. மா. கிருஷ்ணபிள்ளையவர்கள் பெண் பாடசாலை மாணவிகள், மாமனாக வந்து வழக்குரைத்த திருவிளையாடலை நடித்தார்கள். மாலையில் திருவாளர்கள் C. K. சுப்பிரமணிய முதலியர், வ. மு. இரத்தினேசுவரையர், ம. பாலசுப்பிரமணிய முதலியார், மு. அருணா சலம் பிள்ளை, அ. வரதநஞ்சைய பிள்ளை, கே. ஆறுமுகம் பிள்ளை ஆகிய பேரறிஞர்கள், முறையே திருக்கோவையர், ஐந்தொழில் நடனம், சிவகதி விளைவு என்பன பற்றி அரிய விரிவுரைகள் நிகழ்த்தினார்கள்.

மூன்றாம் நாள் காலையில் திருவாளர் மா. வே. நெல்லையப்ப பிள்ளை யவர்கள் சித்தாந்த சாத்திரம் பயிலுங்கால் மாணவர்கட்குத் தோன்றும் ஐயங்களை விளக்கித் தெளிவித்தார்கள். மாலையில் திருவளர் செல்வி மாணிக்க வாசக சரோஜனியம்மையார் தலைமையில் சைவ மங்கையர் மகாநாடும், திரு. தி. கு. கி. நாராயணசாமி நாயடு அவர்கள் தலைமையில் சைவ இளைஞர் மகாநாடும் கூடின. பல சொற்பொழிவுகளும் தீர்மானங்களும் நிறை வேறின. இரவு பத்துமணிக்குமேல் உயர்திரு-சுந்தர ஓதுவா மூர்த்தி களால் "புனிதவதியார்" என்பதுபற்றிய காலக்ஷேபம் அழகாக நடந்தது. இச்சபையினர் "சித்தாந்தப் பொன்மலர்" என்றொரு அழகிய நூலையும் வெளியிட்டார்கள். (சித்தாந்தம்)

---

உ

திருச்சிற்றம்பலம்

# சைவசித்தாந்தசாரம்

## (சித்தாந்த நிச்சயம்)

### துதி

மதிமாநதி மாசுண மாமலர் பூக்த வேணிப்
பதிமாதுட னுடக மார்க்கொளிர் பைம்பொன் மன்றை
கதிமாதவ மேதக வாற்பெறு கார ணத்தியாங்
துதிமாமல ராயின தூய்த்தினஞ் சூழ்து மன்றே. 1.

வாயார வழுத்தி மனத்துறநேர் வைத்தார்வ முறக்கர முச்சிகுவித்
தோயாது வலம்புரி தும்புலியூ ருடையானொரு பாக முவந்தெவையு
மாயாவையு மாக்கி யளித்துயிர்கட் கறிவாகியடைந்தவர் கட்குமிகுந்
தாயாயரு ளுஞ்சிவ காமசவுந் தரியாயி தளிர்ச்சர ணத்துணையே. 2.

மெய்யரார் வத்தகல் விலாது போற்றநின்
றையமா ரிழையொடா டம்ப லத்துறை
செய்யமா கரிமுகச் செல்வப் பிள்ளைதன்
றுய்யதா டுதித்துநந் துயர்தொ லைத்துமே. 3.

கொடித்துதைய முடுக்கிரத மொடித்தெதிரு மடுக்கறாள்
படுத்துததி குடித்தசுரை முடித்தபுகர் வடித்தவேல்
பிடித்துலகு நொடிக்குள்வா நடிக்குமயில் விடுக்கும்வேள்
கடித்துவித வடிக்குளுள மடுத்துவினை பொடித்துமே. 4.

ஆசிதமே யறுத்தருளோ டடைநெறியி தவநெறியோர்
பேசிகல்நின் னுருவலனிற் பெற்றிமையி னுனதுமல
மோசிகனு மெனத்தனதாள் முடிமிசைவைத் தெனையாண்ட
தேசிகனுங் குடவாயிற் சிவப்பிரகா சனைப்பணிவாம். 5.

பரம்பா னருளா னந்தி பகவனுக் களித்த ஞான
வரம்பா வுறமெய் கண்ட வானவன் வழியோ ரோது
முரம்பெறு பதியி னேடின் புறுபசு பாசத் துண்மை
திரம்பெற வுரைப்பாஞ் சைவ சித்தாந்தசார மென்றே. 6.

நூல்

பதியும் பசுவும் பாசமுமாய் பன்னும் பலவே தாகமத்தின்
விதியுந் தேரிற் பதியொன்றே வேறும் பசுக்க ளனந்தமவை
பொதியும் பாச மைந்தாகப் புகலு மவையென் போலெனின்விண்
கதிருந் தெரிகண் களுமிருளுங் காய மாதி களும்போலும். 7.

இதனிற் பதியாம் பரனேயெங் கெங்கு மாகி யிறுதிநடு
முதலற் றனுதி யேநித்த முத்த சுத்த சித்துருவாய்
விதமுற் றுளபல் லுயிர்க்குயிராய் மேவி யகலா தொளிர்தனசத்
திதனைக் கொடுமைந் தொழிலருளாற் செய்யு மென்பர் தெளிந்தோரே. 8.

உயிர்கள் பலவு மூவிதமா யுறுமூன் றவத்தை கேவலத்துச்
செயிர்கொள் மலத்துஞ் சகலத்துச் சேரு மாயா கருவியினும்
பயிலுஞ் சுத்தத் தினிலுறைவன் பதத்துப் பதிந்து கேடின்றி
யயிலு மின்ப மெனவுரைப்ப ரறிவா லுயர்ந்த வறிவோரே. 9.

ஒன்று யனுதி மலமுயிர்க ளுணர்வை மறைக்கு மோரிரண்டாய்
நின்று கழுதற் பல்பொருளாய் நிகழு மாயைத் துக்கசுகந்
துன்று வகித மிதமாகத் தொடருங் கன்மந் திரோதமிவை
குன்று தியற்றி மலநீக்கத் தருளா யான்றுள் கூட்டிடுமே. 10.

இந்தப் பொருண்மூ விதமுமிதன் னியல்பும் வெவ்வே றியம்பவிதின்
முந்தைப் பதிபோ லுயிருலக முழுதும் வியாபித் தறிவாகிப்
பந்தத் தொடுநின் றிடுமென்றே பகர்வ ரென்கொல் சிலரெனினு
மந்தப் பெரும்பா தகருரைக்கீண் டளவையேதென் றறைவோமே. 11.

காண்ட லளவை யினிற்பொருந்தா கருதற் கேலா கறைக்கண்டத்
தாண்ட கடவு ளருள்வேதா கமத்தி னறையா வறநெறியே
பூண்ட வமரர் முனிவரிவை புகலார் பதினென் புராணத்து
மீண்டு முடலுள் ளுயிர்கள்புரத் தெங்கும்நிறைவென் றியம்பாதே. 12.

மூவர் முதலியர் கள்பதிக மொழியி லுளதோ முதிர்மூல
தேவர் திருமந் திரத்துளதோ தெளிவார் திருவா சகத்துளதோ
யேவ ருரையி னுயிர்களுல கெங்கு நிறைவென் றிசைப்பதிது
பாவ ருரையே யல்லாது பரம னடியார் பகாரே. 13.

போக நிலவு புவனிதொறும் புரியட் டகரு பத்தொடும்போய்
ஆக மருவி யலேவுறுபல் லாவி யனைத்து மனுதியிலே

யேக வுருவாம் பரசிவன்போ லெங்கு நிறைவாய் நின்றதெனு
மோக வுரையை யறிவுடையோர் மொழியா ரெவரு மொழியாரே. 14.

ஒன்றே யன்றி யிருபொருளுக் கொத்த பரிபூ ரணமுரைக்கி
னின்றே மலையு மதுவன்றி நிகழ்த்தற் கெளிதோ வதுவன்றி
யன்றே யளவி லுயிர்களெலா மகண்ட தமதா யசைவற்ற
தென்றே யியம்பு மவமதியோர்க் கென்ன மாற்ற மிசைப்போமோ. 15.

உற்ற வினையா லளவுறுப லுடல்க டொறும்புக் குழலுயிர்கண்
முற்று மசைவில் பூரணமாய் முழுது முணரு மெனுமதுநூல்
கற்றிங் குணர்ந்தோ ருரைசெய்யார் கனவு தனிலும் பாசமயப்
பற்றின் புறுவோர் களும்பகரார் பகரா ரிந்தப் படிற்றுரையே. 16.

நானே யெங்கு முளனென்று நவில்வா ரொருவர் நானெங்கு
மானே னென்னின் மிகுமலைவென் றறியா ரன்றி யளவுறுப
லூனே யுயிர்கட் கிடமேதென் றுணரார் யாரு மும்பர்பிரான்
தானே யெங்கு மெனுமுரைக்குந் தவறென் றுணரார் தகவிலரே. 17.

உடுத்த புடைவை தனிலுண்டோ வுவகை மனையாண் மனமக்க
ளடுத்த சுற்றத் தொடுகலந்தொன் றறிந்த துண்டோ வவனிமுதற்
றொடுத்த புவனத் தொருபொருளிற் றோய்ந்த துளதோ துணிவென்னே
வெடுத்த வுடலிற் றமதுயிரை யெங்கும் வியாபிக் கிடுமென்பார். 18.

உவமை யிலதோர் சிவமுளப லுயிர்க ளுளதவ் வுயிர்களுறும்
பவமு முளவீ டுளதெனவே பகர்ந்தோ ருடலினுயி ரினைத்தம்
அவம திகொடெங் கணுநிறைவென் றறைவார் மற்றை யாவிகளுஞ்
சிவமு மெங்கே நின்றதெனிற் செப்ப வறியார் திகைப்பாரே. 19.

உடலொன் றுடனின் றிடுமுயிரு 'மொன்றே பிறிதோ ருடலுயிருட்
படலின் றுயிரோ டுயிர்கலக்கும் பரிசின் றெங்கு மெவற்றினெடுந்
தடையொன் றறநின் றனனிறைவன் றானே யெனும்வே தாகமமும்
திடமென் றுணரா ரணுக்களெலாஞ் சிவன்போல் வியாபித் திடுமென்பார்

பரமாய்ப் பரம சுகமருந்திப் பல்லா ருயிர்நின் றிடினுமொரு
பரமே யன்றிப் பல்பரமாய்ப் பகர்ந்தா ரிலையப் பரன்போல
நரர்மா கருடர் நாகர்முத லனை விதமா முடலுயிர்கள்
திரமா யெங்கும் வியாபகமாய் நிற்கு மென்பார் தெளிவென்னே. 21.

வேறு

மோகம்பல மோக வினைத்தொடர்பான்
முயலுந்தொழி லும்பல வத்தொழிலாற்
போகம்பல போகம தற்கிடமாம்
புவனம்பல வப்புவ னத்திலுறு
மாகம்பல வாகம தற்றுழலு
மணுவும்பல வென்பத றிந்திலாய்
வேகம்பல மிக்குரை செய்வதெனோ
வேறெங்குமு யிர்க்குவி யாபகமே. 22.

அண்டங்க ளடுக்கிய ளப்பரிதா
மாறத்துவ வுற்றவ னுத்தொகையின்
பிண்டங்கொள் பிறப்பொடி றப்புணரார்
பெத்தத்தொடு முத்திபி றித்தறியார்
துண்டஞ்சுவை கண்செவி தொக்கினிடைச்
சுழலுந்திற னுந்துணி யாரவரென்
கொண்டென்று மகண்டித மாகுமெனக்
குறியாதுல கிற்சில கூறுவதே. 23.

ருக்கத்தொடு தூலவு ருத்தெரியார்
தொகுகோசமொ ரைந்துள துந்துணியா
ராக்கப்படு கஞ்சுக மைஞ்சுணரா
ரடைகின்றவ வத்தைக ளைந்தறியார்
போக்குற்றுவி னைப்பய னுண்டுலையும்
புலிவானிரை யத்தியல் புந்தெளியார்
நீக்கற்றுயி ரெங்கும்வி யாபகமாய்
நிற்கும்மென வோதிடு நீசர்களே. 24.

ஊரும்முரு விற்பல வீரிருகா
லுருவிற்பல புள்ளினு ருப்பலநீர்
சாரும்முரு விற்பல தாபரமாய்த்
தங்கும்முரு விற்பல மானிடமாச்
சேரும்முரு விற்பல தேவர்களாய்த்
திகழும்முரு விற்பல செய்வினையா
லாரும்முயி ருற்றன வுந்தெளியா
ரறைவார்கள கண்டித மாமெனவே. 25.

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது

| | | |
|---|---|---|
| சிலம்பு கஉ | மெய்கண்டான் யாண்டு-எகக மாசித் திங்கள் 1934ஹ பிப்ரவரீமூ—மார்ச்சுமூ | பரல் எ |


## திருஞானசம்பந்த அடிகள் தேவாரம்

நன்றுடையானைத் தீயதில்லானை நரைவெள்ளே
றேன்றுடையானை யுமையொருபாக முடையானைச்
சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறவென்னுள்ளங் குளிரும்மே.

பதவுரை:—

*நன்றுடையானை*—இன்பத்தைத் தனது உருவமாக உடையவனும்

*தீயதில்லானை*—துன்பம் என்பது தன்னிடத்தில் சிறிதும் இல்லாதவனும்

*நரை வெள்ளேறு ஒன்றுடையானை*—மிக்க வெண்ணிறமான எருது ஒன்றைத் தான் ஏறிச் செல்லும் ஊர்தியாக உடையவனும்

*உமை யொருபாகம் உடையானை*—அருட்சத்தியாகிய உமாதேவியைத் தனது இடப்பாகத்தில் உடையவனும்

*சென்றடையாத திருவுடையானை*—மலத்தினாலே வியாபகம் தடைப்பட்டிருக்கும் உயிர்களிருக்கிற இடத்துக்குத் தான்செல்லாது எங்கெங்கே எந்த எந்த உயிர் இருக்கிறதோ அங்கங்கே அந்த அந்த உயிரின் அறிவின் நிலைக்குத் தக்கவாறு அருள் செய்கின்றபேருளுடையவனும்

*சிராப்பள்ளிக்குன்று உடையானை*—திருச்சிராப்பள்ளி மலையில் திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கிறவனும் ஆகிய சிவபெருமானை

*கூற*—அவனுடைய நாமம் ஆகிய அஞ்செழுத்தை ஓதி வழுத்தலினால்

*என் உள்ளம்*—(சிவமாய் மாறியுள்ள) எனது உள்ளமானது

குளிரும்—சிவபெருமான் திருவடி நிழலடைந்து பேரின்பத்தை எப்பொழுதும் நுகர்ந்துகொண்டே யிருக்கும். ஆதலின் மக்கள்காள் திருச்சிராப்பள்ளி மலையில் திருக்கோயில்கொண் டருளியிருக்கிற சிவபெருமானை வணங்குமின் என்பது குறிப்பெச்சம்.

விளக்கவுரை:—

நன்றுடையானைத் தீயதில்லானை—நன்று என்ற சொல் இங்கே இன்பம் என்ற பொருள்பட நின்றது. அவ்வாறே தீது என்பது துன்பம் என்ற பொருள்பட நின்றது. சிவபெருமான் இன்ப உருவினன் என்ற அவன் சிறப்பு இயல் இங்கே கூறப்பட்டது. "இன்பதனை எய்துவார்க்கீயும் அவர்க் குருவம் இன்ப கன மாதலினுலில்" என்பது திருவருட்பயனிற் கூறப்பட்டிருத்தல் காண்க.

நரை வெள்ளேறொன்றுடையானை—என்றது உயிர்களைக் குறிக்கிறது. திருமூலர் திருமந்திரம் 2411-வது பாட்டில் "ஆய பசுவு மடலேறென நிற்கும்" என்று கூறி யருளுகின்றமை காண்க. நரை வெள்ளேறொன்றுடையானை என்றதனால் சிவபெருமான் உயிர்களுக்கு முழுமுதற் றலைவன் என்பது கூறப்பட்டது.

உமையொரு பாகமுடையானை—என்றதனால் சிவபெருமான் உயிர்களைத் தன்னைப்போல் இன்பம் அடையச் செய்கின்ற பேரருளுடையவன் என்பது கூறப்பட்டது.

சென்று அடையாத திருவுடையானை—"அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்தபூர்த்தியாகி அருளொடு" வேறற நிற்கும் சிவமும் உயிரும் எப்பொழுதும் இரண்டறக் கலந்திருத்தலினால் சிவன் உயிருக்கு அருள் செய்தற்கு உயிரிடத்துச் செல்லவேண்டியதில்லை, உயிருக்கும் சிவனிடத்திற் செல்லவேண்டியதில்லை என்ற உண்மை கூறப்பட்டது. உயிரினிடத்து உள்ளதாகிய சிவத்துவமானது மலத்தினால் மறைபட் டிருக்கின்றது. படலம் நீங்கிய கண்ணுக்கு ஞாயிற்றினொளி விளங்குதல்போல மலம் நீங்கிய உயிருக்கு சிவத்துவம் தானே விளங்குகின்றது; இதுவன்றி, உயிர், சிவத்துவத்தை வெளியிலிருந்து பெறுவதில்லை. சிவமும் உயிருக்குச் சிவத்துவத்தைக் கொடுப்பதுமில்லை. இந்த உண்மையை உண்மை விளக்க நூலாசிரியர்:—

"சென்றிவன்தா னென்றிற் சிவபூ ரணஞ் சிதையும்
அன்றவன்தா னென்றுமெனில் அன்னியமா மின்றிரண்டும்
அற்றநிலை யேதென்னி லாதித்தன் அந்தன்விழிக்
குற்றமற நின்றதுபோற் கொள்"

என்று கூறியருளினார்.

"ஒன்றே குலமு மொருவனே தேவனும்
நன்றே நினைமி னமனில்லை நாணுமே
சென்றேபுகும் கதியில்லை நுஞ்சித்தத்து
நின்றே நிலைபெற நீர் நினைந்துய்மினே"

என்று திருமூலர் திருமந்திரம் 2104-வது பாட்டில் கூறியருளிய தும் நோக்குக.

"சிவன் உயிரைச் சென்றடைவதில்லை" என்ற உண்மையைத் திருநாவுக்கரசு அடிகள்

"கன்மன வீர்கழி யுங்கருத் தேசொல்லிக் காண்பதென்னே
நன்மன வர்நவி றில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
பொன்மலை யில்வெள்ளிக் குன்றதுபோலப் பொலிந்திலங்கி
என்மனமே யோன்றிப் புக்கனன் போந்தசுவ டில்லையே"

என்று கோயில் திருவிருத்தம் 3-வது பாட்டிற் கூறி யருளினர். திருநாவுக்கரசு அடிகள் "சென்றடையாத திருவுடையான்" என்ற சொற்றொடரைத் திருவாரூர் திருவிருத்தம் 3-வது பாட்டில் "சென்றடையாத திருவுடையான், திருவாரூர் திருமூலத்தானன்' என்றும் திரு என்ற சொல்லுக்குப் பதிலாக செல்வம் என்ற சொல்லை வைத்து திருச்சிவபுரம் திருத்தாண்டகம் முதலாவது பாட்டில் "சென்றடையாத செல்வன்தான் காண்" என்றும் கூறி யருளினமை காண்க.

கூற என்னுள்ளம் குளிரும்—கூற என்பது இறந்தகாலக் காரணப் பொருட்டாய் வந்தது, மழைபெய்ய நெல் விளைந்தது என்றாற் போல. கூற என்பது நாமமாகிய அஞ்செழுத்தைக் கூறி வழுத்த என்னும் பொருள்பட வந்தது. கூற என்றதனால் அஞ்செழுத்தைக் கூறுதலுக்கு முன் உள்ளத்தில் நிகழ்கின்ற அஞ்செழுத்தி னுட் பொருளை நினைந்து கசிந்துருகிக் கண்ணீர் வார்தலும் கூறுதலுடன் நிகழ்கின்ற கோயில் வழிபாடும் இனம்பற்றிக் கொள்ளப்படும். அஞ்செழுத்தி னுட்பொருளை நினைத்தலும், நாவினல் வழுத்தலும், உடலினல் வணங்குதலுமாகிய செயல்களினலே அடிமையாகிய உயிரினுடைய வேட்கை அறிவு செயல்கள், ஆண்டவனுகிய சிவபெருமானுடைய வேட்கை அறிவு செயல்களுக்குள் அடங்கி நிற்றல் கூறப்பட்டது. சார்ந்தவண்ணமாதற் றன்மையுடைய உயிர் அவ்வாறு சிவபெருமானுடைய திருவருள் நிறைவில் அடங்கி நிற்றல் காரணமாக அவனுடைய எண்குணங்களும் தன்னிடம் நிறையப் பெறுதலினல் சிவானுபவமாகிய பேரின்பம் அடைகின்றது என்ற உண்மையைத் திருஞான சம்பந்த அடிகள் தமது அனுபவத்தில் வைத்து உலகத்தார் அறிந்து உய்யும்பொருட்டு இந்தப் பாட்டில கூறி யருளினர்.

உள்ளம் குளிரும்--உயிர் தனது உள்ளம் சிவகரணமாக மாறி சிவத்துவ மடைந்தபொழுது சிவானுபவமாகிய பேரின்பத்தை உள்ளத்தில் வைத்து உணருகிறது என்பது கூறப்பட்டது. குளிரும் என்ற சொல் உயிரானது பாச வெப்பத்தினின்று நீங்கி, சிவனது திருவடித் தாமரை நிழல் அடைந்த காரணத்தைக் குறிப்பாக உணர்த்துகின்றது.

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே"

என்ற திருநாவுக்கரசு அடிகள் அற்புத அருள்வாக்குக் கருத்தையும் நோக்குக.

உயிரானது அஞ்செழுத்தோதி அதன் பொருளை நினைந்து உருகிச் சிவபெருமானுக்கு அடிமைப்பட்டுத் தன்மூனைப்பு இன்றி நிற்கப் பேரின்பம் அடையும் என்ற உண்மையைத் திருமூலர் திருமந்திரம் 2118-வது பாட்டில் "சிவாய நமவெனச் சித்தமொருக்கி, அவாய மறவே அடிமைய தாக்கிச் சிவாய சிவ சிவவென் றென்றே சிந்தை, அவாயம் கெட நிற்க வானந்தமாமே" என்று கூறி யருளினர்.

"இந்துவிற் பானுவில் ராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணு—முந்தவே
காட்டாக்கிற் றேன்றிக் கனல்சே ரிரும்பென்ன
வாட்டாணு மோதஞ் செழுத்து"

என்ற சிவஞான போத வெண்பாக் கருத்தை நோக்குக.

இந்த அருமையான பாட்டின் முதலாவது அடியில் சிவபெருமானுடைய சிறப்பு இயல்பும் இரண்டு மூன்று அடிகளிலும், நான்காவது அடியில் குன்றுடையான் என்பதுவரையும் அவனுடைய பொதுஇயல்பும் கூறப்பட்டன. கூற என்னுள்ளங் குளிரும் என்றதனுல் இன்ப உருவினனுய்த் தன் நிலையிலுள்ள சிவபெருமான் உயிர்கள் எல்லாம் தன்னை அகத்தில் வழிபடுதலுடன் புறத்திலும் வழிபட்டு தன்னைப்போல் பேரின்பம் அடையவேண்டு மென்ற பேரருளினுல் தாவர வடிவில் திருச்சிராப்பள்ளி மலையில் சதாசிவமூர்த்தியாய் வீற்றிருக்கின்றுன் என்பது கூறப்பட்டது.

நன்றுடையான் தீயதில்லான் என்றதனுல் சிவபெருமான் எல்லா உயிர்களுக்கும் இன்பம் கொடுக்கும்படியான தன்மையுடையவனென்பதும், நரைவெள்ளே றென்றுடையான் என்றதனுல் அவன் எண்ணிறந்த உயிர்களுக்கும் இன்பம் கொடுக்கக் கடமைப் பட்டிருக்கும் முழுமுதற் றலைவன் என்பதும், உமையொருபாக முடையான் என்றதனுல் அவ்வாறு கடமைப்பட்டிருக்கும் அவன் தன்னைச் சார்ந்த எல்லா உயிர்களுக்கும்

சார்ந்த அளவில் இன்பம் அளிக்கும் பேரருளுடையவன் என்பதும், சென்றடையாத திருவுடையான் என்றதனல் அவன் கணக்கிறந்த பல இடங்களிலுள்ள எண்ணிறந்த உயிர்களில் எந்த எந்த உயிர் எங்கெங்கே இருக்கிறதோ அந்தந்த உயிருக்கு அங்கங்கே நின்று அருள் செய்யும் பேராற்றலுடையவன் என்பதும், அவ்வாறு அவன் எங்கும் நிறைந்திருப்பினும் தான் எங்கும் நிறைந்திருப்பதை அறிந்து தன்னை எங்கும் வழிபாடு செய்ய அறியாத உயிர்கள்மாட்டு வைத்த தண்ணளியால் அவைகள் தங்கள் அறிவுநிலைக்குத் தக்கவாறு ஒரு குறியின்கண் வைத்துப் புறத்தில் வழிபாடு செய்து உய்யும்பொருட்டுத் திருச்சிராப்பள்ளி மலைமேலுள்ள திருக்கோயிலில் சிவலிங்கவடிவில் வீற்றிருக்கின்றான் என்பதும் அடுக்கடுக்காய் முறையாகத் திருஞானசம்பந்த அடிகள் இந்தப் பாட்டிற் கூறியிருக்கிற கருத்துக்களைச் சிவநேயர்கள் நினைந்து உருகி அகங் குழைந்து இன்ப மெய்துவாராக.

மா. வே. நெல்லையப்பபிள்ளை.

---

## திருத்தம்

சென்ற ஆறுவது பாற் ஜெடக்கத்தில் கண்ட செய்யுட்டலைப்பு "திருவாசகம்" என்றிருப்பது அச்சுப்பிழை. அதனை "உமாபதிசிவம் திருமுறைத் திரட்டு—அப்பர் தேவாரம்" என்று நேயர்கள் திருத்தி யமைத்துக்கொள்ள வேண்டுகிறோம்.

அச் செய்யுள் உரை நமது செல்வி இதழாசியர் கூட்டத் தலைவர் திருவாளர் மா. வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள் எழுதியதாகும்.

## சிவம்

அகண்டமாய், அருள் வெளியாய், தோற்றமும் இறுதியு மற்றதாய், எங்கும் நிறைந்ததாய், என்றும் உள்ளதாய், எல்லாம் அறிவதாய், எல்லாம் வல்லதாய், மலரகிதமாய், குணங்குறி யற்றதாய், பெயரும் உருவமு மில்லாததாய், பேரொளியாய், கற்பனை கடந்ததாய், போக்கு வரவு, அண்மை சேய்மை, இன்பம் துன்பம், பருமை நுண்மை, தூய்மை தூய்மையின்மை, ஒற்றுமை வேற்றுமை, குற்றம் நற்றம், குறைவு நிறைவு, உயர்வு தாழ்வு முதலிய வேறுபாடுகளற்றதாய், எவ்வகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய், மெய்யன்பொடு வணங்கும் அன்பர்களின் அன்பே வடிவாய் இலகும் தனிப்பரம்பொருளே சிவன் என்னப்படுவதாம். மேற்குறித்த மங்கலத் தன்மைகள் யாவும் ஒருங்கே பொருந்தியிருத்தலால் மங்கலம் என்னும் பொருள்கொண்ட சிவன் என்னும் திருப்பெயர் உண்டாயிற்று.

—கா. சிவ. க.

# சமயமும் தத்துவமும் :
# Religion & Philosophy

## சைவர் மகாநாடு

### திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் தலைமையுரை

(முன் உ௰௪-ம் பக்கத் தொடர்ச்சி)

### சைவ விளக்கம்

இனி, சைவம் என்றால் அஃது ஒரு சிறு கூட்டத்தாரின் குறுகிய கொள்கை யெனக் கருதும் பேரறிவாளரும் உளர். ஏனைச் சமயத்தினரிற் போல சைவ ரென்போரிலும் குறுகிய கொள்கையுடையார் இருத்தல் கூடும். எனினும் சைவ சமயம் குறுகிய கோட்பாட்ட தென்பது சிறிதும் பொருந்தாது. பிற சிறப்புக்கள் பற்றிச் சைவ சமயம் பாராட்டப் படாதொழியினும், வேறெச்சமயத்தினுங் காணப்படாத அத்துணை விரிந்த நோக்கமும் பரந்த கொள்கையும் உடைத்தாதல் பற்றியேனும், அது யாவானும் பாராட்டப் பெறுதல் வேண்டும். எந்த உயிரையும் எப்பொழுதும் நிரயத்துக் கிடந் துழலுமாறு சைவ சமயம் விட்டு விடுவதில்லை. வெவ்வேறு தகுதியுடைய மக்கள் அனைவர்க்கும் ஏற்றபடி முறைகளை வகுத்து எல்லோரையும் உயர் நெறியிற் செலுத்திப் பேரின்ப மளிப்பது அதன் இயல்பாம். வேறு எச் சமயத்தையும் உலகிற்கு வேண்டாவென அது வெறுத்து ஒதுக்குவது மன்று.

> " சந்தான கற்பகம்போல் அருளைக் காட்டத்
> தக்கநெறி இந்நெறியே காண்சன் மார்க்கம் "

என்று தாயுமான வடிகளும்,

> " விரிவிலா அறிவி னார்கள் வேறொரு சமயஞ் செய்தே
> எரிவினாற் சொன்னா ரேனும் எம்பிராற் கேற்ற தாகும்."

என்று திருநாவுக்கரசுகளும் அருளிச் செய்தன இங்கே சிந்திக்கற்பாலன. மற்றும் சைவத்தின் பரந்த கொள்கையை வரலாற்று வாயிலாகப் பெரிய புராணம் தெளிவுபடுத்துதல் கண்கூடு. குல வேற்றுமை, நிலை வேற்றுமை, பால் வேற்றுமை என்பன ஆன்

டவனை வழிபட்டுப் பேறு பெறுவதற்குத் தடையாவன அல்ல. எல்லோரும் வீடு பெறுதற் குரியர் என்பதே சைவத்தின் கொள்கை.

இனி, சைவ சமயமானது பழந்தமிழ் மக்களுடைய கடவுள் கொள்கையின் வேறுபட்டதன் ருகலின் நாமும் அம்முறையே சமயத்தைப் பேணி ஒழுகுதல் கடனாகும். தமிழருடைய கொள் கைகளைச் செவ்விதின் விளக்குவன தோல்காப்பியம், திருக்குறள் என்ற இரண்டு பெரு நூலுமாம். தெய்வப் புலமைத் திருவள்ளுவ னார் மக்கள் வாழ்க்கை நிலையை இல்லறம் துறவறம் என இரண் டாக வகுத்துக்கொண்டு, இம்மை, மறுமை, வீடு என்னும் மும் மைப்பேறும் எய்துதற்குரிய வழிகளை மிகத் தெளிவாக விளக்கி யுள்ளார். கற்றுத் துறைபோய காதலனும் காதலியும் அன்பும், இன்சொல்லும், அடக்கமும், ஒழுக்கமும் மிக்காராய்த் தீவினைக் கஞ்சி, அறத்தாற்றி னீட்டிய பொருளால் விருந்தோம்பல், ஒப்புர வாற்றல், வறியார்க்கீதல் முதலிய அறங்களைச் செய்து வாழ்தல் இல்லற வாழ்க்கையாமென்றும், அதன் இம்மைப் பயன் இன்ப மும் புகழுமாக, மறுமைப்பயன் துறக்கம் பெறுதலென்றும், இல் லறம் கடைபோய வழி எல்லா வுயிர்களிடத்தும், அருளுடைய ராய், வாய்மை, கொல்லாமை முதலிய விரத ஒழுக்கங்களைக் கடைப் பிடித்து, மனத் தூய்மையடைந்து, நிலையாமை கண்டு, இருவகைப் பற்றும் அற்று, மெய்ந் நூற்பொருள்கள் கேட்டல் முதலியவற் ருல் மெய்யுணர் வெய்தி, முக் குற்றங்களின் நீங்கி யிருத்தல், துறவற வாழ்க்கையா மென்றும், அதன் பயன் பிறவித் துன்பத் தினின்று நீங்கிப் போரவியற்கையாகிய பேரின்பப் பெருவாழ்வு பெறுத லென்றும் யாவரும் இனிதின் உணருமாறு கூறியிருக்கும் திறப்பாடு எத்துணையும் போற்றற்குரிய தொன்றும். உயிர்கள் யாதேனும் ஒன்றனைப் பற்றியே நிற்கும் இயல்பின வாதலின் அவை அகப்பற்றும் புறப்பற்றுமாகிய பசு பாசப்பற்று நீங்குதற்கு ஆசிரியர் கூறியுள்ள உபாயம் பதியாகிய கடவுளைப் பற்றுதலே யாம் என்பது,

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்னும் பொருளுரையால் விளக்கமாம். கடவுளைப் பற்றுத லெனினும் அவனோதிய வீட்டு நெறியைப்பற்றி யொழுகுதலே

னினும் இடையறாது அவனைச் சிந்தித்தலே யாம். எனவே, மனையின்கண் கூடி வாழ்வாராக, வனத்தின்கண் தனித்துவாழ்வாராக, இறைவனைப்பற்றி நின்று ஏனைப்பற்றுக்களின் நீங்கினோரே பிறவியறுத்து வீடு பெறுதற் குரியாரென்பது ஆசிரியர் கருத்தாதல் பெறப்படும்.

தொல்காப்பியனாரும் ஒவ்வொருவரும் தத்தம் ஒழுகலாற்றின் மேம்படுதலே வாகையா மென்று வாகைத் திணைக்கு இலக்கணங் கூறிவரு மிடத்தே,

> "கட்டமை யொழுக்கத்துக் கண்ணுமை யானும்
> இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்
> பிழைத்தோர்த் தாங்கும் காவலானும்"

என்னும் பகுதியால் இல்லற ஒழுக்கத்தையும்,

> "அருளொடு புணர்ந்த அகற்சியானும்
> பொருளொடு புணர்ந்த பக்கத்தானும்
> காமம் நீத்த பாலி னானும்"

என்னும் பகுதியால் துறவு, மெய்யுணர்வு, அவா வறுத்தல்களையும் குறிப்பிடுவாராயினர். இப்பகுதிகட்கு இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் திருக்குறளையே மேற்கோளாகக் கொண்டு, இல்லற வியல்பு, துறவற வியல்புகளை விரித்துக்காட்டி உரை வகுத்திருத்தலும் காண்க. மற்றும், நச்சினார்க்கினியர் 'காமம் நீத்தபாலினானும்' என்பதற்கு உரைகூறிய விடத்தே பால் என்றதனால் உலகியலுள் காமத்தினைக்கைவிட்ட பகுதியினையுங் கொள்க" எனவுரைத்து,

> இளையர் முதியர் என இருபால்பற்றி
> விளையும் அறிவென்ன வேண்டா—இளையனாத்
> தன்றாதை காமம் நுகர்தற்குத் தான் காமம்
> ஒன்றாது நீத்தான் உளன்.

என மேற்கோள் காட்டி யிருத்தலும் சிந்திக்கற் பாலது.

இல்வாழ்க்கையராயினும், புறவாழ்க்கையராயினும் இறைவனைப்பற்றி நின்று, ஏனைப் பற்றுக்களின் நீங்கினாரே வீடு பெறுதற்குரிய ரெனும் இவ்வுண்மைக்குப் பெரிய புராணத்துக் கூறப்பட்ட திருத்தொண்டர்களின் வரலாறுகள் சிறந்த எடுத்துக் காட்டுக்களாம். திருமுறைகளும், சித்தாந்த நூல்களும் இவ்வுண்மையை விளக்குவனவே. 'பற்றுங்கவை யற்றீர்' என்னும் திருவாசகத்

திருப்பாட்டின்கண் இக்கருத்து இனிது விளங்குதல் காண்க. பற்றற்குரியதனைப் பற்றித் துன்பத்திற் கேதுவாய பற்றுக்களின் நீங்கி நற்கதி யடைய விரும்புவீரெல்லாம் விரைந்து ஓடி வம்மின்! திருப்பெருந்துறை இறைவன் சீரைக் கற்றல் செய்ம்மின்! அவன் கழல்களைப் பேணி வழிபடுமின்! வழிபடும் அடியரோடுங் கூடு மின்! என்று வாதவூரடிகள் நம்மனோர்க் கருளிச்செய்யுந் திறன் இருந்தவா றென்னே!

இங்ஙனம், தமிழ்நூற் கருத்தும், சைவ சித்தாந்த உண்மை யும் வேறுகாமையை எண்ணும்பொழுது பண்டைத் தமிழ் மக் களின் வேறு சில உயரிய பண்புகளும், கொள்கைகளும் நம் நினை விற்கு வரக்கூடியனவாகவுள்ளன. எந்தக் கடவுளரையோ சமயத் தையோ இகழ்த லென்பது பழைய தமிழரிடத்து ஒருசிறிதும் காணப்படாத தொன்று. அத்தகைய சிறந்த பண்பினை நாமும் கொண்டு ஏனையோரும் கொள்ளுமாறு செய்யின் சமயப் பூசல் என்பது இல்லாது ஒழியும். திருமால் வழிபாடு சைவர்கட்குப் புறம்பாய தொன்றன்று. மற்றும், எச்சமயத்தினர் தங்கள் சம யமே உயர்ந்ததெனக் கூறினும் அன்னார்க்கு அவ்வுரிமை உண் டென்பதனை மதித்து நம் நிலையினின்று வழுவாதிருத்தலே நமது கடனும். எந்தச் சமயத்தையோ, சமயக் கடவுளரையோ எள்ளி நகையாடல் என்பது புன்மையாம் என்பதனைக் கருத்திற் பதிப் போமாக.

### பிறப்பினால் உயர்வுதாழ்வு இல்லை

இனி, தமிழருடைய மற்றொரு சிறந்த கொள்கை, பிறப்பி னால் உயர்வு தாழ்வு இன்று என்பது.

‘பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்’
‘நல்ல குலமென்றுந் தீயகுல மென்றுஞ்
சொல்லள வல்லாற் பொருளில்லை—தொல்சிறப்பின்
ஒண்பொருள் ஒன்றோ, தவம், கல்வி, ஆள்வினை
என்றிவற்றா னாகுங் குலம்.’

என்பன தமிழருடைய அடிப்படையான கொள்கையைத் தெரி விப்பன. பன்னிரு திருமுறைகளையும், எழுத் தெழுத்தாகச் சோதித்துப் பார்ப்பின் சைவ சமயத்தின் அடிப்பட்ட கொள்கை

யும் இதுவே யென்பது போதரும். சமய நெறியிலே சாதி குலம் என்னும் எண்ணம் உதித்தலே உய்தியில் குற்றமாம் என்பது சான்றோர் கருத்து. (தொடரும்)

---

## மும்மையாலுலகாண்ட மூர்த்தி

(வித்வான் T. P. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் M.A.,B.L.)

(முன் ௨௯௮-ம் பக்கத் தொடர்ச்சி)

போற்றும் புகழ்:—கல்வித்துறை, செல்வத்துறை என்ற பல நற்றுறைகளிலும் ஈடுபட்டுள்ள மாந்தரனைவரும் பண்டைநாள் தொட்டுப் போற்றும் பெருமையுடையது என்றல்லவா உலகத்தினர் எல்லாம் இதன் புகழை உணர்கின்றனர். ஆனால் இதனைப் போற்றாதாரும் உள்ளார்கள். களவுமுதலாம் தீயதுறையில் ஈடுபட்ட மாக்கள் இதனைப் போற்றுவதேது? என்? திருடர் களவாடச் செல்வம் அங்கில்லையோ? திருடர் செல்வத்தைத் தமக்கென அவாவி நிற்கின்றனரே யன்றி மூர்த்தியார் காந்தியார் முதலிய பெருமக்களைப் போல அதனைக் கடவுட் செல்வம் எனப் போற்றி இறைபணிநின்று தமக்கெனக் கொள்ளாது நடமாடுங் கோயில்களாம் நல்லுயிர்க் கடவுள்களுக்கே என கொடுத்துதவி வழிபட்டு நிற்பரோ? அவ்வாறு செய்யாக்கால் போற்றுதல் என்ற சொல்லுக்குப் பொருளில்லையன்றோ? ஆதலின் நற்றுறை மாந்தரே போற்றுவர் என்க. ஈரமும் அன்பும் இல்லாதவருக்கு அங்கு இடமே இல்லை. பொறாமை வாய்ப்பட்ட அவர்களுக்கோ, இங்குள்ள இயற்கை வனப்பும் செல்வமும் துன்பமாகவே தோன்றுகின்றன. இந்த இயற்கை வனப்பை அருளம்மையின் அழகிய வடிவமாகக் கொண்டு போற்றாது கண்ணை மூடிக்கொண்டே ஓடிப்போவாரை என் என்பது? குழந்தையின் பசிமுகம் நோக்கிப் பால்சுரந்து ஊட்ட வரும் தாயைவிட்டு ஓடோடியும்போய்ப் பசியால் வாடி வதங்கும் குழவியின் போக்கே இவர்கள்போக்கும் என்க. இவர்கள் நார்மன்னு சிந்தையற்றவர்; நற்றுறைமாந்தரும் அல்லர். ஆதலினால் அன்றோ தம்முடைய அமணக் கொள்கையை இவ்வழகிய நாட்டில் பரப்ப முன்வந்தனர். நிலைத்திணைப் பொருள்களும் இயங்குதிணைப் பொருள்களும் ஒன்றிற்கொன்று ஒத்தனவாக

இணைந்தியைந்து ஒற்றித்து நிற்பதனைச் சேக்கிழார் இவ்வாறு நன்கு புனைந்துரைக்கின்றார். மக்கள் ஓங்கியுயர்ந்து வாழ்வதுபோல அவர்கள் வீடும் ஓங்கியுயர்ந்து நின்றன எனப் புனைந்துரைப்பதனை அன்புக்கண் கொண்டு காணவேண்டும் :—

பெண்: உடல்விளக்கம் :—

சாயும் தளிர்வல்லி மருங்குல் நெடுந்தடங்கண்
வேயும்படு தோளியர் பண்படு மின்சொற் செய்ய
வாயும்படும் நீள்கரைமண் பொரும்தண் பொருந்தம்
பாயும் கடலும் படும் நீர்மை பணித்த முத்தம்.

என்று சமணர்கள் வெறுத்துப் புறக்கணித்த பெண்களை அந்நாட்டின் செல்வத்தோடு ஒருங்கியைய வைத்துப் புகழ்கின்றார். பெண்களைப் பேய் என்றஞ்சி ஓடுவதோ? தாயின் அன்பு குழைந்த வடிவம் எனப் போற்ற வேண்டாவோ? இல்லறத்தின் நின்றும் பழகிய பழக்கத்தால் பெண்களைக் காதற் கழிவிடம் என எண்ணும் எண்ணத்தை யறவே ஒழிக்க வேண்டாவோ? ஒடிந்து விழுகின்றாற் போலத் துவளும் இடையோடு எதிர் நிற்கும் நமது மகளை நாம் நமது தாயெனப் போற்றுவதுபோல, மற்றைய அழகிய மகளிரின் சாயுந்தளிர் வல்லி மருங்குலைக்கண்டு, அவ்வருள் வடிவங்கள் உலகப் பெருந்தாயின் அன்புள்ளம் எவ்வாறு நெக்குருகிக் கரைந்து குழைகின்றது என்பதனைக் காட்டுகின்றன எனக் கொண்டு அன்பு வடிவாகி வழிபடவேண்டாவோ? ஈதோ பச்சிளங் கொம்பு இதுபோது தான் தளிர்விடுகின்றது. தொடவும் நாம் கைகூசும் இவ்விளந்தளிர்கள் ஒளியோடும் மின்னிப் பொலிகின்றன. இக் கொடி, தானே நிற்கமாட்டாது கொழு கொம்பிற் சாய்ந்து பின்னிக் கொள்கிறது. அவ்வசைவில் என்ன மென்மை! அம்மென்மையில் என்ன அழகு!! இப் பச்சைப் பசுங் கொடியைக் கண்டு வணங்குதலால் என்னகேடு விளைகின்றது? இக் கொடியேபோல இடை துவண்டு காட்சி கொடுக்கும் பெண்களை இறைவியின் வடிவெனக்கொண்டு வணங்குதலால் தான் கேடு என்ன விளையப் போகிறது? காதற் கழிவிடம் எனக் கருதவும் போமோ? மகளைத் தழுவும் மறக் கொடியோன் அவ்வாறு கருதுவான். அத் துவட்சியைக் கண்டவுடனேயே அவர்களைப் போற்றவேண்டும் என்ற எண்ணம் எழவேண்டாவோ? கொழு கொம்பை நாடி நிற்கும் கொடிகளைப் போல, கொழுநன் மார்போடு

பிணைந்து நிற்கும் பெண்களையும் வேறொன்றும் உள்ளத்தே கருதி நோக்குவாரும் உளரோ? உளரானால், அவர்கள் தீத்துறை மாந்தரேயாவர்; நார்மன்னு சிந்தையற்றவரே யாவர். இப்பெண்களுக்குக் கொடியை ஒப்புமைகூறிய சேக்கிழார் சாயுந்தளிர்க் கொடிபோலக் கொழு கொம்பாம் கொழுநனொடு வாழும் கற்புடை மகளிரையே போற்றுகின்றார். கொடியழகு மட்டுமோ? அவர்கள் கண்ணழகை என் என்பது! நீண்டது! அகன்றது! அதிலேயே இறைவியின் அருள் ஒளியைக் கண்டுகொண்டே நிற்கலாம் அன்றோ? இவ்வருளாழத்தைக் கண்டுபோலும் கடலைக் கண்ணுக்கு ஒப்புமை கொண்டனர் ஒருசில புலவர். தெளிந்து நிற்கும் நீண்ட நீர்நிலையைக் கண்டபோது அதன் குளிர்ச்சியில் ஈடுபட்டு நமது உள்ளம் ஒடுங்கிவிடுகின்றது. மூசுவண்டறை பொய்கையின் காட்சியை இக்கண்களினும் கண்டு நமது மனம், இயற்கைத்தாயாம் இறைவியினிடம் குவியாதோ? அவர்கள் தோளின் அழகே அழகு! பச்சிள மூங்கில் பசந்தும் குளிர்ந்தும் வழுவழுத்தும் கண்ணைக் கவர்ந்தும் நிற்பது போல, இவர்கள் தோள்களும் காட்சிதருகின்றன அன்றோ? பச்சிள மூங்கிலைக் கண்டு களித்தல் தீமையாகாது. இப் பெண்களின் இயற்கை வனப்புமிகுந்த தோள்களை அருள் வடிவாகக் கண்டு வழிபடுவதால் வருங் கேடு என்ன? ஆனால் ஒன்று இன்றியமையாது வேண்டப்படும். பச்சிள மூங்கிலை இயற்கையன்னையின் வடிவமாகக் கொண்டு வழிபட்டுருகுவது போலவே தாய்மாரின்தோள்களையும் கண்டு வழிபடுதல் வேண்டும். காதற் கழிவிடம் என எண்ணுபவனுக்கோ சியும் தோலுமே மிஞ்சி நிற்கும்; அருளம்மை பறந்தோடிப் போவாள்.

உள்ளத்து விளக்கம் :—இம்மகளிரின், உடல் விளக்கம் இருந்தபடி ஈது. மேலே, உள்ளத்து விளக்கத்தை என் என்பது? இவர்களது உள்ளத்தே எழும் கருத்துக்கள் வாய்வழியே சொல்லாக உருப்பெற்று வரும்போது, அச்சொற்கள் யாழினும் குழலினும் எழும் இன்னிசைப் பண்களினும் மிக இனியவாகப் பொங்கி வழிகின்றன. யாழிசை கேட்டும், குழலிசை கேட்டும், இன்னிசைப் பண்ணொலி கேட்டும் நிற்கையில், மனக் கொதிப்படங்குமேயன்றிக் காதலாற் கண்ணழிதல் இங்கில்லை. உள்ளத்தொளியாம் சொற்களைக்கேட்டு அன்பொளிரும் அறிவுநிலை பெற்

றுக் கடவுளருகே செல்கின்றோம். மெய்யுணர்ந்தார் இறைவியின் எதிர் ஒலி என்றேஅவற்றை யுணர்ந்து உலகை மறந்து தனிநிலை யடைவர். நமது மகள் நமக் கிவ்வுயரிய நிலையைக் காட்ட வில்லையோ? இனிமையும் மென்மையும் குளிர்ச்சியும் திரட்சியும் வனப்பும் சிவப்பும் மிக்கவாயன்றோ இவ்வுள்ளத்து ஒளி வீசும் செம்மணி விளக்காக மிளிர்கின்றது? இதிலே இனிமை எப்படித் தீற்றினரோ? இத்திரட்சியை எப்படித் திரட்டினரோ? இம்மென் மையை எப்படி இயற்றினரோ? இக்குளிர்ச்சியை எப்படிப் புகுத் தினரோ? இதனுள் சிவப்பினை எப்படி நுழைத்தனரோ என்று இளங்குழவிகளைப்போல இயற்கையன்னையின் எதிரே நின்று போற்றுதல்வேண்டும்.

உயிர் விளக்கம்:—இவ்வுள்ளத்து விளக்கத்தினூடே ஒளிரும் உயிர் விளக்கம் முத்தேபோலப் பல்வடிவம் கொண்டு முளைவிட் டிருக்கின்றது. விலையிலா ஆணிமுத்தமேயாம் ஈது. அதைக் காண்பதே கடவுட்காட்சி. முத்தன்ன பற்களின் அழகினை முறு வலிலே காணலாம். முறுவலோ உயிர் முழுவதும் உவகைவடி வானபோது முறுகி எழுந்தொளிர்கிறது. நகையன்றோ உயிர் விளக்கம்! களங்கமற்ற நகை! கரவடமில்லாத நகை! உயிர்க் குள்ளே ஒளிரும் ஒரு முதலை வெளியே காட்டும் ஒப்பிலா நகை! அந்நகையிலன்றோ அருளம்மை கூத்தாடுகின்றாள்? பரத்தையின் பகட்டுநகை யன்று. அருமை மகளின் அன்பு நகையாகும் ஈது. அன்புடைய தாயின் அருள் நகையாகும் ஈது. அத்தகைய உவகை நகை எழுந்தபோது உள்ளமும் பெருவிளக்காக ஒளிர்வதால், சொற்களும் அருட்சுவை சொட்டச் சொட்ட மிகமிகத் தித்திக் கின்றன. ஒலியும் அன்பு கனிந்து குழலினும் யாழினும் மிகமிக இனிதாகின்றது. தோளும் திரண்டு பசந்து பசுமணி விளக்காக ஒளி வீசுகிறது. கண்ணும் கருநிறக் கதிரவன்போல மின்னிப் பொலிகிறது. இடையும் இனிதே துவண்டு அருள்வடிவாகிறது.

கடன்முத்தும் பெண்முத்தும்:—இம்மகளிரிடையே முத்தம் பட்டாற்போல இயற்கைப் பரப்பிலும் முத்தம்படுகிறது. இவ் வாறு மக்களையும் இயற்கையையும் முத்தம்படும் இடங்களாக வைத்துப் புனைந்துரைக்கும் வாயிலாக அவ்விரண்டும் இயைந்து விளங்கும் பொருத்தத்தையும் ஒற்றுமைக் காட்சியையும் நன்கு சுட்டுகின்றார் சேக்கிழார். கடலிலே முத்தம்படுகிறது. நீரோட்ட

மிக்க விலையுயர்ந்த முத்தமே தமிழ்நாட்டிற் பிறப்பன. கடல் என்றால் எங்கும் படுவதில்லை. இத்தமிழ்நாட்டின் பேராறான தண் பொருநை (தாம்பிரபர்ணி), தன் கரைகளை இடித்துக்கொண்டு வெள்ளமாய்ப் பெருகியோடிக் கடலிற் பாய்கின்ற இடத்திலே தான் சிறந்த முத்துக்கள் பிறக்கின்றன. ஆதலின் அம்முத்தும் அந்நாட்டின் வளத்தையே சுட்டுகின்றது. முத்திலே போல அவ் அருள் விளக்கத்தையும் இயற்கையன்னையின் வியத்தகு திறத்தை யும் வேறெங்கேனும் காணமுடியுமோ? அஃதன்றோ கடவுட் காட்சி! மகளிரிடை எழும் முத்தோடு கடலிடை எழும் முத்தை யும் ஒருங்கு ஒற்றித்து வைத்தெண்ணுதலால் அம்முத்தைப் போன்றே இம்முத்தும் வழிபடற்குரியதன்றி அவாவிற் குரிய தன்று என்பது தெளிவாகிறது.

(தொடரும்)

---

## இலுப்பைக்குடி

இங்குள்ள புராதனாலயம் நாட்டுக்கோட்டைச் செட்டிமார் கள் நகரக்கோயில் ஒன்பதில் ஒன்று. இதன் அருகிலுள்ள காட்டில் பூர்வத்தில் கொங்கண முனிவர் வசித்ததாகச் சொல்லப்படுகிறது. அதன் சிதைவுகள் சில இப்போதும் காணப்படுன்றன. பூமியி லிருந்து எடுக்கப்பட்ட உருவச்சிலைகளில் கொங்கண முனிவரின் உருவம் ஒன்றும் இவ்வாலயத்தில் இருக்கிறது.

தற்போது புகைவண்டி நிலையமாக விளங்கும் காரைக்குடி இணைப்பு இலுப்பைக்குடி கோயில் அருகில்தான் அமைந்துள் ளது. நிலையத்திற்குத் தென்கிழக்கில் ஒன்றரைமைல் தூரத்தில் இலுப்பைக்குடி இருக்கிறது.

இது இயற்கை வளமிகுந்து பல அழகிய தென்னை மரங்கள் சூழ, கோடைகாலத்தில் வசிப்பதற்குத் தகுந்த கிராமமாகும். கோடைகாலத்தில் மிகவும் குளிர்ச்சியாக விளங்குகிறது.

இங்குள்ள வைரவ மூர்த்தி மிகப் பெருமை வாய்ந்தது; பலர் பக்தியாகக் கொண்டாடுவது.

இவ்வாலயத்தில் சித்திரைத்திருநாள் திரு. அ. லெ. குடும்பத் தாரால் சிறப்பாய் நடத்தப் பெறுகிறது. தெப்பத்திருநாளும், ரிஷபக் காட்சியும் சிறப்பாய் நடத்தப் பெறுகிறது.

## வரலாற்றுப் பகுதி: History & Biography.

### காலஞ்சென்ற உயர்திரு. சுவாமிநாத பண்டிதர்.

[திரு. சே. வே. ஜம்புலிங்கம் பிள்ளை யவர்கள்]

இவர் யாழ்ப்பாணத்து வண்ணார்பண்ணைப் பகுதியைச் சேர்ந்தவர். சின்னத்தம்பிப்பிள்ளை என்பவரின் புதல்வர். வேளாள மரபினர். நாவலர் மருகரும் மாணாக்கரும் மகாவித்துவ சிரோமணியுமாய் விளங்கிய நொத்தாரிஸ் பொன்னம்பலபிள்ளையின் மாணவரில் ஒருவர். சைவபரிபாலனமே தமது பொழுது போக்காகக்கொண்டு அத்துறையில் தமது காலம் முழுவதும் செலவிட்டவர். முப்பது முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் இந்தியாவிற்கு வந்து அதுமுதல் இங்கேயே நின்று தமிழ்நாடெங்கணும் சைவத்தைப் பரப்பி வந்தவர். 1905-ம் ஆண்டில் சென்னையில் சைவ வித்தியானுபாலன அச்சுக்கூடம் ஒன்று நிறுவி அதன் மூலமாகச் சிவஞானபோத மாபாடியம், திருக்கோவையாருண்மை, தேவார அடங்கன்முறை, திருவிளையாடற் புராணம், குமரகுருபரர் பிரபந்தம், சிவப்பிரகாசர் பிரபந்தம் முதலிய சைவப் பெருநூல்களை மிக அழகுபெற, பெரும்பொருள் செலவிட்டு, அச்சிற் பதிப்பித்துச் சொற்பவிலைக்கு விற்று உதவிப் பெரும்புகழ் ஈட்டியவர். சைவத் தொண்டிற்கு உற்றுழி உதவும் பேரீகையுடையவர். சைவசித்தாந்த மகாசமாஜக் கூட்டம் மகாமகக் கூட்டம் முதலிய பெருங் கூட்டங்களைக் கூட்டிச் சரிவர நடாத்தும் போாற்றல் உடையவர். இவர் தலைமையில் கும்பகோணம், திருப்பனந்தாள், மாயூரம் என்னும் திருத்தலங்களில் முறையே 1918, 1919, 1920-ம் வருடங்களில் நடந்த மகாசமாஜ ஆண்டு விழாக்களும், கும்பகோண மகாமககாலங்களில் (1921, 1933) இவர் நடாத்திய சைவப் பெருங்கூட்டமும் அன்னதானம் முதலிய அறங்களும் இவரது பெருமுயற்சியையும், வன்மையையும், அவையஞ்சா ஆண்மையையும் ஒருவாறு புலப்படுத்தும். திருச்செந்தூரிலே சுப்பிரமணிய வித்தியாசாலை யொன்று நிறுவிப் பொருள்

உதவினர். பழைய வரம்பு கடவாத மாண்பினர். மறைகள் நிந்தனை சைவநிந்தனை பொறு மனமுடையவர். வைதிக சைவத் திற்குப் பேரரணாக விளங்கியவர். சைவாசார ஒழுக்கமுடையவர். சிவவேடப் பொலிவழகு அமையப்பெற்றவர். ஆறுமுகநாவலர் மாணாக்கர் பரம்பரையில் வந்தவர். நாவலரைப் போலத் தாமும் வித்தியாதருமம் சைவபரிபாலனம் முதலியன நடாத்தவேண்டு மென்று கருதி அவரைப்போல் குடும்பத் தொடர்பில்லாமல் பல கருமங்களைச் செய்து முடித்தவர். பல நூல்களை எழுதியும் ஆராய்ந் தும் வெளியிட்டவர். பிற்காலத்தில் சிதம்பரத்தைத் தமது இருப் பிடமாகக் கொண்டவர். திருவண்ணாமலைக் கார்த்திகை விளக் கீடும் தில்லைத் திருநடனமும் நியமமாகத்தவறாது செய்துவந்தவர்.

இவரது இயற்பெயர் தம்பையாபிள்ளை என்பதாகும். அது இவர் முதன்முதல் அச்சிட்ட திருவாதவூரடிகள் புராணத்தால் அறியலாம்.

இவர் செந்திநாதையர் சேமித்து வைத்திருந்த புத்தகங்களை யெல்லாம் பெரும்பொருள் கொடுத்து வாங்கிவைத்திருந்தார். ஒவ்வொன்றாக அரிய சைவ நூல்களை வெளியிடக் கருதியிருந்தனர். சித்தியாருக்கு வெள்ளியம்பலத் தம்பிரான் எழுதிய ஞானவரணப் பேருரையை அச்சிடுவதற்கு ஆராய்ச்சிசெய்து வைத்திருந்தார். சிவஞானபோதமாபாடியம் இரண்டாம்பதிப்புக்குப் பல நுண் மாண் குறிப்புகளும் எழுதிவைத்திருந்தார். வசதிக்குறைவால் இவற்றையெல்லாம் அவர் எண்ணியவாறு முடிக்கக்கூடவில்லை. இது குறித்து அவர் எமக்கு நான்குவருடங்களுக்குமுன் எழுதிய கடிதத்தின் ஒரு பகுதியை ஈண்டு உதகரிக்கின்றாம்:—

"யான் கற்றவர் பிறர்போலச் சுயநலம்பற்றி உழைப்பவ னல்லன். எனது ஆயுள் முற்றும் சைவசமய விருத்தி தமிழ்க் கல்வி விருத்தியாகிய பொதுநலத்தின் பொருட்டே கழித்துவருதல் பிரத்தியக்கம். யான் எடுத்துக்கொண்ட ஷ தருமங்கள் எனக் குப் பின்னும் நடத்தற்கு வேண்டிய காரியங்களைச் செய்யவிடாமல் சைவசமயிகள் யான் சென்ற சென்ற தலங்களில் தங்கள் தங்கள் காரியங்களை முடிப்பித்தலினால் யான் இதுவரை என் காரியத்தை முற்றுவிக்கக் காலம் வாய்க்கப் பெற்றிலேன். எங்காயினும் பொதுக்காரியத்துக்கு உழைத்துக்கொண்டுதான் இருப்பேன். எல்லாம் சைவதருமந்தானே யென்கின்ற பொது நோக்கமே

அதற்குக் காரணம். இனி அதனைச் சுருக்கி, அச்சிடுகிற வேலையைப் பெருக்க நிச்சயித்தே திருச்செந்தூர் வித்தியாசாலையைப் பூர்த்திசெய்து அதில் வித்தியாரம்பஞ் செய்துகொண்டு விரைவில் வந்து அச்சுவேலையை இடையீடின்றிச் செய்யுங் கருத்துடையனாயினேன். என்னை? அது செய்யாது அச்சுவேலையைத் தொடங்கின் அது பின்னும் நெடுங்காலம் கிடந்துவிடுமாகலான். பிரமஸ்ரீ செந்திநாதையரவர்களிடமிருந்து பெற்ற அரிய பெரிய இன்றியமையாத சைவசமய நூல்கள் அநேகமிருக்கின்றன. கொண்டுவந்து காட்டுவேன். அவைகளை அச்சிடுதற்கு இக்காலம் பொருளுபகரிப்பாரில்லை. ஆதலால் அச்சியந்திர வருவாய்கொண்டே அச்சிடவேண்டும். ஆதலால், பலர்க்கும் பயன்படும் அந்நூல்களை எனக்கு உதவியாயிருந்து அச்சிடுவித்துப் பயன்படுத்திப் புண்ணியம் புகழ்களை அடையவேண்டியது தங்கள் கடமையாகும்."

தருமபுர ஆதீனத்துப் பண்டார சந்நிதிகள் இவர்மாட்டுப் பெருமதிப்புவைத்து வித்வ சிரோமணி என்ற பட்டமளித்துப் பாராட்டியுள்ளனர். இவரது பார்வையிலேயே அம்மடத்துப் பிரசுரங்களெல்லாம் வெளியாயின. இறக்குந் தருணத்தில் முத்தி நிச்சயச் சிற்றுரை அச்சாகி வந்தது. கடைசிவரையில் நூல் அவரால் பார்வையிடப்படும் பாக்கியத்தைப்பெற்றது.

தனக்கெனவாழாப் பெற்றியாளராகிய இப்பெரியார் மேற்கொண்ட கருமங்களை முற்றுப்பெறச் செய்வது சைவசமயிகளுக்குப் பெருங்கடனாம்.

---

# காழிக்கண்ணுடைய வள்ளலார்

[திரு. ப. அ. முத்துத்தாண்டவராயபிள்ளை அவர்கள்]

(ம-ச்சிலம்பு, ௧௧-ம் பரல், ௩௬௫-ம் பக்கத் தொடர்ச்சி)

(ரு) கண்ணுடையார் அவதார மகிமையும், அன்னாரைப் பற்றிக் கர்ணபரம்பரையில் வழங்கிவரும் கதைகளும். திருவருட்பிரகாச வள்ளலார், வள்ளல் என்று தொடங்கும் திருவெண்பாவிற்கு எழுதிய விருத்தியுரையும் திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் எழுதிய ஒழிவிலொடுக்க உரையும் அனவரத விநாயகம் பிள்ளை முதலிய பெரியோர்கள் எழுதிய முகவுரையும், பிறசான்றோர் கூறிவரும் ஐதிக உரையும், நோக்குக.

மறைமுடிவாம் பெரும்பொருளும் வயங்குமா கமமுடிபும்
உறைதருமாற் கைலையென வுரைத்துமலங் கழுவுதற்கே
யறைகெழுபா சந்தவிர்க்க வவ தரித்த வப்புருடன்
கறைகடியுங் கடற்காழிக் கண்ணுடைய வள்ளலே.

(௬) கண்ணுடைய வள்ளலாரது ஞானுனுபவ விலாசப் பிரகாசம். வேதமுடியின் கண்ணும், ஆகம முடியின்கண்ணும், விளங்கும் சிவானுபவ நிலையில் நிற்குந் தன்மையை ஒழிவி லொடுக்க முதலிய நூல்களில் கூறுமாற்றுற் கண்டுணர்க. சிவா நந்த மாலையினும் இவ்வுண்மை பெறப்படும்.

அடைகொண்டு மலர்கொண்டு மகங்கொண்ட நிறைகொண்டும்
விடைகொண்ட பெருமானை விமலஞா னங் கொண்டும்
மிடைகொண்ட வானந்த மேவியாங் குருவென்ப
கடைகொண்ட கடற்காழிக் கண்ணுடைய வள்ளலே.

(எ) வள்ளலார் லோக சங்கிரகமும் தீக்ஷாக்கிரமமும். அணைந் தோர் தம்மை முற்றிய நம் பெருமான் தமிழ் மண்டல முற்றுஞ் சென்று ஞானசரியை முதலிய நான்கு நிலையையும் விளக்கி, குரு பத்தி மூலமாகப் பக்குவிகளுக்கு உபதேசித்துவந்த வரலாற்றைக் கேட்டுணர்க.

பெருந்தகைய உலகெங்கும் பேசரிய கலைமலிய
விருந்தசிவ தீக்கைநெறி யிருநிலத்தோர் கொளவிரும்பப்
பொருந்துசிவ ஞானகுரு புங்கவனுய் நிற்கின்றுன்
கருந்தடங்கொள் கடற்காழிக் கண்ணுடைய வள்ளலே.

(அ) கண்ணுடைய வள்ளல் ஞான நூல்களை அருளிச்செய்து ஞானசாரிய பரம்பரைக்குத் தாபனுசாரியராக ஆயது. இவ்வியாசத் தின் முற்பகுதிகளிலும் நியதிப்பயன் முகவுரையிலும் காண்க.

" தீதாக நன்றாகுஞ் சிவலிங்க பூசைமுதல்
ஆதார கலையாக வவனியுளா ரோதுதற்கு
மீதாகு நூலியற்றி விளங்குமெங் கன்மவினை
காதாரக் கடற்காழிக் கண்ணுடைய வள்ளலே.

(௯) கண்ணுடைய வள்ளலாரது ஞான நூல்களின் ஆராய்ச் சியும் அவற்றிற்கு உரைவந்த வரலாறும். சிதம்பரசுவாமிகள் சரித் திரத்தாலும் இராமலிங்கசுவாமிகள் வரலாற்றாலும் இவை உணரப் படும்.

பண்தழுவு மெய்ப்பாட்டின் பயனுணரப் போரூரன்
பெண்தழுவு பாசத்தான் பேரருளாலுரை வழங்க
எண்தழுவு மெழுத்தாகி யியலாகி யியைந்தனனல்
கண்தழுவு கடற்காழிக் கண்ணுடைய வள்ளலே.

(ய) கண்ணுடைய வள்ளலார் திக்குவிஜயம் செய்து அனுக் கிரகித்தது. இஃது இவ் வியாசத்தின் முற்பகுதியிற் காட்டப் பட்டது.

பாலுயரும் ஆப்பொழியும் பாண்டிவள நாடுபொழில்
மேலுயருங் குயின்முழங்கும் வெஞ்சிலைக்கே ரளநாடு
சாலுயரு மணிமிளிருந் தண்டகநா டிவைபுரந்தான்
காலுயருங் கடற்காழிக் கண்ணுடைய வள்ளலே.

(கக) திருஞானசம்பந்தக் கண்ணுடைய வள்ளல் காழியிற் பரிபூரணமடைந்ததும், அவரது திருமட வரலாறும், அவரை ஆங்குப் பூசிக்கும் கிரமமும், அன்னாரை வழிபடும் முறையும், அதனல் எய்தும் பயனும். இவற்றைச் சாத்திரவாயிலானும், அனுபவ வாயிலானும் உணர்ந்து கொள்க.

பாதலத்த மீதலமும் பரவுபூ தலத்தோணி
யாதலத்த சம்பந்த னருளொளியா னவன்கண்டீர்
வாதலத்த துறைவாழ வந்துதிரு வவதரித்தோன்
காதலத்த கடற்காழிக் கண்ணுடைய வள்ளலே.

இவ்வாறு கண்ணுடைய வள்ளலாரது வரலாற்றைச் சுருக்கி வரைந்து அவரது உண்மைஞான அனுபவத்தை உணரும் வண்ணம் அப்பெருமானார் அவதரித்த ஸ்ரீகாழியம்பதியைத் துதி செய்வோமாக.

"முப்பழம் பொருட்கு முதற்பரம் பொருளாய்
மூவர்க்கு முதல்வனாய் முளைத்துக்
கப்புவிட் டிலகுங் கருத்தனை விளக்குங்
கண்ணுடை வள்ளனற் பதிதா
னப்பிடை மலர்ந்த சலசமு மடவா
ரானனங் களும்வயங் குறலாற்
றுப்புறழ் செங்கா லோதிமம் வயங்குந்
தூயநற் காழிவா ழியவே."

---

# இலக்கணமும் இலக்கியமும்
## Language & Literature

### தமிழகம்

[திரு. S. நடராஜன் அவர்கள் B. A.]

(முன் உசுக-ம் பக்கத் தொடர்ச்சி)

### தமிழகத்தின் முதற் கடல்கோளும் தலைச்சங்கமும்

23. தமிழகம் கடல்வாய்ப்படுமுன் தமிழர் உலகியற்றுறையிலும் ஆன்ம உணர்ச்சிற்றுறையிலும் சிறந்த நாகரிகம் பெற்று மொழி வளர்ச்சிக்காகச் சங்கங்கள் நிறுவியு மிருந்தார்கள். தமிழகத்திற்கு நிகழ்ந்த முதற் கடற்கோள் ஸ்காட் எலியெட் கூறும் ஐந்தாம் பெரு வெள்ளக்காலத்தில்தான் நிகழ்ந்திருக்கவேண்டும். ஆதலால் தலைச்சங்ககாலம் இற்றைக்கு 9500 ஆண்டுகட்கு முன்னர் எனல் வேண்டும். இக்காலத்தில், இமயமலை, சிந்துகங்கைச் சமவெளி, பாரசீகம் முதலிய நாடுகள் கடலுள் இருந்தனவென்பதையும், இதன்பின்னரே நிலப்பரப்பு இப்போதைய வடிவெய்திய தென்பதையும் ஞாபகமூட்டுகிறேன்.

24. இற்றைக்கு 9,500 ஆண்டுகட்கு முன்னமே இருந்த தலைச்சங்கம், ஏறக்குறைய 4500 ஆண்டுகள் நிலைந்து 89 அரசர்கள் தொடர்ந்த ஆட்சியில் நடைபெற்றதாக இறையனார் அகப்பொருளில் காண்கிறோம். இச் சங்கம் நிறுவிய முதல் மன்னன் காய்சின வழுதி யென்றும் இறுதி மன்னன் கடுங்கோன் என்றும் கூறப்பட்டுள்ளன. சங்கமிருந்தார் 549 தின்மர் என்பர். ஆனல், அவர்கள் யாவரும் ஒரே காலத்தவர் எனக் கூறமுடியாது. இக்காலத்தில் செந்தமிழ்நாடென்னும் சிறப்புப் பெயர் பெற்ற பாண்டிநாடு குமரியாறு முதல் பஃறுளி ஆறுவரை 49 நாடுகளாக 700 காவத தூரம் பரவியிருந்திருக்கின்றது. குமரியாற்றிற்கு வடக்கே விந்தியமலைவரை சேரர் சோழர் இருந்திருத்தல் வேண்டும்.

25. †செங்கோன்றரைச் செலவு என்னும் நூல் தலைச்சங்க காலத்தில் குமரியாற்றிற்கும், பஃறுளி ஆற்றிற்கும் இடையே யுள்ள பெருவள நாட்டரசனை முதல் ஊழித் தனியூர்ச்சேந்தன் பாடினதாகக் கூறுகிறது. இப்பொழுது வெளியிடப்பட்டிருக்கும் சங்கநூல்களிற் புறநானூற்றிலுள்ள சில செய்யுட்கள் வெகு தொன்மையானவை யெனக் கருதப்படுகின்றன. பண்டைப் பாவலர்கள் புரவலர்களை வாழ்த்தும்போது அவனுடைய நாட்டின் பெரும் ஆற்றின் மணலினும் நீண்டநாள் வாழக்கடவன் என வாழ்த்துதல் மரபு—

" சிறக்கநின்னாயுள்
மிக்குவரு மின்னீர்க்காவிரி
எக்கரிட்ட மணலினும் பலவே" (புறம் 43.)

"மண்ணாள் வேந்தே நின்வாணாட்கள்
தண்ணார் பொருநை மணலினுஞ் சிறக்க" சிலப்பதிகாரம்.

இம்மரபை ஒட்டிப் பாண்டியனை வழுத்தும் புலவர் பஃறுளிமண லைச்சுட்டிக்காட்டுதல் தலைச்சங்க காலத்தில் பஃறுளி இருந்தமை யைக்காட்டுகிறது.

"எங்கோவாழிய குடுமி தங்கோச் சென்னீர் பசும்பொன்
வயிரியர்க்கீத்தமுன்னீர் விழவின்நெடியோன்
நன்னீர் பஃறுளி மணலினும் பலவே" (புறம் 9.)

என, பாண்டியனையும் பஃறுளியையும் குறித்தமை காண்க. "கடல் பொருது முன்னொருகாலத்து அவனது (பாண்டியனது) தென்றிசைக்கண்ணதாகிய பஃறுளியாற்றுடனே பலவாகிய பக்க மலைகளை உடைய குமரிக்கோட்டையும் கொண்டதனால்"; 'அங்கனமாகிய நிலக்குறைக்கு சோழநாட்டெல்லையிலே முத்தூர்க் கூற்றமும், சேரநாட்டுக் குண்டூர் கூற்றமும், என்னும் இவற்றை

†"செங்கோன்றரைச் செலவைச் சேந்தன் றனியூரான்
துங்கன் றமிழ்த்தாப் புலித்தொடரா- லங்கிசைத்தான்
சக்கரக்கோ முன்னின்று சாற்றும் பெருவூழி
யக்கரக்கோ நாமஞ்சு வாம்."

பஃறுளியாற்றுத் தலைப்பாய்ச்சல் ஏழ்தெங்கநாட்டு
முத்தூர் அகத்தியன்.

—தமிழ்மொழியின் வரலாறு

வி. கோ. சூ.

இழந்த நாட்டிற்காக" வென்று ஆண்டா னென்பது பின்வரும் செய்யுள்களால் அறியக் கிடக்கின்றது.

"மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நாடிடம்பட
புலியொடு விண்ணீக்கிப் புகழ்பொறித்த கிளர்கொண்டை
வலியினான் வணங்கிய வாடாச்சீர்த் தென்னவன்.

(முல்லைக்கலி 4.)

"வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி

(சிலப்பதிகாரம்.)

26. இதுகாறும் கூறியவாற்றால் முதற் கடற்கோளின் பல ருய்ப பஃறுளியாறுவரை யிருந்த நாடு பாண்டியனது எனவும் குமரிக்கு வடக்கே சேரசோழர் ஆண்டதும் பெறப்படுகிறது.

## தமிழர் புதுநிலப் பரப்பிற்கேகல்

27. தமிழகத்தின் தென்பாகம் கடல்வாய்ப் பட்டதின் பின்னரும், சிந்துகங்கைச் சமவெளி தோன்றும் முன்னரும் நந்தமிழ் நாடு தீவாய் இருந்திருத்தல் வேண்டும். இக்காலத்தேதான் இதற்கு நாவலந்தீவு எனப் பெயர் வந்தது போலும். சிந்துகங்கைச் சமவெளி தோன்றியதும், முதல்முதல் அதில் குடியேறினவர் தமிழரேயாவர். தமிழர்கள் கடல்மூலமாகவும் தரைமூலமாகவும் பாரசீகம், பாலஸ்தீனம், எகிப்து முதலிய புதுநிலப் பரப்புகளுக்குச் சென்றனர். அக்கேடியர், சாலடியர், எகிப்தியர், முதலியோரும் அவர்கள் இனத்தைச் சார்ந்தோரும் தமிழரேயாவர். இஃது அவர்களின் பண்டைக்கால பழக்க வழக்கங்களிலிருந்து விளங்குகிறது. வி. ஜே. தம்பிப்பிள்ளை யென்பார், தமிழர் எகிப்தியர்களது சிற்பக்கலைகள் ஒரேதன்மையன வென்றும், மதுரையிலுள்ள சிவாலயமும், ஜெருசலேம், எகிப்து முதலிய இடங்களிலுள்ள ஆலயங்களும் ஒற்றுமையுடையன வென்றும், நினேவாவின் ஆலயத்தும் தென்னிந்திய ஆலயங்களிலும் நந்தி காணப்படுகிறதென்றும் சிவபெருமானே

(Zorastrians) சரஸ்தியருடைய ஜெஹோவா என்றும் கூறுகிறார். எனவே தமிழர்கள் புதுநிலப் பரப்பில் முதலில் குடியேறினரெனவும் குடியேறும்போது சிவனை வழிபடுவோ ராயிருந்தன ரென்பதும் பெறப்படுகிறது.

வடநாட்டார் தென்றிசை நகர்தல்

28. இமயமலை முதலிய புதுநிலப் பரப்புத் தோன்றவும் வட பாகத்திருந்த ஆரிய வகுப்பினர் தென்முக நோக்கி வந்தனர். ஆகவே, புது நிலப்பரப்பில் இருபெருஞ் சாதியாரும் எதிர்த்துப் பொருதநேரிட்டது. இவ்வாறு, தங்கள் தாயகத்தை விட்டுப்புறப் பட்ட ஆரியர்கள் மேற்கேயும் தெற்கேயும் கூட்டங்கூட்டமாய்ச் சென்றார்கள். மேற்கே சென்றவர்கள்தான் தற்காலத்திய ஐரோப் பியர்கள். தென்றிசை வந்த ஆரியக் குழுவினர் சிந்துகங்கைச் சமவெளியடைந்து ஆங்குள்ள தமிழருடன் கலந்தனர். இக்காலம், தமிழகம் முதற்கடற்கோள் பட்டபின்னரும், இரண்டாம் கடற் கோள் படுமுன்னரேயுமாம். இக்காலத்தில் தமிழர்களின் தாய் நாட்டெல்லை இமயமுதல் குமரியாறு ஈறாக இருந்தது.

(தொடரும்)

---

## கன்னனும் கும்பகர்ணனும்

(பண்டிதர் திரு. மா. இராசமாணிக்கம் அவர்கள்)

கன்னன் வரலாற்றைப் பாரதத்தில் காணலாம். கும்ப கர்ணன் வரலாற்றை இராமகாதையில் பார்க்கலாம். இருவேறு நூல்களில் உள்ளவர்களை யாம் இங்கு அவர்கள் குணநலங்களைக் கொண்டு ஒன்று சேர்க்க முயல்வதே இக்கட்டுரையின் கருத் தாகும்.

கன்னன் இயற்கையில் நல்லவன். அரவக் கொடியோன் தன்னை ஆதரித்து வந்தமையால் அவன் எண்ணப்படியே இவன் நடந்துவந்தான். ஆனால், உண்மை, நியாயம், செய்ந் நன்றியறிதல் முதலிய உயரிய குணங்கள் அவனிடம் ஒளிர்ந்தன. கும்பகர் ணனை அரக்கன் என்றும் ஆறுமாதகாலம் தூங்குபவன் என்றும் ஆபாசப் படுத்திக் கதை எழுதி விட்டனரேயன்றி, உண்மையில் கும்பகர்ணன், உயரிய குணநலமும் ஒழுக்கமும் வாய்ந்த 'தமிழன்' என்பதை இக்காலத் தறிஞர் அறிவர். கம்பர் இதனை அறிந்தோ

அறியாமலோ, இராமனிடம் கொண்ட கரைகடந்த அன்பாலோ, வால்மீகிக் கூற்றைப் பின்பற்ற வேண்டும் என்று எண்ணியோ, இராவணனையும் அவனது உறவினரையும் அரக்கராக அமைத்து விட்டனர். முதல் நூலும் வழி நூலும் அரக்கன் என்று கூறுவ னவேயன்றி அறிவுடைமக்கள் அரக்கர் எனக் கொள்ளார். நிற்க,

கன்னன் கதையை அறியாதார் இலர். ஆதலின் ஈண்டு வேண்டிய பகுதியை மட்டும் வரைகுவம். கண்ணன் துரியோதன னிடம் தூதனாகச் சென்றபோது, கன்னன் குந்தியின் மைந்தன் என்னும் உண்மையைக் குந்திக்கு அறிவித்து, அவனைப் பாண்டவ ருடன் சேர்க்கும்படி கூறினான். குந்தி, கன்னனிடம் சென்று தான் அவன் அன்னை என்பதை மெய்ப்பித்தாள். பின்னர், குந்தி, மைந்தனைப் பாண்டவருடன் சேருமாறு வற்புறுத்தினாள். இவ் விடத்தேதான் கன்னனது உயரிய குணம் ஒளிர்வது. அன்னையின் மொழி கேட்ட மைந்தன், "அம்மே! பெற்றோர் இன்னார் என்று அறியாதிருந்த என்னைத் தன் உற்ற நண்பனாகக் கொண்டான் அரவக் கொடியோன்; சீரும் சிறப்பும் தனது பெருவாழ்வும் எனக்கே யளித்தான். என்னுடன் உண்டான்; என் எச்சில் என்னோடு உண்டான்; என்னை அங்க நாட்டிற்கு அரசன் ஆக்கினான்; தன் தம்பியரையும் சுற்றத்தாரையும் என்னடி வணங் குமாறு செய்தான். மற்றும் ஓர் செய்திகூறுவல். ஒருநாள் அந்தப்புரத்தில் யானும் அவன் மனைவியும் தனித்திருந்து சொக் கட்டான் ஆடினோம்; அவ்வமயம் துரியோதனன் என் பின்புறத் தில் வந்தான். அதை யான் காணவில்லை, எதிர்ப்புறத்தே யிருந்த அவன் மனைவி கண்டாள்; உடனே எழுந்தாள். அவள் எழுந்த காரணத்தை அறியாத யான் அவளை உட்காரச் செய்ய, அவளது மேலாடையைப் பற்றினேன். அவ்வளவில் அவளது மணிமாலை இற்று வீழ்ந்தது. மணிகள் கீழே சிதறின. அந்நிலையில் அவள் கணவன் புன்சிரிப்புடன் என்முன் வந்து நின்றான். அவனைக் கண்ணுற்ற யான் என் பிழையை நினைத்து அயர்ந்தேன்; செய்வது அறியாது விழித்தேன். அப்போது அவன், 'அண்ணா! இம்மணிக ளைக் கோக்கவோ, அல்லது பொறுக்கவோ' என்றான். அதாவது, 'நான் கோக்கவோ அல்லது இம்மணிகளைப் பொறுக்கவோ' என் பது பொருள். என்மீது எள்ளளவும் சந்தேகம் கொள்ளாத அப் பரந்த நோக்க முடையானது மனப் பான்மையை அப்போதே

யான் அறிந்தேன். அம்மா! இத்தகைய அரசனுக்கு யான் எவ்வாறு துரோகம் செய்வேன்? எங்ஙனம் அவன் செய்த நன்றியை மறப்பேன்? அங்ஙனம் யான் வரமாட்டேன். அவனது செஞ்சோற்றுக் கடன் கழிப்பதுவே எனக்கினிப் புகழும் கருமமும் ஆகும்,'' என்றான். இந்நிலையைப் பாரதம் பாடிய பெருந்தேவனார் அழகுபடக் கூறியுள்ளதைக் கண்டு மகிழ்க:

"மதமா மதக்களிற்றான் மற்றெனக்குச் செய்த
உதவி யுலகறியு மன்றே—உதவிதனை
நன்றுசெய்தோர் தங்களுக்கு நானிலத்தில் நல்லோர்கள்
குன்றுவதோ செய்ந்நன்றி கூறு.

நன்றாக மன்னன் எனக்கிந்த நாடறிய
குன்றாத நன்மை பலகொடுத்தான் என்றாலும்
ஈண்டவன் செய்த வுதவியினை யான்மறந்தால்
தீண்டுவளோ தாமரையாள் தேர்ந்து.

மைத்தடங்கண் மாதேவி வார்துகிலை யான்பிடிப்ப
அற்று விழுந்த அராமணிகள்- மற்றவற்றைக்
கோக்கேனோ வென்றுரைத்த கொற்றவர்க்கெ னுருயிரைப்
போக்கேனோ வெஞ்சமத்துப் புக்கு"

பாரதம் பாடிய வில்லிபுத்தூராழ்வாரும்,

"திடம்படுத் திடுவேலி ராஜராஜனுக்குச்
செருமுனைச் சென்றுசெஞ் சோற்றுக்
கடன் கழிப்பதுவே எனக்கினிப்புகழுங்
கருமமும் தருமமும் என்றான்,"

எனக் கூறி மகிழ்ந்தார்.

எனவே, கன்னன் வீர பராக்கிரமம் வாய்ந்த பாண்டவர் தன் தம்பியர் என்பதை அறிந்தும், அவர்களைச் சேர்வதால் தான் புவியரசாகலாம் என்பதை அறிந்தும், அந்த அற்ப ஆசையைச் சிறிதும் கொள்ளாது, நன்றி மறவாச் செயலையே சிறந்ததாகக் கொண்டான் என்பது பெறப்படுகின்ற தன்றோ? இத்தகைய சிறந்த குணமே மக்களிடம் வேரூன்றி இருக்க வேண்டியது. இக்கன்னனே போர்க்களத்தில் கண்ணன் தரிசனத்தைக் கண்ணுற்றபோது, 'செஞ்சோற்றுக்கடன் கழித்தேன்' எனக் கூறிக் களித்தான். (தொடரும்)

# தமிழ்மொழியின் ஒலிகளும் எழுத்தும்

[ஈப்போ, திரு. தியாகராயன் அவர்கள்]

(முன் ௨௬௪-ம் பக்கத் தொடர்ச்சி)

மேற்கூறியவாறே இன + எழுத்து என்னும் சொற்களிடையே வகர ஒற்றைப் புகுத்தொலிக்க 'இனவெழுத்'தெனப் புணர்ந் தொலிக்கும். இவ்வாறு யகர ஒற்றும், வகர ஒற்றும் உடம்படு மெய்களாயின.

அன்றியும் மெய் இயல உயிரொலி ஒன்றி இடங்கொடுப்பது போல இவ்வுடம்படு மெய்களிரண்டும் ஈருயிரொலிகள் புணர்ந் தியங்க இடங்கொடுப்பதால் உயிரின்தன்மையைக் கொஞ்ச முடைத்தாம்.

மேற்கூறியவாறு யகரமெய்க்கு இகர உயிர் ஒலி சம்பந்த முடையதால், யி, யீ, யெ, யே, யை என்னும் உயிர்மெய்கள் மொழிக்கு முதலில் வாரா. ஏனெனில் தன்னிடத்தே இகர உயி ரொலிப் பற்றுடையதால் அவ் இகரஒலி யியங்கும் இ, ஈ, எ, ஏ, ஐ என்னும் ஐந்துயிர்களையும் தவிர்த்து, இகரப்பற்றில்லாத மற்ற உயிர்களொடு புணர்ந்து மொழி முதலில் வருவதாகும்.

மேலும், இகர ஒலியியங்கும் உயிர்களொடு புணர்ந்து மொழி முதல்வரின், ஈருயிர் மொழிமுதலில் வருங் குற்றமேற்படும்.

ஆகையால், "அ, ஆ, உ, ஊ, ஓ, ஔ யம் முதல்" என சூத் திரம் விதித்தார்.

(பவணந்தி, எழு. சூ. 103)

இதுபோலவே வகர ஒற்றும் உகர உயிரொலியுடன் பற் றுடையதால், அவ்வுயிரொலி யியங்கும் உ, ஊ, ஒ, ஓ, அல்லாத பிற உயிரொலியொடு புணர்ந்து மொழிமுதலில் வரும்.

"உ, ஊ, ஒ, ஓ வலவொடு வம் முதல்"
என்னும் விதியைக் காண்க. (பவணந்தி, எழு. 102)

'வௌவுதல்' என்பது போன்ற சொற்களில் வகர ஒற் றானது, உகர ஒலியுடன் இயங்கும் ஔகார உயிருடன் புணர்ந்து மொழிக்கு முதலில் வந்தது. இது நான் முற்கூறிய காரணங் களுக்கு மாறாகும். யகர மெய்க்குக் கூறிய சூத்திரத்தில் இகர உயி ரொலியுடைய ஐகாரத்தை நீக்கியதுபோல் இவ்விதியிலும் உகர

உயிரொலியுடைய ஔகாரத்தை நீக்குவதே பொருந்தும். எனவே வௌவுதல் என்னும் சொல்லை 'வவ்வுதல்' என எழுதுவதே சரி.

இம்முறையில் இவ்விரண்டு மெய்களினும் உயிர்களின் இயக்கம் நன்குவிளங்க, ஆங்கில W, Y என்னும் எழுத்துக்களைப்போல் 'வ்,' 'ய்' என்பன அரையுயிர்களென நிறுவப்பட்டன. மேலும், Dr. Waddell என்பார் "எழுத்தின் பிறப்பு" என்னும் நூலில் (J, V, Y) என்னும் எழுத்துகள் பிற்காலத்தில் ஐரோப்பிய மொழிகளில் புகுக்கப்பட்டன வெனவும், அவ்வாறு பின் புகுக்கப்பட்ட V என்னும் எழுத்து F என்னுமெழுத்தின் வேற்றுருவிக்குறிப்பெனவும், அவ் V யானது உகர உயிரின் மெய்யொலியெனவுங் காட்டியுள்ளார். எனவே இவ் V என்னும் எழுத்து புகுக்கப்படுமுன் உகரத்தின் மெய்யொலியாய் வழங்கியது W என்னும் எழுத்தே. இந்த W என்னும் எழுத்து உ, ஊ போல ஒலிப்பதை (Websters) அகராதியில் விரிவாக எடுத்துரைக்கப்பட்டிருக்கிறது. (A Guide to Pronounciation ; rules 256 and 257.)

இதனால் W என்பது தமிழ் வகர ஒற்றுப்போல் ஒலிப்பதென நிறுவப்பட்டது.

யகர மெய் Y என்னும் ஆங்கில எழுத்தைப்போன்ற தென்பதற்கு அத்தாட்சியாக (Yard, Yes, Yore, Usury) என்னுஞ் சொற்களை ஒலித்துப்பார்க்கவும். அன்றியும் மேற்கூறிய சொற்களிலுள்ள யகர ஒலிகள் British Academy யின் விதிப்படி பிற மொழிகளை ஆங்கில எழுத்தில் மாற்றி எழுதுங்கால் யகர ஒலிகளாகவே, Ya, Ye, Yo, Yu என்பவைபோல் குறிக்கிறார்கள்.

ஆகையால் இவ்வாராய்ச்சியால் நிலைவதென்னெனின் பின் குறித்துள்ள ஓசைகளுக் கேற்ற குறிக ளமைக்கப்பட வேண்டுமென்பதாம்.

ககரத்தின் மெல்லோசை　Ga
சகரத்தின் மெல்லோசை　Z
டகரத்தின் மெல்லோசை　Da
தகரத்தின் மெல்லோசை　Tha as in this
பகரத்தின் மெல்லோசை　Ba
வகரத்தின் வேற்றுருவியாகிய Fa

ழுகரத்தின் வேற்ருெலியாகிய Za as in vision, azure
றகரத்தின் மெல்லோசை ru as in கன்று
செய்பவன் என்னுஞ் சொல்லிலுள்ள பகரவோசை.

கடைசியில் குறித்த றகர பகரங்களின் வேற்ருேசைகளைக் காட்ட இடையின ரகரமும் பகரத்தின் மெல்லோசைக்குறியும் போதுமெனத் தோன்றுகிறது. அன்றியும் பிறமொழிகளில் இவ்வெழுத்துக்களைப் பயன்படுத்துவதால் நம் இலக்கண விதிகளோடு முரண்படா. ஆகையால் 7 மெய்யொலிகளுக்கே ஏற்ற குறிகள் புதிதாய் அமைக்கவேண்டும்.

**Scripts to represent the above new Sounds**

**இப் புத்தோசைகளைக் குறிக்க எழுத்துக்கள் எவ்வாருக வேண்டுமென ஆராய்வோம்**

சில ஆண்டுகளுக்குமுன் Mr. J. Knowles (53 Paikgate Road, Chester) என்பவர் Bengalee பத்திரிகையின் பத்திராதிபருக்கு ஓர் கடிதம் எழுதியிருந்தார். அவ்வியாசம் "Simplifying Vernacular Scripts' என்னும் தலைப்புடன் அப்பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டது. அவ்வியாசத்திலிருந்து இக்கட்டுரைக்கு வேண்டிய சிலவற்றை எடுத்துக் காட்டுகிறேன்.

"A complete faunt of Nagari (Sanskrit) types has up to 1000 different 'sorts.' Looking at a Sanskrit Grammar we find that over and above the primary letters, the medial vowel signs, anuswara and other characters there are 215 conjunctions of two consonants, 136 conjunctions of three consonants, 27 of four consonants and 6 of five consonants. Then there are the multitudinous combinations of conjunct consonants with medial vowel signs. One way and another the combination of symbols for 14 vowels and 33 simple consonants amount up to a thousand different characters." After dealing similarly with Oriya, Malayalam etc., he states:—

"Now there is one vernacular which, somehow sometimes, has effected a very considerable simplifica-

tion. The Tamil script can be printed with 150 different conjunct consonant characters, a double consonant is just the same twice over, conjunct consonant is just the consonants one after the other without any change or form. This has done away with the necessity of many hundreds of types for conjunct consonants and final letter forms. (And ends with this query) Could the other vernaculars adopt the Tamil method?"

It is a far call indeed from over 1,000 to 150 types.

எனவே நம்மொழியின் எழுத்துக்கள் ஒலிகளைக் குறிக்கப் போதாமல் தடுமாறவுமில்லை அல்லது வடமொழியைப்போல் அளவுக்கு மிகுந்த வீண் எழுத்துக்களைப் புகுத்தித் திண்டாடவு மில்லை.

---

## நால்வகைக் காண்பதறிவு

1. எப்பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருண்
   மெய்ப்பொருள் காண்ப தறிவு. (குறள் 355)
2. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
   செம்பொருள் காண்ப தறிவு. (குறள் 358)
3. எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினு மப்பொருண்
   மெய்ப்பொருள் காண்ப தறிவு. (குறள் 423)
4. எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
   நுண்பொருள் காண்ப தறிவு. (குறள் 424)

1. யாதொரு பொருள் யாதோரியல்பிற்றாய்த் தோன்றி னும், அத்தோன்றிய வாற்றைக் கண்டொழியாது அப்பொருளின் கணின்று மெய்யாகிய பொருளைக் காண்பதே, மெய்யுணர்வு.

2. பிறப்பிற்கு முதற்காரணமாய அவிச்சை கெட, வீட் டிற்கு நிமித்த காரணமாய செவ்விய பொருளைக் காண்பதே ஒரு வர்க்கு மெய்யுணர்வு.

3. யாதொருபொருளை யாவர்யாவர் சொல்லக் கேட்பினும், அப்பொருளின் மெய்யாய, பயனைக் காணவல்லது அறிவு.

4. தான் சொல்லும் சொற்களை, அரிய பொருளவாயினும், கேட்பார்க்கு எளிய பொருளவாமாறு, மனங்கொளச் சொல்லி, பிறர்வாய்க் கேட்குஞ் சொற்களின் நுண்ணிய பொருள் காணா வரிதாயினும், அதனைக் காணவல்லது அறிவு.

ஒரத்தி. எம். முனிசாமி ஆச்சாரி.

# அறிவியற் பகுதி – Science

## ஒளி நூல் வரலாறு—(Astronomy)

[திரு. இ. மு. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள்]

(முன் ௨௭௫-ம் பக்கத் தொடர்ச்சி)

கணிதத்தின் பயனாக மக்களுக்குப் பயன் பெறுமாறு வெளி வருவது பஞ்சாங்கமே. பஞ்சாங்கம் என்பது ஐந்து அங்கமாம். அவையாவன:— க. கிழமை, உ. திதி, ௩. நாள் ௪. யோகம், ௫. கரணம் என்பன. இங்ஙனமாக ஐந்து உறுப்புக்களோடு கணி தப்பயன் வெளிவந்து இற்றைக்கு நூறு ஆண்டுகளே ஆயின. அதன் முன்னர் இது திரியாங்கம் என்ற பெயரோடு க. கிழமை, உ. திதி, ௩. நாள் ஆகிய மூன்று உறுப்புக்களோடு ஏடுகளில் குறித்து வைக்கப்பட்டு வந்தது. அதில் கோள்களின் பெயர்ச்சி யும், மறைவு (கிரகணம்) களும் வெளியிடப் பெற்றன.

அச்சுவாகனம் தோன்றியபின், இற்றைக்கு நூற்றிருபத் தைந்து ஆண்டுகளின் முன்னர் யாழ்ப்பாணம், வண்ணார்பண்ணை, மயில்வாகனம் பிள்ளை என்பாரின் மகனார் திரு. சோமசேகரம் பிள்ளை என்பார் திரியாங்கம் கணித்து முதன்முதலாக அச்சியற்றி வெளிப்படுத்தினர். அவருக்கு அச்செயலில் பெருந்துணை புரிந்து ஆதரித்தவர்கள் கிறிஸ்தவ சங்கத்தார்.

திரியாங்கம் அச்சாகி வெளிவந்த இருபத்தைந்து ஆண்டுகளின் பின்னரே பஞ்சாங்கம் தோன்றிற்று. யாழ்ப்பாணம் பஞ்சாங்கம், திருநெல்வேலிப் பஞ்சாங்கம், கருங்குளம் பஞ்சாங்கம், இராமநாத புரம் பஞ்சாங்கம், ஆர்க்காட்டுப் பஞ்சாங்கம் முதலியன இற் றைக்கு ஐம்பது அறுபது ஆண்டுகளின் முன்னரிருந்தே வெளி யிடப் பெறுகின்றன. இப்பஞ்சாங்கங்களெல்லாம் பழைய வழி களைப் பின்பற்றி வெளி வருவனவாய் ஒவ்வொன்றிலும் பல மாறுபாடுடையனவா யிருக்கின்றன.

இதனிடையே திருவையாறு திரு. சுந்தரேச சிரௌதி என்பார் கிரீன்விச்சிலிருந்து வெளிவரும் நாவிகர் பஞ்சாங்கத் (Nautical Almanac) தை ஆதாரமாகக்கொண்டு கும்பகோணத்திற்குப் பஞ்

சாங்கம்கணித்து அதற்குத் திருக்கணித பஞ்சாங்கம் எனப் பெயர் தந்து வெளியிடத் தொடங்கினர். அவர் காலத்தின்பின், அவரது மகனர் திரு விசுவநாத சிரௌதி B. A. என்பார் அதனைத் தொடர்ந்து கணித் துதவிவருகின்றனர். திரு. C. கோவிந்தராஜ முதலியார் சென்னைக்குக் கணித்து ஆனந்தபோதினித் திருக்கணித பஞ்சாங்கம் எனப் பெயர்தந்து சில ஆண்டுகளாக வெளியிடுகின்றனர். சென்ற பதினைந்து ஆண்டுகளாக சித்தார்த்தி ஆண்டு தொடங்கி நமது சைவப் பஞ்சாங்கம் வெளிவருவதாயிற்று. இது பழைய முறைகளைத் தழுவியதே.

மதுரை திரு. கூடலிங்கம் பிள்ளை யென்பார் ஆனந்த ஆண்டு முதல் ஆனந்த முடிந்து அட்சயவரை எழுபத்துமூன்று ஆண்டுகளுக்கு ஒரு பஞ்சாங்கத் தொகுதி நூல் வெளியிட்டிருக்கின்றனர். சென்னைச் சட்டசபைத் தலைவராக இருந்த திரு. L. D. சாமிக்கண்ணுப்பிள்ளை. M. A., B. L., என்ற புலவர் கி. பி. 1-முதல் கி. பி. 2000வரை பஞ்சாங்கம் கணித்து அரசாங்க உதவி பெற்று வெளிப்படுத்தி யிருக்கிறார். நான்குநேரி, மூனம்பண்ணை கிருஷ்ண ஜோஸ்யர் என்பவர் பண்டைக்காலப் பஞ்சாங்க கணனம், சார கணனம், ஸ்புடகணனம், கிரகணகணனம் ஆகியவற்றின் பல வழிகளையும் கோவை செய்து 1897-ல் அச்சியற்றி உதவினர்.

உண்மையில் சாலிவாகன மன்னவனுக்குப் பின்னர் இந்தியாவில் சோதிக்கணித வழிகளைச் சரியாகக் குறித்து வெளிப்படுத்தியோர் ஒருவருமிலர், அதனல் அதன்கண் உள்ள மாறுபாடுகள் செம்மையுறாது இருக்கின்றன. சீரும் சிறப்பும் பெற்று கணித முறைகளுக்கு உலகத் தாயகமாய் விளங்கும் இந்தியக் கணிதமுறை இக்கால நிலைக்கேற்பச் சீருறும் காலம் விரைவில் தோன்றுவதாக.

ஒளிநூல் வரலாறு முற்றும்.

---

## பொருணூல்—(**Economics**)

[திரு. B. நடராஜன் B.A. (Hons)]

(முன் ௩௧௯-ம் பக்கத்தொடர்ச்சி)

### ௩. பணத்தின் தொகை குறைதல்

அக்காலத்தில் பணத்தின் தொகை இருவழிகளாற் குறைவடைந்தன. (1) பொன்னும் வெள்ளியும் வெளிநாடு செல்லல். (2) பொன்நாணயங்களை அறவே புழக்கத்திலிருந்து போக்கவும்

பலவேறு வகையான வெள்ளி நாணயங்களைப் பயனற்றனவையென ஒதுக்கவும் காரணமாயிருந்த 1835-ற் கண்ட இந்திய நாணயச் சட்டம். வெள்ளியுந் தங்கமும் விரைந்துபோய்ப் புதை யுண்டு கிடக்கும் ஒரு பெருங்குண்டமென இந்திய நாடு தொன்று தொட்டே கருதப்பட்டுவருவதாயிற்று. இஃது எதனுலென்ருல், நம் நாட்டிலிருந்து விலையுயர்ந்த பண்டங்களை நாம் விற்றுவந்தோமாயி னும் அயல்நாட்டாரிடம் பொன்னைத் தவிர நாம் பெறுவதற்கான பண்டமொன்று மில்லாதிருந்தது. ஆகவே நமக்கு வரவேண்டுவன வற்றையெல்லாம் நாம் வெள்ளியாகவும் பொன்னுகவும் பெற்றுக் கொண்டிருந்தோம். இஃது உரோமானியப் பேரரசின் பொக்கிஷ அதிகாரிகள் நெஞ்சிலும் சஞ்சலம் விளைவித்தது. பொன்னெலாம் இந்தியாவுக்குப் புகுந்ததே உரோமாபுரியின் வீழ்ச்சிக்கு ஒரு தலை யாய காரணமாகக் கருதப்படுகின்றது. ஆதியில்வந்த ஐரோப்பிய வர்த்தகர்களுக்கும் அதே அனுபவம் நேர்ந்தது. ஸர். தாமஸ் ரோ என்பார் இதனை 'ஆசியா செழிக்க ஐரோப்பா இரத்தம் சொட்டு கின்றது' எனச் சுருங்கக்கூறினர். ஆகவே ஐரோப்பாவிலிருந்து இந்தியாவுக்குப் பொன் வெள்ளி முதலியவை அனுப்பப்படு வதைத் தடுக்கக் கண்டிப்பான சட்டங்கள் விதிக்கப்பட்டன. இங்கிலாந்தில் தங்கம் வெள்ளி முதலிய நாணயங்களோ, உலோ கக்கட்டிகளோ ஏற்றுமதி செய்வதைத் தடைசெய்பனவாய பல சட்டங்கள் ஏற்கனவே ஏற்பட்டிருந்தன. முதல் ஜேம்ஸ் அரசர் காலத்து இது மன்னிப்பு இகந்த பெருங் குற்றங்களில் ஒன் றெனக் கருதப்பட்டிருந்தது. ஆனுல் பிற்காலத்தில் இத்தகைய கொள்கைகள் பெரிதும் மாறுதலடைந்தன. எனவே, 18-ம் நூற்ருண்டின் முற்பகுதியில் கிழ இந்திய வர்த்தகக் கம்பெனியார் இந்தியாவினுள் இறக்கிய சரக்குகளிலே முக்காற்பாகம் பொன் னும் வெள்ளியுமாகும். ஆனுல் கம்பெனி இந்தியாவில் சொந்த மாக மாகாணங்களைப் பெறுந்தோறும் இந்தியாவுக்குத் தங்கமும் வெள்ளியும் அனுப்பிவருவது அவசியமில்லாதாகிவிட்டது; மேலும் கம்பெனிக்கும் சீனுவுக்குமுள்ள வியாபாரத்திற்குக் கூட இந்தியாவிலேயுள்ள பொன்னும் வெள்ளியும் பயன்படுத்தப் படுவதாயிற்று.

இவ்வாருக ஆறு எதிர்த்துப் பாய்வதாயிற்று. பல நூற் ருண்டுகளாக நிதியைக்கொண்ட இந்தியா இப்பொழுது அதில்

ஒரு பங்கை உமிழவேண்டியதாயிற்று. இதுவே மீண்டும் மீண்டும் சென்ற காலங்களில் நடைபெற்றுள்ளது. இதனை ஒருகால் 'நிதிநீக்கம்' என்று ஒரு விதியாகத்தான் கற்பிக்கலாமோ என எமக்குத் தோன்றுகின்றது. நூற்றாண்டுக் கணக்குகளாக இந்தியா பொன்னையும் வெள்ளியையும் பெறறுக்கொண் டிருக்கின்றது; பிறகு திடீரென அதில் ஒரு பங்கை மீண்டும் உகுக்குந் தருண மொன்று எழுகின்றது. இத்தகைய ஒரே தன்மையான நிதி இயக்கம் தொன்றுதொட்டு இன்று வரையில் இந்தியாவின் பொரு ளாதார நெறியிற் காணப்படுகின்றது. அதிலும், பின்னுமோர் சிறப்பு என்னவெனில், எப்பொழுது ஐரோப்பாவில் பொன்னி னளவு குறைவுபட்டதோ அப்பொழுதே இந்தியாவிலு மிருந்து பொன் வெளியே ஒழுகுகின்றது. 16-ம் 17-ம் நூற்றாண்டுகளிலே இவ்வொழுக்கு இந்தியாவை நோக்கியதாக இருந்தது. ஆனால் 1757-வது ஆண்டிற்குப் பிறகு ஒழுக்கின்போக்கு மாற்றமடைந் தது. பொன் இங்கிருந்து வெளியே ஏக ஆரம்பித்தது. 19-ம் நூற் றாண்டின் முற்பகுதியில் அயல்நாடுகள்நோக்கிப் பாய்ந்த தங்க வெள்ளி ஒழுக்கானது மிக வேகமா யிருந்தது. 1840-ம் ஆண்டிற்குப் பிறகு அந்த ஒழுக்கின் வேகம் அடங்கிற்று. பிளாசிப் போரிலடைந்த வெற்றியின் பயனாகக் கீழ் இந்தியக் கம்பெனியார் இந்தியாவில் பெரும் மகாணாதிபதிகளாய் விட்டனர். அதனால் ஏராளமான வருமானம் பெறலாயி னர். சுதேச மன்னரும் சிற்றரசர்களும் கம்பெனிக்கும் அதனைச் சார்ந்த ஆட்களுக்கும் விலையுயர்ந்த திரவியங்களைத் திறையாகவும் நன்கொடையாகவு மளித்தனர். கம்பெனியின் வேலையாட் களிலே பலர் பெருநிதி திரட்டினர். ஆறாண்டுக்குள் போள்ட்ஸ் என்பவர் 90,000 பவுன் சேர்த்ததாக ஒப்புக்கொண்டிருக்கிறார். அன்றியும் கம்பெனிக்கு இங்கிலாந்திற் பலருக்கும் ஏராளமான பொருள் ஆண்டுதொறும் செலுத்தவேண்டி யிருந்தது. இதற்கு வியாபாரச் சாக்குகளே யன்றி தங்கக்கட்டி, நாணயம் முதலி யனவும் அனுப்பிவரலாயிற்று. சீனதேசத்திலும்கம்பெனியாருக்கு வர்த்தகமிருந்தது. இதற்காக ஏராளமான தங்கமும் வெள்ளியும் அங்கு அனுப்பப்பட்டது. இந்தத்தங்கமும் வெள்ளியும் மீண்டும் இந்தியாவுக்கு வரவேயில்லை. இவற்றின் பயனெல்லாம் என்ன வென்றால் நிதிக்குவியல்கள் மட்டுமன்றி, தங்க வெள்ளி நாணயங்க ளும் ஆண்டுதொறும் ஆண்டுதொறும் நாட்டைவிட்டு அகன்றது.

புழங்கும் நாணயத்தின் தொகை அருகியது. இதற்குப்பதிலாக 'பில்லுகள்' 'உண்டிகள்' முதலிய நாணயத்தாட்களை வழக்கிற்புகுத்தி பணமிலாக் குறைவினை நிரப்பி இருக்கலாம். பில்லுகள் உண்டிகள் முதலியவற்றின் பயனைக் கம்பெனியாரும் உள்நாட்டு வியாபாரிகளும் நன்கு அறிந்திருந்ததுமன்றி அவற்றைக் கையாடியும் வந்தனர். ஆனால் பற்பல காரணங்களால் அவற்றின் தொகை மிகக் சுருங்கிய அளவிலேயே அமையவேண்டியதாயிற்று. தொடக்கத்திலிருந்து இவ்வாறு நிதி நாட்டிலிருந்து வெளியேறுவதன் தீமைகளைக் கம்பெனியார் உணர்ந்தனர். ஆனால் நெடிது காலம் வரை அவர்களுக்கு அதனை ஒழிக்க இயலாதாயிற்று.

இந்தியா ஏற்றுமதி செய்துவந்த பண்டங்களின் தலைமை நிலை தணிந்ததும் இவ்வாறு நிதி ஏகுவதற்கு மற்றோர் காரணமாக இருந்தது. முதன்முதல் ஐரோப்பிய நாடுகள் இந்தியாவோடு வாணிபம் நடத்துகையில் மிளகும் காலிக்கோவுமே இந்தியாவின் தலையாய ஏற்றுமதிச் சரக்குகளாயமைந்திருந்தன; இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டு வந்த சரக்குகளில் பெரும்பாகம் இவ்விரண்டு பண்டங்களேயாகும். ஆனால் 18-ம் நூற்றாண்டிறுதியில் இவ்விரு ஏற்றுமதிப் பொருள்களும் அளவிலேயன்றி விலையிலும் சுருங்கின. மிளகின் தலைமை போவதற்குக் காரண மென்னவெனில், முன்காலத்தில் கொடுங்குளிர் காலத்தில் அங்கிலேய நாட்டில் கன்று காலிகளுக்குப் போதுமான பயிர் பச்சைகள் ஏற்றனவாக உண்டாகவில்லை. எனவே அவைகளைக் கொன்று அவற்றின் ஊனை அக்குளிர்காலத்தில் சேமித்து வைப்பதே வழக்கமாக இருந்தது. இவ்வாறு அந்த ஊன் கெட்டுவிடாமல் சேமித்து வைக்க ஏராளமான மிளகு இன்றியமையாததாக இருந்தது. ஆனால், பிற்காலத்தில் டௌண்செண்ட் என்பவரும் ஜெத்ரோடல் என்பவரும் சில வியவசாயப் பரிசோதனைகள் நடாத்திக் குளிர் காலத்துங் கன்று காலிகள் உயிர்வாழ்ந்திருக்க ஏற்ற சில கிழங்குச் செடிகளை ஏராளமாகப் பயிர்செய்ய முற்பட்டனர். இதன் பயனாக குளிர்காலத்தில் ஊனைச் சேமித்துவைக்கும் பழக்கம் ஒழிந்தது. அதோடு மிளகின் தலைமையும் சென்றது. காலிக்கோ வாணிபத்தின் கதி எவ்வாறாயிற்றென்றாலோ, பிரிட்டிஷ் தேசமானது 19-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இயந்திரப் புரட்சியின் பயனாக அதுகாறும் பருத்தித்துணிகளை இறக்குமதி செய்துகொண்டி

ருந்த ஒரு நாட்டிலிருந்து பருத்தித்துணிகளை ஏற்றுமதி செய்யுமோர் நாடாய்—தலைமை ஏற்றுமதிநாடாய்—திரிந்தது. புதிதாய்க் கண்டுபிடிக்கப்பட்ட நீராவிச் சத்தியா லியக்கப்பெற்ற ஆலைகளின் உதவியால் இங்கிலாந்தில் நெசவுத் தொழில் மிகச் சொற்பச்செலவில் செய்யப்படுவதாயிற்று. இதனால் அதுவரைத் துணிக்கு இந்தியாவையே எதிர்பார்த்திருந்த ஐரோப்பியநாட்டுச் சந்தைகளைப் போட்டியாற் கொண்டதுமன்றி இந்தியாவிற்குள்ளும் புகுந்து இங்குள்ள கையினால் இழைக்கப்பற்ற விலை ஏறின காலிகோவுக்கும் மஸ்லினுக்கும் உலைவைத்தது. என்னே இயந்திரத்தின் வன்மை! இங்கிலாந்தில் அக்காலத்தில் இந்தியத் துணிச்சரக்குகள் மீது சுமத்தப்பட்ட பளுவான சுங்கங்களும் இந்திய ஏற்றுமதியின் அழிவை விரைவாக்கியது என்பது மறுக்கப்படாததே எனினும் இந்த அழிவு கேவலம் மனித உழைப்புக்கு மேலுள்ள இயந்திரத்தின் ஏற்றத்தால் மட்டும் எங்ஙனமும் விளைந்தே தீரும். (தொடரும்)

---

## புத்தர் பிரான் பொருண்மொழிகள்

[பண்டிதர் திரு. அ. நடராசபிள்ளை அவர்கள்.]

### 9. தலைவனின் கடமைகள்

தலைவனே!

1. ஊழியர் வலிமைக் குகந்தபணி கொடுப்பாய்.
2. செய்பணிக் கியைந்த கூலியைச் சிதையேல்.
3. ஊழியர்க் குண்டாம் நோயினை யொழித்திடு.
4. இடைக்கிடை யவர்க்குநல் லேற்றமாம் விருந்திடு.
5. ஓய்வுநாள் கொடுத்தவ ரூக்கத்தைப் பெருக்கு.

### 10. தொழிலாளரின் கடமைகள்

தொழிலாளர்காள்!

1. காலையி லெழுந்து கருதுமின் செய்தொழில்.
2. தலைவ னுறக்கந் தனைக்கண் டுறங்குமின்.
3. பெற்றதைக் கொண்டு பெருமகிழ் வுறுமின்.
4. ஊக்கங் கொண்டே யுயர்நிலை யடைமின்.
5. தலைவனைத் தூற்றுந் தவற்றினை யொழிமின்.

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## மேற்கோள்களும் அவற்றை அறிவு வளர்ச்சிக்குப் பயன்படுத்தும் முறையும்

(திருவாளர் மா. வே. நெல்லையப்பபிள்ளை அவர்கள் B. A.)

மேற்கோள் என்ற தமிழ்ச்சொல் மேல், கோள் என்ற இரண்டு சொற்களாலாகி ஒருசொல் நீர்மைத்தாய் வழங்கப்பட்டு வருகிறது. ஒருவர் தாமாக அறியுங் கருத்து அல்லது உண்மைக்கு மேலானதாயிருக்கும் கருத்து அல்லது உண்மை ஒன்றைக் கொள்வது அவருக்கு மேற்கோள் ஆகும். அத்தகைய மேலான கருத்து அல்லது உண்மையைக் கூறுகிறவர் அதனைக் கொள்ளுகிறவருக்கு மேலான அறிவுடைய ராயிருப்பர்; ஆதலின் அவர் அவருக்கு ஆசிரியராவார்; ஆதலின், மேற்கோளானது ஆசிரியவசனம் என்று கூறப்படுகின்றது. ஆசிரியர் பலவகையர். ஆசிரியர் ஒருவர் வேறொருவருக்கு அல்லது வேறு சிலருக்கு ஆசிரியராயிருக்கலாம்; அல்லது அவர் ஒரு சமயத்தைச் சார்ந்த பெருமக்கட் கூட்டத்துக்கு ஆசிரியராயிருக்கலாம். சிலருக்கு அல்லது ஒரு சிறு கூட்டம் மக்களுக்கு ஆசிரியர் ஒருவர் நூல்களைக் கற்று ஆராய்ந்து தெளிந்து கூறுகிற கருத்து, அச்சிலருக்கு அல்லது அச்சிறு கூட்டமக்களுக்கு மேற்கோள்களாக விருக்கும். ஒருசமய ஆசிரியர் கூறும் கருத்துக்கள் அல்லது உண்மைகள் அச்சமயிகள் எல்லாரும் கொள்கிற மேற்கோள்களாகும். இதுவன்றி யாதாமொருசமயத்தில் எவராயினும் ஓர் அறிஞர் தாம் ஒரு சொற்பொழிவில் கூறுகிற கருத்துக்களை அல்லது உண்மைகளை அதனைக் கேட்கிற சிலர் அல்லது பலர் மேற்கோள்களாகக் கொள்ளலாம். மேற்கோள்கள் நூல்களில் எழுதப்படலாம், அல்லது சொற்பொழிவுகளில் கூறப்படலாம். மேற்கோள்கள் எவ்வாறு பிறருக்குத் தெரிவிக்கப்படினும் அவைகளுடைய தன்மை மாறாது. சொல்கிறவர் அல்லது எழுதுகிறவர் அறிவுத்திறமைபற்றி மேற்கோள்களின் மதிப்பு வேறுபடும் தன்மையை உடையதாயிருக்கும்.

2. மேற்கோள்களைக் கூறும் ஆசிரியர் அவர்களது அறிவின் வன்மைக்குத் தக்கவாறு பலதிறப்படுவர். அவர்களை இரண்டு பெரும் பிரிவினராக நாம் பிரிக்கலாம். கருவி கரணங்களைத் துணையாகக் கொள்ளாமல் இறைவனது அருள் தங்களிடம் நிரம்பப் பெற்ற காரணத்தால் அடைந்த தங்கள் மெய்யுணர்வினால் சமய உண்மைகளையும் பிறகருத்துக்களையும் அறியவல்ல பெரியார்கள் சிறந்த ஒரு வகையர்; ஐம்பொறிகள் மனம் முதலிய கருவிகரணங்களைத் துணைக்கொண்டு அறியப்படும் கருவி அறிவினால் அறியும் அறிஞர்கள் மற்றொரு வகையர்.

3. முதலாவது வகை மேற்கோள் ஆசிரியர்கள் பசுகரணம் நீங்கிச் சிவகரணமாக மாறப்பெற்ற தூய உள்ளத்தினை யுடையவர்களாய் இறைவனது நிறைவான அருட் பேரொளியின்கண் அடங்கி மேலான உண்மைகளை எல்லாம் நேராய் அறியும் ஆற்றலுடைய மெய்யுணர்வு விளங்கப் பெற்றவர்கள். தன்முனைப்பு உடைய தூய்மையில்லாத உள்ளத்திற்குரிய உள்ளச்சார்புகள் (Prejudices) ஐயம் திரிபுகள் முதலிய குற்றங்கள் அவர்களிடத்திற் சிறிதுமில்லை; ஆதலால் அவர்கள் கூறும் உண்மைகளெல்லாம் யாவராலும் மேற்கோள்களாகக் கொள்ளத்தகுந்த உண்மைகளாம். அவர்கள் யாதாயினுமொன்று, மெய்யுணர்வு அடையப் பெறாத இருவர் கண்டால் அவ்வேறுபாடு, அவ்விருவரும் அறியும் திறனாலுண்டாவதன்றி கூறப்பட்ட உண்மையின் வேறுபாட்டினாலன்று. அத்தகைய மேற்கோள்கள், நமது சைவசமய ஆசிரியர்கள் தேவார, திருவாசகம், திருக்கோவையார் நூல்களிற் கூறுகிற உண்மைகளும், சந்தானாசாரியர் நால்வரும் கூறும் சைவசித்தாந்த உண்மைகளும், காரைக்காலம்மையார், திருமூலர் கூறுகிற உண்மைகளும், பிற்காலத்தில் பட்டினத்து அடிகள் தாயுமான அடிகள், குமாரகுருபர அடிகள், அருணகிரிநாத அடிகள் முதலிய அருள்பெற்ற பெரியார்கள் கூறின உண்மைகளுமாம். பல இடங்களில் பல காலங்களில் இருந்த இந்த அருட்பெரும் பெரியார்கள் தோத்திரப்பாடல்களிலும் சாத்திரப்பாடல்களிலும் கூறிய சைவ சித்தாந்த உண்மைகளெல்லாம் சிறிதும் வேறுபடாமல் ஒரு தன்மையனவாயிருத்தலே அவர்களெல்லாரும் உள்ளும் புறமும், மேலும் கீழும் நடுவும் எங்கும் ஒருதன்மையாய் நோக்கும் நிறைவான அருட்காட்சியை உடையவர்கள் என்பதை அறிஞர் எவ

ருக்கும் தெள்ளிதிற் புலப்படுத்தும். மேலே கூறப்பட்டவகை நூல்களெல்லாம் அருள் நூல்கள் என்று கூறப்படும். அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப்பொருள்களையும் கூறுகிற திருவள்ளுவர் திருக்குறளும் அருள் நூல்வகைக்குச் சேர்ந்ததாகும். இக்கருத்தினையே ஔவையார் நல்வழியில்.

"தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவாசகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்"

என்று கூறியருளினர்.

4. முதலாவது மேற்கோள் வகைக்குச் சேர்ந்த அருள் நூல்களெல்லாம் மேலே கூறப்பட்டபடி கருத்து வேறுபாடுடையன வல்லவா யிருப்பினும் அந் நூல்களை ஓதியும் கேட்டும் தங்கள் கருவி அறிவில்வைத்து ஆராய்ந்து அறியும் அறிஞர்கள் தாங்கள் அறியும் அறிவுவன்மை வேறுபாடுபற்றி அவைகளில் வேறுபாடு களிருப்பனவாகத் தப்பிதமாய் அறியலாம். அருட்பெரியார்கள் கூறும் மேற்கோள் உண்மைகள்வேறு; அவ்வுண்மைகளைக் குறை பாடுடைய கருவி அறிவுடையவர்கள் தங்கள் அறிவின்கண் பொருந்தவைத்து அறியுந்தன்மை வேறு. அருட்பெரியார்கள் கூறும் உண்மைகள் தமிழ்மொழிச் சொற்களிலும் வடமொழிச் சொற்களிலும் கூறப்பட்டிருக்கின்றன. சொற்கள், அவைகள் கூறுங் கருத்துக்களை நன்கு அறிந்து உணராதவர்களுக்குக் கருத்துக்களை அறிதற்குத் தடைகளாயிருக்கின்றன. *

ஆதலின் அருள்நூல்களை ஓதுகிறவர்கள் தாங்கள் ஓதி அறிந்தார் மாட்டுக் கேட்டும் தங்கள் உள்ளத்தின்கண் பல்கால் நினைத்து ஆய்ந்தும் அளவைநூல் முறைமைக்கு இணங்க அறிதல் பண்டைத்தமிழறிஞர் வழக்கா யிருந்தது. அவர்கள் பண்டைக் காலத்தில் அறிவிற் சிறப்புற்று வாழ்ந்திருத்தலுக்கு இவ்வழக்கே முதன்மையான காரணமாயிருந்தது. (தொடரும்)

---

* "சொற்பாவும் பொருடெரிந்து தூய்மை நோக்கித் தூங்காதார் மனத்திருளை வாங்காதானை" என்ற திருநாவுக்கரசு அடிகள் கூறிய திருத்தாண்டகத் தேவாரக் கூற்றையும், (Letters Killeth) என்ற ஆங்கில வசனத்தின் உண்மையையும் நோக்குக.

## கவின்கலைப் பகுதி—Fine Arts

### மத்த விலாசப் பிரகசனம்

அல்லது

### சம்பந்தர் கால சமயிகள் நிலை

[திரு. தி. கி. நாராயணசாமி நாயடு அவர்கள்]

(உரிமை ஆசிரியர்க்கே.)

நாடகத்தா லுன்னடியார் போனடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்.

—திருவாசகம்.

#### முன்னுரை

வடநூல் நாடகவகைகள் தசரூபகங்களென்ப: அவற்றி லொன்று பிரகசனம் என்பது. * "இது சுத்தம், விகிர்தம், சங்கீர்ணம் என மூவகைப்படும். சுத்தப் பிரகசனத்திலே பாஷண்டர், விப்பிரர், சேடன், சேடி என்னும் இன்னோர் தோற்றிப் பொருத்தமான வேஷமும் பாஷையும் தோன்ற நகையை விளைக்கும் நகைப்புக் குறிப்பு மொழிகளைக் கூறி நடிப்பர். காமுகராதியோர் தோற்றிக் காமக் குறிப்புத் தோன்ற நடிப்பது விகிர்தப் பிரகசனம்; தூர்த்தர் பலர் தோற்ற அறுவகை நகைக் குறிப்பும், வீதியென்னும் மற்றொரு நாட்டிய வகையின் இலக்கணமும் பெற்று வருவது சங்கீர்ணப் பிரகசனம்." ஈண்டு எடுத்துக்கொண்ட மத்தவிலாசப் பிரகசனம் சுத்தப் பிரகசனத்தைச் சார்ந்தது.

நகைச்சுவை நாடகமாகிய பிரகசனத்தின் இலக்கணத்தை திரு. வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்

'முனிவர் தேவர் முதுமறை யந்தணர்
எனுமிவ ரிடைவர விழிவு நிந்தையும்
பெறவெறும் போலிக ளுறுதலை மக்களாச்
சாத்து வதியே கைசிகி தந்து
நகைச்சுவை தன்னை மிகுத்துக் காட்டி

---

* மதங்க சூளாமணி - சுவாமி விபுலாநந்தர்.

ஒன்றே யாத லிரண்டே யாதல்
அங்கங் கொண்ட தரும்பிர கசனம்'

என நாடகவியலில் நுவலுதல் காண்க.

ஓர் அங்கத்தில் நான்கு களங்களில் முடிந்த இச்சிறிய நாடகத்தினை ஆக்கியவன் அப்பர் பெருமானல் சைவ சமயம் திரும்பிய பல்லவ மன்னனும் முதல் மகேந்திரவர்மன். இதில் †"பாசுபத மதத்தினராகிய துறவியொருவரையும், ஒரு காபாலிகரையும், அவர் தம் மனைவியாரையும், ஒரு பௌத்தபிக்குவையும், உரையாடவிட்டு அவர் தம்மை யெல்லாம் எள்ளனஞ்" செய்திருக்கிறது. ‡"இது நகைப்புண்டாக்கத்தக்க நாடகம். இந்த நாடகத்தைப் படித்தால் மகேந்திரன் காலத்தில் மக்களின் நடைகள், வழக்கங்கள் எவ்வாறு இருந்தன என்று அறிந்து கொள்ளலாம். மற்றைய நாடகங் களைப்போல் புராண கதைகளைப்பற்றி யல்லாமல் மக்களின் வாழ்க்கை முறைகளைக் காட்டி எழுதியது."

இவ்வடமொழி நாடகத்தை முதன்முதல் திருவநந்தபுர வடமொழி நூல் நிரலில் 1917-ல் 55-வது நூலாக கணபதி சாஸ்திரிகள் அச்சிட்டுதவினர். இதனை ஜெர்மனி நாட்டு லீப்சிக் (Leipzig) நகர வாசியான டாக்டர் ஜே. ஹெர்ட்டல் 1924-ல் அவர் தம் மொழியில் (Dr. J. Hertel's Die Streiche Des Beraus Chten) பெயர்த்தனர். கீழ்நாட்டுக் கலைக்கழக ஆராய்ச்சி மடல் என்ற பருவ இதழில் பார்ாட் துரைமகன் ஆங்கிலத்தில் 1929-ல் ஆக்கினர். (The Bulletin of The School of Oriental Studies London institution : Vol. V - Part IV L. D. Barnett.)

இக்களிக்கூத்து பௌத்த, பாசுபத, காபாலிக சமயிகளைக் கொண்டு நிகழ்தலின் அவர்தம் சமயசாரத்தை சிவஞான முனிவர் பாடியத்துள் தொகுத்துரைத்ததை ஈண்டு பொழிப்பாகத் தருதும்.

### சமயங்கள்

சமயங்களெல்லாம் புறப்புறச் சமயம், புறச்சமயம், அகப் புறச் சமயம், அகச்சமயமென நான்கு வகைப்படும். அவற்றுள், புறப்புறச் சமயம் உலகாயதம், நால்வகைப் பௌத்தம், ஆருகத மென்பன ; புறச்சமயம் தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம்,

† பல்லவர் சரித்திரம் 13-ம்பக்கம்-பி. தி. சீநிவாச அய்யங்கார் ‡ மாணிக்க வாசகர் காலம் - 668-ம் பக்கம்-மறைமலையடிகள்.

சாங்கியம், யோகம், பாஞ்சராத்திர மென்பன ; அகப்புறச் சமயம் பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்கிய வாத சைவமென்பன ; அகச்சமயம் பாடாணவாத சைவம், பேதவாதசைவம், சிவசமவாதசைவம், சிவசங்கிராந்த சைவம், ஈசுவர விகாரவாத சைவம், சிவாத்துவித சைவமென்பன.

ஈண்டுக்கூறிய சமயத்தாருள், உலகாயதர்முதல் ஆருகதரீருகிய அறுவரும், வேதம் சிவாகமம் இரண்டனையும் நிந்திக்கும் நாத்திகராயினும், ஒரு நூலென்றும், பிரமாணமென்றுங்கொண்டு ஒரு நெறிக்கண்ணே நிற்றலான் அவர் சமயம் புறப்புறச் சமயமென வேறுவைத்து எண்ணப்பட்டன.

பாசுபதர் முதலிய ஐவரும், வேதம், சிவாகமம் இரண்டற்கும் பொதுவகையாற் பிரமாணங் கொள்ளினும், அவ்விரண்டற்கும் புறமாகிய பாசுபத முதலிய நூல்கட்குச் சிறப்பு வகையாற் பிரமாணங் கோடலானும், வேதம், சிவாகமம் இரண்டினும் ஆகா என விலக்கப்பட்டனவற்றை ஆசரித்தலானும், ஐக்கியவாதசைவர் வேதம், சிவாகமம் இரண்டற்கும் சிறப்புவகையாற் பிரமாணங் கொண்டு, அவற்றில் விலக்கியன ஒழித்து விதித்தவழி ஒழுகுவாராயினும் எல்லாப் பெருங் கேட்டுக்கும் மூலகாரணமாகிய ஆணவ மலத்தின்மை கொள்ளாமையானும், அதினுண்மை சாதிக்கும் சிவாகம வாக்கியங்களை இகழ்தலானும் அவ்வறுவகைச் சைவமும் அகப்புறச் சைவமென வேறு வைத்து எண்ணப்பட்டன.

பௌத்தமாவது.—உலகத்துப் பிறந்து, இறந்து, உழன்று, சீல முதலியவற்றான் நல்லுணர்வு தோன்றி முழுதுணர்ந்து முத்தி பெற்றுத் தன்னைப்போல் பிறருமுணர்ந்து உய்தற் பொருட்டுக் கருணையினல் பிடகநூல் செய்தவன் புத்தக் கடவுள்; அந்நூலிற் கூறும் பொருள்களாவன : ஞானமே ஆன்மா எனப்படும்; அது நீரோட்டம் போலத் தொடர்ச்சியாய்க் கணந்தோறுந் தோன்றி அழியும் ; அங்ஙனம் தோன்றி அழியுங்கால், முன் மான்மதம் வைத்தெடுக்கப்பட்டு ஒழிந்த பெட்டியில் பின் வைக்கப்படும் பொருளினும் அதன் வாசனை பற்றுதல்போல முற்கணத்தின் அழிவெய்தும் ஞானத்தில் தோன்றிய வாசனை, பிற்கணத்தில் தோன்றும் ஞானத்தில் பற்றுதலால் அறிவு முதலியன நிகழும் ; மற்றும் உள்ள பொருளெனப்பட்டவை யெல்லாங் கணந்தோறும்

தோன்றி அழியும்; இந்த ஞானத்தில் தோன்றிய வாசனை அழி வதே முத்தி என்பதாம். ஞானங் கூடக் கெடுதல் முத்தி என் பாருமுளர்.

இப்பௌத்தமதத்தர் மாத்தியமிகர், யோகசாரர், சௌராந் திகர், வைபாடிகரென நால்வகைப்படுவர். இந்நால்வரும் முறையே எல்லாப் பொருளுஞ் சூனிய மெனவும், புறப்பொருள் சூனிய மெனவும், புறப்பொருளுண்மைவழி யவையான் அறியப்படு மெனவும், புறப்பொருள் காட்சிப் பொருளாமெனவுங் கூறுப. இந்நால்வரும் ஆதிபுத்தனுடைய மாணாக்கர்கள்.

அகப்புறச் சமயமாறனுள் பாசுபதமாவது :—ஆன்மாக்கள் பலவாய், நித்தமாய், வியாபகமாய்க் காரிய காரணக்கூட்டு உற வால் தோன்றும் ஞானத்தால் தனித்தனி வேறுயுள்ளன. இவ் வான்மாக்களுக்கு ஆணவமலம் என்பதொன்றில்லை. மாயை கன்மம் என்று இரண்டால் பந்தமுற்று இன்பதுன்பங்களை அனுப விக்கும். இவற்றின் உவர்ப்புத் தோன்றிச் சாத்திர முறை யானே தீக்கை பெற்றவன்பால் ஈசனுடைய ஞானம் போய்ப் பற்றும். அப்போது, குடும்பத்தின் பாரம் புத்திரர்பால் வைத் தொழித்து, துறவறத்தில் செல்வார்போல, ஈசனுந் தன்னுடைய குணங்களை அவன்பாற் பற்றுவித்து, தான் அதிகாரத்தின் ஒழிவு பெற்று இருப்பன் என்பதாம்.

காபாலமாவது.—ஆன்மாக்கள் பந்தமுற்றுச் சுகதுக்கங்களை அனுபவிக்கும். சாத்திர முறையே தீக்கை பெற்றுப் பச்சைக் கொடி ஒன்று கைக்கொண்டு நாடோறும் மனிதர் தலையோட்டில் ஐயமேற்றுண்பர். உன்மத்தராய்ச் சிவனாவேசித்தல், எல்லாக் குணங்களும் பெற்றுச் சிவ சமமாவர் என்பதாம்.

இச் சமயிகளை அப்பர் பெருமானும் தமது தேவாரத்திற் கூறி அருளுதல் காண்க.

விரிசடை விரதிகள் அந்தணர்
சைவர் பாசுபதர் கபாலிகள்
தெருவினிற் பொலியும்
திருவாரூர் அம்மானே!

(தொடரும்)

திருநெல்வேலி

# சென்னை மாகாணத் தமிழர் மாநாடு.

அறிக்கை ௨.

[1934 மார்ச்சு 30, 31; ஏப்ரல் 1 ஆகிய நாட்களில் நடைபெறும்]

## தமிழ்மொழி மாண்பு

க. தொன்மை:—பேச்சு வழியாலும் நூல்வழியாலும் மக்களது அறிவை வளர்ப்பதற்கு உலகத்திலே பல திருந்திய மொழிகள் உள்ளன. அவற்றுள் நம் நாட்டில் தமிழ்மொழியே தொன்றுதொட்டு இன்றுவரையும் பேச்சுவழக்கிலும் நூல்வழக்கிலும் வழங்கிவருவதாயும், தனது பழமைபான உரு சிதைவுபெறாமல் இன்றுகாறும் நிலவும் மொழியாயும் விளங்குகின்றது. தமிழ் மொழியின் தொன்மையை நன்கு விளக்கிக் காட்டுவன பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் இயற்றப்பட்ட தொல்காப்பியமாகிய இலக்கணமும், திருக்குறள் முதலிய சங்க நூல்களுமாம். அந்நூல்களில் வரும் "யாதும் ஊரே யாவருங் கேளிர்", "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும், நன்றே நினைமின்" என்பன போன்ற மிக உயரிய அறவுரைகள் உலக அன்பையும் ஒற்றுமையையும் (Internationalism) மக்களிடைப் பரவச்செய்யும் வன்மையுடையன. திருக்குறளிற் கூறப்பட்ட ஒழுக்க முறைகளும் அரசியல் முறைகளும் பிறவும் இக்காலத்திலுங்கூட வேறு எம்மொழியினுங் காணப்படாத சிறப்பை உடையனவாய்த் திகழ்கின்றன.

௨. இயற்கைப் பான்மை:—கடவுள் உலகினை நடைபெறும்படி இயக்கும் இயற்கையின்வழி தமிழ்மொழியின் இலக்கணமும் அமைந்துள்ளது. தமிழ் என்னுஞ் சொல் இனிமை என்று பொருள்படும். தமிழ்மொழி மெல்லோசையுடன் கேட்போர்க்கு இன்பம் பயப்பதாயுள்ளது. தமிழ்மொழி பிறமொழிகளை நோக்கக் குறைந்த மூச்சுச் செலவில் கருத்துக்களை விளக்குஞ் சொற்களமைந்தது. அதன் சொற்களனைத்தும் பொரும்பான்மை ஓரசை முதல் நான்கசைவரையே யுள்ளன. அதுபற்றித் தமிழ்மொழி எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமு முடையதோடு பிறமொழிகளில் இல்லாத பொருளிலக்கணத்தையு முடையது. நமது செந்தமிழ்த் தாய்க்கு எழுத்திலக்கணம் உறுப்புக்கள் போலவும், சொல்

விலக்கணம் உடல் போலவும், பொருளிலக்கணம் உயிர்போலவும் இலங்குகின்றன.

நோக்கம் :—இத்தகைய சிறப்புக்கள் வாய்ந்த நம் தாய்மொழி யைத் தமிழ்நாட்டிற் பிறந்து வளர்ந்து அதனைப் பேசிவருகின்ற எவ்வகை மக்களுக்கும் பிற நாட்டினர்க்கும் அறிவை வளர்த் தற்கு ஏற்ற கருவியாகப் பயன்பெறச் செய்தலே இம்மாநாட்டின் முதன்மையான நோக்கமாகும்.

இப் பெருநோக்கத்தை நிறைவேற்றுவதற்காக இம் மாநாட் டில் 'சென்னை மாகாணத் தமிழர் சங்க' மொன்று அமைக்கப் பெறும். அச்சங்கம் பின்வரும் அரும்பணிகளைச் செய்யும் :—

1. செந்தமிழ்மொழியின் முன்னேற்றத்திற்கான செயல் களைச் செய்தல். 2. செந்தமிழ்ச் சிரிய கலைகளாகிய இசைக்கலை, மருத்துவக்கலை, ஒளிநூற்கலை முதலியவற்றை வளர்த்தல். 3. தனித் தமிழ் நூல்கள் எழுதியும், பிறமொழிகளிலுள்ள அறிவு நூல்களைத் தனித்தமிழில் மொழிபெயர்த்தும் தமிழ்மொழியை வளம்பெறச் செய்தல். 4. மொழிபெயர்க்கப்பெறும் மேலைநாட்டு அறிவியற் சொற்களுக்கு (Scientific terms) ஏற்ற சொற்களைப் பழந்தமிழ் நூல்களில் ஆய்ந்து திரட்டியும், தமிழ்ப்பகுதிகளை (Roots) அடிப் படையாகக்கொண்டு புதுச்சொற்களை ஆக்கியும் தமிழ்ச்சொற் றொகுதியை வளம்படுத்தல். 5. தமிழ் நூல்களை ஆங்கிலம் முதலிய பிற மொழிகளில் மொழிபெயர்த்தல். 6. மக்களுக்குள் அன்பை யும் ஒற்றுமையையும் வளரச்செய்து உலகம் நலமடையச் செய்தல்.

மாநாட்டு நிகழ்ச்சி

30—3—34-ல் தமிழ் நூற்காட்சி நிலையம் திறந்து வைத்தல்;

31—3—34 காலை மாலை, 1—4—34 மாலை சென்னை மாகாணத் தமிழர் மாநாடு;

1—4—34 காலை சென்னை மாகாணத் தமிழ்ப் புலவர் மாநாடு.

கட்டணம்

காப்பாளர்:- ரூபா 25-ம் அதன்மேலும் நன்கொடையாகக் கொடுப்பவர்கள்.

வரவேற்புக் கழகத்தார்:-ரூபா 5-ம் அதன்மேலும் கொடுப்பவர்கள்.

உரிமையாளர் (Delegates):- ரூபா 2-கொடுப்பவர்கள்.

தமிழ் நாட்டின் பல இடங்களிலிருந்தும் அறிஞர்களும், அன்பர்களும், அரசியற் பிரிவுகளின் தலைவர்களும், அமைச்சர்களும் வருவார்களென்று எதிர்பார்க்கிறோம. ஆதலால் இம் மாநாட்டைத் தக்க முறையில் நடாத்துவதற்கு ரூபா மூவாயிரத்துக்குக் குறையாமற் செலவாகு மென்று நம்புகிறோம். ஆதலின் தமிழ்மக்களும் தமிழன்பர்களும் இதற்கு வேண்டிய பொருளுதவியும் பிற எல்லா உதவிகளும் செய்தும், இம் மாநாட்டுக்கு வந்திருந்தும் செம்மையாக நடத்தித் தரும்படி வேண்டிக்கொள்ளுகிறோம்.

மாநாட்டுக்குத் தீர்மானங்கள் அனுப்ப விரும்பும் சங்கங்களும் அறிஞர்களும் வருகிற மார்ச்சுத் திங்கள் 15-ஆம் நாளுக்குள் (15—3—34) அவை மாநாட்டு நிலையத்துக்கு வந்து சேரும்படி அனுப்ப வேண்டுகிறோம். அவைகளை மாநட்டில் கொண்டு வரவோ அல்லது நிறுத்திவைக்கவோ நிறைவேற்றற் கழகத்தாருக்கு உரிமையுண்டு.

வரவேற்புக்கழகத்தார்.

---

## ஜகதீஸ சந்திர போஸ்

(முகப்புப் படம் பார்க்க)

கட்புலனாகும் ஒளி அலைகளும் கட்புலனாகா ஒளி அலைகளும் ஒருதன்மையனவே என்று தெரித்துக்காட்டி மின்சார அலைகளின் பண்பை எல்லாத் துறைகளிலும் ஆராய்வதற்கு வேண்டிய ஆய்வு முறைக் கருவிகளை அமைத்தும், செடி கொடி மரங்களும் மக்களைப் போலவும் விலங்குகளைப்போலவும் உயிருடையன வென்பதை மறுக்கொணாவாறு ஆய்வு முறைகளால் எடுத்துக்காட்டி நிலை நிறுத்தியும், அவ்வாற்றால் கடவுட்படைப்புகள் எல்லாவற்றிற்கும் நெருங்கிய தொடர்பு உண்டென்பதை விளக்கியும் உலகோரை வியப்பெய்துவித்தவர் ஜகதீஸ சந்திர போஸ் என்னும் பெரியாராவர்.

நுண்ணிய ஆராய்ச்சிப் புலமை வாய்ந்தவராகிய இவர் வங்காள மாகாணத்தைச் சேர்ந்த டாக்கா ஜில்லாவிலுள்ள விக்ரம்பூர் என்ற சிற்றூரில் பகவன் சந்திரபோஸ் என்பவருக்குத் திருக்குமாரராக 1858-ம் ஆண்டு நவம்பர் மீ 30-ம் நாள் பிறந்தார். நன்றாக

உழைத்துக் கற்று உரிய காலத்தில் கல்கத்தாச் சர்வகலாசாலையில் B. A பட்டம் பெற்றார். அதன்பின் இங்கிலாந்து சென்று கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையிற் சேர்ந்து B. Sc. பட்டம் பெற்றார். அதன்பின் நாடுதிரும்பி வங்காள மாகாணக் கல்லூரிப் பொருட்டன்மை யாசிரியராக அமர்ந்து நாற்பதாண்டுகள் அரும்பணியாற்றி ஓய்வு பெற்றார்.

ஜகதீஸ சந்திர போஸ் பெரிய செல்வமுடைய ஒரு குடும்பத்திற் பிறந்தவருமல்லர்; பெரிய ஆராய்ச்சியாளராக வேண்டுமென்ற நோக்கத்துடன் இளமையிற் பயிற்றுவிக்கப் பட்டவருமல்லர். பொதுவாக ஒவ்வொரு இளைஞனுடைய வாழ்க்கையிலும் நேரக்கூடிய இடையூறுகளும் எதிர்பாராத நிகழ்ச்சிகளும் இவரது வாழ்க்கையிலும் நேர்ந்தன. கருதிய நோக்கங் கைகூடாது இவர் பல வேளைகளில் திகைத்து நின்றார்; பொறாமையினால் பகைவர் இவர் ஆராய்ச்சிகளிற் குறைகூறுவதைக் கேட்டு யாது செய்வதென்று தெரியாமல் விழித்தார். தந்தை பட்ட கடனைச் செலுத்தும் பொருட்டுச் சிக்கனமாக வாழ்க்கை நடத்தினார். இந்தியனென்று சில ஆங்கில மக்கள் அழுக்காற்றால் தம்மை உயரவிடாது தடுத்ததைக் கண்டு ஒடுங்கிவிடாமல் போரியற்றி ஒப்பரிய தம் ஆராய்ச்சித் திறனை யாவருமொப்ப நிலைநிறுத்தித் திகழ்கின்றார்.

இத்தகைய உத்தமப் பெரியாரின் வாழ்க்கை வரலாற்று நுட்பங்களைப் பதினேழு கூறுகளாக வகுத்து முதன் முறையாகத் தமிழில் உரைநடை நூலொன்று எழுதி நம் கழகவாயிலாய் வெளியிட்டிருக்கின்றோம். அதனைத் தமிழுலகேற்று வாசித்து நலமடையக் கேட்டுக்கொள்கிறோம். —கா. சிவ. க

---

## செய்திகளும் குறிப்புகளும் (News and Notes)

சென்ற கூ-ம் பரல் வெளிவந்தபின்னும், இப்பரல் வெளிவருவதன் முன்னும் காலமான பெரியார்களிற் குறிப்பிடக்கூடியவர்கள்:- பெல்ஜிய நாட்டு மன்னர் ஆல்பர்ட் என்பவர்; வங்காள அரசாங்க அங்கத்தினரான ஸர். பி. ஸி. மித்தர்; "இந்து" நாள்தாள் ஆசிரியர் திரு. எ. அரங்கசாமி ஐயங்கார்; சென்னைக் கிரௌன் பிராசிக்யூடர் திரு. கே. பி. மாதவ யேனோன்; திருச்சி வான ஊர்தியாளர் திரு. சேஷசாயி; சென்னை நகராண்மைக் கழக உறுப்பினர் திரு. வி. சிவப்பிரகாச முதலியார்; மைசூர் டாக்டர் எச். பி. மயில்வாகனன்.

ஸாரோ ஆகா என்ற ஒரு தருக்கிய முதியோனுக்கு இப்போது வயது 160; அனட்டோலியாவிலுள்ள கோனியா என்னுமிடத்தில் இருக்கும் துலிஸார் என்னும் தருக்கிய முதியோளுக்கு இப்பொழுது வயது 150.

* * *

சென்ற பிப்ரவரித் திங்கள் 10-ம் நாள் காலை ஆறுமணிக்கு "சென்னைக் கல்கத்தா வானவூர்தி வாடகைத்தபாற் போக்குவரவு" முதல் ஊர்தி தபாற்பையுடன் புறப்பட்டது. இதனால் கல்கத்தா சிங்கப்பூர் இரங்கூன் முதலிய இடங்களுக்குக் கடிதப் போக்குவரவு விரைவாக நடைபெறும்.

* * *

சென்னை நகரில்மட்டும் காந்தியின் ஹரிஜன நிதிக்குச் சேர்ந்த தொகை ரூ. 24032-4-11; அதிற் செலவு ரூ. 4613-8-0 போக, மீதி ரூ. 19418-12-11.

* * *

சென்னையில் நடந்த கிட்டிப்பந்து (Cricket) போட்டிப் பந்தயத்தில் இந்தியா இங்கிலாந்தினிடம் 202 ஓட்டங்களால் தோல்வியுற்றது.

* * *

பண்டித ஜவஹர்லால் பன்னிரண்டாவது முறையாக அரசியற் கைதியாகியிருக்கிறார்.

* * *

இந்தியாவிலிருந்து இந்த இரண்டு ஆண்டுகளாக வெளியேறிய தங்கத்தின் விலைமதிப்பு ரூ. 1,69,23,16,330.

* * *

பிப்ரவரித் திங்கள் முடிய பீஹார் மாகாண நில அதிர்ச்சி உதவிக்காக பாபு இராஜேந்திர பிரசாத் அவர்களின் நிதியிற் சேர்ந்தது ரூ. 17,47,897; கனம் அரசப்பிரதிநிதியார் அவர்களின் நிதியிற் சேர்ந்தது ரூ. 24,62,091.

* * *

"ஆங்கில மொழியில் சரியான குறியீடுகள் கிடையாது; பெரும்படியாய் அம் மொழியைப் பயன் படுத்துவதற்குக்கூட அதன் எழுத்துத் தொகை 12 எழுத்துக்களாற் குறைவுற்றிருக்கிறது." என்று இங்கிலாந்தின் தற்காலப் பெரும்புலவராகக் கருதப்படும் ஜியார்ஜ் பெர்னார்ட்ஷா கூறுகிறார்.

---

## காப்பிக்கொட்டையின் வரலாறு

காலையிற் கஞ்சி குடித்துக் கழனிக்குச் சென்ற நாள் மலையேறி "காப்பி" குடித்துச் செல்லும் பழக்கம் ஏறக்குறைய மூன்று நூற்றாண்டுகளாய்க் கால் கொண்டுவருகிறது.

மாநூல் வழக்குப்படி ஆங்கிலத்தில் காப்பியை கேஃபியா அரேபிகா என்று சொல்லுவார்கள். இக்காப்பி அரேபியா நாட்டில்

தான் முதன் முதல் தோன்றியதாகும். அரேபியாவிலுள்ள மெக்கா என்ற முகம்மதிய தலத்திற்கு யாத்திரை சென்று திரும்பிய பாபா போதீன் என்ற பக்கிரியொருவரே அதனை முதன் முதல் இந்தியாவிற்குக் கொண்டு வந்தவராவர். அவர் கொண்டுவந்த சில சிறு காப்பிச் செடிகள் நாளாவட்டத்தில் பல கோடி நூறாயிரமாகப் பெருகி இந்தியாவின் பெரிய வர்த்தகச் சரக்குகளில் சிறந்த தொன்றாக ஆகும் என்று அவர் கனவிலுங் கருதியிரார். மைசூர், குடகு, சேர்வராயன் மலை, பாபா போதீன் மலை ஆகிய இடங்களில் காப்பி முதன் முதல் விளைவிக்கப் பெற்றது. முதலில் காப்பிச் செடியின் பழுத்த மணிகளைக் கிளைகளில் ஏறி உதிர்த்துச் சேர்த்த நாளெங்கே! சித்திரம் வரைந்ததுபோல் பாத்திகட்டிச் செடிகளை வேண்டுமாறு வெட்டிக் கத்திரித்துப் பாதுகாத்துவரும் இந்நாள் எங்கே! சென்ற எழுபது எண்பது ஆண்டுகளில் உலக வாணியத்துறைகளில் இந்தியக் காப்பிக் கொட்டை இல்லாததோரிடமில்லை. உலக முழுதும் உட்கொள்ளும் "காப்பி" நீருக்கு வேண்டிய காப்பிக் கொட்டையை இந்தியாவே பெரும்பான்மையாக அளித்துவருகின்றது.

—கா. சிவ. க

மதிப்புரை :

## மாணிக்கவாசகர் புராணம்

அழகிய இச்சிறு நூல் மணிவாசகப் பெருமானது வரலாற்றை நல்ல தமிழ் உரைநடையிற் கூறுவதாகும். திருவிளையாடற் புராணம், திருவாதவூர் புராணம், ஆலாசிய மான்மியம் முதலியவற்றைப் பின்பற்றியது. இதன் ஆசிரியர் யாழ்ப்பாணத்துப் புலோலி மகாவித்துவான் வ. கணபதிப்பிள்ளையவர்களாவர். இவர் மொழிநூலாசிரியராகிய மாகறல் கார்த்திகேய முதலியாரவர்களின் ஆசிரியர்களில் ஒருவராவர்; தமிழிலும் வடமொழியிலும் மகா பண்டிதர். இத்தகைய பெரியார் எழுதிய இந்நூலிற்குப் புத்துயிரளித்து மீட்டும் இதைத் தமிழுலகத்திற்கு உதவியவர் திருமயிலை சே. வெ. ஜம்புலிங்கம் பிள்ளையாவர். தமிழுலகிற்குப் பலவாண்டுகளாகப் பிள்ளையவர்கள் செய்துவரும் ஊழியம் யாவருமறிந்ததே. அவர்களது நன்முயற்சியால் திராவிடப்பிரகாசிகை, பருளை விநாயகர் பள்ளு, தண்டிகைக் கனகராயன் பள்ளு, சைவ சித்தாந்த சங்கிரகம் முதலியன அண்மையில் வெளிவந்தன. பிள்ளையவர்கள் இத்தகைய தொண்டில் காலூன்றி நின்று தமிழர்களுக்கு மேன் மேலும் பேருதவி புரிந்து வருவார்களென நம்புகிறோம். பிரதி ஒன்றன்விலை அணா பத்து. நமது கழகத்திற் கிடைக்கும்.

---

கழக வெளியீடு - கரு௦

# சைவசித்தாந்த சாரம்



திருநெல்வேலி,
தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.
திருநெல்வேலி & சென்னை.
1934

# பதிப்புரை

பதிபசுபாசம் என்ற முப்பொருளின் உண்மையைத் திறம்பட உரைக்க எழுந்த சைவசித்தாந்தசாரம் என்ற இச் சிறுநூல் பதினெட்டாவது நூற்றாண்டிற் றிகழ்ந்த ஆசிரியர் குடவாயில் சிவப்பிரகாச தேசிகர் அவர்களின் மாணவர் சிவானந்த தேசிகர் இயற்றியதாகும். இந்நூலாசிரியர் குடவாயிற் சிவப்பிரகாச தேசிகரின் மாணவர் என்பதும், இந்நூலின் பெயர் சைவசித்தாந்தசாரம் என்பதும் நூலின் ஐந்தாவது ஆறாவது செய்யுட்களாற் றெரியவரும். இவ்வாசிரியர் இயற்றியதாக "சித்தாந்த நிச்சயம்" என்ற மற்றொரு நூலும் கிடைத்துளது. இந்நூல்க ளிரண்டும் தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த வித்துவான் சட்டைநாதத் தம்பிரானவர்களிடமும், அவ்வாதீனத்தைச் சேர்ந்த சீகாழி வித்வசிகாமணி. ப. அ. முத்துத்தாண்டவராயபிள்ளை யவர்களிடமும் இருந்த ஏட்டுச் சுவடிகளிலிருந்து படி யெடுக்கப்பட்டனவாகும். மேற்படி வித்துவசிகாமணிப்பிள்ளை யவர்களின் நன்முயற்சியாலும், அவர்தம் மாணவர் வித்துவான் காழி. சிவ. கண்ணுசாமி பிள்ளை B.A. அவர்களின் முயற்சியாலும் இந்நூல் நங் கழக வாயிலாக முதன்முதல் அச்சேறி வெளிவருகிறது. மற்றொரு நூலும் விரைவில் வெளியிடப்படும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

வேறு

அகில முழுதுந் தனதுருவா யமல ரொருவ னனுதியிலே
சகல வுயிர்க்கு மறிவாகித் தானே நின்ற தெனப்பலநூல்
புகல வுயிர்க டனையுமவன் போலவெங்கும் வியாபகமென்
றிகலு முறையொன் றிதுதேடி யெங்ங னெடுத்தா ரினர்களே. 26.

எங்கு நிறைவாய் நின்றதல வேக தேசந் தானுமல
தங்கு முருவில் நிறைவுமல தானே சித்து மசித்துமல
விங்கிப் பரிசு போலுமெனு மிறையோ ருரையைக் குருவருளிற்
றங்கித் தெளியா ருயிர்களெலாஞ் சருவ பரிபூரணமென்பார். 27.

உருவுற் றோரார் புலன்வழிநின் றுணர்த்த வினையின் பயனுணர்ந்துண்
டொருவுற் றவத்தை யூடமுந்து முயிர்க ளவையு மொருபரன்போன்
மருவுற் றனுதி பேரறிவாய் மன்னி நின்ற தெனவுலகிற்
குருவிற் றெளியா ருரைநல்லோர் கொள்ளார் கொள்ளார் கொள்ளாரே.

தத்தம் வினைதா னறியாது தலைவ னருளா லறிந்தருந்திப்
பொத்தை யுடல்புக் கவத்தைகளிற் பொருந்து முயிர்க ளனுதியிலே
சுத்த பரம சிவன்போலச் சுவாவ சித்தாய் நின்றதெனிற்
பெத்த ரெவர்சிற் றறிவுடையோ ரேவ ரெனநாம் பேசுவதே. 29.

கண்கள் கதிரோ னொளியின்றிக் காணு மெனிலக் கதிரொளிபோற்
கண்கள் பிறிதோர் விழிக்கொளியாய்க் காட்டு மெனிலக் காட்டொளியும்
கண்க ளொளியு மோரியல்பா மெனிலக் கதிர்போற் பதியறிவுங்
கண்க ளொளிபோற் பசுவறிவும் நிகரா மெனநாங் கருதுவதே. 30.

மலமே வடிவாய் நின்றிடுங்கே வலத்தோ கருவி வடிவினிற்சஞ்
சலமே வியவிச் சகலத்தோ தற்போ தமறத் தலைவனருள்
நலமே வியசுத் தத்தோவென் னுளி லெந்த விடத்துயிரின்
குலமே யெல்லா மறிவுறும்பே ரறிவென் றயலார் கூறுமதே. 31.

மெய்யே பரம னருளுருவாய் வியாபித் தெங்கு நிற்பனெனத்
துய்யோ ருரைப்ப வத்தன்மை தொல்லை யுயிர்க்கு மியல்பென்றால்
ஐயோ வவர்க ளூறுநாகுக் களவு முளவோ வவர்நிலையும்
பொய்யே யவர்செய் தவமுமவர் புகலு முறையும் பொய்தானே.

தூல வுடல்விட் டகலாத சூக்க வடிவத் தொடும்போகி
ஞால நரகு சுவற்கத்து நண்ணும் போக மதற்கேற்ற

கோல வுருவு பற்பலவுங் கொண்டங் கங்கே வினைப்பயன்கண்
மேலும் விளைவித் தருந்துமதிவ் வுயிர்க ளல்லால் வேறுண்டோ.

பூத வுடல்விட் டகன்றவுயிர் புரியட்டகத்தி ெனுடும்பூத்த
மாதர் துணைவ ரொடுங்கலந்து மகிழுங் காலை வாயுவுடன்
தாதை நாசி வழியேறித் தளநீ ரிற்புற் புதமாயப்
போது மதுதா யுதரத்தின் கருவாய்ப் பதியும் புற்பனிபோல். 34.

புல்லிற் பனிநீர் சுக்கிலத்திற் புரியட் டகத்தி னுடனுயிர்புக்
கல்லற் றருசோ ணிதத்திடைநா ளைந்திற் புன்னை யரும்பளவாய்
மெல்லக் குமிழி வடிவாய்ப்பின் விளவின் காய்போன் றொருதிங்கள்
செல்லச் சிரமாய் மற்றையுறுப் பெல்லாம் வளருந் திங்கடொறும்.

எடுத்த வச்சிற் கேற்றவுறுப் பெல்லா முண்ணின் றிறைவனருள்
தொடுத்த வென்பு நரம்பிறைச்சி தோலா லமைந்தீ ரைந்துதிங்கள்
அடுத்த காலைத் தாயொடுதா னவச மிகமிக் கவ்வுதரம்
விடுத்த புவியிற் பிறந்துழல்வ துயிர்க ளன்றோ வினைவசத்தால். 36.

வளருந் தூல வுடல்கலந்து மன்னும் புரியட் டகமதனி
னளவி யுயிர்நின் றிடும்வினையா லறிந்து பயன்க ளருந்திவரு
மிளமை சிலநாள் கழிவுறமூப் பெய்தி யாகத் தெவ்வுறுப்புந்
தளர மயங்கி விட்டகன்று சாருஞ் சனனந் தனின்முன்போல். 37.

மரிக்கும் பிறக்கு மவத்தையுறும் வான்போம் நிரையம் புகும்புலன்க
டெரிக்கும் பொறியிற் றனித்தனியே சேரு மனத்தி னொடுங்கணத்திற்
றரிப்பில் கறங்கின் சுழலுமெனத் தக்கோ ருலகிற் பற்பலவாய்
விரித்திங் குரைத்த திறமுயிர்க டமையே யல்லால் வேறுண்டோ.

இவ்வா றுயிர்க ளிறந்துபிறந் தியங்கு வனவு நிற்பவுமாய்ச்
செய்வா ருணராச் சிற்றறிவாற் றிகைத்துப் பிறவிச் சிறைதீர்ப்ப
தெவ்வா றழியா வின்பத்துற் றிருக்கு மிடமே தவையுணர்த்து
மவ்வா சானெவ் விடத்துளனென் றுய்ந்தாங் கவன்றா ளடைந்திடுமே.

அடைந்து பிறவிப் பெரும்பகையா லஞ்சி னேனிங் கவைதொடா
விடந்தக் தருள்வா யெனவொருவ னிசைப்ப வாசா னவன்பருவத்
திடங்கண் டளவைங் கலைவழியே செலவுய்த் தவன்முன் செய்வினைக
ளடங்க நுகர்வித் தெடுத்தப்பா லழியாப் பரன்றா ளழுத்திடுமே.

இத்தன் மையவா மணுக்களியல் பெண்ணு துயிர்க ளெங்குநிறை
சித்தென் றவல மதியோரைத் தெளிவித் தாகா யத்தலர்பூங்
கொத்து மாமை மயிருமுயற் கோடு முளதென் றுபதேசம்
வைத்துப் பொருள்கள் கவர்ந் துண்போர் மதியை யேதாய் மதிப்போமே.

காட்ட வனலும் புனலொடுசேர் கனலு மூலகிற் கதிரொளியும்
பாட்டினியல்பண் ணுடனிசையும் பாலி னெய்யும் பழஞ்சுவையும்
மீட்டு முடலி னுயிர்கலந்த வியல்பு மெள்ளி லெண்ணெயும்போல்
வாட்ட மறநின் றனனெங்கும் மன்று ளாடும் பரனன்றே. 42.

ஈறு நடுவு முதலுமிலோ னெல்லை யில்லோ னிணையில்லோன்
கூறு மளவைக் கெட்டாதோன் குறைவில் பரிபூ ரணனெவையும்
வேறின் றாய்நின் றவனெங்கும் வியாபி யொன்றென் றெனைப்பலவுந்
தேறும் பெயர்சிற் பரடஞ்செய் சிவற்கோ பிறிதோர் பொருட்குண்டோ.

சிவனெங் கணுமா தலின்மாயா தீதன் றத்து வாதீதன்
புவன தீதன் கலாதீதன் போற்றும் வாக்கு மனதீதன்
அவனே யசல னகண்டிதன னந்த ரூப னருள்வடிவன்
றவனே யாக்கங் கள்தருதற் பானென் றறைந்தார் தக்கோரே.

பரையி லாதி யுடனிச்சை பரந்த ஞானந் தொழில் தோன்றி
யுரைசெய் யாதி திரோதத்து ளிச்சை யாதி மூன்றுமரன்
புரையி லருளா லுருவுகொடு பொருந்திக் குடிலை யிடத்தமர்ந்தங்
கிரையு நாதந் தனையுதிப்பித் திடுமங் கதனில் விந்துவரும். 45.

சாற்றும் விந்து வினிற்றோன் றுஞ் சாதாக் கியஞ்சா தாக்கியத்தில்
தோற்று மகேச மதிலுதிக்குஞ் சுத்த வித்தை யிவையிறைவன்
போற்று முயிரின் பொருட்டிலைய போக வதிகா ரங்கொடதற்
கேற்ற வருவ முருவுபய மென்னும் வடிவா யிசைந்திடுமே. 46.

சொன்ன விந்து வினிற்றோன் றுஞ் சூக்க மாதி வாக்கொருநான்
கன்ன வாக்கிற் றனுகரண மாதி சுத்தாத் துவாவதனிற்
றுன்னும் மலமொன் றுடையுயிர்க்காய்த் தோற்றி யிடும்வாக் கவைநான்கும்
பன்னுங் கலையைந் துமைந்து பரிசாய் நிகழும் படங்குடில்போல்.

அதன்கீ ழசுத்த மாயையினி லமல னதிட்டித் ததனிடைமூ
விதஞ்சேர் கால நியதிகலை விரித்த கலையில் வித்தையதி
லிதஞ்சேர் ராக முதிப்பித்தைந் திவைகஞ் சுகமா யிருண்மலத்துத்
திகஞ்சே ருயிரிற் செறிப்பவுயிர் புருட னெனும்பேர் திகழ்ந்திடுமே.

பின்னுங் கலையிற் குணவடிவாம் பிரகி ருதிதோன் றிடுமதனின்
மன்னுஞ் சித்த முடன்புத்தி வரும்புத் தியிலாங் காரம்வரும்
தன்னின் மூன்று குணமுறத்தை சதவை கரிபூ தாதியெனச்
சொன்ன முறைதை சதத்தின்மனஞ் சோத்தி ராதி களுந்தோன்றும்.

கருமேந் திரியவாக் காதிகள்வை காரி தரும்பூ தாதிகந்தின்
வருமே சத்தா திகளதின்வான் வாயு வனல்நீர் மண்ணெனவைந்
தருமே வியபூ தமுமடைவே யுதிக்கு மிவையெவ் வுயிர்கட்கும்
தருமே தனுவா திகள்பின்ன ருதித்த வடைவு தனிலொடுங்கும். 50.

ஆக விவைதத் துவமுப்பத் தாறு யமல னருளாலே
யேக மலத்துட் படுமுயிர்க ளெவைக்குஞ் சூக்க மொடுதூல
தேக காணங் களுமாகிச் செறிந்தங் கங்கே புவனமொடு
போக மாகிப் புலப்படுமெப் பொருளு மாயைப் புணர்ப்பென்பார்.

சைவ சித்தாந்த சாரம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

———

கழக வெளியீடாகிய

"செந்தமிழ்ச் செல்வியின்" வாயிலாய்

வெளிவந்துள்ள சிறு நூல்கள்

---

1. நியதிப் பயன்
2. மாயாப்பிரலாபம்
3. சைவசித்தாந்த சாரம்

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது

| | | |
|---|---|---|
| சிலம்பு கஉ | பெய்கண்டான் யாண்டு-எகக பங்குனித்திங்கள் 1934௵ மார்ச்சு௴—ஏப்ரல்௴ | பரல் அ |


## திருவாசகம்

வைப்புமா டென்று மாணிக்கத்தொளி யென்று
மனத்திடை யுருகாதே
செப்புநேர்முலை மடவரலியர் தங்க
டிறத்திடை நைவேனை
ஒப்பி லாதன வுவமனி லிறந்தன
வொண்மலர்த் திருப்பாதத்
தப்ப னாண்டு தன்னடியரிற் கூட்டிய
வதிசயங் கண்டாமே.



பதவுரை :—

வைப்பு மாடு என்றும் - ஒருவன் தானிருக்கிற இடத்திலே முன் மறைவாய்ப் பூமிக்குள்ளே புதைத்து வைக்கப்பட்டு நேராய்க் காணப்படாதிருக்கும் புதையற் பொருள்போல, தத்துவங்களாலாகிய எனது உடலிலே எனது கண்ணுக்குக் காணப்படாது மறைந்திருக்கும் பொருள் என்றும்,

மாணிக்கத்து ஒளி என்றும்-மாணிக்கத்தைச் சாணைவைத்துத் தேய்த்தால், அதனிடத்து விளங்கும் ஒளிபோல, எனது உடலின்கண்ணுள்ள உயிர் தற்போதம் கெட்டுத் தூய்மை அடைந்தால் அதனிடத்து விளங்கும் தூவெளி ஒளிப்பொருள் என்றும்,

அப்பன் - எனது தந்தையாகிய சிவபெருமானே (அறிந்து)

மனத்திடை உருகாதே - எனது உள்ளத்தில் (அவன் எனக்கு இடைவிடாது செய்து வருகின்ற காட்டும் உதவியையும் காணும் உதவியையும் நினைந்து) கரைந்து உருகி அவன்மேல் அன்பு மீதூர்ந்து வழிபட்டுத் தவம் செய்யாமல்,

செப்புநேர்முலை மடவரலியர் தங்கள் திறத்திடை நைவேனை - செப்புகளுக்கு ஒப்பான இரண்டு தனங்களையுடைய இளம் பெண்கள் சார்பிற் பெறப்படுவதாகிய சிற்றின்பத்திலே உழன்று வருந்துகிறவனாகிய என்னை,

ஒப்பிலாதன - வேறு எந்தப் பொருளுக்கும் ஒப்புச் சொல்லக் கூடாதனவாயும்,

உவமனில் இறந்தன - வேறு எந்தப் பொருளுடனும் உவமித்துக் கூறுதல் முடியாதனவாயும் உள்ள,

ஒண் மலர்த் திருப்பாதத்து ஆண்டு - பேரொளியாய் அடியார்களுடைய இருதய தாமரைமலரில் விளங்கும் அருள் வடிவாகிய இரண்டு திருவடிகளையும் எனது தலைமேல் வைத்துத் தீக்கை செய்து என்னைத் தனக்கு அடிமையாகக் கொண்டு ஆண்டருளி,

தன்னடியரிற் கூட்டிய அதிசயம் கண்டாம் - தனது அடியார் கூட்டத்துடன் சேர்த்தருளிய புதுமையைக் கண்டோம்.

விளக்கவுரை:—

வைப்புமாடென்றும் மாணிக்கத் தொளி யென்றும் - மாடு - செல்வப் பொருள். வைப்புமாடு—பூமிக்குள் ஒருவனுக்குத் தெரியாது அவனிருக்கிற இடத்தில் புதைத்து வைக்கப்பட்டிருக்கிற புதையற் பொருள். அப் புதையற் பொருளை யறியாமல் பொருள் தேடுவான் புறத்தின்கண் அலைந்து திரிந்துங் கிடையாமல் வறுமை காரணமாகப் பசிநோயால் வருந்துதல் போல, அடிகள் தமது உடலின்கண் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு அவைகளில் மறைவாயிருக்கும் சிவபெருமானை அறிந்து அவனை நுகராது புறத்தின்கணுள்ள சிற்றின்பம் தேடி உழன்றதாகக் கூறுவார்; “வைப்புமாடு என்று மனத்திடை உருகாதே” என்றார். வைப்புமாடு என்றதனால், சிவபெருமான் தத்துவங்களுக்கு ஆதாரமாய் விளங்குதற்கும் அவைகள் இயங்குதற்கும் இன்றியமையாத பொருளாய் உள்ளவன் என்று கூறப்பட்டது. மாணிக்கத்து ஒளியாய் என்றதனால், சிவபெருமான் அத் தத்துவங்களைக் கடந்து நின்று அத்தத்துவங்களை உடலாகக் கொண்டு விளங்குகிற உயிருக்குஉயிராய், அவ்வுயிர் வேட்கை அறிவு, செயல்கள் விளங்கப் பெறுதற்கு இன்றியமையாத பொருளாய் உள்ளவன் என்பது

பெறப்பட்டது. அறிவில் பொருளாகிய தத்துவத்தை வைப்புமாடு என்றும் அறிவுள்ள உயிர்ப்பொருளை மாணிக்கத்தொளி என்றும் அடிகள் உவமித்தார். சிவபெருமான் தன்னை ஆன்மா அறிதற்கு ஆன்மாவினது உடலின்கண் மறைவாயிருக்கும் பொருள் என்பது "வைச்சபொருள் நமக்கு ஆகும் என்றெண்ணி நமச்சிவாய அச்ச மொழிந்தேன்" என்று திருநாவுக்கரசு அடிகள் தாம் பாடிய கோயிற் திருவிருத்தம் நான்காவது பாட்டிலும், "எவ்வுயிர்க்கும் வைப்பினை" என்று சுந்தரமூர்த்தி அடிகள் தாம் பாடிய திருவாரூர்ப் பதிகம் ஏழாவது பாட்டிலும் கூறி அருளினமை காண்க.

மனத்திடை யுருகாதே—சிறிய அண்டமாகிய உடலுக்குக் காரணமாயிருக்கிற தத்துவங்களை ஆசனமாகக் கொண்டு அவைகளுக்கு ஆதாரமாய் அவைகளில் நிறைந்து விளங்கியும் அவற்றைக் கடந்தும் நிற்கிற சிவபெருமானது பொதுஇயலை அடிகள் தாம் முதற்கண் தத்துவங்களில் வைத்துக் கருவி அறிவினால் ஆராய்ந்து அறிந்தும், பின் அருளறிவாய் அத்தத்துவங்களில் விளங்கும் ஒளியை அறிந்து தத்துவ வாதனையை மாற்றிச் சிவபெருமானது சிறப்பியலை அறிந்தும், தமது மனதில் உருகவில்லை என்பதை "வைப்புமாடு" என்றும் "மனத்திடை உருகாதே" என்றும், ஆன்மாவின்கண் அறிவுக்கு அறிவாயும் ஆன்ம அறிவைக்கடந்தும் விளங்கும் சிவபெருமானது பொது இயலை அடிகள் தாம் முதற்கண் தமது அறிவில் கருவியறிவால் துவிதமாய் அறிந்தும்,பின் தமது ஆன்மஅறிவு சிவபெருமானுடைய நிறையறிவில் அடங்கி ஆன்மபோத மிழந்து சிவபெருமானது சிறப்பியலை அருளறிவால் அவனுடன் அத்துவிதமாய்க் கலந்து பேரின்பம் உணர்ந்து தமது மனதில் உருகவில்லை என்பார், "மாணிக்கத்தொளி" என்றும் "மனத்திடையுருகாதே" என்றும் கூறினார். திருவடிதீக்கை செய்யப் பெற்றபின் நன்குணர்ந்த இந்த அனுபவங்களை அடிகள் இங்கே கூறினார்.

மனத்திடையுருகாது—

"உள்ள முருகி லுடனாவ ரல்லது
தெள்ள வரியரென் றுந்தீபற
சிற்பரச் செல்வரென் றுந்தீபற"

என்று, திருவுந்தியார் ஏழாவது பாட்டுக் கூறுகிறபடி ஆன்மா சிவத்துடன் இரண்டறக் கலத்தற்கு அன்பினால் உருகுதல் இன்றியமையாது வேண்டப் படுவது என்பது கூறப்பட்டது.

ஏ, அசை

ஒப்பிலாதன உவமனில் இறந்தன—

"ஒப்புடைய னல்லன் ஓர் உவமனில்லி"

என்று திருநாவுக்கரசு அடிகள் விடைத் திருத்தாண்டகம் பத்தாவது பாட்டில் கூறியருளினர்.

ஒப்பிலாதன உவமனிலிறந்தன-இரண்டும் பலவின்பாற் படர்க்கைப்பலவின் பால் வினையாலணையும் பெயர்கள். ஒப்பிலாதனவும் உவமனிலிறந்தனவும் ஆகிய பாதம் என இரண்டுபாதங்களையும் குறிக்கும் அடைமொழிகளாய் வந்தன.

ஒண்மலர்த் திருப்பாதத்து—திருப்பாதம் + அத்து திருப்பாதத்து. அத்து சாரியை.

திருப்பாதம் என்பது அருளாகிய பாதம்; மலர்த்திருப்பாதம்என்பது அடியார்களுடைய இருதய தாமரை மலரில் விளங்கும்பாதம். ஒண்மை என்ற அடைமொழி பாதத்தைத் தழுவுகின்றது. ஒண்பாதம் என்பது பேரொளியோடு விளங்கும் பாதம் ஆகும். பாதம் என்பது இங்கே இரண்டு திருவடிகளையும் குறிக்கின்றது.

பாதத்து ஆண்டு—பாதங்களால் ஆளுதல் என்பது மானுடவடிவில் குருவாய் வந்த சிவபெருமான், அடிகள் தலைமேல் தமது இரண்டு திருவடிகளைவைத்துத் திருவடி தீக்கை செய்து மும்மலங்களையும் நீக்கித் தனது அருட்சக்தியை முற்றிலும் பதியவைத்தல் ஆகும். அடிகள் இவ்வாறு திருவடி தீக்கை செய்யப்பெற்றபின் முன் சிவபெருமானது அருளை அடைந்த அடியார் கூட்டத்துடன் சேர்க்கப்படுதலால் "அடியாரிற் கூட்டிய" என்றார். திருவடி தீக்கை செய்யப் பெற்ற பின் அடிகள் அடைந்த பேரின்ப உணர்வு முன் இல்லாதிருந்து இப்பொழுது உணரப்படுதலால் அதனை முன்னில்லாதிருந்த (புதுமை) 'அதிசயம்" என்றார்.

கண்டாமே—ஏ, அசை. அடிகள் திருவடி தீக்கை செய்யப்பெற்று அடியார் கூட்டத்துடன் சேர்க்கப்பட்டபொழுது அவர்களோடும் அத்துவிதமாய்க் கலந்தும் அதிசயத்தை உணர்தலால் கண்டாம் என்றும் பன்மையிலே கூறினர்.

—மா. வே. நெல்லையப்ப பிள்ளை

---

# சமயமும் தத்துவமும்:
## Religion & Philosophy

### சைவர் மகாநாடு

திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் தலைமையுரை

(முன் ௩௬௪-ம் பக்கத் தொடர்ச்சி)

#### திருக்கோயில் நுழைவு

இனி, இதனைப்பற்றி இங்கே பேசும்போது பெருங் கிளர்ச்சியுடன் நடைபெற்று வருகின்ற இக்கால நிகழ்ச்சி யொன்று யாவருடைய நினைவிற்கும் வாராமற் போகாது. அதுகுறித்து ஒன்றுங் கூறாதுவிடின் அது படிறு, அல்லது கோழைமையின்பாற்படும். எக்குடியிற் பிறந்தார்க்கும் அவரது சமயக் கோயிலிற் சென்று ஆண்டவனை வழிபட உரிமை வேண்டுமென்பாரும், சிலர்க்கு அது கூடாதென்பாரும் சமயப் பற்றுடையவர்களே, சமயம் மாசின்றி நிலைபெற வேண்டுமென்னும் எண்ணம் உடையவர்களே. ஆதலின் ஒருவர் கருத்தை மற்றொருவர் பரிவுடன் ஆராய்ந்து பார்த்தல் முறையாகும். நான் இங்கே கூறக் கருதுவன நூன்முறையுடன் மாறுபடாத சில வரலாற் றுண்மைகளே. அவற்றை ஆய்ந்து துணிதல் இப்பேரவையோர் கடனும் என அறிஞர் கடனுமாம்.

திருக்கோயில்கள் இப்பொழுது காணப்படுதல் போன்றே பண்டை நாளில் இருந்தன வல்ல, முன்னாளில் மரங்களினடியிலும், மன்றங்களினும் நட்ட கந்துருவங்களில் கடவுளை வழிபட்டு வந்தனர். பின்பு, நாளடைவில் மண்டபங்களும், திருச் சுற்றுக்களும் பிறவும் சிறிது சிறிதாகப் பெருகி வர அவற்றை அமைக்கும் ஆகம விதிகளும் ஏற்படலாயின. இப்பொழுதும் ஓர் மரத்தடியில் வைக்கப்பெற்ற பிள்ளையாருக்குச் சிறு பந்தரும், மண்டபமும், கோயிலும் முறை முறையே உண்டாதலைக் காண்கின்றோம். இவ்வாறே தான் பண்டை நாளிலும் கோயில்கள் யாவும் தோன்றின. யானை முதல் எறும்பு ஈறாக வுள்ள அனைத்துயிர்களும் கடவுளைவழிபட்ட செய்தியைப் புராணங்கள் புகல்கின்றனவே. இப்பொழுதுள்ளன போன்ற கோயில்களிலா அவை வழிபட்டன? கோயில்

கள் பண்டைநாளில் எப்படியிருந்தன வேனும் இப்பொழுதுள்ள வழக்கத்திற்கு மாறுக யாதுஞ் செய்தல் பொருந்தா தெனின், வழக்கம் என்பதும் யாண்டும் ஒரு பெற்றியாகக் காணப்பட வில்லையே. தமிழகத்திலேயே ஒரு நாட்டுக் கோயிலிற் புகுதற் குரியரல்லார் மற்றொரு நாட்டுக் கோயிலிற் புகுதற் குரியராதலும் தமிழ் நாட்டின் எப் பகுதியிலும் கோயிலிற் புகலாகாதவர் வேறு நாட்டுக் கோயிலிற் புகுதற் குரியராதலும் காணப்படுதலின் நூல் களோ வழக்கமோ இன்னின்னர் கோயிலிற் புகத்தகாதவர் என அறுதியிடுவதாகத் தோன்றவில்லை. சில வகுப்பினர் யாண்டும் கோயிலிற் புகுவதில்லை யெனினும், ஒருசார் நூல்களும் அதற் காதரவாக விருப்பினும் நம் பெருமக்களுடைய உண்மைக் கருத் தினை ஊன்றி யுணர்தலும், நமது சமயத்தின் ஆக்கத்தை நாடுதலும் நமக்குரிய கடனும். சாதி குலம் என்பன உலகியல் நடை பேற்று முறையில் ஏற்பட்ட சில கட்டுப்பாடுகள் அல்லது சட்டதிட்டங் கள். சமயங்களோ உயிர்களின் கடைத் தேற்றத்திற் குரிய நெறி கள். உடல் பற்றுக் கோடாகத் தோன்றிய சாதி உயிரின் ஈடேற் றத்தைக் குறிக்கோளாகவுடைய சமயத்திற் புகுந்து சில மக்களை அதற்குரிய ரல்லா ராக்குதல் முறை யாகுமா? நம் சைவ சமய அருட் குரவர்கள் கோயில்தோறுஞ் சென்று இறைவனை வணங்கி உய்யுமாறு பதிகங்க டோறும் வற்புறுத்தருளியது சிலரை மட்டுங் கருதியோ? சிவ நேயர்காள்! இவற்றை ஓர்ந்து பாருங்கள். வட மொழிக் கடலும், தென்மொழிக் கடலும் நிலை கண்டவரும், வேத ஆகமங்களின் வினை பொருளெல்லா முணர்ந்து சிவஞான போதத் திற்குத் திராவிட மாபாடியம் என்னும் ஒப்பற்ற பேருரை வகுத்த வருமாகிய மாதவச் சிவஞான முனிவர்,

"சிவனெனும் மொழியைக் கொடிய சண்டாளன் செப்பிடின்
அவனுடன் உறைக,
அவனொடு கலந்து பேசுக, அவனோ(டு)
அருகிருந் துண்ணுக வென்னும்
உவமையில் சுருதிப்பொருடனை நம்பா
ஊமரோ டுடன்பயில் கொடியோன்
இவனெனக் கழித்தால் ஐயனே
கதிவே றெனக்கில கலைசையாண் டகையே"

என்றருளிய அருமைச் செய்யுளின் பொருளைச் சிந்தனை செய்யுங் கள். அருமறையின் துணிபு இதுவென்றும் அதனை நம்பாதவர்

இத்தகைய ரென்றும், அவ் வன்கண்ணரொடு உடன்பயிலுதலே இறைவனுக்கும் வெறுப்பினை விளைக்கும் பெருந் தீங்காமென்றும் அருளிச் செய்ததனை அறிந்து வைத்தும், அதனைப் புறக்கணித் தொதுக்கி மாறுபடப் பேசுவோரும் சைவ ராவரோ? அன்னார் அவரைப் போற்றுதலும் உண்மையாமோ? மற்றும் சமயத்தின் நிலைபேற்றை விரும்புவோர் புறச் சமயம் புகுவோர் புகுக, சைவ சித்தாந்தத் தேனமுதருந்துவோர் சில ரிருந்தாற்போதும் என அமைதல் சாலாது. பலர் இருப்பினன்றி இக்கால நிலையில் அத்தே னமுதைச் சிலரும் அருந்த முடியாதநிலை எற்படும் என்பதுஉறுதி. காலமென்னும் கடு நீர்ப் பெருக்கானது சமய நெறியுள்ளும் முன் னும் எத்தனையோ பல மாற்றங்கள் செய்துள்ளது; இனியும் செய்ய வல்லது என்பதனை உணர்ந்து அதற்கேற்பத் தலைசாய்த் துக் கொடுப்பதே அழிவினைத் தடுக்கும் சதுரப்பாடாகும்.

## சமாஜப் பணி

இனி, சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் பணிகள் சிலவற் றைக் குறிப்பிட விரும்புகின்றேன். சமாஜம் இதுவரை சமயத்திற் குப் பல தொண்டுகள் புரிந்துள்ளது என்பதில் ஐயமில்லை. அதி லும் சில ஆண்டுகளாகச் சைவத் திருமுறைகள் யாவற்றையும் யாவரும் எளிய விலைக்குப் படிக்குமாறு அழகுற அச்சிட்டு வருஞ் செயல் மிகவும் பாராட்டற் குரியது. இந் நன்முயற்சியில் ஈடுபட் டுழைக்கும் சமாஜ உறுப்பினர்கட்குச் சைவ உலகம் முழுதும் கடப்பா டுடையதாகும். இங்ஙனமே மெய்கண்ட நூல்களையும், பிற சைவ நூல்களையும் அச்சிட்டு உதவும் பணியைச் சமாஜம் மேற் கொள்ளுமென்னுந் துணிபுடையேன்.

சமய வளர்ச்சியின் பொருட்டுச் சமாஜம் மேற் கொள்ள வேண்டிய பணிகள் மற்றும் எத்தனையோ பல உள்ளன. சைவ சமயத்தவருள் தங்கள் சமய உண்மைகளை அறிந்தவர்கள் எத்தனை பேர் உளர்? தங்கள் சமய நூல்கள் இன்னவென்றும், சமய குர வர் இன்னாரென்றும் அறிந்தவர்களாவது 100-க்கு ஐந்துபேர் இருப்பரோ? இந்த நிலைமையில் இன்னும் எவ்வளவு காலத்திற்குச் சைவ மக்களை விட்டு வைப்பது? சைவரென்போர் யாவரும் தம் சமய உண்மைகளை ஓரளவேனும் தெரிந்து கொள்ளவேண்டிச் சமாஜம் உடனே மேற்கொள்ள வேண்டிய பணியாவது தகுதி

யுடைய சமயச் சொற்பொழிவாளர் ஒருவரேனும் ஊர்தோறுஞ் சென்று விரிவுரை யாற்றும்படி ஏற்பாடு செய்தலாகும். மற்றும் தமிழ் நாட்டின் இன்றியமையாத இடங்களிலேனும் ஆண்டுதோறும் சிலராவது சைவ சித்தாந்த நூல்களை முறையாகக் கேட்டுப் படிக்கும்படி தூண்டுதல் வேண்டும். சித்தாந்த வெளியீட்டினும் சைவ சமய உண்மைகளை அனைவரும் எளிதில் உணரும்படியாகத் தனித்தனியே விளக்கி எழுதிவரல் வேண்டும். மிக எண்மையுடைய இரண்டொரு பணியையே இங்கே குறிப்பிட்டேன். ஆனால் என் விருப்பம் உலக முழுதும் சைவ சமய மாண்பினை அறியும்படி செய்து 'சோவாரும் ஜெகத்தீரே' என அழைக்க வேண்டு மென்பதாகும். சமாஜம் தன் பணியைச் செய்யுமாறு சைவர்கள் யாவரும் அதில் உறுப்பினராகச் சேர்ந்தும் பிறவாறும் உதவி புரியும் கடமைப்பா டுடைய ராவர். முடிவாகச் சைவ மக்கள் எல்லாருடைய நினைவுக்கும் நான் கொண்டுவர விரும்புகின்றவை சைவர்க ளெல்லோரும் தாழ்வெனும் தன்மையுடையாதல் வேண்டும்;

'நின்று மிருந்துங் கிடந்து நடந்து நினை
என்றுஞ் சிவன்ற ளிணை'

என்றபடி எப்பொழுதும் சிவபெருமான் திருவடிகளைச் சிந்தித்தல் வேண்டும்; தீமை யெல்லாவற்றையும் போக்கி நன்மை யனைத்தையும் தாவல்ல திருவைந் தெழுத்தை இடையறாது, உருப்பெற உன்னி ஓதுதல் வேண்டும்; சைவத்திற்கும் நமக்கும் வாழ்வளித்த சமய குரவர்களை மாறா அன்புடன் போற்றி ஒழுகுதல் வேண்டும்; இவற்றால் தாம் எய்தும் இன்பத்தை வையக முழுதும் எய்துக வெனச் சிந்தித்தல் வேண்டும் என்பனவே.

நமச்சிவாய வாழ்க! நாதன் றாள் வாழ்க !!

---

# இலக்கணமும் இலக்கியமும்:
# LANGUAGE AND LITERATURE

## தமிழகம்

[திரு. S. நடராஜன் அவர்கள் B. A.,]

(முன் ௩.௪௭-ம் பக்கத் தொடர்ச்சி)

### தொல்காப்பியருக்குமுன் தமிழ் இலக்கியம்

29. *தலைச்சங்ககாலம் தனித்தமிழ்க்காலம்.* முதற் கடற்கோளுக்குப் பின்னர் இயற்றப்பட்ட முதல் இலக்கணம் தொல்காப்பியம். "என்ப" "என்மனர் புலவர்" எனத் தொல்காப்பியச் சூத்திரங்களிற் காணப்படும் தொடர்களும், ஆங்காங்கே மேற்கோளாகக் காட்டப்படும் செய்யுள்களும், இலக்கியங் கண்டதற்கு இலக்கணம் இயம்பல் என்னும் ஞாயமும், தொல்காப்பிய காலத்துக்குமுன் தமிழ் இலக்கியங்கள் பரந்து கிடந்தன என வலியுறுத்துகின்றன. தொல்காப்பியத்தினின்றும் அறியக் கிடக்கும் நாகரிகம் தமிழரின் தொன்மையையும், சிறப்பையும் வலியுறுத்தும் சான்று ஆகும்.

### தொல்காப்பியர் காலம்

30. தொல்காப்பியத்திற்குப் பாயிரம் பகன்ற பனம்பாரனர் தொல்காப்பியருடன் கற்றவர். இன்னர் தமிழ்நாட் டெல்லையை,

> "வடவேங்கடம் தென்குமரி யாயிடைத்
> தமிழ் கூறு நல்லுலகத்து"

என வடக்கே திருப்பதியையும் தெற்கே குமரியாற்றையும் குறித்திருக்கிறார். இவர் குமரியாற்றை எல்லையாகக் கூறுவதால் குமரிக்குத்தெற்கேயுள்ளநாடுகள் கடல்கோள்பட்டதென நிச்சயிக்கப்படுகிறது. உரையாசிரியர் நச்சினர்க்கினியர் "இவ்வாசிரியர் ஆதியூழியின் அந்தத்தே இந்நூல் செய்தலின்" என உரைத்திருப்பதை ஆராயுங்கால் இது முதற்கடற்கோளுக்குப்பிற்பட்டதென்னலாம். தொல்காப்பியத்தில் ஆரிய மொழிகள் கலந்திருப்பதனல் இஃது ஆரியக் கலப்பின் பின்னர் செய்யப்பட்டது எனவும் நிச்சயம் செய்யலாம். எல்லாவாற்றானும் இவர் முதற் கடற்கோளுக்குப்

பிற்பட்டவரென்றும், இவர் காலத்தே புதுநிலப் பரப்புத் தோன்றி வட நாட்டு ஆரியர் தமிழ்நாட்டாருடன் கலந்து வாழ்ந்தன ரெனவும், இவர் காலத்தில் தமிழ்நாட்டெல்லை இருமருங்கிலும் குறைந்து வட வேங்கடம் தென்குமரி யாயிற்றென்பதும் பெறப்படுகிறது. இவரது காலம் இடைச்சங்க காலமென்பது பலரின் கருத்தாதலாலும் இவர் இற்றைக்கு ஏறக்குறைய ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னர் உள்ளவர் எனலாம்.

### தமிழர் ஆரியர் கலப்பு

31. இமயம்வரை பரவியிருந்த தமிழருடன் ஆரியர் கலந்து கலப்பு மக்களாய் மாறினர். இராமாயண காலத்திற்குமுன் விந்திய மலைக்கு வடக்கேயுள்ள நாடு ஆரியர் வசமாயிற்று. இராமாயண காலத்திற்றுன் முதன்முதல் ஆரியர் விந்திய மலைக்குத் தெற்கே புகுந்தனர் என்பதும், இலங்கை மன்னன் தண்டகாரண்யம் என்னும் விந்தியமலைக்குத் தென்பாகத்திலுள்ள நாட்டிற்கு உரியவனென்பதும் சிவநேசம் பூண்டவனென்பதும் ஆராய்ந்து அறியக் கிடக்கின்றன.

32. இதற்குப்பின் இரண்டாங் கடற்கோள் நிகழ்ந்து குமரியாறும், கபாடபுரமும் கடல்வாய்ப்பட, தமிழகம் குறுகி

"நெடியோன் குன்றமுந் தொடியோள் பெளவமுந்
தமிழ் வரம்பறுத்த தண்புன னாட்டு" —சிலப்பதிகாரம்.

என்றபடி குமரிமுனையைத் தென் எல்லையாயுடைய தாயிற்று.

### தமிழகத்தின் வடபாகம் தெலுங்கு நாடானமை

33. இராமாயணப் போரில் வெற்றி பெற்றதின் காரணமாய் விந்தியமலையுடன் குறுகிய தமிழ்நாட்டின் வடபகுதியில் வடமொழி பரவுவதாயிற்று. இப்பாகத்திலுள்ள தமிழ்மக்கள் வடமொழியைத் தமிழுடன் கலந்து வடுகு என்னும் ஒரு புதுமொழி பேச ஆரம்பித்தனர். இஃது இரண்டாஞ் சங்கம் அழிந்தபின்னர் தோன்றிய சிறுகாக்கைபாடினியாரின் செய்யுளால் பெறப்படும்.

"வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்
வரைமருள் புணரியொடு பொருது கிடந்த
நாட்டியல் வழக்காம்........ (தொல். பாயிரவிருத்தி)

கடைச்சங்கத்திற்குப் பிற்பட்ட காலவரை

34. கடைச்சங்கத்தின் இறுதி கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் முன் எனக் கருதப்படுகிறது. இக்கடைச்சங்க காலத்தில் கரிகால் பெருவளத்தான் போன்ற தமிழ்மன்னர் இமயம்வரை படை கொண்டு சென்று வெற்றிபெற்று வாகைசூடித் திரும்பினர். இக்காலத்தில் தமிழர், யவனர் முதலிய மேற்றிசையாளருடன் வாணிபஞ்செய்து பெருஞ் சீரும் சிறப்பும் பெற்று உயர்ந்த நாகரிகம் படைத்திருந்தமை சந்திரகுப்த மௌரியரின் அவைக்குக் கிரேக்கநாட்டுத்தூதராய் வந்த மெகஸ்தனீஸ் என்பார் எழுதியுள்ள குறிப்புகளாலும் பிற இலக்கிய அகச்சான்றுகளாலும் தெளிவுறுகிறது.

35. கி. பி. மூன்றாம் நூற்றாண்டி னிறுதிக்காலத்திலிருந்து கி. பி. நான்காம் நூற்றாண்*டின் நடுப்பகுதிவரை மாணிக்கவாசகர் காலமாம். பின்னர் ஆறாம் நூற்றாண்டுவரை சமணர் காலமாம். அதன்பின்னர் சைவம் தழைத்து ஓங்கினதெனினும், ஏழாம் நூற்றாண்டில் சமணம் மதுரையில் நிலவியது. ஏழாம், எட்டாம் நூற்றாண்டுகள் தேவாரகாலமாகும். இக்காலத்தில் சமணமும், பௌத்தமும் நீங்கிச் சைவம் பெருகிற்று. எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியும் ஒன்பதாம் நூற்றாண்டும் வைணவ ஆழ்வார்கள் காலம். 10-ம் நூற்றாண்டில் சமணர் கிளர்ச்சி பெருகிச் சைனப் பெருங்காப்பியங்கள் தோன்றின.

தமிழகத்தின் மேல்பாகம் மலையாள நாடானமை

36. ஏறக்குறைய 9-ம் நூற்றாண்டினிறுதியிலும் 10-ம் நூற்றாண்டின் ஆரம்பத்திலும் சேர நாட்டில் மலையாளந் தோன்றி காலப்போக்கில் தமிழகத்தின் மேற்கெல்லை குறுகி

"குணகடல், குமரி, குடகம் வேங்கடம்
எனு நான் கெல்லையினிருந்த மிழ்க்கடலுள்" —நன்னூல்

எனவாயிற்று.

சோழர் எழுச்சி

37. 10, 11, 12-ம் நூற்றாண்டில் சோழமன்னர்கள் வடக்கே கங்கைவரையும், கிழக்கே கடல்கடந்து இலங்கை, பர்மா வரையும்

---

* உயர்திருவாளர்கள் மறைமலையடிகள், கா. சுப்பிரமணியம்பிள்ளை சி. கே. சுப்பிரமணிய முதலியார் ஆகிய மூன்று பேரறிஞர்களும் அடிகள் காலத்தைத் தக்க சான்றுகளுடன் மூன்றாம் நூற்றாண்டென நிலைநாட்டியுள்ளார்கள்.

வென்று தங்கள் பெருமையை நிலைநாட்டினரேனும் தமிழகம் விரிந்திலது. 13 முதல் 16-ம் நூற்றாண்டுவரை மணிப் பிரவாள உரைநடைக் காலம். இக்காலத்தில் விஜயநகர ஆட்சி அரவீடு (Aravidu dynasty) மன்னர்கள் வசமானதும், சந்திர சேகர பாண்டியன் இறுதியுறவும், பாண்டியன் மதுரை தெலுங்கர் வசப்பட்டு, தமிழ்மன்னர் இலராயினர். †எனினும் தொண்டை நாடும், சோழநாடும், பாண்டியநாடும் தமிழர்களின் தாய்நாடாய்த் திகழ்கின்றன.

### ஆங்கில ஆட்சியில் தமிழகம்

38. விஜயநகரம் அழிவுற்றதும், ஆங்கிலேயர்கள் அரசுபெற தமிழகமும் 10 ஜில்லாக்களுக்குள் ஒடுங்கிற்று. தமிழ் மக்களின் தாய்நாடு இதுவேயாயினும், தமிழர்கள், வெளியே இலங்கை மோரீஸ், பர்மா, பினங்கு, தென் ஆப்பிரிக்கா, கீழ் ஆப்பிரிக்கா முதலிய பல இடங்களிலும் சென்று குடியேறி வசித்துவருகின்றனர். ஏறக்குறைய $2\frac{1}{2}$ கோடிமக்கள் இதுகாலை தமிழராவார். (தொடரும்.)

---

## தமிழ்மொழியின் ஒலிகளும் எழுத்தும்

[ஈப்போ, திரு. தியாகராயன் அவர்கள்]

(முன் ௩உ௩-ம் பக்கத் தொடர்ச்சி)

முன்னர் வடமொழி ஒலிக்கேற்ற எழுத்துக்களை நம்மொழியில் புகுத்தபொழுது க்ஷ என்னும் மிகைபட்ட எழுத்தைக் கூட்டினர். இவ்வெழுத்து "ட்ச" என்னும் எழுத்துக்களின் கூட்டொலிக் கொத்ததே. எனவே இச் "க்ஷ" மிகைபட்டதே.

இக்காலத்தில் நம் மொழியைச் சீர் செய்யப் புகும் நாமும் அவ்வாறு மிகைப்பட எழுத்துக்களைக் கூட்டின் வடமொழிக் கெடுத்துரைத்த இழிவே நம்மொழிக்கு மேற்படும். ஆகையால் இவ்வழியைத் தவிர்த்து வேறுவழி நாடுவோம்.

ஆங்கிலத்தில் A என்னும் எழுத்திற்கு 12 வேற்றொலிகளுண்டு. எனினும் அவ்வோரெழுத்தையே ஆதாரமாகக்கொண்டு

---

†பிற்காலத்து அரசுபெற்ற மாட்சிமை தங்கிய புதுக்கோட்டை அரசர் தமிழ் மன்னராம்.

அவ்வெழுத்தின் தலையில் —, U, Λ, . , —, ,, இவைபோன்ற குறிகளையிட்டு அவ் வேற்றொலிகளைக் காண்பிக்கிறார்கள்.

நம் முன்னோரும் குற்றுகர இகரங்களைப் புள்ளியுடன் எழுதினார்களென முன் உரைத்தேன்.

1917-ம் ஆண்டின் இறுதியிலோ 1918-ம் ஆண்டின் முதலிலோ திரு P.V. மாணிக்க நாயக்கர் அவர்கள் திருச்சி நகர மண்டபத்தில் "தமிழ்மொழியினோசை" யென ஒரு சொற்பொழிவு நடத்தினர். அச்சொற்பொழிவு கேட்கும் பாக்கியம் எனக்கும் வாய்த்தது. இவர் அச் சொற்பொழிவில் ஆயுத எழுத்தை இகர மெய்களுடன் சேர்த்தொலிப்பின் மற்ற மொழிகளிலுள்ள எல்லா ஓசைகளையும் ஒலிக்கலா மென எடுத்துக் காட்டியது மன்றி 18 பிறமொழிகளை அவ்வாறே தமிழில் எழுதியும் காட்டினர்.

ஆகையால் நாமும் இப்புத்தோசைகளைக் குறிக்கப் பழைய எழுத்துக்களுடன் ஒரு குறியை இணைத்துக் காட்டுவதே நன்றெனத் தோன்றுகிறது. அக்குறியும் சுலபத்தில் எழுதவும், அச்சிடக் கூடியதாகவு மிருக்கவேண்டும். எல்லாப் புத்தோசைகளுக்கும் ஒரு குறியையே இணைக்கவேண்டும்.

இது எற்குமாயின் கீழே காட்டுவதுபோல் இப்புத்தோசைகளைக் குறிக்கப் பழையஎழுத்துக்களுக் கடுத்தாப்போல் முற்றுப் புள்ளி (Fullstop) என்ற குறியைத் திருப்பிவைத்து அவ்வெழுத்துக்களுக்கு அயலில் வர இணைப்பதே சான்றெனத் துணிந்தேன்

| பழைய எழுத்து. | புள்ளி யொடியங்கல். | புத்தொலி. |
|---|---|---|
| க | க· | Ga. |
| ச | ச· | Za. |
| த | த· | Dha. |
| ட | ட· | Da. |
| ப | ப· | Ba. |
| வ | வ· | Fa. |
| ழ | ழ· | Z. |
| | | as in azure |

மேலே காட்டிய குறியானது, நம் முன்னோர்கள் வேற்றோசைகளுக்குத் தழுவியதும், மாணிக்க நாயக்கர் காட்டியது போல் ஃ என்னும் ஆயுதத்தின் ஒரு பாகமாயும், அச்சிடுவதற்குப் புதிய அச்சுகள் வேண்டாமையினாலும், தற்பொழுதில் வழக்கத்திலிருக்கும் ஓர் அச்சே எல்லாவற்றிற்கும் போதுமாகையாலும் எழுதுவதற்கும் சிரமமில்லாததாலும், நன்றெனவே தோன்றுகிறது.

## தமிழ் எழுத்துக்களும் அவைகள் குறிக்கும் ஆங்கில ஒலிகளும்

## அட்டவணை

| தமிழ் எழுத்துக்கள் (மெல்) | ஏற்ற ஆங்கில எழுத்து | உதாரணம் | தமிழ் |
|---|---|---|---|
| ப் | P | Post, Rope | போஸ்டு, ரோப் |
| ப்· | B | Boast, Robe | போ· ஸ்ட்,ரோப்· |
| ட் | T | Tip, Fate | டிப், வே· ட் |
| ட். | D | Dip, Fade | டி·ப், வே· ட்· |
| ச | CH | Chest, Etch | செஸ்ட், எட்ச் |
| ஜ | J | Jest, Edge | ஜெஸ்ட், எட்ஜ் |
| க் | K | Cane, Leak | கேன், லீக் |
| க்· | G | Gain, League | கெ· ய்ன், லீக்· |
| வ்· | F | Fat, Safe | வா· ட், ஸேவ்· |
| வ | V | Vat, Save | வாட், சேவ் |
| த் | TH | Thigh, Wreath | தை, ரீத் |
| த்· | TH | Thy, Wreathe | தை·, ரீத்· |
| ஸ | S | Seal, Base | ஸீல், பே· ஸ் |
| ச· | Z | Zeal, Baize | சீ· ல், பே· ய்ச்· |
| ஷ் | SH | She, Dash | ஷி, டா· ஷ் |
| ழ்· | SH | Treasure, Vision | ட்ரெழ· ர்-விழ-ன் |
| ம் | M | Met, Seem | மெட், ஸீம் |
| ந் | N | Net, Seen | நெட், ஸீன் |
| ங் | NG | Kingly, Long | கிங்லி, லாங் |
| ல் | L | Light, Title | லைட், டைட்ல் |
| ற் | R | Right, Tire | றைட், டயற் |
|  | W | Wet, Away | வெட், எவே |
| ய் | Y | Yet, Ayah | யெட், ஆயா |
| ஹ | H | High, Adhere | ஹை, அட்· ஹீர் |

# கன்னனும் கும்பகர்ணனும்

[பண்டிதர் திரு. மா. இராசமாணிக்கம் அவர்கள்]

(முன் ௩௧௯-ம் பக்கத் தொடர்ச்சி)

இனிக் கும்பகர்ணனைக் கவனிப்போம்: இராவணன், கும்பகர்ணன், விபீடணன் என்ற மூவரிலும் அறிவிற் சிறந்தவன் கும்பகர்ணனே. அவன் இராவணனின் செயலை வெறுத்தான்; 'பிறன் மனைவியை ஒருவன் கவர்தல் நியாயம் அன்று' என்று அவன் தெள்ளிதில் உணர்ந்திருந்தான். தமையன் பிழையைப் பலவாறு கூறிக் கண்டித்தான். அவனைப் போருக்குச் செல்லும்படி இராவணன் கூறினான். அப்போதவன், 'அந்தோ! அண்ணா! இன்னும் அச் சானகி துயரம் தீரவில்லையா? வெஞ்சமர் மூண்டு விட்டதா? வானளாவிய நினது புகழ் மாயுங்காலம் வந்துவிட்டதா? நாம் அழியக் கூடிய காலம் நெருங்கி விட்டதோ? நிட்டியின் விடம் அன்ன கற்பின் செல்வியை விட்டிலையோ? இது விதியின்வண்ணமே. இராமன் தோள்களை வெல்லலாம்; சிதை மேனியைப் புல்லலாம் என்பதும் நீ நினைக்கத் தக்கவையோ? தையலை விட்டு அவன் சரணம் தாழ்ந்து, நின் மையறு தம்பியோடு அளவளாவுதலே நீ உய்திறம்'' எனக் கூறியது போற்றற் குரியது. தம்பியின் கூற்றிற் சீற்றங் கொண்ட இலங்கை வேந்தன்,

''மானுடர் இருவரை வணங்கி மற்றுமக்
கூனுடைக் குரங்கையும் கும்பிட் டுய்தொழில்
ஊனுடை உம்பிக்கும் உனக்குமே கடன்;
யானது முடிக்கிலேன்; எழுந் துபோ''

எனக் கூறிப் போருக் கெழுந்தான்.

தமையன் அறியாமையைக் கண்ட கும்பகர்ணன் மனம் வருந்தி, தான் போருக்குப் புறப்பட்டான். அங்ஙனம் புறப்பட்டவன் தமையனை நோக்கி,

''வென்றிவண் வருவனென் றுரைக்கி லேன்;விதி
நின்றது பிடர்பிடித் துந்து கின்றது;
பொன்றுவென்; பொன்றினால், பொலன்கொள் தோளியை
நன்றென நாயக! விடுதல் நன்றரோ''

'தலைவ! விதியானது என்னைப் பிடர்பிடித்துத் தள்ளுகின்றது, யான் இறந்த பின்னராவது சீதையை விடுதல் உனக்கு நன்றாம்.

அண்ணா! என்னைக் கொல்பவர் உன்னைக் கொல்லாது விடார்; ஆதலால், பின்னை யெண்ணுதல் பிழை; அப்பெய்வளைதன்னை விட்டுவிடுதல் சிறந்தது' என்றான். என் கூறியும் என்? இராவணன் கேட்டானில்லை. முடிவில் கும்பகர்ணன் புறப்பட்டுப் போகையில், அண்ணனது அடிக்கமலத்தில் தன் முடிபட வணங்கி,

"இற்றைநாள் வரைமுதல் யான்முன் செய்தன
குற்றமும் உளவெனில் பொறுத்தி, கொற்றவ!
அற்றதான் முகத்தினில் விழித்தல், ஆரிய!
பெற்றனென் விடை" யெனப்பெயர்ந்து போயினான்.

'ஐய! யான் இன்றுவரை அறிந்தோ அறியாமலோ செய்த பிழைகள் எவையேனும் இருப்பின், அவற்றைப் பொறுத்தருள்க" என்று கூறும் கனிந்த சொற்கள் கல் நெஞ்சமுடைய இலங்கைக் காவலன் மனதையும் கலக்கின என்றால், நம் மனம் கனிவதைக் கேட்பானேன்?

கும்பகர்ணன் தமையனிடம் நீங்கா அன்புடையவன். அவனது நன்மையில் நாட்டம் உடையவன்; தன்னை அன்றளவும் காத்த தமையனுக்காக உயிர்விடத் துணிந்தே போருக்கெழுந் தான். செஞ்சோற்றுக் கடன் கழித்தலே தான் செயத்தக்கது என்பதை மானமுள்ள அவ்வீரன் கருதினான்.

போர்க்களத்தில் வீபீடணன் கும்பகர்ணனை யணுகி, இராம னுடன் சேரும்படி வேண்டினான். அதைக்கேட்டு நகைத்துக் கும்பகர்ணன் கூறிய கூற்று மானவீரம் பொருந்தியதாயுளது.

"நீர்க்கோல வாழ்வை நச்சி
நெடிதுநாள் வளர்த்துப் பின்னைப்
போர்க்கோலஞ் செய்து விட்டாற் (கு)
உயிர்கொடா தங்குப் போகேன்"

'நீரில் தோன்றி மறையும் குமிழியை யொத்த வாழ்வை நம்பி என்னை ஆருயிர்த்துணையெனக் கருதி நெடிது நாள் வளர்த்து இப்போது என்னைப் போருக்கனுப்பிய அண்ணலுக்குத் துரோ கம் செய்ய மாட்டேன்; யான் உயிர்துறப்பினும் துறப்பேன்; செய்ந்நன்றியறிதலைத் துறவேன்' என்று கூறும் கும்பகர்ணன் கூற்றில் ஒழுக்கமும் மானமும் ஒளிர்வதைக் காண்க.

மீண்டும் அவ்வறிஞன் இளவலை நோக்கி,

"புலையுறு மரணம் எய்தல் எமக்கது புகழ தேயால்"

என்று உயர்ந்த அரசவீரனது சிறந்த கொள்கையை வற்புறுத்திப் பேசுகின்றான்.

'தம்பி! அரசன் தீமை செய்தால் நாம் அறிவு புகட்ட வேண்டியது கடமை. அதனையும் அவன் கொள்ளானாயின், அவனது சோற்றையுண்ட நாம் அவனுக்காகப் போர் செய்து இறத்தலே நன்று; அதுவே உண்டவர்க்கு உரியது' என்று செய்ந்நன்றி யறிதலை வலியுறுத்திக் கூறியுள்ளான்.

"கருத்திலா விறைவன் தீமை கருதினால் அதனைக் காத்துத்
திருத்தலா மாகில் நன்றே; திருத்துதல் தீரா தாயின்,
பொருத்துறு பொருளுண் டாமோ? பொருதொழிற் குரியராகி
யொருத்தரின் முன்னஞ் சாதல் உண்டவர்க் குரிய தம்மா."

மேலும், கும்பகர்ணன் பின்னேனை விளித்து, 'எம்பி! அண்ணன் பகைவன் என்பகைவன் அன்றோ? அவனை அடைக்கலங் கொண்டு, புண்பட்ட நெஞ்சோடு உயிர்வாழ யான் இசையேன்' என்று கூறும் வீரமொழிகள் கும்பகர்ணனது வீரத்தையும் உயர்ந்த ஒழுக்கத்தையும் காட்டுகின்றன.

"செம்பிட்டுச் செய்த விஞ்சித் திருநகர்ச் செல்வந் தேறி
வம்பிட்ட தெரியல் எம்முன் உயிர்கொண்ட பகையை வாழ்த்தி,
யம்பிட்டுத் துன்னங் கொண்ட புண்ணுடை நெஞ்சோ டைய
கும்பிட்டு வாழ்கிலே னியான் கூற்றையும் ஆடல் கொண்டேன்"

இங்ஙனம் கூறிய கும்பகர்ணன், முடிவில் தன்னாலானவரை யுத்தஞ் செய்து தன்கடனைக் கழித்துக் காலன்வாய்ப் பட்டான். கன்னனும் தன் கடனைக் கழித்து மடிந்தான். கன்னனும் கும்பகர்ணனும் 'செய்ந்நன்றி யறிதல்' என்ற சீரிய குணத்துடன் ஒழுகியதே அன்னார் தனிச்சிறப்பைக் காட்டாநிற்கின்றது.

---

மகிழ்ச்சியுடன் இருக்கக்கூடிய காலம் இதுவே; மகிழ்ச்சியுடன் இருக்கக் கூடிய இடமும் இதுவே; மகிழ்ச்சியுடன் இருக்கும் வழியோ மற்றவர்களை மகிழ்விப்பதே.

—இங்கர்ஸால்

# கவின்கலைப் பகுதி: FINE ARTS

## மக்கட் பிறவியும் மாண்புறு கலைகளும்

[திரு, S. ஈசுவரமூர்த்தியா பிள்ளையவர்கள், ஓவியப் புலவர்]

"நண்மா ணுழைபுல மில்லா னெழில்நலம்,
மண்மாண் புனைபாவை யற்று."

நன்னெறியில் ஒழுகப் பிறந்த மக்கள் தீநெறிக்கண் ணொழு கின், அரிதிற் கிடைத்த இம்மக்கட் பிறவியின் பயனை யிழந்து விடு கிறார்கள்.

"பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற் கரிய பிரானடி பேணார்
பெறுதற் கரிய பிராணிக ளெல்லாம்
பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே"

—திருமந்திரம்.

உண்டுறங்கித் தங்க ளினத்தைப் பெருக்குந் தொழில் எல்லா உயிர்களுக்கும் பொதுவே. யெனினும், ஆறறிவுவாய்ந்த மக்கள் தங்கட்குக் கீழ்ப்பட்ட பிற உயிர்களைப்போலன்றி சிறப்புறு செயல்களைச் செய்து முடிக்கக் கடமைப்பட்டவர்கள். "மனிதன் மதமுள்ள ஜந்து" வென மேனாட்டார் கூறுவது முற்றிலும் உண் மையே. மதத்தினால் வரும் நன்மை தீமைகளைப் பெற்றனுபவிக்க வேண்டியவன் மனிதனே.

வாய்மையால் அகம் தூய்மையாகும். பழக்கத்தினாலேயே மனம் சுத்தப்படும். "கற்றதொரு கல்வி மனப் பழக்கம்" என்பது ஔவையார் முடிபு. மனப்பழக்கமில்லாத கல்வி, கல்வியோடு சேர்ந்ததன்று. பல நூல்களிலுமுள்ள பொருளை நுணுகி நோக்கி மாட்சிமைப் பட்டுச் சென்ற அறிவே, கல்வி கற்றோருடைய விலக்கணம். அவ்விதம் மனம் பழக்கப்பட்டு மேம்பாடடைந்த வொருவனை மருளென்னும் பேய் விட்டகலும். நாற் கரணங்க ளில் மனம் தெளிவுபட ஏனைய மூன்றும் அப்பிலுப்புப்போல ஒன்றெனக் கலந்து, புத்தி கலங்காது, சித்தஞ் சிதையாது, அகங் காரம் அணையாது, திரையற்ற நீர் போல் தெளிவுற்று, புனிதமாகி,

அருள்மயமாகப் பிரகாசிக்கும், இவ்வரு ளொளியைப் பெற்றவரே மகாஞானி. அவர் உள்ளுணர் அறிவு அழகுருவாம். அவ்வழகு வடிவு உண்மைக்கடவுள். ஆகவே, மெய்க்கல்வி கற்ற வொருவன் இறைவனின் எண்குணங்களையும் ஐம்புலன்களாலும் நுகருகிறான். அந்நுகர்ச்சி விளக்கமே கலைகள்.

மனிதன் தன்னுணர்ச்சியைத் தெரிவிக்க முதன் முதலில் நேர்ந்த கருவிகளே கலைகள். மிருகங்களின் தோல்களை ஆடையாகப் பூண்டு, எழுதப் படிக்கத் தெரியாதிருந்த புராதன காலங்களிலேயே சித்திரம் வரைதல், இசைபாடுதல், நடனமியற்றல் ஆகிய இவைகளை மக்கள் அறிந்திருந்தனர். பச்சிளங் குழந்தை கற்பலகையில் தன்னருமைப் பூனையை மிக வெளிய' நடையில் எவ்விதம் வரைந்து காட்டுகிறதோ, அதேபோன்று தங்களைச் சூழ்ந்துள்ள பண்டங்களை ஆதி மனிதர்கள் வரைந்து காட்டினார்கள். அவர்கள், ஆகாரத்தைத் தேடி வேட்டையாடிக்கொணர்ந்து சமைத்தருந்திய பின்னர், ஒழிந்த நேரங்களில் தங்க ளனுபவங்களைக் கற்பாறைகளின்மீது கூரிய கற்கள் கொண்டு செதுக்கினார்கள் என்பதற்குப் பல சான்றுகளுள. இவ்விதம் தன்னுடல் நலம் பற்றி வாழ்ந்துவந்த மனிதனுக்கும், ஆன்ம நலம்பற்றி யுலகிற்கு நவில முயன்ற மனிதனுக்கும், இடையேயுள்ள கால அளவு இனைத்தெனக் கூறற்கரிது. மனிதன் நாள்தோறும் உயர்வுற முறைகளைத் தேடுவா னன்றித் தாழ்வடைய நினையான். அதற்கனுகூலமாக, அவன் மனநிலை பக்குவமடையும் வழிகளை ஆராய்வுழி, உண்மைப் பொருளை நாடுகிறான். மெய்ப்பொருளுணர்ட்ட மிகவே, கடவுட்டன்மையை அவன் உணர்கிறான். அவ்வுணர்வினால் தன்னையேதான் உணர்கிறான். அவ்வுணர்ச்சி மேலிட தன்னுள் அவன் தனிப்படக்கலந்து நிற்கும் நிலையை யுணர்கிறான்; அத்துவித நிலையை யடைகிறான். அப்பொழுது அழகினுருவை யவன் கண்டின்புறுகிறான். தான்பெற்ற அவ்வின்பம் அனைவரும் அடையப் பெருங் கருணைகொண்டு அவ்வழகை நிறுவியவைகளே கலைகள்.

அழகு எனின் என்னை? உணர்ச்சியெனில் யாது? என்ற வினாக்களுக்கு விடையிறுக்க எளிதி லியலாது. ஆனாலும், அழகும் உணர்ச்சியும், உடம்பிற் கூனளித்தற்போல, ஆன்மாவிற்கு ஆனக்

த்தைவிளைவிக்கக்கூடிய உருவங்களாகவோ, ஏழிசைகளாகவோ, பன்னிறப் படங்களாகவோ அவைகள் வெளிப்படு மியல்புடையன. என்பு தோல் தசை யசைவுகளேபோன்று அவை ஆன்ம சக்தி யியக்கங்களே. புன்புலால் யாக்கைச் சுகமுற, உடையும், ஊணும் வேண்டுவதேபோல், தேசுறு மனமும் உள்ளுணர் உணர்வை வெளிப்படுத்திச் சாந்தியடைவது மனித இயற்கைகளுள் தலையாயதாம்; அது மிக வலிமை வாய்ந்தது. சின்னஞ்சிறுமி யொருத்தி மிகப்பொறுமையுடனும், கருத்துடனும் மணற்சிற்றில் கட்டுவதும், "நான் ஒரு வீடு கட்டினேன்" என்று கூறி வாயார மனமார மகிழ்வதும் இவ்விதச் சக்தியின் தன்மையே. அதே சக்திதான், கூடகோபுரங்களையும், மாடமாளிகைகளையும், தேடரியசித்திரங்களையும், செயற்கரிய நடனங்களையும், யாழிசைப் பாக்களையும் கற்பித்தது. கடவுள் தண்ணருட்டிறனின் அறிகுறியாக அகில மெல்லாம் படைத்தன ரென்றும், அவற்றினொன்று மிப் பூவுலகில் வாழும் நாம் அவருடைய உண்மை அருளையும், முடிவில் அவரையும் பல படைப்புகளிடையே கண்டு கலைவழி விளக்க முயல்வதே இப்பிறவியின் நோக்கம் எனவும் கூறுப.

எக்கலைப் பகுதியும் சிறப்புற இருதிறத்தார்வேண்டும். அதை ஆக்குவோனும் கண்டுமகிழ்வோனும் ஆகியோரே அவ்விருதிறத்தினர். ஆக்குவோன் புகுத்திய மர்மங்களை யறியாது, காண்போன் அக்கலையின் மகிமையைத் தெரிய வியலாது. அன்பு, வருத்தம், ஒப்புரவு, வணக்கம் இத்தகைய குணங்களின் உணர்ச்சியின்றிக் கலைகள் புறம் வந்ததில்லை. காண்டலரிய அன்பின் வழி வந்த கலைகள் மிகப்பல. உடல்பற்றிய மனைவி, மக்கள், சுற்றம் இவர்கள்பால் நிகழும் அன்பினாலும், உயிர்பற்றிய கடவுள், உண்மை, வீரம் ஆதிய பருப்பொருளல்லாதன வற்றின் பால் நிகழும் அன்பினாலும் விளக்கமுற்ற கலைகள் தம்மில் வேறுபாடுடையன. மிக நேசிக்கப்படும் மண், பெண், பொன் மூன்றையும் ஒருவி மாயையாம் இப்புவி வாழ்வை வெளிப்படுத்தும் கலைகள் சிலவேயாயினும், துக்கத்தால் நிகழ்ந்தது பற்றி மனதை மிக உருகச் செய்வன துன்பியற் கலைகளே. வணக்கத்தால் நிகழும் கலைகள் மிகச் சீரியவைகள். செம்மையான சித்திரங்களும், ஈசனியங்கும் கோவில்களும், ஆண்டுள உருவச்சிலைகளும், திருக்கோபுரங்களும் மனிதனைவிட மேலானவைகள். ஏனெனில், அவைகளில்

தொன்று தொட்டுள்ள கடவுட்டன்மையும், பண்டைக்கால உண்மைகளும் படைப்புகளி னமைப்பும் வெளிப்படுகின்றன. ஆகவே, மனிதனின் தூய வுணர்வின் மிகவுயரிய நிலையை வெளிப் படுத்தற் குரியன சீரிய நுண்கலைகள் என்பன. அதுவன்றி, பாசம் நீங்காப் பாமரர் தேடும் சிற்றின்ப விளக்கங்கள் கலைகள் எனக் கொள்ளல் தவறு.

நமக்கு இறைவனருளிய பொருட்களுள் அரிதினு மரிது கலைஞானமெனும் நுண்பொருளே. எங்கணும் என்ஞான்றும் நம்முடனுறைவ திதுவே. கடைவீதிவழிச் செல்லும்பொழுதும், குயவன் வனைந்த பாண்டங்களைப் பார்க்கும்பொழுதும், நகைகள் பலவும் கண்கவர் வனப்புடன் திகழும் பொழுதும், கலைக்கதிர் அங்குத் தோன்றுமல் லிருக்கவில்லை. அப் பொருட்களிலொன்று புதிதாக நேற்றுச் சமைந்ததாயினும், அதன்தோற்றுவாய் பண் டைநாட் பயிற்சியிற் பதிந்து கிடக்கிறது. ஆலயங்களி லமைந் திருக்கும் சீரிய சிற்பத்திறனுறு வாயிற்படிகளும், வானமளாவிய வாயிற் கோபுரங்களும் உயர் தூண்களும், தற்போதமைக்கப்படும் விசித்திர விநோத நாகரிக இருக்கைகளும் பல நூற்றுண்டுகட்கு முன் மனிதருள் ளெழுந்த அருட்சக்தியின் பெருமுயற்சிப் பய னென்பதில் ஐயமில்லை.

அகத்திற் கண்டதே புறத்தில் தோற்றமுறும். அகமெனில் உள்ளதற்கிடமாயுள்ள உளம். நாம் காணும் பரந்த பார், நம்முட் காணு முளத்தின் நிலையளவே. "உளம் போலுலகம்" என்பது ஆன்றோர் வாக்கு. மனிதனே பல உலகங்களின் சாயையெனக் கொள்வர் ஒருசாரார். ஒருவன் மனதிற்கும், அவன் எண்ணங் களின் தன்மைக்கு முள்ள தொடர்பு, அவன் செயல்களில் தெரிகின்றது. யாவர்க்கும் புறக்கருவிகள் அகக்கருவியுடன் மிக ஒற்றுமையாக உழைக்கின்றன. மனதிற்றோன்றுங் கருத் துக்கள் செம்மை சான்றவைகளாயின் அவன் செய்கைகளும் சீரியனவே. அதுவன்றி, அவைகள் தாழ்ந்தவைகளாயிருப்பின், அவன் கருமங்களும் இகழத்தக்கவைகளே. அகத்தெழு முணர்வு களைப் பொதிந்து நிறுவிய ஓவியம், இசை, நடனம் ஆகிய நுண் கலைகள் ஒவ்வொரு நாட்டிலும் முற்காலத்தும் தற்காலத்துமுள. அவை அத் தேசத்தாரின் நாகரிக நிலையை நாட்டும் சான்றுகள்.

நம் முன்னோர்களுடைய சால்புடைக் கலாநிதிகளை யுற்று நோக்குந்தோறும், நம் சுதந்திரத்திற்குரிய வடையாளங்கள் அவைகள்பால் தோன்றுகிறா. முன்னையோர் பொருள் பின்னையோர்க் காதலின் அவைகள் நம்முடையவைகளே. பழக்க வழக்கங்களோ, காலசக்கரமோ, அவைகளை அழித்தற்கியலா. நாம் எத்துணை நல்குரவடையினும், நம்முடைமைகளை நினைக்குந்தொறும் நாம் அத்துணைச் செல்வத்தையும் சிந்தையில் பெறுகிறோம். "செல்வமென்பது சிந்தையின் நிறைவ"ன்றோ? இன்று நமக்கு ஆனந்தத்தை விளைக்கும் அழகான இயலுருவங்களும், இசைப்பாக்களும், நாடகப் பகுதிகளும், நம் மூதாதையர் பல்லாயிரம் ஆண்டுகளாகச் சேர்த்து வைத்த கலைப் பொருள்களும் தேசகாலச் சரித்திர வாராய்ச்சியின் விளக்கொளிகள். வருடங்கள் பல செல்லச் செல்ல, பாங்குறு பொருள்கள் கலையாராய்ச்சிக் கழகங்களில் அதிகமாகச் சேமித்து வைக்கப்படுகின்றன. எனெனில், அவைகள் முற்கால நாகரிகச் சின்னங்களாகவும், தோன்றி மறைந்த பல சாதியாரின் காலநிர்ணய ஆதாரங்களாகவு மிருப்பனவுமன்றி, நம்மறிவு வளர்ச்சிக்கும் துணை நிற்கின்றன.

எவ்விடத்தும் மலிந்து தோன்றும் கலாநிதி விளக்கங்களில், எவை உள்ளுணர்வை வெளிப்படுத்துகின்றன? எவை வினையளவையான் சிறப்புற்றிருக்கின்றன? வென்று பகுத்தறிதல் வேண்டும். இவைகளை ஆராயுமோர் நியதியில் நம்முன்னையோர் நிறுவிய நிதிகளே சிறப்புடையன வென்பது தெளிவுறுகின்றது. நீண்ட காலப் பழமை பற்றியோ, நிகழ்கால நியமனம் பற்றியோ எக்கலையையும் உயரியதெனக் கூறத் துணிதல் பெரும்பாலும் புறக்கணிக்கத் தக்கது. காண்போர் மனதில் கணக்கற்ற அரிய பெரிய கருத்துக்களை விளக்கமுறப் பதித்து, அவர் தம்முள்ள நிலையை உயர்த்தும் அக்கலையே சீரியதெனக் கொள்ளல் தகும். என்னையோவெனின், கலைகளும் இயற்கையும், பூவும் மணமும் போலத் தம்மிலொன்றை விட்டொன் றகலாத தன்மையை யுடையன. மனிதன் தன்னியற்கையான கடவுட் டன்மையைக் கலைகளின் வாயிலாய் உலகிற்கு விளக்கிக் காட்டுவதே பிறவிப்பயன். அரிய சிற்பவேலைக ளமைந்த திருக்கோவில்களும், உயர் கோபுரங்களும், பல நூற்றாண்டுகளாய் நிலைபெற்று நின்றும் இன்று சமைத்ததே போற்றோன்றி, ஆத்ம நிலையை யுயர்த்தும் அஜந்தா,

எல்லோரா, பாக், எலிபன்டா முதலிய குகைகளிற் காணும் சித்திரங்களும், பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய பாக்களும், உருவபேதம், பிரமாணம், பாவனை, அலங்காரம், அழகு, உண்மை, வர்ணனை முதலியவை யொருங்கே யமையப்பெற்று விளங்கும் மெய்யொளிர் விக்கிரகங்களும், உயிருலவு சிலைகளும், கலைகளின் கருத்தை விளக்கும் சின்னங்களே. இவைகளன்றோ, நம்முன்னைய நாகரிக உயர்நிலையையும், தற்கால நாஸ்திகச் சீர் குலைவையும் காத்து, புத்துயிர் புகட்டி நிற்கின்றன. ஆதலின், மக்கட் பிறவியில் மாண்புறு கலைகளை மிகைபட வளர்த்து மின் னொளிர் செஞ்சடை நீர்மலி வேணியனடி வணங்குதுமே.

---

## புத்தர் பிரான் பொருண் மொழிகள்

[திரு. அ. நடராச பிள்ளை யவர்கள்]

### 11. இல்லறத்தார்களின் கடமைகள்

இல்லறத்தோர்களே!

க. அன்புடை மொழிகளான் மன்பதை போற்றுமின்.
உ. விருப்புடைச் செயல்களால் விருந்தினை யளிமின்.
ங. நெஞ்சக வன்பினால் நினைமி னுயிர்களை.
ச. அற்றார் தம்மை யுற்றா ரென்மின்.
ரு. அமிழ்தே யாயினு மவர்க்கிட் டுண்மின்.

### 12. துறவறத்தார்களின் கடமைகள்

துறவிகளே!

க. மன்பதை யெல்லா மன்பென மதிப்பீர்.
உ. அறவியல் பலவு மறிந்தடங்கி யுறைமின்.
ங. சமயநூ லுணர்ந்து சாற்றுவீர் பலர்க்கும்.
ச. ஐயப் பொருள்களை யகற்றுவ துங்கடன்.
ரு. வீட்டு நெறியினை யுணர்ந்தே காட்டுமின்.

குறிப்பு:—இவ்வறவுரைகள் புத்தபகவான் போதித்த புத்ததருமம் என்ற நூலிற் கண்ட தொடர்களின் பொருண் மொழிகளாம். எந்நாட்டவருங் கொண்டாடும் அவர்தம் பொன்னுரைகளை நந் நாட்டவர் கொண்டு நலம் பெறவேண்டி, அவைகள் செப்ப னிடப்பட்டுச் செல்வியின் செவ்விதழில் வெளி வரலாயின.

# மாணவர் பகுதி

## கல்வியும் நூல்நிலையமும்

[திரு. நாகை. த. குமாரசாமி அவர்கள்.]

(முன் ௨௰௬௯-ம் பக்கத் தொடர்ச்சி)

நூல்நிலையமாவது, மொழிதோன்றிய காலம்முதல் இன்று வரையில் இயற்றப்பட்ட சிறந்த அறிஞர்களுடைய நூல்கள் பலவற்றைத் தொகுத்து அமைத்துள்ள இடமாகும். இத்தனை நூல்கள்தாம் ஒரு நூல்நிலையத்தில் இருக்கவேண்டும் என்ற வரையறை இல்லை. நூல்நிலையம் அமைப்பவர்தம் பொருள் வலிவுக்குத் தகுந்த அளவானே நூல்நிலையம் அமையும். எத்தனை நூலானாலும் அவற்றை ஒன்று சேர்த்துத் தமக்கும் பிறர்க்கும் பயன்படும் வகையில் வைக்கவேண்டும். நூல்நிலையங்களின் பயனை உள்ளவாறு அறிந்து பயன்படுத்துவதில் நம்மவர்களைவிட மேல்நாட்டவர்கள் வல்லவர்கள் எனலாம்.

ஒவ்வொரு வீட்டிலும் ஒரு நூல்நிலையம் இருக்கவேண்டும். அரசாங்கத்தாராலும், பெரிய கழகத்தாராலும் இற்றைநாள் நம் நாட்டில் பல இடங்களில் நூல்நிலையங்கள் நிறுவப்படுவது மகிழ்ச்சிக்குரியதாகும். நூல்களை வாங்கிச் சேர்த்து ஒரு நூல் நிலையம் அமைப்பது வீண் செலவாகாது. அது மிகவும் சிறந்ததொரு செயலேயாகும். நல்ல நூல்களும் பத்திரிகை களும் இல்லாத ஒரு வீடு சன்னல்கள் இல்லாத வீட்டை யொக்கும். வீட்டுச்சாளரங்கள் நல்வாழ்க்கைக்கு எவ்வளவு இன்றி யமையாததோ அவ்வளவு இன்றியமையாதது ஒரு நூல்நிலையம் என்றறிக. வீட்டில் நூல்கள் ஒழுங்குபட அழகாக அமைக்கப்பட் டிருப்பின் அவ்வீட்டுக் குழந்தைகள் சிறு பருவம்முதற்கொண்டே பையப்பைய நூல்களைப் பயன்படுத்த அறிந்து கொள்ளுவார்கள்.

மனிதன் யாதொரு வேலையும் இன்றி வாளா இருக்கும் நேரங்களிலேதான் வீண் எண்ணங்களிலும், அற்பச் செயல்களி லும் ஈடுபட்டுத் தன் தூய்மையை இழக்கிறான். நூல்நிலையம் ஒன்று அவன் அருகில் இருக்குமானால், அல்லது ஒரு நூல்நிலையத்தில்

அவன் இருப்பானானால், மேற்கூறியவாறு அவன் உள்ளம் மாசுற எதுவிராது. கெட்ட எண்ணம் நம்மனத்தில் புகும்பொழுது, நமக்கு விருப்பமான ஒரு நூலை எடுத்துப் படிக்க, தீய எண்ணம் நம்மை விட்டு அகலும். பலவகைப்பட்ட மலர்ச்செடி கொடிகள் வைத்து அழகாய் வளர்க்கப்பட்ட பூம்பொழில் ஒன்றில் புகுவாள் ஒரு மங்கை, ஆண்டு மலர்ந்து நிறைந்த மலர்களின் மணத்தை நுகர்ந்தும், தன் கண்ணுக்கும் கருத்துக்கும் இசைந்த ஏதாவதொரு மலரைப் பறித்துக் கரத்தில் கொண்டு அதனை முகர்ந்தும், கண்களில் ஒற்றிக்கொண்டும் இன்பம் நுகருவாள் அன்றோ? அந்தக்காலத்தில் அந்தத் தோட்டத்தில் அப் பெண்மணி மனத்தில் பூக்களின் நிறமும், மணமும், அழகும், மென்மையும் தவிர வேறு வகையான மாசு படியாது என்பது உண்மை. இப்படியே சிறந்த ஆசிரியரால் இயற்றப்பட்ட நூல்கள் சேர்த்து வைக்கப்பட்ட இடத்தில் இருக்கும் அறிஞர் தம்காலத்தைப் பயன்படுத்தி இன்ப மடைகின்றனர்.

வீடுகளுக்கு ஒருதனிப்பட்ட அழகைக் கொடுப்பது நூல்நிலையமாகும். அனேகர் தாம் வாங்கி வைக்கும் நூல்களில் யாதொரு குறிப்பும் செய்யாமல் புத்தம் புதியவாக வைத்திருக்க விரும்புகிறார்கள். இது மிகவும் தவறான விருப்பமேயாகும். ஒரு நூலை வாசிப்போர் அதில் தங்களுக்கு மிகவும் முக்கியமானவையாகத் தோன்றும் இடங்களைக் குறித்து வைக்கவேண்டும். குறிப்புகள் செய்வதால் நூல் கெட்டுப் போகாது; ஆனால், புதியதாயிருந்ததை விட இப்பொழுது அதிகப் பயன்படும்.

தன்னுடைய இளமைப் பருவத்திருந்தே நூல்களைப் போற்றிப் பயன்படுத்திக் கொள்ளும் எவனும் வயது முதிர முதிரப் பிறருக்குப் பயன்படுவான். ஒருவன்தன் உடையிலும் உணவிலும், வேண்டுமானால் வேறெதிலேயும் சிக்கனமாய் இருக்கலாம். ஆனால், நல்ல ஆசிரியர்கள் இயற்றிய நூல்களைச் சேர்த்து வைப்பதில் சிக்கனம் காட்டவேண்டா. சில பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளைக் கல்லூரிக் கனுப்பி உயர்தரக் கல்வி பெறுமாறு செய்ய இயலாதவர்களாயிருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் தங்கள் பிள்ளைகளுக்குத் தங்களால் இயன்றமட்டும் நூல்களை வாங்கிக் கொடுக்கட்டும். நாளடைவில் அவ்விளைஞர்கள் கல்வியிற் சிறந்து விளங்குவதைக் காணலாம்.

மக்கள் தங்கள் வாழ்க்கைக்கு வேண்டிய நல்ல பழக்க வழக்கங்கள் படிந்து வளர வேண்டிய இடம் வீடேயன்றோ? வீட்டில் சிறு பிள்ளைகளா யிருந்து பழகும் பழக்கந்தான், பின்னர் மனிதராய் வெளிவந்த காலத்து நம்மிடந் தோன்றி நம் வாழ்க்

கையில் படிகிறது. இதனுல்தான் 'தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும்' என்ற பழமொழியும் வழங்குவதாயிற்று. நம் நாட்டில் இன்னும் சிறந்த அறிவாளிகள் தோன்ற வேண்டுமானுல், முதலில் ஒவ்வொரு வீட்டிலும் ஒரு சிறு நூல்நிலையம் தோன்றட்டும்.

நம்மிடத்தே ஒரு புதிய இன்பமும், மேலான உணர்ச்சியும், ஏற்படவேண்டுமானுல், ஒழுங்காக ஒவ்வொருநாளும் நல்ல நூல்களைப் படிக்கப் பழகிக்கொள்ளவேண்டும். எடுத்த உடனேயே ஏராளமாகப் படிக்கவேண்டும் என்பதில்லை. 'சிற்றுளியால் கல்லும் தகரும்' என்றபடி, சிறுகச்சிறுகப் படித்தால், நாளடைவில் நன்மை அடையலாம். 'ஓதாமல் ஒருநாளும் இருக்கவேண்டா' என்றதற்கேற்ப, நாம் படிப்பது எவ்வளவு குறைவாயிருந்தபோதிலும், ஒவ்வொரு நாளும் படிக்கவேண்டும்.

இங்ஙனம் மக்கள் நூற்பயிற்சியில் நன்மை அடையவேண்டுமானுல், நம்நாட்டில் இன்னும் நூல்நிலையங்கள் பல்கி வரவேண்டும். பொதுஇடங்களில் அமைக்கப்பெறும் நூல்நிலையங்கள் ஏராளமான நூல்கள் அமைக்கப் பெற்றனவாயிருக்கும். அவற்றில் சென்று படிக்கும் அறிஞர், தமக்குச் சிறந்தது என்று தோன்றும் நூலை எடுத்துப் படிக்கலாம். அல்லது அங்கிருக்கும் பல நூல்களில் சிறந்தது எதுவென்று தேடிப்பார்த்து எடுத்துப் படிக்கலாம். இவ்வாறு பொது நூல்நிலையங்கள் மக்களுக்குப் பெரிதும் பயன்படும்.

'நூல் நமக்கு ஒரு நல்ல நண்பன்' என்ருர் ஒரு மேனுட்டு ஆசிரியர். கோல்ட்ஸ்மித்து என்ற ஆங்கில ஆசிரியர், "முதன்முறை நான் ஒரு சிறந்த நூலைப்படிப்பது, ஒரு நண்பனைச் சம்பாதித்தது போன்றது. நான் முன்னரே படித்திருந்த ஒரு நூலை மீண்டும் படிப்பது பழைய நண்பன் ஒருவனைச் சந்திப்பதை யொக்கும்," என்கிருர். இவ்வாறே பல ஆசிரியர்கள், நூல்களைத் தங்களுக்கு உற்ற தோழர்களாக நினைத்து, அவற்றில் பழகி, நன்மை அடைந்திருக்கிருர்கள்.

முடிவாக, ஆனுல் மிகவும் முக்கியமாக, நூல் நிலையத்தைக் குறித்து நான் கூற விரும்புவது இஃதாகும்:—

தம் பூதவுடல் நீங்கியும் இன்றுகாறும் தம் புகழ்உடலம் நீங்கப் பெருத அறிவானுன்ற ஆசிரியர் பலர், தம்மை அண்டி வந்தார் அறியாமையைப் போக்கி அறிவூட்டி இன்பம் அடையச் செய்யும் பெருங் கருணையோடு ஒருங்கு கூடியிருக்கும் கழகமே நூல்நிலையமாகும். எனவே மக்கள் நூல்களை மிகுந்த விருப்புடன் சேர்த்து வைத்தல் வேண்டும்.

---

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## *இந்திய ஐரோப்பியப் பெருங்குழு இந்தியாவே பிறப்பிடம்

[திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள்—
காழி. சிவ கண்ணுசாமி. B. A.]

ஆரியக் குழுவினர் வடதுருவத்திற் றோன்றியவர்களென்றும், அஸ்ஸீரியாவில் தோன்றியவர்களென்றும், மத்திய ஆசியாவில் தோன்றியவர்களென்றும் பலபடக்கூறுவர். இக் கூற்றுக்களெல்லாம் அறிவியற்பகுதியின் ஒவ்வொரு துறையையே தனித்தனிப்பற்றி யெழுந்தனவாகும். யானை பார்க்கச் சென்று அதன் உறுப்புகளில் ஒவ்வொன்றைத் தொட்டு அதைக்கொண்டு யானையின் வடிவை ஊகித்தறிய முயன்ற நான்கு குருடர்களின் கதையையே இஃதொக்கும். நிற்க, இதுகாறும் அறிவியற் பகுதியில் ஒவ்வொரு துறையிலுங் கிடைத்துள்ள அரியபெரிய உண்மைகள் பலவற்றையும் ஒருங்கே திரட்டி ஒப்புநோக்கி முடிந்த முடிபொன்றை, இப்பொருளைப் பொறுத்த வரையில், எவரும் எய்தியதாகத் தெரிவதற்கில்லை. மொழியிலக்கணத்தை மட்டுமோ, ஒளிநூலைமட்டுமோ, அன்றி மதநம்பிக்கைகளை மட்டுமோ அடிப்படையாகக் கொண்ட ஆரியர்தம் தோற்றமே வரையறுத்து இதுகாறுங் கூறப்பட்டு வந்துள்ளது. எனவே, அக் கொள்கைகள் ஒன்றிற்கொன்று முரணாக இருப்பது இயல்பேயன்றோ? கல்கத்தா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த திரு. எ. ஸி. தாஸ் என்பவர் எழுதி வெளியிட்டுள்ள ஒரு நூலில்தான் முதன் முதலாக நிலநூலும் ஒரு கருவியாக இக் கொள்கையை வரையறுக்கக் கையாளப்பட்டுள்ளது. நிலநூல் தெரிக்கும் உண்மைகளினுதவியால் இதுவரையில் வெளிவந்துள்ள ஆரியர் தோற்றங் குறித்த பலகொள்கைகளையும் இயன்றவரையில் கண்டித்து ஒதுக்

---

*இஃது, அரசாங்கக் கண்காணிப்பொறிவலாளராயிருந்து காலஞ் சென்ற சிவபுரம் பெருநிலக்கிழவர் திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள் 1923-ம் ஆண்டில் வட ஆந்திர நாட்டிற் செய்த ஆங்கிலச் சொற்பொழிவின் மொழிபெயர்ப்பாகும்.

கிய அவ்வாசிரியர் இறுதியில் மத நம்பிக்கைகளில் அழுந்தி ஆரியர் தோன்றியது சிந்துநதிப்பகுதியில் என்று கூறியொழிந்தனர். இமயமலையிலும் சிவாலிக் தொடர்களிலுங் காணப்படும் தொன்னில உறுப்புண்மைகளை அவர் அறிந்திருந்தாரானல், அவர் கொண்ட சிந்து நதிப்பகுதி உலகத் தோற்றத்தின் மூன்ருவதோ நான்காவதோ ஆன ஊழிகளில் தோன்றியிருக்க வேண்டுமே யொழிய முதலாவது இரண்டாவது ஊழிகளில் தோன்றியிருத்தல் முடியாதென்பதைக் கண்டுகொண்டிருப்பார்.

இனி, குமரிக்குத் தென்பாலிருந்து கடல் கோட்பட்டதாகக் கூறப்படும் இலெமூரியா என்ற குமரிநாட்டு உண்மை இன்மைகளை ஒருபுறம் விடுத்து, தற்போது, தக்காணந் தொடங்கித் தெற்கு நோக்கி நீண்டுள்ள தென்னிந்திய நிலப்பகுதியின் தோற்ற காலத்தை ஆராய்வாம். உலகத்தோற்ற காலத்தில் எத்தகைய நிலத் தோற்றங்கள் இருந்திருக்க வேண்டுமென்று ஊகிக்கப்படுமோ அத்தகைய தோற்றங்கள் இத் தென்னிந்தியப் பகுதியில் மட்டும் எப்பொழுதும் எத்தகைய மாறுதலுமின்றியிருந்து வருவதாக நிலநூல் உறுதிகூறுகின்றது. பேரூழிகள் தோன்றுவதற்கு முன்னரும் பின்னரும் உலகத்தின் வெப்பதட்பநிலை உயிர்கள் தோற்ற முறுவதற்கும் விரைந்து வளர்ச்சியுறுவதற்கும் ஏற்றதாகவே இருந்து வந்தது என்பதும் நிலநூல் வரையறுத்துக்கூறும் உண்மையேயாகும். இவ்வுண்மை பல அறிஞர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டதொன்று. முதலில் உலகத்தின் மையப் பகுதியே குளிர்ச்சியுற்றது; அதன் பின்னர் வடபகுதியும், துருவங்கள் இறுதியிலுமாகக் குளிர்ச்சியுற்றன. உலகத்தின் மையப் பகுதி குளிர்ச்சியுறத் தொடங்கியது முதல் அதன் அகவெப்ப நிலை படிப்படியாகக் குறைந்து புறவெப்பமாகிய சூரிய வெப்பத்தை யொத்ததொரு நிலைக்கு வந்ததும் மேலுங் குளிர்ச்சியுருமல் நிலைத்து விட்டது. அதனாலேயே அந்நிலப் பகுதி இடையிடையே சிற்சில காலங்களில் தோன்றும் சில சிறு மாறுதல்கள் நீங்கலாக எக்காலத்திலும் ஒரேபடித்தான வெப்பதட்பநிலையை யுடையதாயிருந்து வருகின்றது. துருவங்களோ ஏனைய பகுதிகளை நோக்க மிகப் பிற்பட்ட காலவரையறையிற் குளிர்ச்சியுறத் தொடங்கினும் விடாமல் குளிர்ந்து கொண்டே போகின்றன. என்? போதிய புறவெப்பமாகிய சூரிய வெப்பம் ஆண்டு இல்லாமையினலேயே.

எனவே உலகத்தின் மையப் பகுதியிலமைந்திருக்கும் தென்னிந்தியப் பகுதி உலகத் தோற்றகால முதற்கொண்டே மக்கள் உயிர் வாழ்தற்கு ஏற்றதாயிருந்து வந்ததென்பது எளிதிற் போதரும். தக்காணத்திற்கு வடக்கிலும், சீனக்கடலுக்கும் வடகடலுக்கு மிடையிலும், மூன்றாவது ஊழிக்காலம் வரையிலும் நிலமின்றி நீரேயிருந்து வந்ததென்பது குறிக்கற்பாற்றும்.

## குறைகோப்பு (The Missing Link)

உயிர்நூல் வல்லாரும் தொல்லுயிராய்ச்சியாளரும் ஆதி மனிதன் அறிகுறிகளேயோ, வளர்ச்சி நெறிமுறையில் காணவியலாதவாறு மறைபட்டுக்கிடக்கும் குறைகோப்பையோ தேடிப் பிடிக்கவேண்டுமானால் தென்னிந்தியப் பகுதியிலோ அதன் தெற்கே யமைந்துள்ள பகுதியிலோதான் தேடவேண்டும் என்று ஊகித்துள்ளனர். இவ்வூகம் ஏறக்குறைய சரியான தொன்றென்றே* பின்னர் சாவகத் தீவிற் கண்டெடுக்கப்பட்ட ஒரு மண்டையோட்டைக் கொண்டு அறியக்கிடக்கிறது. வளர்ச்சி நெறிமுறைக் கொள்கையை வலியுறுத்தித் தெரிப்பதற்கான பல சிறப்பட்ட ஆதாரங்களைத் தென்னிந்தியப் பகுதி உட்கொண்டு உலகவளர்ச்சித் துறையில் தலைசிறந்து விளங்குகிறது என்று ஒரு ஸ்விஸ் ஆசிரியர் உளமாரக் கூறியுள்ளார்; ஆயினும் அவ்வாறு கூறிய அவரும் மதச் சார்பினலீர்க்கப்பட்டு, மனித உருவத்தின் திருந்திய படைப்பை மட்டும் ஈடன் தோட்டத்தில் உண்டாக்கித் தருவது கிறித்துவக் கடவுளுக்கே உரியதாயிருந்தது என்று உடன்கூறி யொழிந்தார். எனினும் இயற்கையின் திருந்திய தோற்றங்களெல்லாம் தென்னிந்தியாவில்தான் காணக்கிடப்பதாக இருக்கின்றன என்ற உண்மையை மட்டும் எந்த அறிவியலாராய்ச்சிக்காரரும் மறுக்கமுடியாது. தென்னிந்தியப் பகுதியில் தான் முதன்முதலாக மனிதன் தோற்ற முற்றான் என்றும்

---

* மனிதன் மந்தியிலிருந்து வந்ததாக டார்வின் என்பார் கூறிய வளர்ச்சி நெறிமுறையை ஐயுறாமல் ஏற்றுக் கொள்ளவேண்டியதுதான் என்று பேராசிரியர் எலியட் ஸ்மித் என்பவர் இலண்டனில் சென்ற பிப்ரவரித் திங்கள் 17-ம் நாளன்று பல புதிய ஆதாரங்களோடு கூறியிருக்கும் கட்டுரைக்குறிப்பு 5-3-1934 "இந்து" நாள்தாளில் வெளிவந்திருப்பதை நோக்குக. —கா. சிவ. த.

அங்கிருந்து மேற்கிலுங் தெற்கிலும் நாளாவட்டத்திற் சென்று குடியேறினனென்றும் எடுத்துக்கூறுவதற்கு வேண்டிய அறிவியலாதாரங்கள் அளவுசங்கையற்றுக் காணக்கிடக்கின்றன. தென்னிந்திய மக்கள் தொகையில் மிகவே, அவர்தம் பண்டைய நாகரிக முறைப்படி உணவிற்கு வேண்டிய கிழங்குகள் பழங்கள் முதலியவற்றைப் போதிய வளவுக்குக் கிடைக்கப்பெற்றிலர்; எனவே இருந்த இடம் நீத்து மெல்ல மெல்ல வடக்கே நகர்ந்து சென்றனர். வடதுருவம் வரையும் அவ்வாறு அவர்கள் சென்றிருந்ததாகத் தெரியவருகிறது. அவர்கள் அவ்வாறு சென்ற காலத்தில், முன் கூறியவாறு, துருவங்களின் வெப்பதட்பநிலை தென்னிந்திய வெப்பதட்ப நிலையை யொத்ததாக இருந்தது. பின்னர் அந்நிலையிலேயே நிற்காமல் துருவங்கள் மேலும் மேலுங் குளிர்ச்சியுறவே, ஆண்டு உறைந்து வதிய வசதியற்றவர்களாய்த் தெற்குநோக்கி மீண்டுந் திரும்பிவந்தனர். இக் கொள்கையே அறிவியலில் எத்துறைக்கும் ஒத்த தொன்றாகவும் முரண்படாததாகவும் இருக்கிறது. இக்கொள்கை யொப்புக்கொள்ளப்படுமேல், தற்போது ஒன்றுக்கொன்று முரண்படுவதாகத் தோன்றும் ஏனைய கொள்கைகளை அதனுடன் பொருத்திக் காட்டுவது எளிதாகும். மொழிநூலறிஞர்கள் உலகப் பரப்பில் பற்பல பகுதிகளில் வழங்கும் பூஸ்து (Phustue) துருக்கியமொழி, ஹங்கேரியமொழி முதலியவைகள் அமைப்பில் "திராவிட" மொழிகளை யொத்திருப்பதாக ஒத்துக்கொள்கின்றனர். ஆங்கிலோ சாக்ஸன் என்று சொல்லப்படும் பண்டைய ஆங்கிலமொழியிலுள்ள சொற்களில் ஏறக்குறைய நூற்றுக்கு அறுபதுக்கு மேற்பட்ட சொற்கள் திராவிடமொழிகளின் தாதுக்களையே வுடையன; அஸ்ஸிரியாவில் காணப்படும் சில கல்வெட்டுக்களில் திராவிடமொழிச் சொற்கள் கலந்திருப்பதும் இக்கொள்கையை வலியுறுத்தும்.

உடற்கூற்று நூற்படி நோக்கினும், இந்திய ஐரோப்பியப் பெருங்குழுவினர்க் குரியதாக வரையறுத்துள்ள தலையமைப்பு இந்தியாவின் மற்றப்பகுதிகளில்லாமல் தென்னிந்தியப்பகுதியில் மட்டுமே பரக்கக்காணப்படுகிறது. வங்காளத்திலும் இந்தியாவின் வட கிழ்ப்பகுதியிலும் மங்கோலியக்குழுவினரின் தலையமைப்பும், வடமேற்குப்பகுதியில் செமிட்டிக் குழுவினரின் தலையமைப்புமே

காணப்படுகின்றன. தென்னிந்தியத் திராவிடக் குழுவினர் கருநிறம் படைத்திருத்தல் மிகுந்த வெப்பத்தினாலேயேயன்றி வேறன்று. மற்றவகைகளில் அவர்களுக்கும் இந்திய ஐரோப்பியப் பெருங்குழுவினர்க்கும் பெரும்பான்மையான ஒற்றுமைகள் காணப்படுகின்றன. (தொடரும்.)

---

## மேற்கோள்களும் அவற்றை அறிவு வளர்ச்சிக்குப் பயன்படுத்தும் முறையும்

[திரு. மா. வே. நெல்லையப்பபிள்ளையவர்கள், B. A.]

(முன் ருருஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

அருள் நூல்களை ஓதுகிறவர்கள் இந்த முறைமையைப் பின் பற்றி அவைகளிற் கூறப்பட்டிருக்கிற கருத்துக்களை அறியாவிட்டால் அவர்கள் அறிகிற கருத்துக்களெல்லாம் உதடு முதலிய உறுப்புக்களாற் கூறப்படுகிற சொல் உருவங்களா யிருக்குமன்றி அச்சொல் உருவங்களுக்கு வேறாய் அவைகளாற் கூறப்படுகிற உண்மைகளாக அவர்களது உள்ளத்தில் விளங்கிப் பயன் செய்யா.

அருள்நூல் உண்மைகள் உள்ளத்தில் வைத்து அறியப்படுகின்றன. மாந்தர் உயிருக்கு அறியும் கருவியாக அமைந்திருக்கிற உள்ளமானது வஞ்சனை பொறாமை வெகுளி காமம் செருக்கு பகைமை முதலிய குற்றங்களினின்று எத்துணை நீங்கியிருக்குமோ அத்துணை அவ்வுண்மைகள் உள்ளத்தில் வைத்துத் தெளிவாய் அறியப்படும். அதுவுமல்லாமல் உள்ளமானது யாதாமொரு கருத்தை முடிவாகப் பற்றிக்கொண்டிராமல் பின் கிடைக்கப் பெறும் மேலான காரணமொன்றுடன் பொருந்த வைத்து அறியும்பொழுது அதனை மாற்றும் பாங்கினை உடையதாயு மிருத்தல் வேண்டும். உயிர் ஒன்றனைச் சார்தலும் சார்ந்த வண்ணமாதலும் ஆகிய இயற்கை உடையது. ஆதலின் அது எத்தகைய உள்ளத்தைச் சார்ந்து அறியுமோ அந்த உள்ளத்தின் தன்மையைப் பொறுத்தே அது அறியும் உண்மைகளு மிருக்கும் என்பது தெளிவு. உயிரின் இயற்கைத் தன்மை இன்னது என நன்கு அறிந்த அறிஞர்கள் தாங்கள் அறிகிறபடி சைவ சித்தாந்த உண்மைகளாயிருப்பவை சில, பிறர் அவர்கள் அறிகிறபடி வெளியிட்

டிருக்கிற கருத்துக்களுக்கு மாறுபாடு உடையனவா யிருப்பன வாக அறிந்தால் அக்கருத்துக்களை தங்கள் கருத்துக்களுடன் உள் ளத்தில் வைத்து ஒத்துப் பார்த்து ஆராய்ந்து சரியான காரண மிருப்பின் தங்கள் கருத்துக்களை மாற்றியும் திருத்தியும், மாற்று தற்கு காரண மில்லாதிருப்பின் பிறர் கொண்ட கருத்துக்கள் இன்ன காரணங்களினால் பொருந்தா என்றும் வணக்கமாய்த் தெரி வித்துக்கொள்வர். இதுவல்லாமல் தாங்கள் கூறின கருத்துக்களே அருட்பெரியார் கூறுகிற கருத்துக்கள் என்றும் பிறர் கூறும் கருத்துக்கள் உண்மை அல்லன என்றும் சாதித்துப் பிறரை இகழ்ந்து பேசார். கருவி அறிவைத் துணைக்கொண்டு உண்மை களைப் பகுதிப்பட அறியும் அறிஞர் எந்த உண்மைகளையும் அறியும் முறைமை இதுவே. இந்த முறைமையை நமது நாட்டுத் தமிழ்ப் புலவர்களும் வடமொழிப் புலவர்களும் மேற்கு நாட்டு இயற்கை ஆராய்ச்சி யுடையவர்களிடமிருந்து அறியுந் தன்மை உடையவர் களாயிருக்கின்றார்கள். அருள்நூற் பாட்டுக்கள், அவைகளை ஓது கிறவர்கள் குருட்டுப் பாடமாக மாத்திரம் வாயினாற் கூறாது அறிவி னுய்த்து ஆராய்ந்து பலகாற் சிந்தித்து உளங் கொள்ளுதலினா லேயே அவர்கள் அறிவு வளர்ச்சிக்கு ஏதுவாயிருக்கும். கருவி அறிவுடைய ஒருவர் எத்துணை நுணுகி அறியும் கூர்த்த மதியினரா யிருப்பினும் சுட்டறிவுக்குரிய குறைபாடுகள் அவரை விட்டு முற்றிலும் நீங்கா. ஓர் எல்லை வரையும் கூர்த்த கருவி அறிவு மக் களுக்குப் பயன்படுமேயன்றி அவ்வெல்லைக்கு மேலே அருள் அறிவே அவர்களுக்குப் பயன்படத் தக்கது. இக்கருத்துப்பற்றி திருஞானசம்பந்த அடிகள்,

“ஏதுக்களாலு மெடுத்தமொழி யாலுமிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுளனெங்கள் சோதி”

என்று கூறியருளினர். மேலானசமய உண்மைகளைக் குறைபா டின்றி அறிதற்குக் கருவி அறிவு துணையாகமாட்டாது. இறை வனோடு இரண்டறக் கலந்து உணரும் அருள் அறிவினாலேயே அவைகள் குறைபாடின்றி உணரப்படும்.

5. இனி இரண்டாவது வகை மேற்கோள்களைப் பற்றி ஆராய்வாம். முதலாவது வகை மேற்கோள்கள் மலம் நீங்கி விளங் கிய அறிவின் அருட்பெரியார்கள் கூறிய நிறைமொழி மாற்றங் கள் ஆதலின் அவைகளிற் கூறப்படும் உண்மைகளையும் கருத்துக்

களையும் நமது அறிவு வளர்ச்சிக்குப் பயன்படுத்திக்கொள்ளுதலில் அவைகளை நாம் அறியுந் தன்மையில் மட்டும் தடை யிருக்கிறதாக நாம் மேலே கண்டோம். இரண்டாவது வகை மேற்கோள் களிலோ ஆசிரியர்களாற் கூறப்படும் மேற்கோள்களை முடிவுக ளாகச் கொள்ளுதல், அம்மேற்கோள்களை அறிதல் ஆகிய இரு வழிகளிலும் அவைகளை நமது அறிவு வளர்ச்சிக்குப் பயன்படுத் திக்கொள்ளுதலிலே தடையுள்ளன. அத்தடைகளைக் கூடிய வரை விலக்கி அவைகளை நமது அறிவு வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொள்வது கற்றுக் கேட்டு அறிந்த அறிஞர் கடனாகும். தடையை நீக்கிப் பயன்படுத்திக்கொள்ளுதற்கு முதலாவது மேற்கோள் களைக் கூறும் ஆசிரியர்கள் எத்தகைய அறிவுத் திறனுடையவர் களாயிருத்தல் வேண்டுமென்பதை நாம் கருதல் வேண்டும். பண் டைக் காலத்திலும் பிற்காலத்திலும் தமிழ் இலக்கண இலக்கியப் புலவர்களால் எழுதப்பட்ட நூல்களையும், பரிமேலழகர், அடி யார்க்குநல்லார், நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர் உரை நூல்களையும் நாம் பொதுவாக மேற்கோள்களாகக் கொள்ளலாம். பண்டைக் காலத்தில் நூல்கள் பனை ஓலைகளிலெழுதப்பட்ட ஏட்டுச் சுவடிகளாயிருந்தன. யாதாமொரு நூலைக் கற்க விரும்புகிறவர் அவ்வேட்டு நூலை முன் கற்றுக் கேட்டறிந்த ஒரு புலவரிடம் போய் அந்நூலை வாங்கித் தங்கள் கைப்பட பனை ஏடுகளி லெழுதி யும் எழுதிக் கற்ற நூலின் பொருளை முன் கற்றுக் கேட்டு அறிந்த புலவரிடம் கேட்டும் கேட்ட பொருளைப் பலகாற் சிந்தித்து ஆராய்ந்தும் அறிந்து வந்தார்கள். அம்முறைமையானது கற்போர் அறிவு வளர்ச்சிக்கு ஏற்றதாயிருந்தது. அச்சு நூல்கள் மலிந் திருக்கும் இக்காலத்தில் நூல்களைக் கற்கிற மாணவர் அவைகளைத் தாங்களாக ஏடுகளிலாவது தாள்களிலாவது எழுத வேண்டிய தில்லையென்றாலும் நூல்களை முன் கற்றுக் கேட்டு ஆராய்ந்து ஐயந்திரிபுகளறத் தெளிந்தாரிடம் பாடம் கேட்டு வரும் முறைமை இக்காலத்திலும் அறிஞர்களாற் போற்றத் தக்கதாகும். ஆயினும் மேற்கோள்களைக் கூறும் ஒவ்வொரு ஆசிரியரிடத்திலும் அவர் இந்த முறைமையைக் கையாண்டு கற்றிருக்கிறார் என்று பார்த் தல் முடியாததாகும். தமிழ்மொழி ஆசிரியர்கள் பண்டைத் தமிழ் இலக்கிய நூல்கள் தொல்காப்பிய முதலிய இலக்கண நூல் கள் சைவ சமய நூல்கள் வைணவ சமய நூல்கள் கற்றுத் தேர்ந் தவர்களா யிருத்தல் வேண்டும். அவர்கள் ஆங்கிலக் கல்வியிலும்

வடமொழிக் கல்வியிலும் அல்லது யாதாமொரு மொழிக் கல்வியி லாவது தேர்ச்சியுள்ளவர்களா யிருத்தல் மிக்க நலமா யிருக்கும். ஆங்கிலத்தில் பீ.ஏ., எம்.ஏ. தேர்வுகள் தேறினவர்களா யிருக்கிற வர்கள் தமிழ்மொழிக் கல்வியிலாவது பயின்றிருத்தல் வேண்டும். அவர்கள் கூடியவரை யாதாமொரு சாதிப் பற்று சமயப் பற்று யாதாமொரு கொள்கைப் பற்று உடையவர்களா யிராமல், காய் தல் உவத்தலின்றி உண்மையினை அறிய விரும்பும் மனப்பான்மை உடையவர்களா யிருத்தல்வேண்டும். இதுவன்றி அவர்கள் எந்த எந்தத் துறையில் நூல் எழுதுகிறார்களோ அந்த அந்தத் துறையில் கல்வியைத் துறைபோகக் கற்றுச் சிறந்த அறிவுடையவர்களா யிருத்தல்வேண்டும். மேலே கூறப்பட்ட தேர்ச்சிக் குறைவான அறிவுத் திறனுடையவர்கள் தமிழ் உலகுக்கு மேற்கோள் ஆசிரி யர் பதவிக்குத் தகுதி யுடையவர் ஆகார். இத்தகைய வரையறை இல்லாவிட்டால் தங்களுக்கு வரும் பொருட்பேறு ஒன்றனையே விரும்பிச் சிறிது கல்வித் திறனுடையவர்களும் இக்காலத்தில் செய்து வருகிறபடி நூல்கள் எழுதியும் பத்திரிகைகள் வெளியிட்டும் நமது நாட்டு மக்களுக்குள் சமயப் பகைமை சாதிப் பகைமை வகுப் புப் பகைமை குறுகிய அறிவினக் கொள்கைகள் இழிசுவை (Vulgar taste) முதலிய கேடுகள் பரவவொட்டாமற் றடுப்பது முடியாத தொன்றாகும். கல்லூரிகளிலும் பள்ளிக்கூடங்களிலும் பாடப் புத்தகங்களைத் தேர்ந்தெடுத்தற்கு ஏற்பட்டிருக்கிற கழகத் தார் (Text Book Committee) நூல் செய்தவருடைய விருப்பு வெறுப்புக்களை நோக்காது அறிவு வளர்ச்சிப் பொதுநல மொன் றனையே கருதி இப்பேர்ப்பட்ட குறைபாடுகளை உடைய நூல்களை பாடங்களாகத் தெரிந்தெடாதிருத்தல் நமது நாட்டு மொழிகளின் வளர்ச்சிக்கும் நல்லறிவு வளர்ச்சிக்கும் செய்கிற கடனாகும். மேலே கூறப்பட்ட தகுதியையுடைய ஆசிரியர்களுடைய மேற்கோள்களை அறிவு வளர்ச்சிக்காகப் பயன்படுத்திக் கொள்ளுதலில் முதலாவது வகை மேற்கோள்களுக்குக் கூறப்பட்ட முறைமையைப் பொருந்துமாறு பின்பற்றல் வேண்டும்.

மேற்கோள்கள் முதலாவது வகையைச் சேர்ந்தவையாயிருப் பினும் அவைகளைக் கற்றுத் தங்கள் அறிவு வளர்ச்சிக்குப் பயன் படுத்திக்கொள்ள விரும்புகிறவர்கள் அம்மேற்கோள் நூலை அல் லது நூலினொரு பகுதியைக் கற்றபின் தாங்களாகத் தங்கள் அறி வில் உய்த்தும் தங்களைப் போன்று கற்கிறவர்களை உசாவியும் பல கால் சிந்தித்தும் சிந்தித்தலாலெழும் ஐயந்திரிபுகளைத் தெளிந்தார் பாற் கேட்டு நீக்கியும் நீக்கினபின்னும் எவ்வாறு உண்மைகள் அறிவுக்குப் பொருத்தமாயிருக்கின்றன என்று பலகாற் சிந்தித் தும் தெளிதல் வேண்டும். இவ்வாறு அவர்கள் கற்றுக் கேட்டுச் சிந்தித்துத் தெளியாவிட்டால் தாங்கள் நூலிற் கற்ற உண்மைகள்

தங்கள் அறிவிற் பொருந்திய உண்மைகளாகா. ஒருவன் உண்ட உணவு செரித்தபின் செந்நீராக மாறியும் வெண்ணீராக மாறியும் உடலோடு வேற்றுமையின்றிச் சேர்தல்போல ஒருவன் கற்ற கருத்துக்கள் உயிர் அறிவோடு கலந்து உண்மைகளாக மாறுதற்கு மேலே கூறப்பட்ட முறைமையை அவன் பின்பற்றல் வேண்டும். செரிக்காத உணவு உடல்நலத்துக்குக் கேடு விளைத்தல்போல அறிவில் உய்த்து நன்கு அறிந்து கொள்ளப்படாத கருத்துக்கள் உயிர் வளர்ச்சிக்கு இன்றியமையாதது வேண்டப்படுவதாகிய அறிவு வளர்ச்சியைக் குன்றச் செய்யும். அறிவு வளர்ச்சியோடு கூடிய உயிர் வளர்ச்சியே உலக வாழ்வின் பயனுயிருத்தலால் இந்த நற்பயனை அடைதற்கு அறிஞர் மேலே கண்டவாறு மேற்கோள்களைக் கையாளல் வேண்டும்.

---

# மதிப்புரை

**பாரத சக்தி** :—புதுவை உயர்திரு. சுத்தானந்த பாரதியார் இயற்றியது. பாரத சக்தி நிலயம், புதுச்சேரி என்ற விலாசத்திற் கெழுதிப் பெற்றுக்கொள்ளவும்.　　　　விலை ரூ. 1—8—0

உலகெல்லாம் அருட்பெருங் கோயில். எல்லாவுடலும் இறைவனாலயம். இறைவனுக்கும் மனிதனுக்கும் உள்ள இத்தகைய அருட்கலப்பினால் மக்கட்டொகுதி சாந்தம், சிவம், சுந்தரம், மங்களம், ஸத்ய தர்மம் துலங்கும் தேவரினமாகவேண்டும். இதை இயலுவிக்கும் அத்யாத்ம சத்தியே பாரத சக்தி. இந்த உன்னத நிலை பூரணயோக சித்தியால் எய்தும். இத்தகையதோர் சக்தி, புத்தர், மகாவீரர், ஏசுநாதர், முகம்மது நபி, குரு கோவிந்தர், பிரதாப சிங்கன், சிவாஜி முதலிய ஞான வீரர் கர்ம வீரர் வரலாற்றுகளைக் கருவியாகக் கொண்டு இனிய இளந் தமிழில் விரிவாக விளக்கப்பட்டுளது. இஃது சிறந்த அனுபவக் காட்சி விரிவுரையாகத் திகழ்கிறது. மனிதனைக் கடவுணிலைக்கு உயர்த்த வழி காட்டி நடத்தும் நல்லொளி இந்நூலேயாகும்.

**புதுயுகப் பாட்டு**.—புதுவை, உயர்திரு. சுத்தானந்த பாரதியார் இயற்றியது. புதுவை பாரத சக்தி நிலயத்திற் கிடைக்கும்.

விலை அணா 5.

தமிழ் செம்பொருட் கலைக்கடல்; அக்கடலில் பொன்னும் பசுமையும் துலங்கும் புதுயுகத் தீவொன்று அகண்டமாக எழுந்து அதன்கண் அழகும் அன்பும் அருளும் உண்மையும் சுத்தமும் சுதந்திரமும் சமத்துவமும் பேரின்பமும் ஆன்ம சக்தியும் இரஸலீலை புரிகின்றன. அவற்றின் அலைமோதும் இசைத்திரளின் இன்பச் சிலிர்ப்பே பொருளாகக்கொண்டு மலர்ந்தது புதுயுகம் என்று தமிழ் மக்களை யறைகூவி யழைக்கும் இவ்வழகிய சிறு நூல் வீரந் ததும்பும் ஒவ்வொரு தமிழரின் கைகளிலுமிருந்து அணி செய்வதாகும்.　　　　—கா. சிவ. ரு.

# அறிவியற் பகுதி – Science

## குரங்குகளின் பண்பு நலங்கள்

[திருநிறை. மிஸ். பி. இராபர்ட்ஸ், எம்., ஏ.]

அறிவியற்படி குரங்குகள் சிறுகுரங்கு வகை (Lower Monkeys) பெருங் குரங்கு வகை (Higher Monkeys) என இரு வகைப்படும். பெருங் குரங்குகள் தாம் படைத்துள்ள அறிவு மிகுதியால் ஏனைய மிருகங்களைவிட உயர்ந்த நிலையிலிருக்கின்றனவென்பது மனித வகுப்பைச் சேர்ந்த நாம் வியக்கத்தக்க காரியமேயாம்.

பற்பல செய்கைகளுக்கும் அறிவு வளர்ச்சிக்கும் ஏதுவாயுள்ள ஐம்புலன்களைச் சற்று கவனிப்போம். குரங்குகள் மற்ற மிருகங்களைப் போல் ஓரம் சாய்ந்து பார்ப்பதில்லை. குரங்குகளின் கண்கள் மனிதர் கண்களைப்போல் நேர்பார்வை யுடையன. இதனால் அவைகள் எப்பொருளையும் நன்றாய்ப் பார்க்கலாம்; பற்பல வடிவங்களையும், அச்செழுத்துக்களையும், பற்பல நிறங்களையும் சரிவரத் தெரிந்து கொள்ளலாம். அவற்றின் செவிகள் மிகக் கூர்மையானவை; ஆனால் மோப்பப் புலன் மனிதரின் மோப்பப் புலனைப் போல் அவ்வளவு வியக்கக்கூடிய தன்று.

குரங்குகளுக்கும் மற்ற மிருகங்களுக்கும் உள்ள முக்கியமான வேறுபாடு என்னவென்றால், மிக எளிதாய்த் தங்கள் கைகளைப் பயன்படுத்தும் தன்மையே யாம். இக்கைகள் பூமியின் மேல் நடக்கும்படியாக வழங்கப்பட்டாலும் முக்கியமாய்ப் பொருட்களைப் பற்றிப் பிடிக்கவும், தூக்கி யெடுக்கவும், ஏந்திப் பிடிக்கவும் தகுதியான உணர்ச்சி உறுப்புகளாக யிருக்கின்றன. அணில்களும் மற்றும் சில மிருகங்களும் தங்கள் முன்னங்கால்களை இவ்விதமாகப் பயன்படுத்துவதை நாம் பார்க்கிறோம். ஆனால் குரங்குகளே மற்றெல்லா மிருகங்களைவிடக் கைகளால் வேலை செய்வதில் சிறந்து விளங்குகின்றன; தங்கள் கைகளைக் கருவிகள்போலப் பயன்படுத்துகின்றன.

இவ்விதமாகக் கைவேலையில் சிறந்து விளங்குவதற்கு அவைகளின் கூர்மையான புத்தியே காரணம், நாம் அவற்றின் கண்

களைப் பார்த்தால் அவற்றின் மனத்தில் பற்பல எண்ணங்களும் நினைவுகளும் உண்டாகின்றன வென்று தெரிந்துகொள்ளலாம். அவ்வெண்ணங்களுக் கேற்றவாறு குரங்குகள் எப்பொழுதும் சுறுசுறுப்பாய் அலைகின்றன. ஓய்வில்லாமல் ஏதாவது ஒரு செய்கையைச் செய்துகொண்டே யிருப்பதற்கு அவைகளின் கூர்மையான புத்தியே காரணம்.

குரங்குகள் மனத்தில் தோன்றிய எண்ணங்களை உடனுக்குடன் செய்கைகளிற் காண்பிக்கின்றன. ஒரு அரவம் கேட்டவுடனே அதற்கேற்ற செயலை மிக விரைவாய்ச் செய்து முடித்து விடுகின்றன. இலண்டன் விலங்கினக் காட்சி சாலையில் 'சாலி' என்று பெயர்கொண்ட ஒரு பெரிய வாலில்லாக் குரங்கு (Chimpanzee) வளர்க்கப்பட்டது. அது தன் உபாத்தியாயர் கூறும் எண்ணின்படி குச்சிகள் எடுத்துக் கொடுக்கும்படியாகப் பழக்கப்பட்டது. இவ்விதமாய், ஐந்தாவது எண் வரையில் கற்பிக்கப்பட்டதாம்.

இன்னும், குரங்குகள் சிக்குப் பெட்டியைச் (Puzzle box) சரியான ஒழுங்கில் அடுக்க மிகச் சுலபமாய்க் கற்றுகொள்ளுகின்றன. இவ்விதமாக அடுக்கும் வழியைக் கற்றுக்கொண்ட ஒரு குரங்கானது எட்டு மாதத்திற்குப் பிற்பாடு ஒரு சிக்குப் பெட்டியை வெகு சீக்கிரத்தில் அடுக்கிவிட்டதாம்; இதற்கு அதனுடைய கைப்பழக்கமே காரணம். முதலில் பல தடவை தவறினாலும் அதை மறுபடியும் பலமுறை செய்து சரியாய் அடுக்கும் வழியைக் குரங்குகள் தெரிந்து கொள்ளுகின்றன.

புகழ்பெற்ற மற்றொரு வாலில்லா வானரம், ஈருருளி (bicycle) ஓட்டவும், ஊசி கோக்கவும், முடிகளை அவிழ்க்கவும் பாசி, பவழம் முதலியவற்றைக் கோக்கவும், ஆணிகள் அறையவும், பூட்டைத் திறக்கவும் படித்திருக்கிறது. ஒரு சமயம், எட்டு என்னும் எண்ணைக் கீழே வரைந்து அதன்மேல் ஐந்து புட்டிகளை நிறுத்தி யிருந்ததாம். அவ்வானரம் அதை உள்ளும் புறமுமாகச் சுற்றிச் சுற்றி ஈருருளியில் மிக வழகாக வந்ததாம். இவ்வற்புதத்தைக் கண்டவர்கள் இறும்பூதெய்தார்களோ? சாதாரண ஆணிகளையும், திருகு ஆணிகளையும், சுத்தியையும், திருப்புளியையும் அவ்வானரத்திடம் கொடுத்தபொழுது, ஆணிகளைப் பயன் படுத்தும்பொழுது சுத்தியையும், திருகு ஆணிகளை உபயோகப்

படுத்தும்பொழுது திருப்புளியையும் ஒழுங்காக உபயோகித்ததாம். வேறுவிதமாகச் செய்யப்பட்ட ஒரு சுத்தி அதன் கையில் கொடுக்கப்பட்டபொழுது அது சுத்தியின் இருபாகத்தையும் தொட்டுப் பார்த்துத் தட்டையான பாகத்தால் ஆணி அறைந்ததாம். இவ்வாறு சுமார் முப்பத்தாறு வித்தைகளை எவருடைய தூண்டுதலுமில்லாமல் வரிசையாகச் செய்து காட்டியதாம்.

இது நிற்க, குரங்குகளுக்கு மனிதனைப்போல் பகுத்தறியும் தன்மை (Power to reason) இருக்கிறதா என்று சற்றுக் கவனிப்போம். ஏனைய மிருகங்கள் அதாவது, குதிரை, நாய், பூனை, யானை இவைகளைப்போல், குரங்குகளும் புத்திசாலித்தனமான நடவடிக்கைகளைக் காண்பிக்கின்றன. இன்ன செய்கையைச் செய்தால் இன்ன பயன் கிடைக்குமென்று அவை தங்கள் மனத்தில் எண்ணிச் செய்கைகளைச் செய்வதுபோல் நமக்குத் தோன்றுகின்றது.

குரங்குகளுக்குப் புத்தி கூர்மை அதிகம் என்பதைத் திட்டமாகக் காண்பிக்கும் பொருட்டு அனேக இயற்கை நூலறிஞர்கள், குரங்குகளை வளர்த்துப் பற்பல தொழில்களும் பாடங்களும் கற்றுக்கொடுத்து அவைகள் எவ்வாறு புத்தி கூர்மையைக் காண்பிக்கின்றன வென்று ஆராய்ந்து வருகின்றனர். ஒரு மனிதக் குரங்கு (Gorilla) அநேக நாட்களாய் இருட்டிலே வளர்க்கப்பட்டது; அப்பால் வெளிச்சத்தில் கொண்டுவரப்பட்டது. அதி சீக்கிரத்தில் அது சுத்தமாயிருக்கக் கற்றுக்கொண்டது; புதிதான பழங்களையும் சூடான பாலையும் சாப்பிட வழக்கப்படுத்திக் கொண்டது. மேசைமீது சாப்பிடும்போதும் தன் எஜமானியோடு உட்காரும்போதும், மரியாதையாய் அது நடந்து கொள்ளும். தண்ணீர்க் குழாயைத் திறந்து தண்ணீர் குடித்தால் அதைத் திரும்பவும் மூடிவிட்டுத்தான் தன் இடத்திற்குப் போகும். தானுகவாவது, அல்லது சிறு பிள்ளைகளோடு சேர்ந்தாவது வெகு சந்தோஷமாய் விளையாடும். தான் நேசிக்கும் நண்பரிடம் அதிக பயபக்தியோடு நடந்துகொள்ளும். அது ஏதாவது சிறுபிழை செய்துவிட்டால் அதற்குப் பெரிய தண்டனை கொடுக்க அவசியமில்லை. "நீ அதிகக் கெட்ட பிள்ளை, தூரப்போ" என்று தள்ளுவதே போதும்: உடனே கீழே விழுந்து, புரண்டு, அழுது தன் எஜமானியின் பாதத்தில் விழுந்து மன்னிப்புக் கேட்குமாப்போல் காண்பிக்கும்.

(தொடரும்

# பொருணூல்—(Economics)

[திரு. B. நடராஜ பிள்ளை B.A. (Hons)]

(முன் ௩௨௯-ம் பக்கத் தொடர்ச்சி)

இவ்வாறாக, குறைந்தது ஆயிரமாண்டுகளாக மாறாதுநின்ற இந்திய ஏற்றுமதி வாணிபத்தின் தன்மை ஒருபெரும் தலைகீழ் மாறுதலடைந்து, அளவிலும், விலையிலும் சிறிது பொழுது அருகி விட்டது. 1800-ம் ஆண்டிற்குப் பிறகு பருத்தித்துணி ஏற்று மதி குறைவதாயிற்று; ஆனால் 1820-க்குப்பிறகு அதன் வீழ்ச்சி யின் வேகம் மிக மிக விரைவடைந்தது. 18-ம் நூற்றாண்டில் இங்கி லாந்துக்கு இங்கிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டுவந்த பருத்தித் துணியின் தொகை சராசரி 20 லட்சம் பவுனாக இருந்தது; ஆனால் 1820-முதல் 1830-வரை பத்தாண்டுகளில் சராசரி ஏற்றுமதி 5லட் சம் பவுனளவாகி, அடுத்த பத்தாண்டுகளில் சராசரி ஏற்றுமதி 3 லட்சம் பவுனளவாகக் குறுகிவிட்டது. 1833-ல் நிறுவப்பட்ட சார்ட்டர் சட்டத் (Charter Act) தின் பயனாக ஆங்கிலத் துணி கள் இந்தியாவுள் ஏராளமாக இறக்குமதி செய்யப்படுவதாயிற்று. அதற்குப்பின்னர் இந்தியப் பருத்தித்துணி ஏற்றுமதி விரைவில் அழிந்தொழிந்தது.

கிழக்கு இந்தியக் கம்பெனியார் வர்த்தகம் நடத்திவந்த காலம் வரையில் இந்தியத் தொழிலுக்கு ஒருவித ஊக்கம் இருந்து வந்தது. ஏனெனில் அவர்கள் உள்நாட்டிற் பல நெசவுத் தொழிலாளர்களை ஏற்படுத்தி ஆண்டுதோறும் ஏற்றுமதிக்கெனச் சரக்குகள் உற்பத்தி செய்துவந்தனர். ஆனால் மேற்குறித்த சட்டத்தின் பயனாகக் கம் பெனியாரின் வாணிப உரிமைகள் பறிக்கப்படவே அச்சிறு முயற்சியும் நின்று போயிற்று. பிற்காலத்தில் சில முக்கிய விளை பொருள்களில் ஏற்றுமதி வாணிபம் விரிந்ததே எனினும், அதன் பயனாக இந்திய வாணிபப் பண்டங்களின் தன்மையும், அவை சென்று சேர்ந்த திசைகளும் வேறாகி மாறுதலடைந்தன. இக்கார ணத்தாலும், வேறுகாரணங்களாலும், சில காலத்துக் கெல்லாம் இந்தியாவுக்குள் வந்த தங்கம் வெள்ளி முதலிய அரிய உலோகங் களின் இறக்குமதி குன்றியதுமேயன்றி, சிற்சில மாகாணங்களி லிருந்து நாணய ஏற்றுமதியானது இறக்குமதியிலும் கவிந்து பட்டது. இவணிருந்து நிதி ஏற்றுமதியை எளிதாகக்கருதி ஆங்கில

அரசாங்கத்தார் சில சௌகரியங்களும் கம்பெனியாருக்குச் செய்து வைத்தனர். கம்பெனியின் ஏற்றுமதி, பொன் வெள்ளியாக இருப்பின் அதற்கு ஆங்கில அரசாங்கக் கப்பல்களில் மேற்படி அரசாங்கத்துக்கு எவ்வளவு பளுக்கூலியோ அவ்வளவே கம்பெனியார் நிதிக்குமென விதித்தனர்.

ஆனால் எக்காலத்தில் எவ்வளவு இறக்குமதியாயிற்று என்பதைப்பற்றிய புள்ளிவிவரங்கள் ஒழுங்காக இல்லாமை வருந்தத்தக்கதே. சிற்சில ஆசிரியர்கள் குறிக்கும் புள்ளிகள் அனுமானத்தை அடிப்படையாகக் கொண்டனவே. எங்ஙனமாயினும், இறக்குமதியினும் நிதியின் ஏற்றுமதியே மிகுந்திருந்தது என்பதைமட்டும் முடிவுகட்டப் போதிய சான்றுகள் உள. ஸர் ஜார்ஜ் வின்கேட் என்பவர் 1800 முதல் 1858 வரையில் இந்தியாவை விட்டு அகன்ற நிதிக்குவையின் தொகை 10 கோடிப் பவுனென்று மதித்திருக்கிறார். மான்ட்கோமரி மார்ட்டின் என்பவர் வட்டிக்கு வட்டிக் கணக்கிட்டு 1800 முதல் 1830 வரையில் வெளிச்சென்ற பொன், வெள்ளியின் தொகை 70 கோடிப் பவுனளவாவதாக மதிப்பிட்டார். ஜான்ஷோர் என்பவரும், எம். இ. கிராண்டு என்பவரும் புள்ளி விவரங்கள் தந்திலரேனும், வெளியேறிய தொகை மிகப் பெரியதெனவே நிறுவுகின்றனர். ஹாமில்டன், டாடுவல் எனும் ஆசிரியர்கள் இத்தொகைகள் உண்மையை மிகைபட உரைப்பதெனக் கொள்ளினும், தாமேதும் மாறுபட்ட புள்ளிவிவரங்கள் தந்திலர். ஹாமில்டன் என்பவர்தான் இத்தொகையின் பெருக்கைப்பற்றி மிகுந்த சந்தேகம் கொள்பவர். டாட்வல் என்பவரோ பொதுமக்கள் கருத்திற் கேற்ப ஷோர், கிராண்டு ஆகியோர், கொண்டுள்ள நம்பிக்கையை ஹாமில்டன் என்பவர் தகுந்தபடி ஆராய்ந்துளாரோ' என்று ஐயுறுகின்றார்.

## ௬. பணத்தின் றொகை குறைதல்

### சென்னையின் சிறப்புக் காரணம்

1820-முதல் 1854 வரைச் சென்னைமாகாணத்திலிருந்த பொருளாதார நிலையானது மேலே குறிக்கப்பட்ட இந்திய வாணிபத்தின் மாறுதல்களையும் நிதிப்போக்கின் நெறியினையும் பற்றிய பொதுக் கருத்துக்களைப் பெரிதும் வலியுறுத்துகின்றது; என், இன்னும் அதிகமாகவே அரண் செய்கின்றது. இம்மாகாணத்

திற்குச் சிறப்பா யிருந்த பற்பல காரணங்களால் பொன் வெள்ளி அயல்நாடுகளுக்கு ஏராளமாகப் போனதுவுமன்றி, மற்றை மாகாணங்களி லிருந்ததைவிட நீண்டகாலம் இந்த ஒழுக்கு இங்கே இருந்து வந்தது. சென்னைப் பத்திரக் கருவூலங்களைத் துருவியதன் பயனாக மேற்குறித்த கால அளவையில் இங்கு நிகழ்ந்த வாணிபத்தினையும் நிதிப்போக்கு வழியினையும் பற்றிய தக்க புள்ளி விவரங்கள் எமக்குக் கிடைத்துள்ளது. அவற்றிலிருந்து, 1825-ம் ஆண்டிலிருந்து வெளிநாடு நோக்கிச்செல்ல ஆரம்பித்த இந்தத் திரவிய ஒழுக்கானது, 1850-ம் ஆண்டுவரை ஒருவாறு ஓய்வின்றிப் போய்க்கொண்டே இருந்ததென்று காண்கிறோம்.

இந்தத் திரவியப் போக்கு அதிகரிக்கவும் மற்றப் பாகங்களினும் நீடித்து நிகழவும் காரணமா யிருந்த சிறப்பியல்களை இப்பொழுது ஆராய்வோம். முதலாவதாக நாம் எடுத்துக்கொண்ட கால அளவையில் சென்னை ஏற்றுமதி வியாபாரமானது பண்ட வகைகளிலும், சென்ற திசைப்போக்கிலும் பெரிய மாறுதலடைந்தது. 1830-ம் ஆண்டு வரை சென்னையின் ஏற்றுமதி வியாபாரத்தில் நெசவுப் பொருள் வகைகளே தலைமைகொண்டு நின்றன. இவை எந்த நாடுகளுக்கு அனுப்பப்பட்டு வந்தனவோ (மலாக்கா, சுமத்திரா, மணில்லா, பெகு, பெர்ஸியன் குடாக்கடல், அரேபியா முதலிய) அந்த நாடுகள் நமக்கு வழக்கமாகப் பொன்னாகவும் வெள்ளியாகவுமே நம் விலையைக் கொடுப்பதா யிருந்தன. இவையே சென்னை யரசாங்கப் பட்டசாலைக்குத் தேவையான பொன்னையும் வெள்ளியையும் ஒழுங்காக அனுப்பி வந்த நாடுகளாகும். ஆனால் சளுவான விலையுடைய பிரிட்டிஷ் நெசவுச் சாக்குகள் மேற்குறித்த நாடுகளில் இந்தியச் சாக்குகளோடு போட்டியிடவே, சென்னை ஏற்றுமதி வியாபாரம் விரைவில் வென்று அழிந்துபட்டது. பொன், வெள்ளியின் வரத்து நின்று போயிற்று. ஆனால் சீனா தேசத்தோடும், பிரிட்டானியா தேசத்தோடும் நம் ஏற்றுமதி வியாபாரம் மிகுந்ததெனினும், அதற்கு ஈடாக நமக்கு உரிய திரவியம் அனுப்பப்படவில்லை. இதற்கு இங்கிலாந்தி லிருந்த கிழவர்த்தகக் கம்பெனியாரின் தலைவர்கள் (Court of Directors) கையாடின 'பில்' முறையே ஓரளவில் பொறுப்பாகும்.

(தொடரும்)

# அகத்தியர்

[சீகாழி திரு. கி. சாமிக்கண்ணு அவர்கள்]

அமிழ்தினும் இனிய நம் தாய்மொழியாகிய தமிழன்னை, என்று பிறந்தவள் என்று உணரா இயல்பினளாய், எந்நாளும் ஓர் கன்னிகையென்னப் பயின்று இந்நிலவுலகின்கண் நிலைத்து நின்று சீரும் சிறப்பும் பெற்று வாழ்ந்து வருகின்றாள். நம் தமிழ்நங்கைக்குச் செவிலித்தாயாய் விளங்கியவர் அகத்தியர்.

அகத்தியர் ஓர் முனிவர். குறுமுனி, குடமுனி, மலயமுனி, முத்தமிழ்முனிவரியோன், தமிழ்வளர்த்தோன் என்னும் சிறப்புப் பெயர்கள் படைத்துள்ள இவர் முனிவர்களுள் முதல்வர். முழு முதற் கடவுளிடத்தும், முருகனிடமும் செந்தமி ழினியல்புகளை ஐயும் திரிபு என்னும் குற்றம் அறத் தெரிந்துதெளிந்தவர் இவர் ஒருவரே. இவர் அவலோகித முனிவரிடம் தமிழ்கற்றார் என் பாரும் உளர். ஆகவே இவர் முத்தமிழ்முனிவரியோன் எனப் பட்டுளார்.

பரந்தோடிய காவிரியை, அரசிளங்குமாரரைத் துணையாகக் கொண்டு ஒருமுகமாகத் திருப்பி நாடு வழியே பாயுமாறு விடு வித்தவரும் இவரே. பொதியமலையின் பாங்கருள்ள காடுகளை யெல்லாம் நாடாக்கினர். அவைகளே:—ஏழ்தெங்கநாடு, ஏழ் மதுரை நாடு, ஏழ்முன்பாலைநாடு, ஏழ்பின்பாலைநாடு, ஏழ்குன்ற நாடு, ஏழ்குணகரை நாடு, ஏழ்குறும்பனை நாடு, குமரி, கொல்லம் முதலிய பன்மலைநாடு எனப்பட்டனவாம். இவைகளைத் திருத்திய பின் பதினெண்குடி வேளிருள்ளிட்டாரையும் அருவாளரையும் அந்தந்த நாடுதோறு மிருத்தி ஆசிரியநிலையில் விளங்கினர். அப் போது இலங்கை நகரத்திலிருந்து இராக்கதர்கள் வந்து பற்பல துன்பம் செய்யமுயன்றனர். அதுகண்ட அகத்தியனார், இரா வணனை இசையால் நட்புச்செய்து இராக்கதர் அந்நாட்டுக்கு வாரதிருக்குமாறு செய்வித்தனர். இதனால் அகத்தியர் இரா வணனுடன் ஒத்தகாலத்தவர் என்பது தெரிகிறது.

முருகனை வழிபட்டுச் செந்தமிழின் இயல்புகளை உணர்ந்த பின் பொதியத்திலிருந்துகொண்டு தம்நாட்டுக்குரிய தமிழ் மொழி யையும் செம்மை செய்யக்கருதி "அகத்தியம்" என்னும் முதல்

நூலைச் செய்தனர். இந்நூல் முத்தமிழ் இலக்கணம். இஃது இயல், இசை, நாடகமென்னும் முத்தமிழ் இலக்கணத்தையும் பன்னீராயிரம் சூத்திரத்தால் தெரிவிப்பதாகிய இலக்கண நூல். இது நச்சினார்க்கினியர் காலத்திற்கு முன்பேயே இறந்ததென்ப. தொல்காப்பிய உரையாசிரியர்களும் பிறரும் ஆங்காங்குச் சிற்சில சூத்திரங்களை யெடுத்துக் காட்டியிருக்கின்றனர். அகத்தியர் நிமித்தம் மருத்துவம், ஞானம் முதலிய நூல்கள் பலவற்றைச் செய்தனர். இங்ஙனம் நூல்களையியற்றித் தொல்காப்பியர், செம்பூட்சேஎய், வையாபிகர், அதங்கோட்டாசான், அவிநயர், காக்கை பாடினியார், துராலிங்கர், வாய்ப்பியர், பனம்பாரனார், கழாரம்பர், நற்றத்தர், வாமனர் ஆகிய பன்னிருமாணாக்கருக்கும் கற்பித்தார். அதன் பின்னராய முதல் ஊழி இறுதிக்கண் (ஊழி—நெடுங்காலம்; ஊழி காலம்—நெடுங்காலம்; ஊழிநாள்—முடிவு நாள்.) தென் மதுரையகத்துத் தலைச்சங்கம் இரீஇயினர். அச்சங்கத்து இறைய னாரையும் முருகனையும் உடனிருக்க வேண்டி, முரஞ்சியூர் முடி நாகராயர், நிதியின் கிழவனார் என்றவருள்ளிட்ட நானூற்று நாற்பத்தொன்பதின்மர்கூட ஆராய்ந்து தம்நூல்களை அவையோர் கேட்டு ஒப்புக்கொள்ளச் செய்தார். சங்கத்தில் தலைமை பெற்றுச் சங்கம் நிறுவிய தூங்கராய் விளங்கினர்.

அன்றியும், சங்கத்திருந்த மற்றையோர் எண்ணிறந்த பரி பாடலும், முதுநாரையும், முதுகுருகும், களரியாவிரையும் முதலிய நூல்களைச் செய்தனர். நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு இத்தலைச்சங்கம் நின்று நிலவியது. இத்தலைச்சங்கம் இரீஇயினர் காய்சினவழுதிமுதல் கடுங்கோன் ஈறாயுள்ள பாண்டியர் எண் பத்தொன்பதின்மர். அவருட் கவியரங்கேறினர் எழுவர் பாண்டியர். அவ்வெழுவருள் ஒருவனாய நிலந்தருதிருவிற் பாண்டியன், தொல்காப்பியரைக் கொண்டு தொல்காப்பியம் புலப் படுத்து இரீஇயினன். நிலந்தருதிருவிற்பாண்டியன் காலத்துக்கு முற்பட்டவர், தொல்காப்பியருடைய ஆசிரியராகிய அகத்தியர்.

தமிழ்மொழியைச் செம்மைப்படுத்தி, நூல்பல செய்துதவி, சங்கங்கண்டு, அகத்தியர் தமிழ்வளர்த்தோன் என்ற சிறப்புப் பெயருக் குரியவரானார். “வேங்கடங்குமரிதீம்புனற் பௌவத்து” எனத்தொடங்கும் செய்யுளால் இவர் தலைச்சங்கம் நிறுவினர்

என்பதும் (சிலப்பதிகாரம்—செவ்வூர்ச் சிற்றம்பலக்கவிராயர் அவர்கள் வீட்டிலிருந்த ஒரு ஏட்டிலுள்ளது), அகத்தியம் இயற்றினர் என்பதும் வலியுறுகின்றன.

"முத்தமிழ்மாமுனி நீள்வரையே நின்று மொய்ம்புறக் காக்கும் தமிழ்நாடு" என்பதிலிருந்து இவர் மலயம் என்ற பெயருடைய மலையில் நிலைத்திருந்தமையால் மலயமுனி எனப்பட்டார். பண்டைத்தமிழர்க்குரிய முறையில் இயற்கைக்கு மாறுபடாத இல்லறத்தை இனிதுநடத்தித் துறவறத்தைக் கைவரப் பெற்றவர். இவர் மனைவி பெயர் உலோபாமுத்திரை.

அகத்தியர் சங்கம் நிறுவியகாலமும், அகத்தியம் செய்த காலமும் தமிழ் பிறமொழிக்கலப்பின்றித் தனிநிலை பெற்றிருந்த காலம். தமிழர் இந்நாட்டுக் குடிகள் என்பதும், அவர்கள் எங்கிருந்தும் தமிழ் நாட்டுக்கு வந்து குடியேறியவர் அல்லர் என்பதும் ஒருதலை ஆகலின் அகத்தியரும், சேரசோழபாண்டியரும் இந்நாட்டுப் பழங்குடிகள் என்பது திண்ணம்.

இசைநுணுக்கம் என்ற இசைநூல், இடைச்சங்ககாலத்து இயற்றப்பட்டது. இந்நூலியற்றியவர் சிகண்டிமுனிவர் என்பவர். இவர் அகத்தியருடைய மாணக்கர் என்று அடியார்க்குநல்லார் கூறியிருக்கிறார். இதனால் இசைநுணுக்கம் இயற்றிய சிகண்டி-முனிவருக்கு ஆசிரியராகிய அகத்தியர் இடைச்சங்ககாலத்துக்கு முற்பட்டவர் என்பது போதரும்.

குடம் என்ற தமிழ்நாட்டின் பிரிவுகளுள் ஒன்றிலுள்ள பொதியமலைக்குக் குடமலை எனப்பெயர். (குடம்=தமிழ்நாட்டின் பிரிவுகளுள்ஒன்று. குடமலை=மேற்றிசைக் கணுள்ள ஓர் மலை, அது சையகிரி எனவும்படும்). அம்மலையில் வாழும் முனிவராதலின் குடமுனி எனப் பெயர் பெற்றார். குடம் என்பதை மட்கலயம் எனப் பொருள்செய்து, அகத்தியர் மட்கலயத்துப் பிறந்தவர் என்ற வரலாறும் வழங்குகிறது.

இத்தலைச்சங்கம் குறித்த ஆண்டுகள் அளவும் நிலைபெற்று வருங்காலத்தில் அதற்கு இடமாயிருந்த தென்மதுரை கடல் கொள்ளப்பட்டது. இதுவன்றி மேற்காட்டிய நாற்பத்தொன்பது நாடுகளும் அழிபட்டன. இவ்வாறு ஊழிநீர் (ஊழிநீர்=உலக முடிவிலுண்டாகும் நீர்ப்பெருக்கு.) தோன்றிய காலத்தை ஆராயு

மிடைத்துத் துவாபர கலியுக சந்தியாதல் வேண்டு மென்றும், எனவே இற்றைக்குப் பன்னீராயிரம் ஆண்டுகளுக்கு முன் எனவும் கூறுநிற்பர். இக்கடல்கோள் தமிழ்நூல் பலவற்றாலும் பிறநாட்டினரின் குறிப்புக்களாலும் அறியக்கிடக்கின்றது. இற்றைக்குப் பதினோராயிரத்து நானூற்று எண்பத்தொரு ஆண்டுகளுக்கு முன்னர் ஒரு ஊழிநீர் வந்ததென்றும், அவ்வூழிநீரால் இப்பூமுகத்திலே ஆர்கலியாற் சூழப்பட்ட நாடுகளெல்லாம் சிதைந்தும் வேறுபட்டும் போயின என்றும், "போசிடோனிச்" முதலிய தீவுகள் கடல்வாய்ப்பட்டழிந்ததும் அவ்வூழி நீராலேயேயாம் என்றும் அத்திலாந்திக் வரலாறு எழுதிய எல்லியட் என்னும் ஆங்கிலப்புலவர் கூறியதும் இக்கடல்கோளை வலியுறுத்தும்.

இம்முனிவர் நகுடன் என்னும் அரசன் தேவேந்திரநிலை பெற்ற காலத்தில் அவன் சிவிகையை முற்றாங்கிச் சென்றாராக, அவன் விரைவாகச் செல்லுங்களென்று கூற, உடனே அவனை மலைப்பாம்பாகுமாறு வெகுண்டு கூறினர் என மகாபாரதம் கூறுவதிலிருந்தும், சீதாதேவியின் சிறைமீட்டற்காக இராமன் இலங்கைநோக்கி வரும் வழியில் இம்முனிவரின் இருக்கையிற் றங்கி இராவணன் வரலாற்று முறைமைகளையும், இலங்கையின் பெருமைகளையும் கேட்டுணர்ந்து அவராற் கொடுக்கப்பட்ட படைகளைக்கொண்டு, அவர் அருளையும் பெற்றுச் சென்று வெற்றியடைந்தான் என்று இராமாயணமும், கூர்மபுராணமும் கூறுவதிலிருந்தும் அகத்தியர் இராமனுடன் ஒத்தகாலத்தவர் என்பதும், மகாபாரதகாலத்துக்கு முற்பட்டவர் என்பதும் அறியக்கிடக்கின்றன.

இதுகாறும் கூறிவந்தவைகளால் அகத்தியர், இராமாயண காலத்திலிருந்தவர் என்றும், மகாபாரதகாலத்துக்கு முந்தியவர் என்றும், தலைச்சங்கம் இருந்த தென்மதுரை கடல்கொள்ளப் படுமுன் இருந்தவர் என்றும், இசைநுணுக்கம் இயற்றப்பட்ட இடைச்சங்ககாலத்துக்கு முந்தியவர் என்றும், நிலந்தருதிருவிற் பாண்டியனுக்கு முற்பட்டவர் என்றும், தலைச்சங்கம் நிறுவியவர் என்றும் ஏற்படும்.

எனவே அகத்தியர் இற்றைக்குப் பதின்மூவாயிரம் ஆண்டுகளுக்குமுன் இருந்தவர் என்பது தேற்றம்.



# உடல்நலப் பகுதி

## கடைச் சரக்குகளைப் பயன்படுத்தும் முறை

## காசுக்கட்டி (Catechu)

("காசிகன்" எழுதுவது)

மருந்துக் கடைகளிலும் வெற்றிலைப்பாக்குக் கடைகளிலும் காசுக்கட்டி என்றதொரு பொருள் விற்கப்படுகிறது. அது நோய்க்கு மருந்தாகவும் பயன்படுகிறது. மருந்துக்கென்று எடுக்கப்படுங் காசுக்கட்டி சுத்தமானதாயும் கருநிறமுள்ளதாயும் எளிதில் உடையக் கூடியதாயும் இருத்தல்வேண்டும்.

காய்ச்சலில்லாமல் வயிற்றுப்போக்கு மட்டுங்கண்டால், நல்ல காசுக்கட்டியைப் பொடி செய்து ஒரு சிட்டிகையெடுத்துத் தேனிற் குழைத்தாவது, வெல்லத்திற் கலந்தாவது சிறிது கறுவாய்ப் பட்டைத்தூளுடன் சேர்த்துச் சாப்பிடலாம். இது வயதுவந்தவர்கள் சாப்பிடக் கூடிய அளவாகும்.

அன்றியும், இரண்டு ரூபாய் எடை காசுக்கட்டிப் பொடியையெடுத்து, கால் ரூபாய் எடைக்குச் சற்று அதிகமாகக் கறுவாய்ப் பட்டைத்தூளுடன் சேர்த்துக் கலந்து கொதிக்கிற நீரிற் போட்டு வைத்து இரண்டு மணி நேரங் கழிந்தபின் வடிகட்டி ஒரு புட்டியில் வைத்துக்கொண்டு வேளைக்கு இரண்டு அவுன்ஸ் வீதம் நாளைக்கு மூன்று வேளையாகக் கொடுத்தும் வரலாம். இரவில் படுக்கைக்குச் செல்லும்போது ஒரு அபின் மாத்திரையு முட்கொள்ளலாம். குழந்தைகளுக்கு மூன்று அல்லது நான்கு கிரைன் காசுக்கட்டித் தூளை அதன் சமனளவு கொண்ட கறுவாய்ப் பட்டைத் தூளுடன் கலந்து கொடுத்தால் நோய் தீரும்.

இரசங் கலந்த மருந்துகளை யுட்கொண்டதனால் உண்டாகும் வாய்ப் புண்களுக்கும், உமிழ்நீர்ச் சுரப்பிற்கும் ஒரு துண்டு காசுக் கட்டியை வாயிற் போட்டு வைத்துக்கொள்ளுதல் நலம். ஒரு

நாளைக்கு இரண்டு மூன்று முறை இவ்வாறு போட்டுக் கொள்ளலாம். தொண்டையிலுண்டாகும் வலிக்கும் இது நலமளிக்கும்.

நாற்றம் மிகுந்த பழைய புண்களுக்குக் காசுக்கட்டியை மெழுகுப் பிளாஸ்திரியுடன் சேர்த்துப் போட்டுக் கொள்ளலாம். மேலும், இரண்டு ரூபாய் எடைக் காசுக்கட்டியைக் கொதிக்க வைத்த நீரை ஆறினபின் வடிகட்டிக்கொண்டு காலை மாலைகளில் கழுவியும் வரலாம். பால் கொடுக்குந் தாய்மார்களுக்குப் பாற்சுரையில் காணும் புண்களுக்கும் இவ்வாறே செய்துவரலாம். இன்னும் பிள்ளையுண்டான எட்டாவது மாதத்தில் பாற்சுரையில் மேற்குறித்த காசுக் கட்டி நீரைத் தடவினால், பின்னர் புண் உண்டாகாது.

பற்களிற் குழிவிழுந்து பின் அதற்குள் தசை வளர்வதனால் உண்டாகிற பல்வலிக்கு ஒரு துண்டு காசுக்கட்டியை குழிகளில் இட்டு அழுத்தினாலும், வாயிலிட்டு ஒதுக்கிக்கொண்டாலும் நலங் கொடுக்கும்.

---

## செய்திகளும் குறிப்புகளும் (News and Notes)

நமது செல்விக்குச் சிறந்த கட்டுரைகள் எழுதி வரும்திருவாளர் தி. பொ. மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்களின் தமையனார், திரு. தி. பொ. கிருஷ்ணசாமிப் பாவலர் அவர்கள் காலஞ்சென்றமை யறிந்து மிகவும் வருந்துகிறோம்.

* * *

சென்னை யரசாங்கச் சட்ட மெம்பராக, திருவாளர் லர். கே. வேங்கடரெட்டி நாயுடுகாரு, B.A., B,L. அமர்த்தப் பெற்றிருப்பது மிகவும் போற்றற்குரியதாகும்.

### ஜனமித்திரன்

இஃது திரு. பி. எஸ். சுப்பிரமணிய ஐயரை ஆசிரியாராகக் கொண்டு புதுக்கோட்டையினின்றும் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் வெளிவரும் வாரத் தாள். இதன் ஆண்டுக்கட்டணம் ரூ. 6, இதன்கண் உயர்திரு. சுவாமி சுத்தானந்த பாரதியார் அவர்கள் பல துறைகளிலும் பாங்குற எழுதும் பற்பல கட்டுரைகளும், ஏனைய செய்திகளும் எழிலுற இலகுகின்றன.

௨

# அறிவிப்பு

## சென்னை மாகாணத் தமிழர் மாநாடு
## வேனில் விடுமுறைக் காலத்துக்கு மாற்றி
## வைக்கப்பட்டிருக்கிறது

அன்புள்ள ஐய,

தமிழின் தூய்மை வளர்ச்சி இன்ன கருதி, 1934 மார்ச்சு 30, 31, எப்ரல் 1-ம் நாட்களில் கூட்டப் பெறுவதாகக் குறிக்கப் பட்டிருந்த தமிழர் மாநாடு; பல தமிழ்ப் புலவர்கள் தமிழ்ப் பெரு மக்கள் நேரில் வந்து கலந்து பயன்பெறவேண்டி, உற்றுய்ந்து, 16-3-34-ல் கூடிய நிறைவேற்றக் கழகத்தாரால், 1934-ம் ஆண்டு மே மீ 18, 19 20-ம் நாட்களுக்கு மாற்றிவைக்கப்பட்டுள்ளது. இச் செய்தியைத் தமிழர்கள் அனைவரும் அறிந்து, மாநாடு பல் லாற்றானும் சிறப்புற நடைபெறுவதற்கு வேண்டுவன புரிய அன் புடன் வேண்டுகின்றோம்.

அன்புள்ள

திருநெல்வேலி 17—3—34. புு சி. புன்னைவனநாதன், அமைச்சர்.

---

# அறிவிப்பு

## தென்னிந்திய தமிழ்ச் சங்கம், திருநெல்வேலி.
## தனித் தமிழ்த் தேர்வுகள்.

தமிழ் அன்பர்காள்.!

திருநெல்வேலி, தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தார் ஆண்டு தோறும் ஜூன் மாதம் நடத்தி வரும் தனித் தமிழ்த் தேர்வுகள் நாளது 1109 ஆண்டுக்கு, 1934ஆண்டு ஜூன் மீ 28, 29, 30 க்குச் சரியான ஏகக ஆனித் திங்கள் ௰௪, ௰௫, ௰௬ வியாழன், வெள்ளி, சனி இம் மூன்று நாட்களிலும் நடைபெறும். தமிழ்த் தேர்வு, இளந் தமிழ்ப் புலவர், தமிழ்ப் புலவர் இம் மூவகைத் தேர்வுகட் கும் விண்ணப்பிக்க விரும்பும் அறிஞர்கள் யாவரும் அவ்வத் தேர்வு கட்குரிய கட்டணத் தொகையுடன் விண்ணப்பங்களை 1934ஆண்டு எப்ரல் மீ 30உ (சித்திரை மீ ௰௭)க்குள் சங்கம் அமைச்சர் பெய ருக்கு அனுப்பிவைக்க வேண்டும். ஐந்து பேர்கட்கு அதிகப் பட்ட விண்ணப்பங்கள் உள்ள இடங்களும் தேர்வு நடைபெறும் இடமாகக் குறிக்கப்பட ஏற்பாடு செய்யலாம்.

அன்புள்ள

திருநெல்வேலி 21-3-1934 பு. சி. புன்னைவனநாதன், அமைச்சர்.

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்த நிச்சயம்

---

[குறிப்பு:—ஏடுகளிற் பழுதுபட்டுப்போன இடங்களைப் புலப்படுத்த அவ்வவ் விடங்களில்...இவ்வாறு புள்ளிநிரை அமைக்கப்பட்டுள்ளது.]

## துதி

நல்லார்கள் போற்றிய மெய்கண்ட நாத ...ளோங்கிச்
சொல்லாக மப்பொரு டன்னைவிட் டன்னியஞ் சொல்லுமிந்த
கல்லார் மருட்சொற் கழித்துச் சித்தாந்தக் கருத்திதெனப்
பொல்லாத பிள்ளை யடியிணை போற்றிப் புகலுதுமே. 1

## அவையடக்கம்

மெய்கண்ட தேவ னருளாற் சிவாகம மெய்ப்பொருடேர்ந்
தையமின் மெய்யடி யாருக் களித்ததை யாய்ந்தவர்போற்
பையவுள் வந்து பொருண் மாறுபாடு பகர்ந்தவர்க்கே
செய்ய பொருளவன் செப்பிய வாறிவண் செப்புதுமே. 2

## நூற்பொருள்

சுத்தியைக் கண்டிது வெள்ளியென் றூர்க்கிது சுத்தியென்று
சுத்தியின் றன்மை யறியும் பரீட்சை தொகுப்பவர்போன்
முத்தி சிவனுக் கிணையன் றவனின்பின் மூழ்குவதே
முத்தி யுயிர்க்கென்று யானும் பரீட்சை மொழிகுவனே. 3

## நூல்

ஆகம வேத புராணாதி யாய்ந்த வருளுடையோ
ரேகன தானந்த மேமுத்தி யென்ன விசைத்ததனை
யூக மிலாது சிவசம முத்தியென் றோதினர்க்குப்
போக மலாது பாமுத்தி தானும் பொருந்தலின்றே. 4

ஒருமை தருஞ்சிவ ஞானந்த முத்திய தொன்றொழியப்
பெருமை செய்முத்தி பிரானுக் கிணையென்னும் பித்தர்சொன்னீத்
தருமை யுடையசித் தாந்தமி தென்ன வருளுருவாந்
தருமை யினுவுக் காசசம் பந்தனுஞ் சாற்றினனே, 5

ஆணவந் தன்னை யபிபவஞ் செய்திங் கானருடான்
பேணிய முத்தர்க் கலாதெந் நாளும் பெருந்துணையாய்த்
தாணுவி னனந்தந் தன்னையு மீவது சாற்றுமறை
பூணு மானருள் பெற்றவர் தாமும் புகன்றனரே. 6

கண்ணிற் படல முடையார் வயித்தியன் காட்டும்வழி
மண்ணி நடப்பவர் நடவார் படல வவலமற்றோர்
நண்ணு முயிரும் மலத்தா லரன்றுணை நச்சியிடு
மெண்ணு மலந்தவிர்ந் தாலிறை வன்றுணை யின்றெனிலே. 7

படல வுவமையைப் பன்னிய திங்ஙனப் பண்டிதன்றான்
படலம தோடப் படிமிசைத் தன்றொழில் பண்ணினதிற்
படல வயித்தியன் றன்றுணை தன்னையும் பன்னினதேற்
படலம தொப்ப வுருவாய் மலத்தையும் பாறுமென்னே. 8

உன்னும் பிருதிவி தான் முதலாய வுலகதனின்
மன்னும் பொருட்பெய ராதி யறிவின் மதியிலியோர்
சொன்ன பொருட்பெய ராதி துணிந்திடச் சொல்குருவாற்
பன்னிய சத்த மதனு லஞ்ஞானங்கள் பாற்றினரே. 9

மன்னுமஞ் ஞானமு மாறிப்பின் றாமு மதியுளாய்ச்
சொன்னகுரு வின்றித் தாமே பொருளைத் துணிந்ததுபோன்
முன்னவன் றன்னரு ளான்மல நீங்கிய முத்தர்களு
மன்னசிவ னின்றித் தாமறிவாரென் றறைந்திடலே. 10

பன்னு குருவின் வசன தினமும் பார்த்திருந்தே
துன்னுமஞ் ஞான மதனைத் தினமுந் துணிக்கின்றதாம்
அன்னவன் சொன்ன வசனத்தை விட்டிங் கறிவரிதான்
மன்னு ... ... ... ரிதே. 11

முத்தியி லீசன் றுணைநீ ...யின் முன்மொழிந்த
முத்திய தாவது பாசங்க ணீங்கி முழுதுணர்தல்
முத்தா வர்க்கு மல ... ... ...
... பொருள் யாஞ்சொல்வ தன்றி மொழிவதின்றே. 12

ஆணவ நீங்குவ தான்மா விறுக்கன் னியதலத்தே
நாணி நடப்பது வோவன்றி நாகத்...நண்ணுவதோ
தாணுவின் சத்தி யி... தடைப்பட்ட தன்மையதோ
பேணியிட முன்றனுட் பெற்றதை யீதென்று பேசுகவே. 13

அன்னிய தேச மடையுமென் றுன்மல மம்மலமு
மன்னிய புற்கலன் றுனு... மாறுமன்றே
யின்ன வகையன்றி நாசத்தை யெய்துமென் றேதுணியின்
முன்ன வளித்த மலமென் றுரைத்தது மோசமன்றே. 14

சத்திக்கு நாச மலத்துக்கு நாசத் ...
மத்தன் வசன விரோதமு மின்றெனி லன்றுரைத்த
சத்திக்கு நாசந் தரவே மலத்துக்குஞ் சாருமையோ
வத்த தருமஞ் சிதைந்தாற் றருமியு மற்றிடுமே. 15

குணத்தின் வடிவம தாகி யிருந்த குணியதற்குக்
குணத்தை யகன்றவி டத்திங் குருவத் தைக்கூறுகநீ
குணத்தின் வடிவை விடுத்துக் குணியைக் குறிப்பரிதாற்
குணத்தை விடுத்துக் குணியிங் கிருப்பது கூறரிதே. 16

கண்ட கடத்தின் றருமங் கறுப்புக் கழிந்திடவு
மண்டி யருண மதற்குக் குணமென வந்திடவும்
விண்ட கலாமற் கடமிங் கிருக்கவு மேதினியிற்
கொண்ட படிமல சத்திக்கு நாசமுங் கொண்டிடலே. 17

பன்னு கடத்தின் கறுப்பைத் துணிக்கப் பகையதுவாய்
மன்னி சிவப்பொன் றுவந்தது போல மலமதற்குத்
துன்னிய வாவா ரகசத்தி தன்னைத் துணித்திடவே
யன்னிய சத்தி பிரகாச மாய்வந் தணையுமென்னே. 18

அன்றியு மந்த மலசத்தி தன்னை யகற்றுவது
துன்றி யிடுஞ்சிவ சத்தி யெனுஞ்சொற் றுலைந்துவிடு
முன்றன் மொழிப்படி யாகமந் தானு முரைத்திடுமோ
வென்றும் விசாரித் துரையா யியம்புவ மின்னமுமே. 19

சைவத்தி லெல்லாப் பொருளு மனுதித் தகைமையென்று
மெய்வைத்த வாகமஞ் சற்கா ரியத்தை விளம்புவதும்
பொய்வைத்த சொல்லாய்ப் பொருந்துங் கடதன்மம் போன்றமெனின்
மொய்வைத்த குற்றங்க ளின்னு மனேக மொழிகுவமே. 20

அந்த மலசத்தி தன்னை யசத்தென் றறைகுதியோ
நந்த லொழிந்திடுஞ் சத்தென்று நாளு நவிலுவையோ
தந்த வசத்தெனிற் சத்தி சசக்கொம்பு தன்னைநிகர்த்
திந்த வுயிர்சத்தி தன்னை மறைப்பது மில்லையன்றே. 21

ஒன்றிடுஞ் சத்தென் றுரைக்கின் மலசத்தி யுண்மையின்று
பொன்றிடு மென்ற தெனித்திய மாமுயிர் போலவிவண்
அன்றியு மோட்சநற் காரிகை தன்னி லறைந்ததுவு
நன்றல வென்று மொழிவோம் நயந்தெமை நண்ணிடிலே. 22

வெஞ்சக மாகுஞ் சிவசத்தி சன்னிதி வேண்டிநித்த
மெஞ்சலில் லாவுயி ரெப்போது மேவி யிருக்கவென்றே
துஞ்சலில் லாவுயிர் வேத்தியு முண்டென்று சொல்லியது
வஞ்சக வாணவந் தாங்கெடு மென்றவர் மாற்றமன்றே. 23

வஞ்ச மலங்கெடு மாகையி னுன்மலம் வந்துபின்னு
மெஞ்ச லிலாத வுயிர்க்குத் தொடருவ தில்லையன்றே
விஞ்சைநல் லாகமந் தானும் விளம்பிட வேணுமிதற்
கஞ்சி மலத்துக் கழிவின் றபிபவ மாமெனிலே. 24

ஆதவன் தன்கிர ணத்தா லிருளை யபிபவித்தே
கோதறு நேத்திரந் தானறி யும்பொருள் கூர்ந்தறிய
நீதிய தாகித் துணையா யிருந்த நிலைமையைப்போற்
சோதியு முத்தியி லான்மா வுணரத் துணையெனுமே. 25

ஆணவம் பாக மடைதற் பொருட்டிங் கரனருடான்
பூணுங் கலாதிக ளாலே மலத்தினைப் போக்கியபின்
பேணிச் சுகாதி யளிக்கின்ற பெற்றியிற் பேதத்திலே
தாணுச் சகாயந் தவிராது வேண்டுதல் சத்தியமே. 26

ஆணவம் பாக மடைந்த வதற்பின் னரனருடான்
பூணு மலத்தை யபிபவ மெங்கும் பொருந்திடவே
பேணி யருளிய பின்னு முயிர்க்கப் பிரான்றினமும்
பூணுந் தொழிலின் றதனு லரன்றுணை போமெனிலே. 27

கடத்தை வனையுங் குயவன் வனைந்த கடநிமித்தம்
நடத்துந் தொழிலின் றதுபோல பிபவ நண்ணிடுமோ
மடக்கினிற் றீப மிருந்த விடத்துமுன் மன்னுமிருள்
அடர்த்த வகையை விசாரித்து நீமற் றறைகுதியே. 28

அந்தகன் னேத்திரந் தன்னை யடக்கின வாரிருளின்
பந்த மதனை யடக்கவென் றெண்ணிப் பரிந்துகொண்டு
வந்த விளக்கொரு காலிரு டன்னை மறித்ததற்பின்
றந்த தொழில்விட் டிருந்ததென் றேமிகச் சாற்றிடிலே. 29



காஞ்சீபுரம் நாயனப்பிள்ளை
(சுப்பிரமணிய பிள்ளை)

பிறப்பு:—சர்வசித்து௵ ஆடி௴ 11௳ (July 1887)
இறப்பு:—பவ௵ சித்திரை௴ 21௳ (3rd May 1934)

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது

| | | |
|---|---|---|
| சிலம்பு கஉ | பெய்கண்டான் யாண்டு-எகக சித்திரைத்திங்கள் 1934௵ ஏப்ரல்௴—மே௴ | பரல் கூ |

## திருநாவுக்கரசு அடிகள் தேவாரம்

இருடரு துன்பப் படல மறைப்பமெய்ஞ் ஞானமென்னும்
பொருடரு கண்ணிழந் துண்பொரு ணாடிப் புகலிழந்த
குருடருந் தம்மைப் பரவக் கொடுநர கக்குழிநின்
றருடரு கைகொடுத் தேற்றுமை யாற னடித்தலமே.

பதவுரை:—

ஐயாறன் அடித்தலம்—திருவையாறு என்ற தலத்தில் திருக்கோயில் கொண்டிருக்கின்ற சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளும்,

துன்பம்தரு—(உலகவாழ்வில்) துன்பத்தையே தருகின்ற

இருள் படல மறைப்ப—ஆணவ மலமாகிய படலமானது உயிரை மறைத்தலினால்,

மெய்ஞானம் என்னும் பொருள்—உயிருக்கு இயல்பாய் எங்கும் நிறைந்துள்ள மெய்அறிவு என்ற நற்பொருளை

தருகண் இழந்து—கொடுக்கின்ற அகக்கண்ணைப் பெறாதுவிட்டு

உண்பொருள் நாடி—புறக் கண்களால் நாடித்தேடி நுகர்கின்ற நுகர்வுப் பொருள்களையே நாடித்தேடி நுகர்ந்து கொண்டிருந்து

புகல் இழந்த குருடரும்—தாம் உய்தற்குப் பற்றுக்கோடாயிருக்கிற பொருளைப் பற்றுதலைவிட்ட அறியாதவர்களும்

தம்மைப் பரவ—தங்களைத் துதிக்க (அத்துதியின் பயனாக)

கொடு நரகக் குழிநின்று—கொடிய துன்பத்தை நுகரச்செய்கிற நரகமாகிய குழியினின்றும்,

அருள்தரு கை கொடுத்து எற்றும்—அருளையே செய்கிற கைகளினால் எறும்படி செய்து துன்பத்தினின்றும் விடுவிக்கும்.

விளக்கவுரை:—

ஐயாறன் அடித்தலம்—திருஐயாறு என்ற தலம் ஐந்து ஆறுகளும் ஒன்று சேர்ந்து ஒரு ஆறாய் ஓடுகின்ற இடத்திலிருப்பதால் அப்பெயர் கொண்டது. ஐயாறன் என்றசொல் உள்ளுறைப் பொருளாய் ஐந்து புலன்களும் சேர்கின்ற இடமாகிய உயிர்களுடைய உள்ளத்தில் உறைகிறவன் என்ற பொருளைத்தரும்.

அடித்தலம்—அடிகளாகிய இடம். எல்லா உயிர்களும் உலகவாழ்க்கை முடிவில் பேரின்பம் நுகர்தற்குப் போய்ச்சேரும் இடம் திருவடிகளாதலால் அடித்தலம் எனப்பட்டது. அடி—திருவருள். தலமாகிய அடி என மாறி வீட்டிடமாகிய திருவடிகள் எனப்பொருள் கொள்ளலாம். ஏ—ஈற்றசை.

இருள் தரு துன்பப் படலம் மறைப்ப—இருள் தரு துன்பப்படலம் மறைப்ப என்பதனை துன்பம்தரு இருட்படலம் மறைப்ப என மாற்றுக. ஆணவமலம் உலகவாழ்வில் துன்பத்தையே தருதலால் துன்பந்தரு இருட்படலம் மறைப்ப என்றார். படலம் என்பது புறப்பொருளைப் பார்க்கவொட்டாமல் கண்ணைமூடி மறைத்துக் கொண்டிருக்கும் மெல்லிய சவ்வு (film). கண்ணுக்குள் பார்வை வலி யிருந்தும் அதனை விளங்க வொட்டாமல் மூடித்தடுத்துக் கொண்டிருக்கும் படலம் போல உயிருக்கு இயல்பாய் நிறைவு அறிவு இருந்தும் அதனை விளங்கவொட்டாமல் ஆணவமலம் மறைத்துக் கொண்டிருத்தலால் இருட்படலமென்றார். இதனால் கண்ணைமூடியிருக்கிற படலமானது கண்பார்வையைக் கெடுக்காமலிருத்தல்போல உயிரின் நிறைவறிவை மறைத்திருக்கிற ஆணவமலமானது அவ்வறிவைக் கெடுக்கவில்லை என்பது பெறப்பட்டது. மறைப்ப என்பது மறைத்தலினால் என்றும் காரணப் பொருள்பட நின்றது.

மெய்ஞ்ஞானம் என்னும் பொருள்—மெய் + ஞானம் = மெய்ஞ்ஞானம் —மெய்ப்பொருளாகிய இறைவனை உள்ளத்தில் உணரும் மெய்

யுணர்வு. இந்த மெய்யுணர்வு ஞானசிரியருடைய அறிவுரையைக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல்களா லுண்டாகிறது. பொருட்பற்று உயிர்ப்பற்றுகளை விடுதலாலுண்டாகும் இந்த மெய்யுணர்வு ஆணவமல மறைப்பை நீக்கி உயிர்களை இறைவனுடைய திருவடிகளிற் சேர்த்துப் பேரின்பம் நுகரச் செய்கின்றது.

கண் இழந்து—கண் என்பது இங்கே அகக்கண் (ஞானக்கண்).

உண்பொருள்—என்பது வினைத்தொகை. உண்ணுதல்—நுகர்தல். உண்பொருள் என்பது ஐம்பொறிகளாலும், கண்டும், கேட்டும், உண்டும், உயிர்த்தும், உற்றும், நுகரும் உலகப் பொருள்கள்.

புகல் இழந்த—புகல்-பற்றுக்கோடு, தஞ்சம். புகல் இழத்தல் ஆவது உயிர் தனக்குப் பற்றுவான் இறைவனே என்ற உண்மையை மறத்தல்.

குருடர்—இங்கே, இறைவனை நேரே மெய்யுணர்வினால் உணரும் அகக்கண் இல்லாதவர்.

தம்மைப் பரவு—தம்மை என்ற சொல் திருவடிகளைக் குறிக்கின்றது. பரவ என்பது காரணப்பொருளில் வந்த இறந்தகால வினையெச்சம். திருவடிகளைப் பரவுதல் என்பது பாசம் வாயிலாக அறியும் பாச ஞானத்தாலும் (உலக அறிவினாலும்) பசு ஞானத்தினாலும் (உயிரறிவினாலும்) உலகினை ஆளும் இறைவன் ஒருவன் உளன் என்று அவனுடைய பொது இயல்பை அறிந்து அவனது அருள் விளங்கும் நெறியாகிய அறநெறியில் ஒழுகித் துதித்தல். கடவுளினுடைய அருள் விளங்கும் அறநெறியில் ஒழுகாத கடவுட் கொள்கையரும் அருளைத் துதிக்கின்றவர் ஆகார். கடவுள் இல்லையென்று சொல்லுகிற ஆராய்ச்சிக்கண் குருடரும் அவனது அருளைத் துதிக்கின்றவர் ஆகார். இவர்கள் உய்யும் பொருட்டு அவர்களை இறைவன் துன்பத்துக்குள்ளாக்குகின்றார்.

கோடு நரகக்குழி நின்று அருள் தரு கை கொடுத்து ஏற்றும்—இது உருவகம். தானாக மேட்டுக்கு ஏறக்கூடாத ஒரு பெரிய குழியில் விழுந்து அதனை விட்டு ஏற வழிதெரியாது தடுமாறித் துன்புறுகின்ற ஒருவனை மேட்டில் நிற்கிற பிறனொருவன் தனது கைகளால் பிடித்துத் தூக்கி மேட்டில் எடுத்துவிட்டு, துன்பம் நீங்கி இன்புறச் செய்தல் போல, பிறவிப் படுகுழியில் விழுந்து தனது சிறப்பியல்பை உணராமையினால் அதனை விட்டு ஏற வழி தெரியாது மயங்கித் துன்புறுகின்ற உயிரை அவ்வுயிர் தனது பொது

இயல் அறிந்து துதிக்குமாறால் இறைவன் பிறவியினின்றும் நீங்கிக் கரை ஏறுதற்கு வழிகாட்டி, காட்டப்பட்ட வழியிலே அவ்வுயிர் ஏற ஏற அதன் அறிவுக்குத் தக்கவாறு இன்பம் அடையச் செய்கின்றான் என்பது கருத்து. உலக நெறியில் உலக நுகர்வு விரும்பி ஒழுகுகின்ற ஓர் உயிர் அறநெறியில் ஒழுகுமானால் அவ்வொழுகலாற்றுக்குத் தக்கபடி இறைவன் அதனை இன்பமடையச் செய்கிறான். எந்நெறியிலும் உயிரைத் துன்பம் அடையச் செய்தல் இறைவனுடைய கருத்து அன்று. உலகில் உயிர் துன்பம் அடைதல் எற்றுக்கெனில் அத் துன்பத்துக்குக் காரணமாகிய தீவினையை இனிச் செய்யாதிருத்தற் பொருட்டு. இக் கருத்தைத் திருஞானசம்பந்த அடிகள் "மண்ணினல்லவண்ணம் வாழலாம் வைகலும்," என்று திருக்கழுமலம் தேவாரப் பதிகம் முதலாவது பாட்டிற் கூறி அருளினார்.

அருள் தரு கை — இறைவன் எப்பொழுதும் உயிர் இன்பம் அடைதல் வேண்டும் என்ற கருத்துடன் அதற்கு அருளையே செய்கின்றான் ஆதலின் அருள் தரு கை என்றார்.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை

---

"பதிஞானமே ஒரு ஆன்மாவை ஐம்புல அடிமைத் தன்மையினின்றும் விடுவிப்பதாகும்; தன்னலத்தையும் ஆடம்பரத்தையும் கெடுப்பதாகும், உலகப்பற்றை வெறுத்து வனப்பும் நன்மையும் மெய்மையும் நிறைந்த ஒரு பரம்பொருளை நாடச் செய்வதாகும்; தனக்கு நேரும் இடையூறுகளையும் ஏனைய துறைகளில் உண்டாகும் இழப்புகளையும் கருதாமல் உயர்ந்த நோக்கத்துடன் உழைக்கச் செய்வதாகும். எனவே இதுவே "சீரியர்" வாழ்க்கையாம்; மற்றைய இயல்பான வாழ்க்கை "பூரியர்" வாழ்க்கையே."

(கா. சிவ. க.) —ஆபெல் ஜே. ஜோன்ஸ்

---

## சமயமும் தத்துவமும் :
## Religion & Philosophy

திருநாவுக்கரசு நாயனுர் செய்தருளிய

### திருப்பூந்துருத்தித் திருமடம்

[C. K. சுப்பிரமணிய முதலியார் B A]

இவ்வுலகிலே சமய வாழ்க்கையில் மக்களை அவரவர் தகுதிப்படி அறிவுறுத்தி வழிகாட்டிப் பண்டைநாள் முதற் பற்பல சமயங்களிலும் பற்பல ஆசாரியர்கள் வெளிவந்துள்ளார்கள்.

பண்டைச் சின்னங்களின் மேன்மை

பௌத்தம், கிறித்தவம், மகமதியம் முதலியன இந்நாளிலே பெருந்தொகை மக்களாற் பின்பற்றப்படுவன. அவ்வவற்றின் ஆசாரியர்களான கௌதமபுத்தர், கிறித்துநாதர், முகமது நபி நாயகம் இவர்கள் பேராலும், இவர்களது சீடர்கள் பேராலும் பற்பல கோயில்களும், மடங்களும் உண்டு. சைவம், வைணவம் என்பன நம்நாட்டில் பண்டைக்காலந்தொட்டு வழங்கும் பெருஞ்சமயங்களாம். இவற்றிலே வழிபடப்பெறும் பற்பல சமய ஆசாரியர்கள் பேராலும் பலப்பல மடாலயங்கள் உண்டு. திருவாவடுதுறைக் கைலாய பரம்பரை ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளாதீனம், காஞ்சீபுரம் மெய்கண்ட ஆதீனம் ஞானப்பிரகாச தேசிகர் மடம், திருத்தருமபுர ஆதீனம் மதுரைத் திருஞானசம்பந்தமூர்த்தி ஆதீனம், காஞ்சீபுரம் மெய்கண்ட ஆதீனம் ஞானப்பிரகாச தேசிகர் மட', திருத்தருமபுர ஆதீனம் மதுரைத் திருஞானசம்பந்தமூர்த்தி ஆதீனம் முதலியனவும், இராமநுசர் மடம், சங்கராசாரியர் மடம் முதலியனவும் காண்க மேலே கூறிய சமயாசாரியர்கள் தங்கள் வாழ்நாளிலே தாமாகவே செய்து தாபித்து வாழ்ந்துவந்த மடங்கள் அநேகமாய் இல்லை என்றே சொல்லலாம்.

இக்காரணத்தைக்கொண்டு பார்ப்போமானுல் மேலே தலைப்பில் காட்டிய திருப்பூந்துருத்தி (தஞ்சாவூருக்குப் பக்கம் கற்சாலையில் 5 நாழிகையில் உள்ளது) யிலே உள்ள திருநாவுக்கரசு

நாயனார் திருமடமானது இவற்றிற்கெல்லாம் வேறாய்த் தனிச் சிறப்புடையதாம். என்னை? அத்திருமடம் சைவசமய பரமாசாரியர்கள் நால்வரில் ஒருவராய் விளங்கும் திருநாவுக்கரசு நாயனார் என்ற அப்பர் சுவாமிகள் திருப்பூந்துருத்தியிலே தங்கித் தரிசித்துத் திருத் தொண்டுகள் செய்து பலகாலம் அதில் வசித்த நாளில் இத்திருமடத்தைத் தாமே உண்டாக்கித் தாபித்து அதில் வாழ்ந்து வந்தனர்.

அப்பர் சுவாமி களது திருமடம்

"அங்குறையுந் தன்மை வேண்டி நாமடி போற்றுவதென்று
பொங்கு தமிழ்ச்சொல் விருத்தம் போற்றிய பாடல் புரிந்து
தங்கித் திருத்தொண்டு செய்வார் தம்பிரா னாருள் பெற்றுத்
திங்களு ஞாயிறுந் தோயுந் திருமடம் ஆங்கொன்று செய்தார்"

என்று பெரிய புராணத்தால் அறிகிறோம். அத்திருமடத்தின் நிலம் அவர்தம் திருப்பாதங்களைப் பன்னாளும் தீண்டப் பேறு பெற்றுத் தலையிற் சூட்டிக்கொண்டது. அவர்தம் திருக்கண்கள் அதனைப் பல்கால் நோக்கி பரிசுத்தமாக்கின. அவர்தம் திருக்கரங்கள் அதனைப் பன்னாளும் தீண்டிப் பரிசதீக்கை செய்தன. அவரது திருவுழவாரப்படை வைத்த இடமும், அவரது அமலமாகிய தூயதிருமேனி பள்ளிகொண்டருளிய இடமும் அதனுள் உண்டு. மேலும் அத்திருமடமும் அதனைச்சூழ்ந்த சுற்றிடமும் வாகீசத் திருவடிகளின் தூய எண்ணங்களால் தூய்மை செய்யப் பெற்றன. அந்த ஆசாரியர் பெருந்தகை இத்திருமடத்தைத் தாமே செய்வித்து இங்கே பலகாலம் வாழ்ந்தபோது தமது நீண்ட பெருவாழ்க்கையின்றிறத்தையும் சிவபெருமான் தமக்குச் செய்த பெருங்கருணைத் திறத்தையும் எண்ணி எண்ணி "வார்ந்த கண்ணீர் மழை சொரிந்து" பலகாலம் இதில் வசித்தருளினர். இங்கே தங்கியிருந்த நாளில் அவர் அநேகம் அரிய தேவாரங்களை அருளியுள்ளார்.

"பல்வகைத் தாண்டகத்தோடும் பரவுந் தனித்தாண்டகமும்
அல்லலறுப்பவர் தானத்தடை வுதிருத்தாண் டகமும்
செல்கதி காட்டிடப் போற்றுந் திருவங்கமாலையும் உள்ளிட்டு
எல்லையில் பன்மைத் தொகையும் இயம்பினர் ஏத்தியிருந்தார்"

என்பது பெரிய புராணம்.

இத்திருமடத்தை உண்டாக்கி இதிலே சுவாமிகள் எழுந்தருளியிருந்த காலத்திலேதான் திருஞானசம்பந்த நாயனார் தமது பாண்டிநாட்டு யாத்திரையை முடித்துச் சமணரைவென்று

சைவத்திரு நீற்று நெறியைத் தாபித்து மீண்டுசோழவள நாட்டிற்கு எழுந்தருளியபோது திருநாவுக்கரசு சுவாமிகளைக் காணும்பொருட்டு வந்தருளினர். அந்த நற்செய்தி கேட்ட வாகீசமூர்த்திகள் ஞானத் திருமுனிவரை எதிர் கொள்ளச்சென்று வழியிலே பரிசனங்கள் 'சூழுமிடைந்திடு நெருக்கிற் காணுமே தொழுதருளி' அவரது முத்துச் சிவிகையைத் தாங்குவாருடன் தாங்கிவந்து இத்திரு மடத்திலே அவரை வரவேற்று வந்து இருத்தி இருபெருமக்களும் உடனுறைந்து தாம் திருமறைக்காட்டிலிருந்து பிரிந்த பின்னர் நிகழ்த்திய யாத்திரைகளைப்பற்றி ஒருவர் ஒருவரிற் கலந்துபேசிக் களித்தனர். அவர் சென்று தரிசித்து வந்த பாண்டி நாட்டிற்கு வாகீசரும் இவர் சென்று தரிசித்த தொண்டை நாட்டிற்கு அவருமாகப் புறப்பட்டுச் சென்றருளினர். இவ்விரண்டு பரமாசாரிய மூர்த்திகளும் கடைசி முறையாக மூன்றாவது முறை சந்தித்து அளவளாவிப் பிரியா நண்புரிமையுடன் பிரிந்த திருமடம் இதுவே. வாகீச மூர்த்திகள் தாமே செய்து தாபித்ததும், பன்னாள் வசித்ததும், வாகீசர், சம்பந்தர் என்ற இருபெரும் ஆசாரிய மூர்த்திகளும் தங்கியிருந்தருளப்பெற்றதுமாகிய பெரும்பேறு இத்திருமடத்திற்கே சிறப்புரிமையாம். சைவத்திருமுறையாலே துதிக்கப்பெற்ற பெருமையுடையது இத்திருமடமாம். இத்தகைய சிறப்பு வேறு எந்த மடத்திற்குள்ளது? இத்திருமடம் திருப்பூந்துருத்தியில் ஆலயத்திற்குக் கீழ்புறம் இருக்கின்றது.

**மடத்துச் சரிதம்.**

இப்போது இந்த மடம் ஒரு செங்கல் குவியலாகக் காணப்பெறும். அதனுள் மனிதர்கள் சென்று பார்க்க இயலாது. வெளியிலிருந்து பார்த்தால் சில திருவாயில் நிலைகள் காணப்படுகின்றன. மேல் மாடியோ அல்லது ஒரு உயர்ந்த தளமோ இருந்ததாகத் தெரிகிறது. அவ்விடம் மரம் செடிகள் முளைத்து மனிதர் உட்புகமுடியாதபடி இருக்கிறது. சைவமக்கள் இதனை எவ்வகையினும் கவனித்ததாகத் தெரியவில்லை. இதர சமயத்தவர்களான நமது சகோதரர்களைப் பாருங்கள். முகமது நபி வாழ்ந்த மக்கா, மதினாவுக்கும் ஏசுகிறித்து வாழ்ந்து பிரசங்கித்த எரோசெலமுக்கும், கௌதமபுத்தர் தியானம் செய்த புத்த கயாவின் போதிக்கும் அந்தந்த சமயத்தவர்கள் எத்தனை ஆர்வத்துடன் தலயாத்திரை செய்துவருகிறார்கள்? அந்த இடங்களை எவ்வளவு கௌரவமாகக் காப்பாற்றி வருகிறார்கள்?

**தற்கால நிலைமை**

சைவர்களாகிய நாம் நமது சமயாசாரியர் தாமே செய்து தாபித்து வாழ்ந்த இந்தத் திருமடத்தை எப்படிக் காப்பாற்றி

வைக்கிறோம்? இதைவிட வருந்தத்தக்கது வேறில்லை. இத்திரு மடத்தைச் செப்பனிட்டுப் பொன் புதைந்து வைத்தாலும் இதற்குத்தகும் என்று சொல்வேன். செப்பனிடுதல் என்றால் அந்த மடத்திற்காணும் பொருள்களை முழுவதும் அப்புறப்படுத்தி எறிந்துவிடுதலோ அல்லது முழுதும் பழையவற்றை மாற்றிப் புதிதாய்ச் செய்து விடுதலோ என்றர்த்தமல்ல. அப்படிச் செய்தல் தகாத காரியம்.

தேவாலய மடாலயத் திருப்பணி என்றால் பழைய மூர்த்தி உட்பட எல்லாவற்றையும் புதிதாய் வேறு செய்து விடுதல் என்று இந்நாளிற் பலர் எண்ணியும் செய்தும் வருகிறார்கள்.

**திருப்பணி அவசியம்**

அது பெருந்தவறு. பழைய அமைப்புகளைக் கலைத்தல் கூடாது. பழையகட்டிடங்களை இயன்றவரையில் பழையபடியே வைத்துக்கொண்டு செப்பனிடுதல் வேண்டும். இந்த மடாலயத்தின் பழைய சுவர்கள் தளம்-திருவாயில்-நிலைகள் முதலியவை அப்படியே இடப்பெயர்ச்சியின்றிக் காப்பாற்றப் பெறுதல் வேண்டும். அதில் காணும் ஒவ்வொரு செங்கல் துண்டும் விலை பெற்றது; நமது ஆசாரிய மூர்த்திகளது தொடர்பினாலே புனித மாக்கப் பெற்றது. ஆதலின் அங்குக்காணும் கற்குவியலில் கிடைக்கும் ஒவ்வொரு சிறு செங்கற்றுண்டும் பொன்னேபோற் காத்தற்குரியது. அவைகளை எல்லாம் அந்தக் கட்டிடத்தை உள்ளது உள்ளவாறே செப்பனிடப் பயன் படுத்தவேண்டும். இவ்வாறு அத்திரு மடக் கட்டிடத்தைச் செப்பனிட்டு அதன் சுற்றிடத்தையும் சுத்தமாக்கி நல்வேலியிட்டு வைத்தல் வேண்டும். திருநாவுக்கரசர் திரு உருவமும் உயர்ந்த ஒரு தனியிடத்தில் அமைத்து வழிபடப் பெறுதல் வேண்டும். அதை அடுத்து திருஞானசம்பந்த நாயனர் திருவுருவத்தையும் தாபித்து வைத்தல் வேண்டும். இத்திருமடத்தை ஒவ்வோர் சைவசமயியும் தமிழனும் பெரும் யாத்திரைத் தலமாகக்கொண்டு ஒழுகுதற்குரியனுவான். இத்திருமடத்தின் மூலம் அந்த ஆசாரியமூர்த்திகளின் உபதேசங்கள் உலகிற் பரவச் செய்யவேண்டும். இத்திருமடம் சைவத்திற்குக் கண்போன்று விளங்குதல்வேண்டும்.

இத்திருமடம் இப்போது எனது அன்பார்ந்த நண்பர் உரிமையாளர் திரு. தங்கவேல் முதலியார் அவர்கள் வசமாக உள்ளது. சைவ சமயிகள் இந்தப் பெரும் புண்ணியத்தில் ஈடுபெறுதற்கு அவர்கள் எல்லா வகையிலும் உதவி செய்வார்கள் என்று நம்புகின்றேன்.

(கோங்குமலர்)

---

# இலக்கணமும் இலக்கியமும்:
## Language & Literature

### "செந்தமிழே தீர்க்க சுவா கா!"

[உயர்திரு. சுத்தானந்த பாரதியார்]

### க. எழுக தமிழர்!

நல்லருட்புலவர் நக்கீரர் அன்று ஒரு மந்திரம் உருவிட்டார்-"சேந்தமிழே தீர்க்கசுவா கா!". இன்று இதே மந்திரத்தை ("செந்தமிழ்ச் செல்வியே நீடு நீவாழி!" எனும் மந்திரத்தை) ஒவ்வொரு தமிழனும் உருவேற்றுங்காலம் வந்துள்ளது. நமது கடவுளன்னையின் அருளறிவுக்கொடி மேற்கும் கிழக்கும் போற்றி வணங்க உலக மொழிமன்றில் ஓங்கிப்பறக்கவேண்டும். முன்னே சிவனடியார் எழுந்து அருட்பணி புரிந்ததுபோல் இன்று தமிழடியார் எழுந்து தாய்ப்பணி புரிக! படை படையாகத் தமிழ்ப்பணியாளர் வேண்டும். மனத்திட்பமும் வினைத்திட்பமுங் கொண்டு வீறுடன் எழுக; இத்தொல்லிளங் திருவைத்தொழுக! அன்பர்களே, அரும்பணி, பெரும்பணி, தமிழுக்கு உலகில் பெருமை தரும்பணி அணியணியாக உமது ஆற்றலைக் கூவியழைக்கிறது. பேடி கை வாள்போல இத்தமிழ் நமது பெருமைக்கு அருமையான கருவியாயிருந்தும் பயனற்றதாவதா! தாழாது உழைத்தால் ஊழையும் உப்பக்கங்காணலாம்! தமிழுக்காக உங்கள் உள்ளத்தில் உயர்ந்த எண்ணங்களை எண்ணுமின்; உறுதியோடெண்ணுமின்.

"எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்"
"வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்பம்;
மற்றைய வெல்லாம் பிற"

தமிழீர் இன்று நமது தமிழ்ப்பணி தூங்காது செய்யும் வினை.

### உ. சுற்று நோக்குக!

சுற்றுலகைப் பார்மின்! அத்லாந்திக் நாகரிகம் அலைபுரண்டு எழுந்து வீறிடுகின்றது. ஆங்கிலமும், பிரெஞ்சும், ஜர்மனியும் யாமே அருங்கலைகளுக்கு அளவுகோலென மார்தட்டுகின்றன;

பாராள் மன்றங்களைத் தாமே யாளுகின்றன. புதுப்புதுத் துறைகளிற், புதுப்புது செல்வக்கலைகளிற் பொங்கிப் பொலிந்து தலைநிமிர்ந்து வெற்றிநடை நடக்கின்றன. தமிழ் எங்கே? உள்நாட்டில், வங்கமொழி இரவீந்திரக்குழலுவந்து, தங்கச்சதங்கை கலீரென அணிநடை பயிலுகிறது.

சுமார் ருoo ஆண்டுகளுக்கு முன்பே தலைதூக்கிய வங்கமொழிக்கு உலகில் ஒரு மதிப்புள்ளது; ஒரு இடமுள்ளது. ஹிந்திமுரசு திசையைப் பிளக்கிறது. இவ்விரண்டும் மேலைமொழிகளைப் பார்த்தும், பேர்த்தும், போர்த்தும் விரைவாக முன்னேறி உலகமொழி மன்றில் உரிய இடம் பெற்றுவிட்டன. மன்னர் புன்னகையில் கன்னடமும் மலையாளமும் முன்னேறுகின்றன. தெலுங்கு புதுநயம் குலுங்குகிறது. சுற்றும் வெற்றிமுரசம்; பேர்கலைப்புரட்சியின் ஆர்கலி. இவற்றிடையே இறைவனுடனறிவு மொழி பேசுதமிழெங்கே! அமுதத்தமிழின் அருள்யாழெங்கே! காலக்கற்பகம் கோலத் திருமலர் குலுங்குகிறது; பழங்கனி குலுங்கும் இளந்தமிழ் இன்று மலடானதோ! இந்நிறைமொழிக்கு, அருட்புலவர் வாய்தவழ்ந்த மறை மொழிக்கு, வெளியுலகில் எவ்வளவு மதிப்புள்ளது? எல்லையற்ற பரம்பொருள் போல் என்றுமுள்ள இவ்வருள்மொழி வேங்கடத்திற்கும் குமரிக்குமிடையே எத்தனை நாள் அடைபட்டிருப்பது?

"வேந்தரெலாம் போற்றுகலை வெற்றிச்செங் கோல்பிடித்த
தீந்தமிழே தீர்க்கசுவா கா"

## ௫. அக்காலம்

அக்காலம் முத்தமிழரசி வித்தகர் வணங்க சங்கப்பலகையில் வீற்று அறிவுச் செங்கோல் தாங்கினாள்; சேரசோழபாண்டிய மன்னரின் அன்புத்திறையை வாங்கினாள். தனது இனிமையால் இறைவனை மனங் கனிவித்தாள். கண்ணுதற் பெருங் கடவுளும் அவள் கழகத்திருந்து பண்ணாராய்ந்தான். சுமார் ௬ooo ஆண்டுகட்குமுன்பே, இலக்கணவரம்பில் இலக்கியப்பயிர் வளர்த்து உலகிற்கு ஏராளமான செவிவிருந்தளித்தாள்; தொண்டர் நாதனைத் தூதிடைவிடுத்தாள்; முதலையுண்டபாலனை யழைத்தாள்; எலும்பைப் பூம்பாவையாக்கினாள்; மறைக்கதவைத் திறந்தாள்; கல்லைக் கலமாக்கினாள்; நீர்றறையை இளங்காற்றெனக் குளிர்

வித்தாள்; நஞ்சை யமுதாக்கினாள்; வெறி கொண்ட யானையும் தன் சொல்முன் வணங்கச் செய்தாள்; அரவு கடித்திறந்தவனை எழுப்பினாள்; பாண்டியன் வெப்பை நீற்றுப் பதிகத்தாற் போக்கினாள்; சூலையை மாற்றினாள்; எரியையும் வெள்ளத்தையும் எதிர் வாதங்களையும், பகைவர் துன்பங்களையும் எதிர்த்து வென்றாள். அப்பர், அழகர், முத்தமிழ்விரகர், மணிமொழியார், சேக்கிழார், அருணகிரியார், தாயுமானார், வள்ளலார், நம்மாழ்வார், பெரியாழ்வார், ஔவை, ஆண்டாள், காரைக்காலம்மையார் போன்ற பெரியார் திருநாவுகளில் தனது மந்திரத்திறனை விளக்கினாள்!

இன்ப மாகு மிறைவன் புதல்வி
 இனிமை யென்னு மிளந்திருச் செல்வி
முன்பு முப்பெருஞ் சங்க முதல்வி
 முத்து முத்தெனு முத்தமிழ் வாணி
தென் பரவை திருப்புக ழார்க்கத்
 திக்கெ லாமிசை மிக்கச் சிறந்தாள்
அன்ப ருளறி வின்ப வரசி
 யன்னை வாழி யருந்தமிழ்த் தேவி!

## ௪. இக்காலம்

தாயே உனது சொல் மந்திரம்; அன்று எலும்பைப் பெண்ணாக்கினை; இன்று ஆற்றலும் வீறுமழிந்து சாம்பிக்கிடக்கும் இக்காலப்-பெண்ணை உன்னருளறிவிலங்கும் கோலத்திருவடிவாக்கு; அன்று இறந்தவனை எழுப்பினை; இன்று உணர் விழந்த மாந்தரைச் சுறீரெனத் தமிழுணர்வுகொண்டெழச்செய். அன்று மறைக்கதவைத் திறந்தாய்; இன்று உன் மைந்தரின் மனக்கதவைத் திற. அன்று பாம்பின் நஞ்சை மாற்றினை; இன்று உன் மகாரைத் தீண்டிய பிறமொழி வீம்பை மாற்றியருள். தாயே அன்று நின் சொல்வளஞ் செழித்த இடமெல்லாம் கோயிலானது. இன்று நின் கோயில்களில் நினது பொன்மணிச் சொல் உறங்குவதேன்? தமிழே நின் அருள்வாய் மலர்ந்தருள்! நின் மைந்தர் நிலைக்கு இரங்கியருள். நின் பழமையையே பேசும் கிளிப்பிள்ளைகள் உனக்குப் புது நடம் தேடுவதில்லை. சிலர் புதுமயக்கில் விழுந்து பழைமையைப் பழிக்கின்றனர்; தமது மனையில், தாயின் பெருமையறியார் பிறர்மொழி பேசித் தமிழ்மொழி மறப்பர்.

தனிச் செங்கோற் செல்வியே, நின்னிசை உறங்கலாமா? ஒரு புறம் ஓரே 'கும்பகர்ணசமாதி'; பேச்சுமூச்சிலாது, சிந்தனையில்லாது, உணர்வில்லாது, வந்தோம், இருந்தோம், உண்டோம், உறங்கினேம், கூடினேம், ஈன்றேம், மாண்டோம் என்னும் பெரும்பாலார்; மறுபுறம் கூட்டங்கூடுவர், பேசுவர், கைவீசுவர், விருந்துண்பர், நகைப்பர்—பிறகு அவர்கள் ஆர்வம் வெந்நீர்போல ஆறிப்போம்; மற்றொருபால் இத்தமிழில் என்ன இருக்கிறதென்று ஆங்கிலச் செருக்கு நீங்காது அளப்பவர்; மற்றொரு புறம் கொச்சைபேசி, நின்னை எளிமைப் படுத்துவோர். தமிழின் பெயரால் தமிழைக் கெடுப்போர் எத்தனை? இவர்களை நோக்கியே

"பல்சான்றீரே, பல் சான்றீரே
நல்லது செய்தல் ஆற்றீராயினும்
அல்லது செய்த லோம்புமி னதுதான்
எல்லார்க்கு முவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉ நெறியுமா றதுவே"

என்றுரைப்பாயாக.

பார்ப்பனர் வீட்டில் பேசுவது போலவே தாள்களிலும், சுவடிகளிலும் எழுதுவதே இளந்தமிழ், எளிய தமிழ், என்பார் ஒருபால்; தமிழைப் புதுக்குகிறார்களாம் !!!

"ஆன்றோர் அருட்புலவர் அன்புப் பெருக்கில்வளர்
தேன்றமிழே தீர்க்க சுவாகா!

என்று இவர்களை நோக்கி ஒரு தீர்க்க சுவாகா போடுவோம்!

(தொடரும்)

---

## தமிழகம்

[திரு. S. நடராஜன் அவர்கள், B A.]

### தமிழரின் தனிச் சிறப்பு

(முன் ௩௫௪-ம் பக்கத் தொடர்ச்சி)

39. தலைச்சங்க காலத்துக்கு முன்னரே தமிழரின் நாகரிகம் தலைசிறந்து விளங்கிற்றென்றால் அதன் பெருமையை யாரே கணக்கிட வல்லார். தமிழர் உலகியற்றுறை, ஆன்ம உணர்ச்சித் துறைகளில் தலைசிறந்த நாகரிகம் பெற்று, நாகரிக ஒளியைப் பிற நாடு

களில் பரப்பினர். அவர்களின் தனிப் பெருமை, இறை வழிபாடும், இன்னுயிரைத் தன்னுயிராய்க் கருதும் செம்மையு மேயாம். உலகியற்றுறையில் தமிழர் வல்லுநர் என்பது "வள்ளு வன் தன்னை உலகினுக்கே *தந்து வான்புகழ் கொண்டமையால்" பெறப்படும். அன்னோர் ஆன்ம உணர்ச்சியையே (Spiritual civilisation) குறிக்கோளாகக் கொண்டனரென்பது பின் வரு மவற்றால் பெறப்படும்.

'கொள்ளேன் புரந்தரன் மாலயன், வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடியா ரொடல்லால் நரகம் புகினும்
எள்ளேன் திருவருளாலே இருக்கப் பெறின் இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லா தெங்கள் உத்தமனே.''

—திருவாசகம்

"தந்தையார், தாயாருடன் பிறந்தார், தாரமார்,
　　புத்திரரார் தாந் தாமாரே,
வந்தவா றெங்ஙனே போமாறேதோ மாயமாமிதற்
　　கேதும் மகிழ வேண்டாம்
சிந்தையீ ருமக்கொன்று சொல்லக்கேண்மின் திகழ்
　　மதியும்வாளரவுந் திளைக்குஞ் சென்னி
எந்தையார் திருநாமம் நமச்சிவாயஎன்
　　றெழுவார்க் கிருவிசும்பி லிருக்கலாமே.''

—அப்பர் தேவாரம்

"பூதமைந்து நிலையிற் கலங்கினு
மாதொர் பாகர் மலர்த்தாண் மறப்பிலா
ரோது காதலுறைப்பி னெறி நின்றார்
கோதிலாத குணப் பெருங் குன்றனார்.''
"கேடு மாக்கமுங் கெட்ட திருவினா
ரோடுஞ் செம்பொனு மொக்கவே நோக்குவார்
கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்.''

"இறவாத வின்பவன்பு வேண்டிப் பின்வேண்டுகின்றார்
பிறவாமை வேண்டுமீண்டும் பிறப்புண்டே லுன்னையென்று
மறவாமை வேண்டுமின்னும் வேண்டுநான் மகிழ்ந்துபாடி
யறவாநீயாடும்போ துன்னடியின் கீழிருக்க வென்றார்.''

—சேக்கிழார்

* திருக்குறள் உலகில் உள்ள எல்லா முன்னேற்றமடைந் துள்ள மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட் டுள்ளமையைக் கவி சுட்டு கிறார்.

"கலையெலா முணர்ந்தானேனுங் கரிசறத் தெளிந்தானேனு
மலையென வுயர்ந்தானேனு மனமய லகன்றானேனு
முலகெலாம் புகழப்பல்லோர்க் குதவிய கையனேனு
மிலகிய விரக்கமின்றே லெழுநர கடைவனன்றே."

—கந்தபுராணம்

"சதுர்மறை யாரியம் வருமுன் சகம்முழுதும் நினதாயின்
முதுமொழி நீஅனுதியென மொழிகுவதும் வியப்பாமே."
"கடையூழி வருந்தனிமை கழிக்கவன்றோ அம்பலத்துள்
உடையா ருன்வாசகத்தில் ஒருபிரதி கருதினதே."

—மனோன்மணீயம்

"சூழ்கலி நீங்கத் தமிழ்மொழி யோங்கத்
துலங்குக வையகமே."
"தொல்லை வினைதரு தொல்லை யகன்று
சுடர்க தமிழ் நாடே."

—பாரதியார்

---

## தமிழ்மொழியின் ஒலிகளும் எழுத்தும்

### [ஈப்போ, திரு. தியாகராயன் அவர்கள்]

(முன் ௩௨௩-ம் பக்கத் தொடர்ச்சி)

புத்தோசைகளை இவ்வாறு குறிப்பது போதும் என்பதற்கு அத்தாட்சியாக, ஆங்கிலத்தில் சீனிவாச ஐயங்கார் எழுதிய ஓர் விஷயத்தை, இப்புத்தொலிகளுடனும், இக்குறியினுடனும் கீழே தமிழில் எழுதிக் காட்டப்பட்டிருக்கிறது:—

த·ஸ் தி· ஸ்டேட்மெண்ட் ஆவ்· சிவஞான சுவாமி தெ·ட் "தொல்லாசிரியர் வழக்கே பிற்காலத்து வேறுபட வழங்கப்படு மாயின் அவ்வழக்கு இலக்கணத்தோடு பொருந்தாதென விலக்குக" இச். நாட் ஒன்லி அன்சயன்டிவி·க் ப·ட் ஆல்ஸோ இன் ஆப்ஸ்டினேட் க்ளிங்கிங் டு தெ·ட் ஓல்ட். ஸுபர்ஸ்டிஷன் விச் பி·லீவ்ட்· தி· என்ஷியன்ட்ஸ் டு ஹாவ் டிஸ்·கவர்ட் ஆல் விச்·டம்.

(Thus the statement of Sivagnana Swami that தொல்லாசிரியர் வழக்கே பிற்காலத்து வேறுபட வழங்கப்படு மாயின், அவ்வழக்கு இலக்கணத்தொடு பொருந்தாதென விலக்குக is not only unscientific but also an obstinate

clinging to that old superstition which believed the ancients to have discovered all wisdom.

(Tamil Studies)

Note:—மேலே கோடுள்ள எழுத்துக்களை சேர்த்தொலிக்க வேண்டும்.)

An என்பதை 'இன்' என குற்றிகர குறி கொடுத்தெழுதப்பட்டது. இக்குற்றிய விகரம் Sad, Nad, என்னும் மொழிகளிலுள்ள A போல் உச்சரிப்பதென முன்னம் காட்டினேன்.

இவ்வாறு இப்புத் தோசைகளைப் புகுப்பதால் தமிழில் அதிக ஒலிகளும் எழுத்துக்களும் உண்டாகுமென்னும் ஐயம் வேண்டாம்.

தமிழ் மெய்யெழுத்துக்கள் 18-ல் ண, ன, ள, ற, ழ, ஞ என்னுஞ் சிறப்பெழுத்துக்களையும் மிகைப்பட்ட வெழுத்துக்களையும் நீக்க மீதி 12 எழுத்துக்களே உள்ளன. இவைகளுடன் வடமொழியிலிருந்து எடுத்துக்கொண்ட ஜ, ஸ, ஷ, ஹ என்னும் நான்கு எழுத்துக்களையும், புதிதாகப் புகுக்கும் ப', ட', த', க', ச', ழ', வ', என்னும் ஏழு எழுத்துக்களையுஞ் சேர்க்க மொத்தம் 23 எழுத்துக்களாகும்.

Pitman's Shorthand Instructor என்னும் நூலில் இந்த 23 ஒலிகளுடன் W என்பதையுஞ் சேர்த்து 24 மெய்யொலிகளை கொடுத்திருப்பதையும் காண்க.

மேற்கூறிய இவ்வேழும் புத்தோசைகளெனக் கொள்ளக் கூடாது. எனெனில் க, ச, ட, த, ப, என்பவைகளின் மெல்லொலிகள் தமிழ் மொழியில் உள்ளதாக முன்னம் எடுத்துக் காட்டினேன். எனவே ஆங்கிலத்தைத் தமிழில் ஒலிக்க மூன்று மெய்யொலிகளே அவசியம். அதாவது ழ., za as in azure, vision, வ' fa, ச. as in is, dogs.

இவ்வாறு 3 புதிய எழுத்துக்களால் வேற்று மொழியின் ஒலிகளைத் தமிழில் குறிப்பது மிகையாகாது. அன்றியும் இவ்வெழுத்துக்களும் ஆங்கிலம் அல்லது வடமொழியின் சொற்களைத் தமிழில் எழுதுவதற்கே கையாளப்படும். இத்தன்மையால் இச்சொற்கள் திசை மொழிகளென்பதைத் தாமே குறிக்கும்.

இவ்வாறு இவ்வெழுத்துக்களைத் தமிழில் புகுப்பதால் தமிழ் மொழி மேலுஞ் சிறந்து விளங்கும்.

## இலக்கணம்

தமிழ் இலக்கணத்தின்படி சிற்சில வெழுத்துக்களே மொழி முதலிடைகடைகளில் வருமென விதிகளுண்டு. இப்புது மொழியையும் அதற்கேற்ற புத்தோசைகளையும் தமிழில் புகுப்பதானல் மேற்கூறிய விதிகளுக்கு முரண்படும்; எனவே இலக்கணம் வல்லோர் ஆராய்ந்து இவற்றிற்கேற்ற விதிகள் அமைக்க வேண்டும்.

தமிழில் வெகுவாக இரண்டிற்கு மேற்பட்ட மெய்கள் சேர்ந்தொலியா. ஆங்கிலத்தில் அவ்வாறு ஒலிக்கும்.

முன்பு N என்னும் ஆங்கிலவொலிக்கு இணையாகத் தந்ந கரத்தைக் குறிக்கப்பட் டிருப்பினும் ஆங்கிலச் சொற்களைத் தமிழ் எழுத்துக்களால் எழுதுங்கால் டண்ணகர றன்னகரங்களையும் நம் இலக்கணத்திற்கேற்ப உபயோகப் படுத்துவது தவருகாது. உதாரணம் ஸ்டேட்மெண்ட், மன்ரோ (Munro) ப்ரௌன் Brown.

---

## கல்லாதவர்

(1) கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர். (குறள் 393)

(2) உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லாதவர். (குறள் 395)

(3) உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர். (குறள் 406)

(1) கண்ணுடைய ரென்று உயர்த்துச் சொல்லப்படுவார் கற்றவரே, மற்றைக், கல்லாதவர் முகத்தின் கண் இரண்டு புண்ணுடையர், கண்ணிலர்.

(2) "பிற்றைநிலை முனியாது கற்றல் நன்று" ஆதலினல், செல்வர்முன் நல்கூர்ந்தார் நிற்குமாறுபோலத் தாமும் ஆசிரியர் முன் எக்கற்று நின்றுங் கற்றார் தலையாயினர், அந்நிலைக்கு நாணிக்கல்லாதவர் எஞ்ஞான்று மிழிந்தாரே யாவர்.

(3) கல்லாதவர், காணப்படுதலான் இலரல்லர், உளரென்று சிலர் சொல்லுமளவினராத லன்றி, தமக்கும் பிறர்க்கும் பயன்படாமையால், விளையாத களர் நிலத்தோ டொப்பர்.

ஓரத்தி-எம். முனுசாமி ஆச்சாரி.

# மாணவர் பகுதி

## ஔவையாரின் அமுதமொழிகள்

### ஒற்றுமை நலம்

[திரு. சேலை. சகாதேவமுதலியார் அவர்கள்.]

ஒற்றுமையென்னும் சிறந்த மனநலம் ஐரோப்பா அமெரிக்கா கண்டங்களில் தலைசிறந்து விளங்குவதைக் காதாலும் கேட்கின்றோம், கண்ணாலும் பார்க்கின்றோம். ஏனைய கண்டங்களிலும் இவ்வொற்றுமை வரவர வளர்ச்சிபெற்றே வருகின்றது. பெருங் கண்டமாகிய ஆசியாவின்கண்ணுள்ள சிறியதொரு கண்டம் போன்ற நமது இந்தியாவின்கண், ஒற்றுமை நலத்தை வளர்க்கக் கூடிய மனப்பான்மைகளினும் அதனைக் குன்றச் செய்யத்தக்க எதுக்களே மக்கள் மனத்தின்கண் மலிந்துகிடக்கின்றன. 'சாதி இரண்டொழிய வேறில்லை... இட்டார் பெரியோர் இடாதார் இழி குலத்தோர்...' என்று ஔவையார் வாக்கு பறையறைவிக்கவும், அச்சாதி பேதமானது பொதுவாக நமது நாடெங்கும், சிறப்பாக நமது தென்னிந்தியாவிலும் நாட்டின் பற்பல துறைவளர்ச்சிகளைக் கீழறுத்துக்கொண்டு வேர்ப்புழுவாக மக்களினிடையில் பலப்பல வேறுபாடுகளை விளைவித்துக்கொண்டிருக்கிறது. இதனையடுத்து, அச்சாதி வேறுபாடுகளைப் பின்னும் பெருக்க நாட்டிற்குள் ஒன்றின் பின் ஒன்றாக, ஒன்றிற்கு மேற்பட்ட பற்பல மதங்கள் நிறுவப்பட்டு, அவைகளுக்குள் உட்சமயங்களெனவும், புறச்சமயங்களெனவும் உட்புறச் சமயங்களெனவும் பெருகிப் பெருகித் தேசத்தில் மக்களுக்குள் ஒன்றுமையே ஓங்கி வளரச்செய்தன. இவ்வொற்றுமையின்மை காரணமாகவே வெளிநாட்டு அரசாட்சிகளும், அவர்தம் மதங்களும் போராட்டஞ் சிறிதுமின்றிப் புகுந்துகொள்ளலாயின. 'ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு......நல்லறமும் நட்பும் நன்றென்றிரு......' என்று முழங்கும் மறைமொழியை மக்கள் மறந்தேவிட்டனர். இன்னும் மக்களுக்குள் மலிந்துகிடக்கும் சின்னஞ்சிறு வேறுபாடுகள் எண்ணுக்கடங்கா. அவைகளையெல்லா மெடுத்துக் காட்டுவதற் கிங்கிடமின்று. அவைகளை யெல்லாம் வேரோடு களையப் பொது மக்களிடம் அறிவு புலப்பட வேண்டும்,

அவ்வறிவு புலப்படுவதற்கு அடிப்பீடமாகிய கல்வி அவர்கட்குப் போதுமானவளவாயினும் பொருந்தியிருக்கவேண்டும். பொது மக்களின் கல்வியறிவைப் பற்றி அரசாங்கப் பணியில் அமர்ந்துள்ள கல்வியறிவாளர்களாகிய நமது மக்கட்கு அக்கரை யிருப்பதாக எவ்வகையிலும் புலப்படவில்லை. இப்போதைய அரசாட்சி நிலையில் ஏழைமக்கள் கல்வியிற் போதுமான புலமை யடைவதற்காவது வழிகள் இருப்பதாகக் காணப்படவில்லை. இதனை அறிந்துகொள்வதற்கு வேறு கரி வேண்டா; நாட்டுப்புறக் காட்சியே சாலும். மற்றும் பள்ளிக்கூடங்களில் ஆங்கிலம் முதலாம் மொழியென்றும், தமிழ் முதலிய நமது நாட்டுமொழிகள் இரண்டாவதானவை யென்றும் ஏற்பாடு செய்திருப்பது தன்மரியாதையின் பாற்படுமோ!

ஒற்றுமை நலமானது உறையும் வீட்டின் முளைத்து, ஊரின் வளர்ந்து, நாட்டிற் பூத்து, தேசத்திற் காய்த்து, உலகத்திற் பழுக்க வேண்டும். இம்முறைபற்றி ஆத்திசூடி, கொன்றைவேந்தன் ஆகிய சிறு நூல்களின்கண் பேருண்மைகளைப் பெய்துவைத்து, பொது மக்கட்கு அறிவு புகட்டிய முதுமைப்பிராட்டியின் மூதறிவினை என்னென்பேம்!

> அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்
> தாயிற் சிறந்தொரு கோயிலு மில்லை
> தந்தைசொன் மிக்க மந்திர மில்லை
> தந்தை தாய்ப் பேண்
> மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்.

இவ்வாக்குக்கள் குடும்ப ஒற்றுமையைக் குறிக்கும். முதன்முதல் தாய் தந்தை தன் முன்னுவாருடன் ஒருவன் அன்பும் பணிவுங் கொண்டு ஒற்றுமைப்பட் டிருக்கவேண்டும். இவ்வொற்றுமைப் பண்பு வரவர வளர்ந்து அடுத்த சுற்றத்தார்மாட்டுச் செல்லும்.

> நப்போல் வளை
> குற்றம் பார்க்கிற் சுற்ற மில்லை
> சுற்றத்திற் கழகு சூழ விருத்தல்

இவை சுற்றத்தாருடன் ஒற்றுமைப்பட்டு ஒருங்கு கூடியிருக்க வேண்டுமென்பதைக் குறிக்கும். இச்சுற்ற ஒற்றுமைப்பண்பு நாளடைவில் ஊராருடன் கூடிவாழ முயலுந் தன்மையைக் கொடுக்கும்.

ஊருடன் கூடிவாழ்
ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்

இவை ஊருடன் கூடிப் பகையற்று ஒத்து வாழவேண்டுமென் பதைக் குறிக்கும். இவ்வூரொற்றுமைப்பண்பானது நாளேற வேற ஒருவனைத் தன்னுட்டாரிடை நாடச்செய்யும்.

நாடொப் பனசெய்
நாடெங்கும் வாழக் கேடொன்று மில்லை.

இவை ஒருவன் தன்னுட்டினரிடை ஒற்றுமைப்பட்டுச் சேர்ந்து வாழும் நன்மையைக் குறிக்கும். இந்நாட்டொற்றுமை படிப்படி யாய்த் தேச ஒற்றுமைக்கு வழிகாட்டும்.

தேசத்தோ டொத்துவாழ்

இஃது ஒருவன் தன் தேசத்தாரோடெல்லாம் ஒத்து வாழவேண்டு மென்பதைக் குறிக்கும். இத்தேச ஒற்றுமை காலஞ் செல்லச் செல்ல உலக ஒற்றுமைக்கே ஒருப்படச் செய்யும்.

கிழமைப் படவாழ்
மாற்றானுக் கிடங்கொடேல்
பையச்சென்றால் வையந் தாங்கும்

இவை, ஒருவன் தனக்கென வாழாது பிறர்க்கென வாழவேண்டு மென்பதையும், பகைவர் என்னும் பெயரையே ஒழிக்கவேண்டு மென்பதையும், அவ்வாறே போர் என்பதனுக் கிடங்கொடாமல் உலக உயிரெல்லாம் ஒருயிரெனவே மதிக்கவேண்டுமென்பதை யும், எல்லாக் காரியங்களையும் ஆரவாரமின்றி பயமும் நயமுங் கொண்டு நடத்தவேண்டு மென்பதையும், இவ்வாறெல்லாம் உணர்ந்து ஊக்கத்தைக் கைக்கொள்பவனே உலகத்தைத் தாங்கும் பெருமையையுடையவனுவான் என்பதையும் குறிக்கும்.

இளமையிலேயே இவ்வுண்மைகளெல்லாம் பொதுமக்கள் மனத்திற் பதியவைக்க வேண்டு மென்றே இச்சிறு வாக்கியங்கள் எழுந்தன. மக்கட்குள் ஒற்றுமை யுண்டாக்குவதற்கு இச்சிறு வாக்கியங்கள் போதாவோ? இதற்காக இன்னும் புராணகாவியங் கள் கற்கவேண்டுமோ? ஒற்றுமையைப்பற்றி அயல்நாட்டார் எழுதியுள்ள பெரியபெரிய மட்டற்ற புத்தகங்களையெல்லாம் வாங்கிப் படிக்கவேண்டுமோ! இச்சிறு நூல்களிலுள்ள வாக்கியங் களையே யறியாதோரும், அறிந்தும் பொருள் தெரியாதோருமாகிய

பொதுமக்கள் நமது தமிழ் நாட்டில் எண்ணிக்கைக் கடங்காமல் எத்தனை பேருளர்!

நாட்டுப்புறங்களிற் குக்கிராமங்களிலும் இலவசமாக ஆண் பெண் பிள்ளைகள் கல்வி பயிலப் பள்ளிக்கூடங்களை நிலைபெறச் செய்து, அவைகளில், அவ்வவ்விடங்களில் வழங்கிவரும் மொழிகளையே முறையாகப் பன்னிரண்டு வயதுவரையிற் பிள்ளைகளைப் படிக்கச் செய்து பிறகு ஆங்கிலம் போன்ற அயல் மொழிகளை அப்பிள்ளைகட்குக் கற்பிக்கவேண்டும். பள்ளிக்கூடம் இல்லாத வூரே நாட்டின்கண் காண்பதற்கு அருமையா யிருக்கவேண்டும். இத்தனை பிள்ளைகள் இருந்தால்தான் பள்ளிக்கூடம் வைக்கவேண்டு மென்கிற நியதி கூடவே கூடாது. இப்போதுள்ள கிராமப் பள்ளிக்கூட அமைப்பும், பாட ஒழுங்கும் மொழிபயில்வதற்கு ஒவ்வாதனவே யாகும். இதனைப்பற்றி இன்னொருமுறை எழுது வோம். மேற்காட்டியவாறு பொதுமக்களறிவு வளர்ச்சியடையு மாயின், சாதி மதம் முதலியவற்றால் நம் நாட்டின்கண் மலிந்து கிடக்கும் பிரிவினைகளெல்லா மொழிந்து, ஒற்றுமையாகிய நற் றவமே சிறந்தோங்கி, அயல்நாட்டார் மதிப்புக்கு ஆளாகி மனநலம் பெற்று மகிழ்ந்து வாழ்வோம்.

---

## பயனுள்ள கல்வி

[சுவாமி விபுலாநந்தர் அவர்கள்]

திருநலங் கெழுமிய தனவணிக நாட்டினின்று வெளிவருஞ் செவ்விய வாரப்பதிப்பாகிய "குமரன்" என்னும் இதழகத்துப் "பயனற்றகல்வி" என்னுந் தலைப்பெயர்க்கீழ் ஒரு கட்டுரையினை யெழுதி வெளியிட்டனம். ஆங்கதனைக் கண்ணுற்ற எமது அரிய நண்பரொருவர் ஈங்கிக் கட்டுரையை எழுதித் தருமாறு பலகால் எம்மை வூக்கினர். கலைவளர்ச்சியிற் பெரிதும் ஈடுபட்டவராத லினால், எம்மை வூக்கியதோடமையாது ஒன்றிரண்டு தந்திச் செய்தியும் உய்த்து வற்புறுத்துவாராயினர். நட்புரிமைக்கு ஏதம் வருமென்றஞ்சி ஒருவாறிதனை எழுதத் துணிந்தனம். முன்னர்க் கட்டுரையிலே, எதிர்மறை முகத்தால் விலக்குவ விவையென வகுத்துக்காட்ட முயன்றேமாதலின், விதிமுறைமுகத்தாற்

கொள்வ வினையெனக் கூறுங் கடப்பாடும் எமக்கே யுரியதெனக் கொண்டு எம்மை இச்செயன்மேலூக்கியது எமது நண்பர்க்குப் பெரிதுந் தகவுடையதே; ஆயினும் இதனைச் செவ்விதின் ஆராய்ந்து அறிவுடையோர் உவக்குமுறையி லெழுதற்கு வேண்டிய அவகாசமின்மைக்குப் பெரிதுங் கவல்கின்றும்.

கல்வியோ கரையற்றது; கற்பவரோ சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவின் மாந்தர்; ஆதலின் கற்கப்படு நூல்களிவையெனவும், அவற்றைக் கற்குமாறு இதுவெனவும், கற்றதனுலெய்தும் பயனிதுவெனவும் வல்லார்வாய்க் கேட்டுணர்ந்து, கற்றற் குரிய காலத்திற் கற்கப்படுபவற்றைக் கற்று, நெறி நின்று, நலனெய்தும் மாந்தரே வாழ்க்கைப்பயனை யடைந்தோராவார். "யாதானு நாடாமா லூராமா லென்னொருவன், சாந்துணையுங் கல்லாத வாறு" என ஆசிரியர் கூறினுரேனும், பள்ளிக்கல்விக்கு ஒரு காலவரையறை யுண்டு; அது நிரம்பிய பின்னர் வாழ்க்கையி லெய்தற்பால நலன்கள் வேறு பலவுள வாகலின்.

ஆடவர் மகளிராகிய இருபாலரையும் ஐயாண்டு நிரம்பிய பின்றைப் பள்ளிக்கு வைத்தல் பண்டையோர் கண்ட மரபு; மகளிர் ஏழாண்டு கல்வி பயின்று பன்னிரண்டு பிராயம் புக்கபின்னர்த் தாம் பயிலுதற்குரிய பள்ளிக்கல்வி நிரம்பியவராய் இற்செறிந் திருத்தலும் ஆடவர் பதினோராண்டு பயின்று எண்ணீராண்டு நிரம்பிய பின்னர்ப் போர்த்தொழில் முதலிய பிறதொழின் மேற் செல்லுதலும் அக்காலத்து வழக்கமென எண்ணுதற் கிடமுண்டு.

நாடக மகளிர்க்குப் பயிற்றப் படுவன ஆடலும், பாடலும், அழகு மென்னும் மூன்றுமாம். இதனை,

"ஆடலும் பாடலு மழகு மென்னக்
கூறிய மூன்றி னொன்றுகுறை படாம
லேழாண் டியற்றியோ ரீரா ருண்டிற்
சூழ்கழன் மன்னற்குக் காட்டல் வேண்டி"

என இளங்கோவடிகள் கூறியதனுனுணர்க.

"வேத்தியல் பொதுவிய லென்றிரு திறத்துக்
கூத்தும் பாட்டுந் தூக்குந் துணிவும்
பண்ணியாழ்க் கரணமும் பாடைப் பாடலும்
தண்ணுமைக் கருவியுந் தாழ்தீங் குழலுங்
கந்துகக் கருத்து மடைநூற் செய்தியும்

சுந்தரச் சுண்ணமும் தூநீ ராடலும்
பாயற் பள்ளியும் பருவத் தொழுக்கமும்
காயக் கரணமுங் கண்ணிய துணர்தலும்
கட்டுரை வகையுங் கரந்துறை கணக்கும்
வட்டிகைச் செய்தியு மலராய்ந்து தொடுத்தலுங்
கோலங் கோடலுங் கோவையின் கோப்பும்
காலக் கணிதமுங் கலைகளின் றுணிவும்
நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த
ஓவியச் செந்நூ லுரைநூற் கிடக்கையும்
கற்றுத் துறைபோகிய பொற்றொடி நங்கை"

எனச் சீத்தலைச் சாத்தனுர் கூறிய வாற்றால் ஆடல், பாடல், அழகு எனத்தொகுத்துக் கூறிய மூன்று துறைகளின் விரிவு இவையென உணர்க.

பதினுறுட்டைப் பிராயம் புக்குக் கல்வி நிறைவுற்ற ஆடவ ரிடத்துக் காணப்படுஞ் சிறப்பியல்புகள் நான்கு எனத் தொகுத் துக் கூறப்பட்டன. இவற்றை

"கலையின தகலமுங் காட்சிக் கின்பமுஞ்
சிலையின தகலமும் வீணைச் செல்வமும்
மலையினி னகலிய மார்ப னல்லதிவ்
வுலகினி லிலையென வொருவ னுயினுன்"

எனத் திருத்தக்கதேவர் உரைத்தவற்றைக் கொண்டுணர்க. சீவக நம்பி கலைநிரப்பிக் கண்டோர் விரும்பும் அழகெய்தி உடற்பயிற் சியா லகன்று விளங்கிய மார்பனுய் வில் வித்தை கைவரப் பெற்று இசைப்பயிற்சி யுடையோனுகித் திகழ்ந்தானென மேலைச் செய் யுளா லறிகின்ரும்.

இருபாலார்க்கும் வகுத்துக் கூறிய கல்விமுறை யனைத் தினையும் உடற்பயிற்சி, உளப் பயிற்சி, இசைப்பயிற்சி எனமுத் திறப் படுத்திக் கூறுதல் கூடும்.

யவனபுரத்துப் பேராசிரியராகிய "பிளேத்தோ" (Plato) என்பவரும் கல்வி முறையினை இங்ஙனம் முத்திறப்படுத்தியே கூறினர். இப்பெரியாரது பெயராகிய "பிளேத்தோ" என்னும் யவனமொழி "அகன்றமார்பன்" எனப் பொருடந்து நிற்றலையும் நோக்குக. வீரமாபுரம் எனப் பழைய யவன ஆசிரியர்களாலே போற்றப் பட்ட "ஸ்பார்ட்டா" (Sparta)என்னும் நாட்டிலே வாழ்ந்த அறநூற் பேராசிரியராகிய "லிக்கர்கஸ்" (Lycurgus) என்னும் பெரியார் இசைப்பயிற்சியை யொழித்து ஏனைய இரண் டினையுங் கைக்கொண்டார்.

உதயணகுமாரனும் சீவகநம்பியும் ஆளுடைய பிள்ளையாரும், வாகீசப் பெருந்தகையாரும் இசையில் வல்லுநரா யிருந்தன ரெனத் தமிழாசிரியர் கூறினரேனும் ஏனைய இரண்டினையும் போல இசைப்பயிற்சியை அத்துணைச் சிறப்பினதாகக் கொண்டா ரென்று எண்ணுதற் கிடமில்லை.

இங்ஙனம் ஆராய்வுழி, "பயனுள்ள கல்வி' இருதுறைப் படுமெனவும் அவைதாம் உடற்பயிற்சியும் உளப்பயிற்சியு மாமெனவும் அறிகின்றோம். இவை ஒன்றினோடொன்று தொடர் புடையன. "உள்ளத்துறுதி உடலுறுதிக் கண்ணது" (Mens sana in corpore sans) எனும் மேனாட்டு ஆசிரியர்கூற்று ஈண்டு நோக்கற்பாலது. தூங்காமை, கல்வி, துணிவுடைமையென நில னுள்பவர்க்கு வகுத்துக் கூறிய மூன்றனு ளிரண்டு உள்ளத் துறுதியினோடு உடலுறுதியினையுஞ் சார்ந்து நிற்பன.

ஆண்மை யென்பது ஆளுந்தன்மை யாதலானும், பெண்மை யென்பது விரும்புந் தன்மை யாதலானும் நிலனுள்பவர்க்கும் நாடகமகளிர்க்கும் வகுத்துக் கூறிய கல்விமுறை எல்லா ஆட வர்க்கும் மகளிர்க்கும் ஏற்புடைய தென்ப தொருதலை. திரு வள்ளுவநாயனாரும் "கல்வி" யென்னும் அதிகாரத்தினை அரசிய லுள் "இறைமாட்சி"யை யடுத்துநிற்கவைத்து நூலியற்றினர். ஆளுந் தன்மை யாகிய ஆண்மையை வளர்த்தற் குரிய உடற் பயிற்சியும் உளப்பயிற்சியும் இவையெனத் தெளிந்து ஆண் மக்களைப் பயிற்றுதலும், விரும்புந் தன்மையதாகிய பெண்மையை வளர்த்தற்குரிய உடற்பயிற்சியுட் உளப் பயிற்சியும் இவையெனத் தெளிந்து பெண்மக்களைப் பயிற்றுதலும் உண்மைக் கல்வி பயிற்றுதலாகும்.

முதலில் உளப்பயிற்சியை யாராய்வோம்.

"எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ் விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு"

என்றாராகலின், எண்ணும் எழுத்தும் அனைவர்க்கும் பொதுவா கிய உளப் பயிற்சிப் பாலவாமென்றறிக. இனிக் கற்றோரெனப் படுவார் தேயமிடையிட்டவும் காலமிடை யிட்டவும் காணும் ஞானக்கண்ணுடையார் என்றமையின் வேற்றுத்தேயங்களி னியல்பைத் தந்நாட்டியல்பினோடு ஒட்டி யுணர்தற்குக் கருவி யாகிய புவியியல்நூலும் (பூகோளசாஸ்திரம்), இறந்த காலத்து நிகழ்ச்சிகளை நிகழ்காலத்தோடு ஒப்பிட்டு நோக்கி எதிர்காலத் தின் நீர்மையைக் கண்டறிதற்குக் கருவியாகிய வரன்முறை நூலும் (தேசசரித்திரம்; இதிகாசம்) உளப்பயிற்சிக்கு இன்றி யமையாது வேண்டப் படுவன. இவற்றின் விரிவெல்லாம் பின் னர்க் கூறுதும். (தொடரும்)

# அருஞ் செய்யுட் பொருட் பகுதி

## திருவருணைக் கலம்பகம் (94-வது செய்யுள்)

### தலைவியைப் புகழ்தல்

கட்டளைக்கலித்துறை

அள்ளற் கடல்விட நீங்கா தகண்ட ரருணை வெற்பிற்
பிள்ளைப் பிறையுஞ் சிலையுமொப் பாநுதற் பேதைநல்லாள்
வள்ளைக் குழைபொரு கண்ணுக்குத் தோற்றம்பும் வாரிதியும்
கள்ளக் கயலு மிராசியின் மீனுங் கடைப்பட்டதே.

(இ - ள்.) அள்ளல் கடல் - சேற்றையுடைய கடலில் தோன்றிய, விடம் - விஷமானது, நீங்காத கண்டர் - நீங்காத கண்டத்தையுடையவரது, அருணை வெற்பில் - அருணையங்கிரியில், பிள்ளைப் பிறையும்-(எட்டாநாட் டோன்றிய) இளஞ் சந்திரனும், சிலையும் - வில்லும், ஒப்பாம் - ஒப்பாகிய, நுதல் - நெற்றியையுடைய, பேதை நல்லாள் - பேதையாகிய நற்குணமுடையவளே ! வள்ளைக் குழை-(கினது) காதின் குழையை, பொரு கண்ணுக்கு - மோதுகின்ற கண்களுக்கு, தோற்று - தோல்வியடைந்து, அம்பும் ;—, வாரிதியும் - கடலும், கள்ளக் கயலும் - வஞ்சனையையுடைய கயல் மச்சமும், இராசியின் மீனும் - மீன இராசியும், கடைப்பட்டது :—,

(வி-ரை.) பேதை நல்லாள் ! நின் கண்ணுக்குத் தோற்று அம்பு - அம்பும், கடைச்சல் பிடிக்கப்பட்டது ; வாரிதியும் - கடலும், கடையப்பட்டது ; கயலும் - கயல் மீனும், கடையில் விற்கப்பட்டது ; இராசியின் மீனும் - மீன ராசியும், (இராசிகளுள்) கடைசியில் அமைக்கப்பட்டது.

—கோ. இராமலிங்கத் தம்பிரான்.

தாயிற் சிறந்தொரு கோவிலுமில்லை
தமிழிற் சிறந்தொரு வாசகமில்லை.
கல்வியிற் சிறந்தொரு கைப்பொருளில்லை.
"செல்வி"யிற் சிறந்தொரு சஞ்சிகையில்லை.

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## இந்திய ஐரோப்பியப் பெருங்குழு

[திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்கள்—
காழி. சிவ. கண்ணுசாமி. B. A.]

(முன் ௩௯௩-ம் பக்கத் தொடர்ச்சி)

### தெலுங்கரும் தமிழரும்

தெலுங்கரும் தமிழரும் திராவிடக் குழுவைச் சேர்ந்தவர்களா? சின்னாட்களாக, ஆந்திரர்கள் தாங்கள் ஆரியக் குழுவைச் சேர்ந்தவர்கள் என்றும் தங்கள் மொழியாகிய தெலுங்கு மொழி வடமொழியாகிய சமஸ்கிருதத்திலிருந்து பிறந்தது என்றும் கூறிக்கொள்ள விழைகின்றனர். தமிழனாகிய யான், தமிழர்களும் தெலுங்கர்களும் திராவிடக் குழுவைச் சேர்ந்தவர்களே யென்றும், தெலுங்கர்களை என்னினத்தா ராகவே யான் கருதுகிறேனென்றும், என்னையும் தெலுங்கர்கள் தம்மினத்தாராகவே கருத வேண்டுமென்றும் கூறவே பெரிதும் விரும்புகிறேன். மேற்கூறிய வாறு நலிந்த போலிக் கொள்கைகளைக் கொண்டிருக்கும் ஆந்திரர்களுக்கு வேண்டுமானால் என் கொள்கை பிடிக்காமலிருக்கக்கூடும். இருந்தாலும், உண்மை எக்காலத்திலும் வெற்றிபெற்று நிலை நிற்கக் கூடுமன்றோ?

தெலுங்கர்கள் குழுவளவைப்படி (Ethnology) தமிழர்களினத்தைச் சேர்ந்தவர்களல்லர் என்று துணிந்து கூறவும் முடியுமா? அவ்வளவை யொருபுறமிருக்க, இன ஒற்றுமையைத் துணிதற்குப் பயன்படும் ஏனைய தேர்வுமுறைகளில், குறித்த இரண்டு இனத்தாரின் மொழியாக்கத்தை ஆராய்வதே சிறந்த முறையாகும். தற்போது பெரும்பான்மையாக வழங்கிவரும் தெலுங்கு உயர்தர நூற்களில் நூற்றுக்குத் தொண்ணூறு வீதம் வடமொழி கலந்திருக்கின்றது என்பதில் ஐயமில்லை. பண்டைய தெலுங்கு இலக்கியங்களிலோ வடமொழி இத்துணைப் பெரும்படியாகக் கலப்புறவில்லை. ஆராய்ந்து பார்த்தால்

இக்கலப்பு நிகழ்ந்த தெல்லாம் பதினோராம் நூற்றாண்டிற்குப் பிறகுதான் என்று தெரியவருகிறது. "அச்ச தெனுகு" என்று சொல்லப்படுவதும், பண்டைக்காலத்திலிருந்தே தோற்றமுற்று வழங்கிவருவதும், ஆந்திரர்கள் என்று கூறிக்கொள்ளும் எல்லோருக்கும் தாய்மொழியாக விளங்கிவருவதும் ஆகிய செந்தெலுங்கு மொழியிலோ வடமொழிக் கலப்பு இல்லையென்றே கூறிவிடலாம். அச்ச தெனுகுவின் மூலச் சொற்கள் எல்லாம் தமிழ் மூலச் சொற்களுடனே ஒப்புமை யுடையன வாயிருக்கின்றன. அம்மா, அக்கா, அண்ணு, தாதா, ஒகட்டி, மூடு, இடு, செய்யி, காலு, மூக்கு, கன்னு, வேலு, பாலு, நீரு, காலி, மாவு, ஆவு, எனுகா, புலி, எட்டு, பொலமு, அடவி, பள்ளமு, கொண்ட, பண்டி, இல்லு, புளி, உப்பு, பப்பு, செப்பு, என்ற இத்தொடக்கத்தன வெல்லாம் தமிழ் மொழியன்றி யாவை? தமிழிலிருந்து இச் சொற்களைத் தெலுங்கு எடுத்துக் கையாண்டதா, அன்றி, தெலுங்கிலிருந்து தமிழ் எடுத்தாண்டதா என்ற கேள்விகள் எழ வேண்டுவதில்லை. வடமொழிக் கலவாத காலத்தில் தெலுங்கு தமிழ் ஆகிய இரு மொழிகளுக்கும் இச் சொற்கள் பொதுவானவை யென்பதே போதுமானது. உழவு, வாணிபம், அரசாட்சி ஆகிய, நாகரிகத்தின் முன்னணியில் நிற்கும், பல துறைகளுக்கும் வேண்டிய சொற்கள் யாவும் அச்ச தெனுகில் காணப்படுவதே ஆதிகாலந் தொட்டே தமிழரும் தெலுங்கரும் ஓரினத்தைச் சேர்ந்தவர்க ளென்பதைத் தெரிப்பதற்குப் போதிய சான்றாகும். ஆச்ச தெனுகு ஆரியச் சொற்களைக் கடன் வாங்கத் தொடங்கியதோடன்றி ஆரியர்தம் பழக்க வழக்கங்களையும் பின்பற்றத் தொடங்கியது முதலே வளர்ச்சிமுறை குன்றத் தொடங்கியது. ஆரியத்திலிருந்து சொற்களைக் கடன்வாங்கிப் பயன்படுத்தியதால் தெலுங்குமொழி எத்தகைய நலமும் பெறவில்லை யென்பதைத் துணிந்து கூறலாம். உரனற்றதும், உள்ளீடற்றதும், மேன்போக்கில் மின்னுவதுபோலத் தோன்றுவதுமாகிய ஆரியக்கலைகளைப் பின்பற்றியதால் பெருங்கேடே யெய்திற்று. ஐயகோ! ஆரியர்கள் என்று கூறிக் கொண்டால் பெருமையென்று பிறழ வுணர்ந்த ஒரு போலி யுணர்வினாலேயே தெலுங்கர்கள் ஆரிய முறைகளையும் மொழியையுந் தாம் தழுவுவதாகப் பறைசாற்றலுற்றனர்.

## ஆரியமும் திராவிடமும்

ஆரியர் தம் நாகரிகத்தையும் திராவிடர் தம் நாகரிகத்தையும் ஒருங்குவைத்து ஒப்பநோக்கிச் சீர்தூக்கிப்பார்த்தால், ஆந்திரர்கள் தாங்கள் ஆரியர் இனத்தைச் சேர்ந்தவர்களென்று கருதுவதை விட்டொழித்துத் திராவிடக் குழுவைச் சேர்ந்தவர்கள் என்று பெருமையுடன் சொல்லிக் கொள்ளவே முன்வருவார்கள் என்பது உறுதி. ஆந்திரர்கள் வாழ்ந்துவரும் நிலப்பகுதி தொன்று தொட்டிலகும் தென்னிந்தியாவின் ஒருபகுதி யென்பதனாலேயே அவர்களுக்கும் தமிழர்களுக்கும் நெருங்கிய ஒற்றுமை இருந்தது என்பது பெறப்படும். அச்ச் தெனுகு, பழங்கன்னடம், மலையாளம், துளுவம் என்ற இவைகளே பண்டைய தென்னாட்டு மொழிகள் என்றும் இவற்றை அடிப்படையாகக் கொண்டே செந்தமிழ் சமைக்கப் பட்டதென்றுங் கூறலாம். எனவே, இம் மொழிகட்குரியோர் எல்லோரும் தோற்றத்திலும், தொன்மையிலும், பழக்கத்திலும், நம்பிக்கைகளிலும் ஒரே குழுவினைச் சேர்ந்த தம் ஒருமைப்பாட்டை உற்றுணர்ந்து ஒருசேர்ந்து உழைத்தல் வேண்டும்.

விசுவாமித்திரமுனிவருடைய ஐம்பது பிள்ளைகளுக்கும், ஆந்திர நாட்டிலிருந்த காட்டுமிராண்டிப் பெண்களுக்கும் பிறந்து பல்கியவர்களே தற்கால ஆந்திரர்கள் என்று கூறி, திரு. எ.வி. தாஸ் என்பவர் தம்முடைய அறியாமையைப் புலப்படுத்தினர். நூறும் இருநூறுமாகப் பிள்ளைகளை ஒருவர் பெற்றார் என்பதிலும், ஒருவனுக்கு ஆயிரங் கண்கள் இரண்டாயிரங் கைகள் முதலிய இருந்தன என்பதிலும் திரு. தாஸை யொத்த ஒரு தேர்ந்த வரலாற்று ஆராய்ச்சியாளர் நம்பிக்கை வைத்தது விந்தையிலும் விந்தையே. இல்லையேல், பெரிய தொகையினராகிய இனத்தாரான ஆந்திரர்களெல்லாரும் விசுவாமித்திரர் என்ற ஒருவர் கால் வழித் தோன்றியவர்கள் என்றும் அவர் கொள்வாரோ! விசுவாமித்திருடைய 50 பிள்ளைகளும் அவர்கண் மாட்டுக் கிளைத்த பல்லாயிரம் பேரப் பிள்ளைகளும் எம்மொழியில் பேசிவந்தார்கள் என்பதை இவர் நினைத்துப் பார்த்தாரா? விசுவாமித்திரரே ஆந்திரர்களுக்கு "மூல புருஷன்" என்று சொல்வது அறிவியலுக்கு எத்துணையொத்த தொன்றாகும்! அவர் பேசிய மொழிக்கு

விசுவாமித்திர மொழி என்று பெயரா! அல்லது, அவர்கள் பேசப் பிள்ளைகள் பேசியது கோண்ட், சவரா, கோயா என்ற மொழி களில் ஒன்று! இவைகள் ஒன்றுமில்லையன்றே! அச்ச தெனுகு மொழியில்தான் பண்டைக்காலத்தில் அவர்கள் பேசியிருத்தல் வேண்டும். அவ்வச்சத் தெனுகுவின் மூலச் சொற்களோ தமிழ் மொழிமூலத்துடன் எப்புடையும் ஒத்ததாக இருக்கின்றன. இஃதிவ்வாறாயின், ஆந்திரர்கள் திரு. தாஸ் கூறியபடி கலப்புப் பிறப்பாளர் என்று கொள்ளவுங் கூடுமோ? ஆந்திரர்கள் திரா விடர்களே, தனித் திராவிடர்களே! கலப்பற்ற பெருமைவாய்ந்த திராவிடர்களே! திராவிடக் குழூவிற்குரிய உருவவமைப்பு அறி குறிகள் அவர்கள்மாட்டு இன்றும் காணக்கிடக்கின்றன. திரா விட நாகரிகத்தின் இணையற்ற தனிச்சிறப்பை நன்குணர்ந்தார் களாயின் தம்மை ஆரியர்கள் என்று மறந்துங்கூற ஆந்திரர்கள் ஒருப்படுவரோ? (தொடரும்)

---

## பண்டைத் தமிழிலக்கியம்

[பண்டிதமணி மு. கதிரேசஞ் செட்டியார்]

பண்டைக் காலத் தமிழிலக்கியங்கள், அக்காலத்து வாழ்க்கை முறைகளையும், மொழி நிலைமையையும் கண்ணாடிபோல் காட்ட வல்லதாயிருக்கின்றன. அக்காலத்துத் தமிழ் மக்கள் அற முதலிய நான்கினுள் இன்பத்தை அகத்திணையாகவும், எனையவற்றைப் புறத்திணை யாகவுங் கொண்டனர். அவர்களது நாகரிகத்தைத் தொல்காப்பியர் கூறும் களவியல், அகநானூற்றுக் காப்புச்செய்யுள் முதலியன கொண்டு அளந்து அறியலாம். ஆரியரிடமிருந்து தமிழர் நாகரிகம் கற்றனர் என்று சிலர் கூறுகின்றனர். பாரதக் கதையினின்றும் புலப்படும், ஒருத்தியைப் பலர் மணத்தலும், தன் மனைவியை எனைய பொருள் போல அயலானுக்கு உரிமையாக்கலும் போன்ற ஆரியக் கொள்கை கள் "சொற்பாலமிழ்திவள் யான்சுவை" என்ற மாணிக்கவாசகா மணி மொழிப்படி, ஒருவனும் ஒருத்தியும் உடன் கலந்து ஒருயிர் ஈரு டல் என்ன உதவிய வாழ்க்கை நடத்திய தமிழர்களுக்கு எத்துணை யும் பொருந்தாது. (தமிழ் நாடு)

---

# அறிவியற் பகுதி – Science

## குரங்குகளின் பண்புநலங்கள்

[திருநிறை. மிஸ். பி. இராபர்ட்ஸ், எம்., ஏ.]

(முன் ௩௮௰-ம் பக்கத் தொடர்ச்சி)

மூன்று வயதுள்ள அதன் எஜமானியின் குழந்தை அதன் விளையாட்டுத் தோழி. அச் சிறு குழந்தை அழும் பொழுது, அதன் தாய் அவளையெடுத்து அமர்த்தாவிட்டால், உடனே அக்குரங்கு தாயிடம் போய், மிக பலத்தோடு அவள் முதுகில் ஓர் அடி கொடுக்கும். அச்சமயம் அக்குரங்கு என்ன நினைந்து வந்து அடித்திருக்குமோ தெரியாது. ஒரு வேளை 'என் அருமைத் தோழி அழுகிறாள். அவள் தாய் அவளைத் தடவியெடுத்து அழுகையை அமர்த்தவில்லையே. என்னை அவள் அடித்தாலும் பாதகமில்லை. நான் அவள் முதுகில் ஓர் அறை அறைகிறேன்'' என்று நினைத்திருக்கலாம். இப்படி நினைத்தால் அது புத்திசாலித்தனந்தான். இல்லாவிடில் என் அருமை விளையாட்டுத் தோழியைக் கண்ணீர் சொரிய வைப்பது மிகவும் அநியாயமான காரியம். இக் கருமத்திற்கு யான் 'எதிர்த்து நிற்பேன்'' என்று எண்ணியிருக்குமென்று நாம் சொல்லக் கூடும். பின் காட்டிய மாதிரி எண்ணியிருந்தாலும் அவ்வானரத்திற்குப் பகுத்தறியும் தன்மை (Power to reason) இருக்கிறதென்றே சொல்லலாம். ஆனால் இது நம்பக்கூடிய காரியமன்று. ஏனெனில், பகுத்தறிவு என்று சொல்லப்படும் மேன்மையான குணம் மனிதன் ஒருவனுக்கேயன்றி வேறெந்தவுயிருக்கும் கொடுக்கப்படவில்லை யென்பதே இயற்கை நிபுணர்களின் கொள்கை. ஒருவேளை அச்சிறு குழந்தை அழுததும் குரங்கின் மனங் கலங்கி, சும்மாயிருக்கும் அதன் தாயின்பேரில் கோபமுண்டாகித் தாயை அடித்திருக்கலாம்.

கடையிலிருந்து இறைச்சி வாங்கிவந்ததும், அதன் எஜமானி ஒரு துண்டு வெட்டிக் கொடுப்பது வழக்கம். ஒரு நாள் ஓரத்தில் தொங்கிக் கொண்டிருக்கும் முரடான பாகத்தை அறுத்து கொடுத்தபொழுது வேண்டாமென்று மறுத்துவிட்டு, அந்த அம்மையின் கையைப் பிடித்து இறைச்சியின் மெதுவான உட்பாகத்

தைக் குறித்துக் காண்பித்ததாம். அதில் கொஞ்சம் அறுத்துக் கொடுத்தபொழுது அவ்வானரம் வாங்கிப் புசித்துமகிழ்ந்ததாம்.

இன்னும் ஒரு குரங்கிற்கு ஏதாவது தீங்கு நடந்தால் மற்றொரு குரங்கு தன்னால் கூடியவரையில் அதற்குதவி செய்கின்றது. ஒரு சமயத்தில் ஒரு சிறு குரங்கு கிழே மயங்கி விழுந்தது. அப்போது அருகில் நின்ற மற்றொரு பெண் குரங்கு, அது தன் குழந்தையாய் இராவிட்டாலும், அதனிடம் விரைவாக ஓடிவந்து, அதை எடுத்து, தடவிக்கொடுத்து, ஆதரித்தது. ஒரு குரங்கின் கூட்டிற்கெதிரே, ஒரு ஆப்பிள் பழம் புதைக்கப்பட்டது. அநேக மணி நேரத்திற்கப்புறம், குரங்கை திறந்துவிட்டபொழுது அது நேரே பழம் புதைக்கப்பட்ட விடத்திற்கு ஓடிவந்து, மண்ணைத் தோண்டி யெறிந்துவிட்டுப் பழத்தை எடுத்துச் சாப்பிட்டதாம். மேற்கண்ட காரியங்களை யெல்லாம் யாம் உற்று நோக்குங்கால் இதர மிருகங்களைவிட, குரங்குகள் புத்தியிற் சிறந்தனவென்று விளங்குகின்றது. இதை நாம் பகுத்தறியும் தன்மையென்று தப்பெண்ணம் கொள்ளலாகாது.

வேறு சில நிகழ்ச்சிகளால் குரங்குகள் பகுத்தறியும் தன்மையைச் சற்று அடைந்திருக்குமாப்போல் தோன்றுகிறது. மற்றொரு வித வாலில்லாக் குரங்கு (Orang-outang) சுமைகளைக் கிளப்புமோர் கம்பியைத் (Lever) தானே செய்து அதைப் பயன்படுத்தும் விதத்தையும் கண்டுபிடித்தது. ஒரு சிறு கப்பி (Lever) செய்துவிட்டு, அதே மாதிரியாகப் பெரிய கப்பிகள் செய்தது. அப்பால் அதை உபயோகப்படுத்த ஆரம்பித்தது. அருகில் மற்றொரு கூண்டில் வசிக்கும் தன் இனத்தானைப் பார்க்க வசதியாய் இல்லையே என்று இதற்கு அநேக நாளாய்க் கோபம். ஆகையால் தன்னுடைய கப்பியால் கூண்டின் பலகை தாங்கியை உடைத் தெறிந்துவிட்டுக் கூண்டின் இருப்புக் கம்பிகளில் இரண்டைவளைத்து, தன்னுடைய தலை நுழையும் படியாக வசதி செய்துகொண்டது. அதிலிருந்து தன் நண்பனைப் பார்க்க வேண்டுமானால், அவ் விரண்டு கம்பிகளுக்கும் இடையே தன்னுடைய தலையைவிட்டுப் பார்க்கும்.

சுருங்கக் கூறின், குரங்குவகைகள் வெகு சுறுசுறுப்பானவை. அவைகளுக்கு அதிகக் கூர்மையான புத்தியுண்டு. எதையும் பரிசோதித்துப் பார்க்கும் தன்மையும், அதிக ஞாபகத் தன்

மையும், ஒரு காரியத்தைக் கண்ணால் பார்த்துக் கிரகிக்கக்கூடிய சக்தியும் இவ்வானரங்களுக்குண்டு. இவைகளில் சில அதிக அறிவுடையனவாய்த் தோன்றுகின்றன.

விலங்கியல் நூற்படி (Zoology) குரங்குகள் மனிதனைவிட ஒரு படி தாழ்ந்திருந்தாலும், குரங்கிலிருந்தே மனிதன் தோன்றியிருப்பான்; குரங்கே மனிதனுக்கு மூலதகப்பனாயிருந்திருக்கலாம் என்பது கொள்கை. மரங்களில் வசித்து வந்த குரங்குகளில் சில, உணவு கஷ்டத்தினாலேயோ அல்லது மரங்களில் இருப்பிடம் போதாமல் இருந்ததினாலேயோ, அல்லது வேறெந்தக் காரணத்தினாலோ, மரங்களிலிருந்து கீழே குதித்துவிட்டன. கீழே குதித்த குரங்குகளுக்கு போதுமான சஞ்சாரமும், உணவும் கிடைத்தபடியால் கீழே நடமாடிக்கொண்டு சந்தோஷமாய் அலைந்துகொண்டிருந்தன. பல தலைமுறைகளுக்கப்பால் அக் குரங்குகளிலிருந்து உண்டான மற்றக் குரங்குகள், காலைக் கீழே ஊன்றி, உடம்பை நேரே நிறுத்தி நிற்க முயன்றன. அம்முயற்சியின் பலனால் அநேக ஆண்டுகளுக்குப் பின்பு குரங்குகள் நேரே நிற்கும் தன்மையைப் பெற்றுக்கொண்டன. இவ்விதமாய் நேரே நிற்கும் குரங்குகளிலிருந்து மனிதன் உண்டானான் என்பதே இயற்கை நூற்படி ஆதி மனிதனின் சரித்திரம். இதனையொத்தே பூமியைத் தோண்டி மிருகங்களின் அச்சுக்களையும், எலும்புகளையும் சோதித்துப் பாக்கும் வகுப்பார் (Palaeontologists) குரங்குகளுக்கும் மனிதருக்கும் நடுவில் சில உயிர்வகைகள் இருந்திருக்கவேண்டுமென்றும், பூமியின் கீழிருந்து எடுக்கப்பட்ட எலும்புகள் மூலமாய்த் தோன்றுகின்றது என்று சொல்லுகின்றனர். அவ் வுயிர்களிலிருந்து எல்லாப் படைப்புக்கும் மேலான மனிதன் உண்டாயிருக்கலாம் என்பது கொள்கை. இதை முன்னிட்டே குரங்குகளுக்கும் மனிதனைப் போல் பகுத்தறியும் தன்மையிருக்கிறதா என்று கண்டறியுமாறு இயற்கை நூலறிஞர்கள் குரங்குகளை வளர்த்து அவைகளின் நடவடிக்கைகளைக் கவனித்துப் பார்க்கிறார்கள். பகுத்தறிவினால் மனிதனானவன் எவ்வளவோ சிறந்து விளங்குகிறான். அதனாலே அவன் எல்லாப் பிறப்புக்கும் தலையாகத் தோன்றுகிறான். பகுத்தறிவு என்னும் குணம் அவனிடம் இல்லாதிருந்தால் அவன் மற்ற மிருகங்களுக்கு ஒப்பானவனே.

# பொருணூல்—(**Economics**)

[திரு. B. நடராஜ பிள்ளை B.A. (Hons)]

(முன் ௩௮௩-ம் பக்கத் தொடர்ச்சி)

கீழே பொறிக்கப்பட்ட புள்ளி விவரங்கள் 1824-34-க்கும் 1840-50-க்கும் இடையே ஏற்றுமதி வியாபாரத்தில் பண்ட வகையிலும் சென்ற திசை நெறியிலும் எழுந்த மாறுதல்களை நன்கு விளக்கும்.

1824-34-க்கும் 1840-50-க்கும் ஆண்டுதோறும் இடையே சென்னை ஏற்றுமதி வர்த்தகத்தின் சராசரிப் புள்ளி விவரங்கள்

| தேசங்கள் | 1824-34 (10 ஆண்டின் சராசரி) | | 1840-50 (10 ஆண்டின் சராசரி) | |
|---|---|---|---|---|
| | நெசவுச் சரக்குகள் ரூ. | மொத்தம் ரூ. | நெசவுச் சரக்குகள் ரூ. | மொத்தம் ரூ. |
| மலாக்கா ஜலசந்தி | 14,58,488 | 16,13,512 | 7,60,994 | 10,22,264 |
| சுமத்திரா மேலைக்கரை | 1,43,373 | 1,59,102 | 5,329 | 8,213 |
| மணிலா | 1,70,644 | 1,72,899 | ,, | ,, |
| பெகு | 1,35,000 | 2,75,000 | 1,10,000 | சிறிது குறைவு |
| பெர்ஷியன் நீர்க்குடாவும் அரேபியாவும் | 5,46,000 | 13,70,000 | 1,68,000 | 12,00,000 |
| சீனு | ,, | 6,50,000 | ,, | 14,50,000 |
| பிரிட்டன் | 16,00,000 | 29,75,000 | 5,75,000 | 50,00,000 |
| வங்காளம் | 2,00,000 | 9,00,000 | 4,75,000 | 14,73,000 |
| பம்பாய் | 12,50,000 | 50,00,000 | 9,75,000 | 73,00,000 |
| இலங்கை | 6,75,000 | 14,50,000 | 7,50,000 | 39,75,000 |

இந்தக் கால அளவையில், சென்னை ஏற்றுமதிப் பொருள்களில் கைத்தொழிற் சரக்குகளி னளவு 40 சதம் குறைவுபட்டது. ஆனால் கைத்தொழிற் பண்டங்களல்லாத விளைபொருள்கள் முதலியவற்றின் ஏற்றுமதி பெரிதும் விரிந்தது. இது கீழ் வரும் புள்ளி விவரங்களால் தெளிவாகும்.

1824-34-ம், 1840-50-ம் ஆகிய பத்துப் பத்தாண்டுகளுக்கு சென்னை ஏற்றுமதியின் மொத்தத் தொகை

| சரக்குகள் விவரம் | 1824-25 முதல் 1833-34 வரை ரூ. | 1840-41 முதல் 1849-50 வரை ரூ. |
|---|---|---|
| நெசவுப் பொருள்கள் | 619,89,315 | 382,73,194 |
| பஞ்சு, பருத்தி முதலியன | 82,45,741 | 426,93,304 |
| தானியம் | 239,42,294 | 377,96,556 |
| சந்தனக்கட்டை | 23,18,755 | 12,29,660 |
| ஏலம் முதலிய வாசனைத் திரவியங்கள் | 86,50,691 | 111,68,595 |
| சர்க்கரை | ,, | 95,73,161 |
| எண்ணெய் வகைகள் | ,, | 6,77,141 |
| எண்ணெய் விதைகள் | ,, | 2,44,363 |
| சாயம் அவரி முதலியன | 70,90,670 | 216,52,303 |
| மஞ்சள் | ,, | 3,68,614 |
| காப்பி | 3,29,092 | 18,44,784 |
| உப்பு | 17,47,514 | 12,66,079 |
| தோல் வகைகள் | 3,42,830 | 19,14,624 |

கைத்தொழிற் பண்டங்களால் ஏற்றுமதியில் ஏற்பட்ட குறைவுக்கு மேலாக பச்சைப் (Raw) பொருள்களால் ஏற்பட்ட பெருக்கு இருப்பது தெற்றென விளங்கும். பிற்காலத்தில் இப் பச்சைப்பண்டங்களின் அளவு விரிந்து, இறுதியில் நம் ஏற்றுமதியின் ஏறக்குறைய முழுப்பாகமும் பச்சைப்பண்டங்களே ஆகித்தீர்ந்தன. பெரிதும் கைத்தொழிற் பண்டங்களிலமைந்த ஒரு ஏற்றுமதி வாணிப நிலையில் நின்று முழுதும் பச்சைப் பொருட்களாலாய ஒரு ஏற்றுமதி வாணிப நிலைக்கு மாறியதால்

வந்த தடுக்கரும் பலனேயாகும். இவ்வாறு சென்னையிலிருந்து வெள்ளியும் தங்கமும் வெளிப்போந்தது. எனவே இந்தத் தலைகீழ் மாற்றம் இடுக்கண் விளைத்தது இயல்பேயன்றோ? விலை நிலையினைக் குலைத்து நாட்டில் நிகழ்ந்துள்ள பொருளாதார நெருக்கடிகளில் மிகப்பெரியதொன்றை எழுப்பியதும் வியப்பாமோ?

2. சீனாவோடும் பிரிட்டனோடும் நடந்துவந்த ஏற்றுமதி வாணிபம் மிக விரிந்ததெனில், அதன் பயனாக தங்கமும் வெள்ளியும் மாகாணத்துள் எதனால் வந்திலது என வினவப்படலாம். ஆனால், சென்னை மாகாணத்துள் நிதி புகுதாதற்கு பின்னு மிருந்த ஒரு சிறப்பியலை இங்கு விளக்குவது அவசியமாகும். பிரிட்டினிலிருந்தோ, அன்றி சீனாவிலிருந்தோ, அன்றி பிரிட்டனுக்குக் கடனாளியாக இருந்த பிறநாடுகளிலிருந்தோ இம்மாகாணத்துக்குப் பணம் வரவேண்டியதாயிருந்தால், அந்தக் கணக்கை யெல்லாம் கம்பெனியின் இங்கிலாந்துத் தலைவர்கள் இந்தியப் பொக்கிஷங்களின் பேரில் வரவு வைத்துக்கொண்டு, பதிலாக 'பில்'கள்வழங்கி முடித்து வந்தார்கள். அதன்பயன் என்ன வாயிற் றென்றால், இயல்பாக வாணிப நெறியில் நமக்கு வரவேண்டும் பொன்னும் வெள்ளியும் அங்ஙனம் வாராது தடை பெற்றன. 1834-ல் தான் கம்பெனியார் இந்த 'பில்' முறையைப் பெருந் தொகைகளுக்குக் கையாடத்தலைப்பட்டனர். அதன் பெருக்கு எத்துணை விரைவாக விரிந்த தென்பது கீழ்வரும் புள்ளி விவரங்களால் விளங்கும்.

கம்பெனித் தலைவர்களால் கையாளப்பட்ட பில்களின் ஐந்து ஆண்டைய சராசரித்தொகை

| | |
|---|---|
| 1834—35 | ரூ. 31,610 |
| 1839—40 | ரூ. 14,31,685 |
| 1844—45 | ரூ. 13,87,586 |
| 1849—50 | ரூ. 39,21,580 |

3. மேற்குறித்த காரணங்களே யன்றியும், வேறுசில அரசியல் நிகழ்ச்சிகளாலும் தங்கமும் வெள்ளியும் மாகாணத்திலிருந்து வெளியேறின. அயல் நாடோடு இங்கிலாந்து விளைத்த போரினுக்கு இவணிருந்து அனுப்பப்பட்ட படைகட்குக் கொடுக்கபடவேண்டும் சம்பளத்தொகை முதலிய செலவுகட்காகவும், சமாதானகாலத்து எல்லைப்புறத்தும் அப்படைகளைப் போஷித்தற்கு ஏற்பட்ட செலவுகட் கெனவுப், பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தைக் காப்பதற்கு ஏற்பட்ட பொதுச் செலவில் இம்மாகாணம் செலுத்தவேண்டிய பங்குத்தொகைக்குமாக, அரசாங்கப் பொதுக்கணக்கின் (Public account) சார்பில், இறக்கு மதியினும் ஏற்றுமதியாகவேண்டிய நிதியினளவே மிஞ்சி நின்றது. உதாரணமாக, 1932-ல் சென்னையிலிருந்து தக்கபடியான நாணயங்கள் கம்பெனியின் படைகளுக்குதவ மலாக்கா நாட்டுக்கு அனுப்பப்பட்டன. பர்மாப்போரிலும் சீனப்போரிலும் ஆங்கிலேயர் செலுத்திய படைகள் சென்னையிலிருந்து அனுப்பப்பட்ட பணத்தாலேயே திரட்டப்பட்டது. மற்றுமொரு அரசியல் காரணமுண்டு. அதாவது மலபார், கன்னடம் ஆகிய இரண்டு ஜில்லாக்களின் வரிவருமானங்களும் சிறிதாண்டுகளாக நாணயவடிவில் நேராகவே பம்பாய் மாகாண அரசாங்கத்துக்கு அனுப்பப்படவேண்டியதாகத் திட்டமிருந்ததால் ஆண்டாண்டுதோறும் 20 இலட்ச ரூபாய்பெறுமான நாணயங்கள் மாகாணத்தை விட்டு வெளியேறின. இவ்வாறாக அரசாங்கச் சார்பாக மட்டுமே 1820-21-முதல் 1849-50 வரை 30 ஆண்டுகளில் ஏறக்குறைய 15 கோடி ரூபாய் வெளிச்சென்றதென்று அன்றைய கணக்கொன்று மதிப்பிடுகின்றது. மேலே விவரித்த நிகழ்ச்சிகளின் திரண்ட பயனெல்லாம் ஏராளமான நாணயம் நீண்டகாலமாக நாட்டை விட்டு வெளியே போய் விட்டதென்பதுவாகும். இதனைச் சென்னை அரசாங்கப்பத்திர நிலையத்திலிருந்து சேர்த்துள்ள கீழ்வரும் புள்ளி விவரங்களால் அறியலாகும்.

(தொடரும்)

---

இவ்வுலகத்திலேயே, முதற் செய்தித்தாள் அச்சடித்து வெளியிடப்பட்டது நியூரம்பர்க் என்ற ஊரில்தான். அவ்வாறு செய்தித்தாள் வெளிவந்தது 1457-ம் ஆண்டாகும்.

---

# மொழிபெயர்ப்பு-Translation

[திரு. T. B. கிருஷ்ணசாமி முதலியாரவர்கள் M.A.,B.L.]

கபிலர் இயற்றிய

## இன்னா நாற்பது

### Of Unpleasant Things : Forty (Stanzas)

(முன் ௨அ௨-ம் பக்கத் தொடர்ச்சி)

௩௧. நெடுமர நீள்கோட் டுயர்பாய்த லின்னா
கடுஞ்சின வேழத் தெதிர்சேற லின்னா
ஒடுங்கி யரவுறையு மில்லின்னா வின்னா
கடும்புலி வாழு மதர்.

31. It is unpleasant to jump from the long bough of a tall tree; it is unpleasant to go before an incensed elephant; it is unpleasant to live in a house infested by snakes; it is unpleasant to pass the road where fierce tigers lodge.

௩௨. பண்ணமையா யாழின்கீழ்ப் பாடல் பெரிதின்னா
எண்ணறியா மாந்த ரொழுக்குநாட் கூற்றின்னா
மண்ணின் முழவி னொலியின்னா வாங்கின்னா
தண்மை யிலாளர் பகை.

32. It is unpleasant to sing to the accompaniment of an ill-tuned *Vina*; unpleasant the count of days by one who knows not arithmetic; unpleasant is the sound of drum that has not been rubbed with mud; unpleasant the hatred of the ungracious.

௩௩. தன்னைத்தான் போற்றா தொழுகுத லன்கின்னா
முன்னை யுரையார் புறமொழிக் கூற்றின்னா
நன்மை யிலாளர் தொடர்பின்னா வாங்கின்னா
தொன்மை யுடையார் கெடல்.

33. It is unpleasant for one to act in disregard of oneself; unpleasant are the words of those who speak not to the face but

behind one's back; the friendship of the wicked is unpleasant; likewise the loss of ancient and old-time wealth.

௩௪. கள்ளுண்பான் கூறுங் கருமப் பொருளின்னா
முள்ளுடைக் காட்டி னடத்த னனியின்னா
வெள்ளம் படுமாக் கொலையின்னா வாங்கின்னா
கள்ள மனத்தார் தொடர்பு.

34. A drunkard's words are void and useless; it is very unpleasant to walk in a thorny forest; it is unpleasant to kill an animal struggling in a flood; unpleasant too the friendship of the deceitful.

௩௫. ஒழுக்க மிலாளர்க் குறவுரைத்த லின்னா
விழுத்தகு நூலும் விழையாதார்க் கின்னா
இழித்த தொழிலவர் நட்பின்னா வின்னா
கழிப்புவாய் மண்டிலங் கொட்பு.

35. It is unpleasant to establish relationship with the undisciplined; unpleasant are the books that deal with improper things; it is unpleasant to associate with those whose work is low; and unpleasant the horse that swirls in a hateful manner.

௩௬. எழிலி யுறைநீங்கி னீண்டையார்க் கின்னா
குழலி னினியமரத் தோசைநன் கின்னா
குழவிக ளுற்ற பிணியின்னா வின்னா
அழகுடையான் பேதை யெனல்.

36 If clouds cease to rain, it is unpleasant for men; the sound through trees sweeter than a flute is unpleasant; the illness of children is unpleasant; unpleasant when a beautiful person is an imbecile.

௩௭. பொருளிலான் வேளாண்மை காமுறுத லின்னா
நெடுமாட நீணகர்க் கைத்தின்மை யின்னா
வருமனை பார்த்திருந் தூணின்னா வின்னா
கெடுமிடங் கைவிடுவார் நட்பு.

37. It is unpleasant for a poor man to desire to help others; it is unpleasant in a huge city with palaces to live without money; it is unpleasant always to look to others for food; unpleasant too the friendship of those who forsake in distress.

௩அ. நறிய மலர்பெரிது நாறுமை யின்னா
துறையறியா னீரிழிந்து போகுத லின்னா
அறியான் வினப்படுத லின்னா வாங்கின்னா
சிறியார்மேற் செற்றங் கொளல்.

38. That a big flower should not give much scent is unpleasant; it is unpleasant for one who does not know the ford to get into the water; it is unpleasant for a fool to be questioned. It is most unpleasant to get angry with the low.

௩௯. பிறன்மனையாள் பின்னோக்கும் பேதைமை யின்னா
மறமிலா மன்னர் செருப்புகுத லின்னா
வெறும்புறம் வெய்புரவி யேற்றின்னா வின்னா
திறனிலான் செய்யும் வினை.

39. The folly of going after another's wife is unpleasant; it is unpleasant for cowardly kings to go into battle; it is unpleasant to ride without a saddle a full-blooded horse and unpleasant are all the deeds of the incompetent.

௪0. கொடுக்கும் பொருளில்லான் வள்ளன்மை யின்னா
கடித்தமைந்த பாக்கினுட் கற்படுத லின்னா
கொடுத்து விடாமை கவிக்கின்னா வின்னா
மடுத்துழிப் பாடா விடல்.

40. The generosity of a beggar is no good; unpleasant is stone amid betel-nut when chewing; it is unpleasant on the part of a poet to ask for more gifts after he has been given something; unpleasant too if he does not sing of one who has fed and protected him.

௪௧. அடக்க முடையவன் மீளிமை யின்னா
துடக்க மிலாதவன் றற்செருக் கின்னா
அடைக்கலம் வவ்வுத லின்னாவாங் கின்னா
அடக்க வடங்காதார் சொல்.

41. The prowess of a well-disciplined man will cause pain; painful is the pride of an undisciplined person; unpleasant it is to appropriate a pledge; most unpleasant is the uncontrolled speech of those who refuse to be controlled.

---




## கடைச் சரக்குகளைப் பயன்படுத்தும் முறை

## பெருங்காயம் (Asafoetida)

("காசிகன்" எழுதுவது)

பெருங்காயம் தமிழர் உணவிற் சேர்க்கப்படும் ஒரு பொருள். அது நோய்க்கு மருந்தாகவும் பயன்படுவதாகும். பலசரக்குக் கடைகளிலும் மருந்துக் கடைகளிலும் அது கிடைக்கும்.

நோய்க்கு மருந்தாகப் பயன்படும் காயம் உலர்ந்ததாக இல்லாமல் ஈரமாயும் வெள்ளுள்ளி மணத்தை யொத்த மண முடையதாயும் இருத்தல்வேண்டும். அதை மாத்திரையாகச் செய்தும் குடி நீராகச் செய்தும் பயன்படுத்தலாம்.

நெறிகட்டிக் காய்ச்சல் என்று சொல்லப்படும் ஒருவகைக் காய்ச்சலுக்கு, பெருங்காயத்தில் சுண்டைக்காயளவுக்கு மூன்று நான்கு மாத்திரைகள் செய்து இருப்புக் கரண்டியிலிட்டு நெருப்பிற் பொரித்துக் கொண்டு அவற்றைப் பச்சை வாழைப்பழத்தில் வைத்து உட்கொண்டால் அக்காய்ச்சல் நீங்குமென்பர்.

பத்து "அவுன்ஸ்" நீரில் ஐந்து "திராம்" காயத்தைக் கொஞ்சம் கொஞ்சமாக உறைத்து முழுவதையுங் கலக்கினல், கடைகளிற் கிடைக்கும் கட்டிப்பாலை யொத்த ஒரு பக்குவத்திற்கு வரும். அதை வடிகட்டி வைத்துக் கொண்டால் வயது வந்தவர்கள் வேண்டும்போது உட்கொள்ளலாம்.

சூதக வாயு, மயக்க மூர்ச்சை, நாட்பட்ட இருமல், சுவாச காசம், கடினமான விக்கல், குன்மவலி ஆகிய இந்நோய்களுக்கு மேற்சொன்ன பெருங்காயநீரில் அரை "அவுன்ஸ்" முதல் ஒரு "அவுன்ஸ்" வரை தனித்தாவது, சுக்குக்குடி நீருடன் கலந்தாவது இரண்டுமணி நேரத்திற் கொருமுறை கொடுக்கலாம். வலி மிகுதியாயுள்ளவர்களுக்கு அரைக் குன்றிமணி எடை அபினி உடன் சேர்த்துக் கலக்கிக்கொடுக்கலாம். இவை வயது வந்தவர்களுக்குச் சொல்லப் பட்டவையாம்.

குழந்தைகளுக்கு ஏற்படும் வாயுக்கும் குன்மவலிக்கும் இப் பெருங்காய நீரில் ஒரு தேக்கரண்டி யளவு கொஞ்சம் கறுவாய்ப் பட்டைத்தூளிலாவது, ஓமக்குடி நீரிலாவது கொடுக்கலாம். வலுக்குறைந்து வெளிறின குழந்தைகளுக்குக் காணும் சன்னி யிழுப்புக்கும் அவ்வாறே இரண்டு மணி நேரத்திற் கொருமுறை கொடுக்கலாம்.

குழந்தைகளுக்குக் காய்ச்சலில்லாமல் இருமல்மட்டும் நாட்பட இருப்பினும், காய்ச்சல்கண்டு மாறியபின், வலுக்குறைவும் இருமலும் இருப்பினும், பெருங்காயநீர் நலங்கொடுக்கும். இரண்டுவயதுள்ள குழந்தைகளுக்கு இவ்வித நோய் காணின் ஒரு குன்றிமணி எடை பெருங்காயத்தைச் சிறிது நீரிற் பால் போற் கரைத்து வடிகட்டி இரண்டு மூன்று மணிகட்கு ஒரு முறை கொடுக்கலாம். இந்த எடையைக் குழந்தைகளின் வயதிற் கேற்றவாறு கூட்டியுங் குறைத்துங் கொள்ளலாம்.

"கக்குவான்" என்று சொல்லப்படும் கக்கிருமலுடன் காய்ச்சல் கண்டு, காய்ச்சல் மாறி இருமல் மட்டும் நாட்பட இருந்துவருங் குழந்தைகளுக்கும் காயநீரில் ஒரு தேக்கரண்டி வீதம் நாளுக்கு நாலைந்துமுறை கொடுக்க நலமுண்டாகும்.

---

ஆண் பெண் சேர்க்கையின்றி, அறிவியலாராய்ச்சி முறைப்படி கூட்டப்பட்ட சில மருந்துப் பொருள்களை யுட்கொள்வதாலேயே மகளிர் கருத்தரித்தல் கூடும் என்று மேனாட்டறிஞர்கள் கருதுகிறார்கள். எட்டுப் பெண்கள் அவ்வாறு கருத்தரித்துள்ளதாகவும் செய்தி வெளியிடப்பட்டுளது.

---

# கவின்கலைப் பகுதி—Fine arts

## மத்தவிலாசப் பிரகசனம்

அல்லது

## சம்பந்தர்கால சமயிகள் நிலை

[திரு. தி. கி. நாராயணசாமி நாயடு அவர்கள்]

(௫௫௫ - ம் பக்கத் தொடர்ச்சி)

இந்நாடகத்தை இயற்றியவன் முதல் மகேந்திரனே என்பதற்கு நாடக முன்னுரையில், நாடகாசிரியன் சிம்மவிஷ்ணு வர்மனுன பல்லவ மன்னன் மகன் என்றும், முடிவுரையில் சத்ருமல்லன் என்ற இவனது விருதுப்பெயர் வருதலானும், மாமந்தூரிலுள்ள இவனது கல்வெட்டில் இந்நூற் பெயர் காணப்படுதலானும், குணபரன், மத்தவிலாசன் என்ற பட்டக் கிளவிகள் இந்நாடகத்தின் நடுவண் இரட்டுற மொழியும் நயத்துடன் பயந்து வருவதானும், எழுவாயில் வரும் 'வ்யாப்தாவ நிபாஜநம்' என்ற தொடர் அவனது பட்டப்பெயராய அவநிபாஜநனைக் குறிப்பதானும் தெளிவு.

துப்ராய், பார்னட், கீத், மறைமலையடிகள், பி. தி. சீநிவாச ஐயங்கார், டாக்டர். கிருஷ்ணசாமி ஐயங்கார், கோபான் இன்ன ஆசிரியர்கள் இந் நாடகத்தைப் புகழ்ந்து சிறப்பித்ததை யுன்னி இத்தமிழ் மொழிபெயர்ப்பு மூலத்தைத் தழுவி எழுதப்பட்டது. பிராகிருத நடையை வாயுரை நடையில் வைக்கப்பட்டிருக்கிறது.

நகவே தகும் எம்பிரான் நீசெய்த நாடகமே
—திருவாசகம்.

(கீழ்வருவன இந்நாடகத்தைக் குறித்த ஆராய்ச்சி யுரைக் குறிப்புகள்)

**L. D. Barnett.**

But within this loosely jointed frame-work there is much rollicking fun of the knock-about kind, with no small measure of wit and humour. The characters are vigorously drawn, especially the tipsy Kapalin with his unfailing flow of logic and theology

and the Buddhist monk with his leanings towards wine and beauty and his desire to find scriptural warrant for them, while the damsel's shrewish feminity is cleverly sketched, and the poor lunatic babbles and acts with a consequent inconsequence that reminds the reader of Lewis Carroll. Altogether the little play is a remarkably smart product of the picaresque genre, replete with mirth and satire.

**'The Sanskrit Drama' by A. B. Keith.**

Page—185. "The author undoubtedly shows a considerable knowledge of the tenets of the Buddhists, and the play is not unamusing, though the subject is much too trival for the pains taken to deal with it. The style is certainly appropriate to the subject-matter; it is like that of Harsha, simple and elegant, while many of the verses are not without force and beauty. . . . . There is, as in all the later Prahasanas, a certain incongruity between the triviality of the subject-matter and the elaboration of the form but the king has the merit of avoiding gross vulgarity which marks normally the later works of this type."

"Short as the play is, it shows a variety of Prakrits, for of the *dramatic personae* only the Kapalin and the Pasupata speak Sanskrit, while the madman, the Buddhist, and Devasoma talk in Prakrit."

**Dr. S. Krishnaswami Iyangar.**

A sanskrit burlesque ascribed to him and called Mattavilasa Prahasana is not merely evidence of what may be regarded as partiality for sanskrit literature, but it also throws considerable light upon religious condition of the times. The purpose of the work is to bring into ridicule the votaries of the various cults that prevailed at the time. An ascetic Pasupata, a Kapalika and his wife, and a Buddhist mendicant are brought into colloquy in the play and held up to ridicule. The omission of the jain in this group may be led to the inference that at the time he composed the work Mahendra was a jain, and might thus lend support to the Saiva tradition that rather late in his life he was converted to Saivism by the SAINT APPAR.

That a work of the character of Matta-vilasa Prahasana should be composed in Kanchi for the purpose for which it should have been intended, is evidence of a certain degree of prevalence of Sanskrit learning.

(Some Contributions of South India to Indian Culture—Page 204.)

**Light thrown on contemporary life by the work:—**

This little play is full of interest to the student of religious history as it affords valuable material regarding the extinct Kapalika Faith, and the vices of Sakya Bikshus and the views regarding the teachings of the Buddha held by the followers of other religions, such as Kapalikas. "From the Mattavilasa prahasana it becomes very clear that to a Kapalika the Kapala is as essential as is a sacred thread to a Brahmana. If he loses it he should provide himself with another in a stated time. He should cover his body with ashes and make himself hideous, and drink liquor from skull of a human being . . . . one of his articles of faith is that the effect always resembles to a certain extent, the cause; therefore, from the practice of the austerities in this life one cannot obtain bliss in another life since austerities and bliss are of opposite nature. The Kapalikas carried in addition to the Kapala, a cow's horn both for blowing during their worship and drinking from. The people of this faith associated freely with women Kapalikas. . . . . . . . The opinions held by the particular Kapalika, Bhatya-soma of our play, regarding the sakyabikshus, are that the sakyabikshus indulged freely in animal food and fattened themselves pecuniarily by being the managers of several Viharas, and led a comfortable life, against all the rules of their order; they covered themselves only to conceal their foibles. Their teacher Buddha, did nothing more than steal his doctrines from the Vedanta and the Mahabaratha of the Brahmans, and compiled therefrom his doctrines. The mention of Buddhas, Bikshus, Kapalikas and Pasupatas, in his burlesque by Mahendravarman I. as among the inhabitants of Kanchipuram bear out the surmise that Buddhism flourished there till atleast the seventh century A D. and that the statement of HIUEN TSANG regarding the existence in Kanchipura of a large number of Viharas find support in this work of Mahendravarman.

R. GOPALAN, M.A.

*(The Pallavas of Kanchi—Page 94)*

---

காலஞ் சென்ற இசைக்கலை முடிமன்னர்

# திரு. (நாயனு) சுப்பிரமணிய பிள்ளை

(முகப்புப் படம் பார்க்க)

காஞ்சி மாநகரில் 1887-ம் ஆண்டு ஜூலைத் திங்களில், சிறப்பு வாய்ந்த இசைவாணி தனக்கோடி யம்மாளுக்குப் புதல்வராக திரு. நாயனு பிறந்தார். மாநிறமும் கட்டமைந்த உடலும், கள்ள மற்ற பரந்த முகமும் அகன்ற கண்களும் உடையவர்.

இளமையில் அவர் தெலுங்கே பயின்று வந்தார். பின் சிறிது காலங் கழித்துத் தாமாகவே தமிழ்க்கல்வி பயின்றார். சிறிது ஆங்கிலப் பயிற்சியுமுடையவர். ஏறக்குறைய பதினெட்டு வயது வரையில் இசையில் மிகுந்த ஆர்வமின்றி சிலம்ப வித்தை யிலும் மற்போரிலுமே ஆர்வங்கொண்டு பழகிவந்தார்.

எட்டையபுரம் இராமச்சந்திர பாகவதர் என்பார் காஞ்சி புரத்தில் இசையரங்குகள் கூட்டிப் பாடிவந்ததைக் கேட்டபோது தான் பிள்ளையவர்கட்கு முதன்முதல் இசையுணர்ச்சி யுண்டா யிற்று. அதன்பின் சென்னையில் கோனேரிராஜபுரம் வைத்திய நாத ஐயர் பாட்டைக் கேட்டு அவரையே இசைக்குத் தெய்வ மாகச் சிலகாலங் கருதிவந்தார்.

இவ்வாறிருக்கையில் கோனேரிகுப்பத்தினருகிலுள்ள திரு வீரட்டானேசுவரர் கோவிலில் வந்து தங்கியிருந்த ஒரு முனி வரின் நட்பு இவருக்கு உண்டாயிற்று. நாலரையாண்டளவு அவரிடம் இசை நுணுக்கங்களையும், பல்லவி பாடும் வழி, அமைப்பு, தாள வரிசை முதலியவைகளையும் பிள்ளையவர்கள் கற்றுக்கொண்டார். பல்லவியின் சொற்கோவைக்குரிய இலக் கணங்களில் மூன்றைக் கற்றுக்கொண்டார். மற்ற இரண்டையும் கற்றுக்கொள்வதற்குள் முனிவர் மறைந்தருளினார். இதற்குள் பிள்ளையவர்கட்கு மணமுமாயிற்று.

இதுமுதல் இசையரங்கில் ஈடும் எடுப்பும் இல்லாத நிலையில் பிள்ளையவர்கள் இருந்துவந்தனர். முதன்முதலாக இசையரங்கு களில் தமிழ்ப்பாட்டுக்கு மேன்மையும் முதன்மையும் அளித்தவர் திரு. பிள்ளையவர்களே. இசைக்குரிய தாளவகைகள் எல்லாம் அருணகிரிநாதர் திருவாய்மலர்ந்தருளிய திருப்புகழ்க் கருவூலத்தி லேயே அமைந்துகிடக்கின்றன என்பதை யெடுத்துக் காட்டித் திருப்புகழ்க்குப் பெரும்புகழ் அளித்தவர் பிள்ளையவர்களே. இதனாலேயே முருகப்பெருமான் மீதும் திருப்புகழ், தேவார திரு வாசகங்கள் ஆகிய தமிழ் மறைகளின்மீதும் அவர் கொண்டிருந்த பற்று விளங்காநிற்கும். மட்டற்ற புது இராகங்களையும் பண்

களையும் தாமே உற்றுணர்ந்து அமைத்துப் பாடிய பெருமை பிள்ளையவர்கட்கே உரியதாகும். பூவென்றால் தாமரை என்பது போல, பல்லவி யென்றால் திரு. நாயனபிள்ளைதான் என்ற பெயர் வழங்குவதாயிற்று. மடங்கலேற்றைப்போல் இசையரங்குகளில் அமர்ந்து அவர் பாடத் தொடங்கின் வேறு எவ்விசைவாணர் அவர்முன் வாய்திறக்கக்கூடும்?

தமிழ் நாட்டில் எந்த இசைவாணரிடம் கற்றுக்குட்டிகள் மிகுதி யென்று கேட்டால் திரு. பிள்ளையவர்களிடமேயென்று எல்லோரும் கூறுவார்கள். தம்மிடமுள்ள கற்றுக்குட்டிகள் தம்மைப்போற் பாடிப் பெயர்பெறுவதே தமக்குப் பெருமை யென்பது பிள்ளையவர்கள் கொள்கை. கற்றுக்குட்டிகளுக்கு இசை பயிற்றுவிக்குங்காலத்தில் அவர்கள் ஒவ்வொருவருக்கும் வேண்டிய வசதிகளைச் செய்துகொடுத்து அவர்களுடைய அன்பைப் பிணித்துக்கொள்வதில் பிள்ளை இணையற்று விளங்கினர். கற்றுக்குட்டிகளில் தலைசிறந்து விளங்குபவர், சித்தூர் சுப்பிரமணிய பிள்ளையவர்களாவார்.

தமிழிசையில் வைத்த ஆர்வ மிகுதியினால் திருநெல்வேலி சுந்தர ஓதுவாமூர்த்திகளைத் தம் சிறந்த நண்பர்களில் ஒருவராக அவர் கொண்டிருந்தனர்.

இத்தகைய முடிசூடாமன்னராயிருந்து விளங்கிய பெரியார் இவ்வாண்டு மேத்திங்கள் 2-ம் நாள் இரவு விண்ணுலகேகினர். ஒப்பற்ற இவ்விசையுலக ஒளிக்கோள் மறைந்ததற்கறிகுறியாக அன்றிரவு ஒரு பெரிய விண்மீன் பேரொளிவிட்டு விண்ணிழிந்து விழுந்தது. இதனைக் காழிமாநகரிலும் மன்னார்குடியருகிலுமுள்ளார் பார்த்ததாகச் செய்தித்தாள் கூறுகிறது.

எதிர்பாராத வகையில், முதிரா வயதில், பிள்ளையவர்கள் உலக வாழ்வை நீத்தது தமிழ்நாட்டின் தவக்குறையே. வயது சென்ற அவர் தாயாருக்கும், மனைவியாருக்கும், இரண்டு பிள்ளைகளுக்கும், ஒரு பெண்ணுக்கும் இறைவன் ஆறுதல் அளிப்பானாக. மகனறிவு தந்தை யறிவு என்பதற்கிணங்க இறந்த தம் தந்தையின் இசைக்கலை நலங்களையெல்லாம் கொண்டிலகும் அவர்தம் மகனார் திரு. இரத்தினசாமியைத் தமிழ் நாட்டார் போற்றுவது இறந்த பிள்ளையவர்களுக்குச் செய்யும் இணையற்ற கைம்மாறாகும். திரு. இரத்தினசாமியார் இளமையிலேயே சிறந்த இசைக்கலைவாணர்களில் ஒருவராய்த் திகழ்வது குறிக்கற்பாலது.

இசை யுலகில் பேரிசையுடன் திகழ்ந்து மறைந்த ஒப்பிலா இசைவாணர் நாயன சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் ஆன்மா தோன்றாத்துணையாய் உடனிருந்து தமிழையும் தமிழிசையையும் தமிழர் பெருமையையும் கைதூக்கிவிடுவதாக. (கா. சிவ. க)

# செய்திகளும் குறிப்புகளும்
# News and Notes

சென்னைப் பச்சையப்பன் மண்டபத்தில்

## இரங்கற் கூட்டம்

காலஞ்சென்ற திரு. (நாயனு) சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் பிரிவாற்றுமையைக் குறித்து, சென்னை மார்க்க சகாய சங்கீத சபையாரின் ஆதரவில், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரின் நன்முயற்சியால், சென்ற 7-5-34 ஞாயிறன்று சென்னைப் பச்சையப்பன் மண்டபத்தில் பெரியதோர் இரங்கற் கூட்டம் கூட்டப்பட்டது. அதுகாலை, இராவ் பகதூர் ப. சம்பந்த முதலியார், இராவ் சாஹிப் ம. இராமச்சந்திரஞ் செட்டியார், டைகர் வரதாசாரியார், முசிரி சுப்பிரமணிய ஐயர், திரு. சாம்பமூர்த்தி ஐயர், எம். எஸ். இராமசாமி ஐயர், T. L. வேங்கடராம ஐயர், சித்தூர் இசைவாணர் சி. சுப்பிரமணிய பிள்ளை, திரு. பாண்டியா, ஆர். ஜனார்த்தனம் நாயுடுகாரு, பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலியார், எம். கந்தசாமி முதலியார், பல பெண்மணிகள் உள்ளிட்ட ஆயிரத்திற்கு மேற்பட்ட பெருந்தொகையினர் குழுமியிருந்தனர். இராவ்பகதூர் ப. சம்பந்த முதலியார் அவர்கள் தலைமை பூண்டனர். கூட்ட நடைமுறை 5-30-மணிக்குத் துவங்கியது.

தலைவர் முன்னுரை மொழிந்தபின், வித்வான் பாரிப்பாக்கம் கண்ணப்ப முதலியாரவர்களும், வித்வான் காழி சிவ. கண்ணுசாமி பிள்ளை, B. A. அவர்களும் பாடிய இரங்கற்பாக்கள் படிக்கப்பட்டன. சென்னை இசைக் கழகத்தார் (Music Academy) அனுப்பிய இரங்கல் மடங்கல் படிக்கப்பட்டது. காலஞ் சென்ற இசைக்கலை முடிமன்னர், மடங்கலேறு திரு. பிள்ளையவர்களின் பண்பு நலங்களைப் பாராட்டித் தமிழிலும் ஆங்கிலத்திலும் தெலுங்கிலும் உரைகள் நிகழ்த்தப்பட்டன. இசை வல்லுநர்களான டைகர் வரதாசாரியார், சாம்பமூர்த்தி ஐயர், ஈ. கிருஷ்ண ஐயர், எம். எஸ், இராமசாமி ஐயர் முதலியோர் இசைக் கலை

யுலகில் திரு. பிள்ளையவர்கள் எவ்வாறு ஒப்பும் உயர்வும் அற்ற தனிப் பெருமை வாய்ந்த தனிச் சுடராக விளங்கினர்களென்பதையும், தம்மிடம் சேர்ந்த கற்றுக்குட்டிகளை எவ்வாறு முழு மனதுடன் திறம்பட ஆதரித்து வந்தார்களென்பதையும், இசைக் கலையுலகில் இதுகாறும் எவரும் அறிந்திராத "ஜகன்மோகினி" போன்ற புதிய இராகங்களில் எத்துணைப் பயிற்சியும் பல்லவி யமைத்துப் பாடுந் திறனும் பெற்று இருந்தார்களென்பதையும் பலப்படப் பாராட்டி வியந்து கூறிய உண்மை யுரைகள் அங்குக் குழுமியிருந்த ஆயிரத்திற்கு மேற்பட்ட தொகையினரான மக்கள் ஒவ்வொருவரின் உள்ளத்தையும் உருக்கிவிட்டது. பிள்ளையவர்களின் அஞ்சாநெஞ்சமும் இசை நுணுக்க ஆராய்ச்சியும் எடுத்து மொழியப்பட்டன. அதன்பின் கூட்டம் சிறிது பொழுது எழுந்துநின்று பிள்ளையவர்களின் பிரிவாற்ருமையினல் நேர்ந்த துக்கத்தைத் தெரிவித்தது. பிள்ளையவர்களின் குடும்பத்தாருக்குஅநுதாபந் தெரிவிப்பதாக ஒரு தீர்மானம் நிறைவேறியபின், அவர் ஞாபகச் சின்னம் ஒன்று சென்னையில் நிறுவுதற்குத்தக்க ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்ற ஒரு தீர்மானமும் முழுமனதுடன் நிறைவேறியது.

இதற்கென, திவான் பகதூர் கொம்மிரெட்டி சூரியநாராயணராவ் நாயுடுகாரு, சேத்தூர் ஜமீன்தாரவர்கள், இராவ்பகதூர் ப. சம்பந்த முதலியார், இராவ்சாகிப் ம. இராமச்சந்திரஞ் செட்டியார், புதுக்கோட்டை தட்சிணுமூர்த்திப் பிள்ளை, டைகர் வரதாசாரியார், புரொபஸர் சாம்பமூர்த்தி ஐயர், சித்தூர் சுப்பிரமணியப் பிள்ளை, நாதசுவரம் வீருசாமி, வேனுநாயர், அனந்தநாராயண ஐயர், வீணை தனம்மாள், சரஸ்வதிபாய், தி. க. இராஜஇராஜன், வி. சுப்பையா பிள்ளை, காழி சிவ. கண்ணுசாமி B. A. T. சங்கரன் B.A. முதலிய பத்தொன்பதின்மர் அடங்கிய ஒரு சிறு குழுவினர் தேர்ந்தெடுக்கப்பட்டு மற்றும் வேண்டியவர்களையும் அவர்கள் இணைத்துக் கொள்ளலாமெனப் பணிக்கப்பட்டது. வசூலிக்கப்படுந் தொகைகளின் வரவு செலவுக் கணக்குகளை மாதா மாதம் 'செந்தமிழ்ச் செல்வி' யிலும் இதர செய்தித் தாள்களிலும் வெளியிடப்படுமென அறிவிக்கப் பட்டபின் கூட்டம் 7-30 மணிக்குக் கலைந்தது.

---

காஞ்சிமாநகரில்

3-5-1934-ல் துஞ்சிய இசைக்கலை முடிமன்னர், மடங்கலேறு

திரு. (நாயனு) சுப்பிரமணியபிள்ளையவர்களின்

# பிரிவாற்ருமை

I

அருணகிரிப் பெருமானின் அருந்தமிழே விருந்தாக
அகில மெல்லாம்
தருணமெனக் கலந்தருந்தத் தனித்தான அடைவுகளின்
தகைமை எல்லாம்
வருணமிகக் காட்டிவளர் நாயனு வென்றுலகு புகழ்
வளத்தின் மிக்கோய்
தருணமிலாத் தருணமதில் தருவளரும் நாடுபுகல்
தருமந்தானே.

என்னுறுநல் இசைவளத்தின் இயல்பனைத்தும் இனிதுணர்ந்த
இசைநலத்தால்
மன்னுறுநல் இசைப்புலவர் பெருமானென்றுலகேத்தும்
பதம்படைத்தோய்!
மன்னுறுவார் ஒருவருமிங் குனக்குநிகர் இல்லாமை
மதித்து நீதான்
விண்ணுறுநல் யாழினர்தம் விஞ்சைதனை யளந்திடவும்
விரும்பினையோ.

இதயவெளி யதனின்அரு நடனமிடு ஒளியதனின்
இயல்புணர்ந்தங்
கிதயவொளி பெருகுநிலை யடையவருள் எழில்நாதத்
தின்னலத்தால்
உதயவொளிப் பானுவென உதித்திடுநீ மறைந்திடவும்
உற்றதென்னே
இதயவெளிப் பெருமானின் இன்புகழே நன்புகழா
இசைத்து வாழ்ந்தோய்.

—வித்துவான், பாரிப்பாக்கம், கண்ணப்ப முதலியார்.

II

# இரங்கற்பா

இடைச்சங்கந் தனிலிருந்த இசைநுணுக்க மறைந்திடவே
படைத்திடுமோ தமிழ்மொழியும் பார்தனிலே இசைக்கலையே
படைத்திடுமே லிசைக்கலையும் பாங்குறுநற் றீந்தெலுங்கோ
இடைப்புகுந்த வடமொழியோ இயற்றமிழோ வதுமொழியாய். ௧

என்றுரைத்த மடவோர்க்கு எடுத்தியம்பு நல்விடைபோற்
றுன்றுமரப் பொழில்சூழுந் தூமணியின் றளிநிறைத்து
மூன்றில்வளங் கொழிகாஞ்சி மாநகரந் தனிற்பிறந்து
குன்றெறிந்து சூர்தடிந்த குகப்பெருமான் பெயர்புனைந்தே. ௨

இசைதனக்கே யோர்வரம்பா யெழிற்பண்ணின் றாரகமாத்
திசையெங்கும் புகழ்மணக்கத் தேன்றமிழின் பெயர்நிலைக்க
வசையொழிக்குங் கோளரிபோல் வையகத்தே வாய்ப்பாட்டில்
நசைமிகுக்க விசைபொழிந்த நாயகனே நயினுவே! ௩

சிறப்புடனே விந்நாளிற் செறித்திசைக்குந் தாளமெல்லாம்
வறப்பறியா மலைநாட்டின் வருமருணகிரிநாதன்
பிறப்பொழிக்க மொழிந்தளித்த பெருமைபெறு திருப்புகழாந்
திறப்புடைநற் களஞ்சியத்திற் றேர்ந்தவெனத் தெளிந்தோயே. ௪

மலைக்கோட்டைக் கோவிந்த மாமதியோன் முன்மரித்தான்
தலையோட்டிற் பலிதேர்ந்தோன் றந்ததமிழ் காமிழந்தாள்
நிலைநாட்டிப் புகழ்நிறுத்த நீர்மையனே நீமரித்தாய்
கலைநாட்டித் தலைதூக்கக் காரிகையுங் கண்ணிழந்தாள். ௫

—காழி. சிவ. கண்ணுசாமி. B. A.

III

புள்ளும் விலங்கும் புவிமீதில்
பொருந்துசீவ ராசியெலாம்
உள்ளம் உருகிக் களிப்பெய்ய
ஊட்டும் சிறந்த சங்கீதம்
கள்ள மின்றி யடுத்தவர்க்குக்
கரந்த வித்து வான்நயினப்
பிள்ளை யிறந்த பொழுதேதன்
பெருமை யிழந்த தெனலாமே. க

கன்னல் புளிக்கத் தேன்கசக்கக்
கனிந்த பாவின் இன்ரசத்தில்
சன்னம் என்னும் சங்கீத
சரக்கைக் கரைத்துப் பாடுவதில்
மன்னே நயினப் பிள்ளையென
வசையில் சீர்த்தி நிறுவியநீ
இந்நாள் மறைந்தா யெனும்போதே
இசையு மிறந்த தெனலாமே. உ

—S. சங்கரலிங்க முதலியார்.

IV

## மாணவர் வாயுரை

ஞாலம் போற்றும் நவையறு தொன்னத்
தமிழக வரைப்பிற் சார்ந்திடு தொண்டை
வளநா டதன்தலை வயங்கிடு காஞ்சி
நன்னகர் தன்னிற் பன்னருஞ் சிறப்பின்
நல்வளஞ் சிறந்த நல்லிசைப் புலவன்
திராவிட ஞானம் திகழ்ந்திட வந்தோன்
மறுவரு காட்சி மாணவர் பலர்க்கு
மகிழ்ந்திடு மிசையின் மணம்நுகர் வித்தோன்
செந்தமிழ் நாட்டுச் சீருடை மக்கள்
யாவருமறிய இசைபெற வாழ்ந்தோன்
இருளுறு ஞாலத் தியற்கைத் தேவி
நலம்பெறு புதல்வன் நாயனப் பிள்ளையாய்
நானிலத் துயர்ந்த நல்லிசைக் கடலின்
ஆழ்ந்தனை கொல்லோ யாண்டுளங் கொல்லோ
இசைபெறு குழவி எழினலந் துய்க்க
ஏங்கிய மைந்தர் பாங்குடன் கூடி
இயற்றிய கூற்றி னினிமை நுகர்ந்து
ஏந்திய புகழின் என்றும்
வாழ்க நின் கொற்றம் வளநாள் பலவே.

—பண்டிதர், எதிராஜுலு நாயுடு.

# கங்கை நீரின் சிறப்பு

[டாக்டர் ஃவி. இ. நெல்சன், எம்.டி.]

கங்கையாறு தெய்வத் தன்மை பொருந்தியதென்றும் அதன் நீர் தூய்மையாய் என்றுங் கெடாத பண்புடையதென்றும் இந்தியர்கள் உறுதி கூறுகிறார்கள். அது எப்பொழுதும் அழுக்கும் நோய்க் கிருமிகளும் மலிந்திருப்பதொன்றென்று (ஆங்கிலர், ஐரோப்பியர் முதலிய) நாம் கருதுகின்றோம்; ஏனெனில் இந்தியாவின் சிறந்த தெய்வத் தலமாகிய காசி நகரத்தில் நாடோறும் நூறாயிரக் கணக்கான மக்கள் கடமை கருதியும் மத நம்பிக்கை கருதியும் மூழ்கி வருகின்றனர்; சாக்கடை நீர், பிணங்கள் முதலியவும் ஏனைய கழி பொருள்களும் அதன்கண் சேர்க்கப்படுகின்றன என்பவற்றாலேயே.

இவ்வாறிருக்க, கங்கை நதியின் கிளைகளில் ஒன்றாகிய ஹூக்ளி நதியின் நீரை மூகந்துகொண்டு கல்கத்தாவிலிருந்து இங்கிலாந்திற்குச் செல்லுங் கப்பல்கள் இங்கிலாந்து சேரும் வரையில் வேறு நன்னீர் தேடாமற் சென்று சேர்கின்றன. இறுதி வரை, ஹூக்ளியில் மூகந்த நீர் கெடாமல், தூய்மையாகவே இருந்துவருகின்றது. ஆனால் இங்கிலாந்திலிருந்து இந்தியா நோக்கி வருங் கப்பல்களோ பம்பாய் வந்து சேரும் வரையிற்கூட கெட்டுப்போகாம லிருக்கும் தன்மை வாய்ந்த நன்னீரைப் பெற இயலாதனவா யிருக்கின்றன. பம்பாயிலிருந்து கல்கத்தாவைக் கப்பல் மூலமாய்ச் சென்று சேர ஒரு வாரம் பிடிக்கும் என்பது நினைவு கூர்தற்குரியதாம். இங்கிலாந்தில் தேம்ஸ் நதியின் நீரை முகந்துகொண்டு புறப்பட்டு இந்தியாவின் முன்துறையாகிய பம்பாயைச் சேர்வதற்குள் "போர்ட் ஸெஃட்" என்னுமிடத்தில் ஒரு முறையும், ஸூயஸ் அல்லது செங்கடலிலுள்ள ஏடன் என்னுமிடங்களில் ஏதாவதொன்றில் மற்றொரு முறையும் நன்னீர் தேடிக்கொள்ள வேண்டியதாக இருக்கின்றது. தேம்ஸ் நதியிலுள்ள நீர் அத்துணை நலங் கெட்டதொன்றா?

கங்கை நீரில் கணக்கற்ற அழுக்கு மலிந்த கழி பொருள்கள் சேர்வதாலேயே அந்நீர் அத்துணைத் தூய்மையுடையதாக இருக்கிறது என்று கூறினால் விந்தையாகத் தோன்றும். ஆயினும் இதுவே உண்மையென்று அண்மையிற் கண்டுபிடிக்கப்பட்ட அறிவியலாராய்ச்சி முடிவுகள் வலியுறுத்துகின்றன.

வாந்திபேதி (காலரா) வயிற்றுளைச்சல் (டிஸன்ட்ரி) ஆகிய தொத்து நோய்கள் பெரும்படியாகப் பரவி யிருந்த காலங்களில் அந்நோய்வாய்ப்பட் டிறந்தவர்களைக் கங்கையில் எறிந்தபொழுது, அவ்வாறு எறியப்பட்ட இடங்களிலோ; அவற்றின் இரண்டடிச் சுற்றிலோ நூறாயிரக் கணக்காக இயல்பிலே காணக் கூடிய அந்நோய்ப் புழுக்கள் காணப்படுகின்றனவா என்று டாக்டர். தரேலே என்ற பிரெஞ்சு மருத்துவர் ஆராய்ந்து பார்த்தார்; மருந்துக்குக்கூட ஒரு புழுவை அவர் பார்க்க வியலவில்லை. எனவே, அந்நோய்களால் வருந்

திக்கொண்டிருக்கும் நோயாளிகளின் உடல்களிலிருந்து அவர் அவ் வந்நோய்க்குரிய புழுக்களை எடுத்துப் பெருக்கி அப்புழுக்கள் கொண்ட கலத்தில் கங்கை நீரை ஊற்றினர். ஊற்றி, அக்கலத்திற் சூடேற்றிய போது அப்புழுக்கள் அத்துணையும் இறந்துபடக் கண்டு வியப்புற்றார். அவ்வாறு இறந்துபட்ட புழுக்கள் நிறைந்த நீரின் ஒரு துளியை நோய்ப்புழுக்கள் நிறைந்த மற்றொரு கலத்தில் ஊற்றியபொழுது அக் கலத்திலுள்ள புழுக்கள் அவ்வளவும் இறக்கக் கண்டார். இதனால் கங்கை நீர் காலரா வயிற்றுளைச்சல் ஆகிய நோய்களின் புழுக்களைக் கொன்று அந்நோய்களைத் தடுக்கும் ஆற்றல் வாய்ந்ததெனக் கண்டார்.

இவ்வாராய்ச்சியை யொருபுறம் நிறுத்தி, கங்கை நீரை யருந் தியே காலரா வயிற்றுளைவு முதலிய நோய்களிலிருந்து நீங்கித் தேறிய மக்கள் சிலரின் மலமாகிய கழிபொருளின் துணை கொண்டும் அந் நோய்ப் புழுக்களைக் கொல்வது எளிதெனவுங் கண்டுபிடித்தார். இவ் வாறு கங்கை நீரைக்கொண்டாவது, நோய் கண்டு தேறிய மக்களின் மலப் பொருளின் துணை கொண்டாவது மடிவித்த நோய்ப் புழுக் கரைவு (Solution) கொண்டு காலரா வயிற்றுளைவு கண்ட நோயா ளிகளை ஒரே நாளிற் றேற்றலாம் என ஆராய்ந்து கண்டுபிடித்தார். இக்கரைவு "பெக்டீரியோஃபேகெ" என்று ஆங்கிலத்திற் பெயர் பெறும்.

இந்த விந்தையான கரைவைக் கொண்டு காலராவும் வயிற்றுளை வுமேயன்றி, பித்த வாதக் காய்ச்சல், முகப்பரு, குருதிக் கட்டிகள், பிளவைகள், முதலிய ஏனைய பல நோய்களும் தீர்கின்றனவென்றும் அவர் ஆராய்ந்து தெரித்துள்ளார்.

(இந்து) —கா. சிவ. க.

---

திருநெல்வேலி ஜில்லா நான்குநேரித்தாலுகா மூலக்கரைப்பட்டி நிலக்கிழவரும், திருநெல்வேலிவட்டம் தேவஸ்தான கமிட்டி உறுப் பினரும், நான்குநேரி தாலுகா போர்டு தலைவரும் ஆகிய திரு. B. குருவையா ரெட்டியார் அவர்கள் சென்னையில் மே 1௨ விண் ணுலகடைந்தது பெரிதும் இரங்கற்பாலது. அவர்கள் பிரிவாற்றாது வருந்தும் சென்னைக் கல்வி யமைச்சர் திவான்பகதூர் S. குமாரசாமி ரெட்டியாரவர்கட்கும், சுற்றத்தார்க்கும் இறைவன் ஆறுதலளிப்பானாக.

---

அரசியல்வல்ல திரு. ஸர். சங்கரன் நாயரும், உயர்தர நீதி மன்ற நீதிபதியாயிருந்து ஓய்வு பெற்ற ஸர். வி. வி. குமாரசாமி சாஸ்திரி யாரும், மருத்துவக்கலை மேதாவியான டாக்டர். எஸ். அரங்காசாரி யாரும், வாணிப திலகரான ஸர். ஹாஜி இஸ்மெயில் சேட்டு அவர் களும் இவ்வுலக வாழ்வை நீத்தமை பெரிதும் வருந்துதற்குரித்தாம்.

---

# புத்தாண்டு வாழ்த்து



1. பிறந்தது ஆண்டு பறந்தது சோகஞ்
சிறந்தது நானில மூந்தீபற
இரிந்தது வறுமைதா னுந்தீபற.

2. ஆர்த்தன பல்லிய மார்த்தன சங்க
மார்த்தன மாமணி யுந்தீபற
அரனருள் சுரந்ததென் றுந்தீபற

3. பாலக ஞரன்று பானுகர்ந் தருளிய
கோலத் திருத்தமிழ்க் குந்தீபற
கொடியுயர் செந்தமிழ்க் குந்தீபற.

4. பலப்பல சமயமுங் கலகல கூடினு
முலகிடைச் சைவமே யுந்தீபற
ஓங்கி யொளிருமென் றுந்தீபற.

5. நாடு சிறக்க நற்றமிழ் சிறக்க
பீடுயர் சைவமு மூந்தீபற
பெருகித் தழைக்கவே யுந்தீபற.

—காழி. சிவ. கண்ணுசாமி B. A.

# பவ ஆண்டு

(புது வருடம்)

பவஎனும் ஆண்டு பலவளம் பெருக்கி
நவமுறை களிலே நலந்தனைத் தருக,
சிவஎனும் ஒலியினைச் சிந்தையிற் கண்டவர்
அவமுறை களெலாம் அகற்றிட முயல்க. 1

பணநெருக் கடியொடு பலதுன் பங்களும்
பிணமதைப் பெருக்கிய பீகா ரதிர்ச்சியும்
உணவது கிடைத்தும் உழவர்கொள் வறுமையும்
கணமதில் மறந்திடக் கனலெனத் தொலைக. 2

வந்திடும் ஆண்டு வளம்பல நிறைந்து
தந்திடும் பொருள்நிலை தண்குடி உய்யவே
முந்திடும் நற்செயல் முறைமையில் வளர்ந்திட
உந்திடும் நெஞ்சினில் ஊக்கம தூட்டியே. 3

வரப்பல பெற்றிட வகைகளைச் செய்வோம்
உரம்பல உற்றிட ஊக்கமும் கொள்வோம்
சிரம்பல உயர்ந்திடச் சிறப்புகள் காண்போம்
பரம்பொருள்வாழ்த்தியேபவ ஆண் டழைப்போம்.

—கோவை. ம. இராமச்சந்திரஞ் செட்டியார்.



அஷ்டாவதானம்

பூவை-கலியாண சுந்தர முதலியார்

54
1845—1918.

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது


| | | |
|---|---|---|
| சிலம்பு கஉ | மெய்கண்டான் யாண்டு-எகக வைகாசித்திங்கள் 1934ஆ மேமீ—ஜூன்மீ | பரல் ம |


## திருஞான சம்பந்த அடிகள் தேவாரம்

ஒல்லையாறி யுள்ளமொன்றிக் கள்ள மொழிந் துவெய்ய
சொல்லையாறித் தூய்மைசெய்து காமவினை யகற்றி
நல்லவாறே யுன்றனாம நாவினவின் றேத்த
வல்லவாறே வந்துநல்காய் வலிவலமே யவனே.

பதவுரை:—

வலிவலம் மேயவனே—திருவலிவலம் என்ற தலத்தில் திருக்கோயில் கொண்டருளியிருக்கின்ற சிவபெருமானே

உள்ளம் கள்ளம் ஒழிந்து ஒல்லை ஆறி ஒன்றி—(நான்) எனது உள்ளமானது ஐம்புலன்களோடு உலக இன்பம் நாடிச் செல்கின்ற வஞ்சனையினின்று நீங்கி, அதனால் விரைவில் அமைதி அடைந்து, அதனால் நின்னொடு கலந்துநின்று தூய்மை பெற்றும்

வெய்ய சொல்லை ஆறித் தூய்மை செய்து (உம்)—(எனது நாவானது) எவ்வுயிரினிடத்தும் துன்பந்தரும் கொடுஞ் சொல்லைச் சொல்லாது தணிந்து தூய்மை பெற்றும்

காமவினை அகற்றி (உம்)—(எனது மெய்யானது) உலகப் பொருளை நுகரும் செயலினை நீங்கித் தூய்மை பெற்றும்

நல்ல ஆறு—(இவ்வாறு எனது உள்ளம், நா, மெய் ஆகிய மூன்று கருவிகளும்) தூய்மைபெற்றிருக்கிற நல்லவழியில்

உன்றன் நாமம்—நினது திருப்பெயராகிய அஞ்செழுத்தை

வல்ல ஆறு—வீட்டின்ப மாகிய நற்பயனை எனக்கு அளிக்கவல்ல வழியில்

நா இன் நவின்று ஏத்த—எனது நாவானது இடைவிடாது ஓதி உட்
 பொருளை உணர்ந்து கரைந்துருகித் துதிக்கும்படி
வந்து—எனது உள்ளத்தில் விளங்கி நின்று
நல்காய்—தண்ணளி செய்து காத்தல் வேண்டும்.

**விளக்கவுரை:—**

உயிர்ப்பற்று பொருட்பற்றுக்களை நீக்கி வீட்டின்பத்தை அடைய யோகத்தில் முயலும் அடியார்கள் தங்கள் உள்ளம், நா, மெய் மூன்றும் தூயனவாகச் செய்து சிவபெருமானுடைய அஞ்செழுத்தை ஓதல் வேண்டும் என்றும், அவ்வாறு ஓதுதற்குத் துணை செய்யும்படி அவர்கள் சிவபெருமானை வேண்டிக் கொள்ளல் வேண்டும் என்றும் **திருஞான சம்பந்த அடிகள்** தம்மேல் வைத்து இந்தத் தேவாரப் பாட்டைக் கூறியருளினார்.

உள்ளம் கள்ளம் ஒழிந்து ஒல்லை ஆறி ஒன்றி—1. கள்ளம் ஒழிதல், 2. ஆறுதல், 3. ஒன்றுதல் ஆகிய மூன்று செயல்களும் உள்ளத் தூய்மையைச் சேர்ந்தன. அவை மூன்றும் முறையே ஒன்றுக் கொன்று ஏதுவும் பயனுமாயுள்ளன. ஐம்புலன்களுடன் சென்று உலக இன்பம் நாடித் துய்த்தலை ஒழிதலினால் உள்ளம் அமைதி அடைதலும், உள்ளம் சிவபெருமானைப் பற்றி அவனோடு கலந்திருத்தலும் உண்டாகின்றன. பின்னே, மெய்க்குத் தனிப்படவுரியதாய், அகற்றல்வேண்டும் எனக் கூறப்பட்ட காம வினையை உள்ளத்திலும் ஒழிதல் வேண்டும் என்பார் "கள்ளம் ஒழிந்து" என்றும், நாவுக்குத் தனிப்பட வுரியதாய் வெய்ய சொல்லை ஆறுதல் வேண்டும் எனக் கூறப்பட்ட ஆறுதலை உள்ளத்திலும் செய்யவேண்டும் என்பார் "ஒல்லை ஆறி" என்றும் கூறியருளினர்.

உள்ளத்தில் ஒரு கருத்துத் தோன்ருது அதனை நாவினாற் கூறுதலும் மெய்யினால் அடைதலும் உண்டாகாது. கள்ளமொழிந்து என்பதனால் மெய்யினால் உலக இன்பம் துய்த்தல் வீட்டின்பம் விரும்பும் அடியார்களுக்கு ஆகாது என விடப்பட்ட உலக இன்ப விருப்பத்தை உள்ளத்திலும் கொள்ளாது அறவே ஒழித்தல் வேண்டும் என்பதும், ஒல்லை ஆறி என்பதனால் உலக இன்பம் துய்த்தலுக்குத் தடை செய்கிறவர்களிடத்துச் சொல்லும் கொடிய சொற்களுக்குக் காரணமாயுள்ள சினத்தை உள்ளங்கவர்ந்தெழாதபடி செய்தல் வேண்டும் என்பதும் கூறப்பட்டன. உள்ளமானது இறைவனைப் பற்றிக் கலந்திருத்தலுக்கு அதனிடத்து எழும் உலக இன்பவிருப்பமும் சினமும் தடைகளாயிருந்து மயக்க அறிவை உண்டுபண்ணுதலின் அவை விலக்கப்பட்டன. மெய்க்குக் காம வினையகற்றுதல் என்ற மெய்ச் செயலும், நாவுக்கு வெய்ய சொல்லை ஆறுதல் என்ற நாச்செயலும் கூறப்பட்டிருத்தலையும், உள்ளத்துக்கு அவ்விரண்டு செயல்களுடன் இறைவனுடன் ஒன்றுதலையும் சேர்த்து மூன்று செயல்களும் கூறப்பட்டிருத்தலையும், மெய்க்குக் கூறப்பட்ட "அகற்றி" என்ற சொல்லுக்குச் சரியாக உள்ளத்துக்குக் "கள்ள மொழிந்து" எனக் கூறியிருத்தலையும் நாவுக்குக் கூறப்பட்ட வெய்ய சொல்லை "ஆறி" என்பதற்குச் சரியாக

உள்ளத்துக்கு "ஒல்லை ஆறி" என்று கூறியிருத்தலையும் உற்று நோக்குக.

கள்ளம் என்பது பொய், வஞ்சனை. உயிருக்கு நிலையான இன்பம் இறைவனை அடைதலில் இருக்க, அதற்குமாறாக ஐம்புலன்கள் உலகப் பொருள் நுகர்வில் உள்ளத்தை ஈர்த்துச் செலுத்துதல் இங்கே "கள்ளம்" என்று கூறப்பட்டது. மாணிக்க வாசக அடிகள் "மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப் புலனைந்தின் வழிஅடைத் தமுதே—யூறிநின் றென்னு ளெழுபரஞ் சோதியுள் ளுள்ளவா காண வந் தருளாய்" என்று கூறியருளினமை காண்க.

ஒல்லை ஆறி—ஆறுதல் என்பது சூடுதணிதல். தீயானது உடலைச் சுட்டுத்துன்பம் செய்தல்போல சினமானது உள்ளத்தைச் சுட்டுத் துன்பம் செய்யும். ஆதலின் அச்சினத்தினின்றும் தணிந்து தண்மை கொள்ளுதலை ஆறி என்று கூறியருளினர். ஒல்லை—விரைவாக. சினமுள்ள சொல்லை நாவினாற்கூறாது தணிந்தவெய்ய சொல்லைஉள்ளத்திலும் காலம் நீட்டிக்காது ஆறுதல் வேண்டும் என்பார் ஒல்லை ஆறி என்றார்.

ஒன்றி ஒன்றுதல்—இறைவனோடு சேர்தல்—உள்ளம் உலகப் பற்றை விடுதலும் இறைவனைப் பற்றுதல் ஒருதலை யாதலின் ஒன்றி என்றார். இவ்வாறு உள்ளம் இறைவனோடு இரண்டற (அத்துவிதமாய்) ஒன்றுதல், உள்ளத்தை உடைய உயிர் பேரின்பம் அடைதலுக்கு இன்றி அமையாது வேண்டப்படுவது.

பேரின்பம் அடைதலுக்குத் தடையாயுள்ளன, 1. அவிச்சை, (மயக்கம்) 2. அகங்காரம், 3. அவா, 4. ஆசை, 5. வெகுளி என்று கூறப்படும் பஞ்சக் கிலேசங்கள். இவ்வைந்தும் காமம், வெகுளி, மயக்கம் என்ற மூன்றில் அடங்குவன. கள்ளம் ஒழிந்து என்பதனால் காமத்தை விலக்குதலும், ஒல்லை ஆறி என்பதனால் வெகுளியை விலக்குதலும், ஒன்றி என்பதனால் மயக்கத்தை விலக்குதலுங் கூறப்பட்டன. கள்ளம் ஒழிதல் மெய்யானது செயலற்றிருத்தலுக்கும், வெய்ய சொல்லை ஆறுதல் நா செயலற்றிருத்தலுக்கும், இறைவனோடு ஒன்றுதல் உள்ளம் நினைவற்றிருத்தலுக்கும், காரணங்களா யுள்ளன. உயிர் உலகத்தைப் பற்றிய செயலற்று, சொல்லற்று, நினைவற்று இருந்தாலொழிய வீட்டின்பம் அடைதல் முடியாது.

வெய்ய சொல்லை ஆறித் தூய்மை செய்து—வெய்ய என்பது சூடு என்ற பொருள்தரும். வெம்மை என்ற பண்புப்பெயர் அடியாகப் பிறந்த சொல்; சினத்திலெழுகின்ற சொல் சுடுசொல் ஆதலின் வெய்ய சொல் என்றார். வெய்ய சொல்லைச் சொல்லாது இன்சொல்லைச் சொல்லுதல் நாவுக்குத் தூய்மை ஆதலின் தூய்மை செய்து என்றார். தூய்மை செய்து என்று நாவுக்கு மாத்திரம் கூறப்பட்டது, இனம்பற்றி உள்ளத்துக்கும் மெய்க்கும் சேர்த்து உரையிற் கூறப்பட்டது.

காமவினை அகற்றி — இங்கே காமம் என்பது உலகப்பொருள் விருப்பம். காமவினை என்பது அவ்வுலகப் பொருள் விருப்பத்தால் உலக இன்பத்தை நுகரும் செயல்.

நல்ல ஆறு நாவி னவின்று—நன்மையைத் தரும்வழி அதாவது பேரின்பத்தைத் தரும்வழி. இங்கே நன்மை என்றது உலக நெறியிலுள்ள தீமையோடு சேர்ந்த நன்மை அன்று; வீட்டு நெறியிலுள்ள தனி நன்மை. நல்ல ஆறு-மேலே கூறியபடி உள்ளம், நா, மெய் தூய்மை அடைந்த நல்லவழி. வீட்டு நெறியில் உள்ளம், நா, மெய் மூன்று கருவிகளும் தூய்மை அடைதல் மேற் செய்யக் கடவனவற்றிற்கு அடிப்படை (Background) யாகும்; இது இயமம் நியமங்களில் அடங்கும். "வஞ்சனையாலஞ் செழுத்தும் வழுத்துவார்க்குச் சேயானை" என்று **திருநாவுக்கரசு அடிகள்** திருவீழிமிழலைத் திருத்தாண்டகம் 4-வது பாட்டிற் கூறியருளினர்.

உன்றன் நாமம்—பிரணவ அஞ்செழுத்து அல்லது சி முதலாகக் கூறப்பட்ட அஞ்செழுத்து. பசு பாசங்களை விலக்கி, பதியை அடைதல் ஐந்தெழுத்தின் உட்பொருள் ஆதலின் அதனை நினைந்து உள்ளம் கரைந்து உருகி நவிலல் வேண்டும் என்று அடிகள் கூறியருளினர். "எந்தையார் திருநாமம் நமச்சிவாயவென் றெழுவார்க்கு இருவிசும்பி லிருக்கலாமே" என்று **திருநாவுக்கரசு அடிகள்** பலவகைத் திருத்தாண்டகத் தேவாரம் 10-வது பாட்டிற் கூறியருளினமை காண்க.

வல்ல ஆறு—மேலே சொன்ன நல்ல ஆறே வல்ல ஆறுமுள்ளது. அந்த நல்ல ஆறு பேரின்பப் பயனை விரைவில் அளிக்கவல்லதாதலின் வல்ல ஆறு என்று கூறப்பட்டது.

வந்து—இறைவன் உயிரினுடைய உள்ளத்தில் போக்குவரவிலாது எப்பொழுது மிருப்பவனாதலின் வந்து என்பதற்கு 'விளங்கி நின்று' என்று பொருள் உரைக்கப்பட்டது. இதுகாறும் உள்ளே மறைவாய் நின்று உணர்த்தின இறைவன் பக்குவப்பட்ட உயிர்க்கு நேரே வெளியில் அறிவுரை உணர்த்தித் தீக்கை செய்தற்கு வந்து என்று பொருள் கூறினும் அமையும். இந்தப் பதிகத்தின் 4-வது பாட்டில் "வையமுள்ளே வந்து நல்சாய்" என்று கூறியது இப்பொருள் பொருந்துதலை அரண் செய்யும்.

நல்காய்—"ஆய்" என்ற முன்னிலை எவல் தெரிநிலை வினைமுற்று விகுதி. இங்கே வேண்டிக் கோடற்பொருளில் வந்தது. நல்குதல் இங்கே தண்ணளி செய்தல் என்ற பொருளில் வந்தது; திருக்குறள் 1248-வது குறளில் நல்குதல் என்ற சொல்விற்கு **பரிமேலழகர்** தண்ணளி செய்தல் என்று உரை கூறியிருத்தல் காண்க. இந்தத் தேவாரப் பாட்டின் கருத்து "காமம் வெகுளி மயக்கமிவை கடிந், தேமம் பிடித்திருந் தேனுக் கெறிமணி, ஓமெனு மோசையினுள்ளே யுறைவதோர், தாமமதனைத் தலைப்பட்டவாறே" என்ற 2436-வது திருமந்திரப் பாட்டிற் கூறப்பட்டிருத்தல் காண்க.

மா. வே. நெல்லையப் பிள்ளை

---

# சமயமும் தத்துவமும்:
# Religion & Philosophy

## *சிவன்

[பண்டிதர் சி. வீரபாகுப் பிள்ளை அவர்கள்]

சிவன் என்னும் பெருந் தெய்வத்தை ஓவியப் புலவர் படத்தில் எழுதி வைத்திருக்கிறார்கள். நம்முன்னோர் சித்திரகாரரைக் கண்ணுள் வினைஞர் என்கிறார்கள். கண்ணுள் வினைஞர் என்றால் "நோக்கினார் கண்ணிடத்தே தம்தொழிலை நிறுத்துபவர்" என்று பொருள். இவர்கள் எழுதும் கோலுக்கு (Brush) கண்ணெழுத்தங்கோல் என்று பெயர். அதனை,

> மாமே லிருந்தொரு கோல்தா எனிற்கள்ளற் கோல்தரலும்
> சோமே லிருந்தொரு கோல்தா வெனிற்றர வே துணிந்து
> பூமேவு கண்ணெழுத் தங்கோல் தரலும் பூதலத்தே
> நாமே வியல்பென்று கூறுவர் நல்லசொல் நாவலரே.

என்பதால் அறியலாம்.

இந்தப் பரந்த உலகத்திலே எண்ணிறந்த சமயங்கள் உள்ளன. அவற்றுள் சைவ சமயமும் ஒன்று. ஆனால், இச்சமயம் மிக மேலானது. தாயுமான சுவாமியைப்பற்றித் தெரிந்திருக்கலாம். அவர்கள் சைவ சமய உண்மைகளைத் தெளிவாகவும் விளக்கமாகவும் சொன்னவர்கள். அவர்கள் எல்லாச் சமயங்களையும் ஆராய்ந்து முடிவில் சைவ சமயமே மேலானதென்று துணிந்து,

"சைவ சமயமே சமயம்"

என்றும்,

"ராஜாங்கத்தமர்ந்தது வைதிக சைவம்" என்றும் அருளிச் செய்திருக்கிறார்கள்.

சைவ சமயம் சிவத்தை முழு முதற் கடவுளாகக் கொண்டு உபாசிக்கிறது. சிவ: என்ற வடசொல் தமிழில் சிவன் என்று ஆகும். இவ்விதம் ஆவதை நன்னூல் விருத்தி உரைகாரர் "உவ்வுமாம் பிற" என்பதனால் அமைப்பார். மாணிக்கவாசக சுவாமிகள் "சிவனவனென் சிந்தையுள் நின்றவதனால்," "சிவனே சிவனேயென்றோலமிடினும்" எனச் சிவத்தைச் சிவன் என்று கூறுவ

---

* இஃது பாளையங்கோட்டை ஸ்ரீசாரதா தமிழ்ச் சங்கத்தார்நடாத்திய நவராத்திரி விழாத் திருவுருவப் படவிளக்கச் சொற்பொழிவுக் குறிப்பு

தைக் காண்க. சிவன் என்ற சொல்லுக்கு மங்கலகுணத்தன், அனாதியே மலத்தின் நீங்கினவன் என்பன பொருள். அவ்வித சிறப்பு வாய்ந்த சிவன் என்ற சொல்லையே சைவ சமயத்தவர்கள் தங்கள் கடவுளுக்குப் பெயராக இட்டிருக்கிறார்கள். இந்த அருமையான பெயர் வேறு எச்சமயக் கடவுளுக்கு மில்லை. அத னால் தான் அப்பமூர்த்திகள் "சிவனெனும் நாமம் தனக்கேயு டைய செம்மேனி எம்மான்" என்று அருளிச் செய்தார்கள்.

யாப்பருங் கலமென்று தமிழில் ஒரு சிறந்த இலக்கண நூல் இருக்கிறது. அந்நூலைச் செய்தவர் அருங்கலான்வயம் என்ற பிரசித்தி பெற்ற சைன சங்கத்தைச் சார்ந்த புலவரான அமித சாகரர். அதற்கு உரை எழுதியவரும் சைனரே. அவர் திரு மூலரை "ஆகவும் கேடவும் பாடல் தரும்..........மாமூலர்" என்று போற்றுகிறார். அவ்விதம் அந்நிய சமயத்தவரும் போற் றத்தக்க பெரியவர் திருமூலநாயனார். அவர்,

"சிவனோடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை"

என்றருளிச் செய்தார்.

சிவநாமத்தைச் சொல்லுகிறவர்களுக்குச் சகல பாக்கியங்க ளும் கிடைக்குமென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். சிவாக்கிய சோழ மன்னர் காலத்திலே, கஞ்சனூரிலே ஒரு அந்த ணன் இருந்தான். அவன் அறியாமல் செய்த செயலால் ஒரு பசுவின் கன்று செத்துப்போய்விட்டது அதனை அறிந்த மற்ற அந்தணர்கள் அவனை ஜாதியை விட்டு நீக்கி வைத்துவிட்டார்கள். அவன், அப்பாவத்துக்குப் பிராயச் சித்தம் என்னவென்றுதெரிந் துகொள்வதற்காக அவ்வூரில் உள்ள பெரியவராகிய ஸ்ரீ அரதத்த சிவாசாரியரிடம் போனான். அப்பொழுது, அவர் சிவ பூசை செய்துகொண்டிருந்தார். அவர் வீட்டு நிலை தாழ்ந்தது. அந்த ணன் அவசரமாக வீட்டுக்குள் நுழையும் போது நிலை தட்டிவிட் டது. உடனே, அவன் 'சிவ சிவ' என்று சொல்லித் தலையைத் தடவினான். உள்ளே பூசையில் இருந்த அரதத்தர் அதைக் கேட்டு வெளியே வந்து அவனை வணங்கினார். அவன், "சுவாமி! நான் பசுவின் கன்றைக் கொன்றபாவி என்னை நீங்கள் வணங்க லாகாது" என்றான். அதற்கு அவர், 'நீ சிவசிவ' என்று இரு முறை அப்பெருநாமத்தைச் சொன்னதனால் உன் பாவமும் போ யிற்று; நீயும் முத்திக்குரியவனாகிவிட்டாய்" என்றார். இச்சரித் திரத்திலிருந்து சிவ நாமத்தின் மகிமை விளங்கும். "விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழ, லுண்ணிய புகிலவை யொன்றுமில்லை யாம், பண்ணியவுலகினிற் பயின்ற பாவத்தை, நண்ணி நின் றறுப்பது நமச்சிவாயவே."

ஃசைவ சமயத்தவருக்கு முக்கியமான மந்திரம் பஞ்சாக்கரம். அதனைத் திருவாசகம் "நமச்சிவாய வாழ்க" என்கிறது. அப்ப மூர்த்திகள் 'சிவாய நமவென்று நீறணிந்தேன்" என்கிறார்கள். திருவாசகம் சொன்ன 'நமச்சிவாய' என்பது தூல பஞ்சாக்கரம் எனப்படும். அப்பமூர்த்திகள் சொன்ன 'சிவாய நம' என்பது சூக்கும பஞ்சாக்கரம் எனப்படும். திருவாசகத்திலும் சூக்கும பஞ்சாக்கரமாகிய 'சிவாய நம' வந்திருக்கிறது. இப்பஞ்சாக்கரப் பொருளைப் பட்டினத்தடிகள்

"மாயநட்டோரையு மாயாமல மென்னும் மாதரையும்
வீயவிட்டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாம்
தாயுடன்சென்று பின்தாதையைக் கூடிப்பின் தாயைமறந்து
ஏயும்மே நிட்டையென்றான் எழிற்கச்சியே கம்பனே"

என்று அருளிச் செய்தார்கள். கடவுள், அவரது சத்தி, உயிர், உயிரைப்பற்றிய மலம் என நான்கு; உயிர் சிவ சத்தியின்உதவி யால் மலத்திலிருந்து விலகி இறைவனைக் கூடி இன்புறுதல் என் பது தான் இந்தப் பெருமந்திரத்தின் பொருள்.

கடவுளும் உயிரும் அறிவுடைப் பொருள்கள்; ஆனால், கட வுள் அறிவுக்கும், உயிர் அறிவுக்கும் வித்தியாசம் உண்டு.கண்ணுக் கும் ஒளியிருக்கிறது, சூரியனுக்கும் ஒளியிருக்கிறது. ஆனால், கண் தனக்கு இயல்பாக அமைந்த ஒளியால் பொருள்களைப் பார்க்கமுடியாது. சூரிய ஒளியாகிய வியஞ்சகத்தாற்றான் அக் கண்ணொளி பொருள்களைப் பார்க்கமுடியும். இரவில் கண் விழித் திருந்தாலும் பொருள் பார்க்கமுடியவில்லை. ஆகவே அதற்கு, மற்றொன்றின் ஒளி காட்சிக்கு இன்றியமையாததாகிறது. அது போல, உயிர் இயற்கையறிவுடையதாக விருந்தாலும் பிறிதின் உதவியில்லாமல் அதன் அறிவு விளங்காது. கடவுள் அறிவு தானே அறியுந் தன்மையுடையது. அவ்வறிவுக்கு வேறு ஒன் றின் சகாயம் வேண்டியதில்லை. அப்பேரறிவின் உதவியாலேயே உயிர் அறிவு விளங்கி அந்த அறிவுப் பொருளாகிய கடவுளை— "தேய நாதனை," தியானித்து அது இன்பமடைகிறது. இவ்வுண் மைகளெல்லாம் அப்பஞ்சாக்கரத்தில் அமைந்துள்ள தென்பதே பட்டினத்து சுவாமிகள் கருத்து.

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
யோதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினும் மெய்ப் பொருளாவது
நாதனாம நமச்சி வாயவே"

வேதம், அந்த மெய்ப்பொருள்—பஞ்சாக்கரமந்திரத்தைத் தன் நடுவில் வைத்துப் போற்றுகிறது. சிறந்த வேதம், ருக்கு,

யசுர், சாமமென மூன்று. அதனைச் "சிறந்த வேதம் விளங்கப் பாடி" என்றவிடத்து நச்சினார்க்கினியர் கூறுவதால் அறியலாம். அம்மூன்றுள் நடுவிருப்பது யசுர்வேதம், அதன் நடுவிருப்பது ஸ்ரீ உருத்திரம். அதன் நடுவிருப்பது 'நமச்சிவாய' என்னும் மகா மந்திரம். அதனாலேயே அப்பமூர்த்தியும் "அருமறையின் அகத்தானை" என்று அருளிச் செய்தார்கள். (தொடரும்)

---

# திங்கள்

[மறைமலை யடிகள்]

திங்களை வடநூலார் "சந்திரன் என்னும் பெயரால் வழங்குவர்; தமிழ்மக்கள் அதனை நிலவு, அம்புலி, பிறை, திங்கள், தண்கதிர், கலையோன், இரவோன், அலவன், அல்லோன், மதி, களங்கன், குரங்கி, முயற்கூடு முதலான பலபெயர்களால் வழங்காநிற்பர்.

நிலவு—குளிர்ந்த ஒளியினைத்தருவது.

அம்புலி—சிறுமகாரிட்டபெயர்.

பிறை—மறைநிலா நாளின் (அமாவாசையின்) பின், புதிது பிறத்தலிற் பிறையெனப்பட்டது.

திங்கள்—தீம் + கள். இனிமையெனப் பொருள்தரும் தீம் என்னுஞ் சொற்குறுகித் திம் என் நின்று, அமிழ்து எனப் பொருள்படும் கள் என்பதுடன் கூடித் திங்கள் ஆயிற்று.

தண்கதிர்—குளிர்ந்த ஒளியினைத்தருவது.

கலையோன்—கலையென்பது நிலவொளியின் ஒரு பகுதியைக் குறிப்பது.

இரவோன்—இரவில் விளங்குபவன்.

அலவன், அல்லோன்—இராக்காலத்துக்குப் பெயராகிய அல் என்னும் பகுதிபடியாப் பிறந்து இரவில் விளங்குபவன் என்னும் பொருடருவது.

மதி—பதினைந்துநாள் வளர்ந்தும் பதினைந்துநாள் தேய்ந்தும் முப்பதுநாள் கொண்ட ஒரு காலத்தை வரையறுத்தலான் மதி யெனப்பெயர் பெறலாயிற்று; மதித்தல் என்பது வரையறுத்தல்.

களங்கன்—இடையிடையே கறையுடையதுபோற் காணப்படுவது.

குரங்கி—வளைந்து தோன்றும் பிறை, (குரங்கு-வளைவு)

முயற்கூடு—சிறுமகார் கண்களுக்கு முயல்வடிவாகக் கறை காணப் படுதலிலிருந்து அம்முயல் உறையுங் கூடாக அவர் வழங்குவர்.

—(ஞானசாகரம்)

# இலக்கணமும் இலக்கியமும்:
## Language & Literature

### "செந்தமிழே தீர்க்க சுவாகா"

[உயர்திரு. சுத்தானந்த பாரதியார்]

(சுOஉ - ம் பக்கத் தொடர்ச்சி)

#### நமது அருள்மொழியும், வடமொழியும்

வடமொழியாக்க மில்லேல் தமிழுக்கு வலிவில்லை யென்பர் சிலர்; வடமொழி பெரிது, வண்டமிழ் சிறிதென வாதாடுவர் சிலர். ஒருகால், பெரியவன் சிவனு, விண்டுவா என்று இருவர் ஓயாச் சண்டை போட்டனர்; எவரும் சிவனையோ விண்டுவையோ கண்டதில்லை. ஒரு அறிவாளியிடம் தமது வழக்கை யுரைத்தனர். அந்த அறிவாளி, "ஐயா, சிவனும் விண்டுவும் தங்கள் பெருமை பேச உங்களை வழக்காளராக ஏற்படுத்தினரா? நீர் சிவனைக் கண்டீரா? நீர் விண்டுவைக் கண்டீரா? நீர் சிவன் கட்சியைப் பேசாவிடில், அவன் பெருமை சிறுமையாமோ; நீர் சிறியனெனில் பெரியசாமி (மஹாதேவன்) சிறியனுவனோ? சண்டையால் உமது தொண்டைவற்றி, உமது மண்டையே உடைகிறது. அவரவர் கோயிலில் அவரவர் விளங்குகின்ற னர். வேண்டுமானுல் ஆளுக் கொரு தடி கொடுத்துப் பாருங்கள்" என்றதும் இருவரும் வாயடைத்தனர். தனது நாதப் பறையினின் றெழுந்த அகாரத்தினின்று இரு மொழியும் படைத்த இறைவன் தென்பால் அப்பனாய் அமர்ந்துளான். அவன் தமிழ்ப்பித்தன்; தமிழ்ப் பிள் ளைக்கு அருட்பாலூட்டி அறிவுப் பாமாலையை நாடோறுந் தலந்தோறும் அணிந்தவன்; தமிழ்மணி மொழியிற் சொக்கி அருளன்பர்க்குத் தூதுநடந்தான்; சோறுசுமந்தான்; கூலிவேலை யும் செய்தான். தமிழமுதம் அவனது இன்பவுணவு; இன்றும் தேவாரதிருவாசகங்கள் அவனது அருட்சுவைத்தேனுக நமது செவிகளிற் பாய்கின்றன.

"பாட்டும் பாடிப் பரவித் திரிவார்
ஈட்டும் வினைக டீர்வார்"

இப்படி யருள்பெற்ற ஒரு தொல்லிளமொழியை இழ வென்றும், நீசமென்றும் (தமிழை Untouchable language என்னும் வடவரும் உண்டு) கு..........பாஷையென்றும் க, ச,

ட,த,ப எனும் மெய்களில் பிறக்கும் நான்கொலிகளுக்கு மூன்று குறைவான வறண்மொழி (அரவம் அத்வானம் என்பர் வடுகர்) என்றும், வடமொழி, ஸம்ஸ்க்ருதம், தேவபாஷையே மேலென்றும் யாரேனும் இன்னும் வாய்பேசுவாராயின்,

"ஆரியம்நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக் கோட் பட்டானைச்—சீரிய
அந்தண் பொதிகை யகத்தியனு ராணையாற்
செந்தமிழே தீர்க்க சுவா கா!"

என்று வலுவாக உருவிடுமின். அன்பர்காள், இச்சண்டையில் காலத்தை வீணாக்கவேண்டாம். இதோ நாம் வழங்கும் தமிழ் உயிரோடு இருக்கிறது. அதன் வளர்ச்சியில் ஒவ்வொரு மூச்சையும் செலவிடுங்கள்.

தமிழுக்கு இயல்பாயுள்ள அருள்வலிவால் இப்போதும் தமிழ்க் கொடியைத் தாழாது தாங்கி நிற்கும் அறிவாளிகள் ஆங்காங்குத் தோன்றித் தம்மாலானதைச் செய்கின்றனர் [கரந்தைத் தமிழ்ச்சங்கத்தாரும், பொதுநிலைக் கழகத்தாரும், சைவசித்தாந்த சபையாரும் செந்தமிழ்ச் செல்விக்குச் செய்யும் அன்புத் தொண்டு தமிழருக்கு எடுத்துக்காட்டாகுக] ஆனால் அத்தகைய நல்லறிவாளருக்குச் செல்வச் செழிப்பும், செல்வர் துணையும், பொதுமக்கள் ஆதரவும் போதுமட்டும் இன்னும் கிடைக்கவில்லை. தமிழை வளர்க்கும் பணியில் தமிழர் முழுதும் தமது உடல் பொருள் உயிரை உரிமையாக்க வேண்டும்.

## ரு. தமிழம்மை

தமிழகம் முழுதும் இறைவன், உயிர்மேனியன் அருள்வடிவுடன் விளையாடிய திருக்கோயில்; அதில் இன்றும் அவனருள் பெற்ற பாமணி முழங்குகிறது. அன்பீர், அக்கோயிலின் தென் வாயிலில் குமரியன்னை தமிழர்வாழத் தவம் புரிகின்றாள். இக்கோயிலில் நமது செந்தமிழ்த் தேவி சிரித்திலகச் செய்வோம். அவள் பொன்னுருவை ஒவ்வொருவர் உள்ளக்கோயிலினும் உருச் செய்து ஒவ்வொரு மூச்சையும் அவளுக்கு அன்புமலராக்குவோம். நமது நரம்புகள் அவள் பணியில் இயங்குக. நமது கால்கள் அவள் பெருமையை உலகெங்கும் பரப்புக; நமது வாய் அவளிசை பாடுக; நமது வாழ்வெல்லாம் இத்தமிழம்மைக்கே வேள்வியாகுக! இந்தியநாட்டை "பாரதமாதா" வென்றும் சக்தியென்றும், பங்கிம் சந்திரரும் அரவிந்தரும் இயக்கியபிறகு நாடு முழுதும் ஓர் அன்னையன்பெழுச்சி பிறந்தது கண்கூடு.

விந்திய மூலையினள் வெண்ம லைமுடிச்
சுந்தரி சுரநதிச் சுருள்வி ரிந்தவள்

செந்தமிழ் மடுத்தினி தாடுஞ் சேவடி
யிந்தியைக் கிங்க ரிதயத் தின்பமே. —பாரதசக்தி.

என்ற கற்பனை மக்கள் மனத்தில் ஒரு கடவுளன்பு ஊக்கியதால் நாட்டியக்கம் எவ்வளவு விரைந்து பரவியது; தாய்க்கு வணக்கம் (வந்தேமாதரம்) எங்கும் எழுந்தது. அதை நாமறிவோம். ஆதலின் நமது முதற்பணி தமிழை இறைவன் மகளாக உருச்செய்து, ஓவியஞ் சமைத்து உருகி வணங்குதல். நமது குழந்தைகட்கு தமிழம்மை, தமிழாயி, தமிழப்பன் என்று பெயர் தரலாம். திருக்கோயில்களிலும் தமிழன்னைக்குத் (தமிழ்க் கலைமகளுக்கு) தனியாகச் சிலை நாட்டலாம். அதன்முன் ஒரு பெரிய கலை மன்றம் எழுப்பி அதன்கண் தமிழ் மறையும், தமிழரின் அருட்சமயமும் வளரத்தக்க பணிகள் புரிதல் நலம்.

## தமிழின் அருளழகு

தமிழம்மை அருள் வடிவு. ஷேக்ஸ்பியர், கோர்நெல், மோலியர், தாந்தே, வர்கில், ஹோமர், காளிதாஸன், டாகூர், ஈட்ஸ் முதலிய பெருங் கவிகளிடம் அழகை நுகரலாம். சிறிது உள்ளக் கிளர்ச்சியுடன் அது சரி. ஆனால் அப்பர், பாலருவாயர், அழகர், மணிமொழியார், அருட்பெருஞ் சுடர் வள்ளலார், தாயுமானார், அருணகிரியார், சேக்கிழார்கள் முன்னே நமக்கு அழகுணர்வுடன், ஓர் அருளுணர்வும் உள்ள நெகிழ்ச்சியும் எழுந்து அவர்கள் சொல் நமது ஆவியை அள்ளி இறைவன் இன்பக் கடலிற் சேர்க்கிறது. உதாரணமாக,

Where the mind is without fear
This is my prayer unto Thee, my lord

(*Gitanjali P-28*)

என்பன தாகூரின் பெயர்பெற்ற பாக்கள். இப்பாட்டையும், அருள் வள்ளலாரின், "ஒருமையுட னினதுதிரு" என்ற பாட்டு, அருள் வேண்டுதல், பிள்ளைச் சிறு விண்ணப்பம், பிள்ளைப்பெரு விண்ணப்பங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கவும். இவற்றைத் தக்கபடி ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பா ரின்மையால் இவ்வருள் மணிச் சுடர்கள் குடத்தினுள் விளக்கா யிருக்கின்றன.

"Cromwell, I charge thee, fling away ambition
By that sin fell angels; how can man, then
The image of the Maker hope to win by it?"

(*King Henry* VIII: *iv*: *i*)

இது ஷேக்ஸ்பியரின் மிகச் சிறந்த மொழிகளி லொன்று. இத னோடு,

"ஆசையறுமின்கள்! ஆசையறுமின்கள்
ஈசனோடாயினும் ஆசையறுமின்கள்
ஆசைவர வரவாய் வருந் துன்பம்
ஆசைவிட விட ஆனந்த மாமே"

எனுந் திருமந்திரத்தை ஒப்பிடுங்கள். இம் மந்திரத்தை எத்தனை முறை உருப்போட்டும் சலிக்கவில்லை. இதில் ஒரு அருள் வலியும், அருளழகும் அருளாணையும் காண்கிறோம். இன்னும் தாயுமானவரின் "ஆசைக்கோ ரளவில்லை" யையும் பாருங்கள்.

"The Infinite glows through every living thing" என்று கெதே (Goethe) சொல்லுகையில் "பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே" என்னும் தாயுமானர் அருள் மொழியைச் சிந்தித்துப் பாருங்கள்;

"He who loves God cannot desire
That God should love Him in returu"

என்பது கெதேயின் இசைபெற்ற வாக்கு. இதனோடு, "அன்றே யுனக்கென்.........நன்றே செய்வாய் குறை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்ற திருவாசக மொழியைச் சீர்தூக்கிப் பாருங்கள். கவிகளில் பல படிகள் உண்டு. ஷெல்லி, பைரன், கீட்ஸ், மோலியர், கோர்நெல் இவர்கள் ஒரு படி; ப்ரௌனிங் இவர்களுக்குமேல் ஒருபடி யேறினவன், ஹோமர் கெதே, தாந்தி, ஷேக்ஸ்பியர், வர்கில் முதலியோர் அழகும் சொல்லாழமும் உடையர். மில்தன் ஆவேசக் கவி. வால்ட்விட்மன் சிறிது ஒளி பெற்றவன்; இவர்களுக்கு மேலே வால்மீகியும், காளிதாஸனும், கம்பனும் உள்ளனர். இவர்கள் கவிகளில் அழகையும், ஆண்மையையும், பொருளாழத்தையும், அறவுணர்வையும் நுகரலாம். இதற்கு மேல் கீதை, உபநிடதம் எத்தனைமுறை ஓதினும் புதுப் புது இன்பம் தந்து ஒரு அறிவு மலர்ச்சியும் தரும். இவற்றிற்கு மேல் திருவாசகம், அருட்பா, தாயுமானர், தேவாரங்களைக் கேட்டால் "அரும்பொனேமணியே என்னன்பே" என்று உள்ளத்தில் ஒரு அருளெழுச்சி பிறக்கும்; மெய் சிலிர்க்கும். இவையே மிக வுயர்ந்தமந்திரக்கவிகள். இவை நமது ஆவியை ஊடுருவி, நம்முள் உள்ள அறிவு மணியைச் சாணைபிடித்து, அருளொளி பளிச்சிடச் செய்யும். ஆ! இவற்றைப் பிறமொழிகளில் ஆக்கினால் சுவை போய் விடுகிறதே! இத்தகைய அருள் மந்திரக் கவிகளே தமிழ்க் கவிகள். அருளாற் பொழியும் பா மழையிலேயே ஆன்மப் பயிர் செழித்துப் பேரின்பக் கனி பழுக்கும். தற்காலத்தும் அருளா

ளர் பாமாலைகளையே நாம் கொண்டாடற்குரியது. அத்தகைய அருட்கவிகள் இன்று தமிழகத்தை யோக நிலையினின்று அணி செய்கின்றனர். அத்தகைய அருட்புலவரின் மணிவாக்குகளைத் தமிழர் ஏற்றுப் போற்றவேண்டும். பிறநாடுகள் தங்கள் கவிகளை யும் நாவலர்களையும் சிறப்பிப்பது போல உண்மையான தமிழ்க் கவிகளையும் நாவலரையும் தமிழர் சிறப்பிப்பது, தமிழன்னையின் வழிபாடாகும். மற்றப்படி ஒரு நிறையின்றி கண்ட பொருள் கள் மீது, இன்றிருந்து நாளை அழியும் பொருள்கள் மீது, தற்கா லம் கவிகள் தொடுக்கப்படுகின்றன.

இவற்றிற்கு,

மந்திரப் பாமாலை மாதேவர்க்கே யளித்த
செந்தமிழே தீர்க்க சுவாகா

என்போம்.

---

# குறுந்தொகை

## மூலமும் விளக்க உரையும்

[இலங்கையடிகள் வித்துவான் இரா. சிவ. சாம்பசிவன்]

(பதிப்புரிமை ஆசிரியர்க்கே)

### கடவுள் வாழ்த்து

எடுத்துக்கொண்ட இந்நூல் என்றும் நின்றுநிலவுதல் வேண்டிக் கடவுள் வாழ்த்துக் கூறுவான் தொடங்கிய ஆசிரியர், முருகன் காத்தலால் உலகத்தில் வாழும் உயிர்கள் எல்லாம் பாது காப்பை நாளும் பெறுவன ஆதலினாலும்; அகப்பொருளிலக் கணத்திற்குப் பொருந்த சிறந்த குறிஞ்சித் திணைக்குரிய இறை வன் முருகனே ஆதலினாலும்; வள்ளி நாயகியைக் களவில் ஒழு கித் தமிழ் மொழியின் அகத்திணை ஒழுக்கத்திற்குப் பொருந்த மணந்துகொண்டவன் ஆதலினாலும் அப்பெருமானையே நாமும் வணங்குவோமென எடுத்துக்கொண்ட நூற்கியையக் கடவுள் வாழ்த்துக் கூறுநிற்பது.

கடவுள் வாழ்த்து—இரண்டாம் வேற்றுமைத் தொகை. கடவுள் என்பதற்கு மனம், மொழி, மெய் எனும் முக்கரணங் களையும் கடந்தவர் என்பது பொருள். அது 'உள்' விகுதி பெற்ற தொழிற் பெயர்; ஈண்டு ஆகு பெயராய் நின்றது.

"வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்தே"

(தொல்-பொருள் செய்யுளியல் சூ. 109)

என்றதன்கண், "வகை" என்ற மிகையானே கொண்ட அறுமுறை வாழ்த்தே அன்றித் தனக்கும் பிறர்க்கும் பயன்படு வகையில் படர்க்கை யிடமாகிக் கடவுளை வாழ்த்தியது இக்கடவுள் வாழ்த்து என்க. "தாமரை" என்பது மங்கல மொழியாதலின் முதற்கண் வைக்கப்பட்டது. "தாமரை புரையும் காமர் சேவடி" எனச் சேவடியை முற்கூறியது என்னையோ எனின், அடைந்தார் அவாவுகின்ற அறமுதல் நான்கையும் அளிக்க வல்ல பெருஞ்சிறப்பால் என்க.

"மாநிலஞ் சேவடியாக" என நற்றிணையிலும் இவ்வாசிரியர் கூறியிருத்தல் காண்க.

இத்தொகைநூற்செய்யுட்கள் பெரும்பாலன ஈற்று அயலடி முச்சீர்த்தாய நேரிசை ஆசிரியப் பாக்கள் என்க. என்னை?

ஈற்றய லடியே ஆசிரிய மருங்கிற்
ஞேற்ற முச்சீர்த் தாகு மென்ப"—

(தொல்-பொருள்-செய் சூ. 68)

என்பதனுல் அறிக.

பாரதம் பாடிய பெருந்தேவனுர் பாடியது

**தாமரை புரையுங் காமர் சேவடிப்**
**பவளத் தன்ன மேனித் திகழொளிக்**
**குன்றி யேய்க்கு முடுக்கைக் குன்றின்**
**நெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேற்**
**சேவலங் கொடியோன் காப்ப**
**வேமம் வைக லெய்தின்று லுலகே.**

திணை:—பாடாண்டிணை. துறை:—கடவுள் வாழ்த்து.

தாமரை புரையும்—தாமரை மலரை யொக்கும், காமர் சே அடி—யாவருக்கும் விருப்பத்தைத் தருகின்ற அழகிய சிவந்த பாதங்களையும், பவளத்து அன்ன—பவழத்தைப் போன்ற, மேனி திகழ் ஒளி—சரீரத்தினது விளங்கும் பிரகாசமும், குன்றி ஏய்க்கும் உடுக்கை—குன்றி மணியை ஒத்திருக்கும் சிவந்த ஆடையும், குன்றின் நெஞ்சு பக எறிந்த—கிரௌஞ்சம் என்னும் மலையின் நடுவிடம் பிளவுபடும்படி எறியப்பட்ட, அம்சுடர் நெடுவேல்—அழகிய ஒளி பொருந்திய வேலாயுதத்தையுமுடைய, சேவல் அம் கொடியோன் காப்ப—கோழியின் உருவம்தீட்டப்பெற்ற அழகிய கொடியையுடையவனுகிய முருகன் காத்தலால், உலகு ஏமம் வைகல் எய்தின்று—உலகத்தில் வாழும் உயிர்கள் பாதுகாவலை நாளும் பெற்றன.

காமர்—அழகு; குன்றி—குன்றிமணி, உடுக்கை—ஆடை. நெஞ்சு—நடுவிடம். ஏமம்--பாதுகாவல். வைகல்—நாள். பக—பிளக்க.

தாமரை—முதலாகு பெயர்; வட சொல். புரை, எய், அன்ன—உவமவுரு பிடைச் சொற்கள். காமர்—(காமரு) உரிச்சொல். சேவடி—பண்புத்தொகை. உடுக்கை—தொழிலாகு பெயர்; உடுக்கப் படுவது. குன்றினெஞ்சு—உருபு மயக்கம். காப்ப—வினை எச்சம். உலகு—இடவாகு பெயர். எய்தின்று—எய்திற்று;காலவழுவமைதி. வேல்—வெல்வது; காரணம்பற்றி வந்த பெயர்.

ஏமவைகல்—பிரதிபேதம்.

உலகு என்பது ஈண்டு உலகத்து வாழும் உயிர்ப் பன்மையைக் குறித்து நின்றது.

எய்தின்று என இறந்த காலத்தாற் கூறினர், உலகம் பாது காவலை முருகனால் நாளும் எய்துதலின். என்னை?

> "வாராக் காலத்தும் நிகழுங் காலத்து
> மோராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி
> இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
> விரைந்த பொருள என்மனார் புலவர்"—

(தொல்-சொல்-வினை சூ. 44)

என்பாராகலின்.

குன்றின் என்பதில் 'இன்'சாரியையுமாம். எய்தின்று—இதில் இன் சாரியை; இன்-இடைநிலை-இன்னோசை தந்து நின்றது என்பது மாம். உலகே என்பதில் ஏகாரம். ஈற்றசை. நெடுவேல்—வேலிற்கு நெடுமை என்றும் நிலைத்திருத்தல்.

ஏமவைகல் என்பதற்குப் பாதுகாப்புள் தங்குதலைக் குறித்து நின்றது என்பாருமுண்டு. வைகல் என்பதன் இறுதியில் தொறுப்பொருளாகிய உம்மை தொக்கி நின்றது.

காப்ப என்னும் செயவெனெச்சம் காரணப் பொருளில் வந்தது.

## மேற்கோள் விளக்கம்

1. "பன்னிரு படலம், நூற்றந்தாதி, குறுந்தொகை, நெடுந் தொகை என்பன அளவு பற்றிவந்தன."

—(வெண்பாப் பாட்டியல்)

2. அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், புற நானூறும், ஐங்குறு நூறும், பதிற்றுப் பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும், பேரிசையும் என்று இத் தொடக்கத்தன."　—(இறையனாரகப் பொருள்)

3. "அளவால் தொகுத்த பெயர் பெற்றது குறுந்தொகை."
—(மாறனலங்காரம்)

4. "தாமரை புரையுங்காமர் சேவடி"—என்பது சினைக்குச் சினையே வந்து உவமை ஆயிற்று."
—(தொல்-பொருள்-உவமவியல்-பக். 95)

5. "தாமரை" என முதற் பொருளின் பெயர் சினைப் பொருளுக்காயது. —(நன்னூல் சங்கரநம—பக். 143)

6. "தாமரை..........உலகே"—"இதனுட் பொழிப் பெதுகையும், ஒரூஉ எதுகையும், ஒரூஉ மோனையும் பிறிதும் வந்தவாயினும் முதல் வந்ததனாலே பெயர் கொடுத்துப் பொழிப்பெதுகைச் செய்யுளென்று வழங்கப்படும்." —(யாப்பருங்கலம்—பக். 188)

7. "தாமரை புரையுங் காமர் சேவடி," என்ற பாட்டினுள் ஈற்றடி யிரண்டும் மகார வகாரங்கள் எதுகையாய் வந்தன."
—(யாப்பருங்கலம்—பக்.195)

8. "எல்லாக் குற்றமுந் தீர்ந்த செய்யுள் வருமாறு:—"தாமரை ......உலகே;' —(யாப்பு-காரிகை—பக். 290)

9. "தாமரை புரையும் காமர் சேவடி"—என்பது சினையுணர்த்தின் ஆகுபெயராம்."

10. "தாமரை புரையும் காமர் சேவடி"—என்பது முன்னமின்றி வந்தது. —(தொல்-பொருள்-செய்—பக். 518)

11. "காமர் சேவடி"—"கடிமலர் புரையும் காமர் சேவடி"
—(யாப்—பக். 189 மேற்கோள்)

12. பவளத்தன்ன மேனித் திகழ் ஒளி,"—"குன்றியேய்க்கு முடுக்கை"—"செய்யன் சிவந்த வாடையன்"
—(திருமுருகாற்றுப்படை- 206)

"உடையும் ஒலியலும் செய்யை மற்றுங்கே,
படையும் பவழக் கொடிநிறங் கொள்ளும்" —(பரிபாடல்-19-97)

13. 'எமம்வைகல்'—"எமவைகல் பெறுக யாமெனவே"
—(பரிபாடல்-17-53)

"பவளத் தன்ன மேனித் திகழொளி"—பவளம் செந்நிறம் ஆதலின் முருகவேள் மேனி செந்நிற மானதென்க. இதனை,

"செவ்வேள் சேய்"—(முருகு. 61);
"பொலம் பூட்சேய்"—(முருகு 271)

என்பவற்றாலும் "செவ்வேள்" என்னும் பெயருண்மை யானும் அறிக.

"உருவு முருவத்தீ யொத்தி"—(பரி-19-99) என்பதாலும்
"வேல்வல்லானிறனே போல் வெருவந்த சேயும் ஆங்கு"
—(கலி-104-14) என்பதாலும் அறிக.

(தொடரும்)

# அறிவியற் பகுதி — Science

## உளநூல் (Psychology)

[திரு. மா. பாலசுப்ரமணியம், எம். ஏ.]

### மெய்ப்பாட்டியல் (Emotions)

மெய்ப்பாடு என்பது ஒருவனது உள்ளத்தே நிகழும் நிகழ்ச்சிகள், அங்கு நிகழ்ந்தவாறே, புறத்தார்க்குப் புலப்படுவதோர் வழியால் வெளிப்படுதலாம். இதனை, வீரசோழிய உரைகாரர் "மெய்க்கட்பட்டு விளங்கிய தோற்றம்" என்பர். ஒல்காப்புகழ்த் தொல்காப்பியர் மெய்ப்பாடுகளை எண்வகைபாக வகுத்தனர். அவை, நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்பன. மேல்நாட்டு உளநூற் புலவர் மேலும் பலவகை மொழிவர். ஆயினும் அவை யெல்லாம் இவ்வெட்டினுள் அடங்குவன என்பதொருதலை.

உள்ளத்தே நிகழும் உணர்ச்சிகளாகிய நிகழ்ச்சிகள், முக மாற்றத்தாலும், மற்ற உறுப்புக்களின் நிலைவேறுபாட்டாலும், புறத்தார்க்குப் புலனும். எனவே, அவைகள் மெயப்பாடுகள் எனப்பட்டன. ஆங்கிலத்தில் அவை இமோஷன்ஸ் (Emotions) எனப்பட்டன. புறத்தார்க்குப் புலனுகாது, நுகர்வான் ஒருவனுக்கே புலனும் உள்ள உணர்ச்சிகளும் உள. அவைகளை நுண்ணுணர்ச்சிகள் எனக் கூறலாம். ஆங்கிலத்தில் அவை பீலிங்ஸ் (Feelings) எனப்பட்டன.

### பொது வியல்பு

மெய்ப்பாட்டின் தன்மையைப்பற்றி மூவேறு கொள்கைகளை உளநூற் புலவர் கொண்டிருக்கின்றனர்.

(1) உடலின் உள் உறுப்புக்களில் உண்டாகும் நிலை வேறுபாட்டால், அல்லது ஒருவகை நெகிழ்ச்சியால், ஏற்படும் உணர்ச்சிதான் மெய்ப்பாடாகும் என்பது ஒரு கொள்கை.

(2) முன்னர் நுகர்ந்த இன்பங்களையும் துன்பங்களையும் தொடர்புபற்றி மீண்டும் நினைத்தலால் ஏற்படும் உணர்ச்சியே

மெய்ப்பாடெனப்படுவேது என்பது மற்றொரு கொள்கை.

(3) உணர்ச்சிகளை வெளிப்பட புலப்படுத்துவதாகிய உறுப்புக்களின் அசைவு முதலிய செய்கைகளே மெய்ப்பாடுகளாம் என்பது பிறிதொரு கொள்கை.

இம்மூன்று கொள்கைகளையும் விடுத்து, எடுத்துக்காட்டுகளால் மெய்ப்பாட்டின் தன்மையை ஆராய்வோம்.

(1) பரந்த தன்மை:—மெய்ப்பாடு ஒரு குறிப்பிட்ட இனத்திற்கே உரியதன்று: எல்லா இனங்கட்கும் உரியது. ஓரறிவு படைத்த மாக்கள் தொடங்கி ஆறறிவு படைத்த மக்கள் இறுதியாக உள்ள பல இனங்கட்கும் மெய்ப்பாடு உரித்து. பூனையும் தன் குட்டியைத் துன்புறுத்துவார்பால் சினங்கொள்ளும். குழவியும் தன் விளையாட்டுக் கருவிகளைக் கவர்ந்து கொண்டார்பால் கோபமுறும். "குணமென்னும் குன்றேறி நின்றா"ரும் மடைமையுள்ள மக்கள்பால் பெருஞ் சீற்றம் கொள்வர். அவ்வாறே அச்சம், உவகை முதலிய பிறமெய்ப்பாடுகளும் எல்லா இனங்கட்கும் உரியன. எனவே, மெய்ப்பாடு பரந்த தன்மையை யுடையது என்பது புலனாகின்றது.

(2) பன்மைச் சார்பு:—ஒரு குறிப்பிட்ட மெய்ப்பாடு பல வகைச் சார்புகளாலும் எழும் எடுத்துக்காட்டாக, சினம் அச்சத்தாலும் எழும், பெரும் வன்மை யுடைமையாலும் எழும், பொறுமையாலும் எழும், பிற சார்புகளாலும் எழும். ஒரு நாய்க்குப் பல சார்புகளால் கோபம் உண்டாக்கலாம். எலும்பைக் கடித்துத் தின்னும்பொழுது, அதற்கு இடையூறு செய்தாலும், அதன் வாலைப்பற்றி இழுத்தாலும், அதன் குட்டிகளைத் துன்புறுத்தினாலும், நாய்க்குக் கோபம் உண்டாகும்.

(3) முன்னிலைமைத் தொடர்பு:—ஒரு குறிப்பிட்ட மெய்ப்பாடு தோன்றுவதற்கும், அதன் வன்மைக்கும் சிறந்த சார்பாகவுள்ளது, உள்ளத்தின் முன்னிலைமையேயாகும். விளையாட்டுக் கருவியைக் கவர்ந்து கொண்டவர்பால் குழவிக்குச் சினம் எழுவது, அக்குழவிக்கு விளையாட்டின்மேல் உள்ள விருப்பத்தாலேயாம். அவ்வாறே, எலும்பின்மேலுள்ள விருப்பத்தால், அதைப் பிடுங்கினவர்பால் நாய் கோபம் கொள்கின்றது. ஒரு தீய விலங்கைக் கண்டு அச்சம் என்னும் மெய்ப்பாட்டினை யடை

கின்றவன், உயிரிச்சை என்னும் முன்னிலைமைச் சார்பாகவே அம் மெய்ப்பாட்டினை அடைகின்றான். தான் விரும்பியிருந்த கூட்டுறவு இன்பத்துக்குத் தடையாக விருப்பதால்தான் ஒரு சேங்கன்று மற்றொரு சேங்கன்றிடத்துக் கோபம் என்னும் மெய்ப்பாட்டினை அடைகின்றது.

(4) மெய்ப்பாட்டுப் பின்னிலையல்:—இது ஆங்கிலத்தில் இமோஷனல் மூட் (Emotional Mood) என்று கூறப்படும். மெய்ப்பாட்டின் தோற்றத்துக்குரிய நிலைமை நீங்கின பிறகும், அம்மெய்ப்பாட்டின் தன்மை, உள்ளத்தின்கண் சிலகாலம் ஆழ்ந்து நிற்கும். இதுவே மெய்ப்பாட்டுப் பின்னிலையல் எனப்படும். வீட்டில் மனையாளுடன் சினம்கொண்ட ஆசிரியர், பள்ளியில் மாணவர்கள் மேலும் சினங்காட்டுவதும், தலைவனால் கண்டிக்கப்பட்டு வீடு சென்ற வேலையாள் தன் மனைவி மக்களிடத்தே கோபம் கொள்ளுவதும், சில எடுத்துக்காட்டுக்களாம்.

## மெய்ப்பாடுகளும் உறுப்பசைவுகளும்
## Emotions and Expressive Movements

நகையாலும் விளையாட்டாலும் ஒரு குழவி இன்பமாயிருத்தலை அறியலாம். வாலாட்டத்தால் நாய் இன்பமா யிருத்தலையறியலாம். மனிதனுடைய முகத்தாலும் குரலாலும் அவனுடைய மெய்ப்பாட்டின் தன்மையை அறியலாம். புன்னகை, பெருநகை, கைக்கொட்டல், உரத்துப் பேசல், தேம்பிப்பேசல், அலறல், வீறிட்டுக்கூவல், குதித்துப் பேசல் முதலிய செய்கைகள் மெய்ப்பாட்டின் அறிகுறிகள். சில உளநூற் புலவர்கள் இச் செய்கைகள் யாவும் விலங்குப் பிறப்பிலிருந்து மனிதப்பிறப்பு ஏற்பட்ட காலத்து உடன்தொடர்ந்தவை என்பர். எடுத்துக் காட்டாக, இதழ்களை விரித்துப் பற்களைக் கடித்தல் இன்றளவும் மனிதனுடைய கோபக் குறியாக விருக்கின்றது. இது, புலி, சிங்கம், நாய், முதலிய விலங்குகளின் கோபக்குறியை ஒத்திருத்தலை நாம் கண்கூடாக அறிவோம். "வேண்டாம்", "இல்லை" என விடை கூற விரும்புவான் ஒருவன் தன் தலையை ஒரு புறத்திருந்து மறுபுறம் அசைத்தல் குழவிப் பருவத்திருந்து தொடர்ந்து வந்திருக்கின்றது. பேச அறியாத குழவி தனக்கு வேண்

டாத உணவை உட்கொள்ள மறுத்தற்குத் தலையை அசைக்கின்றது. அவ் வழக்கம் ஆண்டு பலவாயினும் நீங்காமல் தொடர்ந்தே நிற்கின்றது. வெறுப்புக் குறிப்பைக் காட்டுவதற்கு நாம் மூக்கால் "ங்ஹூ, ங்ஹூ" என்பது வழக்கம். முதன் முதலில் இச் செய்கை தீய நாற்றம் மூக்குள் புகாமற் காத்தற்கு ஏற்பட்டுப் பிறகு வெறுப்பினை உணர்த்தும் அறிகுறி ஆயிற்று. மனிதனுக்கு வயது ஏற ஏற மெய்ப்பாடுகளைப் புறத்தார்க்குப் புலனாகா வண்ணம் அடக்கும் வன்மையும் வளர்கின்றது. சிறப்பாக, கோபம், அச்சம், வெறுப்பு முதலிய தீய பயன்தரும் மெய்ப்பாடுகளை, மனிதன் தன்னலத்திற்காகவே, வெளிப்படுத்தாமல் இருக்க வேண்டிய நிலைமையில் நிற்கின்றான்.

மனிதனுடைய முகக் குறிப்பால், நாம் நற்பயனுடைய மெய்ப்பாடுகளை அறிவதைவிட தீப்பயனுடைய மெய்ப்பாடுகளை மிக எளிதில் அறியலாம். துன்பச் சார்பான மெய்ப்பாடுகள் மனிதனுடைய அடக்கும் ஆற்றலை மீறி அவன் முகக் குறிப்பில் புலனாகின்றன. "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங் கடுத்தது காட்டும் முகம்" என்னும் பழமொழியும், "நெஞ்சம் இனித்தது காட்டும் முகம்" என்னாமல் "நெஞ்சங் கடுத்தது காட்டும் முகம்" என்றே குறிப்பிட்டமை ஊன்றி உன்னற்பாலது. நம் பழந் தமிழறிஞர் உளநூற் புலமையை எத்துணை பெற்றிருந்தனர் என்பது இதனாற் புலனாகின்றது.

## மெய்ப்பாடும் குரல் மாற்றமும்
## Vocal expression of Emotion

முகக் குறிப்பால் மெய்ப்பாடுகளை அறிவதைவிட குரற் குறிப்பால் அவைகளை அறிதல் மிகவும் எளிது. நாடகத்தில், நடிகர்களுடைய மெய்ப்பாடுகளை அவர்களுடைய முகக் குறிப்பால் அறிவதைவிட குரற் குறிப்பால் எளிதாக அறிகிறோம். பாடுங் குரலால் அறிவதைவிட, பேசுங்குரலால் மிக எளிதாக மெய்ப்பாடுகளை அறியலாம். பாடும்பொழுது, இசை விரவியிருத்தலால், நாம் மெய்ப்பாடுகளை எளிதில் பிரித்துப் புலப்படுத்தவும் உணரவும் இயல்வதில்லை. ஆனால் பேசும்பொழுது, கோபத்துடன் வினவல், கோபத்துடன் விடைகூறல், இரக்கத்

துடன் மொழிதல், துன்பத்துடன் பேசல், வெறுப்புடன் புகலல், மனவன்மையுடன் முடிவு கூறல், ஏளனமாக மொழிதல், அன்புடன் சொல்லாடல் முதலிய பலவேறு நுணுக்கங்களைக் கொண்ட மெய்ப்பாடுகளை நாம் அறிபலாம். "இல்லை" என்னும் சொல்லைக் கூறுமிடத்து இன்பத்துடனுதல், அன்புடனுதல், வெறுப்புடனுதல், சீற்றத்துடனுதல்; துன்பத்துடனுதல், இரக்கத்துடனுதல் கூறலாம். இவ்வின்பம், அன்பு, வெறுப்பு, சீற்றம், துன்பம், இரக்கம் என்னும் மெய்ப்பாடுகளை நாம் குரலின் உரத்தாலும், நயத்தாலும், இடைப்பட்ட பல குரல் மாற்றங்களாலும் மிக எளிதாக அறியலாம்.

## ஒன்றற்கொன்று தொடர்புள்ள மெய்ப்பாடுகள்
## The Interconnections of the Emotions

இன்பம், வருத்தம், சினம், அச்சம் என்னும் நான்கு மெய்ப்பாடுகளும் ஒன்றற்கொன்று தொடர்புள்ளவை என்பது சில உளநூற் புலவருடைய கொள்கை. இன்பமும் சினமும் ஊக்கத்தை அளிக்கும் மெய்ப்பாடுகள் என்பதும், வருத்தமும் அச்சமும் சோர்வினைத் தரும் மெய்ப்பாடுகள் என்பதும் சிலருடைய கொள்கை. அச்சத்தால் சினம் உண்டாதலும், சினத்தால் அச்சம் உண்டாதலும் உண்டு. உடல்வன்மை யுடையவனைப் பகைக்கும் உடல் நலிந்தவன் ஒருவன் முதற்கண் அச்சங்கொண்டு, பிறகு சினங் கொள்வது நாம் அறிந்ததே. "சினம் அளவுக்கு மிஞ்சினுல் என்ன தகாத காரியத்தைச் செய்து விடுவோமோ!" என்று அச்சங்கொள்ளும் மக்களையும் நாம் அறிவோம். நாய்க்கு அஞ்சும் பூனை, அச்சம் அளவுக்கு மிஞ்சினுல் மிகுந்த சினங்கொண்டு நாயின்மேற் பாய்வதும் நாம் அறிந்ததே.

## மெய்ப்பாட்டைப்பற்றிய ஒரு கொள்கை.

மெய்ப்பாட்டைப் பற்றிச் சில உளநூற் புலவர் கொண்டுள்ள கொள்கையை ஒரு எடுத்துக்காட்டைக்கொண்டு ஆராய்வோம். ஒருவன் தனிவழியாகச் செல்லும்பொழுது ஒரு வேங்கையைக் கண்ணுறுகின்றுன். உடனே ஓடி ஒளித்துக் கொள்கின்றுன். அவன் ஓடத் தொடங்கினபிறகே அச்சங்கொள்கிறுன் என்பது சிலருடைய கொள்கை. ஆனுல் உளநூல் வல்

லாருள் பெரும் பகுதியாருடைய கொள்கை, அச்சங்கொண்ட பிறகே ஓடுகின்றான் என்பது. இவ்விரண்டனுள் பின்னர்க் கூறப்பட்டதே நேர்மையான கொள்கையாம். அம்மனிதன் ஓடாவிட்டால் அவன் அஞ்சுகின்றான் என்பது புலனாகாது; அன்றியும், அவன் அஞ்சாவிட்டால் ஓடவேண்டியதில்லை; எனவே ஓட்டமும் அச்சமும் தொடர்புடையவை; எனவே ஓட்டமே அச்சம், அச்சமே ஓட்டம்; என்பர் மேற்குறிப்பிட்ட கொள்கையர். இது தொடர்புள்ள இரு பொருள்களை ஒருபொருளாக மயக்கும் குற்றமாம். மேற்கூறப்பட்ட எடுத்துக்காட்டில், வேங்கையைக் கண்டவுடன், அம்மனிதன் தன் உயிருக்கு நேரும் கெடுதியை உணர்ந்து அச்சம்கொண்டு மேலும் வாழவேண்டும் என்னும் விருப்பினை உடையனாதலின், ஓடி ஒளித்துக்கொள்கின்றான். உயிரிச்சை என்னும் உள்ளத்தின் முன்னிலைமையால், வேங்கையைக் கண்டவுடன் அச்சம் என்னும் மெய்ப்பாடு தோன்றுகின்றது என்பதுதான் உண்மையான முடிபு.

---

## பொருணூல்—(Economics)

[திரு. B. நடராஜ பிள்ளை B.A. (Hons)]

(முன் ௩௨௯-ம் பக்கத் தொடர்ச்சி)

அப்பொழுதிருந்த சென்னை அரசாங்க அதிகாரிகள் ஏராளமான நிதி இந்தியாவைவிட்டு வெளியேறுவதன் தீமைகளை நன்கு உணர்ந்திருந்தனர். நாணயங்கள் மிகுதியாக வெளியேறுவதே அகவிலைகள் குறைவதற்கு முக்கிய காரணமென்று சில ஜில்லாகலெக்டர்களும் ரெவன்யூபோர்டு அதிகாரிகளும் 1830-ல் அபிப்பிராயப்படவே, சென்னை அரசாங்கம் அக்கொள்கையினைக் குறித்துப் பின் வருமாறு எழுதியது.—

"இந்த நாட்டுக்கும் பிரிட்டனுக்குமுள்ள அரசியல் தொடர்பாலும், அயல் நாட்டோடுடைய வாணிபத்தாலும் தங்கமும் வெள்ளியும் வெளிச் செல்லுவதையும், அவ்வாறு வெளிச் செல்வதால் போதிய கைத்தொழிலோ வாணிபமோ இல்லா ஒரு நாட்டுக்கு உண்டாம் இடும்பையையும் இன்னல்களையும் பற்றி போர்டார் கொண்டுள்ள கருத்துக்களை மாட்சிமை தங்கிய கவர்ன

ரும் அவர் சபை அங்கத்தினரும் நன்கே அறிகுவர். ஆனால் மத்திய அரசாங்கமும் இம்மாகாண அரசாங்கமும் தற்பொழுது கவனிக்க வேண்டிய நிலையிலிருப்பது எதைப்பற்றி என்றால், இங்கு கஜானுக்களிற் தங்கமும் வெள்ளியும் இருக்கும்போது கம்பெனியார் அவை இல்லாது தாய் நாட்டில் கஷ்டப்படவேண்டுமா என்பதேயாகும். ஆகையால் நம்மால் இயன்றவரை இக்கஷ்டத்தை நிவர்த்தி செய்ய முயலவேண்டுமெனினும், இம்மாதிரி அடிக்கடி இங்கிருந்து தொகைகள் கேட்கும் பழக்கத்தை இனிமேல் கண்டிப்பதோடு, இவ்வாறு தங்கம் வெளிச் செல்லுவதால் நாட்டுக்கு விளைந்த பண முட்டுப்பாட்டையும் நாணயக் குறைவையும் நிவர்த்திபண்ண வேறு எவ்வெவ் வழிகளெல்லாம் உளவோ அவை அனைத்தையும் கையாடுவதும் அவசியமாகும்."

1830 முதல் 40 வரை ஏராளமான திரவிபம் நாட்டைவிட்டு அகன்றதென கம்பெனியின் இங்கிலாந்து தலைவர்களே ஒப்புக்கொண்டிருக்கின்றார்கள்.

இவ்வாறு நிதியானது வெளியேறி நாட்டைக் காலியாக்கியதை வறிதாக்கியவொரு முறையெனப் பல ஆசிரியர்கள் கண்டிக்கின்றனர். ஆனால் அதைப்பற்றிய சிறப்பான விசாரணை ஈண்டு நமக்குத் தேவையில்லை; பல நூற்றாண்டுகளாக விடாது பொன்னையும் வெள்ளியையும்கொண்ட ஒரு நாடானது பின்னர் சில ஆண்டுகள் தான் கொண்டதில் ஒரு பாகத்தை வெளியேற்றுவதைப்பற்றி பொன்னிற் பற்றுள்ள எந்தப் பொருளாதாரப் பண்டிதருங்கூட அச்சங்கொள்வரென்று நாம் நினைப்பதற்கில்லை. இங்கு நாம் கவனிக்க வேண்டியதெல்லாம், இவ்வாறு வெளியேறிய நிதியால் நாட்டின் நாணயத்திட்டத்துக்கு யாது விளைந்தது என்பதேயாகும். இங்கு மற்றோர் மிக நுட்பமான விஷயம் கவனிக்கப்படுதல் வேண்டும். அதாவது அந்தக் காலத்தில் அனுப்பப்பட்டுவந்த திரவியம் முழுதும் கைப்புழங்கி வந்த நாணயமயமாகவே இருந்ததென்பதாகும். இறக்குமதியான திரவியமும் சிறிதளவாக இருந்த போதிலுங்கூட அதுவும், நாணயங்களாகவே இருந்தன. ஆனால் இவைகள் அயல் நாட்டு நாணயங்களாகையாலே, மீண்டும் கம்பட்ட சாலையிற் புகுந்து உள்நாட்டு நாணயங்களாக மாற்றப்படும் வரை ஆட்சியிற்பெற

மாட்டாதவை ஆயின. அத்தகைய செல்லாக் காசுகளை உள் நாட்டு நாணயங்களாக உருமாற்ற கம்பட்ட சாலையில் எவ்வித கூலியும் வசூலிக்கப்படவில்லையேனும், நாம் எடுத்துக்கொண்ட கால அளவையில் கம்பட்டசாலைக்குள் சுதேசிய உருவைப்பெறச் சென்ற நாணயங்களின் பெறுமானம் ஆண்டுதோறும் குறைந்து கொண்டேதான் வந்தது. அரசாங்கக் கம்பட்டசாலை அதிகாரி யின் அறிக்கைப்புள்ளி விவரங்கள் இதனைத் தெளிவுபடுத்தும்.

1841-42-க்கும், 1849-50க்கும் இடையிலுள்ள காலத்தில் நாணய மடிக்கப்பட்ட சாலைக்குச் சென்ற நிதிக்கட்டி, தகடு முத லியவற்றின் தொகை தகுந்தபடி குறைந்துவிட்டதென்பது விளங்கும். இது 1834-ம் ஆண்டிற்குப் பிறகு வெள்ளிடை மலைபோல் காணப்படும். 1834-ம் ஆண்டுக்கு முன் ஆண்டொன் றுக்குச் சராசரி கம்பட்ட சாலைக்குக் காசடிப்பதற்கெனச் சென்ற பொருளின் தொகை 32½ இலட்சம் ரூபாயாகும். இது மெது வாகக் குறைந்து குறைந்து பெரியவியாபாரக் குழப்பமும் இடி வும் உச்சத்திலிருந்த ஆண்டான 1847-48-ல் 1 இலட்சம் ரூபாய்க்கு வந்துவிட்டது.

எனவே, நாட்டிற் புழங்கிவந்த நாணயம் உள்நாட்டுத் தேவைகளுக்கு வரவரப் போதாமலே வந்துகொண்டிருந்தது. இதனுள் 1830-40-க் கிடையில் சென்னைக் கம்பட்ட சாலையை நிறுத்திவிட்டனர். இது அல்லலை அதிகரித்தது. அப்பொழுது அரசாங்க பணமுடக்கத்தின் காரணத்தை ஆராய்வதற்கு வி. ஆர். காட்டன் என்னும் ஒரு அதிகாரியை நியமித்தனர். இவர் மேற்குறித்த கம்பட்டசாலை மூடப்பெற்ற காரணத்தாலேயே மக்களுடைய துன்பம் மிகுந்ததென முடிவு கண்டனர். கம் பெனியின் இங்கிலாந்து அதிகாரிகளால் 1839-ல் மே மாதம் 10-ம் நாளில் விடுக்கப்பட்ட கட்டளைப்படி சென்னைக் கம்பட்ட சாலை மீண்டும் திறக்கப்பட்டதெனினும், மாகாணத்தின் நாணய ஏற்பாட்டில் எவ்வித நல்ல காலமும் பிறக்கவில்லை.

(தொடரும்)

---

"செல்வி"யைப் போற்றுமின்!
செய்கட னாற்றுமின்!

# மாணவர் பகுதி

## பயனுள்ள கல்வி

[சுவாமி விபுலாநந்தர் அவர்கள்]

(முன் சகஈ-ம் பக்கத் தொடர்ச்சி)

கற்குநூல் இதுவென நிச்சயித்துக் கொண்டவழி அதனை நுணுகவாராய்ந்து கற்றல் வேண்டும். பருப்பொருளாக நூறு நூல்களைத் தெளிவுபெறுவண்ணம் உளத்துட்கொள்வதினும் பார்க்க ஒரேயொரு நூலினை நுண்ணிதினுராய்ந்து தெளிவுற அறிந்து கொள்ளுதல் சிறந்த முறையாகும். ஆசிரியனது கருத்தாகிய பொற்றிரள் பல சொல்லிடையே மறைவுற்றுக் கிடக்கும்; மண்ணிடைக் கலந்து கிடக்கும் பொன்னினைப் பிரிக்கும் வகையால் உருக்கி யொன்று கூட்டும் பொற்கொல்லரைப் போல அறிவென்னுந் தீயினிடையே நூலாசிரியனுடைய சொற்களைப் பெய்து உறுதிப்பொருள் பயக்கும் உண்மை வாசகங்களைப் பிரித்தெடுத்து ஒன்றுகூட்ட வேண்டும். இதுவே பயனுள்ள கல்வி பெற விழைவார் கைக்கொள்ள வேண்டிய முறையாகும். நூலினை எழுத்தெழுத்தாக நோக்கி ஊன்றி யவதானித்து உண்மைப்பொருள் காண்போனே "எழுத்தறிந்த பண்டிதன்" எனப்படுவான். மேனாட்டுப் பல்கலைக் கழகங்களிலே வழங்கப் படும் அதியுயர்ந்த வித்தியாபட்டமும் (Doctor of Letters) இப்பொருண்மையதே. இக்காலத்துப் பரீக்ஷைகளுக்குக் கற்போர் சுருங்கிய காலவெல்லையினுள்ளே பல நூல்களைக் கற்க முயல்வாராதலினால் அன்னார் ஒரு நூலினைத் தானும் தெளிவுற அறிந்து கொள்வதில்லை; அவரது கல்வி நல்லாரவைக்களத்துச் சென்று நிலைபெறுவது மில்லை. எடுத்த நூலினைத் தெளிவுற வாராய்ந்து அறிந்தவனுக்கு அதனிடத்தே யெய்துவதொரு உறுதிப்பாடுண்டு. அத்தகைய உறுதிப்பாடு காரணமாக அவை யஞ்சாமையாகிய சிறந்தகுணம் ஏற்படும். தெளிவில்லா விடத்து நெஞ்சின்க ணெய்துவதொரு கலக்கமுண்டு. மேலும்,

> " எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
> நுண்பொருள் காண்ப தறிவு "

என்றாராகலின், பிறர்வாய்க் கேட்குஞ் சொற்களின் நுண்ணிய பொருள் காணவரி தாயினும் அதனைக் காண வல்லதே அறிவு என்றறிதல் வேண்டும்.

"நுண்மா ணுழைபுல மில்லா னெழினல
மண்மாண் புனைபாவை யற்று"

என்புழியும் நுணுகி நோக்கியாராய்தல் அறிவிற்கு மாட்சிமையைத் தருவதென்பது பெறப்பட்டது.

உளப்பயிற்சிக்குச் சாதனமாகக் கட்புலனையுஞ் செவிப் புலனையுங் கூர்ந் தவதானிக்கு முறையிற் பயிற்றுதல் வேண்டும். கண்ணிருந்துங் காணாத மாந்தர் பலருளர்; செவி யிருந்துங் கேளாத மாந்தர் பலருளர். பகற் கனவு காணும் நிலையிலே என்றும் உண்ணோக்கிய சிந்தையோடு புறத்தே நிகழ்பவற்றைக் கருதாதிருப்பது யோக சாதனை யென்றும் வேதாந்த நிஷ்டை யென்றுஞ் சிலர் தவறாக நினைக்கின்றனர். பகற்றூக்கம் யோக மன்று; தூங்காமையே யோகமென்பது யோகநூற் றுணிபு. மூளையிலே சுத்த ரத்தம் செறிந்து கருவி கரணங்களெல்லாம் பூரண விழிப்பு நிலையிலிருக்கும் பொழுது நம்மைச் சூழவிருக்கும் பிரபஞ்சம் என்னும் ஏட்டினைப் படித்து நாம் அறிவினைப்பெறுதல் கூடும். பூதபௌதிகங்களைப்பற்றிய ஆராய்ச்சியே மேனாட்டாருக்கு உயர்நிலையை யளித்த விஞ்ஞான சாஸ்திரமாகும்.

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு

என்ற பொய்யா மொழியின் பொருளும் ஈண்டு நுணுக நோக்கியுணரற்பாலது.

கண்ணுஞ் செவியுங் கருவியாக நுண்ணிதின் நோக்க வல்ல மாந்தருக்கு எண்ணின்றிறமனைத்தும் திண்ணிதி னெய்தப் பெறுமாதலின் கணிதநூலுணர்ச்சிக்கும் புலன்களைப்பயிற்றுதல் இன்றியமையாத சாதனமாகும்.

கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதி னுணரும்
உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியி
னன்னயப் பொருள்கோ ளெண்ணருங் குரைத்தே

என ஆசிரியர் தோல்காப்பியனாரும் உரைத்துச் சென்றார். கண்ணினையுஞ் செவியினையும் பயிற்றும் பொருட்டு மாணாக்கருக்கு ஓவியக் கலையையும் இசைக்கலையையும் ஒருசிறிதாவது அறிவுறுத்துதல் நலமாகும்.

எண்ணூலும் இலக்கணநூலும் புவியியல் நூலும் வான் முறைநூலும், பூதபௌதிகநூலும், ஓவியநூலும், இசைநூலும் என்றிவை பதினாறாட்டைப் பிராயம் புகுமுன்னர்க் கற்றற்குரிய கருவிநூல்களாமெனவும் அவற்றைக் கற்குந்திறம் இதுவெனவும் ஆராய்ந்தாம். இனி உடற்பயிற்சியை விசாரிக்கப் புகுமுன் மேற்கூறியநூல்களுள் பள்ளிப் படிப்பிலே கொள்ளற்குரிய

அளவு இதுவென ஒருவாறு வரையறுத்துரைத்து அப்பாற் செல்வாம்.

முதலிலே எண்ணூலை யெடுத்துக் கொள்வாம். கூட்டல் கழித்தல், பெருக்கல், வகுத்தல் என்னும் நால்வகைத் தொழிலை யும் எண்ணல், எடுத்தல், நீட்டல், முகத்தல் என்னும் நால் வகைகளோடு சார்த்தியுணர்த்துதலும், கீழ்வாயெண் (Fractions) பதிற் றுறுப்பெண் (decimals), பொதுவெண் (general terms) என்னுமிவற்றோடு சார்த்தியுணர்த்துதலும், ஓரெண்ணினையே பெருக்கு மெண்ணாகவும் பெருக்கப்படுமெண்ணாகவும் வைத்துப் பெருக்குத் தொகை கண்டறிதலாகிய இருமடிப் பெருக்கம் (Squares) இப்பரிசாகிய மும்மடிப் பெருக்கம் (cubes) நான் மடிப்பெருக்கம் என்றின்னவற்றின் இயல்பினை யுணர்த்துதலும், இருமடி மும்மடிப் பெருக்க வெண்களினின்று மூல யெண் (Roots) ணினைக்காணும் முறைகளை யுணர்த்துதலும், மறைந்த வெண்ணினைக் கண்டறியும் எளிய முறைகளைப் (Simple equation) பயிற்றுதலும், நடுவெண் (average), படியெண், (Ratio), படியெண்ணிணைப்பு (Proportion), முத்தொகை ஐந்தொகை, நூற்றுறுப்பு (Percentage) வட்டிக்கணக்கு (Interest), நிலவளவை (Elementary Surveying) என்னு மிவற்றை யுணர்த்துதலும் எண்ணின் பாற்படுவன.

எண்ணூல் கடல்போன்று பரந்த நீர்மையது. பதினாறாட் டைப் பிராயத்தான் கற்குந்தரத்த விவையெனக் காட்டப் புகுந்தே மாதலின், அவற்கு இவை யமையுமென எல்லை யிட்டுரைத்தனம்.

இவை தம்மைச் செவ்விதினுணர்ந்த நன்மாணாக்கன் மேல் புலத்தாரும் வடபுலத்தாரும் விரிவுற வுரைத்த பீஜகணிதம் (Algebra) கேத்திரகணிதம் (Geometry), திரிகோணகணிதம் (Trigonometry), கணனகணிதம் (Differential and integral calculus), வானநூற்கணிதம் (Astronomy), இயந்திர கணிதம் (Mechanics), என்னுந்துறைகளுட் டானே புகும் ஆற்றலைப்தப் பெறுவானாதலின், கணித நூற்கு அடிப்படையாகிய பொது விதிகளைக் கருவியாகவும் செய்கையாகவும் உணர்தலே "பயனுள்ள கல்வி"யின் பாற்படுமென்க.

இலக்கண நூல்களுள்ளே ஒல்காப் பெருமையது தொல் காப்பியம்; நன்னூல், சின்னூல், தொன்னூலாதியாம் பின்னூல் களும் பலவுள; பிற்காலத்தார் கத்தியரூபமாக வியற்றிய நூல்களுஞ் சிலவுள. யாதாயினுமொரு நூலினை யெடுத்து அதனைத் தேறத்தெளியப் படித்துணர்வதே அறிவுநிறைவிற்குக்

கருவியாகும். எழுத்திலக்கணமுஞ் சொல்லிக்கணமும் வெண்பா, அகவல், விருத்தம் என்றின்னவற்றின் யாப்பிலக்கணமும் இளமாணவர் ஓதியுணரற்பாலன.

நாலடியார் முதலிய கீழ்க்கணக்கு நூல்கள் பதினெட்டும், எட்டுத்தொகையும் பத்துப்பாட்டுமாகிய மேற்கணக்குநூல்கள் பதினெட்டும், கீழ்வகுப்பு மாணவருக்கும், பாடஞ் சொல்லுதற்குரிய முறையிலே தொகுக்கப்பட்டனவென எண்ணுதற்கிட முண்டு. கணக்காயரால் பாடஞ்சொல்லப் படுவனவாதலின் இவை கணக்கு என்னுங் குறியீட்டினைப்பெற்றன. கீழ்க்கணக்கு நூல்களில் இருமூன்றும், மேற்கணக்கு நூல்களில் ஒருமூன்றும் இக்காலத்து மாணவர்க்குப்போதியன.

மக்கட்சாதியார் வாழும் இம்மண்ணுலகிலே பல்வேறுய தேயங்களின் இயற்கை வளனும், மலை, கடல், நதியென்றின்ன வற்றினமைப்பும் வெப்பதட்ப நிலைகளும், மழை வீழ்ச்சி, காற்றியக்க மென்றின்னவும், ஐந்திணை நிலப்பாகுபாடும், விளை பொருளும், வாணிகமும, நாவாய், புகைவண்டித் தொட ரென்றிவற்றினல் ஏற்பட்டிருக்கும் போக்கு வரவு வசதிகளும், ஆசியா, ஐரோப்பா, ஆபிரிக்கா, அமெரிக்கா எனநின்ற பெரு நிலப் பரப்புகளின் அரசியல் நிலையும் மக்களது வாழ்க்கையு மென்றின்னவற்றை யெல்லாம் “திரைகடலோடியுந் திரவியந் தேடு” எனும் ஔவையார் வாக்கிற்குப் பேரிலக்காகப் பொருள்புரி நூற்சார்புபற்றி ஓதியுணர்தல் வேண்டும். இனி வரன் முறை நூலினும் தமிழ்நாட்டின் பழைமை, பாரதநாட்டின் பூர்வீகம், பாரதத்தையடுத்துள்ள சீனம், மிசிரம், (Egypt) பாரசீகம் என்னும் பழம்பதிகளின் தொன்மை நலம், யவனபுரம், ரோமபுரம் என்னுமிவற்றின் அரசியனெறி, புத்ததேவர், இயேசு நாதர், முகம்மதுநபி என்னும் சமயஸ்தாபகருடைய தோற்றத் தினலே அவரவர் நாட்டிற்கும் நாகரிக உலகிற்கும் நேர்ந்த நலங்கள், மேனுட்டுக் கடலோட்டிகளுட் சிறந்தோரது வரலாறு; மேற்புலத்து வர்த்தகப் பெருக்கத்திற்குக் காரணங்கள்; ஐரோப்பிய மகாயுத்தம்; உலகினை ஒற்றுமைப்படச் செய்வதற்கு அறிவுடையோர் எடுத்துக்கொள்ளும் முயற்சிகள்; உலகின் தற்கால நிலை என்றிவற்றை யெல்லாம் உளத்திற்கினிமை பயக்கும் கதையுருவமாக இளஞ்சிருருக்குப் பயிற்றுதல் வேண்டும். நூறு ஸ்தல புராணங்களைப் பாராயணஞ் செய்துபெறும் பயனினும் பார்க்க, உலகபுராணத்தைப் பாராயணஞ் செய்து பெறும்பயன் பெரிது என்பது நாம் சொல்லாமலேயமையும். “பொருள்புரி நூல்,” “உலக புராணம்” என்னும் இரண்டினையும் உதயணன் கற்றிருந்தானெனப் பெருங்கதையினல் அறிகின்ருேம்.

பூதபௌதிகங்களின் இயலினை யுணர்த்தும் நூற்றொகுதியை மேனாட்டார் "சையன்ஸ்" என்பார் இச்சொல்லின்நேர் மொழிபெயர்ப்பு "அறிவு நூல்" என்பது. கணிதநூலும் இதன் பாற்படும். வடமொழி வழக்குப்பற்றி "சையன்ஸை" விஞ்ஞான நூல் என்னலாம். விஞ்ஞான நூலின் பல துறைகளில் ஒரு துறையினை முற்றக்கற்றற்கு ஓர் ஆயுட்காலம் போதாதென்பர். பாரத நாட்டிலே தோன்றி உலகெங்கும் அறிவொளி பரப்பும் ஸ்ரீ சந்திர சேகர வேங்கடராமன், ஸ்ரீ ஜகதீச சந்திரவசு, ஸ்ரீ பிரபுல்ல சந்திரராயர் என்னும் விஞ்ஞான நூலறிஞர் மூவரும ஒவ்வொரு துறையிலே பெருங்கீர்த்தி வாய்ந்தவராவார். விஞ்ஞான நூற்றுறைகளிலே அனைவர்க்கும் இன்றியமையாப்பாகம் "உயிர்நூல்" (Biology) ஆதலின், அதனை இளைஞர்க்கு அறிவுறுத்துதல் பயனுள்ள கல்வியின் பாற்படும். தாவரங்களிலும், விலங்கினங்களிடத்தும், மக்களிடத்தும் தோன்றும் உயிர்ச் சக்தி ஒரு தன்மையதே. பிறப்பதும், உணவுட் கொள்வதும், வளர்ச்சியடையவதும், இனத்தைப் பெருக்குவதும், கால வெல்லையிலே யிறப்பதும், எல்லா வுயிர்க்குமமைந்த பொது விலக்கணமாகும். "அன்பின் வழிய துயிர்நிலை," என்னும் பொய்யா மொழியின்படி எல்லாஉயிரும் அன்பினால் நிலை பெறுவன; அன்பினால் வளர்ச்சியெய்துவன. தாவர வுயிர்மீதும் அன்பு செலுத்தினால் அது செவ்விதின் வளர்ந்து, மலர், கனி முதலிய பயனைத்தரும். இவ்வுண்மையை இளைஞர்க் கறிவுறுத்துவது உயிர் நூற்கல்வியின் முதற்படியாகும். மன்னுயிரனைத்தினையுந் தன்னுயிர்போலக் கருதுகின்ற நற்குணத்தை இளம்பிராயத்திலேயே நிலைபெறச் செய்ய வேண்டும்.

> "எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
> அதிர வருவதோர் நோய்"

என்றபடி இன்னது செய்யின் இன்னது பயக்கும் என்பதையறிந்து உடற்காப்பிலே கருத்தாயிருக்கும் வண்ணம் இளைஞரைப் பயிற்றுதல் வேண்டும். உடலினை நல்ல கட்டுறுதியுள்ள தாக்குவதற்குப் பிரமசரியம் இன்றியமையாதது. தூயவுணவும், சுத்தக்காற்றும், தேகாப்பியாசமும் இன்றியமையாதன. இவற்றை உடற்பயிற்சியின் கீழ்ப் பின்னரும் கூறுதும். உயிரனைத்தும் ஒன்றினொடொன்று தொடர்புடையன; பிறவுயிரினைக் காப்பதே தன்னுயிரைக் காப்பதற்குச் சிறந்தவுபாயமாகும். உழவுத் தொழில், பசுக்காத்தல் என்னுமிவை ஒரு வருணத்தார்க்குச் சிறந்த தொழிலாகக் கூறப்பட்டிருப்பினும் உயிரினைப் பாதுகாக்கு மார்க்கத்தான் இவை அனைவர்க்கும் பொதுவாயமைந்து நின்றன. இவற்றையெல்லாம் முறையறிந் துணர்த்துதலே உயிர் நூற் பொதுவியலாகும்.

இனி ஓவியநூலும் அவ்வத் தொழிலாளர்க்கே சிறப்புரிமை யாவன வெனினும் கட்புலனையும் செவிப்புலனையும் பயிற்றும் நோக்கமாக அவற்றின் ஆரம்பப் பாடங்களை எல்லா இளைஞர்க்கும் அறிவுறுத்துதல் வேண்டும்.

"உள்ளத்துறுதி உடலுறுதிக்கண்ணது" ஆதலின் உடற் பயிற்சி தன்னளவில் நலஞ் செய்வதோடு கூட உளப்பயிற்சிக்கும் சாதனமாகின்றது. மேனாட்டு உடற்பயிற்சி முறைகளினும் பார்க்க நமது நாட்டிற் பண்டுதொட் டிருந்துவருகிற ஹட யோக முறையே சாலச் சிறந்தது. சுவாமி குவலயானந்தர் ஆங்கிலத்தில் வெளியிட்டுவருகிற "யோக மீமாஞ்சை" யென்னும் வெளியீட்டிலே ஆடவர்க்கும் மகளிர்க்கும் இளைஞர்க்கும் பொருத்தமாகிய யோகாசனங்கள் பல வெளியிடப்பட்டிருக்கின்றன. இவற்றை நூலினின்று கற்பதனினும் பார்க்க ஆசிரியன் முன்னிலையிலே அறிந்து கொள்வது நன்றாகும். சென்ற மூன்று மாதங்களாக இலங்கை ஸ்ரீராமகிருஷ்ண சங்கத்துச் சிவானந்த வித்தியாலயத்தின் சார்பாக (மட்டக்களப்புக் காத்தான்குடி போஸ்ட், கல்லடியுப்போடையில்) அமைந்துள்ள மாணவரில்லத்திலே இருபத்தைந்து அநாதைப்பிள்ளைகளுக்குச் சில யோகாசனங்களைப் பயிற்றினேம். பயிற்சி ஆரம்பிக்குமுன் சிறுவர்களின் நிறை, உயரம், மார்பின் சுற்றளவு முதலிய விவரங்கள் குறிப்பிடப்பட்டன. மூன்றுமாதம் முற்றிலும் நிறைவுறுமுன் அடைந்த தேர்ச்சி ஹடயோக முறையிலே எமக்குப் பூரண நம்பிக்கையை உண்டாக்கிவிட்டது. மாலை ஐந்து மணியளவில் முக்கால் மணி நேரம் (சனிக்கிழமை யொழிந்த நாட்களிலே) பயிற்சி நடந்து வருகிறது. சிறுவர்கள் காலையிலும் மாலையிலும் ஒவ்வொரு மணி நேரம் தோட்ட வேலையுஞ் செய்து வருகிறார்கள். தூயவுணவும், சுத்தக்காற்றும், நல்ல நீரும், யோகாசனமும் இச்சிறுவர்க்கு முகப்பொலிவையும் உடலுறுதியையும், உற்சாகத்தையும், கல்வியில் விருப்பையுந் தந்துவிட்டன. பன்னிரண்டாண்டிற்கு உட்பட்டோருக்குப் புஜங்காசனம், அர்த்த சலாபாசனம், தநுராசனம், பச்சிமாதனம், ஹலாசனம், யோக முத்திரை யென்னுமிவை பயிற்றப் படுகின்றன. பன்னீராண்டின் மிக்கோருக்கு இவற்றோடு கூடச் சிர்ஷாசனம், சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம், சலாபாசனம், அர்த்தமத்ஸ்யேந்திராசனம், மயூராசனம், சவாசனம் என்னும் ஆசனங்களும், உத்தியான பந்தம், யோக முத்திரை, நௌளிக்கிரியை என்பவும் பழக்கப்பட்டு வருகின்றன. யோகப்பயிற்சிக்குப் பூரண பிரமசரியமும், தூயவுணவும் இன்றியமையாத சாதனங்களாவன. பழப்புளியும் மிளகாயும் யோகப்பயிற்சி செய்வோருக்குப் பொருந்தா நீர்மைய. புளி

புகையிலை, நல்லெண்ணய், மிளகாய் என்னுமிவற்றை யறவே நீக்கிவிடுதல் நன்று. எலுமிச்சம் பழரசம், கறிமிளகு என்னுமிவற்றைப் புளி, மிளகாய்க்குப் பதிலாகக்கொள்ளலாம். மிளகாய் என்பது இந்நாட்டிற்கு இடைப்பட்ட காலத்திலே அந்நியராற் கொண்டுவரப்பட்ட பொருள். இது உடலிலுள்ள வலிமையைக் கெடுத்து உதிரத்தை நீராக்கும் நீர்மையது. கறிமிளகு சிறந்த குணங்களையுடையது. நோய்களைக்கண்டித்து உயிர்க்குறுதி பயக்கும் காய கற்பம் என அறிஞர் இதனைக் கூறுவர். உணவினைக் குறித்த ஆராய்ச்சியும் உடற்பயிற்சிக்குக் கருவியாக இளைஞர்களுக்குப் போதிக்கப்படல் வேண்டும்.

சமயக் கல்வியைக் குறித்து இதுவரையும் ஒன்றுங் கூறிற்றிலேப்; அது தனித்த கட்டுரையாக விரிவுற எழுதற்குறியதாதலின் பயிற்சிபெற்ற உள்ளமும், உடலும் உடையார் அவை தம்மைக் கருவியாகக்கொண்டு செம்மைநெறி நின்று எல்லா நலன்களையும் எய்தற்குரியாரென்னுங் குறிப்பினோடு இக்கட்டுரையை முடிக்கின்றாம். —(தனவணிகன் பொங்கல் மலர்)

---

# அரியன பத்து

1. அறவாழி அந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது (அ-குறள்)
2. விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது (கசு குறள்)
3. குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது (உ.கூ குறள்)
4. பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றா
ரற்றார்மற்று ஆதல் அரிது (உசஅ குறள்)
5. வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது (ருஎஎ குறள்)
6. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது (சகசு குறள்)
7. சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த
ருறைநிலத்தோ டொட்ட லரிது (சசுசு குறள்)
8. படியுடையார் பற்றமைந்தக் கண்ணும் மடியுடையார்
மாண்பய னெய்த லரிது (சுOசு குறள்)
9. சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
யிகல்வெல்லல் யார்க்கு மரிது (சுசஎ குறள்)
10. நெருப்பினுள் துஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது (கOசசு குறள்)

—இ. சிவகுருநாதன்.

# ஸெயின்ட் ஆல்பன்ஸ்

## உரோமர் ஆதிக்கம்.

இங்கிலாந்தில் ஹெர்ஃபோர்ட்ஷைரிலிருக்கும் பள்ளத் தாக்கிலிருப்பது ஸெயின்ட் ஆல்பன்ஸ் நகரம். அதன்புறத்தே யோடும் வேர் என்ற ஆற்றின்கரையில் பண்டைய உரோமநகர மாகிய வெருலேமியம் என்பதிருந்ததாகக் கருதப்படுகிறது. அவ் விடத்தில் உரோமர்களால் அமைக்கப்பட்ட ஒரு நாடக அரங்கு இப்பொழுது முதன்முதலாகத் தரையின் கீழிருந்து வெட்டி யெடுக்கப்பட்டுளது. வெரூலம் பிரபுவின் நன்முயற்சியினாலேயே இவ்வாறு அது வெட்டப்பட்டு உரோமரின் பெருமையை மக் கட்கு என்றென்றுந் தெரிக்கும் காட்சிப்பொருளாக அமைக்கப் படுகிறது.

1800 ஆண்டுகட்குமுன், உரோமர்களின் வெற்றிகுறித்த கூத்துகள் இவ்வரங்கிற்முன் நிகழ்த்தப்பட்டதாகத் தெரிகிறது. இலண்டன் பொருட்காட்சிசாலை அமைச்சர் டாக்டர் ஆர். ஈ. மார்ட்டிமர் வீலர்தான் இதனை வெட்டும்படி ஏற்பாடுசெய்தவர். இவ்வாறு ஒரு நாடக அரங்கு இருந்ததென்று 1847-ம் ஆண்டி லேயே கண்டுபிடிக்கப்பட்டிருந்தபோதிலும் இந்நாள்வரை அதை வெட்டி வெளிப்படுத்துதற்கான ஏற்பாடுகள் செய்யவில்லை.

டாக்டர் வீலரின் ஆராய்ச்சியினால் இந்நாடக அரங்கு முழு அமைப்பும் உடையதாய்ச் சிதைவில்லாமல் இருக்கிறதென்றும், பண்டைய கிரேக்க உரோம நாடகசாலை யமைப்புத் திட்டத் திற்கு ஒத்ததாயிருக்கிறதென்றும், அரைநிலா வடிவம் போன்று மக்கள் உட்காரும் இடம் அமைக்கப்பட்டிருக்கிறதென்றும், அரங்கம் உயர்த்தப்பட்ட நிலையில் இருக்கிறதென்றும் தெரி கின்றன.

இங்கிலாந்திலும் பண்டைய உரோம நாகரிகத்தின் அறி குறிகள் காணக்கிடக்கின்றன என்பதை வலியுறுத்தக்கூடிய பேரமைப்பாக இவ்வரங்கு விளங்கும்.

இன்னும், தோண்டியெடுக்கப்படும் இப்பகுதியின் ஒரு கோடியில் உரோமர் கோவிலொன்றும் இருக்கின்றது. திறந்த மும்முடக்கு வடிவமான ஒரு முற்றத்தில் கோவிலின் பீடம் அமைக்கப்பட்டிருக்கிறதென்றும், அதற்கு ஒரு மண்டபம்மேலே அமைக்கப்பட்டிருக்கிறதென்றும், பீடத்தின் பின்புறத்தில் பலி யிடப்பட்ட (எருதின்) தலையொன்று புதைக்கப்பட்டுள்ள தென் றும் தெரிகின்றன. பூசனைக்குரிய கலன்களும் விளக்குகளும் பல காணப்படுகின்றன.

இதனால் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் ஸெயின்ட் ஆல் பன்ஸ் நகரம் உரோம நாகரித்தின் அணிகலமாகத் திகழ்ந்த தென்று ஊகிக்கப்படுகிறது. (இந்து) —கா. சிவ. க.

# கவின்கலைப் பகுதி—Fine arts

மகேந்திரவர்மன் வடமொழியில்
இயற்றிய

## மத்த விலாசம்

களிக்கூத்து

[ திரு. தி. கு. கி. நாராயணசாமி நாயடு அவர்கள் ]

நடாத்துநர்: i சூத்திரதாரன். ii நடி.

நாடக பாத்திரங்கள்

| பெயர் | விபரம் | சுருக்கம் |
|---|---|---|
| சத்திய சோமன் | கபாலி | கபா |
| பப்ருகல்பன் | பாசுபதன் | பாசு |
| நாகசேனன் | புத்த சந்நியாசி | புத்த |
| தேவசோமா | கபாலிபரத்தை | தேவ |
| பித்தன் | பைத்தியக்காரன் | பித்த |

இடம்:—காஞ்சிபுரத்துப் பல விடங்களில்.

### முன்னுரை

சின்மயா காயம் திகழ்தரு கபாலி;
தன் திருக் கூத்தே சாற்று மூவுலகின்
தோற்றமும் காப்பும் துடைத்தலு மென்னச்
சாற்று முத்தொழிலின் தன்மையு மாகும்;
அண்டமெவ் வெவையும் அசைத்திடு சூத்திரம்
பண்டைய உரை, உடை, படிவமும், கூத்தும்,
குணம் எனும் இவைகளே கோதிலா விறைவன்
திருவுள எழுச்சியாற் றீவிரமாக
மருவிய வுயிர்களின் மனவுணர் வனைத்தும்
தாக்குவ துண்மை; தானே யனைத்தும்
நோக்கவும் உரியன்; நுனிப்பரு மவனே
அறிவுறு மறிவும் அவனியில் விரிந்த
நிறைதரு வியாபக நிலையையு மெய்தி
கீர்த்தியும் பெருகிக் கிளர் நிலையடைய
சீர்த்தியால் அவனருள் சேர்வதா குகவே.

கட்டி:—ஆ! இளையாளிடம் யாருக்கும் அன்பு அதிக மிருப்பது இயற்கையே. ஆனால், என் மூத்தாளுக்கு அது பிடிக்க வில்லை. அதுவும் இயற்கைதான். இருப்பினும் அவள் ஊடலைத் தணிக்க இப்பொழுது தக்க தருணம் வாய்த்துளது. அவளைப் போய்ப் பார்ப்போம்.

(அரங்கின் உள்ளே நோக்கி) பெண்ணே! இப்படி வா.

(நடி வருகிறாள்)

நடி:—(சினந்து) என்ன இன்று இளமை திரும்பி குண பாரத்தால் மத்த விலாசனாய் என்னைக் களிக்கூத்தாட அழைக்கி றீரா ?

கட்டி:—ஆமாம். பெண்ணே! அப்படித் தான்.

நடி:—அப்படியானால் அவளுடன் ஆடலாமே, உம்முடைய ஆசை நாயகியுடன்.

கட்டி:—நான் உன்னுடன் ஆடவேண்டு மென்றுதான் எனக்குக் கட்டளை.

நடி:—உம், இளையாளின் கட்டளையா ?

கட்டி:—அப்படித்தான் வைத்துக்கொள்வோமே. நீ நடிப் பதால் அவையினரின் நன்மதிப்புப் பெறுவாய்.

நடி:—அது உன்னுடைய நோக்கம்.

கட்டி:—உண்மைதான், பெண்ணே! நீ அடையும் நன் மதிப்பு என்னைச் சார்ந்ததே.

நடி:—(உவகை பூத்து) அப்படியானால் இங்குக் குழுமி யிருக்கும் விழுமியோரின் அருள் எனக்குக் கிட்டி விட்டதா ?

கட்டி:—அதிலென்ன ஐயம். நீ அவர்தம் அருள் அனைத் தும் பெற்றாய்.

நடி:—இந்த நற்செய்தியைச் சேர்த்தமைக்கு என்ன கைம் மாறு செய்யவல்லேன் ?

கட்டி:—எனக்குக் கைம்மாறும் வேண்டுமோ? என் அன்பே! உன்

பங்கய மலர்முகத்தின் பளிங்கொளி நகையைக்கண்டும்,
துங்கிய புருவவில்லும் சுழித்தெழக்கண்ட பின்னும்,
மங்கையே! எந்தனுக்கு மற்றுள பரிசெதற்கு ?
தங்கையில் வெண்ணெய்வைத்து நெய்க்கழுவார்கள் போல.

நடி:—ஐயனே ! இப்பொழுது எதை நடிக்கப்போகிறீர் ?

கட்டி:—என் ! நீதான் சற்று முன்பு சாற்றினையே; மத்த விலாச நகைச்சுவை நாடகத்தைத்தான்.

நடி:—நான் கோபத்தில் சொன்னது உண்மையாய் விட் டது ! நல்லது இருக்கட்டும். நாடகத்தை இயற்றிய நாவலன் யாரோ ?

கட்டி:—சொல்வேன் கேளாய். பாவாய்! அவன் ஒரு விழுமிய மன்னர் மன்னன். அரும்பெரும்பகைவரை அடர்த்தவன். தன் குடிகளைப் பாராட்டுவதில் பஞ்ச பூதத்தை ஒத்தவன். சிம்மவிஷ்ணு வர்மன் பெற்றெடுத்த காளை; மகேந்திர விக்கிர வர்மன் என்னும் பெயரான். பல்லவகுல நடுநாயகம். ஆட்சி முறையில் ஆற்றல் சால் வேந்தன். இந்திரர்க்கு நிகரான ஆக்கமும் ஆற்றலுமுடையோன்; கொடைவன்மையில் குபேரனே எனின் மிகையாகாது.

நடி:—பின் ஏன் ஐயா தாமதம்? இது ஒரு புதிய நாடகமாயிருத்தலின் விரைவில் நடத்துதல் நலமாகும்.

கட்டி:—ஆம்; இசையே என் ஆக்கம் (உள்ளே இருந்து) "தேவ சோமா! என் கண்ணே!" அதோ கையில் கபாலத்தோடு தன் பரத்தையின் கைபற்றி நடந்து வரும் துறவியின் உள்ளம் கள்ளால் களிப்பதுபோல் என் உள்ளம் நாடகக் கவியின் குணாதிசயங்களைக் கூறக்கூறக் குளிர்ந்தது. [போதல்]

## முதற் களம்

பொய்ம்மையார் கலியிற் புகலிட மின்றிச்
செம்மையார் அறிவும், சிந்தையில் ஈகை
இரக்கம், தகைமை, எழில், உயர் கலைத்திறன்
பெருக்குமுட் டுய்மை, பிழைபடா வாய்மை
துணையிலா வலிமை தோமறு வணக்கம்
இணையிலா இவனே இருப்பிட மாகக்
கொண்டன வன்றிபு மண்டல மனைத்தும்
ஐம்பூதங்களால் ஆகிய தன்மைபோல் 8
இம்பர் நற்குணங்கள் இவனுரு வாயதால்
ஆழ்சுரங் கத்தில் அவிர்தரும் பல்வகை
வீழ்மணிக் குலங்கள் மிளிர்வது போல 11
நவநவ மான உவமைதீர் வழக்கில்
கவிச்சுவைப் புலவர் காதலித் தேற்கும்
பெருவிருந் தாகப் பெட்புறு மொழிகள்
நகைச்சுவை ததும்ப நவில்திறமுடையோன்.

கபா:—[தன் பரத்தையான தேவசோமாவுடன் வருகிறான்; குடிவெறியில்] தேவ சோமா!—என் அன்பே! உண்மைதான்— செய்த தவப்பயனால் நான் வேண்டியாங்கு வேண்டிய வேடம் ஏற்கலாமென்ற உண்மை உன்னிடத்தில் கண்டேன். நீ பாமவிரதம் அனுட்டித்தவளாகையால் கன்னிமைப் பொழுதில் உன் உருமாறி ஒப்பற்ற அழகி ஆனாய்.

தேவ:—என் ஐயா! நீ சொல்ரது பாத்தா நான் குடித்திருக்கிருப்பில இருக்கே.

கபா:—என்ன சொல்லுகின்றாய்? என் கண்ணாட்டி!

தேவ:—என்ன சொல்ரன். நான் ஒண்ணு சொல்லலியே.

காப:—அப்படியானுல் நான் குடித்திருக்கிறேனே?

தேவ:—ஐயா! தரை கிரு-கிரு-கிரு கிருண்ணு சுத்துது. ஐயோ! நான் கீழே பொத்துணு விழப்போரேன். என்னைப்பிடிச்சுகோயெ.

கபா:—இதோ என் கண்ணே! (அவளைப் பிடிக்கப்போய்த் தானும் தடுமாறிக் கீழே விழுகிருன்) என்ன சோமதேவி! என் மேல் உனக்குக் கோபமா? நான் உன்னைப் பிடிக்கவரும்பொழுது நீ சரேலென்று ஒதுங்கிவிட்டாயே.

தேவ:—ஆம்-ஆம் சோமதேவிக்கு ஒன்மேலே சலிப்புத் தான். நீ அவள் காலில் போய் விழுந்து என்னை மன்னி இண்ணு சொன்னுலும், அவ உன்கிட்ட வரமாட்டேங்கிரு.

கபா—நீ சோமதேவி அல்லவா? (நிதானித்து) இல்லை இல்லை. தேவசோமமோ.

தேவ:—சோமதேவி - உன்னுட செல்வக் கொழுந்தெ. அதனுலே உனக்கு என் பேர் சரியாகூட சொல்லமுடியலே.

கபா:—என் குடிவெறியில் ஏதேதோ உளறிக்கொட்டி உன் மனதைப் புண்படுத்தினேன். இக்குடி என்னைக் கெடுத்து பாதாளத்தில் தள்ளிவிட்டது. சரி, சரி. இன்று தொட்டு இனிமேல் இக்கொடிய குடியைக் கையால் தொடுவதே யில்லை. இது உறுதி.

தேவ:—ஓ! ஐயா! ஐயா! இது என்ன இது. உங்க சந்நியாசத்தை இந்தசபதத்தால் கெடுக்காதிங்க. எனக்காகவாவது நீங்க அதை விடக்கூடாது. (தேவசோமா கபாலி காலில் விழுகிருள்.)

காப:—(உவகையோடு அவளைத் தூக்கி அணைத்து) த்றிர்ண! த்றிர்ண! த்றிர்ண! என் பிரியே! சிவனைப் பணிவோம்.

தேவ:—ஓ! ஐயா! இதென்ன பேச்சு! இத்தானு மோச்சத்துக்கு வழி? ஆருகதர் வேறு தினுசா சொல்ராங்களே.

கபா:—ஆமாம் பெண்ணே! ஆனுல் அவர்கள் நாஸ்திகர்.

தேவ:—பாபம் சாந்தியாகட்டும்.

கபா:—பாபசாந்தி! உண்மையாய் அப்பாவிகளின் பெயரை நிந்தனையினும் நாவால் நவிலலாகாது. பெரும் பாதகர்கள். பிரமசரிய நோன்பு நோற்று உடலை வருத்துபவர்கள். தலை மயிரை அழிப்போர். மாசு பிறக்கியமேனியர்கள். துவராடை மூடிய மெய்யினர்கள். இந்நாத்திகர் பேச்சுப்பேசி என் நாவும் நாற்றமெடுத்தது. நான் அதைக் கழுவிப் பரிசுத்தமாக்கவேண்டும்.

தேவ:—அப்படியானுல் வா இன்னெரு கடைக்குப் போவோம்.

தேவ:—அப்படியே போவோம். பெண்ணே! (போதல்)

முதற்களம் முற்றும்

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## புராணங்கள் உண்மை வரலாறுகளா?

கல்கத்தா பல்கலைக் கழக உளநூலாசிரியர்

[டாக்டர் ஜி. போஸ்].

புராணங்களெல்லாம் கட்டுக்கதைகள், வெறுங் கதைகள் என்ற கருத்து மேனாட்டறிஞர் பலர்மாட்டு இருந்து வருகிறது. புராணங்களில் ஒன்றிரண்டு உண்மை வரன்முறைக்குறிப்புகள் இருக்கக் கூடுமாயினும் அவையெல்லாம் உருத்தெரியாதபடி திரிபுபடுத்தப்பட்டுள்ளன வாதலால் அவற்றை நம்பி ஒரு நாட்டு வரன்முறையையோ மக்கள் வரன்முறையையோ கால வரையறையையோ கணித்தல் கூடாதென்று கொள்ளப்படுகிறது. ஆராயுங்கால் இக்கருத்துகள் பிழைபட்டன என்று புலனாகின்றது. புராணங்களில் மிகைபடக் கூறப்பட்டதாகக் கருதப்படுபவைகளும், பொருளற்றவைகளாகத் தோற்றுபவைகளும் புராண இலக்கண முறைப்படி ஓர்ந்து சிந்தித்து வேண்டுமென்றே எழுதப்பட்டுள்ளன என்பதும், குறித்த ஒருபயன் கருதியே அவ்வாறு அவைகள் எழுதப்பட்டுள்ளன என்பதும் அறிதற்பாலன எனவே, அவ்விலக்கண முறைப்படி பொருள் காணுங்கால் புராணங்கள் உண்மை வரலாறுகளே என்பது புலனாம்.

புராணங்கள், நுதலும் பொருள் இன்னதென வரையறுத்துக் கொண்டு அப்பொருளை விரித்துக்கூறுங்கால் ஐந்து கூறுபடுத்திக் கூறுவதென்ற இலக்கணமமைந்தன. அந்த ஐந்து கூறுபாடுகளையும் ஆராய்ந்து பார்த்தால், புராணங்கள் உண்மை வரலாற்று நூல்களாக அமைந்திருத்தல் வேண்டுமென்ற கருத்துடனேயே எழுதப்பட்டன என்பது தெளிவாகும். மங்வந்தரங்கள் என்று புராணங்களில் கணக்கிடப்படுவன காலவரையறையைக் குறிப்பனவேயாகும். மன்னர்கள், தலைவர்கள், வீரர்கள் முதலியோர் காலவரையறையைப் புராணங்கள் கணக்கிட்டுக் கூறுவதை ஒவ்வொரு புராணத்திலுமுள்ள மங்வந்தர அத்தியாயத்திற் காணலாம். இதுவே பண்டையோர் இந்திய வரலாறுகளைக் குறித்து வைத்த முறையாகும். பன்னூறாயிரம் ஆண்டுகள் கொண்ட ஒரு காலவரையறையை "யுகம்" என்று பெயர் கொடுத்துக் கூறிவந்தனர். இக்காலவட்டக் கணக்கு உலகத் தோற்ற காலமுதல் முடிவு காலம்வரை கணக்கிடுவான் வகுத்துக்கொண்டதாகும். தற்கால அறிவியல் வல்லுநர்கள் வகுத்துக்

கூறும் கற்காலங்களுடன் இவ் "யுகங்களை" ஒப்பிடலாம். உலகியல் நிகழ்ச்சிகளைக் கணக்கிட்டுக்கூறும் எளிமை கருதி ஐயாயிரம் ஆண்டுகள் கொண்டதை ஒரு வட்டமாகக் கூறிவந்தனர். இவ் வட்டத்தைப் பதினான்கு உள்வட்டங்களாக ஒருவகையும், முப்பது உள்வட்டங்களாக ஒருவகையும் ஆக இருவகையாகப் பிரித்துக் கணக்கிட்டனர். 357 ஆண்டுகள் கொண்டது பதினான்கின் படி கணக்கிட்ட ஒரு உள்வட்டம். இரண்டாயிரம் திங்கள்கள் (மாதம்) கொண்டது முப்பதின்படி வகுத்த ஒரு உள்வட்டம். இவ்வட்டங்கள், உள்வட்டங்களின் கணக்குப்படியே "யுகங்கள்" வகுத்துக் கூறப்பட்டுவந்தன. மாந்தாதா என்பவர் 15 வது யுகத்திலும், இராமர் 24-வது யுகத்திலும் இருந்ததாகக் கூறுவர். அன்றியும் 5000 ஆண்டு வட்டம் என்ற "யுகம்" நான்கு கிளை யுகங்களாகப் பிரிக்கப்பட்டு வந்ததென்றுங் கூறுவர்:—கிரேதா யுகம் 2000 ஆண்டுகள் கொண்டது; திரேதாயுகம் 1500 ஆண்டுகள்; துவாபரயுகம் 1000 ஆண்டுகள்; கலி 500 ஆண்டுகள். இவ்வாறு 4 கிளையுகங்கள் கொண்ட பேருகம் ஆகிய 5000 ஆண்டு வட்டம் முடிவுபெற்றதும், மீண்டும் மற்றொருவட்டம் அம்முறைப் படியே கணக்கிடப்படும். துவாபர யுகமுடிவில் 28-வது யுகத்தில் கிருஷ்ணன் இருந்ததாகவும், குருக்ஷேத்திர யுத்தம் கலியுகந் தொடங்கி500 திங்கள் கழிந்து நடைபெற்றதென்றும் புராணங்கள் கூறுகின்றன.

குருக்ஷேத்திரப் போருக்குப் பிறகு கணக்கிடுவதில், அப்போர் நிகழ்ச்சியை எல்லையாகக் கொண்டு நூறு, நூறு யாண்டுகள் கொண்ட நட்சத்திரயுகங்களாகக் கணக்குவைத்து எழுதிவந்தனர். அரசர் முதலியோரின் ஆட்சி காலங்கள் அதனால் ஆண்டுகளாகவே குறிக்கப் பட்டு வந்தன. சப்தரிஷி மண்டிலத்தினுள்ள எழு இருடிகள் பூர்வஷாத்தில் இருந்த காலத்தில் மகாபத்ம நந்தன் அரசுபுரிந்ததாகப் புராணங்கள் கூறும். புராணங்களில் மகாபத்மநந்தன் அரசெய்திய நிகழ்ச்சி காலவரையறைக்கு மிகவும் சிறந்ததாகக் கொள்ளப்படும். பின்னால் வந்த வரன்முறை நூலாசிரியர்கள் 27 நட்சத்திர யுகங்கள் கொண்ட ஒரு முழு யுகமாகிய 2700 ஆண்டுகளை அந்நிகழ்ச்சிக் காலத்துடன் சேர்த்து அதுவே புதுக் கலியுகத் தொடக்கம் என்று கணக்கிட்டனர். இதுவே தற்போதைய கலியுகம். கி. பி. 1934-ம் ஆண்டில் அது இக்கணக்குப்படி 5035 ஆண்டுகள் முடிந்ததாக இருக்கிறது. இந்தியப் பஞ்சாங்கங்கள் இக்கணக்கை ஒழுங்காக வைத்து வருகின்றன. இக்கணக்குப்படி மகாபத்மநந்தன் அரசுக் கட்டில் எய்தியது கி. மு. 401. இந்த ஐயாயிரவாண்டு யுகம் கி. மு. 5958-ல் தொடங்கிற்று. அது முதல் இந்திய வரலாறு மிகவும் சரியாகவே குறிக்கப்பட்டு வந்திருக்கிறது.

| | | |
|---|---|---|
| மாந்தாதா | இருந்தது | கி. மு. 3459 |
| இராமர் | இருந்தது | கி. மு. 2124 |
| கிருஷ்ணன் | இருந்தது | கி. மு. 1458 |
| குருக்ஷேத்திரப்போர் | | கி. மு. 1416 |
| அஜாதசத்துரு ஆண்டது | | கி. மு. 527 |
| மகாபத்மநந்தன் | ,, | கி. மு. 401 |
| சந்திரகுப்தன் | ,, | கி. மு. 320 |

பிறவுமிவ்வாறே.

இந்தத் தேதிகள் புராணங்களைக் கொண்டே இந்திய பஞ்சாங்கக் கணக்குப்படி குறிக்கப் பட்டனவாகும். சந்திரகுப்தன் காலத்தையும் மற்ற மன்னர்கள் சிலர் காலத்தையும் வேறு ஆதாரங்களைக்கொண்டு கணக்கிட்டுள்ளார்கள். அம்முடிபுக்கும் இதற்கும் உள்ள ஒற்றுமை வியக்கத்தக்கதாகும். எனவே, புராணங்கள் குப்பைகளுமல்ல கூளங்களுமல்ல; பண்டைய இந்திய வரலாற்றைக் குறித்துவைத்துள்ள உண்மை வரலாற்று நூல்களே.

(இந்து)　　　　　　　　　　　　　　　　　— கா. சிவ. க.

---

## தமிழர் நாகரிகம்

[திரு. S. சோமசுந்தர பாரதியார்]

தமிழர்கள் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே சிறந்த நாகரிகமுற்றிருந்தனர். தொல்காப்பியர் தமக்கு முன்புள்ள இலக்கியங்களைப் பார்த்தும், தாம் கண்ட உலகியலைப் பற்றியும் நூல் உரைப்பதாகச் சொல்லியுள்ளார். ஆதலின் அவர் காலத்திற்கு முன்பே இலக்கியம் ஏற்பட்டிருந்ததால் தமிழ்மக்கள் சிறந்த முன்னேற்ற நிலை எய்தியிருந்தனர் என்பது பெறப்படுகின்றது. தமிழர் பிற நாட்டினின்றும் குடியேறின ரல்லர். அங்ஙனம் சிலர் கூறுவது சாலாது.

### தமிழர் குறிக்கோள்

ஒவ்வொரு மக்களும் ஒவ்வொரு குறிக்கோள் கொண்டு வாழ்தல் இயற்கை. தமிழர் கொண்ட குறிக்கோள் யாது? மக்களால் நன்கு மதிக்கப்படும் பொருளையெல்லாம் குறிக்கோளாகக் கொண்டனர். அப்பொருளாவது, அகப்பொருள், புறப்பொருளென்பனவாகும். அகப்பொருள் மனத்திலழியா இன்பம் நல்குவது. வெளியுலக இன்பம் நல்குவது புறப்பொருள்; இப்பொருள்களைப் பற்றியே அக்கால இலக்கியங்கள் எழுந்தன. அகத்தைக் காதல் முறை என்றும், புறத்தைப் போர் முறை என்றும் சொண்டனர்.

ஒன்றை மற்றொன்றோடு ஒப்பிட்டால்தான் அதன் சிறப்பு விளங்கும். ஆரியரொடு தமிழ் நாகரிகத்தைச் சீர்தூக்கிப் பார்ப்போம்.

## காதல் முறை

ஆரியர் வட நாட்டின் ஒரு பாங்கரில் ஒழுக்கத்தோடும் பிறவற்றோடும் ஒவ்வாத பெருந்திரளான மக்களிடையில் வாழ்ந்து வந்தனர். அவர்களால் இவர்களுக்குப் பல இடையூறுகள் ஏற்பட்டன. அவ்விடையூறுகளை நீக்குவதற்கு அல்லும் பகலும் உழைத்து வந்தனர். அவர்களுடன் போர் புரிவதற்காக ஆண்பிள்ளைகள் வேண்டியிருந்ததானும், குடும்ப முன்னேற்றத்திற்காகவும் தமிழர் காதல் முறை போலாது இளமையிலேயே மணம் புரிந்து வாழ்ந்து வந்தார்கள்.

தமிழர்கள் வடவேங்கடம், தென்குமரி வரையில் பிறருடன் தொடர்பிலாது தனித்து வாழ்தலின் போர் முதலிய செய்தற்கு இடமில்லாமல் இனிது வாழ்ந்தனர். மக்கள் முன்னேற்றத்திற்குப் பசியும் காதலும் முக்கியமானது. தமிழர் போர் இன்மையின் இனிய பொருளை விளைவித்து உண்டு வந்தனர். தமிழர் களவு முறையாகவும், கற்புமுறையாகவும் மணம் நிகழ்த்தி வந்தனர். அவர்களது களவு முறை பிழையென எண்ணுவார் சிலருளர். அவர்களது களவுமுறையின் சிறப்பினை உணராதார் கூற்றே அஃதாகும். "அன்பும் மடனும்" என்ற சூத்திரத்தின் அரும்பொருளைத் துருவி ஆராயின் அதன் சிறப்பு தெற்றென விளங்கும். அன்பு முதலிய நான்கும் கைவரப் பெற்ற பின்னரே கற்பு மணம் நிகழும். அம்மணம் தமிழர்களது சிறந்த நாகரிகத்தைப் புலப்படுத்துவதாகும்.

## போர் முறை

ஆரியர் இடையுறாது எழுந்த தம் பகைவரை வெல்லுவதற்கு ஒரு குழுவினை ஏற்படுத்தினர். அக்குழுவிற்கு க்ஷத்திரியர் எனப் பெயரிட்டனர். அவர்களை உலகப் பற்றின்றிப் போரையே குறிக்கோளாகக் கொண்டு வாழவைத்தனர். ஆரியர்கள் அவர்கட்குப் போர் முதலியனவற்றைப் புகட்டும் ஆசிரியர்களாக அமைந்திருந்தனர். இவைகளை வலியுறுத்தியே சாத்திரங்கள் எழுதப்பட்டன.

தமிழர்கள் போரின்மையால் வீரமின்றி யிருந்தனரல்லர். தாமாக வலிந்து ஒருவரிடம் போர்க்குச் செல்லாது, பிறர் தந்நிலத்திற்கு வந்து போர்க்கு அழைத்தால் அவருடன் எதிர்த்துநின்று போர் செய்து வெல்லும் ஆற்றலுடையராக விருந்தனர். இஃது தொல்காப்பியத்தால் நன்கு விளங்கும். சங்க காலத்திற்கு முன்னரெழுந்த திருக்குறள் முதலியவற்றாலும் இஃது விளங்கும். இவைகளால் தமிழரது போர் முறையின் சிறப்பு நனி விளங்குகின்றது.

## தொல்காப்பியத்தில் சாதிவேற்றுமைக்கு ஆதரவில்லை

தொல்காப்பியர் தமது நூலில் யாண்டும் சாதியைப் பற்றிக் கூறினாரில்லை. திணைகளை வகுத்து அத்திணைக்குரிய மக்களது ஒழுக்கத்தினை உணர்த்தி எம்மக்களுக்கும் உயர்வு தாழ்வு கற்பியாது சென்றனர். தொல்காப்பியத்தின் ஒரு பகுதியாகிய மரபியலில் 69 முதல் 84 வரையுள்ள சூத்திரங்களில் சாதிப்பிரிவு காணப்படுகிறது. அப்பதினைந்து சூத்திரமும் இடையில் செருகப்பட்டதாகத் தெரிகிறது. என்னை? முன்னருள்ள சூத்திரங்களெல்லாம் மர முதலிய

வற்றிற்கெல்லாம் பெயரிடுவதையும் பின்னருள்ளவை யெல்லாம் விலங்கு முதலியவற்றிற்குப் பெயரிடுதலையும் பற்றிக் கூறியதற்கு இயைபில்லாமல் நடுவில் கூறியிருப்பதும், உரையாசிரியர்கள் முன்னுக்குப் பின்னதாக முரணும்படி உரைகூறியிருப்பதும் தெற்றெனப் புலப்படுத்துகிறது.

## ஆரியமும் தமிழர்க்குரியதே

தமிழர்களில் சிலர் ஆரியம் ஆரியர்க்கே உரியதென்றே எண்ணி அதனைப் புறக்கணிக்கின்றனர். ஆரியம் பொதுமொழி. ஆதிகாவியமியற்றிய வான்மீகர் ஆரியரா? இல்லை. வடமொழியில் ஆரியர் அல்லாதார் பல நூல்களை யியற்றி யிருக்கின்றனர். ஆதலின் அஃது அவர்கட்கே எங்ஙனம் உரிமையாகும்? பொதுவாக உலகத்தாருக்கு வேண்டிய பொருளை யெல்லாம் வடமொழியில் யாத்தனர். ஆதலின் தமிழர்கள் ஆரியமொழியை வெறுக்காது அதனைக் கற்பரேல் சில ஆரியர்கள் செய்துவரும் சூழ்ச்சியினை வென்று விடலாம்.

ஆரியர்கள் இரண்டாயிரம் ஆண்டுகளாக ஈண்டு வாழ்ந்து வருவதால் அவர்கள் பிறநாட்டார் என்று கூற இயலாது. அவர்கட்கும் இந்நாடு தாய்நாடே. இம்மொழி தாய்மொழியே. எளியவர்கள் பேசுகின்ற மொழியென எண்ணிப் புறக்கணித்தல் பெருந்தவறு ஆகும். அங்ஙனம் வெறுப்பது தாமே தமக்குக்கேடு சூழ்ந்து கொள்ளும் நெறியாகும். ஆதலின் ஆரியர்களும் தமிழை வெறுக்காது தமிழ் முன்னேற்றங் கருதி உழைப்பாராக.

அக்கால நாகரிகங்களைக் கண்டு இழிவு செய்தல் தகாது. ஏனெனின்; அதுவும் அவ்வக்கால நாகரிகமே'' (த. நா.)

---

## திருநெல்வேலிக் கணபதி விலாசக் கோட்டகையில் 30-3-34-ல் நடந்த கம்பர் திருநாள் வாழ்த்துப்பா

சீர்சா லியற்கைச் செம்மை மிக்கதும்
பழைமை தனில்வீழு மியமுதன் நிலையதும் 2
வழக்கி னும்மதிக் கவினினும் உழக்கும்
மறைநான் கினுமுயர்ந் ததுமாம் நற்றமிழ் 4
மழைபொழிந் துயிர்ப்பயி ரென்றுங் காக்கும்
நம்பற் கன்புசெய் கம்பன் றிருநாள் 6
ஆங்கில வாட்சியிற் சென்னை மாகாண
சமய வறப்பொருட் டலைவரி லொருவராம் 8
கல்வியுஞ் செல்வமு மல்கிச் சிறந்த
சிதம்பர நாத முதலியா ரவர்கள் 10
தலைமையிற் றிருநெல் வேலிநன் னகரிற்
றிருநா ணடாத்தும் கழகம் வாழ்க 12
கழகத் தலைவர் அமைச்சர் வாழ்க
இதற்குப் பொருட்டுணை புரிந்தோர் வாழ்க 14
வந்து கேட்டு மகிழ்ந்தோர் வாழ்க
இத்திரு நாளினும் வாழ்க வாழ்கவே.

—வி. சிவஞானயோகி.

## புதுக்கவிகள்-Original Poetry

ஓம்

சென்னை ஆழ்வார்பேட்டை "ஈஸ்வர பாக்கில்", காலஞ்சென்ற
சிவபுரம் நிலக்கிழவரும், அரசாங்கக் கண்காணிப்
பொறிவலாளருமாகிய
திரு. பா. வே. மாணிக்க நாயக்கரின் மகளார்

**திருநிறை, குணமாணிக்கத் தம்மையார், M. A., L. T.,**

ஐதராபாக்கம்

**திரு. இராமு ஜெனார்த்தன முதலியார், B.A., B. Com.,**

அவர்களை 27-5-34-ல் கடிமணம் புரிந்த ஞான்று
பாடிக்கொடுத்த

### வாழ்த்துப் பா.



மங்கலம் மங்கலம் மன்றல்சால் மங்கலம்!
பொங்கலர் வேணிப் புனிதனா ரருளான்
மங்கலம் மங்கலம் எங்கணு மங்கலம்!!
கன்னலுங் கமுகுங் கவினுறு கதலியும்
தென்னையின் குலையுந் தேமாந் தளிரும்
முந்துற நான்று மொய்ம்புற மிளிரும்
பந்தரி னாப்பண் பாங்குற வமைத்த
மின்னவிர் சொன்ன மீக்குயர் மேடையிற்,
றுன்னருங் கேளிருந் துகடீர் நண்பரும்
மாயிருஞ் சுற்றமும் மகளிருஞ் சூழ்தர,
ஆயிர நிறைத்தொள் ளாயிரத் திருபதும்
பத்துட னான்கும் பல்கிய வாண்டு
சித்திரை கடந்து சேர்வை காசி
நிறைமதி நாளின் நேர்முன் னாளில்,

அறம்பயிற் செல்வர் ஐதரா பாக்கம்
வருமிரா மன்றன் வாய்ப்புறு மகனர்
பெருமைசால் பீ.ஏ., பீக்காம் தேர்ந்த
ஜனர்த்தன மகிபன் ஐயமுட னேர்ந்து
பணமுடி மணியினும் பண்பு மிகுத்த

குணமா ணிக்கக் கோதறு மணியை
திணமாக் கைக்கொடு திகழுற நின்றுன்;
உறவினர் வாழ்த்தினர்; ஊரவர் ஏத்தினர்;
சிறப்புடன் சீருஞ் செய்தனர் பல்லோர்,
அந்தரத் துந்துபி யார்த்தது விசும்பில்;

சுந்தர நங்கையர் சொரிந்தனர் பூமழை;
சிவபுரக் கிழமைச் சிறப்பினை யிகழ்ந்து
சிவபுர மெய்திய சீர்சா லண்ணல்
மாணிக்க நாயக மாமதி வாணரும்
பேணி மகிழ்ந்து பெருமித மெய்தினர்;

திருமண முடித்துத் திகழ்ந்திடு மிருவரும்
பெருநில மிதனிற் பெரும்புக ழீட்டி,
ஆலெனத் தழைத்து அறுகெனக் கிளைத்து
வாழிய வாழிய வாழிய
ஆழிநுண் மணலினும் வாழிய பலவே.

—திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகத்தார்.

---

இவ்வாழ்த்துப்பா கழகத்தாரின் சார்பாக, தருமபுர ஆதீன வித்துவான் காழி. சிவ. கண்ணுசாமி B.A., அவர்களாற் பாடப்பட்டதாகும்.




## பேருண்டி யருந்தல்

### இரவிலா, பகலிலா?

பகலை யொழித்து இரவிற் பேருண்டி யருந்தல் பெரு வழக்காகி வருகிறது. அடிக்கடி இத்தகைய பேருண்டிகளைப் பலவிடங்களில் அருந்த அழைக்கப்பட்டு அருந்திவருவதனாலேயே சிலருக்கு "இராப்பசி" என்ற போலிப்பசி உண்டாகிறதாகக் கருதுகிறார்கள். அவ்வாறு அருந்துவதனால் உடல் நலங் கேடுறுகிறதென்று அவர்கள் ஊகித்து உணர்ந்து கொள்வதற்குள் அது சுருட்டுப் பிடிப்பதைபொத்த விடாப்பழக்கமாகி விடுகிறது.

தூக்கமின்மை, அமைதியின்மை, தீய கனவுகள் காணல், முதலியவையெல்லாம் இரவிற் பேருண்டி யருந்துவதின் பயனேயென்று நம்பப்படுகிறது. சில குறிப்பிட்ட உணவுகளை இராக்காலத்தில் உண்பதால் இத்தகைய நலக்கேடுகள் நேர்வது உண்மையே; ஆயினும் படுக்கைக்குச் செல்லுமுன் எதை உண்டபோதிலும், அதனால் வேறெத்துன்பம் நேராவிடினும், தீபகனவுகள் காண்பது மட்டும் இயல்பு.

உணவுப் பொருள்களிலுள்ள மாச்சத்துக்களும் சருக்கரைச் சத்துக்களும் ஈரற்குலையை யடைந்து அங்கே "குலைச் சருக்கரை" (Glycogen) யாக மாறுகின்றன. இம்மாறுதல் உணவு உட்கொண்டது முதலே தொடங்குகிறது. தொடக்க முற்று ஐந்து மணி நேரங்கள் ஆனபிறகு, ஈரற்குலையிலுண்டாகும் இச்சருக்கரை வெளிப்பட்டுச் செந்நீருடன் கலப்புறுகிறது. இக் "குலைச் சருக்கரை" மூளையை ஊக்கும் திறம் வாய்ந்தது. (எனவே, படுக்கைக்குப் போகும் நேரத்திற்கு முன், அதாவது பத்து மணிக்கு முன் ஒருவர் பேருண்டியருந்தினால் இரவு இரண்டு அல்லது மூன்று மணிக்கு உறக்கங் கலைந்து அலைவுறநேரும்.)

மாலை ஆறுமணிக்கே பேருண்டி யருந்துவதாயிருந்தாலும் அதுவும் நல்ல உறக்கத்தைக் கெடுக்கக் கூடியதேயாகும்—செரிப்பின்மையோ இன்றேல் மூளைத்துடிப்போ காணுதல் கூடும். எனவே, நடுப்பகலே பேருண்டி யருந்துதற்கேற்ற நேரமாகும். அவ்வாறு அருந்தினால் "குலைச்சருக்கரை" தோற்றமுற்றுச்

செந்நீரிற் கலப்புறுவதாகிய நிகழ்ச்சி, ஒருவர் அலுவலிலீடுபட்டிருக்கும் நேரமாகிய மாலைப்பொழுதிற் குள்ளேயே நிகழும். இவ்வாறு நிகழ்ந்து மூளையின் ஆற்றல் வலுப்பெறுவதால் அலுவலில் ஒருவர் பெருந்திறந்தெரிக்கும் பயனைப் பெறுதலுங்கூடும். மேனாட்டார்களும், அவர்களைப் பின்பற்றும் நந்நாட்டார்களும் இரவிற் பேருண்டி யருந்தும் வழக்கத்தை யொழித்துப் (பண்டைய தமிழர் ஒழுக்கம்போல்) பகலில் உட்கொள்ளப் பழகினால் உடல்நலமும், போராற்றலும், வனப்பமைந்த தோற்றமும் பெறுதல் எளிதாகும்.

அழுதி வடியும் உடற்றோற்றமும், நாற்றம் வீசும் மூச்சுவிடுதலும், மட்டற்ற நீர்வேட்கையும், மலச்சிக்கலும், ஏனைய பல இடர்ப்பாடுகளும் இரவிற் பேருண்டி யருந்துவதனாலேயே யுண்டாகின்றன. (நந்நாட்டாரிற் பலர் பாலும் பழமுமே இரவில் உண்ணுவதென்ற பழக்கத்தைக் கைக்கொண்டிருப்பது ஓர்ந்து சிந்தித்தற்பாற்று.) * * * பால் ஏற்ற உணவேயாயினும் அதையும் படுக்கைக்குச் செல்லுங்கால் அருந்திப்படுக்கும் பழக்கத்தையும் ஒழித்தல் வேண்டும். நோய் முதலிய ஏதுக்களினால் இன்றியமையாது அந்நேரத்தில் அருந்த நேர்ந்தாலொழிய மற்றைக் காலங்களில் படுக்கை நேரத்தில் அருந்தலாகாது. நீர்ப்பொருள்களை அருந்தல் உணவு உண்பதைவிடக் கெடுதிபயப்பதாகும். காப்பிநீர் அருந்தல், எக்காலத்திலுங் கெட்டது. அதைமாலைப் போதில் அருந்தும் ஒருவர் மன உறுதி குறைந்தவராயின் இரவில் அவர் தூக்கமின்றி அல்லற்படுதல் பெரும்பான்மை உறுதியாகும்.

(ஹெல்த் அண்டு எஃபிஷியன்ஸி.) — கா. சிவ. க.

---

## கடைச்சரக்குகளைப் பயன்படுத்தும் முறை

['காசிகன்' எழுதுவது]

### சதகுப்பை (Dill Seed)

குழந்தைகளுக்கு உண்டாகும் வயிற்றுவலி, வாயு, குன்மம் முதலிய நோய்களுக்கு மூன்று திரும் சதகுப்பையின் விதையை அரைத்து அரைப் புட்டி கொதிக்கிற நீரிற்போட்டு வைத்து இரண்டு மூன்று மணி நேரங் கழிந்து ஆறியபின் வடிகட்டி அரைக்கால் அவுன்ஸ் முதல் அரை அவுன்ஸ் வரை சிறிது சர்க்கரை சேர்த்துக் கொடுத்துவர நோய் நீங்கும் என்று கூறுவார்கள்.

## திரு. பூவை. கலியாண சுந்தர முதலியார்

(முகப்புப் படம் பார்க்க)

தொண்டை மண்டலத்திலே புலியூர்கோட்டத்திலே புத்த வேடென்னும் நத்தத்திலே உயர்துளுவ வேளாள குலத்திலே பூவிருந்தவல்லியார் மரபிலே வாயிலார் நாயனர் பரம்பரையிலே 10—5—1845ல் திரு. முதலியார் அவர்கள் பிறந்தார்கள்.

இவர் தந்தையார் பெயர் திரு. அண்ணுசாமி முதலியார்; தாயார் உண்ணுமுலை யம்மையார். இவர் தமையனர் சுந்தர வடிவு முதலியார். இவர் தங்கையார் நால்வர். 1879-ல் பார்ப் பாத்தி யம்மாள் என்பாரைத் திருமணம் முடித்தார். இவருக்கு 1883-ல் சிவபூஷணம் என்னும் குமாரன் பிறந்து 1908-ல் இறந் தான். சிவநேசம் என்ற ஒரே பெண் மட்டுமிருந்து வருகிருர்.

இவர் இளமையிற் பூவிருந்தவல்லி பூங்காவன உபாத்தி யாயரிடம் பிரபந்தங்களும், சொர்க்கபுரம் இராமலிங்க தம்பிரான் சுவாமிகளிடம் புராணங்கள் காரிகை முதலியவைகளும் பேறை ஜகந்நாத பிள்ளை யவர்களிடம் இலக்கணம் முதலிய பிற நூல் களும் பயின்றனர். சொல்வன்மையிலும் கட்டுரைவன்மையிலும் ஒப்புயர்வற்று விளங்கினர். ஆங்கிலமும் செவ்வையாகக் கற்றுத் தேர்ந்தமையால், சிறிது காலத்தில் அரசாங்கத்தில் அலுவல் பார்த்துப் பின் நீங்கினர்.

இவருக்கு மட்டற்ற ஆதரிப்பாளர்களும் நண்பர்களும் இருந் தார்கள். அவர்களில், திருவாவடுதுறை சுப்பிரமணிய தேசிகர், அம்பலவாண தேசிகர், திருத்துறையூர் சிதம்பர சிவப்பிரகாச பண்டாரசந்நிதிகள், சூரியனர்கோவில் முத்துக்குமார தேசிகர் காஞ்சி மெய்கண்ட சிவாசாரிய சந்தானம் ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள், கோடகநல்லூர் சுந்தரசுவாமிகள், முருகதாசரென்ற தண்டபாணி சுவாமிகள், பாஸ்கர சேதுபதி அவர்கள், அருட் பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகள், மறைமலை யடிகள், திரிசிரபுரம் மீனுட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள், திரு. ஜே. எம் நல்லசாமி பிள்ளையவர்கள் சிறப்பாக எடுத்துக் காட்டக்கூடியோர்.

புராணப்பிரசங்கஞ் செய்வதில் நற்பெயர் பெற்ற இவர் சென்னை நடராஜ சபை யென்றும் மெய்கண்ட சந்தானசபை என்றும் இரண்டு பெருஞ் சபைகள் நிறுவி சமயத்தொண்டாற்றி வந்தார். ஊதியங் கருதாது உழைத்து வருவதே இவர் நோக்கம். சித்தாந்தம் என்ற திங்கட்டாளையும் சிலகாலம் ஆசிரி யராயமர்ந்து நடத்திவந்தார்.

இளமைதொட்டே இவர் பாட்டுப்பாடுவதில் இயற்கை வல் லமை வாய்த்திருந்தார். திருமுருகாற்றுப் படையை இவர் தாரக மந்திரமாக ஓதிவந்தார். பாடினுல் பாடியவாறே பயன் விளைக்கக்

கூடிய நிறைமொழி மாந்தரில் ஒருவராக இருந்தார். அழுத்த மான சிவப்பற்று உடையவர். இவர் தனிச்செய்யுட்களும் பதி கங்களுமாக இயற்றியவை நீங்கலாக, நூல்களாக இயற்றியவை நாற்பதிற்கு மேற்பட்டன. திருத்தி அச்சிட்ட நூல்கள் 96-க்கு மேற்பட்டன. சாத்துகவிகள் மட்டும் 864ம் அதற்குமேலும் என்ப. இவர் மாணவர்கள் எண்ணற்றவர்கள், நற்புலமைவாய்ந்த வர்கள். மணி திருநாவுக்கரசு முதலியார், வல்லை சண்முக சுந்தர முதலியார், வண்ணக் களஞ்சியம் நாகலிங்க முனிவர், புழலை திருநாவுக்கரசு முதலியார் முதலியோர் மாணவர்களிற் சிறந்தோராவர்.

பரதகண்டேதிகாசம், நீதிசாகரம், திரிபுரசுந்தரிமாலை, செங்கற்பட்டு மகாத்மியம், கடம்பன் கவசம், சிவராத்திரி புராண வசனம், சித்தாந்தக் கட்டளை, பூவாளூர்த்தல புராண வசனம், திருவொற்றியூர்க் கலம்பகம்; செய்யுளிலக்கணம், சித்தாந்த வசன பூஷணம், சைவக்கிரியாதிகாரம், சித்தாந்த பரிபாஷை, தாயுமா னூர் மெய்கண்ட விருத்தியுரை முதலியவை இவர் பல துறை களினும் இயற்றிய நூல்களுட் சில.

சித்தாந்த சரபம், அஷ்டாவதானம், பூவை. கலியாண சுந்தர யதீந்தரர் என்ற இப்பெரியார் 1918-ம் ஆண்டிற் சிவனடி நீழல் எய்தினர்.

---

# செய்திகளும் குறிப்புகளும்
## News and Notes

சிவபுரம் நிலக்கிழவரும், சென்னை அரசாங்கக் கண்காணிப் பொறிவலாளருமாயிருந்து காலஞ் சென்ற தமிழ்ப் பெருமகனுர் திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் அவர்களின் அருமை மகளார் திருநிறை குணமாணிக்கத் தம்மையார் M. A. L. T., அவர்களுக்கும் ஐதராபாக் கம் திரு. இராமு ஜெனார்த்தன முதலியார் B.A.B. com அவர் களுக்கும் சென்ற 27-5-34-ல் அன்பழகிளமை யருளுவாகிய முருக னருளால் நன்மணம் நிறைவேறியது. மணமக்கட்கு எம் வாழ்த்து உரியதாகுக.

* * *

இச் சூன் திங்கள் 10-ம் நாள் 11-ம் நாளில் எல்லையில் புகழ் பெறு நெல்லைமாநகரில் சென்னை மாகாணத் தமிழர் மாநாடு கூடப் போவது கருத்திற் பதிக்கற்பாலதாய ஒரு நிகழ்ச்சியாகும். அம் மா

நாட்டிற்குச் செந்தமிழ்ப் புரவலர் திரு. உமாமகேசுரம் பிள்ளையவர்கள் தலைமை வகிப்பதும், அம்மா நாட்டின் சார்பில் நடைபெற விருக்கும் தமிழ்ப்புலவர் மாநாட்டிற்கு உயர் திரு. மறைமலை யடிகளார் தலைமை வகிப்பதும், சென்னை வளர்ச்சிநெறி யமைச்சர் திரு. தி. பொ. இராஜன், டில்லி சட்டசபைத் தலைவர் ஹானரபிள் ஸர். ஆர். கே. சண்முகஞ் செட்டியார், திரு. எஸ். சோமசுந்தர பாரதியார் முதலிய பெரியார்கள் ஆங்குச் சென்று கலந்துகொள்ள இசைந்திருப்பதும் தமிழ்த்தாயின் நற்காலத்திற்கு அறிகுறியே யாகும். என்றும் அழியா இயல்பும் மாறாஇளமை நலனும், அளப்பரும் ஆற்றலும் வாய்ந்து ஒளிரும் தமிழ்மொழியைக் கல்லாதார் பரிந்து கற்குமாறும், மதியாதார் உணர்ந்து மதிக்குமாறும், சர்வகலாசாலையார் இகழ்ந்தொதுக்காமற் புகழ்ந்து போற்றுமாறும், அரசாங்கத்தார் வலுவில் முற்போந்து ஆதரிக்குமாறும், ஆரியர்கள் என்று தம்மைப் பிறழ உணர்ந்திருக்கும் பெரியார்கள் உண்மை யுணர்ந்து தமிழ்மொழி தம் மொழியே என்று உரிமை பாராட்ட முன்வருமாறும், தமிழர்கள் பெருமிதத்துடன் மார்புதட்டி மொழியின் தூய்மையையும் செம்மை மேம்பாட்டையும் ஒப்பற்ற தனிப்பெருமையையுங் காத்து நிலைநிறுத்த ஆர்வத்துடன் எழுமாறும் உயர்பணியாற்றுவது அம்மாநாட்டின் கடமையாகும். இறைவன் அஃது நிறைவேறுமாறு தோன்றாத்துணையாக இருந்து ஊக்குவிப்பானாக.

* * *

"ஒருவர் தும்மினால் உடனே அவரை நீடூழி வாழ்க" என்று வாழ்த்தும் பழக்கம் கிறித்துவர்களிடமிருந்து தான் பிறராற் கற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறதென்று துணிந்து கூறலாம். கிறித்து பிறப்பதற்குப் பல்லாண்டுகள் முன்பிருந்தே இப்பழக்கம் பிற மதத்தாரிடமும இருந்து வந்துளது போலும்" என்று ஒன்றுக்கொன்று முரண்பட ஒரு ஆங்கிலக் கதை நூல் கூறுகிறது. கிரேக்கர்கள் தும்முவதை நல்ல சகுனமாகக் கருதி வந்தார்கள் என்பதை "ஸெனுபனின் மீட்சி" என்ற நூலிற் காணலாம். நந்தமிழ் நாட்டிற் சிறு குழந்தைகள் தும்முங் காலத்தில் அருகிலிருக்கும் பெற்றோர் பெரியோரெல்லாரும் முதல் தும்மலுக்கு நூறென்றும், இரண்டாவதற்கு "இருநூ" றென்றும், மூன்றாவதற்கு "மூந்நூ"றென்றும், அதற்குமேல் "தீர்க்காயுசு" என்றும் வாழ்த்தக் கேட்டிருக்கலாம். இது கிறித்தவர்களிடமிருந்து கற்றதென்று கோடல் சாலுமோ?

* * *

திருவாசக மணிகள்:—தேனூறும் வாசகங்கள் அறநூறில் நூறு பாக்கள் வரை பொறுக்கி யெடுக்கப்பட்டு, திருவாசக மணிகள் என்னும் பெயருடன் ஒரு சிறு நூலாக வெளியிடப்பட்டுள்ளன. பெயருக்கேற்ப ஒவ்வொரு பாட்டும் மாணிக்கமணியே என்ற மதிக்கப்படுமாறு, பாடல்களின் பொருளும் ஆழ்ந்த கருத்தும் யாழ்ப்பாணத்துப் புலோலி திரு. சு. சிவபாதசுந்தரம் பிள்ளை யவர்களால் நன்கு விளக்கப்பட்டுள்ளன. திருவாசக முழுவதிற்குமே இத்தகைய ஒருரையைப் பிள்ளையவர்கள் எழுதின் நலம் பயப்பதாகும். இச்சிறு நூலின் விலை அணா மூன்றே. நங்கழகத்திற் கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

பன்னும் விளக்கினிற் பயனிலை யாகும் பகர்விளக்கும்
மன்னிய தேச மடையப்பின் னவ்விரு ளானதுதான்
றுன்னுவ தென்கொலச் சொல்விடு காரியத் தோற்றமின்றும்
மன்னிய மேற்சொல் திட்டாந்த மதற்கும் வழக்கிதுவே. 30

அந்தவி ரோதத் திருளை யபிபவமா கச்செய்ய
வந்தவி ளக்குக்கு மாறுத் தொழிலைம தித்துரையா
யிந்தநல் லாணவந் தானேய னுதியெ னுஞ்செய்புடான்
றந்தபொ ருளையும் தானறிந் தாயிலை சாலநன்றே. 31

அக்கினி வெம்மை யடக்கும விடத்ததாம் பெலத்தைத்
தக்கமிலா மல்ல பிபவஞ் செய்த தனிமணிதான்
மிக்ககலாம விருந்த வளவு மிகு நெருப்புத்
தொக்கினர் தம்மைச் சுடுமணிபோகிற் சுடுவதின்றே. 32

சொன்ன மருந்தின் பெலத்தை யடக்குஞ் சுடர்மணிக்கு
மன்னிய வக்கினி வெம்மை யடக்கும் மருந்துக்குத்தான்
துன்னிய பிபவஞ் செய்தொழி லென்றுந் துடர்ச்சியென்ப
துன்னியு ரைசெய் யுரைப்போ மிதன்றியு மோர்ந்துகொள்ளே. 33

மன்னுங் கலைமுத லாகுங் கரணங்கள் வந்ததனுன்
மின்னியி ருந்த வளவு மறிவும் விளங்கியிடு
மன்னக லைமுத லாயின நீங்கி னறிவிலதாற்
சொன்ன கலாதிக் கபிபவ மென்னுந் தொழினித்தமே. 34

சென்றிவ் வுயிரின் குணத்தை யபிபவஞ், செய்தமல
மன்றொரு காலத் தபிபவஞ் செய்திங் ககன்றதுவோ
வின்றள வுஞ்சொல் லபிபவஞ் செய்திங் கிருக்கின்றதோ
வொன்றை விசா ரித்துரை யாவு வந்திடவே. 35

அன்றொரு காலத் தபிபவஞ் செய்திங் ககன்றதெனி
லின்றிறையா லம்மலத்துக் கபிபவ மென்கொலையோ
சென்றொரு சாத்தனைக் கொற்றன் புடைத்தவன் சேர்ந்தபின்னே
யொன்றிய சாத்தனை யேன்புடைத் தாயென் றுரைநவின்றே. 36

ஒன்றுநற் சாத்தற் குரியவர் வந்திங்குயர் கொற்றனைப்
பொன்றுவ.................புடைத்தாலது பூவுலகி

னன்றயர் சாத்தன் பிழைத்தற்கு நன்மருந் தாயிடுமோ
வின்றுநின் வாக்கில் வசன விரோதமு மெய்தியதே. 37

இன்றளவும் நல்லுயிர்க்கு........யிருண்மலமுந்
துன்றிய பிபவஞ் செய்திருக் கும்மெனச் சொல்லிடினீ
பொன்றுத லற்ற புகழ்முத்தி யின்கண் புகல்சிவனு
மென்று மலத்துக் கபிபவஞ் செய்வ னெனவியம்பே. 38

உரைத்த விசேடத் தபிபவஞ் செய்கின்ற வொண்பொருட்கு
வரைத்தியம் பாத்தொழி லுண்டென் றுரைத்து மலமறைப்பா
நிரைத்த தொழிலை யபிபவஞ் செய்கின்ற நின்மலற்கும்
புரைத்த தொழிலென்று நீங்காத தென்னப் புகழ்ந்துரையே. 39

அன்றியுஞ் சத்தியச் சோதியெனு நல்லருட் குருவு
மின்றுயிர் தங்கட் கனுக்கிர கத்தா லியம்பினதா
யொன்றருள் செய்மோட்ச காரிகை தன்னி லுரைத்திருக்கு
நன்றுரை தன்னை யறிந்திலை நாமு நவிலுதுமே. 40

சாருஞ் சிவசத்தி யான்மாவின் வேத்தி தருவதென
வாரும் புகழ்சைவ சித்தாந்தஞ் செப்ப வதுதெரியா
தோரும் பரமத வாதியும் வெஞ்சக முள்ளளவே
சீருறு வெங்கியந் தானும் விளங்குஞ் சிறந்தொன்றுமே. 41

வெஞ்சகம் போனபின் வெங்கியந் தானும் விளங்கலின்ரும்
வஞ்சமின் முத்தர்க்கு மிவ்வண்ணம் வந்து மலமறைக்கும்
மெஞ்சலி லாமுத்தி சொல்லுவ தென்கொ லெனச்சொல்லவே
துஞ்சலில் சத்தியச் சோதிசொல் வாக்கியஞ் சொல்லுதுமே. 42

வெஞ்சக மாகும் சிவசத்தி சன்னிதி மேவியென்றுந்
தஞ்சம தாயுயிர் நீங்காது கூடித் தரிக்கையினல்
துஞ்சலி லாவுயிர் வேத்தியு முண்டென்று சொன்னதுவுஞ்
செஞ்சொலி னுற்சைவர் செப்பிய தின்றே தெரிந்துனக்கே. 43

மலபரி பாகம் வந்தாற் சிவசத்தி மலமதனை
விலகவ பிபவஞ் செய்தபின் சீவன் விசுத்தமுற்றே
யிலகிய தன்சத்தி யாலு மலத்தினை யேற்றிடுமால்
நிலவுஞ் சிவசத்தி யென்றுனை யென்றும் நிகழ்த்திடிலே. 44

ஈசனும் புற்கலன் றானுமி சைந்திங் கிருண்மலத்தை
நாசம தாக வபிபவஞ் செய்வ ரெனநவின்றாய்
பேசிய முத்தியி லீசன் றுணையைப் பிரிப்பதென்னோ
பாச மகல வானு மபிபவம் பண்ணினனே. 45

அந்தச் சிவசத்தி தன்னா லபிபவ மானமல
மிந்த வுயிர்ச்சத்தி யாலு மபிபவ மென்கொலையோ
முந்தைச் சிவசத்தி யாலே மலசத்தி மோசித்தபின்
றந்த வுயிர்சத்தி யாது புரிந்தது சாற்றுகவே. 46

ஆணவ சத்தியை யெல்லா மகற்றுழி யாங்கதிலே
தாணுவின் சத்தியிற் றீராத சத்தியுஞ் சற்றுளதோ
காணு முயிர் மற்றதனை யபிபவங் கண்டதுவோ
வீணின் மலசத்தி யெல்லா மகற்றிப் பின்விட்டிடவே. 47

ஆணவஞ் சேரி லுயிர்க் குள்ளசத்தி யகற்றியதோ
பூணுஞ் சிவசத்தியா லொழியாததைப் போக்குமெனிற்
பேணும் பிரானிற் பெரிதா முயிர்சத்தி பிஞ்ஞகனாற்
காணுஞ் சருவ ஞிரித்திய மென்பதுங் கண்டிலமே. 48

சிந்தமல சத்தி யெல்லா மரன்முனந் தீர்த்தகல
வந்தமல சத்தி தன்னை யுயிர்சத்தி மாய்த்ததெனிற்
பந்தமிலாப் பரன் பாசத்தைத் தள்ளிப் பரையதனா
லந்தமி லானந்த நல்குவ னென்பதை யாய்ந்திலையே. 49

அன்றரன் பாச மகற்றி விடுத்தபின் னாருயிருந்
துன்று மலந்தனைப் போக்கிடு மென்றுரை செய்ததென்னோ
வொன்று மலபரி பாக மடைந்தபி னோங்குயிர்தான்
வென்று மலத்தை யடக்குமென் றாலென் விளம்புகவே. 50

செம்பிற் களிம்பை யிரத குளிகை சிதைத்ததுபோல்
நம்பான் சத்திம லத்துக்கு நாசத்தை நல்குமென்ற
வும்பர்கள் போற்றும் வசன விரோதமுண் டாமதனால்
இம்பரி லிவ்வண்ண மியாங்களி சைத்தன மென்றிடிலே. 51

செம்பிற் களிம்பை யிரத குளிகைமுன் றீர்த்தகலப்
பம்புங் களிம்பு திரும்பிப் பொருந்தும் பரிசுதன்னை

மொய்ப்புறு செம்புதன் சத்தியிற் றீர்த்தன் மொழியவரும்
வம்பிது காணிப் படியா கமத்தில் வசனமின்றே. 52

மலத்தை யிருளென்றுங் காளிம மென்று மதித்தானைத்
துலக்கும் பரிதி குளிகையென் றாகமஞ் சொன்னதுபோல்
கலக்க வுயிர்க்குத் திறமா கமத்திற் கழறலின்றால்
அலக்கு மறிவுள வான்மா மலத்தை யகற்றலின்றே. 53

விளக்கொன் றுவந்திரு ணீக்கிப் பொருளை விளக்கியபின்
விளக்கொன் றுவந்த தனோடு பொருளை விளக்குதல்போற்
றுளக்கொன் றிலாது மலந்தீர்த் தருளிய சோதியுடன்
றுளக்கொன்றி லாமுத் தருந்தீர்ப் பாணவத் துன்பத்தையே. 54

இவ்வா றிசைத்திடின் முன்சொன்ன குற்றமு மின்றிறைவன்
செவ்வான சத்தி சகாயமுந் தீர்ந்த தெனைச்செப்பினீ
யெவ்வாறு பின்வந்த தீபமுங் காரண மென்றிசைத்தா
யொவ்வாது நீசொல்லும் வார்த்தை தவறென் றுரைக்குவமே. 55

விளக்கை மறைத்த விருளையு நீக்கும் விளக்குமுண்டோ
விளக்கினைப் போலுயிர் தன்னையுஞ் சாற்றல் விதியலகாண்
விளக்கினைப் போலச் சிவனையுரைப்பது வேவிதியாம்
விள்க்கினுக் கின்னம் விளம்புதுங் குற்ற மிகவறியே. 56

நன்று வனைந்த கடத்துக்குப் பின்புற்ற நற்குயவன்
றுன்று கடத்து..................ன்றிது சொல்லுவையே
யின்று பிறந்த கடத்துக்குப் பின்னு மிறையருளாற்
சென்றங் கடைந்த கரியையுங் காரணம் செப்புகவே. 57

வந்தநல் யா..................வழங்குவையேன்
முந்திய காரணந் தானென வத்தை மொழியவருங்
கந்தடு மாவுங் குலாலனைப் போற்கட காரியத்தைத்
தந்திடும் யோக்கிய ......................சாற்றிப் பன்னே. 58

காரண யோக்கிய முள்ள குலாலற் கடுப்பவிவன்
ஆரிரு ணீக்குத லெல்லாப் பொருளு மறிந்திடவே
பாரினிற் செய்..................பகர் விளக்கின்
நீருறை செய்தநற் றேடமின் றென்று நிகழ்த்திடிலே.




அகத்திய முனிவர்

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

## திங்கள்தோறும் வெளிவருவது


| | | |
|---|---|---|
| சிலம்பு ௧௨ | மெய்கண்டான் யாண்டு-௭௧௧ வைகாசித்திங்கள் 1934௵ ஜூன்௴—ஜூலை௴ | பரல் ௧௧ |


## திருஞானசம்பந்த அடிகள் தேவாரம்.

மெய்யராகிப் பொய்மைநீக்கி வேதனையைத் துறந்து
செய்யரானார் சிந்தையானே தேவர்குலக் கொழுந்தே
நைவனாயே னுன்றனாம நாளுநவிற்று கின்றேன்
வையமுன்னே வந்துநல்காய் வலிவலமே யவனே.

பதவுரை:—

வலிவலம் மேயவனே—திருவலிவலம் என்ற தலத்தில் திருக்கோயில் கொண்டருளி யிருக்கிறவனே

பொய்மைநீக்கி—நிலையில்லா திருக்கின்ற உலக நுகர்வு வாழ்வைப் பற்றிக் கொண்டிருக்கும் வஞ்சப்புலன் செயலை விலக்கி

மெய்யர் ஆகி—நிலையுள்ளதாகிய சிவபோகத்தையே விரும்பும் உண்மை வாழ்வினை உடையவராகி

வேதனையைத் துறந்து—உலகவாழ்வு நுகர்விலுள்ளதாகிய இன்ப துன்ப உணர்ச்சியையும் விட்டு நீங்கி

செய்யர் ஆனார் சிந்தையானே—(இவ்வாறு பொய்மை நீக்கி மெய்யராகி வேதனையைத் துறந்ததனா லுண்டாகும் பயனாக பசுகரணம் நீங்கி மலமூன்றுஞ் செற்றுச் சிவகரணமாகிய மாந்தருடைய) செம்மை யுள்ளத்தில் சிவமாய் விளங்குகின்றவனே

தேவர் குலக்கொழுந்தே—மாந்தர்களுக்கு அருள்செய்யும் தலைவனு யிருத்தலன்றி தேவர் கூட்டத்திற்கும் அருள் செய்யுந் தலைவனு யிருக்கிறவனே

உன்றன் நாமம்—நினது பெயராயுள்ள அஞ்செழுத்தை

நாயேன்—நீ எனக்கு இடைவிடாது செய்து வருகின்ற உதவியை நாய்போல நன்றிமறவா திருக்கின்ற நான்

நைவேன்—அதன் உட்பொருளை நினைந்து அகங் குழைந்து உருகு கின்றவனாய்

நாளும்—ஒவ்வொரு நாளும்

நவிற்றுகின்றேன்—ஓதி வருகின்றேன்

வைய முன்னேவந்து—ஆதலினால் நீ உலகில் எனக்கு முன்னே குரு வடிவில் வந்து

நல்காய்—பேரின்பம் தந்து அருள் செய்யும்படி வேண்டுகிறேன்.

விளக்கவுரை:—

பொய்மை நீக்கி—இங்கே பொய்மை என்பது வஞ்சனை (Unreality) அதாவது உலக நுகர்வு வாழ்வைப் பற்றிக் கொண்டிருக்கும் வஞ்சப் புலன்செயல். இதில் உள்ளமானது காற்றூடி போல நிலையின்றிச் சுழன்று உழன்று கொண்டிருக்கும். நீக்குதல் எதிர்மறை வினை (Negative action).

மெய்யர் ஆகி—மெய் என்பது என்றும் உள்ள நிலையான இயற்கைத் தன்மை. (Reality). இந்தநிலையான தன்மையானது உள்ளம் உலகத்தைப் பற்றுதலை விட்டு இறைவனைப் பற்றுதலா லுண்டா கிறது. மெய்யினை உடையராகி என்னுது மெய்யர் ஆகி என்பத ணுல், உயிருக்கு மெய்யாகிய இறைவனை அடைதலே இயல்பு என்பதும், மல மறைப்பினால் உயிர் இறைவனைப் பற்றாது பொய் ஆகிய உலகினைப் பற்றி யிருத்தல் செயற்கை என்பதும் குறிப்பிடப்பட்டன. ஆகி என்னும் ஆக்க வினை மல மறைப்பி னின்றும் நீங்கித் தூய்மை ஆதலைக்குறிக்கிறது. மேலே விட் டத்திலே கயிற்றினாற் கட்டப்பட்டிருக்கும் ஒரு ஊஞ்சற் பலகைமேல் இருக்கிறவன், கயிறு அறுதலும் தரையைச் சேர் தல் போல, ஒருவன் உலகப்பற்றை விடுதலும் இறைவனைச் சார்தல் ஒருதலை யாதலின், பொய்மை நீக்கி என்று கூறியபின் மெய்யர் ஆகி என்றார். ஆகியென்பது உடன்பாட்டுவினை (Positive action.)

வேதனையைத் துறந்து—வேதனை என்பது வருத்தம். அது இங்கே உலக நுகர்வு வாழ்வி லுண்டாகும் இன்ப துன்ப உணர்ச்சியைக் குறிக்கின்றது. உலக நுகர்வு வாழ்வை விட்ட பின்னும் அதன் கண்முன் அடைந்திருந்த இன்ப துன்ப உணர்ச்சியானது வாசனையாக உள்ளத்தில் தங்கி யிருத்தலை வேதனை என்றார்.

துன்பம் சிறிதும் கலவாத மெய் இன்ப மடைதற்கு, அவ்வாசனை யையும் அற ஒழித்தல் வேண்டும் என்பார் துறந்து என்றார்.

செய்யர் ஆனார் சிந்தையானே—செம்மை + அர் = செய்யர். செம்மை என்ற பண்புப் பெயரில் மைஈறு கெட்டு முன்னின்ற மெய் ஆகிய மகர ஒற்று யகர ஒற்றாகத் திரிந்து யகர ஒற்று இரட்டித்தது. செம்மை என்பது நேர்மை ஒற்றுமை. செய்யர் ஆதல் என்பது சிவம் வேறு தாம் வேறு என்னாது தன்முனைப்பு முற்றிலும் நீங்கிச் சிவத்தினோடு இணங்கி அத்துவிதமாய்க் கலந்திருத்தல். இக்கருத்து, "சிவமான சிந்தையிற் சீவன் சிதைய, பவமான மும்மலம் பாறிப் பறிய, நவமான அந்தத்தின் நற்சிவ போதந், தவமா மவையாகித் தானல்ல வாகுமே" என்று திரு மூலர் (2539) வது திருமந்திரப் பாட்டிலும், "சித்தந்தெளிந்து சிவமானோ ரெல்லோர்க்கும், கொத்தடிமையான குடிநான் பராபரமே" என்று தாயுமான சுவாமிகள் 783-வது பாட்டிலும், 'சிவனை ஞானச் செய்தியாற் சிந்தையுள்ளே மருளெலாம் நீங்கக் கண்டு வாழலாம்' என்று சிவஞான சித்தியார் மங்கல வாழ்த்துப் பாட்டிலும் கூறப்பட்டிருத்தல் காண்க. திருநாவுக்கரசு அடிகள் 'சிவனை நான் சிந்தையிற் கண்டவாறே' (311—11) என்றும், 'சிந்தையிற் சிவனாய் நின்ற உருவினைக் கண்டு கொண்ட தென் னுள்ளமே' (212—8) என்றும் கூறியருளினார். இன்னும் இக்கருத்து தேவார திருவாசக முதலிய பன்னிரு திருமுறை நூல்களிலும் சைவ சித்தாந்த நூல்களிலும் பல இடங்களிற் கூறப் பட்டிருக்கின்றது.

தேவர் குலக்கொழுந்து—குலம் = கூட்டம். கொழுந்து-மரம் செடிகளி னுடைய இரசத்தால் (Juice) உண்டாதலால் சிவபெருமான் தேவர் கூட்டத்துக்கு உயிராய் அவர்களுக்குத் தலைவனாய் விளங்குகின்றவன் என்ற கருத்துக் கூறப்பட்டது. செம்மை யானார் சிந்தையானே என்பதனால் சிவபெருமான் மாந்தருக்கு உயிராயுள்ள தலைவனாய் விளங்குகின்றார் என்று கூறியபின் தேவர்களுக்கும் அவ்வாறே தலைவனாய் விளங்குகின்றார் என்பது கூறப்பட்டது.

உன்றன் நாமம்—பிரணவம் அல்லது சி முதலாகக் கூறப்பட்ட அஞ் செழுத்து. பிரணவ அஞ்செழுத்தும் ஒரே கருத்தை விளக்கு கின்றன என்பது திருமந்திரம் 975, 2503 பாட்டுக்களிற் கூறப் பட்டிருத்தல் காண்க.

நாயேன்—அடிகள் தம்மை நாய்க்கு ஒப்பிட்டுக் கூறியது செய் நன்றி மறவா திருக்கும் குணம் பற்றியாகும். இழிதகைமையானது தாம் சிவபெருமானது உதவியின்றி இறையளவும் வாழா திருத் தல் பற்றியாகும்.

நைவேன் நாளும்—'துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும் நெஞ்சக நைந்து நினைமின் நாடொறும்' என்று அடிகள் அஞ்செழுத் துப் பதிகத்திற் கூறி யிருப்பது காண்க.

வையமுன்னே வந்து நல்காய்—தீவிரதர சத்திநிபாதம் அடைந்த உயிர்க்குச் சிவபெருமான் குருவடிவில் வந்து பேரின்பந் தந் தருளுதல் கூறப்பட்டது. மாணிக்கவாசக அடிகளுக்குச் சிவ பெருமான் திருப்பெருந்துறைக்கு வந்து அருள் செய்தது ஒரு எடுத்துக்காட்டாகும்.

இந்தத் தேவாரப் பாட்டில் முதல் இரண்டு அடிகளிலும் சிவ பெருமான் இன்ன தன்மையன் என்பது கூறப்பட்டது. மூன்ருவது அடியானது அத்தன்மைக்கு இணங்க பக்குவம்வந்த ஒருவர் செய் யும் செயலைக் கூறுகிறது. நாலாவது அடி அவர் சிவபெருமானை நோக்கிப் பேரின்பம் அருளுதலை வேண்டிக் கொள்ளுதலைக் குறிக் கிறது. அடிகள் இக்கருத்துக்களைத் தம்மேல் வைத்து உலகுக்கு அறிவுறுத்தியருளினர். 'பொய்மை நீக்கி' என்பதனுல் ஞானத்தில் சரியையும், 'மெய்யர் ஆகி' என்பதனுல் ஞானத்திற் கிரியையும், 'வேதனையைத் துறந்து' என்பதனுல் ஞானத்தில் யோகமும் 'செய்யரானுர் சிந்தையானே' என்பதனுல் ஞானத்தில் ஞானமும் கூறப்பட்டன. 'பொய்மை நீக்கி' என்பதனுல் நிவிர்த்திகலை ஒளி விளக்கமும், 'மெய்யர் ஆகி' என்பதனுல் பிரதிட்டாகலை வித்தியா கலைகளின் ஒளிவிளக்கமும், 'வேதனையைத் துறந்து' என்பதனுல் சாந்திகலை ஒளிவிளக்கமும் 'செய்யரானுர் சிந்தையானே' என்பத னுல் சாந்தியாதீதகலை ஒளிவிளக்கமும், சிந்தைக்கு உண்டாயின என்பது கூறப்பட்டது. 'பொய்மை நீக்கி' என்பதனுல் பொய்த் தன்மை (அசத்துத் தன்மை) நீக்கமும், 'மெய்யராகி' என்பதனுல் பொய்த்தன்மை நீங்கியதனு லுண்டாகும் மெய்யறிவு விளக்கமும், 'வேதனையைத் துறந்து' என்பதனுல் மெய்யறிவினுல் துரிய நிலையி லுண்டாகும் பேரின்பத் தோற்றமும், 'செய்யரானுர், சிந்தையானே' என்பதனுல் துரியாதீத நிலையிலுண்டாகும் அத்துவிதக் கலப்புப் பேரின்பமும் சிந்தையில் முறையே ஒன்றன்பின் ஒன்று ஏதுவும் பயனுமா யுண்டாகின்றன என்க. துரியாதீத நிலைவரை உயிருக்குச் சாந்தியாதீத கலையிலுள்ள சிந்தை உண்டு என்பது, "பெத்தமு முத்தியும் பேணும் துரியமும்—சுத்த வதீதமுந் தோன்ருமற் ருனு ணும்—அத்த னருளென் றருளாலறிந்தபின்—சித்தமு மில்லை செய லில்லை தானே" என்று திருமந்திரம் 2255-ம் பாட்டிற் கூறி யிருத்தல் காண்க. 1634 வது பாட்டின் கருத்தையும் நோக்குக. இதனுல் சிந்தையின் (உள்ளத்தினது) தூய்மை எத்துணைப் பேரின்பவாழ் வுக்கு இன்றியமையாது வேண்டப்படுவது என்பதும், உலக வாழ் விலும் சிந்தையானது தூய்மை அடையா விட்டால் பேரின்பவாழ் வுக்குரிய தூய்மை தோன்ருது என்பதும் நன்கு தெளியப்படும். இப்பாட்டின் முதல் இரண்டு அடிகளின் கருத்து திருநாவுக்கரசு அடிகள் பாடிய 'நிருகு சிந்தையைத் தீர்த்துச் செம்மை செய்து' என்ற திருக்குறுந்தொகைத் தேவாரப்பாட்டில் கூறப்பட் டிருக்கின்றது.

—மா. வே. நெல்லையப்ப பிள்ளை

---

# சமயமும் தத்துவமும்:
## Religion & Philosophy

[பண்டிதர் சி. வீரபாகுப்பிள்ளையவர்கள்]

(முன் ௫௰௯-ம் பக்கத் தொடர்ச்சி)

தமிழ்மக்கள் இம்மந்திரப் பொருளாகிய பரசிவத்தைத் தங்கள் குலதெய்வமாக வழிபட்டு வந்திருக்கிறார்கள். நமக்குக் கிடைக்கும் தமிழ் நூல்களிலே மிகவும் பழைமையானது தோல் காப்பியம். அது இலக்கண நூல். அந்நூலை இயற்றியவர் ஒல்காப் புலமைத் தோல்காப்பியனார். அவர், நிலத்தை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலென நான்காக வகுத்து ஒவ்வொரு நிலத்துக்கும் தெய்வமுங் கருவும் கூறியிருக்கிறார். இந்நிலங்களுள் குறிஞ்சி நிலமே முதன் முதல் தோன்றியது. "கல்தோன்றி மண்தோன்றாக்காலம்" என்று பெரியோர் கூறுவர். அந்நிலத் துக்குத் தெய்வம் முருகனும் துர்க்கையும். தொல்காப்பியர் முரு கனைச் 'சேயோன்' என்கிறார். முல்லைநிலத்துக்குத் தெய்வம் மாயோன். மாயோன் என்பதற்குக் கருநிறமுடையவன் என்று பொருள். மருத நிலத்துள்ளவர்கள் பெரும்பாலும் உழவர்கள். ஆகவே அந்நிலத்துத் தெய்வம் இந்திரன். தொல்காப்பியர் இந் திரனை வேந்தன் என்று அழைக்கிறார். பரிமேலழகரும் "இடை முரிந்து வேந்தனும் வேந்துருக்கும்" என்றவிடத்து வேந்தன் என்பதற்கு இந்திரன் என்று பொருள் கூறித், தொல்காப்பியர் கூறிய "வேந்தன்மேய தீம்புனலுலகமும்" என்றதையே எடுத் துக் காட்டியிருக்கிறார். நெய்தல் நிலத்துக்குத் தெய்வம் வரு ணன். உப்பும் மீனும் வைத்துத்தான் நெய்தல் நிலத்தார் வாழ வேண்டும். அவர்கள் வலைவளம் தப்பினால் சுறா மீனது கொம்பை நட்டு அதில் வருணனை நிறுத்தி வழிபடுவார்கள்.

இந்த நான்கு நிலத்துக்குரியவர்களிலும், அந்தணர், அர சர், வணிகர், வேளாளர்களிலும் அறிவுநூல் கற்ற பெரியவர்கள் ஆதியில் சிவனையே தங்கள் உபாசனாமூர்த்தியாகக் கொண் டிருக்கிறார்கள்.

"கண்ணவனை யல்லது காணா செவியவன
தெண்ணருஞ் சீரல்ல திசைகேளா—வண்ணல்
கழலடி யல்லது கைதொழா அஃதால்
அழலங்கைக் கொண்டான்மாட் டன்பு"

என்ற பழஞ்செய்யுளே இதற்குச் சாட்சி. இப்பழம்பாட்டைச் சேரமான் பெருமாள் நாயனார் பொன்போலப் போற்றித் தாம்

அருளிச் செய்த திருவுலாப் புறத்திலே எடுத்தாண்டிருக்கிறார்கள். பிரயோக விவேக நூலிலும் இது மேற்கோளாக வருகிறது கடைச் சங்க நூலாகிய இன்னா நாற்பதின் கடவுள்வாழ்த்திலே

"முக்கட் பகவன் அடிதொழா தார்க்கின்னா
பொற்பனை வெள்ளையை உள்ளா தொழுகின்னா
சக்கரத் தானை மறப்பின்னா தாங்கின்னா
சத்தியான் தாள்தொழா தார்க்கு"

என முழு முதற் கடவுளாகிய சிவபிரானை முன்கூறிப் பின்புதான் தொல்காப்பியர் தெய்வக் கருவாகக் கூறிய திருமாலையும், சண்முகனரையும் கூறியிருக்கிறது.

பரிமேலழகர் தமிழ்நாட்டு வேந்தர்களாகிய சேர சோழ பாண்டியர்களை 'படைப்புக் காலந்தொட்டு மேம்பட்டுவந்த குடிகள்'' என்கிறார். இம்மூவேந்தர்களுக்குங் குலதெய்வம் சிவபெருமானே! இதனைக் கடைச்சங்க நூல்களால் அறியலாம். இளங்கோவடிகள், அவர் தமையனுன சேரன் செங்குட்டுவனை "செஞ்சடைவானவன் அருளினில் விளங்க, வஞ்சித் தோன்றிய வானவ'' என அவன் சிவபிரான் திருவருளால் பிறந்தான் என்கிறார். காரிகிழார் என்ற புலவர் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைப் பார்த்து,

''பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே''

என்கிறார். சோழன் கரிகாற் பெருவளத்தான் தன் பகைவர் உரிமைப் பெண்களைக்கொண்டு பொதியிலின்கண் இருந்த சிவலிங்கப் பெருமானுக்குப் பணிவிடை செய்யும்படி ஏற்படுத்தியிருக்கிறான் என்று பட்டினப்பாலை கூறுகிறது.

பரத சாஸ்திரம் ஒரு பொது நூல். அது சமய நூலன்று. அந்நூலுடையார் "இந்திரன், பிரமன், விட்டுணு வென்னும் தேவருக்கு, முறையே வச்சிரம், கமலம், சங்கமென்னும் முத்திரைகளானும், சிவபிரானுக்குச் சிரசில் அஞ்சலி முத்திரையானும் அவிநயம் கூறியது'' சிவபிரானது முதன்மையைக் காட்டுகிறது.

இவைகளால், நெடுங்காலமாக நம் பாரதநாடு சிவனையே முழுமுதற் கடவுளாகக்கொண்டு வழிபட்டு வந்திருக்கிறது என்ற உண்மையை நாம் அறியலாம். சிவன் தேவ தேவன். அவனை வணங்காத தேவர் யாருமில்லை அவனால் வணங்கப்படுவாரும் யாரும் இல்லை. அதனால் அப்பெருமானை ஒரு பெரியார்,

"சேர்ந்தறியாக் கையானை'' என்றார்.

தமிழர் மாவீரர்கள். போர் என்ற பேரைக் கேட்டாலே அவர்கள் தோள் மலைபோலப் பூரித்துவிடு மென்று கவிச் சக்கர வர்த்தி கம்பர் கூறுகிறார். வடநாடு முழுதும் 'தொண்டு மொழிந்த தொழில் கேட்கும்படி' செய்த அசோகச் சக்கரவர்த்திகூடத் தமிழ் நாட்டில் காலெடுத்துவைக்கவில்லை. கூதிர்ப்பருவத்திலே தமிழர் போருக்குச் செல்வார்களாகையால் அதற்கு முன் கார்ப்பருவத்தின் முடிவில் நவராத்திரி விழா அவர்களால் கொண்டாடப்பட்டிருக்கிறது. தங்களுக்கு வெற்றி வேண்டுமென்று அவர்கள் இவ்விழாவைக் கொண்டாடி இருக்கிறார்கள். வெற்றிக்கு வீரம்வேண்டும். அதற்கு, வீரத்துக்குரிய தெய்வமாகிய துர்க்கையை அவர்கள் வழிபட்டார்கள். இனி அவ்வெற்றிக்கு வீரம்மட்டும் போதுமா? செல்வமும் வேண்டும். அதற்காக அவர்கள் இலக்குமியையும் கூட வணங்கியிருக்கிறார்கள். இன்னும் வீரமும் செல்வமும் இருந்தாலும் அறிவு ஒன்று இல்லையானால் அவை பேடி கைவாள்களே! அதற்காக அவர்கள், அறிவுத் தெய்வமாகிய சிந்தாதேவி—சரச்சுவதியையும் வழிபட்டார்கள். இம்மூவருக்கும் அமைந்த திருவிழாவே நவராத்திரி விழா. சரச்சுவதியம்மைக்கு ஏடுகள். வீரத் தெய்வத்துக்கு மடக்காவது, சூரியாவது வைக்கப்படுகின்றன. செல்வத் தெய்வமாகிய இலக்குமிக்கு விம்பத்தின் மேல் பொன்னுபரணம் அணியப்படுகிறது. இவ்விதம் சாஸ்வதி பூசையன்று அறிவுத் தெய்வமாகிய சரச்சுவதி, வீரத்தெய்வமாகிய துர்க்கை செல்வத் தெய்வமாகிய இலக்குமி என்ற மூவரையும்தான் நம்மவர் வழிபடுகிறார்கள், நாமும் அம்மூவரையும் வணங்கி வாழ்வோமாக.

---

## தமிழர் சமயம்

[உயர்திரு. சுத்தானந்த பாரதியார்]

தமிழர் அருட் சமயத்தின் பிழிசாறு இதுவே:—

உள்ளம் சிற்சபை, தகர நிலயம். அதில் ஒரு இன்பக்கனல் "தான் தான்" என எழுந்தாடுகிறது; இதை அருளறிஞராய யோகியர் உள்ளுறவால் உணர்வர். அதுவே தீவண்ணச் சிவம். அது எல்லா மாந்தருக்கும் பொது. அச்சிவம் (இன்பம், அமுது) எம்மதமும் சம்மதமாய், எல்லாச் சமய ஆறுகளும் புகும் எல்லையற்ற கடலாய் உள்ளது. அது உண்மையறிவின்பக் கடல்; சமய நெறிகளெல்லாம் அதினெழுந்து வீசும் அலைகளே. அது இயல்பென்றுந் திரியாது, குணங்குறியறத் தன்னை அருட்

புலவரின் உள்ளத்திற் கொடுத்துக் காட்டும் பரம்பரம் பராபரம், மௌனப் பரவெளி. அது தனது அருளால் எல்லாம் தானாகியும் எதிலும் தாக்கற்ற தனிமுதல். கதிரவன் (கதிர் + அவன்) தான் நின்ற நிலையிலிருந்து தனது கதிர்களால் எங்கும் நிறைந்தொளிர் கிறான். சிவம் நிலைபெருமான்; தனது ஆணையான அருளால் எங்கும் நிறைந்து எல்லாந் தானானது. கதிரவன் எழுந்ததும் உலகம் விழித்து வினைபுரிகிறது; அதுபோலவே பரசிவன் சந்நிதிக்கே ஐந்தொழிலும் ஆம். சைவசமயம் உலகைச் சிவாலயமாகவும், சிவனை உயிர் மேனியனாகவும், உயிர்களை நடமாடுங் கோயில்களாகவும் காண்கிறது. புறச்சமயங்களனைத்திற்கும் இதில் இடமுள்ளது. எல்லா ஆறுகளுக்கும் கடலில் இடமிருப்பதுபோல இந்த இயற்கை நெறி பல வியல்பான மாந்தர்க்கு, அவரவர் அறிவு வளர்ச்சிக்கேற்ப (Evolution of consciousness) தநுகரண புவன போகாதிகளை நுகரும் உடல்வாழ்வு முதல் "ஈறிலாப்பதங்கள் யாவையுங் கடந்த இன்ப"மான சுத்த சிவ நிலை மட்டும் இடங்கொடுத்து படிப்படியாக உயர்ந்து செல்கிறது. மக்களை ஒரு குலமாக்கி, உலகைச் சிற்சபையாக்கி, அதில் ஒரு இன்பப் பொருளின் அறிவுப் பொது நடத்தை விளக்கி உலகெலாம் உணர்ந்து உவந்து சேர்ந்து வாழத்தக்கது சிவமதம்.

தில்லைச் சிவனார் திருவிளை யாட்டிற் செழித்தது சைவமதம்
தேவ ரமுதினுந் தித்திக்குஞ் செந்தமிழ்ச் செல்வியின் சைவமதம்
இல்லை யென்பாருள்ளுந் தானென் றிதயத் திருப்பது சைவமதம்
எம்மத வுண்மைக்குஞ் சம்மதமான வியல்மதஞ் சைவமதம்
இல்லறத் திற்செய்ய நல்லற மேன்மை யிணைத்தது சைவமதம்
இப்புலைக் கூட்டையுந் துப்புர வாக வியற்றிடுஞ் சைவமதம்
எல்லா வுயிரு மிறைவ னுடலென் றிசைப்பது சைவமதம்
இவ்வுல கிற்கெல்லா மோவ்விய வோர்மத மீடறு சைவமதம்.

இத்தகைய பொது நெறியை அருள் வழியை உலகெலாம் பரப்புவதற்குத் தக்க சாஸ்திர அறிவும், அருள்வளமும் கொண்ட புலவர்கள் செல்லவேண்டும். முதலில் இந்தப் பொது நெறியைத் தமிழரனைவரும் தழுவவேண்டும். ஐரோப்பா முழுதும் கிறிஸ்து சமயத்தைத் தழுவியிருப்பது போலத் தமிழரனைவரும் இவ்வருட் சமயத்தை தழுவி உள்ளத்தில் இன்பக் கடவுளுணர்வுடன் உலகையெல்லாம் சிற்சபையெனவும், மக்களையெல்லாம் நடமாடுங் கோயில்களெனவுங் கருதியொன்று படுக. இச்சமய வொற்றுமையே நமது முன்னேற்றத்தின் வேர்.

---

# இலக்கணமும் இலக்கியமும்:
# LANGUAGE AND LITERATURE

## இந்தியாவும் சாவகமும்

[திரு. S. நடராஜன், B. A.]

"சீனமிசிரம் யவனரகம்—இன்னும்
தேசம் பலவும் புகழ்வீசிக்—கலை
ஞானம் படைத்தொழில் வாணிப மும்மிக
நன்று வளர்த்த தமிழ்நாடு."
"சிங்களம் புட்பகம் சாவக—மாதிய
தீவு பலவினுஞ் சென்றேறி—அங்கு
தங்கள் புலிக்கொடி மீன்கொடியும் நின்று
சால்புறக் கண்டவர் தாய்நாடு."

—பாரதி.

முன்னுரை

1. கிழக்கிந்தியத் தீவுக் கூட்டங்களில் ஒன்றான சாவகத்தில் இந்தியக் கலைகளும் நாகரிகமும் இற்றைவரைப் பொலிவுடன் மிளிருகின்றன. இக்காரணம் பற்றி இத்தீவை "இந்தியத்தீவு"(Island India) என வழங்குகின்றனர். இத்தீவில் கலிங்கம் என நாட்டுப் பெயரும், மதுரை, சுமேரு என நகர்ப் பெயர்களும், சரயு, வாசுகி என நதிப்பெயர்களும் நம் நாட்டுப்பெயரை ஒட்டி வழங்கப்பெறுதல் நோக்கற்பாலதாம். இராமாயண, மாபாரதப் பெருங்கதைகள் இந்தியாவி லிருந்து வெகு காலத்திற்கு முன்னரே சாவகத்தில் பரவி இன்றுவரை அங்கு நிலவி வருகின்றன. வான்மீகியார் இராமாயணம் தொகுப்பதற்கு முன்னரே இப் பெருங்கதை சாவகத்தில் பரவி யிருந்ததாம்*. இவ்விரு பெருங் கதைகளும் தங்கள் நாட்டில் நடைபெற்றன வென சாவகத்து மக்கள் நம்புகின்றனர். சாவகத்தின் சிற்பக்கலையும் நம் நாட்டினதேயாம்.

பண்டைச் சாவகம்

2. சாவகம் சுமித்திரா முதலிய தீவுகள் குமரிக்கண்டத்தின் (Gondwana continent) ஒரு பகுதியே. இக்குமரிக் கண்டம் தென் அமெரிக்காவி லிருந்து தென் அட்லாண்டிக் மாகடல், தென் ஆஃப்ரிக்கா, இந்திய மாகடல், தென்னிந்தியா, ஆய நிலநீர்ப் பகுதிகளைத் தன்னுட்கொண்டு திகழ்ந்தது. பின்னர் நிகழ்ந்த

* It is believed by some scholars that the version of Ramayana which reached Java was earlier than the version of Valmiki.

O. C. GANGOLY,
*The Art of Java.*

கடற் கோட்களால் இவை தமிழ் நாட்டினின்றும் பிரிக்கப்பட்டுத் தீவுகளாய் மாறிவிட்டன. தொல்லுயிர் நூலாரும் (Anthropologists) நில நூலாரும் (Geologists) சாவகம் சாலவும் பழைய நிலப்பரப்பென்று ஒருமுகமாய்க் கூறுகின்றனர்.

3. வரலாற்றுக் காலவரையறைக்குட்பட்ட காலத்திலும் தமிழர் சாவகத்தில் வதிந்து வந்தனர். பண்டை ஞான்று தமிழர் வாழ்ந்துவந்த நாட்டில் பின்னர் ஆரியர் நுழைந்தனர். அவர்கட்குப் பின்னர் மகம்மதியர் சென்றனர். பின்னர் ஐரோப்பியர் அந்நாட்டு மன்னராயினர். கடற் கோட்குப் பிற்பட்ட வரலாற்றை, (1) இந்து பௌத்தர் காலம் (2) மகம்மதியர் காலம் (3) ஐரோப்பியர் காலம் என மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம். ஈண்டு, இந்து பௌத்தர் காலத்து வரலாற்றை ஆராய்வாம். இஃது 15-ம் நூற்றாண்டின் இறுதிவரைச் செல்கிறது.

வரலாற்றுக் காலச் சாவகம்

### இந்து பௌத்தர் காலம்

பிற கீழை நாடுகளைப்போல் சாவகத்திற்கும் வரையறுத்துத் தொகுக்கப்பட்ட வரலாறு கிடையாது. அஃது பண்டைய நூல்களி லிருந்தும், கல்வெட்டுக்களி லிருந்தும் இஞ்ஞான்று ஆராயப்பட்டு வருகிறது. சாவகத்தில் வழங்கும் மொழி காவி யெனப்படும். இதில் வடமொழியும், தமிழும் விரவியிருக்கின்றன. காவியில் வழங்கும் பாரதன் (Pararaton) நாகரக்கிருதகமா (Nagarakrtagama) என்னும் இரு பெருங் கதைகளும்; இத் தேசத்து வரலாறுகளும் இலக்கியங்களும்; சீனதேசத்து வரலாறுகளும் இலக்கியங்களும்; கிரேக்க அரேபியநாட்டு இலக்கியங்களும்; சாவகம், சுமத்திரா, மலாக்காமுதலிய நாடுகளில் கிடைக்கும் கல்வெட்டுக்களும் சாவக வரலாற்றை ஆராய்ந்து தொகுக்க ஏதுவாகின்றன. வங்கத்தின் தலைநகராய கல்கத்தாவில் இந்தியக் கலையும் நாகரிகமும் பிறநாடுகளில் பரவி இருந்தமையை ஆராயும் நோக்கத்துடன் சிலஅன்பர்கள் ஸர். பி. சி. ரே. (Sir P. C. Ray) அவர்களைத் தலைவராக்கொண்டு "மாபெரும் இந்தியக் கழகம்" (Greater India Society) என ஒன்று நிறுவிப் பணியாற்றி வருகின்றனர். பொதுவாக உலகின் பண்டை வரலாற்றையும், சிறப்பாக இந்திய நாட்டின் வரலாற்றையும் நன்குணரத் தமிழ்மொழிஅறிவு சாலவும் வேண்டற்பாலது. உலகில் நாகரிகத்திற்கு வித்திட்ட இப்பழந் தமிழின் சிறப்புணரார் எங்ஙனம் உலக வரலாற்றை ஆராய்ந்து மறுக்கொணா முறையில் தொகுக்கக் கூடும்? தமிழரும் தமிழ் அன்பர்களும் இக் கழகத்தில் உரிய பங்கு எடுத்துக்கொள்ளுதல் விரும்பத்தக்கதாம்.

சான்றுகள்

விந்தியமலையை முதன்முதற் கடந்து தமிழகம் போந்த அகத்தியர் சாவகத்திற்கும் சென்றதாகத் தெரிகிறது. இவர் அந்நாட்டில் சைவத்தைப் பரப்பினர். முதல் கோவில் அந்நாட்டில் இவரால் கட்டப்பட்டது. சைவத்தை பரப்பிய இம் முனிவரைப் பிற்காலத்தில் சாவகத்து மக்கள் கடவுளாக வணங்கத் தொடங்கிவிட்டனர். அகத்தியர் வணக்கம் சாவகத்தில் இன்றும் வழக்கில் இருந்து வருகின்றது. அகத்தியரைச் சிவகுரு எனவும், சிவபௌத்தர் எனவும், பத்திரகுரு எனவும் கொண்டாடுகின்றனர். கி. பி. 760-ம் ஆண்டில் செதுக்கப்பட்ட கல்வெட்டு ஒன்று, கஜாயனன் என்ற அரசன் தன்முன்னோர்கள் தேவதாரு மரத்தில் செய்து வணங்கிவந்த அகத்தியர் சிலைபோன்றதொன்றைக் கருங் கல்லில் செய்ததாகக் கூறுகின்றது*.

அகத்தியர்

சுக்கிரீவன் நாற்றிசைக்கும் சீதாதேவியைத்தேடி வரும்படி அனுப்பிய ஒற்றர்கட்குச் சாவகத்தைப்பற்றி, உளங்களிக்கும் பசுங் கதிர்கள் நிறைந்ததும், தங்கக்கனிகள் (Gold mines) உள்ளதுமான நாடு எனச் சிறப்பித்துக் கூறுவதை இராமாயணத்துக் காண்கிறோம்.

இராமாயணம்

அலெக்ஸாந்திரியா நகரின் வானநூல் அறிஞராய தாலமி (Ptolemy) என்பார் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் (கி.பி. 130) இயற்றிய தம் நிலநூலில் (Geography) சாவகத்தீவை யவத்தீவு எனவும் கழனிசூழ்நாடெனவும் எழுதியுள்ளார்.

தாலமி

சீன தேசத்து வரலாறாகிய ஹியூ ஹான் சௌ (Heou han chou) என்பதில் ஏறக்குறைய கி. பி. 132-ல் தேவவர்மன் என்னும் சாவகத்து இந்து அரசன் ஒரு தூதுக் கூட்டத்தை சீன தேசத்துக்கு அனுப்பியதாயும், சீன அரசர் தேவவர்மனுக்குப் பரிசாக தங்க இலச்சினை யொன்றும் ஊதா நிறமுள்ள பட்டு நாடா ஒன்றும் அளித்ததாகவும் கூறப்பட்டிருக்கிறது.

ஹியூ ஹான் சௌ

சாகவத்தைப் பற்றிக் கூறக்கூடிய மிகப்பழைய கல் வெட்டு ஒன்று கீழ்ப்போர்னியாவில் கிடைத்துளது. இதன் காலம் 4-ம்

---

* Another Shaiva Inscription discovered at Dinaya in Eastern Java dated 682 Shaka (760 A. D.) describes the construction of a black stone image of Agastya Rishi. "In order to get rain this image of Agastya Kumbhayoni was consecrated in *Kumbha-lagna* by the strongminded King in the fine *Maharshi-bhavana*."

DR. B. R. CHATTERJEE,
*India and Java*.

கல்வெட்டுக்கள்

நூற்றுண்டு. இக்கல்வெட்டின் எழுத்து பல்லவர் எழுத்துப்போற் காண்கிறது.* இக்கல் வெட்டில் அஸ்வவர்மன் என்ற ஒரு வல்லரசர் பெயரும் அவர் மகனுரான மூலவர்மன் என்பார் பெயரும் காணப்படுகிறது. மேற்குச் சாவகத்தில் அகப்பட்ட ஒரு கல் வெட்டில் பூர்ணவர்மன் என்னும் அரசனைப்பற்றிக் கூறுகிறது. இக்கல் வெட்டும் பல்லவர் எழுத்தாலேயே செதுக்கப்பட்டிருக்கிறது. இதன் காலம் 5-ம் நூற்றுண்டு†. நடுச்சாவகத்தில் கிடைத்துள்ள ஒரு கல்வெட்டின் எழுத்தும் பல்லவர் எழுத்தாகவே இருக்கிறது. இதன் காலம் கி. பி. 732. கீழைச் சாவகத்தில் கிடைத்துள்ள கி. பி. 760ம் ஆண்டுக் கல்வெட்டும், ஆண்டுகளின் கல்வெட்டுகளும் சாவகத்தின் வரலாற்றை ஆராயத் துணைபுரிகின்றன.

8-ம் நூற்றுண்டு வரை சாவகத்தில் இந்துசமயம் தனியே இருந்துவந்தது. பின்னர் பௌத்தம் தலைதூக்கிற்று. ஏறக்குறைய கி. பி. 80ல் அஜிசாக என்பவரின் தலைமையில் ஒரு குழுவினர் கூர்ச்சரத்திலிருந்து சாவகத்தில் குடியேறினர். ஆனுல் பெருந்திரளான மக்கள் தென்னிந்தியாவிலிருந்தும் சென்று குடியேறிப் பல்வளம் பெருக்கினர். இவர்களின் சமயம் ‡சைவமாம். மணிமேகலையில், சாவகத்தில் நாகபுரத்தை தலைநகராக் கொண்டு பூமிச்சந்திரன், புண்ணியர்ாசன் என்ற அரசர்கள் அரசாண்டமை கூறப்படுகிறது. நாகபுரம் என்பது நாகர்கள் வாழ்ந்து வந்தமையால் ஏற்பட்ட பெயர் போலும். இந்நாகபுரம் மேற்குச்சாவகத்தில் இருந்திருத்தல்கூடும். சாவகத்திற்கே நாக நாடு என ஒரு பெயர் உண்டு என ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

---

* "Now if the character used in western Java inscriptions be compared with that of the Vengi and Pallava inscriptions, it will at once be seen that it is nearest to the last For these reasons it appears that the source of the primitive Hindu civilization in Java must be sought for in the North Tamil coast rather than in Kalinga proper." Dr. Burnell's **Elements** quoated by O. C GANGOLY,

*The art of Java.*

† The Script is the same which later on became known as Pallava grantha and which is found in early Borneo.

‡ The largest streams of immigrants flowed from the eastern Coast of India. Broadly speaking the culture of Java between the 4th to 12th centuries is chiefly related to that of Southern India and the Hinduism of Java is mainly though not chiefly Saivaite

O. C. GANGOLY,
*The Art of Java.*

5,6-ம் நூற்றாண்டுகளில் மேற்குச் சாவகமும், 7,8,9 நூற்றாண்டுகளில் நடுச்சாவகமும் 10,11,12,13,14-ம் நூற்றாண்டுகளில் கீழைச்சாவகமும் வலிமை பெற்று வல்லரசுகளால் ஏனைய அக்கம் பக்கத்து நாடுகளை வென்று தம்முள்ளடக்கி ஆண்டு வந்தன. முறையே மேற்குச் சாவக, நடுச்சாவக, கீழைச்சாவக வரலாற்றை ஆராய்வாம்.

(தொடரும்)

---

## குறுந்தொகை
## மூலமும் விளக்க உரையும்

[இலங்தையடிகள் வித்துவான் இரா. சிவ. சாம்பசிவன்]

(பதிப்புரிமை ஆசிரியர்க்கே)

(முன் சருஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

14. "குன்றியேய்க்கு முடுக்கை"—"குன்றியுங் கோபமுமொன்றிய வுடுக்கை"

(தோல் பொருள்-உவமவியல்-மேற்கோள்-பக் 103)

செந்நிறத்தைக் குறித்தற்கு, "கோபத்தன்ன தோயாப் பூந்துகில்" என்றதும் ஈண்டு அறிதற்பாலது.

15. "சேவலங் கொடியோன்"
"புகரில் சேவலங்கொடியேன்"—(முருகு—39)

16. "கோழி ஓங்கிய வென்றடு விறற்கொடி"
—(முருகு 210-211,

17. "சேவற் கொடியுடையானே"

18. "சேவற்பதாகை", "கோழிக் கோழிக் கொடியன்"
—(கந்தரலங்காரம்)

19. "கட்டுடைச் சூருடல் காமங் கொண்டு
பற்றியுட் புகுந்து பசுங்கடல் கண்டு
மாவொடுங் கொன்ற மணிநெடுந் திருவேல்
சேவலங் கொடியன்" —(கல்லாடம்-10).

20. "கூரரிவாளின் ரேகையஞ் சேவற்கொடியோன்"
—(கல்லாடம்-90)

21. "சேவலங் கொடிச் சேவகன்"
—(திருமல்லைவாயிற் புராணம் நாட்டுப் ப-35)

சேவல்:—இது கோழிச் சேவலைக் குறிக்கும்; அது முருகன் கொடியின்கண் விளங்குவதாகலின். அதனை, "கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி"—(முருகு-38) என்பதால் அறிக.

"கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்"
—(சிலப்பதிகாரம் 14:7-10) என்பதும் காண்க.

இனிச் சேவல் என்பது ஆண் மயிலுமாம். என்னை ?
"பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ"
—(முருகு 122) என்பதனாலும்,
"மணிமயி லுயரிய மாறா வென்றிப்
பிணிமுக வூர்தி யொண்சே யோனும்"—(புறநானூறு 56-8)
"மணிநிற மஞ்ஞை யோங்கிய புட்கொடி
பிணிமுக மூர்ந்த வெல்போர் இறைவ" (பரிபா-17:48-9)

"பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய
வொடியா விழவி னெடியோன்"—அகநானூறு-149:15-6)
"பிணிமுச மஞ்ஞை செருமுகத் தேந்திய
மூவிரு திருமுகத் தொருவே லவற்கு"—(கல்-7)

என்பனவற்றாலும் அறியலாகும்.
"சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணும்
மாயிருந் தூவி மயிலலங் கடையே"
—(தோல். பொருள்-மரபியல்-48 சூ)

என்பதனால் தோகையோடு கூடி மென்மைத் தன்மைத்தாய்ப் பெண் தன்மை கொண்ட மயிலிடத்துச் சேவற் பெயர்க்கொடை சேராதெனின், வேலன் கொடியில் வீறுபெற்று விளங்கிப் போர்முகத்து நின்று ஆண் தன்மை மிக்க மயிலிடம் சேரற்கு இழுக்கில்லை. என்னை?
"செவ்வே லூர்ந்த மயிற்காயின் அதுவும் நேரவும் படும்" என்று அச்சூத்திரத்தின் இறுதியில் உரை கூறிக்கிடத்தலால் என்க. மற்றும் ஊர்தியும் கொடியும் ஒன்றாகவே திருமாலும், சிவபிரானும் கொண்டிருத்தலும் கருதத்தக்கது. இதனை,
"ஊர்தி வால்வெள் ளேறே சிறக்கெழு
கொடியு மவ்வே றென்ப"—(புறம். கடவுள்-வாழ்த்து)

என்பதாலும் அறிக.
"நெஞ்சு பக."—நெஞ்சு-நடுவிடம். இதனைக், "குன்றின் நெஞ்சு பக எறிந்த அம்சுடர் நெடுவேல்" என்புழிப்போல நெஞ்சு என்பது ஈண்டும் அகப்பொருட்டாய் நின்றது" —(திருக்குறள் 1250 உரை)

"விஞ்சையம் பெருவரை நெஞ்சகம் பிளந்து"
—(பெருங்கதை 1: 51.8)

பக=பிளக்க.
"மணி திகழ் விறன்மலை வெம்ப மண்பக" —(கலி. 20-5)
(மண்பிளக்க—நச்சினார்க்கினியர் உரை)
"புலம்பு வீற்றிருந்த நிலம்பகு வெம்சுரம்" (அகம் 335-8)

"வான நிலம்பக வறந்த புலம்புறு சேணிடை"
—(தமிழ்நெறிமேற்கோள்)
"நிலம்பக வெம்பிய நீள்சுரம்" —(வளையாபதி)

துன்றின் நெஞ்சுபக எறிந்த அம்சுடர் நெடுவேல்:—

"சொன்ன க்ரௌஞ்ச கிரி யூடுருவத் துளைத்த வைவேல்"
—(கந்தாலங்காரம்)

"குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ"(முருகு-266-7)

"பார்முதிர் பனிக்கடல் கலங்க வுள்புக்குச்
சூர்முத றடிந்த சுடரிலை நெடுவேல்"　—(முருகு 45-46)

"பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச்
சேயுயர் பிணிமுக மூர்ந்தம ருழக்கித்
தீயழ றுவைப்பத் திரியவிட் டெறிந்து
நோயுடை நுடங்குசீர் மாமுத றடிந்து
வென்றியின் மக்களுள் ஒருமையொடு பெயரிய
கொன்றுண லஞ்சாக் கொடுவினை கொஃறகை
மாய வவுணர் மருங்கறத் தபுத்த
வேல்"　—(பரிபாடல். 5-17)

"குருகுபெயர்க் குன்றத் துடல்பக வெறிந்த
நெடுவேற் கடவுண் மயிற்கொடி"—(கல்லாடம். 25)

"கடன்மாக் கொன்ற தீப்படர் நெடுவேல்"　(கல். 43)

"ஆற்றல்செய், விண்ணகம் புடைத்து நெடுவரை கரக்கும்
கொடுஞ்சூர் கொன்ற கூரிய நெடுவேல்"　(கல். 87)

"மாவொடுங் கொன்ற மணிநெடுந் திருவேல்"　(கல். 11)

"மாவெனக் கவிழ்ந்த, களவுடல் பிளந்த வொளிகெழு
திருவேற் பணிப்பகை யூர்தி"　—(கல்லாடம். 61)

"அடன்மாக் கொன்ற நெடுவேற் குமரன்"

"சூர்நிரந்து சுற்றிய மாதபுத்த வேலோய்" (பரிபாடல். 18)

"மாமுதல் தடிந்த மறுவில் கொற்றத்
"தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்"—(முருகு. 60-1)

"மாகடல் கலக்குற மாகொன்ற மடங்காப்போர்
வேல்வல்லா னிறனே போல்"　(கலித்தொகை. 104)

"அறுமுக னொருவனோர் பெறுமுறை யின்றியு
மிறுமுறை காணு மியல்பினி னன்றே
யஞ்சுடர் நெடுவே லொன்றுநின் முகத்துச்
செங்கடை மழைக்க ணிரண்டா வீத்தது"
—(சிலப்பதிகாரம்-2: 49-52)

"மேல்சுடற் கவிழ்முகப் பொரியுடன் மாவு
நெடுங்கடற் பரப்பு மடுந்தொழி லரக்கரு
மென்னுளத் திருளு மிடைபுகுந் துடைத்த
மந்திரத் திருவேன் மறங்கெழு மயிலோன்"　(கல். 73)

என்பனவற்றால் முருகன் குன்றங்கொன்றதும், மாமுதல் தடிந்ததும், வேலின் பெருமையும் விளங்கவைத்தமை யறிதற்பாலது.

தாமரைச் சேவடி, பவளத் திகழொளி, குன்றியேய்க்கு முடுக்கை என்பன மூன்றும் பண்புவமம் முதலது சினையொடு சினையும், மற்றவை முதலொடு முதலும், சினையொடு முதலுமாய் வந்தன.

எய்தின்றல் - எய்தியது. ஆல்-அசை

"கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே" —(குறள். 1240)

"இருபாற் பட்ட வொருசிறப் பின்று"

—தோல்-பொருள்-புறத்திணை - 16)

என்று வருவனபோல் கொள்க.

"உலகு, சேவலங்கொடியோன் காப்ப ஏமம் வைகல் எய்தின்று" என முடிக்க.

மெய்ப்பாடு:—பிற பொருளின்கண் தோன்றிய ஆக்கம்பற்றிய வியப்பு. என்னை?

"புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு
மதிமை சாலா மருட்கை நான்கே"

—(தோல்-பொருள்-மெய்ப்பாட்டியல். 7)

என்பாராகலின்.

கடவுள் வாழ்த்து முற்றும்

## நூல்

### 1. குறிஞ்சி

தலைவன், தலைவிக்குக் கையுறையாகக் கொண்டுவந்த மலரைத் தோழி எற்காது மறுத்தது.

திப்புத் தோளார் பாடியது

1. செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பின் செங்கோட் டியானைக்
கழறொடிச் சேஎய் குன்றங்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே.

என்பது தோழி கையுறை மறுத்தது.

இயற்கைப் புணர்ச்சி பெற்ற தலைமகன், தோழியின் வாயிலாகத் தலைமகளின் கூட்டத்தைப் பின்னும் பெறக்கருதித் தான் குறையுற்றிருப்பது தோன்ற, "நும்மால் அருளத் தக்காரை அலையாதே இத் தழை பெற்றுக்கொண்டு என் குறை முடிப்பீர்" எனத் தழையைக் கையுறையாகக் கொண்டு வந்தானாக; தோழி தலைவனை நோக்கி, 'இம்மலையில் இத்தழை யரிது; ஆதலால் பிறர் இதனைக் காணின் ஐயுறுவர்; ஆதலின் யாம் இதனை எற்றுக்கொள்ளோம்" என்று அக் கையுறையை எற்காது மறுத்துக் கூறியது இச் செய்யுள் எனவும்

கூறுவர். பின்னும் வேறாகவும் கூறுவர். அதனை மேற்கோள் விளக்கத்திற் காண்க.

கையுறை—அன்பு பாராட்டிக் கையிற் கொடுக்கும் பொருள்.

செம் களம் பட=போர்க்களம் பகைவரின் இரத்தம் படிதலால் செந்நிறக் களம் ஆகும்படி, அவுணர் கொன்று தேய்த்த=அசுரர்களைக் கொன்று முற்றிலும் ஒழித்த, செம்கோல் அம்பின்=செங்கோலைப் போன்ற அம்பினையும், செம்கோடு யானை=(இரத்தம் தோய்ந்து) செவ்விய தந்தங்களையு முடைய (பிணிமுகம் என்னும் பெயரினை யுடைய) யானையையுமுடைய, கழல் தொடி=வீரக்கழலையும் வீர வாகுவளையத்தையு முடைய, சேஎய் குன்றம்=முருகக் கடவுளைத் தெய்வமாக கொண்ட எமது மலை, குருதிப் பூவின் குலை=இரத்தம்போற் சிவந்த மலர்க் கொத்துக்களைக்கொண்ட, காந்தட்டு=காந்தளை யுடையது.

படுதல்—அழிதல். செங்களம்—செழிய போர்க்களமுமாம்; செம்மை, செழுமையை யுணர்த்திற்று; பண்புத்தொகை அன்மொழி. அம்பின்—இன் ஐந்தன் உருபு, ஒப்புப் பொருளது. கோடு + யானை = கோட்டியானை; நெடிற்றொடர்க் குற்றியலுகர மாதலின் இரட்டித்தது; இகரம் - குற்றியலிகரம்; ''யகரம் வரக் குறளு திரி யிகரமும், அசைச் சொன் மியாவினிகரமுங்குறிய'' என்பாராதலின்.

கழல் தொடி= கழலும் தொடியும் எனில் உம்மைத்தொகை; கழல் தொடி—வினைத்தொகையுமாம். சேஎய்—உயிரளபெடை. சேய்—முருகன். சேஎய்—உவமவாகுபெய ராய்த் தலைவனைக் குறிப்பின் அண்மைவிளி என்க. குருதிப் பூ—உவமத்தொகை. காந்தட்டு—காந்தளையுடையது; குறிப்பு வினைமுற்று; குறுந்தாட்டு என்றாற்போல.

## மேற்கோள் விளக்கம்

1. செங்களம்'—''செங்களம் தழவுவோள்'' —(புறம் 278-7)
2. ''செங்களம்பட...காந்தட்டே'' தொல்.-செய் 518சூ.பக். 509)
3. ''செங்களம்பட ........காந்தட்டே''—இது தோழி தலைவியை இடத்துய்த்து நீங்கியது. —(தொல்—களவு-பக்கம் 515)
4. ''செங்களம்பட.........காந்தட்டே''—''இஃது அளவடியானும் அகவலோசையானும் வந்த நேரிசை ஆசிரியப்பா. (யா. காரிகை. 66 பக்)
5. ''குருதிப் பூவின்''—''தோடார் தோன்றி குருதி பூப்ப'' —(முல்லை 96)
6. ''இச் செய்யுள் பாங்கி தலைமகளைக் குறியிடத்து வைத்து நீங்கல்'' என்பதற்கு மேற்கோள். —(நம்பியகப் பொருள்-ச-பதிப்பு)
7. ''குருதிப் பூவின் குலைக்காந்தட்டே''—''காந்தட் குருதி யொண்பூ'' —(நற்—34)
8. ''செங்களம்பட.......காந்தட்டே'' —(இறை- —பக். 140)

அவுணர்—தேவர்களுக்குப் பகைவராய் ஊறு செய்யும் ஓர் வகை மரபினர்.

தேய்த்த என்பது அம்பிற்கே யன்றி உவமையாகவந்த முருகற்கும் அடை மொழியாகும். அஞ்சிப் புறங்கொடுத்தார்மேற் செல்லாமையையும்

அடைக்கலம் புகுந்தாரைக் காத்தலையும் கருதிச் செங்கோலம்பு எனப்பட்டது. பகைவரத் தப்பாது குத்துவதாலும் குருதி தோயப் பெறுதலினாலும் செங்கோலம்பு எனப்பட்டது மாகும்.

முருகப்பெருமான் ஊர்ந்து செல்லும் யானைக்குப் பிணிமுகம் என்று பெயர். இதனை, "ஓடாப்பூட்கை பிணிமுகம் வாழ்த்தி"—(முருகு 247).

"சேயுயர் பிணிமுக மூர்ந்தமருழக்கி" —(பரிபாடல் 5)

"பிணிமுக வூர்தியொண் சேயோனும்"—(புறம் 56—8)

என வருவனவற்றாலறிக.

கழல்—வீரர் காலில் அணியும் வீரக்கழல். தொடி—வீரர் கையிலணியும் வாகுவளையம். கழல் தொடி என்பது முக்காலத்திற்கும் பொதுவாக வந்த வினைத் தொகையுமாம்.

"களம் படக் கடந்த கழறொடித் தடக்கை" —(புறம் 612)

"கழறொடி யாஅய் மழைதவழ் பொதியில்" —(புறம் 128 5)

சேய், அன்னாய் என்னாது சேஎய் என்றே விளித்தது வள்ளியைக் கள்ளத்தில் கலக்க எண்ணி உள்ளங்கொண்ட முருகனது முயற்சி போன்றதே நினது முயற்சியும் என்ற குறிப்புப் பொருள் உணர்த்தியவாறு.

குருதிப்பூ—உவமத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. 'அம்பின்' 'பூவின்'—இவற்றில் "இன்" சாரியைகள் என்பதூஉம் கொள்க.

"குன்றம் குருதிப் பூவின் குலைக் காந்தட்டு" என்றதனால், தலைமகன் செங்காந்தட் பூவைக் கையுறையாகக் கொண்டு வந்தானாக, தோழி, "இம்மலை யிடத்து இது அருமை யுடைய தன்று" என மறுத்ததுமாம். எனவே, "எளிய இதனை ஏலேம்" என்பது குறிப்பு.

"சொல்லொடுங் குறிப்பொடு முடிவு கொளியற்கை
புல்லிய கிளவி எச்ச மாகும்" —(தொல்—பொருள்-செய்-பக்.207)

'சேஎய குன்றம்'—என்பது பிரதிபாடம்.

'சேஎய குன்றப்' என்ற பாடங்கொண்டு, "கழலவிடப்பட்ட தொடியினை யுடைய முருகனை அன்னனது குன்றத்து" என உரை கூறித் தோழி, தலைவி செங்காந்தள் நிறைந்த தோட்டத்தைச் சுட்டிக் காட்டி, "ஆங்குச் செல்க" என்பது தோன்றக் கூறினாள் என்பதுமாம். ஆதலின் இறையனாரகப் பொருளுரையிலும், தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்க்கினியர் உரையிலும், "தோழி, தலைவியை இடத்துய்த்து நீங்கியது" என்னும் துறைக்கு இச்செய்யுளை உதாரணமாகக் காட்டினர்.

'சேஎய குன்றம்'—இதில் 'அ' சாரியை. 'ஆங்குச் செல்க' என்பது குறிப்பெச்சம். "சொல்லொடும்......எச்சமாகும்"—(தொல்-செய் 207) என்ற சூத்திரத்தினுரையில் இச்செய்யுள் இருதுறைக்கும் பொருந்துமெனப் பேராசிரியர் கருத்துட் கொண்டனர் என்பது அறிக.

'மெய்ப்பாடு'—தோழிக்குச் சூழ்ச்சி பிறந்தது; தலைவற்கு அசைவு பிறந்தது.

பயன்:—கையுறை மறுத்தல்.

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## ஆரியர் நாகரிகமும் திராவிடர் நாகரிகமும்

[திரு பா. வே. மாணிக்க நாயக்கர்—
காழி. சிவ. கண்ணுசாமி B. A.]

ஒன்றுடனொன்றை ஒப்பிடுதல் பொதுவாக அருவருக்கத் தக்கதாகும்; எனினும், ஒன்றன் உண்மை மேம்பாட்டை உய்த்துணர்தற்கு அவ்வொன்றை வேறு பலவற்றுடன் ஒப்பு நோக்கிச் சீர் தூக்கிப் பார்த்தல் இன்றியமையாததாகும். அதிலும், பண்டைக்கால மக்கள் வரலாறுகளை நுனித்தறிய முயலுங்கால், உண்மையைக் கண்டறிதலே இலக்காதலின், அது கருதி ஒப்பிடுதலைக் கைக்கொள்வதில் எவருக்கும் வெறுப்புத் தோன்றற்கிடமில்லை. இந்தியாவில் "வரலாற்று நூல்கள்" எழுதப்படவில்லை என்பதைப் பெருங்குறையாக வெடுத்துக்கூறிப் பலர் இகழ்ந்துரைக்கின்றனர். அக்குறை, உண்மையை நோக்குமிடத்து, ஒரு பெருங் குறையாகாது. ஒரு நாட்டு வரலாற்றை யெழுத முற்போந்து, காய்தலுவத்தலை யகற்றுமல், பற்றுள்ளங்கொண்டு மனம் போனவாறு ஒருவர் எழுதி வெளியிடுவதனுல் உண்மைகள் உருத்தெரியாமல் மாறுபாடடைகின்றனவன்ருே? ஆமாயின், அத்தகைய வரலாறுகளை உண்மை வரலாறுகள் என நம்புவது யாங்ஙனம்? உண்மை திரிந்த ஒன்றை உண்மையெனப் பிறழ உணர்வதிலும் வெறுக்கத்தக்கது வேறென்று முண்டோ? சில வாண்டுகட்கு முன்னிகழ்ந்த உருஷிய ஜப்பானியப் பெரும்போரைக் குறித்து ஜப்பானியர்களும், உருஷியர்களும், ஆங்கிலேயர்களும், ஜெர்மானியர்களும் தத்தமக்குத் தோன்றியவாறு பலபட எழுதிவைத்துள்ளார்கள். இன்னும், ஹம்பி(Humpi)ப் போரைப் பற்றி தக்காணத்து நவாபின் அரசாங்க வரலாற்று நூலாசிரியரான பிரியோதா என்பவர் ஒரு வரலாறு எழுதியுள்ளார்; பேஎஸ் டாமிங்கோ என்பவரும் அதைக் குறித்துப் பல செய்திகளைத் திரட்டி வைத்துள்ளார். ஆ! ஒன்றற்கொன்று எத்துணை மாறுபாடு! இதகைய வரலாற்று நூல்களாற் பயன்யாது?

### மொழி தெரிப்பதே உண்மை வரலாறு

இனி, ஒரு நாட்டு மக்களின் நாகரிகத்தையும், வளர்ச்சியையும் உண்மையில் அறிதற்கு அந்நாட்டினர்தம் மொழியே உற்ற கருவியாகும். என்னை? மக்களின் உள்ளக் கருத்துகள் அவர் தம் மொழியானேயே உருவேற்றுப் பரவுகின்றன; அம்மொழியெனுஞ் சிலம்பில் அவர்தம் கருத்துகளாகிய மாணிக்கப்

பரல்கள் எத்தகைய புனைவுங் கலப்புமின்றி உள்ளவாறே மிளிர்கின்றன ஆதலின்.

## எடுத்துக் காட்டுகள்

"பெருமாட்டிகளே, சான்றோர்களே," (Ladies and Gentlemen) என்று விளித்துச் சொற்பொழிவைத் தொடங்குவது தற்போது பெருவழக்காகப் பரவியுள்ளது. இஃது ஆங்கில நடையைப் பின்பற்றியது என்று கூறவேண்டியதில்லை. இதனான் ஆங்கிலேயரொழுக்கமுறையில் அவர்கள் மகளிர்க்கு முதன்மையளிக்கும் பெற்றி விளங்குகின்றது. ஆனால், இந்தியர்களோ பெண்மக்களை நிலவறையிற் சிறைவைக்கும் நாகரிகமற்ற மாக்கள் எனக்கண்டித்து ஒதுக்கப்படுகின்றனர். நந்நாட்டில் தற்போது இருக்கும் நிலைமையை நோக்க இக்கண்டனம் ஒருவாறு ஒப்புக்கொள்ளத் தக்கதே. ஆனால், மொழிகள் வெளியிடும் உண்மைகளை யாராய்ந்து பார்த்தால் இக்கண்டனம் எத்துணைத் தவறான தொன்றென்பதும், உண்மைக்கு நேர்மாறானதொன்றென்பதும் எளிதில் விளங்கும். பெருமை தெரிக்கும் "பெருமாட்டி" என்பது ஆங்கிலச் சொல்லான "லேடி" என்பதன் பொருள். "லேடி" என்ற சொல் ஆங்கிலோ சாக்ஸன் மொழியைச் சேர்ந்தது. அச்சொற்கு அம்மொழியில் நேர்பொருள் 'ரொட்டிமாப் பிசைபவள்" என்பதாம். அதன்படி, "லேடி" என்பதன் ஆண்பாற் பெயராகிய "லார்ட்" (Lord) என்ற ஆங்கிலோ சாக்ஸன் சொல் "ரொட்டிமாக் காப்பவன்" என்று பொருள்படும். ரொட்டிமாவைத் தன் கருத்துக்கியைந்தவாறு தட்டிக் கொட்டி வைப்பதுபோல், தன் கணவனையும் தன் கருத்துக்கியைந்தவாறு ஆட்டிவைக்கிறாள் என்ற பொருள் "லேடி" என்ற சொற்குப், பின்னர் ஏற்பட்டதாகும். இவ்வுண்மையை நாம் ஆங்கிலேயர்தம் வாழ்க்கை வரலாற்று நூல்களிற் காண்டலரிதாகும். ஆனால் மொழிவரலாறோ சிறிதும் ஒளிமறைவின்றி உள்ளதை உள்ளவாறே விளக்கி விடுகிறது. இஃதிவ்வாறாக, தென்னாட்டு மொழிகளில் மகளிரைக் குறிக்க வழங்கும் சில சொற்களை இவ்வழி ஆராயலாம். அவ்வாராய்ச்சியில் தென்னாட்டுத் திராவிட மக்கள் தம்மகளிரை எத்தகைய உயர் நிலையில் வைத்திருந்தார்களென்பது தெள்ளிதிற் புலப்படும்.

* மனைவி என்ற சொல் மனை அல்லது வீட்டுக்குத் தலைவியென்ற பொருளைப் பயப்பதாகும். "இல்லாளு" என்று தெலு

---

*மனைவி என்ற பெண்பாற்றமிழ்ச் சொல்லுக்கு மனைவன் என்பது போன்ற நேர் ஆண்பாற் சொல் தமிழில் இல்லாமையும், இல்லாள் என்ற தமிழ்ச் சொல்லின் நேர் ஆண்பாற் சொல்லான இல்லான் என்பது தலைவன் என்று பொருள்படாமல் வேறு பொருள்படுவதும் உய்த்துணர்ந்து மகிழ்தற்பாற்று. கா. சிவ. க.

ங்கில் வழங்கும் சொல்லும் அதே பொருளது. கண்ணாட்டி என்ற மற்றோர் சொல் கண்ணனைய அருமையும் பெருமையும் உடையவள் என்பதையும், துணைவி என்ற வேறொரு சொல் இல்வாழ்க்கைச் சகடத்தை எம்மருங்கும் ஒற்றி உடனீர்க்கும் உதவி புரிபவள் என்பதையும் குறிக்கின்றன. இச்சொற்களும் இவைபோன்ற ஏனைய பிற சொற்களும், திராவிடருடைய நாகரிகத்தில் மகளிர் எத்தகைய மேனிலையில் வைத்துக்கொண்டாடப் பட்டுவந்தார்கள் என்பதை நன்கு தெரிக்கவில்லையோ? ஆனால் இற்றைநாளில், அதிலும் சென்ற மூந்நூறு ஆண்டுகளில், இச்சீரிய நிலை மாறிக் கேடுற்றிலதோ எனின், ஆம் என்றே விடை பகர்தல் வேண்டும். அக்கேடும் இடைப்புகுந்த ஆரியர்தம் நாகரிகத்தினாலேயே தான் என்பது வெள்ளிடை மலை.

பேஅஃட் (bad) என்ற ஆங்கிலச் சொல்லை ஆராய்ந்து அது தெரிக்கும் வரன் முறையை நோக்கலாம். ஆங்கிலோ சாக்ஸன் மொழியிலுள்ள "பெஅஃடெல்" (Baddel) என்ற சொல்லிலிருந்து அஃது பெறப்பட்டதாகும். பெஅஃடெல் என்ற அச்சொல் (ஆணுமல்லாத பெண்ணுமல்லாத) பேடி என்று அம்மொழியிற் பொருள்படுவதாகும். (பேடி என்ற சொல்லுக்கும் பெஅஃடெல் என்ற சொல்லுக்கும் உள்ள உற்றுமை வியக்கற்பாலது.) இப்பொழுதோ அச்சொல் கெட்ட, தீய என்ற பொருளையே பயந்து நிற்கிறது. எனவே, அம்மொழிக்குரிய மக்கள் ஒருவன் பேடியல்லாத ஆண் தன்மையுடனிருந்து காமந்துய்க்க வல்லனாயிருப்பதே நல்லது என்று கொண்டிருந்தார்கள் என்றும் அஃதிலாமை கெட்டதென்று கருதினார்கள் என்றும் தெரியவில்லையா?

ஆஸ்தி என்ற வடசொல் பொருட் செல்வத்தைக் குறிப்பதாகும். அதன் வேர்ச்சொல்லோ என்றும் அழியாமல் நிலைத்திருப்பது என்று பொருள்படுவதாகும். இதனால், அம்மொழிக்குரிய ஆரியர்கள் நிலையில்லாத செல்வத்தை முதலில் நிலையுள்ளதாகக் கருதி இடர்ப்பட்டனர்; அதாவது, பொருளல்லவற்றைப் பொருளென்றுணர்ந்த மருளுறு காட்சியவராயிருந்தனர் என்பது விளங்கவில்லையா?

செல்வம் என்ற தமிழ்ச் சொல்லோ, எங்கும் நிலையாது மாறி மாறிச் சென்றுகொண்டே இருப்பது என்ற உயர்ந்த உண்மையை உள்ளடக்கி நிற்பதாகும். எனவே, அம்மொழிக்குரிய திராவிடர்கள் உண்மை யியல்புகளைப் பண்டைக் காலத்திலேயே உணரும் ஆற்றல் படைத்திருந்தனர் என்பது எளிதிற் பெறப்படும்.

"ஸ்வபாவ" என்னும் வடசொல் ஒரு பொருளின் தன்மையைக் குறிப்பதாகும். அச்சொல்லுக்கு நேர் ஆங்கிலச் சொல்

நேச்சர் (Nature) என்பது. அச்சொல்லோ "இயற்கையாய்ப் பிறந்தது" என்று பொருள்படும் ஒரு சொல்லிலிருந்து பெறப் பட்டதாகும். இவ்விருதிறச் சொற்களும் "இயற்கை" என்ப தன் இயற்கையை வெளிப்படையாகவோ குறிப்பாகவோ உணர்த் தக் கூடாதனவா யிருக்கின்றன. தமிழ்ச் சொற்களான "இயல்" "இயற்கை" என்ற சொற்கள் இயற்கையின் இயற்கை இடை விடா தியங்குதல் என்பதைத் தாமே வெளிப்படையாகக் குறித்து நிற்கின்றன. அறிவியலுக்கு எப்படியினும் ஒத்ததான இத்த கைய ஒரு சொல்லை வகுத்துக்கொண்ட திராவிடரின் உயர்தர நாகரிக நிலையை ஐயுறவுங் கூடுமோ?

கள் என்ற பொருளைக் குறிக்கத் தமிழில் எத்தனையோ சொற்களிருக்கின்றன. ஆனால் அவை யெல்லாவற்றின் வேர்ப் பொருளையும் நோக்கினால் திராவிடர்கள் அப்பொருளின் மீது எத்தகைய வெறுப்புக்கொண் டிருந்தார்கள் என்பது நன்கு விளங்கும். தமிழிற் கள் என்பதே தெலுங்கிற் கள்ளு எனப்படு வது. அதன் வேர்ச் சொல்லாகிய கள் என்பது திருடு என்றும் பொருள் தருவது. இதனால் கள் என்ற பொருளை உட்கொள்வ தனால் ஒருவன் தன்னையே திருடிக்கொள்கிறான்; அதாவது தன்னுணர்வையும் அறிவையும் இழக்கிறான், என்ற உயர்ந்த தத் துவப் பொருளை உட்கொண்டிருக்கிறது என்பது வியக்கற்பாற் றன்றோ? கள்ளைக் குறிக்கும் "பிச்சு" என்ற மற்றொரு தமிழ்ச் சொல் "பைத்தியம்" என்ற கோட்ட நிலையைக் குறிப்பதும் உணரற்பாற்று. இதனால், திராவிடர்கள் தம்முடைய சிறந்த நாகரிக முதிர்ச்சியினால் கள்ளை எத்துணை வெறுத்துவந்தார்கள் என்பது தெரியவருகின்றதன்றோ? ஆரியர்களோ அதனை மது அதாவது, (மதியை மயக்கும்) தேன் என்றும், சுராபானம், அதா வது, தேவர்கள் விரும்பிக் குடிப்பது என்றும் புகழ்ந்து போற்றி வந்தார்கள். ஆரியர் நாகரிகத்திற்கும் திராவிடர் நாகரிகத்திற் கும் உள்ள ஏற்ற தாழ்வை இன்னும் விளக்கிக் கூறவேண்டுமோ?

இவைபோன்ற எண்ணற்ற எடுத்துக் காட்டுகளை யடுக்கிக் கூறலாம். வேத வேள்விகளை யியற்றும்போதுங்கூட மதிகெடுக் கும் மதுவை எத்துணை இன்றியமையாததாக ஆரியர்கள் கருதி வந்தார்கள் என்பதை அறிந்தவர்கள் திராவிடர்தம் நாகரிக நிலை அதற்கு நேர்மாறான தூய்மை பொருந்திய தொன்று என்பதைத் தாமே ஒப்புக்கொள்வர்.

இனி, தாம் குடிக்கும் மதுவை "நான்காம் ஜார்ஜ் மன்னர் உவிஸ்கி" என்று பெருமையாகப் பெயரிட்டுக் கூற விரும்பும் மக்கள் குடியை நாடுகிறார்களா? அன்றி கழிபொருள், விலக்கப் பொருள் என்று கள்ளை வெறுத்து ஒதுக்கும் மக்கள் விரும்பு கிறார்களா?

(தொடரும்)

# அகத்தியர்

(முகப்புப் படம் பார்க்க)

[*சென்னை மாகாண அரசியன் முறை விளக்கம்-3-ம் தொகுதி]

அகஸ்தியன் சமஸ்கிருதம்; அகத்தியன் தமிழ். வடமொழி அகஸ்தியன் என்பது மலையை யெறிபவன், அதாவது மலைப் பாங்கான நிலங்களிலும் செல்பவன் என்று பொருள்படும்.

1. மனுப்பேரூழியில் திருத்தோணியில் தப்பிப் பிழைத்த ஏழு முனிவர்களில் ஒருவர். சப்தரிஷி மண்டலம் எனப்படும் உடுக்கூட்டத்தின் உச்சியில் இருக்கும் நாண்மீன்; அதனருகில் அவர் மனைவியாகிய அநசூயை என்று மற்றொரு சிறு நாண் மீனும் இருக்கும். சிரஞ்சீவி. அத்திரி என்றும் அழைக்கப் படுவார்; மனைவியின் பெயர் ஆத்ரேயி.

2. வரலாற்று நூற்குரிய உண்மை அகத்தியர் ஒரு மகா முனி. தமிழ் முனி யென்றழைக்கப்படுவார், முதற்பாண்டியனுன குலசேகரபாண்டியன் காலத்தவன் என்று கூறுவாருமுண்டு. வட நாட்டு வியாசனுக்குத் தென்றிசையில் ஒப்பானவர். கெனேப் பஸ் (canopus) என்று ஆங்கிலத்திற்கூறும் நாண்மீனுக்குரியவர். குடத்திற்பிறந்த கும்பயோனி என்றுங் கூறுவர். அவர் திபேத்து நாட்டினர்; பார்ப்பனரல்லர். சிறிய உருவம் படைத்தவர். அவர் தம்நெறி பரப்புவதற்காக தென்றிசை வந்தவர். விந்தமலை யின் செருக்கையடக்கி "விந்திய கூடன்" என்று பெயர் பெற் றூர் என ஸ்காந்த புராணம் கூறும். விந்தத்திற்குத் தெற்கே வாத பி இல்வலனை வென்ற நிகழ்ச்சி நடைபெற்றது. இந்நிகழ்ச்சி ஸ்காண்டிநேவியா நாட்டு ஓடின் என்பானது கதையை யொத்தி ருக்கிறது. அதன்பின், கன்னியாகுமரி முனைக்குச் சென்று பொதிகைமலை என்ற அகத்தியமலையிற் றங்கினர். அஃது இற்றைப குற்றாலத்திற்கருகி லிருக்கிறது. அம்மலையினுச்சியைச் சேர்தலரிதாகலின் அவ்வுச்சியில் அவர் வதிவதாக இன்றும் மக் கள் நம்புவர். சிவ வழிபாட்டை அவரே தமிழ் மக்களிடை வளர்த்தனர்; மருத்துக் கலை, பொருட்கலவை, வானநூல் முதலிய பலகலைகளையும் கற்பித்தனர். அவருடைய இலக்கணம் 12,000 சூத்திரங்கொண்டது. ஆனால், தொல்காப்பியத்தில் மேற்கோ ளாகக் காணக்கிடைக்கும் இரண்டொன்றைத் தவிர ஏனைய சூத் திரங்கள் கிடைத்தில. அவர் பெயரால் இற்றைநாள் வழங்கும் நூல்கள் யாவுமே அவருடையனவாகா. அவர் மனைவி உலோபா

---

* Manual of the Administration of the Madras Presidency 1893 Vol III P. P. 9-10.

முத்திரை. அவருக்குச் சாகரன் என ஒரு பிள்ளை யிருந்தான். அவர்தம் மாணவர் பன்னிருவர்:—அதங்கோட்டாசிரியர், அவி நயத்து நயர், இலக்கணமுரைத்த காக்கைப் பாடினியர், கழாரம் பன், நத்தத்தன், தொல்காப்பியப் பாயிர முரைத்த பனம்பாரன், செம்பூட்சேயன், தொல்காப்பியன், துராலிங்கன், வாமன், வையாபிகன், வைப்பியன்.

கா. சிவ. க.

---

# பரங்கிமலை

## (Saint Thomas Mount)

தமிழ், பரங்கி+மலை பரங்கிமலை; ஐரோப்பியர் இருக்கும் மலை; வடமொழி பிருங்கிகிரி.; மூன்று கால்களோடு கூடிய பிருங்கி முனிவர் வாழும் மலை. கி. பி. 1759-ல் காலிபாட் என்ற தளகர்த்தருக்கும் லாலி என்பவருக்கும் இவ்விடத்திற் போர் நிகழ்ந்தது. 20-3-1769-ல் ஹைதாலிக்கும் மிஸ்டர் டூபே என்பவருக்கும் இங்கே ஒரு உடன்படிக்கை நிறைவேறிற்று. 1774-ல் இஃது பீரங்கிப்படை நிலையமாக நிறுவப்பட்டது. இங்கேயுள்ள கிறித்து கோவிலின் கட்டிடம் மிகவும் அழகானது. மலையுச்சியில் அர்ச். தோமாஸ் என்பவரிருப்பிடமாகக் கருதப் பட்ட சிலுவைமலை (Mt. cross) என்ற இடத்தில் ஒரு பழைய போர்த்துகேசிய கிறித்துவக் கோவில் கட்டப்பட்டிருக்கிறது.

பிருங்கி கிரி யென்ற வடமொழிப் பெயர்மாற்றம் ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக வடமொழி தமிழ் மொழியைச் சிதைத்துத் தனக்கு ஆக்கந் தேடிக் கொண்டு வரும் சூழ்ச்சி முறைக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும். ஆரியர்கள் வந்தபிறகுதான் நாடு நாகரிக முற்றது என்று சிலர் கூற முயல்வது எத்தகைய பிதற்றல் என்பதை இது விளக்கும். தமிழ் நாட்டு ஊர்களின் பெயர்களெல்லாம் வடமொழிப் பெயர் கொண்டமை மிகவும் பிற்காலத்தே தான். அவற்றின் பண்டைய பெயர்கள் திராவிட மொழிகளாகிய தமிழ், தெலுங்கு, கன்னடம், துளு ஆகிய இவைகள் தனித் தனியே பிரிவதற்குமுன் கொடுக்கப் பட்டவையாகவே தோற்று கின்றன.

திராவிடர்கள், அதாவது தென்னிந்திய மக்கள், உலகத்து மக்கட் பெருங் குழுவினர்களில் ஒரு தனிப்பட்ட பெருங்குழுவினர் என்பதும், ஆரியர்களின் வருகையினால் திராவிட மக்களின் தனிப்பண்பு நலங்களும் பழக்கவழக்க ஒழுக்கமுறைகளும் மிகுதியாக மாறி விடவில்லை என்பதும் குறிக்கொளற் பாற்றும்.

கா. சிவ. க. —சென்னை மாகாண அரசியன்முறை விளக்கம்.

# அறிவியற் பகுதி — Science

## உளநூல் (Psychology)

[திரு. மா. பாலசுப்ரமணியம், எம். ஏ.]

### உட்பாட்டியல் (Instinct)

உட்பாடு என்பது ஒரு நுண்ணிய உள்ள எழுச்சி. இது பலவகைப்படும். இது உளத்தின் கண் யாதொரு முயற்சியு மின்றித் தோன்றுவது. இது புறப்பொருள் சார்புபற்றி நிகழும். அவ்வாறு நிகழுஞான்று யாதாமொரு மெய்ப்பாட்டினை உடன் தோற்றுவிக்கும். பின்னர் எச்சார்புபற்றி எழுந்ததோ அச்சார் பினை அடையுமாறு உடலைத் தொழிற்படுத்தும். இதனை ஒரு எடுத்துக்காட்டால் விளக்குவோம். வனத்தின் வழியாகச்செல் வானொருவன் ஒரு வேங்கையைக் கண்ணுறுகின்றான். உடனே சிறிதும் கால இடையீடின்றி அவன் உளத்தே ஒரு உட்பாடு எழுகின்றது. அதன் தன்மையைச் சுட்டியறிய நமக்கு இயல் வதில்லை. அவ்வுட்பாடு அச்சம் என்னும் மெய்ப்பாடாகத் தொடர்ந்த பின்னரே சுட்டறிவுக்கு உட்படுகின்றது. இது இயற்கையின் அமைப்பு. இவ்வாறே ஒவ்வொரு மெய்ப்பாட் டேக்கும் அடிப்படையாக ஒவ்வொரு உட்பாடு உண்டு. தன்னைத் துன்புறுத்தின சிறுவனைக் காணும்போதெல்லாம் பூனைக்கு ஒரு உட்பாடு உண்டாகின்றது. இவ்வுட்பாடு உடனே சினம் என் னும் மெய்ப்பாடாக மாறுகின்றது. ஒரு இளம்பசுவைக் கண்ட வுடன் சேங்கன்றுக்கு ஒரு உட்பாடு எழுகின்றது. உடனே அவ்வுட்பாடு காமம் என்னும் மெய்ப்பாடாக மாறுகின்றது. பின்னர் கூட்டுறவுக்குரிய தொழிற்பாடு நிகழ்கின்றது. எனவே புறப்பொருள் சார்பால் முதற்கண் உட்பாடு தோன்றி, அதற்பின் மெய்ப்பாடு எழுச்சியுற்று, அதன் பின்னரே தொழிற்பாடு நிகழ் கின்றது என்பது தெளிவு.

## உட்பாட்டு வகைகள்

மாந்தர்க்கு இயல்பாய உட்பாடுகள் மூவகைப்படுவன. அவை முறையே:

1, தற்சார்பின் உட்பாடுகள்,
2. இனச்சார்பின் உட்பாடுகள்,
3. புணர்ச்சிச் சார்பின் உட்பாடுகள், என்பன.

ஆங்கிலத்தில் அவை முறையே

1. ஸெல்ப் இன்ஸ்டிங்ட்ஸ், (Self Instincts)
2. ஹேர்ட் இன்ஸ்டிங்ட்ஸ், (Herd Instincts)
3. ஸெக்ஸ் இன்ஸ்டிங்ட்ஸ், (Sex Instincts)

எனப்பட்டன. இம்மூவகை உட்பாடுகளும் மாந்தர் உளத்தே ஆழ்ந்து ஊன்றி நிற்பன. இவைகளை மும்முதற் பேருட்பாடுகள் எனக்கூறலாம். ஆங்கிலத்தில் இவைகளை தி த்ரீ க்ரேட் ப்ரைமரி இன்ஸ்டிங்ட்ஸ் (The Three Great Primary Instincts) என்பர். இம்மூவகை உட்பாடுகளுள் ஒவ்வொன்றும் பலகூட்டு நிலைமைகளைத் தோற்றுவிக்கும். கூட்டு நிலைமை என்பது ஆங்கிலத்தில் காம்ப்ளேக்ஸ் (Complex) எனப்படும். இதனை ஒரு எடுத்துக்காட்டால் விளக்குவோம். வேளாளன் ஒருவன் தொழிற்றன்மைபற்றி வேளாள இனத்துடன் சார்ந்திருப்பான்; எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான் அறவோர் இனத்துடன் சார்ந்திருப்பான்; அரசியல் கொள்கையான் பொது உடைமையாளர் இனத்துடன் சேர்ந்திருப்பான்; ஆகலான் இனச்சார்பின் உட்பாடு ஒன்றேயாயினும், அவ்வுட்பாட்டுக்கு உட்பட்ட மைந்தன் ஒருவன் தொழிற்பற்றியும் கொள்கை பற்றியும் பல இனச்சார்புடையனாக விருப்பன் என்பது தெளிவு. இது பற்றியே, முன்னர், ஒவ்வொரு உட்பாடும் பல கூட்டு நிலைமைகளைத் தோற்றுவிக்கும் என்றது.

சில உளநூற்புலவர்கள் உட்பாடுகளைப் பன்னிரண்டாகப் பிரிக்கின்றனர். இவ்வுட்பாடுகளின் முதிர்ச்சிகளாகிய பன்னிரண்டு மெய்ப்பாடுகளையும் அவர்கள் குறித்திருக்கின்றனர். அவை கீழ் வருவன:—

| எண் | (உட்பாடுகள்) | (மெய்ப்பாடுகள்) |
|---|---|---|
| 1. | ஒட்டம் | அச்சம் |
| 2. | எதிர்ப்பு | சினம் |
| 3. | நீக்கம் | வெறுப்பு |
| 4. | வியப்பு | விந்தை |
| 5. | தன்னுறுதி | இறும்பூது |
| 6. | தன்னிழிவு | சிறுமை |
| 7. | தாய்மை | மென்மை |
| 8. | மக்கட்பேறு வேட்கை | காமம் |
| 9. | உணவூட்டல் | — |
| 10. | இனச்சார்பு விழைவு | — |
| 11. | பொருள் திரட்சி விழைவு | — |
| 12. | ஆக்க விழைவு | — |

இறுதியில் கூறப்பட்ட நான்கு உட்பாடுகளுக்கு உரிய மெய்ப்பாடுகளுக்கு ஏற்ற பெயர்கள் ஆங்கிலத்திலாதல் தமிழிலாதல் இல. மேற்கூறப்பட்ட உட்பாடுகளும் மெய்ப்பாடுகளும் ஆங்கிலத்தில் கீழ்வருமாறு பெயர் பெற்றிருக்கின்றன.

| No. | Instincts | Emotions |
|---|---|---|
| 1. | Flight | Fear |
| 2. | Pugnacity | Anger |
| 3. | Repulsion | Disgust |
| 4. | Curiosity | Wonder |
| 5. | Self-assertion | Elation |
| 6. | Self-abasement | Subjection |
| 7. | Parental Instinct | Tenderness |
| 8. | Reproduction | Sex |
| 9. | Feeding | — |
| 10 | Gregariousness | — |
| 11. | Acquisition | — |
| 12. | Construction | — |

இனி, மேற் கூறப்பட்ட அமைப்பில் (Table) உள்ள சில வற்றை விளக்கும் வழியான் உட்பாட்டின் உண்மைத் தன்மையைத் தெரிப்போம். உண்மை வீரன் ஒருவன் ஒரு சாலைவழியாகச் செல்லும் பொழுது தன்னெதிரில் எளியாரை வாட்டும் முரடன் ஒருவன் வருவதைக் காண்கின்றான். உடனே சிறிதும் காலவிடையீடின்றி, அம்முரடனைப் புடைக்கவேண்டும் என்னும் உட்பாடு உண்மை வீரன் உளத்தில் எழுகின்றது. இதைத்தான் மேலமைப்பில் எதிர்ப்பு என்றது. இவ்வுட்பாடு விரைவில் சினம் என்னும் மெய்ப்பாடாகத் திரிகின்றது. யாதாமொரு கலையில் பெரும்புலமை பெற்றவன் ஒருவன் அக்கலையறிவுள்ளார் குழுமியுள்ள அவையின் கண் தன் கொள்கைகளைக் கூறும்போது ஒரு திண்ணிய உறுதியுடன் கூற விழைகின்றான்: தன்னுறுதி என்னும் உட்பாடு அவன் உள்ளத்தில் எழுகின்றது; உடனே அது இறும்பூது என்னும் மெய்ப்பாடாக மாறுகின்றது. தன் புலமையின் பெருமையை அறிந்தவனாதலின் அவனை மீறி அவனுள்ளத்தில் தன்னுறுதி என்னும் உட்பாடு எழுகின்றது. ஒரு பெரிய அறவோனைக் காணும் ஆன்ம வறியன் ஒருவன் உளத்தில், அவனைமீறி, தன்னிழிவு என்னும் உட்பாடு எழுகின்றது. பின்னர் அது சிறுமை என்னும் மெய்ப்பாடாகத் திரிகின்றது. சாலையின் வழியாகச் செல்வானொருவன் சேய்மையில் கழைக்கூத்தாடிகள் கூட்டத்தைக் காண்கின்றான். உடனே அவன் உள்ளத்தில் அக்கூத்தாடிகளின் திறமையைக் காணவேண்டும் என்னும் விழைவு எழுகின்றது: வியப்பு என்னும் உட்பாட்டுக்கு அவன் உட்படுகின்றான். பின்னரே அவன் விந்தை என்னும் மெய்ப்பாட்டினை நுகர்கின்றான்.

இனி, யாம் தொடக்கத்திற் கூறிய மும்முதற் பேருட் பாடுகளுக்கும், பின்னர் பேசப்பட்ட பன்னிரு உட்பாடுகளுக்கும் உள்ள இயைபு யாதென ஆராய்வோம். மும் முதற் பேருட்பாடுகளுள் ஒவ்வொன்றும் சில பல கூட்டு நிலைமைகளைத் தோற்றுவிக்கும் என்று முன்னர் கூறினோம். அக்கூட்டு நிலைமை வகைகளாவன:

1. தற்சார்புக் கூட்டு நிலைமை
2. இனச்சார்புக் கூட்டு நிலைமை
5. புணர்ச்சிச் சார்புக் கூட்டு நிலைமை

என்பன. அவை ஆங்கிலத்தில் முறையே,

1. ஈகோ காம்ப்ளேக்ஸ் (Ego-Complex)
2. ஹேர்ட் காம்ப்ளேக்ஸ் (Herd Complex)
3. ஸேக்ஸ் காம்ப்ளேக்ஸ் (Sex Complex)

எனப்படுவன. தன்னுறுதி என்னும் உட்பாடும், தன்னிழிவு என்னும் உட்பாடும் தற்சார்புக் கூட்டு நிலைமைக்கு இயைந்தன. இனச்சார்பு விழைவு என்னும் உட்பாடு இனச்சார்புக் கூட்டு நிலைமைக்கு இயைந்தது. தாய்மை என்னும் உட்பாடும் மக்கட் பேறு வேட்கை என்னும் உட்பாடும் புணர்ச்சிச்சார்புக் கூட்டு நிலைமைக்கு இயைந்தன. மற்ற ஏழு உட்பாடுகளும் பொதுவாகத் தற்சார்புக் கூட்டு நிலைமைக்கு இயைந்தனவே. என்னெனில், அவ்வேழில் உணவூட்டல் என்னும் உட்பாடு உடல் வன்மைக்கு இன்றியமையாதது; ஓட்டமும் எதிர்ப்பும் தற்காப்புக்கு இன்றியமையாதன; நீக்கமும் வியப்பும் உள்ள நன்னிலைமைக்கு இன்றியமையாதன; பொருள் திரட்சி விழைவு ஒருவனுடைய இனவாழ்வுக்கு இன்றியமையாதது; ஆக்க விழைவு உடற்காப்புக்கும் பொருள் காப்புக்கும் இன்றியமையாதது. பன்னிரண்டு உட்பாடுகளுள் தற்சார்புக் கூட்டு நிலைமைக்கு உரியன ஒன்பது. அவைகளைக் கீழ்வரும் அமைப்பால் விளக்கலாம்.

தற்சார்புக் கூட்டு நிலைமை

எதிர்ப்பு
வியப்பு
தன்னுறுதி
ஆக்க விழைவு
உணவூட்டல்-பொருள் திரட்சி விழைவு
தன்னிழிவு
நீக்கம்
ஓட்டம்

மேற் கூறப்பட்ட கூட்டு நிலைமைகள் மூன்றும் ஒன்றற்கொன்று முரண்பட்டு இயங்குவன. எவன் ஒருவன் உளத்தே அவை முரண்பாடின்றி இயங்குகின்றனவோ அவன் அறத்தாற்றின் ஒழுகுவானவன். இம்முப்பெருங் கூட்டு நிலைமைகளைப் பற்றிச் சில புகல்வோம். முதற்கண் தற்சார்புக் கூட்டு நிலைமையைப்பற்றிக் கூறுவோம்.

(தொடரும்)

# பொருணூல்—(Economics)

[திரு. B. நடராஜ பிள்ளை B.A. (Hons)]

(முன் ௨சுசு-ம் பக்கத் தொடர்ச்சி)

## V

### நாணயச் சட்டம்

இது இவ்வாறிருக்க, அத்தருணத்தில் தம்முடைய நாணயத் திட்டத்தை நிலைப்படுத்த ஆதாரமாக பொன்னைத் திரட்டிக் கொண்டிருக்கும் ஆங்கில அரசாங்க பாங்கிக்கு (Bank of England) தக்க வேளையிற் பொன் வந்தது சற்று தொக்கான தொன்றாகவே இருந்திருக்க வேண்டு மென்று கூறிச் செல்லலாம்.

இங்கிலாந்து தேசம் 1816-ல் பொன் நிலையைக் கைக் கொண்டது. இதனால் எல்லாக் காகித நோட்டுகளுக்கு நேராகவும் பொன் கொடுத்தல் வேண்டுமென்று ஏற்படுவதால் தக்க தங்க ஆதாரத்தைத் திரட்ட ஆங்கில அரசாங்க பாங்கியால் எல்லாவித முயற்சிகளும் எடுத்துக் கொள்ளப்பட்டன. எனவே அவர்களுடைய அரசாங்கம் பொன் எடுத்துவர கீழ இந்தியக் கம்பெனியாருக்குச் சிறப்பான சில வசதிகள் செய்து கொடுத்ததும் இயல்பே. இந்தச் செய்கை இந்திய நாணயத் திட்டத்தையும் பாதித்தது. தங்கத்தின் விலை யுயர்ந்தது. தங்க மோகர் என்ற நாணயம் 16 ரூபாயிலிருந்து 18 ரூபாய்க்கு உயர்ந்தது. இது இந்தியப் பழைய நாணயத் திட்டத்தை அடியோடு ஆட்டி விட்டது. இந்திய நாணய முறையை ஒரு புது வழியில் ஏற்பாடு செய்வது இன்றியமையாதாகிவிட்டது. ஆங்கில நாட்டைப் போல் பொன் நிலை நிறுவுவது இந்தியாவுக்கு ஏற்றதன்றெனக் கொள்ளப்பட்டது. ஹார்ஸிலி பாமர் என்ற ஆங்கில பாங்கியின் அதிகாரி கவர்னரானவர் 1832-ல் பொது மக்கள் சபைக் குழுவின் முன்பு (House of commons' Committee) சாட்சியம் கொடுக்கையிற் பின்வருமாறு கூறினர்:—

"இந்தியாவில் தங்க நாணயம் வழக்காற்றில் இருப்பதில்லை, பெரு அளவில் இருக்கப்போவதுமில்லை; வெள்ளியே அங்குள்ள மெய்யான நாணயம்; அதுவே பெரும்பாலோராலும் வழங்கி வரப்படுவது......தங்கத்தை நாடோடியாகப் புழங்கி வரும் நாணயமாக ஏற்படுத்துவதென்ற அபிப்பிராயத்தை நான் முற்றிலும் எதிர்க்கின்றேன்."

அதன்படியே 1835-ல் பொன் வெள்ளி என்ற இரு உலோகங்களின் ஆதரவில் இயங்கிக் கொண்டிருந்த இந்திய நாணயத்

திட்டத்தைத் திருத்தி வெள்ளி நிலை ஏற்படுத்தப்பட்டது. வழக்கிலிருந்துவந்த பல வேறு ரூபாய்கள் ஒழிக்கப்பட்டு ஆர்க்காட்டு ரூபாயே 1835-ம் ஆண்டு XVII வது சட்டப்படிக்கு முத்திரை ரூபாயென ஏற்படுத்தப்பட்டது. அந்தச் சட்டமானது அது முதற்கொண்டு தங்க நாணயம் பிரிட்டிஷ் இந்தியாவில் செல்லுபடியாகாதென்று கண்டபடியால், அது வரையில் நாட்டின் கண்ணே ஆட்சியி லிருந்துவந்த எல்லாப் பொன் நாணயங்களையும் செல்லாக் காசாக்கித் தீர்த்தது. ஆனால், வட சர்க்கார்ப்பிரதேசங்களில் தவிர பிறிதிடங்களிலிருந்த தங்க நாணயத்தின் பெரும்பாகமும் வழக்கிழந்து புதைக்கப்பட்டோ அன்றி அயல் நாடுகளுக் கனுப்பப்பட்டோ அதற்குள்ளேயே மறைந்துவிட்டது என்பது மெய்யே. ஆர்க்காட்டு ரூபாயை முத்திரை ரூபாயாக அங்கீகரித்ததன் பயனாக அரசாங்கத்தார் அது காறும் நாட்டிலிருந்த பல வேறு நாணயங்களாலுண்டான குழப்ப மொழித்து, நிலையான ஒரு நாணயத் திட்டத்துக்கு அடிகோலினர். ஆனால் கைம்மேல் உண்டான பலன்கள் நன்மை தரத் தக்கனவா யிருக்கவில்லை. பொற் காசுகளைச் செல்லாக் காசுகளாக்கியதாலும், பல வேறுவித வெண் காசுகளை வழக்கிலிருந்து அகற்றியதாலும், நாட்டில் ஆட்சியிலிருந்த நாணயத்தினளவு திடீரெனச் சுருங்கிற்று. இது விலைகள் பின்னும் குறைவதற்குக் காரணமாயிருந்தது. 1835-ம் ஆண்டுச் சட்டத்தைக் குறித்து ஸர். ஜே. ஸி. கோயாஜி என்னும் அறிஞர், 'நாணய ஒற்றுமைச் சீர்திருத்தம் இறுதியில் நன்மையளித்ததே யாயினும், முதலிற் பெருவாரியான மக்களுக்கு அளவற்ற துன்பத்தை யளித்தது. எங்ஙனமெனில் பல்வேறு கள்ள நாணயங்களை ஆட்சியிலிருந்து அகற்றியதன் பயனாக சிறிது காலத்திற்கெல்லாம் புழங்கி வந்த நாணயத்தின் றொகை குறைந்து பண்டங்களின் விலையில் பெருஞ் சீர்கேடு உண்டாயது'' என்று கூறுகின்றார்.

அளவற்ற நாணய வகைகள் ஆட்சியிலிருந்து அகற்றப்பட்டதுமேயன்றி, பிரிட்டிஷ் ஆதிக்கத்துட்போந்த சுதேசி மன்னர்களும் ஜமீன்தார்களும் தங்களது நாணய உரிமை இழக்க வேண்டியதாயிற்று. அதனால் அதுவரை ஆங்காங்கு எழும் தேவைகளுக்குத் தக்கவாறு நாணயங்கள் ஆக்குவித்த பல கம்பட்ட சாலைகள் ஒன்றுபோல் மூடப்பட்டன. உடையார்பாளையம் சிவகங்கை போன்ற ஜமீன்களுங்கூட தமக்குச் சொந்தமான கம்பட்டசாலைகள் வைத்துக்கொண் டிருந்தனரென்று அறிகிறோம்.

1835-ம் ஆண்டு சட்டத்தாலெழுந்த நாணய முடக்கத்தைக் காகித நாணயங்களால் ஒழிக்கலாமென்றாலோ அதுவும் இயலாது போயிற்று. ஏனெனில் அப்பொழுதிருந்த சென்னை பாங்

கிக்கு (Madras Bank) காகித பாங்கி நோட்டுகள் அச்சிட உரிமையளிக்கப்பட் டிருந்ததெனினும் அந்த உரிமையானது நோட்டிற்கு வேண்டும் தங்க ஆதாரத்தினளவு முதலிய பற்பல நிபந்தனைகளால் கண்டுண்டதாகவே அதிகப் பயன்படாதாயிற்று. 1838-ல் வெளியிடக்கூடும் நோட்டின் ஏற்றத்தொகை வரையறுக்கப்பட்டதுமன்றி, எக்காரணங் கொண்டும் அந்தத் தொகையை மீறுவதினின்றும் பாங்கி கண்டிப்பாய்த் தடை செய்யப்பட்டது. இவ்வாறாக நாட்டின் நாணயத் தேவைகளைக் கவனியாது வெளியிடப்படும் நோட்டினளவு சற்றும் நெகிழ்ச்சியில்லா முறையில் வகுக்கப்பட்டிருந்தது. 1840-ல் வி. ஆர். காட்டன் என்பவர் அரசாங்கத்தார் கைக்கு அடங்கினதாய்த் தேவைக்குத்தக்க நெகிழ்வு கொள்ளும் ஒரு காகித நாணயத்திட்டம் இன்றியமையாதென அறிக்கை செய்தனர். ஆனால் அந்த விவாதம் 1860-வரை எழுப்பப்படவே இல்லை.

அன்றி அவ்வாறு அதிகமாகக் காகித நாணயங்கள் வெளியிட்டிருந்தாலும் அப்பொழுதிருந்த சீர்கேட்டினை அறவே ஒழித்திருக்குமென்பதை உறுதியாகக் கூறுவதற்கில்லை. கம்பட்டசாலையில் பொறிக்கப்படும் நாணயத்தினளவு எவ்வளவாயிருப்பினும் அந்த நாணயங்களெல்லாம் பொது மக்களின் கையிற் போனாலன்றி, விலைவாசியில் எவ்வித மாறுதலும் எழாது. நாம் பார்வையிடும் கால அளவையில் கம்பெனியாரின் வியாபார முறையாலும், கம்பெனியின் இங்கிலாந்துத் தலைவர்களின் பில் புழக்க முறையாலும் இந்திய வியாபாரத்தின் சார்பாக வரவேண்டும் பணம் முழுதும் இவண் வந்திலது; அதனோடு கம்பெனியின் ஆட்சிக் காலத்தில் அவர்கள் மராமத்து நடத்தல், நீர்ப்பாசனம் சமைத்தல் பெருவழிகள் அமைத்தல் ஆகிய துறைகளில் தக்கவாறு பணஞ் செலவு செய்யாது சிக்கனமான முறையைக் கைக்கொண் டிருந்தமையாலும், மாகாணத்தின் வெவ்வேறு பாகங்களி லமைக்கப்பட்டிருந்த கம்பெனிக்குச் சொந்தமான நெசவுத்தொழில் நிலயங்கள் நிறுத்தப்பட்டதாலும், நாட்டில் அடிக்கப்பட்ட நாணயம் முழுதும் ஆட்சியிற் புகுதவில்லை. நாணயத்தின் மொத்தப் பெறுமானம் 4 கோடி ரூபாய்க்கிருந்திடினும் அரைப் பாகத்துக்குமேல் அரசாங்கக் கருவூலங்களில் பூட்டி வைக்கப்பட் டிருந்ததென்று சென்னை கம்பட்டசாலைக் குழவினர் (Madras Mint Committee) மதித்திருக்கின்றனர்.

இவ்வாறாக இந்தியாவில் மேற்குறித்த கால அளவில் பொன்னும் வெள்ளியும் வெளிநாடு போனதாலும், 1835-ம் ஆண்டுச் சட்டம் வந்து புழங்கிவந்த நாணயத்தின் அளவினைக் குறைத்ததாலும், பணத்திற்கு தட்டுப்பாடு ஏற்பட்டது.

(தொடரும்)

# மாணவர் பகுதி

## உலக அறிவின் பயன்

[வித்துவான் மு. சண்முகதேசிகர், சீகாழி]

ஆர்கலியாற் சூழப்பட்ட அழகிய இவ்வுலகின்கண் இழிவான பலபிறவிகளை விடுத்து, மனிதப் பிறவியை ஏற்பதே, அரிது! அரிது! என்று ஆன்றோர் கூறியுள்ளார். அப்படிப்பட்ட அரிய மானுடப் பிறவி வாய்த்தும், பகுத்தறிவு இல்லாவிடின் அவர்கள் எடுத்த பிறவியினால் பயன் இன்று. அவ்வறிவு இன்றேல், அவர்களை ஐயறிவு பெற்ற விலங்குகளென்றே விளம்ப வேண்டும். இதனை

"விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்"

என்ற திருவள்ளுவரின் வாக்கு வலியுறுத்தும்.

கொடிய பிராணிகளை மனிதன் அடக்கி ஆளுவதும் அறிவினால்தான் என்று நிச்சயமாய்ச் சொல்லலாம். ஒரு மனிதனுக்கு அறிவு ஒன்று மாத்திரம் அமைந்திருந்தால் இவ்வுலகில் சுகமாய் இருந்து வாழமுடியுமா? வாழ்க்கைக்கு வேண்டிய இன்றியமையாத பொருள் முதலிய துணைக்கருவிகள் வேண்டாவோ? என்று வினவலாம். அவ்வினாவிற்கு விடை நமது பொய்யா மொழியாகிய நாயனார் அருளிய குறளிற் கண்டு களிக்கலாம்.

அறிவுடையோர் அல்கிய செல்வத்தவராயினும் அவர் யாவராலும் நன்கு மதிக்கப் பெறுவதுடன், என்றும் அழியாப் புகழையும் ஏற்றுச் சுகமுடன் வாழ்வார். அறிவில்லாதவர் எத்துணைச் செல்வத்தை ஏற்றிருந்தாலும், அச்செல்வத்தை இன்னவழியிற் செலவிடவேண்டும் இன்னவழியிற் செலவிடக் கூடாது என்ற நியதி இன்றி, மனம் போன வாறெல்லாம் செலவு செய்துவிட்டு, உண்ணுவதற்கும் வழியின்றி, வறியர் போல் வருந்துவார்கள். இக்கருத்தினைத் திருவள்ளுவனார்

"அறிவுடையார் எல்லாம் உடையர் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்"

என அருளியுள்ளார்.

அறிவு என்பது பலவகைப் பட்டதாகும். அவைகளை எல்லாம் ஒருவன் அடைவ தென்றால் ஆகாத காரியம். ஆயினும், ஒவ்வொரு செயலில் ஒவ்வொருவர் தேர்ந்த அறிவுடையவராக இருப்பார்கள். இருந்தாலும், உலக அறிவையாவது தெரிந்து கொண்டிருக்க வேண்டும். தேசசஞ்சாரஞ் செய்தலால் உலக அறிவு ஏற்படும். கல்வி கற்றவர்கள் தேசசஞ்சாரம் செய்வதுதான் சிறப்புடைத்து. கல்வி கற்காதவர்களின் தேச சஞ்சாரம் சிறப்புடைத்தன்று.

இக்காலத்து, ஐரோப்பா, அமெரிக்கா, முதலிய நாடுகளிலுள்ள கலாசாலைகளில், மாணவர்களைப் பெரிய பட்டணங்களுக்கு அழைத்துச் சென்று அங்குள்ள பொருள்களைக் காட்டி, அப்பொருள்களின் உற்பத்தி, கிடைக்கும் இடம், அவற்றின் உபயோகம் முதலியவற்றைத் தெரிவித்து வருகின்றார்கள். இச்செயலால் அம்மாணவர்களுக்கு அறிவு உண்டாகும். இதனால் இவ்வுலகத்தைப் பலவித பாடங்களையுடைய புத்தகமென்றே கூறலாம்.

முற்காலத்தில் தமிழ் மக்கள் மணம்புரிந்து கொண்டதன் பின்பும் அதற்கு முன்பும் பிறநாடுகளுக்குச் சென்று மூன்று வருடங்களுக்கு மேற்படாமல் இருந்து பலவகையான கலைகளிலும் பயின்று வருதல் வழக்கமாயிருந்தது. அதனால் அக்காலத்தில் தமிழ்நாடானது சீருஞ் சிறப்பு முற்றிருந்தது, என்ற செய்தியை, நம் பழைய இலக்கணங்களுள் ஒன்றாகிய தொல்காப்பியத்திலும் நடை நூல்களிலும் அறியலாம். அஃது,

"ஓதற்பிரிவுடைத்து ஒருமூன்று யாண்டே"

என்பதாலும், அகப்பொருட்டுறைகளுள் கல்வியின் நிமித்தம் தலைவன் பிரிதல், என்ற ஒரு துறை உளது ஆதலாலும் விளங்குகின்றது. இதனை, "கல்விக் ககல்வர் செல்வத்தவரெனச் செறிகுழற் பாங்கக்கு அறிவறிவித்தது" என்பதாலும் அறியலாம்.

அரிய நூல்களையெல்லாம் ஐயந்திரிபறக் கற்றிருப்பினும் பல்வேறு நாடுகளில் வசிக்கும் மக்களின் தன்மை, மதம், பழக்க வழக்கம், அரசியல், முதலானவற்றைத் தெரிந்து கொள்ளாதிருப்பவர்கள் அறிவுள்ளவர்கள் என்று கருதப்படமாட்டார்கள். இக்கருத்தினை,

"உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்"

என்று நாயனார் நவின்றுள்ளார். ஒளவை யென்னும் மூதாட்டியும் "உலகத்தோடொத்துவாழ்" என்றும் கூறியுள்ளார்.

ஒருவனுக்கு, அநேக நூல்களைப் படித்தலாலும், பிறர் செய்கின்ற காரியத்தை நேரிற் காண்டலாலும், பிறர் கூறுகின்றவற்

றைக் கேட்டலாலும், அயல் நாடுகளுக்குச் செல்லுவதாலும் அறிவுண்டாகும்.

தேச சஞ்சாரஞ் செய்வதால் ஒவ்வோர் நாட்டின் தன்மையையும், அங்குள்ளோரின் நாகரிகங்களையும், அவர்கள் பேசும் பாஷைகளையும், அங்கு விளைகின்ற பொருள்களையும், அவர்கள் உணவு, உடுக்கும் ஆடை, நடை நொடி பாவனைகளையும் மற்றைய யாவையும் நாம் தெரிந்து கொள்வோம். அதனின்றும் அறிவு மேன்மேலும் விருத்தியடையும்.

உலக அறிவு இல்லாதவர்கள், தங்கள் கல்வியையும் பெருமையையும், நன்மதிப்பையும், இழந்துவிடுவார்கள் என்பதற்குக் "கற்றறிமூடர்"களது வரலாறே சிறந்த எடுத்துக்காட்டாகும்.

பிறபாஷைகளைக் கற்பதும் உலக அறிவைப் பெறுதற்குச் சாதனமாகும் என மேலே கூறப்பட்டது. பிற பாஷைகளைக் கற்காமலிருந்தோர்கள், சில காலத்தில் வருந்தினர் என்பது, நமது குமரகுருபரரின் சரிதத்தை உற்று நோக்கின் புலப்படும். ஓர் அமயம் குமர குருபர சுவாமிகள் தலயாத்திரையின்பொருட்டு அநேக நாடுகளுக்குச் சென்று, ஆங்காங்குள்ள திருக்கோயில்களில் எழுந்தருளியுள்ள மாதொரு பாகனை மனமாரப் போற்றி வணங்கிக் கடைசியில் காசி யென்னும் மாசிலாத் தலத்தினை அடைந்தார். அந்நாட்டினை பாதுஷா என்ற முகம்மதிய அரசன் அரசாட்சி செய்து வந்தான். அவனைக் காணும் பொருட்டு குமர குருபரர் அவனது அரண்மனை வாயிலை அண்மினர். அதைக்கண்ட காவலாளர்கள் இவரை உள்ளே புகவிடாது தடைசெய்தனர். அவர்கள் பேசுகின்ற பாஷையும் இவருக்கு விளங்கவில்லை. அதற்காக மிகவருந்திப் பின் கலைமகளின் அருளால் அப்பாஷையைக் கற்றுக் கொண்டு, உயிர்ச் சிம்மத்தின் முதுகில் ஏறிக் கொண்டு, பாதுஷாவின் முன்சென்று, அநேக வாதங்கள் செய்து சன்மானங்களைப் பெற்றுப் புகழுற்றனர்.

ஐம்பெருங் காவியத்துள் ஒன்றாகிய மணிமேகலையில், ஆதிரையின் கணவனாகிய சாதுவன் என்பான் வாணிகத்தின் பொருட்டு அயல் நாட்டிற்குச் செல்ல விரும்பிக் கப்பலேறிச் சென்றனன். கடலின் நடுவிடத்திற்குச் சென்றதும் அக்கப்பலானது தெய்வாதீனமாய்க் கவிழ்ந்து விட்டது. அதில் உள்ளோரும் அவதிப்பட்டனர். நம் சாதுவனும் வருந்திப் பக்கத்தில் மிதந்து கொண்டிருந்த கட்டையைப் பிடித்துக்கொண்டு ஒரு கரையை அணுகினன். அணுகி உட்செல்லுகையில் அங்கு ஒருவன், எலும்பே ஆதனமாகவும், நரிகள் யாவும் ஏவல் செய்யவும், கோரமான உருவத்துடன் அமர்ந்திருப்பதைக் கண்டு மெய் நடுங்கி நிற்கையில், இரண்டுபேர் வந்து இவனை அழைத்துக்

கொண்டு சென்று அவனிடம் விட்டனர். அவன் நாக நாட்டிற்கு அரசன். கலம் கவிழ்தலால் கஷ்டப்பட்டுக் கரை சேர்வோரைக் கொன்று தின்பது அவன் வேலை. அதுபோல் இவனையும் கொன்று தின்னவேண்டும் என்று அவனது பாஷையில் சொன்னான். ஆதிரை கணவனுக்கு அப்பாஷை தெரியுமாதலால், இவனும் அவனுடன் சிறிது அப் பாஷையிலேயே பேசினன். உடனே அவன் இவன் நமது பாஷையைப் பேசுவதால் நம்மவனே ஆகும் என்று சொல்லிக் கொல்லாது விடுத்தனன்; கொலைத் தொழிலையும் நீக்கிவிட்டான். இதற்கெல்லாம் அப்பாஷை தெரிந்திருந்ததே காரணமாகும்.

இரண்டு மகளிர்கள் வாசனைப் பொடி யொன்றைச் சேகரித்தனர். அப்பொடியின் மணத்தின் நிமித்தம் இருவரும் பூசலிட்டனர். இப்பூசலை நீக்கிக் கொள்வதற்காகத் தாங்கள் இருவரும் சீவகனிடத்து வந்து முறையிட்டனர். அவன் இம் மாறுபாட்டை எப்படி நீக்குவது என்று சிறிது நேரம் ஆலோசனை செய்து, வண்டுகள் ஒலிக்கும் ஒலியானது தெரிந்திருந்ததால் வண்டுகளின் முன் அப்பொடியை அள்ளித் தூவினன். அப்போது வண்டுகள் வாசனையுள்ள பொடியையே நாடிச் சென்றன. அதைக் கண்டு சீவகன் அப்பெண்களின் மாறுபாட்டை நீக்கினன்.

இக்காலத்து நினைத்த மாத்திரத்தில் மற்றோரிடத்திற்குப் போவதற்கு ஆகாயவிமானம் உதவுதல்போலவே, அக்காலத்தும் இதைப் போன்ற ஒரு இயந்திரம் உதவிவந்தது என்பதற்குச் சில சான்றுகள் உண்டு. சச்சந்தன் என்னும் மன்னன் தனது அரசாட்சியைக் கட்டியங்காரனிடம் ஒப்புவித்து விட்டுத் தான் காமவயத்தனய்க் காலங்கழித்து வந்தனன். சிறிது காலம் சென்றபின் அக்கட்டியங்காரனே இவனிடத்துப்போர் செய்யப் படைகளுடன் வந்து விட்டான். அப்பொழுது சச்சந்தன் மனைவி விஜய மாதேவி கருவுற்றிருந்தனள். மன்னன் அவளை அழைத்து யான் இச்சண்டையில் இறந்து போவது நிச்சயம். நீ இம்மயிற் பொறியில் ஏறிக்கொண்டு எங்கேயாவது சென்று உயிர் தப்புவாய் என்று சொல்லி அவ் இயந்திரத்தினை இயக்குவதற்கும் சொல்லிக் கொடுத்து அனுப்பினன்.

நம் முன்னோர்கள் எல்லாவற்றிலும் தேர்ச்சியுற்று விளங்கி வந்ததுபோலவே நாமும் தேர்ச்சி பெற்றிருக்கவேண்டும். உலக அறிவு தெரிந்திருந்தால், பிற உயிர்களைக் காப்பாற்றுவதற்கும், தங்கள் உயிரைக் காப்பாற்றிக்கொள்வதற்கும், பெருமையைச் சம்பாதித்துக் கொள்வதற்கும் பிறரால் நன்கு மதிக்கப்படற்கும் உபயோகமாகும்.

---

# கவின்கலைப் பகுதி:
## Fine arts

மகேந்திரவர்மன் வடமொழியில் இயற்றிய

# மத்த விலாசம்

## களிக்கூத்து

[ஸ்ரீமான் தி. கு. கி. நாராயணசாமி நாயுடு அவர்கள்]

(முன் ௬௭௮-ம் பக்கத் தொடர்ச்சி)

## இரண்டாம் களம்

காஞ்சியின் மற்றொரு தெரு.

கபா:—இக்காஞ்சீபுரம் என்ன உன்னதம்! ஒப்பு உவமை இல்லாத உயர்திரு நகரம்! அதன் பேரிகை முழக்கம் ஒரு பாலும் சேணோங்கிய கோபுரத்தைச் சென்றடைந்த முகிற்கூட்ட முழக்கம் மற்றொரு பாலும், என்ன! எங்கணும் முழக்கம்! வசந்த காலமே வந்துற்றதென ஐயுறும்படி மலர்மாலை செறிந்து பொலியும் கண் கவரும் கடைகள் நிறைந்தது இவ்வூர். மதிமுகமடவார்கள் இடை பிறங்கும் மேகலையின் ஒலி, காதற் கடவுளாம் மன்மதன் ஜெயித்தான் ஜெயித்தான் என்று முழங்குவதுபோலிருக்கிறது.

தேவ:—ஐயா! காஞ்சிபுரம், வாருணிதேவி மாதிரி அவ்வளவு அழகாயிருக்குது !

கபா:—பிரியே! அதோ அங்கே பார். அந்த கள்ளுக்கடை யாகசாலைபோல் விளங்குகின்றது. கடைப்பெயரெழுதியுள்ள கம்பமே யூபஸ்தம்பம். அங்கு விற்கும் கள்ளே சோமபானம். அங்கிருக்கும் குடியர்களே புரோகிதர்கள். அவர்கள் குடிக்கும் கலயமே சோமபாத்திரம். அவர்கள் நெருப்பிலிட்டு வாட்டிய ஊனே அவிசு. அவர்கள் வெறியில் பேசும் பேச்சே யஜுர் மந்திரங்கள். அவர்கள் போதையில் பாடும் பாட்டே சாமகானம். அவர்கள் கள்முகக்கும் அகப்பையே நெய் வார்க்கும் தர்வி. அவர்களுக்குக் குடி வேட்கையே யாகாக்கினி; கடை முதலாளியே எஜமானன்.

தேவ:—ஆமாம். நம்ம இங்கே வாங்கற பிச்சையே ருத்திரன் பங்கு.

கபா:—ஆஹா! அக்குடியர்களின் களிக்கூத்து எவ்வளவு சிருங்காரம்! தம்பட்டங்கள் ஒருபுறம் அடிக்கவும் அதற்குத்தக அவர்கள் ஆடுவதும் பாடுவதும் மேல் கலே சரிவதும், அதைப் பிடித்துக் கொள்ளும்போது தாளம் தவறுவதும் அவர்கள் கழுத்தின் மாலே கசங்குவதும் என்ன அழகு!

தேவ:—ஓ! ஒங்க அழகு வருணனே ஒயுங்கா இருக்குதே!

கபா:—அம்மதுவாம் வாருணி தேவியைக் கலத்தில் பெய்தவுடன் அணிகளேன்? ஆபரணங்கள் தாம் ஏன்? அதுவல்லவோ காதலர் ஊடல் தீர்க்கும் அருமருந்து? இளம் காளேயர்க்கு ஆற்றலளிப்பதும் அதுவே. மேலும் எவ்விதமான இன்பத்திற்கும் அது உயிர் போன்றது.

ஈசனர் கண்ணில் வெந்தான் அநங்கவேள் எனவே நூலோர்
பேசிய உரையும் பொய்யே பெய்தருதைலம் போல
தேசிகன் உருகி மேனி திரிந்து நம்மிதயம் தன்னில்
ஆசையாய் ஒழுகி நின்ருன் எனக்கொளல் அமைவதாமே. (8)

தேவ:—ஆமா ஐயா! நீ சொல்ரத்தான் சரி. உலகத்துக்குக் கடவுளான சிவன் அந்த மாதிரி செஞ்சிருக்கவே மாட்டான். (இருவரும் வாயில் காற்றடைத்து கன்னத்தைக் கைகளால் அறைந்து மிருதங்க ஒலிபோல் ஒலி எழுப்பி);

கபா:—தாயே! பிச்சை! தாயே! பிச்சை!

[நாடகமேடை உள்ளிருந்து]

'யாரப்பா' பிச்சை! இதோ வாங்கிக்கொள்!

கபா:—வாங்கிக்கொள்கிறேன்—பெண்ணே! என் கபாலம் எங்கே?

தேவ.—நான் பார்க்கலயே.

கபா:—(சிறிது சிந்தித்து) ஆ! அக்கள்ளுக்கடையில்வைத்து மறந்து வந்தோம் போலும்! நல்லது, வா, மீண்டும் போய்ப்பார்க்கலாம்.

தேவ:—ஆனல் ஐயா! இட்ட பிச்சையை வாங்காமெ போலாமா? போரு பாவமுனு சொல்லுவாங்களே. இப்போ என்ன செய்ரது?

கபா:—ஆபத்துக்குப் பாவ மில்லே. நீ வைத்திருக்கும் மாட்டுக் கொம்பில் வாங்கிக்கொள்.

தேவ:—அப்படியே ஐய்யா! (அவள் வாங்கிக் கொள்ள இருவரும் கபாலத்தைத் தேடிப் போகிருர்கள்)

**இரண்டாம் களம் முற்றும்.**

## மூன்றும் களம்

காஞ்சியில் கள்ளுக்கடையின் பக்கம்

கபா:—ஐயோ! கபாலத்தை இங்கேயும் காணுமே! (பரபரப்புடன்)

ஓ! மாகேஸ்வரர்களே! என் பிக்ஷா பாத்திரத்தை இங்கே கண்டீர்களா? அப்பெரியோர்கள் என்ன சொல்லுகிறுர்கள்? "இல்லை. நாங்கள் பார்க்கவில்லையென்று?" ஐயகோ! நான்கெட்டேன்; என் துறவும் வீணுனது. கபாலமில்லாமல் நான் எப்படி கபாலி ஆவேன்! ஓ! துக்கம்!

ஊறு கள்ளையு மூனையு முட்கொள
நாறு தூய்மையில் நல்லுப காரமாய்
தேறு கப்பரை போயது தீர்விலா
தேறு நண்பனி ழுந்ததை யொக்குமே.

(தரையில் புரண்டு தலையிலடித்துக் கொண்டு)

பாதகமில்லை. அது ஒரு இலச்சினையே. அதை இழந்தால் கபாலிகனென்ற பட்டத்தை நான் இழந்துவிடவில்லை.

(அவன் எழுகிறுன்)

தேவ:—ஐயா! பின்ன அந்த ஓட்டை யார் எடுத்திருப்பா?

கபா:—பெண்ணே! வதக்கின இறைச்சித்துண்டமொன்று அதிலிருந்தது. ஆகையால் அவ்வோட்டை ஒரு நாயாவது அல்லது புத்த சந்நியாசியாவது எடுத்திருக்கவேண்டும்.

தேவ:—அப்பொண்ணு நாம் காஞ்சிபுரத்தைத் தெருத் தெருவா சுத்தி அதைத் தேடுவோம் வா.

கபா:—சரி, போவோம். பெண்ணே!

(இருவரும் போகிறுர்கள். ஒரு புத்த சந்நியாசி கையில் திருவோட்டுடன் வருகிறுன்.)

புத்த:—ஆ! வணிக குல நாயகன் தனதாசச் செட்டி செய்யும் தர்மத்தை வெல்ல மற்றெவராலும் முடியாது. இதோ! என் கையிலிருக்கும் பலவகை மீனும் இறைச்சியும் நிறைந்து பார்ப்பதற்கும், நுகர்வதற்கும், சுவைப்பதற்கும் ருசிகரமான சோறு அவன் கொடுத்ததே. நாம் இப்பொழுது நம் பள்ளிக்குப் போவோம்.

(உலாவிக்கொண்டு தனக்குள்ளே)

ஹா! நம்பெரும் கருணைக் கடலாம் இறைவன்—புத்தன், சங்கத்தை வகுத்து, அதன் அங்கத்தினராகிய சந்நியாசிகள் மாட மாளிகையில் வசிக்கலாமென்றும், பஞ்சுமெத்தையில் துஞ்சலாமென்றும் முற்பகலில் வயிறுரவுண்ணலாமென்றும், பிற்பகலில்

மணங்கமழும் பானவகைகளை அருந்தலாமென்றும், பஞ்ச வாசனை நிறைந்த தாம்பூலம் தரிக்கலாமென்றும், மெத்தென்ற வுடைகளை அணியலாமென்றும் விதித்து, அவன் சிற்றின்பத்தை யும் மதுபானத்தையும் மாத்திரம் ஏன் விலக்குவானேன்? இல்லை! எல்லாம் அறிந்தவனுயிற்றே; இதை மாத்திரம் எப்படி மறந்திருக்க முடியும்? நான் நினைக்கிறேன். அந்த ஊக்கம் குன்றி உடல் உலர்ந்து வஞ்சக நெஞ்சத்தராம் கிழபுத்த சந்நி யாசிகள் என்னைப்போல் இளமையும் வனப்பும் வாய்ந்த சந்நியாசி களின் மேலுள்ள பொருமையினுல் பெண்ணையும் குடியையும் குறித்த விதிகளை நம் திரிபிடக புத்தகத்திலிருந்து அழித்திருக்க வேண்டும். இதைப்பற்றி ஐயப்பாடே இல்லை. இத்திரிபிடகத் திற்கு மூலமெங்குளதோ? அது கிடைத்தால் புத்தனின் உண் மைப் போதனையை உலகிற்குக் காட்டி என் போன்ற இளைய சந் நியாசிகளுக்கும் இன்பத்தை அளிப்பேன். (உலாவுகிறுன்)

தேவ:—பார் ஐயா! பார்! அதோ அந்த காவிவேட்டி போத் திகிட்ட பைய்யல் பார்! அவன் கைகால் முடக்கிகிட்டு கள்ளன் மாதிரி இப்படியும் அப்படியும் பாத்துகிட்டு பூனை மாதிரி பைபப் பையக் காலை எடுத்து வச்சிகிட்டு போரான் பாத்தியா?

கபா:—ஆம் பெண்ணே! சரிதான். அதோடுகூட அவன் கையில் எதையோ மேலாடையால் மறைத்துச் செல்கிறுன்.

தேவ:—அப்படினு, அவனைப் பிடிச்சி அது என்னனு பார்க்கலாம்.

கபா:—அப்படியே செய்வோம் பெண்ணே!

(முன்னுல் வந்துகொண்டே)

ஓ! சந்நியாசி! நில்!

புத்த:—யார் என்னை இம்மாதிரி விளிப்பது? யாராயிருக்க லாம் (நின்று திரும்பிப் பார்த்து) ஓ! அவன் ஏகம்பத்தில் வசிக் கும் போக்கிரி கபாலி அல்லவா? நல்லது, அவன் குடிவெறிக்கு நான் உட்படமாட்டேன். (ஓடப்பார்க்கிறுன்)

கபா:—அகப்பட்டுவிட்டது; என் கபாலம் அகப்பட்டுவிட் டது! என்னைக் கண்டவுடன் அவன் மிரண்டு ஓடுவதே அவன் திருடன் என்பதற்குப் போதியசான்று.

(முன்னுல் ஓடி வழிமறைத்து)

அடே! அயோக்கியா! இப்பொழுது எங்கே போவாய்?

புத்த:—இல்லை! நண்ப! கபாலி! நீ அப்படிப் பேசுதல் அடாது. (ஈதென்ன?) என் அழகிய நங்காய்! (தனியாக)

கபா:—ஓ! சந்நியாசி! அதென்ன காண்பி பார்ப்போம்? உன் கையில் என்ன இருக்கிறதென்று நான் அறியவேண்டும்.

புத்த:—அதில் என்ன இருக்கு பார்ப்பதற்கு? கேவலம் ஒரு திருவோடு. (தொடரும்)

# சென்னை மாகாணத் தமிழர் மாநாடு, திருநெல்வேலி

வரவேற்புத்தலைவர்

உயர்திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், M.A., M.L.,

## உரை

தமிழ்மொழிப் பாதுகாப்பானது தமிழ் நாட்டினர்க்கேயன்றி உலகத்தார்க்கே பெருநன்மை விளைப்பதாகும். ஏனெனில், அது பழமையான நாகரிகத்தை விளக்குவதாய், பண்டைப் பெருமக்களாற் பேசப்பட்டதாய், உலகத்தில் மக்கள் முதன்முதற் றோன்றிய பேரிடப்பகுதியில் வழங்கியதாய், ஆண்டு இன்றும் பேசப்படுவதாய், என்றும் நிலவக் கூடியதாயிருத்தலின் மன்பதை வரலாற்றினை யாராய்வார்க்குத் தமிழ்மொழிப் பயிற்சி பெரிதுந் துணைபுரி யவல்லது. பண்டை நாகரிகத்தின் பெரும்பயன்களாகிய பாநலம், மெய்ந்நூல்நலம், ஒழுக்கநலம், கொள்கைநலம், கலைநலம் முதலிய வற்றை உலகம் உணர்ந்து மகிழ்தற்கு நமது தாய்மொழி சிறந்த கருவியாவதுமறிக.

உலகின் சிறந்த மொழிகளுள் இயற்கை யமைப்பும், எல்லா மொழிகளும் எழுதவல்ல எழுத்தமைப்பும், சொற் செட்டும், மூச்சுச் செட்டும், உயர்பொருட்செறிவும் பொருந்திய தன்மையில் இணையற்ற தாயிருப்பது தமிழ்மொழியாதலும் ஒரு காரணமென்க.

உலகத்தில் மக்கள் தோன்றிய இடத்தைப் பற்றியும், தமிழர்க்குந் தமிழ் நாட்டிற்குமுள்ள தொடர்பைப் பற்றியும் பலர் பலவாறாகக் கூறினும் குமரிமுனைக்குத் தெற்கேயுள்ள கடல்கொண்ட கண்டத்தின் பகுதியாயிருந்த சாவகநாட்டில் முதல் மனிதனின் எலும்புச் சட்டம் கண்டுபிடிக்கப்பட்டதென்பதுபற்றியும் பிறகாரணங்களாலும் "எங்கேல்" என்னும் செர்மானியப்புலவர் கடல்கொண்ட கண்டமே மக்கள் முதன்முதற் றோன்றிய இடமென்று முடிவுகட்டியுள்ளார்.

மக்கள் தோன்றிய விடத்திலேயே தங்கள் கருத்துக்களை ஒருவருக்கொருவர் தெரிவித்துக்கொள்ளுதற்குச் சில மெய்ப்பாட்டொலிகளும் ஓரசை, ஈரசைச் சொற்களும் வழங்கியிருத்தல்கூடும். அவ்வொலிகளுஞ் சொற்களும் நாளடைவில் வெவ்வேறு மக்கட்பிரிவினர் தங்கும் இடங்களுக்கும் உடலமைப்பிற்குமேற்ப, வேறுபட்டும் மாறுபட்டும் குறுகியும் பெருகியும் விரிந்து பல்வேறு பேச்சுக்களுக்கு அடிப்படையாக விருத்தல்கூடும். கடல்கொண்ட நாட்டில் ஆதியில் வழங்கிய மொழி இன்னதென்று தெரிதல் அரிதாயினும் இற்றைக்குப் பல்லாயிரமாண்டுகட்கு முன்னேயே குமரிமுனைக்குத் தெற்கேயிருந்த நாற்பத்தொன்பது சிறுநாடுகளில் தமிழ் மொழியானது வழங்கி

யிருந்த தென்பது களவியலுரையாற் புலனாகின்றது. அந்நாடு களோடு மக்கள் தோன்றிய இடமெனப்படும் பகுதி ஒன்றுபட்டிருந் தமையால் தமிழானது மக்கள் முதன்முதற்பேசிய இளம்பேச்சினின்று செவ்விய திறனுடனெழுந்த முதல் நாகரிக மொழி என்று ஊகிக்க இடமுண்டு. ஓரசைச் சொற்களாலாய சீன மொழியைச் சிலர் பண்டை முதுமொழி யென்பர். அச்சீன மொழியின் சில பகுதிகள் தமிழோடு தொடர்புற்றிருத்தலாலும் தமிழ் மொழியின் மூலங்களும் பெரும்பாலும் ஓரசைகளாகவே யிருத்தலாலும் மக்களின் மூல இடத் திற்கு அருகில் இன்றும் வழங்குவதாலும் உலகிலுள்ள பல மொழி களோடு ஒருபுடை யொற்றுமை யுடைமையாலும் ஆதிமொழியின் முதற் பிள்ளை தமிழேயென்று எண்ண இடமுண்டு. இந்திய நாடு முழுவதும் ஒரு காலத்தில் தமிழ்க்குடும்பத்தினரே பரவியிருந்து மங்கோலியர் முதலியவரோடு கலந்தனரென்று "சர் எர்பர்ட் ரிசுலி" "டாக்டர் சில்பர்ட் சிலேட்டர்" முதலிய ஆங்கிலப் புலவரும், ஆங்கிலப் பேராசிரியர் பூரணலிங்கம் பிள்ளை, பி. டி. சீனிவாசய்யங்கார் முதலிய இந்தியப்புலவரும் அறுதியிட் டுரைத்தனர். "எகிப்து நாட்டில் நாகரிகம்படைத்த மக்கள் வகுப்பினர்க்குப் பண்டைநாடு பழந்தமிழ் நாடாகிய பாண்டி நாடெனவே கருதலா" மென்பதைக் கலனல் ஆல் காட் தமது ஆராய்ச்சியால் வற்புறுத்தினர். அறிவு நூலாசிரியாகிய அக்சிலி யென்பவர், எகிப்தியர்க்கும் தமிழர்க்கும் உடலமைப்பு ஒரு தன்மைத்தென மொழிந்தார். எகிப்தியரது பாம்பு வழிபாடும், பக லவன் வணக்கமும் பண்டைத் தமிழருக் குரியனவே. பண்டைத் தமிழரும் சீனமங்கோலியரும் சேர்ந்து வளர்த்த நாகரிகமே பாபிலோனியா முதலிய பெருநகர்களிற்றிகழ்ந்த சுமேரிய நாக ரிகமென ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். சுமேரிய வரலாற்றினை யாராய்வோர் அந்த நாகரிகம் கிழக்கிலிருந்து வந்ததாகவே கூறு கின்றனர். இப்பொழுது சிந்து மாகாணத்தில் "அரப்பா" "மோகஞ் சதாரோ" என்னு மிடங்களில் தோண்டி எடுக்கப்பட்ட பழம் பொருள்கள் சுமேரிய நாகரிகத்திற்கும் பழந்தமிழர் நாகரிகத் திற்கும் உள்ள தொடர்பை விளக்குகின்றன. மேலும், பாபி லோனியாவிற்கு அருகில் தோண்டி யெடுக்கப்பட்ட கற்பலகையி லுள்ள மொழிகள் தமிழ் மொழியொடு இலக்கணத்தாலும் சில சொற்சார்பாலுந் தொடர்புடையன வென்று துலங்குதல் காண்க.

ட, ண என்னும் எழுத்தொலிகள் தமிழ்ச் சொற்களில் வழங்கும் முறையிலேயே அவற்றிலும் காணப்படுகின்றன. நான்காம் வேற் றுமை யுருபும், முன்னிலை யொருமையும், அரசனைக் குறிக்கும் "கோ" என்ற சொல்லும், தமிழிலுள்ளவாறே மேற்சொன்ன கற் பலகை வாசகத்திலுங் காணப்படுகின்றன. ஆரிய மொழிக்கும் தமிழ் மொழிக்குமுள்ள ஒற்றுமையைச் சில ஆரிய அறிஞர்கள் விளக்கியுள்ளார்கள். சுமேரிய நாட்டிற்கு வடமேற்குப் பகுதியில் நடு ஆசியாவில் ஆல்டாய் மலைசார்பிலும், ருசியாவில் ஊறல் மலைச் சார்பிலும் வழங்கும் பேச்சுக்களை மொழிநூல் முறைப்படி வகுத்த ஆசிரியர்கள் அவற்றைச் சித்திய குடும்பத்தைச் சார்ந்தனவெனக் கூறு

வதோடு, தமிழையும் சித்திய குடும்பத்தின் சார்புடையதென்று செப்புகின்றனர். அது டாக்டர் கால்ட் வெல்லின் ஒப்பியல் நூலின் நன்கு காணலாம். பின்லண்டில் பேசப்படும் பேச்சில் தாயைக்குறிக்கும் "அன்யா" என்ற சொல் தமிழில் வழங்கும் அன்னை என்பதோடொத்திருக்கிறது. வடகடற்கரையில் வதியும் "சாமா எடிக்" என்பாரது பேச்சில் தாயைக்குறிக்குஞ் சொல் அம்மா என்பதே. நெருப்பைக் குறிக்குஞ் சொல் தீ யென்பதே. தந்தையைக் குறிக்குஞ் சொல் அப்பா வென்பதே. ருசியாவிலுள்ள வால்கா நதிக்கரையில் வழங்கும் பேச்சு ஒன்றில் ஆம், கோழி, தோல் என்ற சொற்கள் காணப்படுகின்றன. டாக்டர் G. U. போப் பென்பவர் மேலை ஐரோப்பாவில் வழங்கும் கெல்டிக் மொழிகளுக்கும் தமிழுக்கும் ஒற்றுமையிருப்பதைப்பற்றிப் பேசியுள்ளார். இன்னும் சில அறிஞர் ஆப்பிரிக்கா மொழிக்கும் தமிழ் மொழிக்குமுள்ள ஒற்றுமையை ஆராய்ந்துள்ளார். இவ்வொப்புமைகளால் எல்லாவற்றிற்கும் மூலமாக இருந்த ஆதிமொழியோடு தமிழ் தொடர்புடையதென்பது ஊகிக்கப்படும். ஆங்கில நாட்டிலுள்ள கேம்பிரிச்சுப் பல்கலைக் கழகத்தில் வடமொழிப் பேராசிரியராயிருந்த ராப்சன் என்னும் ஆசிரியர் கூறுவதாவது:—"ஆரிய மொழிகள் வடமேற்கு இந்தியாவிற் புகுந்தகாலை அங்கே திராவிட மொழிகள் சிறந்து விளங்கின. திராவிடத் தொடர்புகள் வேதமொழியிலும், பிற்கால வடமொழியிலும், பிராகிருத மொழிகளிலும் அவற்றினின்றும் கிளைத்த இற்றைய உள்நாட்டு மொழிகளிலும் காணப்படுகின்றன" வென்பதே. டாக்டர் சில்பர்ட் சிலேடர் என்பவர் இந்து செர்மானிய மூலமொழியானது மெசபெடோமியா, கருங்கடற்கரை என்பவற்றின் வழியாக பால்டிக் கடற்கரையிலிருந்த வாணிப நெறியிற் சிறப்பாக வழங்கியமொழியென்றும், அது பல நாடுகளில் பரவியிருப்பது தற்காலத்தில் ஆங்கில மொழியானது ஆங்கிலக் கப்பல்கள் போய்ச் சேரும் துறைமுகங்களிலிருந்து உள் நாட்டில் பல இடங்களுக்குப் பரவினதுபோலுமென்றும் இயம்பினர். மேலும், தற்காலத்தில் தமிழைப் பார்க்கிலும் ஆங்கிலத்தைத் தமிழ்ப் பிராமணர் நன்கு கையாளுவது போலப் பஞ்சாப் நாட்டில் ஆரியர் மிகுந்தகாலை திராவிடப் பிராமணர் வடமொழியை நன்கு கற்று வேதத்தைப் பாதுகாப்பதிலும் பரவச் செய்வதிலுஞ் சிறந்தவராயினரெனவும், அக்காரணத்தினால் மொழியளவில் திராவிடர்கள் ஆரியத் தொடர்புற்றனரெனவும், ஆரியர்கள் திராவிட நாகரிகம் மேற்கொண்டனரெனவும் அவர் ஆய்ந்துரைத்தனர். இக்கருத்துக்களை ஆயுமிடத்து ஒரு காலத்தில் இந்தியநாடு முழுவதும் திராவிடமொழிகள் பரவியிருந்தனவென்பதும், அவற்றில் ஆரியக்கலப்பு மிகுதியாவதற்குக் காரணராயினோர் தமிழ் மக்களே யென்பதுந் தெளிவாகும்.

தமிழின் சிறப்பைப்பற்றி டாக்டர் சில்பர்ட் சிலேட்டர் என்பவர் மிகவும் அழகாக "இந்திய நாகரிகத்தில் திராவிடப் பகுதி" யென்ற தமது நூலில் உரைத்தமை போற்றத்தக்கது. அவர் கருத்துக்களாவன:—"தமிழ் இந்தியாவிலுள்ள எல்லாமொழியிலுஞ் சிறந்த நாகரிகமுடையது. அமைப்பு நுட்பத்

திலும் அளவையுணர்ச்சியிலும் மிக மேம்பட்டது. ஒழுங்கும் நுட்பமுமுள்ள உயர்ந்த தத்துவக் கருத்துக்களையுடைய இந்திய நாகரிகமானது அதை யுண்டாக்கி வளர்க்கக்கூடிய மக்கள் பால் தோன்றியிருத்தல் வேண்டும். அத்தகைய ஆற்றல் அம் மக்கள் பேசும் மொழியாக்கத்திலுங் காணப்படும். தூய திராவிடமொழியானது அவ்வாற்றலை மற்ற எந்த இந்தியமொழியிலும் அதிகமாகக் காட்டுகின்றது. திராவிடமொழிகளெல்லாவற்றிலுந் தமிழே கருத்து நுட்பத்தைத் திட்பமாகக் காட்டக்கூடிய கருவியாகும். மேலைநாட்டிற்கும் இந்த நாட்டிற்கும் நடத்தற்குரிய அறிவுவணிகத்தில் சிறந்த வணிகராவார் ஆங்கிலமும் தமிழும் கற்றவர்களே'' என்றது காண்க. ஆங்கில அறிஞர்கள் தமிழின் பெருமையை உணர்ந்திருக்குமளவு தமிழ்மக்கள் கூடத் தெரிந்திருப்பதாகத் தோன்றவில்லை. டாக்டர் **வின்சிலோ** என்பவர் தமிழுக்குப் பெரிய அகராதி வகுத்தவர். அவர் கூறுவதாவது:—"தமிழ் ஒரு கீழான மொழியன்று. ஆங்கிலத்தின் அடிப்படையான பேச்சிற்கு எழுத்து ஏற்படுமுன்னரே தமிழானது உயர்ந்தநயமுடைய மொழியாய் விளங்கிற்று. செய்யுள் நடையில் தமிழானது கிரீக்மொழியைப் பார்க்கிலும் மென்மையும் திட்பமும் உடையது. செய்யுள் வழக்கிலும் உரைநடையிலும் கடன் கொண்ட பகுதியையும் சேர்த்து நோக்கின் தமிழானது லத்தீன் மொழியிலும் வளமுடையது. அதன் முழு ஆற்றலை நோக்குமிடத்து ஆங்கிலத்தையும் செர்மன் மொழியையும் ஒத்திருக்கிறது'' என்பதே. **பேர்சீவல்** என்னும் பாதிரியார் கூறுவதாவது:— "ஒரு மொழியும் தமிழைப்போலச் சுருக்கமும் ஆற்றலும் ஒருங்கு சேரப் பெறவில்லை யென்று தோன்றுகிறது. பிற எப்பேச்சும் மக்கள் மனக் கருத்தை விளக்குவதில் அத்துணை அறிவு நுட்பமுஞ் செறிவும் உடையதன்று'' என்பதே. **டாக்டர் கால்ட்வெல்** "தனித்தியங்கும் ஆற்றலில் தமிழ் மொழியே பிறதிராவிடமொழிகள் யாவற்றிலும் மிகச்சிறந்தது. தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலியன வடமொழியினின்று கடன் வாங்கப் பழகி மிகுதியாகக் கடன் வாங்கிவிட்டபடியால் கடன் தீர்க்கமுடியாத நிலையிலிருக்கின்றன. தமிழ் கடன் வாங்கியிருந்தாலும் அதனைத் தீர்த்து விட்டுத் தனித்து நன்கு வாழும் திறமையுடையது'' என்றார்.

இனி, தமிழ் என்ற சொல்லின் இயல்பை ஆராய்வாம். "தமிழக்கிளவியும் அதனோற்றே'' என்ற தொல்காப்பியச்சூத்திரத்தால் தமிழென்பது தமிழ்ச்சொல்லேயாதல் தெளிவு. அதற்கு இனிமை யென்ற பொருள் இருத்தல் தெளிவு. "தமிழ்மண்டில'' மென்ற சொற்றொடர் திருமந்திரத்திலே தூயமண்டிலமென்ற பொருளில் வழங்குவதால் தமிழ் தூய்மையையு முணர்த்துமென்று தெரிகிறது. "தமிழ்தழீஇய சாயலவர்'' என்றவிடத்துத் தமிழ் அழகையும் குறிப்பாலுணர்த்துகிறது. தூயதன்மையைக் குறித்தலால் அறத்தையும், இனிமையாகிய பயன் தருவதால் பொருளையும், அழகைக் குறிப்பதால் இன்பத்தையும் அது சுட்டும் என்பாருமுளர். இன்னும் அச்சொல்லைப் பலபடப்பிரித்துக் குறிப்புப்பொருள் கூறுதலுமுண்டு. இன்பமென்பது பேரின்பத்தையும் அடக்கி நிற்றலால் அறம் பொருள் இன்பம் வீடென்னும் நான்கினையும் தமிழுணர்த்துமென்றலு மொன்று. "தமி'' என்ற அடியானது தனி யெனப் பொருள் படுமெனக்கொண்டு தமிழென்பது ஒப்புயர்வற்ற மொழி யென்று கூறுவாரு முளர். அது

பழமையான மொழிகளுட் பழமையதாய், இன்று நிலவும் மொழிகளுட் சிறப்பாய் விளங்கும் தனிநயம் அதற்கே உரியது என்ப. தமிழு என்பது தமிழ் என ஆயிற்று என்பார். அச்சொல்லைப் பிரித்து அகரம், இகரம், உகரம் என்ற மூன்று உயிரெழுத்தும் தகரம் மகரம் ழகரம் என்ற வல்லின மெல்லின இடையின எழுத்தும், இருத்தலோடு இறுதியில் நின்ற ழகரம் இடையினச் சிறப்பெழுத்தாகவு மிருத்தல் பாராட்டற் பாலதென்பர். அச் சொல்லில் அகர உகர மகர மிருத்தலால் ஓங்காரத்தின் பகுதிகள் அதிலி ருத்தலாகக் கூறுதலுமுண்டு. தமிழ் என்பதில் அகரம் இயற்றமிழையும், இகரம் இசைத்தமிழையும், உகரம் நாடகத்தமிழையுங் குறிக்கு மென்பார். மனத்தின் கருத்தை இயற்றமிழும், சொல்லின் இனிமையைஇசைத்தமிழும், செயலின் நயத்தை நாடகத் தமிழுமுணர்த்தும். தமிழ் என்ற சொல் மொழியின் இயற்கை நயத்தைக் குறிக்கும். சம்ஸ்கிருதம் என்ற சொல் மொழியின் செயற்கை நயத்தைச்குறிக்கும். ஓடி வளைந்தது என்று பொருள்பட்டுத் தமிழ்நாட்டின் இடத்தைக் குறிக்குந் திராவிடமென்ற சொல் வடமொழியில் வழங்குவதற்கு முன்னேயே இனிமைப் பண்புணர்த் தும் தமிழென்ற சொல் வழக்கிலிருந்தது என்பது காலஞ்சென்ற திரு. தமோதரம் பிள்ளையால், அவர்கள் பதிப்புரையொன்றில் நிலைநாட்டப் பட்டிருக்கிறது. அதனால் தமிழ்ச்சொல் திராவிடமென்பதின் சிதை வென்பார் கொள்கை தவறென்றுணர்க.

தமிழ் நாட்டிற் காணப்படும் தொன்மையான புதையற் பொருள்கள் எகிப்து முதலிய ஆப்ரிக்கா நாடுகளிலும் அசீரியா முதலிய மேலை ஆசியா நாடுகளிலும் கிரீசுக்குத் தெற்கே யிருந்த தீவுகளிலுங் காணப்படும் புதை யற்பொருள்களோடு ஒத்திருத்தலாலும், அவற்றைக் குறிக்குஞ் சொல் தமிழாகத் தமிழ் நாட்டில் காணப்படுதலாலும், அப்பொருள்கள் குறிக்கும் நாகரிகம் ஆரிய நாகரிகத்திலும் மிகப்பழமையானதாதலாலும் ஆரியம் இந்நாட்டில் வழங்குவதற்குப் பன்னெடுங் காலத்திற்கு முன்னேயே தமிழ் சிறப்புடன் பெருவழக்காய் திகழ்ந்ததென்பது கருதப்படும். புரூஸ் புட் (Bruce Foote) என்பவர் இந்திய நாட்டில் ஆய்ந்தெடுத்த பத்து வகையான பழங்கற்கருவிகளுள் வேல் வடிவமுடைய கற்கருவியே சிறந் ததெனக் குறித்தனர். ராப்சன் ஆசிரியர் தென்னாட்டிற் காணப்படும், கல்லாயுதங்கள் கடைசியாய்ப் பயன்பட்ட காலத்திற்கும் வேதம் தோன் றிய காலத்திற்குமிடையே கணக்கில்லாத நூற்றாண்டுகள் கழிந்திருக்க வேண்டு மென்கின்றார்.

Professor Rapson says "The rough-chipped implements are found in large numbers in the southern half of the peninsula & in deposits which indicate that countless centuries must have elapsed between their last appearance and the dawn of Vedic History".

இதனாலும் தமிழின் தொன்மை நன்குபுலனாகும். குமரிமுனைக்குத் தெற்கிலிருந்த நிலத்தைக் கடல் கொள்வதற்குமுன் முதல் தமிழ்ச் சங்கமிருந்ததென்பது களவியல் உரையில் அறியப்படும். அக்காலத்தில் தமிழுக்கும் ஆரியத்திற்கும் தொடர்பு ஏற்பட்டதாகத் தெரியவில்லை

கடல் கோள் நிகழ்ந்த பின்னரே தொல்காப்பியம் எழுதப்பட்டது. தொல்காப்பியர் காலத்தில் தமிழ்வழங்கும் நிலங்கள் செந்தமிழ் நிலமும் அதனைச் சார்ந்த பன்னிரண்டு நிலங்களுமாக இருந்தன. செந்தமிழ் நிலத்திற்கும் மற்றைப் பன்னிரு நிலங்களுக்கும் பொதுவான தமிழ்ச்சொல் இயற்சொல்லெனப்பட்டன. பன்னிரண்டு நிலங்களுள் ஒவ்வொரு நிலத்திற்கு மாத்திரம் உரிய சொல் திசைச்சொல்லெனப்பட்டது. அக்காலத்தில் வடசொல்லின் தொடர்பும் ஏற்பட்டபடியால் அதனைத் தமிழிற் சேர்த்தற்குரிய விதியையும் ஆசிரியர் தொல்காப்பியனார் வகுத்தனர். வடசொற்களில் வடமொழிக்கு மாத்திரம் உரிய எழுத்துக்களை நீக்கி இரண்டுக்கும் பொதுவான எழுத்துக்களாலான சொற்கள் தமிழில் வழங்குவதே பொருத்தம் என்றார் ஆசிரியர். அதற்கு உதாரணம் விஷயம் என்பதை விடயம் என்றும், ஹரி என்பதை அரியென்றும் வழங்குவதாமெனக. வடசொல்லாயிருந்தாலும் பொதுவெழுத்தாலான சொல் ஆகுமென்பதும் ஒருகருத்தாகும். கமலம் என்பது அதற்கு உதாரணம். வடசொல்லில் சில எழுத்துக்களை நீக்கியும் சொற்கள் தமிழிற் பயில இடமுண்டு. கிருஷ்ணன் என்பதைக் கிருட்டினன் என்று கூறுது கண்ணன் என்று கூறுவதே அதற்கு உதாரணம். 'சிதைந்தன வரினு மியைந்தன வரையார்'' என்பது சட்டனை. இன்ன வடவெழுத்திற்கு இன்ன தமிழ் எழுத்து எழுதப்படவேண்டுமென ஆசிரியர் தொல்காப்பியனார் விதிக்கவில்லை. அவ்விதி பிற்காலத்து எழுந்ததாகும். ஆதியில் வடசொற்கள் மிகுதியாகப் பயிலாமையின் அவ்விதி வேண்டப்படாமலிருந்தது.

நன்னுலார் காலத்தில் தமிழ்நிலம் இல்லாத பிறநிலத்து மொழிகளும் திசைச் சொல் எனப்பட்டன. அவற்றைப் பதவியல் 20, 21, 22 சூத்திரங்களிற் காண்க. தமிழில் வழங்கும் எழுத்துக்களைக் கொண்டே எந்த வடசொல்லும் எழுதப்படவேண்டும் என்பதே நன்னுலார் கருத்து. சில இடங்களில் நெட்டெழுத்துக்கள் குற்றெழுத்தாகவும் திரிந்துவரும் என்று கூறியுள்ளார். இவ்விதிகளால் தமிழின் இயற்கை ஒலித்தன்மைகள் மாருமலும் சொல்லின் முதலில் வரவேண்டிய எழுத்து விதிகள் முரண்படாமலும் வடசொற்களும் பிற சொற்களும் தமிழில் வழங்குவனவாயின. இதனுல் தமிழ்மொழியின் இயலமைப்புப் பாதுகாக்கப்பட்டது.

பிற எழுத்தோசைகளை மாற்றமில்லாமல் தமிழில் வழங்கவேண்டும் என்னும் கொள்கைபற்றி இக்காலத்துச் சிலர் தமிழிற் புதிதாக எழுத்துக்களைச் சேர்க்கவேண்டுமென்று கூறுகின்றனர். அங்ஙனம் சேர்த்தலால் மொழியின் இயலமைப்பு மாறுபட்டு நயம் குன்றி ஒரு மொழி இரு பிரிவாகப் பிளவுபட்டு முன்னூலுக்கும் பின்னூலுக்கும் வேற்றுமை யேற்பட்டு மொழி கற்பார்க்கு இடர்ப்பாடும் முன்னூற் புறக்கணிப்பும் விளையும். மேலும் தமிழில் இப்போதுள்ள எழுத்துக்களைக்கொண்டே பிற மொழிச் சொற்களை எழுதக்கூடுமெனக் காலஞ் சென்ற திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் விளக்கியிருத்தலின் தமிழுக்குப் புதிதாக எழுத்துக்களைச் சேர்த்தல் மிகையாகும்; இப்போது இருக்கின்ற எழுத்துக்களிற் சிலவற்றை எடுத்துவிடுதலும், அவ்வாறே மொழிப் பயிற்சிக்கு இடையூருகும். ஆதலால், இப்போதுள்ள தமிழ் எழுத்துக்களைக் குறையாமலும், கூட்டாமலும் பாதுகாப்பதே நமது கடமையாகும்.

கடற்பெருக்கு நிகழ்ந்த பண்டைக்காலத்தே தோன்றிய தொல் காப்பிய இலக்கணத்திலேயே பேச்சு ஒலியின் மூல நூல் (Chemistry of articulate sounds) முறைக்கேற்றவாறு எழுத்தின் வரம்பு கட்டப்பட்டிருக்கின்றது. வாயின் உறுப்புக்கள் ஒன்றை யொன்று தொடாமல் இயங்குவதால் எழும் ஒலிகள் உயிர் ஒலிகள் எனப்படும். ஒன்றை யொன்று தொடுவதால் ஏற்படும் ஒலிகள் மெய் யொலிகளெனப் படும். வாயைத்திறப்பதனாலும், நாவினை உயர்த்துவதனாலும் இதழ்களைக் குவிப்பதனாலும் எழும் உயிர் ஒலிகள் அ, இ, உ எனப்படும். அகரத்தின் கூறும், இகரத்தின் கூறும் சேருங்கால எகரமும், அகரமும் இகரமும் தெளிவாய்க் கலப்பதனாலே ஐகாரமும், அகரக்கூறும் உகரக்கூறும் கலப்பதனாலே ஒகரமும், அகரமும், உகரமும் தெளிவாய்க் கலப்ப தனாலே ஒளகாரமும் உண்டாவன. நாக்கு நன்றாக மேல் எழாமலே ஒலிக்கக்கூடிய குற்றியலிகரமும், இதழை நன்றாகக் குவியாமலே ஒலிக்கக்கூடிய குற்றியலுகரமும் எழுத்துக்களின் சார்பாய் ஒலித்தல் அன்றித் தனியே நன்கு ஒலியாமையால் அவை எழுத்தெனப்படாவென ஆசிரியர் தொல்காப்பியனார் விதந்தோதினர். அவ்வாறே எழுத்தொலி களோடு சேர்ந்தே ஒலிக்கும் ஆய்தமாகிய மூச்சொலியையும் எழுத்தாகா தென ஆசிரியர் கூறினர். ஆகவே உயிரெழுத்து என்று சொல்லத் தகுவனவாகிய அகர, இகர, உகர, எகர, ஒகாரங்களும் அவற்றின் நீட்சி யும் ஐகாரமும் ஒளகாரமும் மூலமாகிய உயிர் எழுத்தொலிகளாகும்.

அவ்வாறே மெய்யெழுத்தின் மூல ஒலிகள் பதினெட்டுமே சிறப் பான மெய்யெழுத்துக்களென ஆசிரியராற் கருதப் பட்டன. உயிர் மூலங்கள் பன்னிரண்டெனவும், சார்பெழுத்துக்கள் (ஆய்தம், குற்றிய லிகரம், குற்றியலுகரம்) மூன்றெனவும் வகுத்து, அவற்றினின்றே பிற பேச்சொலிகள் எழுவனவென ஆசிரியர் குறிப்பால் உணர்த்தினமை யாலும், அவற்றிற்கு வரிவடிவங்கள் வகுத்திருப்பதாலும், அவற்றின் துணைகொண்டே பேச்சொலிகள் எல்லாவற்றையும் எழுதுதல் கூடுமாத லின் வேறு எழுத்துக்களைப் பிற மொழியினின்று சேர்ப்பதற்குக் காரண மில்லை. f' என்ற ஒலியை ஆய்தம் உடன் ஒலிக்கும் வகரத்தாற் குறிக்க லாம் (ஃவ); என்பதை ஆய்தம் உடன் ஒலிக்கும் பகரத்தாலும், 'ph' என் பதை ஆய்தம் உடன் ஒலிக்கும் பகரத்தாலும், 'ph' என்பதை ஆய்தம் பின்னொலிக்கும் பகரத்தாலும் குறிக்கலாம். 'man' என்பதிலுள்ள 'a' என்பதன் ஒலியைக் குற்றியலிகரங் கலந்த அகரத்தால் குறிக்கலாம். இவ் வோசைகள் தமிழ் மொழிக்கு வேண்டாமென்று விடுத்ததற்குக் காரணம் ஒலிச்செட்டும் இயற்கை யமைப்புமாமென்க.

(தொடரும்)

# செய்திகளும் குறிப்புகளும்:
# News and Notes

இந்தியப் பெரியாரான காந்தியடிகளாரின் மீது பூனவில் வெடிகுண் டெறிந்து அவருக்கு ஊறு செய்யக் கருதியது தமிழல்லாச் செய்கையா கும். அஃது அழுத்தமாகக் கண்டிக்கற்பாற்று.

*  *  *

சென்ற ஜூன் திங்கள் 10, 11-ம் நாட்களில், சென்னை மாகாணத் தமிழர் மாநாடு திருநெல்வேலியில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. சென்னை அரசாங்க வளர்நெறி யமைச்சர் திரு. தி. பொ. இராஜனவர்கள் அக்காலை நிகழ்த்திய திறப்புரை அவருக்கு தமிழ்மொழியின்பாலுள்ள பற்றுதலையும் அதன் வளர்ச்சியில் அவர் கொண்டுள்ள ஆர்வத்தையும் நன்கு தெரிக்கும். வரவேற்புத் தலைவர் திரு. கா. சுப்பிரமணியபிள்ளையவர்களின் வரவேற்புரையின் ஒரு பகுதி பிறிதோரிடத்தில் வெளியிடப் பட்டிருக்கிறது. ஏனைய பகுதியும் மாநாட்டுத் தலைவர் திரு. த. வெ. உமா மகேசுரம் பிள்ளை யவர்களுரையும் புலவர் மாநாட்டு வரவேற்புத் தலைவர் திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை, தலைவர் உயர்திரு மறைமலையடிகளார் ஆகியோரின் உரைகளும் செல்வியில் தொடர்ந்து வெளியிடப்படும். மாநாட்டில் நிறைவேறிய பல தீர்மானங்களில் பண்டிதர்கட்குப் பள்ளிச் சாலைகளில் உரிய நிலை யளிக்க வற்புறுத்தியதும், தமிழ் மொழியின் எழுத்துகளைக் கூட்டியுங் குறைத்தும் மனம்போற் சிதைக்கச் சூழ்ச்சி செய்த அறிவிலார் செய்கையைக் கண்டித்ததும், தமிழ்மொழியாக்கங் கருதிக் கலைநுட்பம் தெரிக்குஞ் சொற்களை யமைக்கும் முறையை வரையறுத்ததும் எடுத்து மொழியத்தக்கனவாம். மாநாட்டின் சார்பாக நிறுவப்பட்ட தமிழ்ச் சங்கம் நந்தா ஊக்கத்துடன் முந்துற்றுப் பணியாற்றும் என நம்புகிறோம்.

*  *  *

திருப்பனந்தாள் மடத்தலைவர் காசிவாசி சுவாமி நாத தேசிகரவர்கள் கல்வி வளர்ச்சிக்காக ஆண்டு தோறும் பெரும் பொருட் கொடை வழங்கி வருதல் தமிழ் நாட்டார் அறிந்ததே. பெருஞ்சிறப்பான இச்செயலுடன் அண்மையில் தஞ்சை நகர ஏழைமக்கள் விடுதிக்கென ஆயிரம் வெண் பொன் நன் கொடையளிக்க அவர் மனம் இசைந்திருப்பது "ஈர முடைமை யீகையினறிப" என்ற மூதுரைக்கு எடுத்துக்காட்டாகும்.

*  *  *

**விதிவிளக்கம்** என்ற பெயருடன் அழகிய சிறுநூலொன்றைத் திரு மிட்டா முனிசாமி செட்டி, B. A., என்பவர் எழுதிவெளியிட்டுள்ளார்கள். இஃது ஒரு சிறந்த சோதிட நூல். இதுகாறுஞ் சிக்கலானதெனக் கருதப்பட்டிருந்த பல சோதிட உண்மைகளை இதன்கண் நூலாசிரியர் ஆராய்ச்சிவன்மையினாலும் பழக்கத்தினாலும் கண்டு அறுதியிட்டுத் தெரித்துள்ளார். இதன் விலை ரூ. 1. வேண்டுவோர் மண்ணடி, புதுத் தெரு 41-ம் எண்ணிலுள்ள ஆசிரியருக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

........................டும் யோக்கியம் போலறிவை
மாற்று மலத்தை யொழிக்குந் தகைமைக்கு வான்கதிரு
மாற்றுங் குளிகையு மொப்பாம் பதிக்கென் றறைந்ததுபோர்த்
........................துண்டாயிற் றுணிந்தியம்பே. 60

ஆகம முத்தியி லீசர்க்கொப் பாமுயி ராமென்கையாற்
றேகமின் முத்தர்க்கு மீசன் குணங்களைச் செப்பியதா
.......................குளிகையு ஞாயிறு மென்றிசைத்தல்
பாகநன் முத்தர்க்கு மத்தன்மை சாற்றிய பண்பெனிலே. 61

சந்திர னுக்கிணை யாமுக மெண்ணி லச்சந்திரன்
..................வெளுப்பு முகத்திற்றுலங்கிடுமோ
தந்த முகத்தின் குணத்தி லதற்கொத் ததையறைவா
யெந்த வுயிர்க்கிறை சொன்ன குணத்தி லியம்புகவே. 62

அன்றி யரன்செய்வ னைந்தொழில் தன்னையென் றுய்ந்துயிர்தா
னென்றுந் தொழில்செய்வ தின்றென் றியம்பி யிருண்மலத்தைப்
பொன்ற லபிபவஞ் செய்யுமென் றெண்ணிப் புகன்றதென்னோ
நன்றுன் மொழியு மறந்தாய் மயங்கினை நன்றிகன்றே. 63

உன்னிய வாகம மண்ணலைப் போல வுரைத்தலின்றுற்
றன்னியல் பான்மலந் தீர்க்கின்ற யோக்கியந் தானுயிர்க்கு
மன்னிய தின்றுன் மதிமயக் காமதை மாற்றுகநீ
யன்னியஞ் சொல்லும் வகையு மின்றுலிங் கறைதுவமே. 64

மன்னிய பாசந் தவிர்த்த லபிபவ மாச்சொல்வர்காண்
முன்னவன் சத்தி மலபரி பாக முதிர்ந்தவர்க்கே
பின்னம தாக லபிபவஞ் செய்கின்ற பெற்றிமையிற்
சின்மயன் சத்தி சகாயநன் முத்தியிற் செப்பினமே. 65

ஆதவன் தன்கி ரணத்தா லிருளை யடர்த்திலனேல்
சோதிநன் னேத்திரந் தானும் பொருளைத் துணிந்தறிய
நீதியி லிவ்வண்ண மியாமிங் கிசைத்தன நித்தியனும்
வேதியன் றன்றுணை நித்தமு முத்தியில் வேறுமென்றே. 66

சொன்ன வசனங்க ளாலிங் கிறைவன் றுணையதனை
மன்னுநன் முத்தர்க்கு மாமென்று நாமும் மதித்தனங்கா

ணன்னதொன் றன்றி யிறைதன தானந்த மாகுமென்றிங்
குன்னி யுரைத்தது நன்றல நீரு முணர்ந்திடுமே. 67

பாச நிவர்த்தி யதுவே சுகமென்றிப் பாசமற்றோர்க்
கீசன தானந்த முற்றூற் சுகமென்ப தின்றென்பையோ
பேசிய துக்க நிவர்த்தியோ டின்பம் பெறுவதுவே
காசினி யோரும் புருடார்த்த மாகக் கருதுவரே. 68

... ... ... ...

... ... ... ...
திதில் சுகமுண்டு முன்சொன்ன குற்றமுந் தீருமெனில்
ஏத முறும்பிர வஞ்சத் தறிவின் னிறுமின்பமே. 70

மன்னவ னாலும் வியாதியி னாலும் மறம்புரியத்
துன்னு மனிதர் மிருகாதி யாலும் தொகுநிரையத்
தின்னலினாலு மிளைக்கு முயிர்கண்டிரங்கு முத்தர்க்
குன்னிய துன்பம் விட்டின்ப மெக்காலு முறுவதின்றே. 71

ஒழியாத் துன்பத் துழல்பிர வஞ்சங் கண்டுள் ளுருகப்
பழியாற் றொழிலெமக் காகா தெனப்பான் பாலுரைத்திங்
கெழுகோடி மந்திரத் திற்படி பாதியு மீசன்பொற்றாள்
வழுவாது பெற்றது சொல்லாக மத்தை மறந்தனையே. 72

உன்னுஞ் சிவத்துவ முத்தர்க் குலகை யுணர்தலென்று
சொன்னது வென்னர னைப்போலு மின்ப சொரூபமுண்டோ
சின்மயற் கின்புரு வத்தாற் சிவனென்று செப்புமறை
மன்னுயிர்க் கின்புறு வின்றப் பெயரான் வழங்கலின்றே. 73

அன்றிநற் கன்ம முற்றார் பிரவஞ்சத் தனுவத்திற்
றுன்றுவர் நாளுஞ் சுகத்திலென் றாகமஞ் சொல்லுதலா
லின்றுநின் முத்தரைப் பெத்த ரென்றேசொ லிருவினைதீர்ந்
தொன்றுதன் முத்தியென் றாகமஞ் சொற்றது முற்றிலையே. 74

வருபிர வஞ்ச மறிதலி னானின் மலன்றனையு
மிருவினை யுற்ற வுயிரொப்ப னென்றிங் கிசைத்தனையேற்
கருதரு காரண சத்தாய்ப் பிரவஞ்சங் காண்டலினாற்
றருபிர வஞ்ச மதனாற் சுகமின்று தானுவுக்கே. 75

ஊனுர் பிரவஞ்ச போகமாற் கின்றுயிர்க் குண்டென்ன
ஆனுத காரியங் காசினியென்னு மகவறன்னே
ஞானுவ மூர்தத் துட்சொல்லி யிருப்பது நாடிலேயோ
மானுர் காணுக்குத் தோடமுண் டென்பது வார்த்தையன்றே. 76

சின்மயன் போல்முத்தர் பார்ப்ப ருலகின்பம் சேர்வதில்லேப்
பன்னிய விட்டப் பிராத்தி பிரவஞ்சம் பார்ப்பதுவே
யின்ன வகையன்றி வேறு சுகமிங் கியம்புவதென்
சொன்ன............களியாவு மிலேயென்று சொல்லிடிலே. 77

முத்தியி லின்ப முண்டென்றே மொழிந்தனர் மூதறிவோர்
சித்தி யடைந்த வியோகரு மின்பஞ் செறிந்தனரா
............யிலின்ப மின்றென்ன நிகழ்த்துவதென்
னித்தன்மை கேவல மெய்தினர் தங்க ளியல்பதுவே. 78

ஆகமந் தானு மனுதின மானந்த மாஞ்சுகத்தை
பா.....................தை விடுத்த பாமுத்தர் தான்
ருகமுற் றென்றும் பொருந்துவ ரென்றிவண் சாற்றியதே
யூகம தாக வதனேயும் பார்ந்திங் குணர்ந்திலேயே. 79

ஆனந்த......................ந்தாவதென்று
ஞானங்கொண் டெப்பொருளும் முணர்வேனென்றுநன் றிசைத்தாய்
ஊனந்த விருங்கிரியை தொழிலற் றுறையு மென்றே
........................லுரைத்தாய் பொருண் மாறுபட்டே. 80

அன்றியு மானந்த மென்பதை யாகமத் தாய்ந்தநல்லோர்
நன்றுளதா மென்ப வாசக மென்ன நவி......
.......................ணங்களிசைத்த திவண மென்று
லுன்றனேப் போலத் தவறுரைப் பார்க ளொருவரின்றே. 81

சென்றிடுஞ் சித்திகன் னுலுயிர் தானும்......
...............ானனுக்கு முரித்தென்ற வுரையு முணர்ந்திலேகாண்
என்றுஞ் சிவத்துவந் தன்னேச் சிவானந்த மென்றிசைத்தல்
நன்றி செய்முத்தி பெறலா மலங்க...... 82

ஆருயிர்க் குள்ள சுகானந்தந் தன்னேநல் லாகமங்கள்
சீருடைத் தாகுஞ் சிவத்துவ மென்றிவண் செப்பியதே

பேருயிருந் தனதாயுறு மானந்தம் பெற்றிருக்க
நீருரை செய்த சிவானந்த மன்றென நீசொலினே. 83

இன்புரு வான சருக்கரை நாடி யினிதிசைந்தோர்க்
கின்பது நல்கிப் பின்று னருந்தாத வியல்பதுபோற்
றுன்பறு முத்தரு மன்னியர்க் கின்பம் தொகுப்பதல்லாற்
றுன்பறு மின்பச் சுகப்பேறில ரெனச் சொல்லுகவே. 84

அன்னியர் வந்து சருக்கரை தன்னை யருந்துதல்போ
லுன்னுயி ரானந் தந்தன்னை யருந்து மொருவருண்டோ
மன்னவ முயிர்தா னுஞ்சுக வடிவா யுரைத்தாய்
நின்னது வாமின் பந்துய்ப் பாரெவர்கள் நிகழ்த்துவையே. 85

சருக்கரை தான்சடந் தானருந் துந்தன்மை தானுமின்றும்
முருக்கிதழ் வாய்ரு மாடவர் தானும் முயங்கவந்த
பெருக்கமி லின்ப மவர்தம தாகின்ற பெற்றியைப்போ
லிருக்கிசை முத்தர்தம் மானந்தந் துய்ப்ப ரெனச்சொலினே. 86

ஆடவ ரானந்தந் தன்னை விளக்கிய வாயிழைக்கே
கூடிய வாடவ ரேசுக மாக்குங் குறிப்பதுபோல்
நீடிறை முத்தர்தம் மானந்த நல்க நிகழ் முத்தருந்
தேட ரனந்த நல்குவ ரென்றினிச் செப்புகவே. 87

சருக்கரை தன்னை யடைந்தார் தமக்குத் தருஞ்சுகந்தான்
செருக்கும் விடய குணமோ வுயிர்தனிற் சேர்குணமோ
வருக்கும் விடய குணமெனில் மாதரு மாடவரும்
பெருக்குஞ் சுகமும் விடய குணமெனப் பேசுகவே. 88

சருக்கரை யற்ற பொழுதிற் சுகமறுந் தன்மையைப்போ
லுருத்தனை யற்ற விடத்தா டவருட னெண்டொடியு
குருத்தெழு மின்பம் பொருந்தா திருந்திடுங் கொள்கையினு
னருக்குபுன் போகம் விடைய குணமென் றறைகுவரே. 89

அனுப் பால் விளங்கின்பம் யாவு மதன் குணமாமதனுல்
மணிற்சா ருடலுஞ் சருக்கரை தானும் வருவிக்குமென்
றெனிற் சார்துயர விடயக் குணமோ வுயிரின் குணமோ
கணிப்பாம் விடய குணமென நீயுங் கருதிடிலே. 90

ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது

சிலம்பு கஉ } மேய்கண்டான் யாண்டு-எகக ஆடித்திங்கள் 1934ஆ ஜூலைமீ—ஆகஸ்டுமீ { பரல் கஉ

## திருநாவுக்கரசு அடிகள் தேவாரம்

### திருக்குறுந்தொகை

திருகு சிந்தையைத் தீர்த்துச்செம் மைசெய்து
பருகி யூறலைப் பற்றிப் பதமறிந்
துருகி நைபவர்க் கூனமொன் றின்றியே
அருகு நின்றிடு மானைக்கா வண்ணலே.

பதவுரை:—

ஆனைக்கா அண்ணல்—திருவானைக்காவில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் தலைவனாகிய சிவபெருமான்

திருகுசிந்தையை—உலக நெறியில் முதல்வனை நினையாது மாறுபட்டு உலக நுகர்வுப் பொருள்களை நுகர்தற்பொருட்டு அவைகளையே நினைத்துக் கொண்டிருக்கும் தங்களது உள்ளத்தை

தீர்த்து—அம்மாறுபாட்டி னின்றும் முற்றிலும் நீக்கி

செம்மை செய்து—முதல்வனையே நோக்கி நேர்மையாய் நினைக்கும் படி செய்து

ஊறலைப்பருகி—(யோக முறையில் அவ்வாறு நினைத்தலால் திங்கள் மண்டலத்தில் உண்டாகி எழுகின்ற) அமிழ்தத்தை உண்டு

பதம்பற்றி—(அவ்வமிழ்தத்துக்கு முதலாயிருக்கிற முதல்வனுடைய) இரண்டு திருவடிகளையும் (மற்றோர் புகலிடம் இல்லை என்னும் கருத்துடன்) பற்றிக்கொண்டு

அறிந்து—(அத்திருவடிகளைப் பற்றியதனாலுண்டாகும் அருள்ஒளி அறிவினால் உயிர் முதல்வனையின்றி ஒன்றையும் அறியவும் விடயிக்கவும் மாட்டாது என்ற உண்மையை) அறிந்து

உருகி நைபவர்க்கு—(அவ்வாறு அறிகின்ற அருள் அறிவினால் முதல்வன் உயிருக்குக் கட்டு நிலையிலும் வீட்டு நிலையிலும் செய்து வரும் பேருதவியை நன்றி மறவாத அன்பினால் நினைந்து) அகங் குழைந்து உருகி தன் முனைப்புத் தேய்ந்து தேய்ந்து முற்றிலும் கெட்டுச் சிவமாந் தன்மையை உடைய அடியார்களுக்கு

ஊனம் ஒன்றும் இன்றி—மலத்தாலுண்டாகும் குறைவு (முழுவதும் நீக்கி அதனைச்) சிறிதும் இல்லை எனும்படி செய்து மெய்யறிவைக் கொடுத்து (அவர்களை ஆண்டருளி)

அருகு நின்றிடும்—அவர்கள் தன்னுடன் அத்துவிதமாய்க் கலந்து எப்பொழுதும் பேரின்பம் நுகரும்படி செய்து அவர்களோடு உடங்கியைந்து நின்றருளுவன்.

## விளக்க உரை

அண்ணல் என்ற சொல் முதற்பொருளாய 'சேர்ந்திருத்தல்' என்று பொருள்பட்டுப் பின் ஆகுபெயராய் உயிர்களோடு எப்பொழுதும் சேர்ந்திருக்கும் முதல்வனைக் குறிக்கிறது. இச்சொல்லினது பொருள் விளக்கத்துக்கு செந்தமிழ்ச் செல்வி சிலம்பு ௧ பரல் ௧—௩௧௧-௩௧௫ பக்கங்கள் பார்க்க. முதல்வன் உயிர்களுக்குத் தலைவனாய் அவைகளுடன் எப்பொழுதும் சேர்ந்துகொண்டிருந்து அவைகள் தன்னைச் சேர்ந்து பேரின்பம் அடைதற்பொருட்டு வேண்டுவன செய்துகொண்டிருக்கிறவன் என்பது அண்ணல் என்ற சொல்லாற் குறிப்பிடப்பட்டது. ஏ—அசை.

திருகு சிந்தை—வினைத்தொகை. உலக நெறியில் சிந்தையானது ஐந்து வஞ்சப் புலன்கள் வயப்பட்டு முதல்வனை நினையாது மறந்திருத்தல் பற்றி திருகு சிந்தை என்றார். திருகுதல் - மாறுபடுதல். முதல்வனை நேரே நினைந்து வழிபடுதலினின்றும் மாறுபடுதல். "மாறி நின்றென்னை மயக்கிடும் வஞ்சப்புலனைந்தின் வழியடைத் தமுதே ஊறிநின்றென்னுளெழு பரஞ்சோதி யுள்ளவா காணவந்தருளாய்" என்று மாணிக்கவாசக அடிகள் கோயிற்றிருப்பதிகம் முதலாவது பாட்டில் (388) கூறியிருத்தல் காண்க.

தீர்த்து—தீர்த்தல் என்பது விடுத்தல்; நீங்குதல். "தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட்டாகும்" என்பது தொல்காப்பியம் ௩௧௮-வது சூத்திரம். தீர்த்தல் என்பது மாறுபாடு முற்றிலும் நீக்குதலை உணர்த்துகின்றது. கடன் தீர்ந்தது என்பது உலக வழக்கில் கடன் முழுவதும் நீங்கியது என்ற பொருளில் வழங்குதல் நோக்குக. தீர்த்து என்றதனால் உலக நெறியை முற்றி

லும் ஒழித்துவிட்டு நெறியிற் செல்லும் 'ஞானத்திற் சரியை' குறிப்பிடப்பட்டது.

செம்மை செய்து—செம்மை என்பது நேர்மை—முதல்வனுடன் நேர்படச் சேர்ந்திருத்தல். முதல்வன் உயிரின் நலங்கருதி பிணக்கின்றி நேர்மையாய் உயிரினைச் சேர்ந்திருத்தல்போல உயிரும் பிணக்கின்றி நேர்மையாய் முதல்வனேடு சேர்ந்திருத்தல். இவ்வாறு உயிர் முதல்வனேடு நேர்பட்டு நிற்பதே இயற்கை; மாறுபட்டு வஞ்சப்புலனேடு சேர்ந்து நிற்பது செயற்கை. "பிணக்கிலாத பெருந்துறைப் பெருமான்" என்றும் "சட்ட நேர்பட வந்திலாத சழக்கனேன்" என்றும் மாணிக்கவாசக அடிகள் திருவாசகத்தில் கூறுதல் நோக்குக. மேலே தீர்த்து என்றது எதிர்மறைச் செயலையும் இங்கே செம்மை செய்து என்பது உடன்பாட்டுச் செயலையும் உணர்த்துகின்றன. செம்மை செய்து என்பதனல் 'ஞானத்திற் கிரியை' கூறப்படுகின்றது.

ஊறலைப் பருகி—ஊறல் என்றது தொழிற்பெயர். இங்கே ஆகுபெயராய்த் திங்கள் மண்டலத்தில் ஊறும் அமிழ்தத்தைக் குறிக்கின்றது. இந்த அமிழ்தமானது யோகி ஒருவர் தமது மூலாதாரத்திலுள்ள குண்டலி அக்கினியைப் பிராண வாயுவினலெழுப்பி இடைகலை பிங்கலை நாடிகளை அடைத்துச் சுழுமுனை நாடி வழியே செலுத்திப் புருவ நடுவுக்குமேலுள்ள திங்கள் மண்டலத்தை முட்டச் செய்தலால் உண்டாகின்றது என்று யோகநூல்கள் கூறுகின்றன. இந்த அமிழ்தத்தைத் திருமூலர் "யோகிகள் கால்கட்டி ஒண்மதி ஆனந்தபோத அமுதைப் பொசித்தவர்" என்று கூறுகிருர்; 335-வது திருமந்திரம் பாட்டு பார்க்க. இந்த அமிழ்தமானது ஊற்றிலிருந்து நீர் ஊறுதல்போல உண்டாதலால் ஊறல் என்ருர். இந்த அமிழ்தத்தை யோகி பருகியபின் அவரது உள்ளம் (சிந்தை) வஞ்சப்புலன்வழி நோக்குதலில்லை. ஊறலைப் பருகி என்பதனல் 'ஞானத்தில் யோகம்' கூறப்பட்டது.

பதம்பற்றி—பதம் - பாதம். முதல்வனுடைய இரண்டு திருவடிகளையும் குறிக்கின்றது. பற்றுதல் - இறுகப் பிடித்தல். "இன்பமே உனைச் சிக்கெனப்பிடித்தேன்" (545) என்று மாணிக்கவாசக அடிகள் கூறுதலை நோக்குக. திருமூலர் 882-வது திருமந்திரப் பாட்டில்,

"உண்ணீ ரமுத மூறு மூறலைத் திறந்
தெண்ணீர் இணையடித் தாமரைக்கே செல"

என்று கூறியருளினர்.

உருகி நைபவர்க்கு—உருகுதல் என்பது முதல்வன் செய்யும் பேருதவியை நினைந்து அன்பினல் அகங்குழைந்து உருகுதல். உயிர் முதல்வனேடு இரண்டற (அத்துவிதமாய்)க் கலத்தற்கு அன்பினல் உருகிக் குழைதல் இன்றியமையாததாகும்.

நைதல்—தேய்தல், குறைதல், இங்கே அது ஆன்மபோதம் (தன் முனைப்பு) தேய்ந்து தேய்ந்து முற்றிலும் நீங்கி முழுவதும் சிவமாந்தன்மையை அடைதலைக் குறிக்கின்றது. "நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்" என்ற திருத்தாண்டகப் பாட்டில் நைதல் இப்பொருள்படுதல் அறிக.

திருகுசிந்தையைத் தீர்த்தலும், அதனைச் செம்மை செய்தலும், ஊறலைப் பருகலும், உருகி நைதலும் ஒன்றன்பின் ஒன்று ஏதுவும் பயனுமாய் உயிரின்கண் நிகழும் செயல்களாம்.

ஊனம் ஒன்று இன்றி—ஊனம் - குறைவு. உயிருக்கு மலத்தாலுண்டாகும் குறைவு. ஒன்றும் இன்றி - சிறிதும் இன்றாகச் செய்து. மலமுழுவதும் நீங்கினாலொழிய முழு வியாபக அத்துவிதக் கலப்புப் பேரின்பம் அடைய முடியாதாதலின் ஊனம் ஒன்றின்றி என்றார். ஒன்றும் என்பதிலுள்ள உம் விகாரத்தாற் றொக்கது. 'ஊனத்தை நீக்கி உலகறிய என்னை ஆண்டவன்' என்று அடிகள் கோயில் திருவிருத்தம் 6-வது பாட்டிற் (80-6) கூறியருளினார்.

அருகு நின்றிடும்—அருகு-பக்கல். அது இங்கே உடனாய அல்லது உடங்கியைந்த என்ற பொருளில் வந்தது. நின்றிடும்—நிலையாக நின்றருள்வன். அதாவது கலந்தபின் பிரிவதில்லை என்பது கூறப்பட்டது. "அப்பணைந்த வுப்பி னுள மணைந்து சேடமாங் கப் பின்றா மீசன் கழல்" என்று சிவஞானபோதம் 11-வது சூத்திர வெண்பாக் கூறுதல் காண்க.

அருகு நின்றிடும் என்பதனால் உயிரும் சிவமும் கலப்புத் தன்மையால் ஒன்றாயினும் பொருட்டன்மையால் வேறு என்பது குறிப்பிடப்பட்டது. ஊனமொன்றின்றியே அருகுநின்றிடும் என்பதனால் துரியாதீத நிலையின் கண்ணுளதாகிய ஞானத்தில் ஞானம் கூறப்பட்டது. இப்பாட்டில் திருகு சிந்தையைத் தீர்த்து என்பது சென்ற திங்கள் வெளியீட்டில் வந்த "மெய்யராகி" என்ற திருஞான சம்பந்த அடிகளுடைய தேவாரப் பாட்டில் 'பொய்மை நீக்கி' என்பதனோடும், 'செம்மை செய்து' என்பது 'மெய்யராகி' என்பதனோடும், 'பருகி ஊறலை' என்பது 'வேதனையைத் துறந்து' என்பதனோடும், 'உருகி நைபவர்க்கு உள்ளமொன்றின்றியே அருகு நின்றிடும்' என்பது "செய்யரானார் சிந்தையான்" என்பதனோடும் கருத்தில் ஒத்திருத்தல் கண்டு கொள்க.

—மா. வே. நெல்லையப்பபிள்ளை.

---

# இலக்கணமும் இலக்கியமும்:
# LANGUAGE AND LITERATURE

## குறுந்தொகை

### மூலமும் விளக்க உரையும்

[இலங்கைதயடிகள் வித்துவான் இரா. சிவ. சாம்பசிவன்]

(பதிப்புரிமை ஆசிரியர்க்கே)

(முன் ருாஅ-ம் பக்கத் தொடர்ச்சி)

### குறிஞ்சி

இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தவழித் தலைமகளை, நாணின் நீக்கு தற்பொருட்டு, இயற்கைப் புணர்ச்சிக்கண் இடையீடுபட்டு நின்ற தலைமகன், மெய்தொட்டுப் பயிறல் முதலாயின அவள் மாட்டு நிகழ்த் தப்படுமோற்ருற் கூடிய தனது அன்புதோன்ற நலம் பாராட்டியது.

இறையனுர் பாடியது

2. கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி!
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோ நீயறியும் பூவே.

பதவுரை:— கொங்குதேர் வாழ்க்கை—பூந்தாதை ஆராய் கின்ற வாழ்க்கையினையும்; அம் சிறை—அழகிய இறகினையு முடைய; தும்பி—வண்டே! காமம் செப்பாது—விரும்பியபடி இச்சகம் பேசாது; கண்டது மொழிமோ— உண்மையாகக் கண் டறிந்ததைச் சொல்; பயிலியது கெழீஇய நட்பின்—நெருங்கு தல் பொருந்திய நட்பினையும்; மயில் இயல்—மயிலைப் போன்ற சாயலையும்; செறிஎயிறு—நெருங்கிய பற்களையு முடைய; அரிவை கூந்தலின்—இந்தப் பெண்ணினது கூந்தலைக் காட்டிலும்; நீ அறியும் பூ—நீ அறியும் பூக்களுள்; நறியவும் உளவோ--மண முள்ளனவும் உள்ளனவோ?

கொங்கு — பூந்தாது, தேன். தேர்வாழ்க்கை—வினைத் தொகை. சிறைத்தும்பி—இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனு முடன் தொக்க தொகை. தும்பி—அண்மைவிளி. மொழிமோ

—இதில் 'மோ' முன்னிலை அசை. கெழீஇய—கெழுவிய. எயிறு முன்தோன்றி விழுந்து பின் முளைக்கும் பல். செறி எயிறு—வினைத்தொகை. அரிவை—காலவாகுபெயர். அரிவை, எழுவகைப் பருவப் பெண்களில் பத்தொன்பதிற்குமேல் இருபத்தாறு வயதிற்கு உட்பட்ட பெண். கூந்தலின்—இன்—ஐந்தாம்வேற்றுமையுருபு; எல்லைப் பொருளது; உவமைப் பொருளது என்றும் கூறலாம். பூவே—பூக்களுள் என ஏழன் உருபுவிரிக்க. துப்பி—கருநிற முள்ள வண்டு. பயிலியது—தொழிற்பெயர். கெழீஇய—மிக்க; உயிரளபெடை.

இதனால் தலைவிகூந்தலின் மணம், பூக்கள் எவற்றினும் விஞ்சிய இயற்கை மணம் உடையது என வியந்து நலம் பாராட்டியதாம்.

காமம் செப்பல்—விரும்புதற்குக் காரணமான சொற்களைச் சொல்லல்.

## மேற்கோள் விளக்கம்

1. "கொங்குதேர்......பூவே"—தன்கண் நின்ற அன்பு வெளிப் படுத்துத் தலைமகளைப் புகழ்ந்து நயப்புணர்த்திற்றாயிற்று என்பது போந்த பொருள். —(இறையனாரகப் பொருள்—பக். 54)

2. இயற்சீரும் உரிச்சீரும் ஆசிரியத்துள் விரவிவந்தன. (உ-ம்) "கொங்குதேர்......பூவே" (யாப்பு—காரிகை—பக். 71)

3. "காமம் செப்பாது"—"காமம் புகலாது"—(நாலடியார்-42)
"காமம் செப்பி" —(பெருங்கதை—1-41-101)

4. கண்டது மொழிமோ"—என்பது 'மோ' என்னும் இடைச் சொல். —(நேமிநாதம்—பக். 92)

5. "காமம் செப்பாது கண்டது மொழிமோ"—
"வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்
தீரக் காய்ந்துழி நல்லவும் தீயவாம்"—(சீவகசிந்தாமணி-888)
"காசில் காமம் செப்பிக் கண்ணினால் இரப்பர்" ( ஷை 2549)

6. "காமம் செப்பாது கண்டது மொழிமோ"—முன்னிலை அசைச்சொற்களுக்கு உதாரணம்—நன்னூல்—சங்கரநமச்சிவாயப் புலவர்—பக்கம் 243; நன்; மயிலைநாதர், பக்கம் 298; தொல்காப்பியம் சொல்லதிகாரம், இளம்பூரணம் பக்கம் 269; சேனாவரையம்; 274 சூ; தெய்வச்சிலையார்; 269 சூ: உரை. ஒரு குணம் தழுவிய உரிச் சொல் என்பதற்கு உதாரணம்.
(நன்னூல்—சங்கரநம—பக். 250) (நன்—மயிலைநாதர்—பக். 309.)

7. காமம்செப்பாது கண்டது மொழிமோ'—என்றது 'என் நிலத்து வண்டாதலின் எனக்காகக் கூறாதே சொல்' என்றலிற் குறிஞ்சி நிலம் ஒன்றாயிற்று.
—(தொல்—பொருள்—களவு—பக்கம் 356. நச்சினார்க்கினியம்.)

8. "அப்பாலோர் வண்டை யனுப்பின் அவர் காமம் செப்பாதே என்றூற் றிகைக்குமே"— (தமிழ் விடுதூது கண்ணி 108).

9. "அம்சிறைத்தும்பி"—

"மாஅ லஞ்சிறை மணிநிறத் தும்பி" —(குறிஞ்சிக்கலி-10-2)

"மணிச் சிறைத்தும்பி"— (குறுந்தொகை-392)

"கொங்குதேர் வாழ்க்கைத் தும்பி" —(ஐங்குறுநூறு-20)

"மலர் தொறும் சிறுதேன் நக்கித் திரிவண்டு"

—(திருவிளையாடல்படலம் 52—செய்யுள் 69).

'அகமுனர்ச் செவிகை வரின் இடையன கெடும்' என்பதற்கு மேற்கோள்— (நன்னூல்—சங்கர நம—பக்கம் 100).

"காந்த ளூதிய மணிநிறத் தும்பி"— (நற்றிணை-17)

"காந்த, ணறுந்தா தூதுங் குறுஞ்சிறைத் தும்பி"—

(ஐங்குறுநூறு-239)

"காந்த, ளணிமலர் நறுந்தா தூதுந் தும்பி"—(அகநானூறு-108)

"அறுசில் கால வம் சிறைத் தும்பி"— (ஐங்குறுநூறு-20)

10. அரிவை கூந்தலின் நறியவும் உளவோ"—
"மண நாறு கதுப்பினுய்" —குறிஞ்சிக்கலி 73.

11. "கொங்குதேர் வாழ்க்கை" என்பதும் இளவேனிலாயிற்று; தும்பி கொங்கு தேரும் காலம் அது வாகலின்"—தொல்காப்பியம், அகத்திணையியல், பக் 51. நச்சினார்க்கினியர் உரை)

12. "கொங்குதேர் வாழ்க்கை அம்சிறைத் தும்பி!" என்று விளித்தது, "நறியவு முளவோ நீ யறியும் பூவே" என்று வினுதற்குத் தகுதியுடைமை தோன்ற என்க.

13. "கொங்குதேர் வாழ்க்கை.........பூவே"—பிரிதல் கிமித்தம். இதனுள், 'தும்பி' என்றது முன்னிலை யாக்கல்; 'கண்டது மொழிமோ' என்றது சொல்வழிப் படுத்தல்; 'கூந்தலின் நறியவு முளவோ' என்றது நன்னய முரைத்தல்; "காமஞ் செப்பாது' என்றது என்நிலத்து வண்டாதலின் எனக்காகக் கூறாது மெய் கூறெனத் தன் இடம் அதுவாகக் கூறலின் இடமணித் தென்றது; 'பயிலியது நட்பு' என்றது தன் நிலை யுரைத்தல்"—(தொல்காப்பியம், களவியல், சூத்திரம் 101' நச்சினார்க்கினியர் உரை; பக்கம் 371)

14. 'இச் செய்யுள் உவகைபற்றிக் கூறியது'

—(தொல்—பொருளியல்—பக்கம் 781)

15. "கொங்குதேர் வாழ்க்கை" என்னும் பாட்டு இயற்கைப் புணர்ச்சிக்கண் நிகழ்ந்த செய்யுள்.

—(தொல்—செய்யுளியல்—பக்கம் 490)

16. இச் செய்யுளைப் 'பெருநயப் புரைத்தல்' என்பதற்கு உதாரணம் காட்டுவர். —(நம்பியகப் பொருள்—சங்கப்பதிப்பு)

17. "நீயறியும் பூவே"—எழன் உருபு இறுதிக்கண் தொக்கது.

"ஐயுங் கண்ணும் அல்லாப் பொருள் வயின்
மெய்யுருபு தொகாஅ விறுதி யான"—என்பது விதியாகலின்.
—(தொல்—சொல்—வேற்றுமை மயங்கியல் 22)

18. மதுரைச் சோமசுந்தரக் கடவுள் இப் பாசுரத்தைத் தருமி என்னும் அந்தணனுக்கு இயற்றித் தந்தருளினர்.
—(பரஞ்சோதி முனிவர்—திருவிளையாடல் 88).

திருவாலவாயுடையார் திருவிளையாடலில், கிழியறுத்த திருவிளையாடலில்,

வழுத்திய மறையோன் தன்மை
கண்டவன் மனத்தி லாசை
ஒழித்திடு வான்வி ரும்பி
யுரகமா ணிக்கச் செம்பொன்
குழக்கியை நாதன் அங்கண்
'கொங்குதேர் வாழ்க்கை' என்றோர்
கிழிக்கிசை கவிதை பாடிக்
கொடுத்தனன் கீர்த்தி வேட்டு"—என்று கூறுவதால் அறிக

"தருமிக்கே,
ஓர் வாழ்க்கை வேண்டி யுயர்கிழிகொள்வான் 'கொங்கு தேர் வாழ்க்கை' என்றெடுத்த செய்தியும்' '—(தமிழ்விடு தூது 115)

19. "மதுரையில் சண்பகமாறன் என்னும் வங்கிய சூடாமணி மாறன் தன் மனைவி கூந்தலிடமாகப் போந்த மணத்தைக் கருத்திற் கொண்டு, தன் உள்ளக் கிடக்கையை அறிந்து பாடுவார்க்கு ஒரு பொற்கிழி யளிப்பதாகச் சங்க மண்டபத்தில் தூக்கினன். அக்காலை அவ் ஊரிலிருந்த அந்தணனாகிய தருமிக்கு இறைவன் இப்பாசுரத்தைப் பாடிக் கொடுக்க; இதில் நக்கீரர் பொருட் குற்றமுண்டு என வாதிட்ட போது தாமே புலவராய்ச் சென்று வென்று பொற்கிழியைத் தருமிக்கு அளித்தார்"—என்பது புராணவரலாறு.

மெய்ப்பாடு:—புணர்ச்சிபற்றிய வுவகை. என்னை?

"செல்வம் புலனே புணர்வு விளையாட் டென்றல்ல னித்த வுவகை நான்கே"—(தொல்-பொருள்—மெய்ப்பாட்டியல்-11) என்பாராகலின்.

பயன்—நயப்பு அறிவித்தல்

———

# அறிவியற் பகுதி - Science

## உளநூல் (Psychology)

[திரு. மா. பாலசுப்பிரமணியம், எம். ஏ.]

(முன் ௬௧௯-ம் பக்கத் தொடர்ச்சி)

### தற்சார்புக் கூட்டு நிலைமை (The Ego-Complex)

முப்பெருங் கூட்டு நிலைமைகளுள் தலையாயது தற்சார்புக் கூட்டு நிலைமையே யாகும். இதன் தோற்றமும் மானிடப் பிறவியின் தோற்றமும் ஒரு காலத்தன. இதன் முதற்றோற்றம் தன்னுணர்ச்சி எனப்படும்; ஆங்கிலத்தில் ஸெல்ப் கான்ஷஸ்நேஸ் (Self - Consciousness) எனப்படும். இக்கூட்டு நிலைமையின் முதலுறுப்புக்கள் புலனறிவுகளே. மற்ற உறுப்புக்களாவன, எண்ணங்கள், மெய்ப்பாடுகள், பழக்கங்கள் என்பன. இத் தற்சார்புக் கூட்டு நிலைமையைத் தூய்மைப் படுத்தும் வழி சிந்தித்தல் என்பது. இதனை ஆங்கிலத்தில் ஸெல்ப் இன்ட்ராஸ்பெக்ஷன் (Self-introspection) என்பர். இதுவே, கேட்டல், சிந்தித்தல், தெளிதல், அணைதல் என்னும் நாற்பால் முத்தி நெறியுள் கூறப்பட்ட சிந்தித்தலாம். தற்சார்புக் கூட்டு நிலைமையில் எண்ண முயற்சிகள் (Conations) சிலவுள. அவைகளுள் மிக்க வன்மை யுடையன இரண்டு. அவை வாழ்வெண்ண முயற்சி, ஆற்றலெண்ண முயற்சி என்பன. ஆங்கிலத்தில் அவை வில் டு லிவ் (Will to Live) வில் டு பவர் (Will to Power) எனப்படுவன. எண்ண முயற்சியாவது எண்ணத்தால் முயறல்.

> எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
> திண்ணிய ராகப் பெறின்

என்னும் வள்ளுவர் வாய்மொழி ஈண்டு உன்னற்பாலது. இனி, வாழ்வெண்ண முயற்சி என்பது நீடுவாழ எண்ணத்தால் முயறல் எனும் பொருட்டு; ஆற்றலெண்ண முயற்சி என்பது ஆற்றல் அடைய எண்ணத்தால் முயறல் எனும் பொருட்டு. மேலும் சில எண்ண முயற்சிகள் உள. அவை அறிவெண்ண முயற்சி, தொழிலெண்ண முயற்சி முதலியன. ஆங்கிலத்தில் மேற்கூறப்பட்ட இரண்டும் வில் டு நோ (Will to Know) என்றும் வில் டு டு (Will to Do) என்றும் கூறப்படுகின்றன. தூய எண்ண முயற்சிகளால் உளத்தைச் செம்மைப் படுத்த இயலும்.

தற்சார்புக் கூட்டு நிலைமை குழவிப் பருவம் முதற்கொண்டு முதுமைப் பருவம் வரை முதிர்ச்சியும் விரிவும் பெறுகின்றது. வாழ்க்கையில் யாதொரு இடுக்கணும் நேராமலிருந்தால் இக் கூட்டு நிலைமை ஒரு திண்மையை அடைகின்றது. இடுக்கண்கள் நிறைந்த வாழ்க்கை பெற்றவனுடைய தற்சார்புக் கூட்டு நிலைமை ஆக்கமழிந்து சிதறிவிடுகின்றது. அறத்தாற்றின் நிற்பானுடைய தற்சார்புக் கூட்டு நிலைமை தூய்மையிற் பெருகி, வன்மையில் ஓங்கி விளங்கும்.

தற்சார்புக் கூட்டு நிலைமையின் சிறந்த உறுப்புக்கள் தன்னுறுதி, தன்னிழிவு என்னும் உட்பாடுகளும், இறும்பூது, சிறுமை என்னும் மெய்ப்பாடுகளுமே என்று முன்னர்க் கூறினேம். ஸுபீரியாரிடி காம்ப்ளேக்ஸ் (Superiority Complex) என்னும் மீக்கோளும் தன்னுணர்ச்சிக்கும், இன்ஃபீரியாரிடி காம்ப்ளேக்ஸ் (Inferiority Complex) என்னும் குன்றக்கோளும் தன்னுணர்ச்சிக்கும் முறையே சார்பாக உள்ளவை தன்னுறுதி, தன்னிழிவு என்னும் உட்பாடுகளே. தன்னைத்தானே பிறரினும் மேலாகக் கருதும் உணர்ச்சியே மீக்கோளும் தன்னுணர்ச்சி எனப்படும். தன்னைத்தானே பிறரினும் கீழாகக் கருதும் உணர்ச்சியே குன்றக்கோளும் தன்னுணர்ச்சி எனப்படும். இவ்விரண்டும், தற்சார்புக் கூட்டு நிலைமையும் இனச்சார்புச் கூட்டு நிலைமையும் கலப்ப, எழுந்தனவாம்.

## இனச்சார்புக் கூட்டு நிலைமை
## (The Herd - Complex)

மனிதன் யாண்டும் இனச்சார்பு விழைவினை யுடையவனாவான். ஒவ்வொரு மனிதனுடைய உள்ளத்திலும் இனச்சார்பு விழைவு என்னும் உட்பாடு உண்டு. இனத்தின்கண் எழுகின்ற உணர்ச்சிகளும் மெய்ப்பாடுகளும் மனிதனுடைய உள்ளத்தில் அவனை அறியாமலே பதிகின்றன. இப்பதிவு நேர்வதற்குக் காரணம் மனிதனுடைய உள்ளத்தில் இனச்சார்பின் உட்பாடுகள் உள்ளமையே. இனச்சார்பு விழைவு (Gregariousness) என்பது மனிதன் தானே மேற்கொண்ட பழக்கங்களில் ஒன்றன்று: அவனுடைய உளப்பான்மையை ஆளும் கருவிகளில் ஒன்றாம்.

தேனீக் கூட்டத்தில் உள்ள ஒவ்வொரு தேனீயும் தனித்தியங்க மாட்டாது. ஓநாய்க் கூட்டத்தில் உள்ள ஒவ்வொரு ஓநாயும் தனித்தியங்க மாட்டாது. இனச் சார்பினுட்பாடு இக் கூட்டங்களை வன்மையுடன் பிணிக்கின்றது. ஆறறிவுடைய மக்களினத்தில் இவ்வினச் சார்பினுட்பாடு பரவி இருக்கின்றதேயொழிய மிக வன்மையுடன் பிணிப்பதில்லை. மனிதன், இன

நலத்திற்கு ஏற்ற முறையில் தன் தொழிற்பாடுகளை அமைத்துக் கொள்ளும் திறனுடைய வனுதலின், அவன் தேனீப் போலவும் ஓநாய் போலவும் வலிய இனச் சார்பினுட்பாட்டுக்கு உட்படுவ தில்லை. மக்களினத்தில் இனச்சார்பினுட்பாடு கோள்கைத் துறையில் (Realm of Ideas) மேம்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு இனத்தாரிடையும் காணக் கிடக்கின்ற மூடநம்பிக்கைகள் (Non - rational Beliefs) இனச் சார்பினுட்பாட்டால் எழுந்தனவே. ஒவ்வொரு மனிதனும் பின்பற்றும் ஒழுக்க நெறியும் (Moral Laws) இனச்சார்பி னுட்பாட்டின் விளக்கமும் பயனுமாம். ஒழுக்க உணர்ச்சி (Moral Sense) என்று சொல்லப் படுவதும் மனிதன் தன் இனத்துடன் நல்முறையில் இயைபு பட்டிருத்தற்கு அமைந்த இனச்சார்பி னுட்பாட்டின் நுணுக்கமே. ஒழுக்க நெறியின் ஆணைக்குக் கட்டுப்பட்டு ஒழுகல் என்பது, தனிமனிதன் தன் இனத்தினுல் பெற்ற இனச்சார்பி னுட்பாட்டின் ஆற்றலுக்கு அடங்கி நடப்பதாம்.

ஒழுக்கநெறியின்பாற்பட்டொழுகல் தற்சார்புக் கூட்டு நிலைமையிற் பாற்பட்ட தன்றோ? எனின், அன்று, தற்சார்புக் கூட்டு நிலைமை இனச் சார்புக் கூட்டு நிலைமையால் பலவகை மாற்றமடையும். அவ்வாறு மாற்றமடைந்தவைகளில் ஒன்றே ஒழுக்க நெறியின் பாற்பட் டொழுகல் என்பது. எனவே அது இனச்சார்புக்கூட்டு நிலைமையின்பாற்படும். (The ego - complex is largely modified by the herd complex, and the ethical self could not exist without the herd; but the ego - complex, as such, pre - existed and is always a perfectly distinct thing).

வழக்கு (Convention) என்று சொல்லப்படுவதும் இனச் சார்புக் கூட்டுநிலைமையின் பயன்களிலொன்றும். என்னெனில் இனம் தனிமனிதனுடைய செய்கைகளை ஆளுதலே வழக்கு எனப்படுவது. அவைமுறை (Etiquette) என்பதும் இன நலங்கருதி தனிமகன் மேற்கொள வேண்டிய முறைகளில் ஒன்றும்.

இனப்பழக்கம் (Gregarious Habit) மனிதனுக்கு இடைக் காலத்தில் நேர்ந்த தொன்று. முதலில், மனிதன் தனியனுக குகைகளில் வாழ்ந்து வந்தான். பின்னர் வெளி வாழ்க்கை (Life of the plains) மேற்கொண்ட பொழுது இனப் பழக்கத்தைக் கொள்ளவேண்டிய நிலை ஏற்பட்டது.

இனி இனத்தினுடைய உளச் சார்புப் பயனையும் (Psychical effect of the Herd), கூட்டத்தினுடைய உளச்சார்புப்பயனையும் (Psychical effect of the Crowd) பிரித்தறிய வேண்டும். இனச்சார்புப் பயன் நிலையுள்ளது; கூட்டச் சார்புப்பயன் சமயம்

நேரும் பொழுது தோன்றுவது. துரத்திப் பிடித்த கள்வனைப் புடைக்கும் போது கூட்டச் சார்புப்பயன் தோன்று கின்றது. மெய்ப்பாடுகளைத் தூண்டும் சொற் பொழிவைக் கேட்கும் பொழுது கூட்டச் சார்புப்பயன் தோன்று கின்றது. இன உளச் சார்புப்பயன் என்றும் நிலைத்திருந்து மனிதனுடைய உள வாழ்க்கையை நடாத்துவது.

இனச் சார்புக் கூட்டு நிலைமை பல வகைப்படும். எடுத்துக் காட்டாக, ஒரு மனிதன் தன் உறவினரிடை ஒரு இனச் சார்புக் கூட்டு நிலைமையையும், தன் தோழ ஊழியரிடை ஒரு இனச்சார் புக் கூட்டு நிலைமையையும், தனக்கேற்புடைய அரசியற் கொள்கை யரிடை ஒரு இனச் சார்புக் கூட்டு நிலைமையையும், தனக்கேற் புடைய பெருநெறிக் (Religion) கொள்கையரிடை ஒரு இனச் சார்புக் கூட்டு நிலைமையையும் பெற்றிருப்பான். ஒரு நாட்டு மக்களிடை காணப்படுகின்ற, செல்வர், நடுவேகுப்பார், ஏழைக் குழுவினர் (Aristocrats, Bourgeouis, Proletariat) என்று கூறப்படுகின்ற ஒவ்வொரு கூட்டத்தாரிடையும் ஒவ்வொரு இனச் சார்புக் கூட்டு நிலைமையுண்டு. இதனை வகுப்பு உணர்ச்சி (Class Consciousness) என்பர்.

இனச் சார்புக் கூட்டு நிலைமையின் மேல் நிலை, உலகம் முழு வதையும் தன்னுள் கொண்ட இனத்தின் பாற்பட்டதாகும். இவ் வினத்தை ஆங்கிலத்தில் வோர்ல்ட் ஹேர்ட் ("World Herd") என்பர். இந்நிலை எளிதிற் கைகூடுவதன்று: சில பேரறிவாளரின் உளங்களில் கொள்கை யளவாக இந்நிலை நிற்கின்றதே யொழிய செயற்கை முறையில் இன்னும் அமையவில்லை. எனினும், நாள டைவில் செயற்கை முறையிலும் ஏற்படும் என்பது திண்ணம்.

(தொடரும்)

---

## பொருணூல் (Economics)

[திரு. B. நடராஜ பிள்ளை, B. A., (Hons.)]

(முன் ருஉஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

### பணத்தின் அவசியம் மிகுதல்

அதே காலத்தில் பண்டமாற்றல் நிலையிலிருந்து நாணய மாற்றல் நிலைக்கு நம் நாடு நெகிழ்ந்ததாலும், நாட்டிலே வாணிப முயற்சிகள் சற்று விரிந்ததாலும் பணத்தின் தேவையும் மிகுந் தது. பணம் வழங்கும் பணிகள் மிக மிக, பணத்தின் தேவையும் மிகும். அதன் உபயோகம் விரிய, அதன் அவசியமும் அதிகரிக் கும். நாணயமாற்றல் முறைவிரிய, கொடுக்கல் வாங்கல்கள் பல்க, பண்டங்களின் விலைகளும் மாற்றமடைந்தே தீரும். ஆங்கில அரசு இந்தியாவில் நிறுவியதோடு, நிலவரி செலுத்துவதும், அர

சாங்க வேலையாட்களுக்குச் சம்பளம் கொடுப்பதும் ரொக்க மாகவே யென்று விதிக்கப்பட்டது. பிரிட்டிஷ் அரசாங்கம் வருவதற்கு முன்னர் நிலவரியானது சிற்சில வகைப் பூக்களில் பணமாகவும் பெரும்பான்மை தானிய வகைகளாகவும் வசூலிக்கப்பட்டு வந்தது. கிழ இந்திய வர்த்தகக் கம்பெனியார் வரிகளைக் கண்டிப்பாக ரொக்கமாகவே பிரிப்பதென்று பறைசாற்றினர். இது வரி செலுத்தும் மக்களுக்குச் சில அசௌகரியங்களை உண்டுபண்ணிற்று. இத்தகைய ஒரு புது முறையை ஏற்படுத்தக் காலமோ ஏற்றதா யிருக்கவில்லை. தஞ்சாவூர் ஜில்லாவிலே 1804-7-ல் ஆட்சியி லிருந்த அமானித் திட்ட காலத்தில் பண வரியானது வழக்கத்திற் கொணரப்பட்டது. 1807-10 வரையி லிருந்த மூவாண்டு வார காலத்தில் இந்தப் புது முறைக்கு ஊக்க மளிக்கப்பட்டது. முடிவில் பின்னே வந்த 'ஒழுங்கு'த் திட்ட காலத்தில் இறுதியாக நிறுவப்பட்டுவிட்டது. ஆதியில் குடியானவர்களைப் பலவந்தமாக அரசாங்கத்தார் பண வரியை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டிக்கொள்ளவில்லை. எனினும் பண வரியைப் பெரும்பாலாக பரப்புவதற்கு வேண்டிய ஊக்கங்கள் பற்பல முறைகளில் அளிக்கப்பட்டன. தீர்வை முறையினை ஆட்சியிற் கொணரும் நோக்கத்தோடு தொன்றுதொட்டு தங்கள் உரிமையெனக் கொண்டிருந்த மிராசுதார்களின் கிராம வரித் திட்டத்துக்கு மீண்டும் புத்துயிர் அளித்து அவர்களைத் திருப்தி பண்ணுவதாக 1808-10-ல் முடிவு கட்டப்பட்டது. மிராசுதார்களின் கீழ்க் குடியானவர்கள் வாரத்தினை நெல்லாகச் செலுத்தி வந்த பழக்கத்தை யொழித்துப் பணக் குத்தகை முறையைப் பரவச் செய்யப் பலவித சட்டங்களும் அரசாங்கத்தாரால் இடப்பட்டன. நாளடைவில் மெல்ல மெல்ல ஜில்லா முழுதும் பணத் தீர்வைக்கு ஒத்து வந்துவிட்டது. இம்மாதிரியான கஷ்டங்கள், இந்தத் தானிய வார முறையிலிருந்து பணத் தீர்வையாக மாறிய காலத்து, மற்ற ஜில்லாக்களிலும் மிகுதியாக உண்டாயின.

இம்மாதிரி தானியங் கொண்டு நடத்தி வந்த கொடுக்கல் வாங்கல்களுக்குத் திடீரென்று நாணயத்தை விரும்பினால், அந்தத் தேவைக்குத் தகுந்தவாறு நாணயங்களின் அளவும் விரிந்திலதேல், அத்தகையதொரு மாற்றம் துன்பம் தராததா யிராது. ஆனால் நாம் முன் கூறியபடி யுள்ள சற்றும் நெகிழ்ச்சி யில்லா ஒரு நாணய ஏற்பாட்டில், சுருங்குவதன்றி விரிவதறியா ஒரு திட்டத்தில், விலைகள் விழுந்தே தீரும்.

முகலாய மன்னர் காலத்தில், படைச் சேவகர்கட்கும், அரசியல் வேலையாட்களுக்கும் முக்கியமாக தானியத்திலேயே சம்பளம் கொடுக்கப்பட்டது. ஊதியத்திற்குப் பதிலாக நிலங்களும் மானியங்களும் அவர்களுக்குக் கொடுப்பது பெரு வழக்காக

இருந்தது. ஆங்கில அரசாங்கம் வந்ததும் முதன்முதல் அவர்கள் செய்தது என்னவென்றால், சுதேசச் சிற்றரசர்களைச் சார்ந்த படைகட்குப் பதிலாக நன்றாகப் போர் முறையில் பழக்கப்பட்ட வீரர்களை ஏற்படுத்தியதாகும். முன்னர் சுதேசப் படையாட்களுக்கு அரசாங்கக் கஜானாவிலிருந்து கொடுக்கப்பட்ட பண ஊதியம் மிக அற்பமே. வேறு மாமூல் வழிகளிலும், மானிய வழிகளிலும் அவர்கள் பல ஊதியம் மறைவாகப் பெற்று வந்தனர். இவை பெரும்பாலும் தானியமாகவே இருந்து வந்தன. ஆனால் ஆங்கில அரசாங்கம் வந்ததும் இவர்களுக்கு இம் மாதிரி மானியங்களை நிறுத்திப் பதிலாக பணச் சம்பளம் கொடுக்கத் தலைப்பட்டனர்.

இங்ஙனம் நாணயமாற்றல் முறை விரிந்ததாயின், அது விலைகள் குன்றுவதற்கு எத்துணைப் பொறுப்பாக இருந்தது? இதனைப்பற்றிப் பற்பல கருத்துக்களிருப்பது இயல்பே. பாம்பே குவார்ட்டர்லி ஜர்னல் என்ற தாளில் 1857-ல் எழுதிய ஒரு கட்டுரைகாரர் "இந்த நெருக்கடி முழுதும், நாம் தீர்வையினை நாணயமாக வசூலிக்கவே நாணயத்துக்கு அளவில்லாத பிரியம் ஏற்பட்டதாலும், அந்த நாணயங்களை விவசாய ஜில்லாக்களிலிருந்து படைகள் நிறுத்தப்பட்ட இடங்களுக்கு எடுத்துப் போயதாலுந்தான் விளைந்ததென்று கருதினர். இது ஒன்றை ஒன்பதாகக் கூறுவதாகும். நாணயமாற்றல் பெருவழக்காக வந்ததன் பயனாய்ப் பற்பல இடுக்கண்கள் விளைந்தன வென்பது மெய்யே. ஆனால் அரசாங்கத்தார் வரியாக வசூலித்த நாணயங்களில் ஓரளவேனும் மீண்டும் மக்கள் கையில் பலவாறாகப் புகுந்தே இருத்தல் வேண்டும். இந்தப் பெரும் பொருளாதார நெருக்கடிக்கு இது ஒன்றே தனிக் காரணமெனக் கூறுவது உண்மைக்கு ஊறு செய்வதாகும்.

பணத்தின் தேவையானது பண்டங்களின் மிகுதியாலும் குறைவாலும், அவைகளைக் கொண்டுள்ள கொடுக்கல் வாங்கல்களாலும் பாதிக்கப்படுகின்றது. அதாவது, பண்டங்கள் முன்னினும் மிகுதியாக உற்பத்தி செய்யப்படினும், வியாபார முயற்சிகள் பலமாய் விரியினும், நாணயத்தின் அவசியம் அதிகரிக்கும். அப்பொழுது தக்கபடி நாணயமில்லாக்கால், அந்நாணயங்கள் முன்னினும் விரைவாகப் புழங்காக்கால், பண்டங்களின் விலை அதனாலேயே வீழும். ஆகவே இந்த நிகழ்ச்சிகள் எவ்வளவில் பணத்தின் தேவையினைப் பாதித்த தென ஆராய்தல் வேண்டும்.

முற்கூறிய பெடர் என்பவர் இந்த நிகழ்ச்சிகளால் பணத்தின் தேவை முக்கியமாக அதிகரித்தது என்று கருதினர். 'பிரிட்டிஷ் ஆட்சி நிறுவப்பட்டதன் பின்னர், வியாபாரம் வளர்ந்

ததால் நாணயம் செய்யவேண்டும் பணி முன்னினும் மிகுந்தது. ..... சமாதானமும், நிலைத்த ஆட்சியும் நிலவ, விவசாயம் விரிந்து பண்டங்களின் விளைவு மிகுந்தது' என்று கூறுகின்றார். முதன் முதல் இரயத்துவாரி வரித் திட்டத்தை அமைத்த சீரைப் பார்க்குமிடத்து அதனால் எள்ளளவும் விளைவு அதிகரித்திராது என்பது யாவராலும் ஒப்புக்கொள்ளப்படுவ தொன்றாகும். ஆதித் தீர்வைகள் மிகப் பளுவாய்ச் சுமத்தப்பட்டன. பிறகு விலைவாசியும் இறங்கிவிடவே, விவசாயம் இலாபமற்றதாய்ப் போக, அனேகர் தம் நிலங்களையே விட்டுவிட்டுப் போய் விட்டனர். கடப்பா ஜில்லா கலெக்டரா யிருந்த மெல்லர் என்பவர் 1845-ல்: "குடியானவர்களின் முறையீடும் வேண்டு கோளும் என்ன வெனில், அவர்களுக் குரிய நிலத்தின் அள வைக் குறைத்துக் கொடுக்க வேண்டு மென்ப தாகும். விவசாயம் இலாபகரமானதன்று என்பதற்கு இதைவிட வேறு தெளிவும் வேண்டுமோ? நிலத்துக்கு விலையே இல்லை. முன்பு, கைப்பணத்தி லிருந்து தீர்வையைச் செலுத்திவிட்டு, பிறகு விலை வாசி ஏறின காலத்தில் விளைவை விற்கக்கூடிய நிலையிருந்த தக்க குடியானவர்களெல்லோரும் இப்பொழுது உயர்ந்த வட்டிக்குக் கடன்பட்டு, மூழ்கி, கடன் வழங்கியவரின் கருணையால் உயிர் வாழ்கின்றனர். கலக்டெருடையவும், சிப்பந்திகளுடையவும் பெருமுயற்சி மட்டும் இல்லையெனில், அதிகத் தீர்வை கொண்ட நிலங்களில் பாதியும், அல்லது மூன்றிலொரு பங்காவது இதற் குள் குடியானவர்களால் கைவிடப்பட்டிருக்கும்" என்று வரைந் தார். பயிர்த்தொழில் எத்துணைப் பயனற்றதா யிருந்ததென் பதைச் சென்னைக் கவர்னராக இருந்த ஹாரிஸ் பிரபு என்பவர் 1856-ல் சென்னை மாகாணத்திலே மொத்த நிலத்தில் சாகுபடி செய்யப்படும் நிலத்தினளவு ஐந்திலொரு பங்கே என்று எழுதிய வாக்கியம் வலியுறுத்தும். 1825-26-ம் ஆண்டில் நிலவரியின் தொகை 330 இலட்சம் ஆக இருந்தது. ஆனால் 1829-30-ல் 284 இலட்சமாகக் குறைந்தது; 1833-ல் 275 இலட்சமுமாகிற்று. இவ்வளவு குறைவடைந்த செய்தி கம்பெனியின் இங்கிலாந்தியத் தலைவர்கள் மனத்தில் கவலையைக் கிளப்பவே, அவர்களின் ஆணை யால் சென்னையில் வரி வருமானம் குறைவதற்குரிய காரணங் களை ஆராய ஒரு விசாரணை நடத்தப்பட்டது. ஆண்டாண்டு தோறும் அரசாங்கத்தாரால் அளிக்கப்பட்டுவந்த வரிக் குறை வால் இந்த வருமானக் குறைவு ஓரளவில் நிகழ்ந்திருக்குமே யாயி னும், அவ்வாறு தொடர்பாக வரிக்கழிவு செய்யவேண்டி வந்த செயலொன்றே விவசாயமானது சீர்கேடான நிலையிலிருந்த தென்பதை விளக்கும். ஒரு சில ஆண்டுகளில் திடீரென சாகு படிமிகுந்து விலைவாசி மிக இறங்கியு மிருக்கலாம்.

இவ்வாறாக விளைவானது குறைந்து வருகையில், ஜனத்தொகையானது மிகுந்துகொண்டே வந்தது. 1822-இல் சென்னை மாகாணத்தின் ஜனத்தொகை 135 இலட்சமென மதிப்பிடப்பட்டது. அதற்குப் பின் எத்தனையோ பஞ்சமும் நோயும் கொள்ளை கொண்டதே யாயினும் 1851-ல் 220 லட்சமாக உயர்ந்துவிட்டது. இதனால் உணவுக்கான அரிசி இறக்குமதி செய்யப்பட வேண்டியதாயிற்று அந்தக் காலத்தில் ஆரக்கானிலிருந்து இந்த இறக்குமதிகள் போந்தன. ஆரக்கானில் நெல் சாகுபடி செய்யவும், அதனை ஏற்றுமதி செய்யவும் அப்பொழுது சிறப்பான சில வசதிகளிருந்தன. 1834-க்கும் 1844-க்கு மிடையில் இந்த இறக்குமதி ஆண்டொன்றுக்கு சராசரி $9\frac{1}{2}$ லட்சம் ரூபாய் பெறுமானத்துக்கு நடைபெற்றது. 1836-க்கும் 1842-க்கும் இடையிலுள்ள ஆண்டுகளில்தான் இறக்குமதி மிகுதியாக வந்தது. இந்த இறக்குமதிபால் அகவிலைகள் வெகுவாய் பாதிக்கப்பட்டது. இறக்குமதிகள் எந்த ஆண்டுகளில் அதிகமாக இருந்தனவோ அதனைத் தொடர்ந்தே விலையும் அதிகமாக இறங்கியது. உதாரணமாக 19 லட்சம் ரூபாய் பெறுமான தானியங்கள் 1840-41-ல் இறக்குமதியாக்கப்பட்டது. உடனே மறு வருடத்தில் அகவிலை பின்னும் கற்பங்கு இறங்கிவிட்டது.

அந்தக் காலத்தில் உள்நாட்டு வாணிபமோ அயல் நாட்டு வாணிபமோ அதிகமாக வளர்ச்சி பெறவுமில்லை. உள்நாட்டு வியாபாரம் குன்றியிருந்தது அன்றைய பொருளாதார நிலையின் சிறப்பியல் என்று சொல்லலாம். இது எதனாலெனில், தக்கபடியான வழிப்பாதைகளோ, அன்றி வேறுவித போக்குவரத்து வசதிகளோ இல்லாமையாலும், வாணிபம் தட்டுத்தடையின்றி இயங்க முட்டுக்கட்டையாயிருந்த சுங்கங்களின் மிகுதியாலுமேயாம். ஒழுங்காய்ச் சமைந்த பெருவழிகள் நாட்டில் மிகச் சிலவேயாம். எனவே வண்டிப் போக்குவரத்துக்கு வழியே இல்லை. கோடைகாலத்தில் கால்நடைப் போக்குவரத்து ஒருவாறாக எளிதாயிருந்ததெனினும், குளிர்காலத்தில் பாலங்களில்லாத ஆறுகளாலும், சேற்றுப் பரப்புக்களாலும் போக்குவரவு தடைபட்டது. பெரு வழிகளும் பாலங்களும் அமைந்தவிடத்தும், சுங்கக்காரர்களின் தொல்லை மிகுதியால் போக்கு வரவுக்கு இடையூறு ஏற்பட்டது. சுங்கங்களைக் குத்தகைவிடும் முறை இங்கு கையாளப்பட்டு வந்ததால் சென்னை மாகாணத்திலேயே இந்தத் தொல்லை சிறப்பாக மிகுந்திருந்தது. காட்டன் என்பவர் தமது அறிக்கையின்கண்ணே, “நாம் உள்நாட்டு வாணிபத்தின்மேல் வரி சுமத்தும்முறையால், இந்தியாவின் வாணிபம் குன்ற எப்பாற்பட்ட மக்களும் ஊக்கமிழந்து இடுக்கண் வாய்ப்பட்டுத் தவிக்கச் செய்கின்றோம்” என்று கூறுகின்றார்.

அயல்நாட்டு வாணிபமோவெனில் அந்தக் கதை இதனி னும் கண்ணராவியானதாகும். மிளகும் காலிக்கோவும் மிகுதி யாக வேண்டப்பட்ட காலத்து, வெளிநாட்டு வாணிபமும் செழித் திருந்தது. ஆனால் அவற்றின் தேவை குறையவே வாணிபமும் சோர்வடைந்தது. நெசவாளிகள் தொழிலின்றித் திண்டாடி னர். சிலர் பண்ணைக் கூலியாட்களாயினர். பலர் ஆண்டிகளாயி னர். 18-ம் நூற்றாண்டிலே, கரையின்பாலிருந்த துறைமுகங் களுக்கிடையே இந்தியக் கப்பல்கள் விரைந்து சென்று செழித்த ஒரு வாணிபத்தை நடத்திவந்தன. மசூலிபட்டினம், நாகபட்டி னம், தூத்துக்குடி, கொச்சி முதலியன அன்று மிகத் தலைமை யான துறைமுகங்களாயிருந்தன. ஆனால் ஆங்கில ஆட்சி நிறுவப் பட்டதோடு இந்தியா கப்பற்சட்டங்களால் (Navigation Acts) கட்டப்படவே, கப்பற்றொழிலிலும், வாணிபத்திலும் உள்நாட்டு முயற்சி குன்றி ஒடுங்கியது. 1840 வரையேனும் வெளிநாட்டு வாணிபம் ஒடுங்கியே இருந்தது. இது கம்பெனியின் ஆங்கிலத் தலைவர்களிடமிருந்து பெருத்த கூக்குரலை எழுப்பிற்று. சுங்க வரியே மிகுதியாகக் குறைந்ததென்பது கீழ்வரும் புள்ளிகளால் விளங்கும்.

| ஆண்டு. | கரைச் சுங்கம் Land customs | கடற் சுங்கம் Sea customs |
|---|---|---|
| 1828—29 | ரூ. 41,89,703 | ரூ. 10,55,917 |
| 1833—34 | ரூ. 33,97,200 | ரூ. 6,80,543 |

1840 முதல் வெளி வாணிபமானது தலையெடுத்திருப்ப தாய்க் காணப்படுகின்றது. ஆனால் இது மிக மெதுவாக நத்தை வேகத்திலிருந்தது என்பது 1834-க்கும் 1850-க்குமிடையில் மொத்த ஏற்றுமதி வாணிபம் 50 இலக்ஷமே அதிகரித்துள்ளது என்பதால் வெளிப்படையாகும். வங்காளமும் பம்பாயும் இந்த விஷயத்தில் மேலாக இருந்தன.

## VII

### முடிவுரை

இப்பொழுது நாம் இவ்வாராய்ச்சியின் பல பாகங்களையும் ஒன்றுகூட்டுவோம். பரந்துபட்ட ஒரு விலை இறக்கமானது, நாண யத்தின் தொகை சுருங்கியதாலோ, அல்லது அதன் தேவை மிகுந் ததாலோ, அதாவது அது செய்யப்படவேண்டும் பணிகள் மிகுந் ததாலோ, அன்றேல் இரண்டினாலுமேயோதா னிருக்கவேண்டும். இந்தக் கட்டத்தில், (1) கைப்புழங்கி வந்த நாணயத்தின் தொகை

1820-க்கும் 1850-க்கு மிடையில் குறைந்தது என்பதும் (2) பண்டமாற்றல் நிலைபோய் நாணய நிலை வந்ததாலும், வெளி நாட்டு வாணிபம் சற்றேயாயினும் விரிந்துள்ளதாலும், எஞ்சிய நாணயங்கள் செய்யவேண்டும் பணிகள் பல்கினவென்பதும் நாம் அறிகின்றோம். இவ்விரு நிகழ்ச்சிகளும் ஏககாலத்தில் நடந் தேறிக்கொண்டிருந்தமையால், விலையானது நீண்டகாலத்து ஆழ்ந்த அளவுக்கு இறங்கிவிட்டது. ஆனால் தலைமையான காரணம் நாணயம் குறைவுபட்டதேயாகும். மேலே விவரித்த பற்பல காரணங்களால் நாட்டில் நாணய முட்டுப்பாடு எழவே இந்தியப் பொருளாதார நிலையிலேயே பெரியதொரு நெருக்கடி விளைவதாயிற்று.

1850-க்குப் பின்னர் இந்நிலைகள் மாறுதலடைந்தன. காலிபோர்னியாவிலும், ஆஸ்திரேலியாவிலும் தங்கச் சுரங்கங்களைக் கண்டுபிடித்ததன் பயனாகப் பொன்னின் உற்பத்தி மிகுந்து உலகமெங்குமே என்றுமில்லாத அளவு விலைவாசி ஏறுவதாயிற்று. இதனால் இந்தியாவிலும் ஏனைய நாடுகளிலும் பலவித புத்தப் புது முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. பிரிட்டிஷ் முதலாளிகளால் சமைக்கப்பட்ட இரயிற்பாதைப் பணிகளாலும், தேயிலை, இரப்பர், காப்பி முதலிய தோட்டப்பயிர்த் தொழிற்களாலும் பலவகைப்பட்ட கைத்தொழிற் சாலைகளின் ஏற்பாட்டாலும் வெளிநாட்டிலிருந்து ஏராளமான திரவியம் இந்தியாவுட்புகுந்தது. இதனோடு இந்தியச் சணலும், காப்பியும், தேயிலையும் மிகுதியாக வெளிநாட்டினரால் வேண்டப்படவே, தங்கமும் வெள்ளியும் இந்தியாவை நோக்கி மீண்டும் பாயத்தொடங்கின. 1860-க்கும் 70-க்குமிடையில் இலங்காஷயரில் வந்த பருத்திப் பஞ்சத்தால், இந்திய ஏற்றுமதி என்றுமில்லா அளவுக்கு விரியவோர் தருணம் வாய்த்தது. அதனோடு சூயசு வாய்க்கால் தோண்டப்பெற்றதும் பெருநன்மையாக முடிந்தது. 1854-முதல் விலை ஏறிக்கொண்டேபோனது. 1873 முதல் 1896 வரை ஐரோப்பாவில் நிகழ்ந்த பெரும்பொருளாதார நெருக்கடியில்கூட ரூபாயின் நாணயமாற்று விகிதம் அதுகாலையில் விடாது குறைந்துகொண்டிருந்ததன் பயனால் இந்தியாவுக்கு இன்னல் விளைந்திலது. (முற்றும்)

## கவின்கலைப் பகுதி:

## Fine arts

மகேந்திரவர்மன் வடமொழியில் இயற்றிய

# மத்தவிலாசம்

### களிக்கூத்து

[திரு. தி. கு. கி. நாராயணசாமி நாயுடு அவர்கள்]

(முன் ௫௱௰-ம் பக்கத் தொடர்ச்சி)

கபா:—அதைத்தான் நான் பார்க்கவேண்டு மென்கிறேன்.

புத்த:—இல்லை நண்ப! அப்படிச் சொல்லாதே. நாங்கள் அதை மூடித்தான் கொண்டு போகவேண்டும். அதுவும் உனக்குத் தெரிந்தது தானே?

கபா:—ஆமாம் உண்மைதான். இந்த மாதிரிப் பொருள்களை ஒளித்துக்கொண்டு போவதற்காகத்தானே உங்கள் புத்தன் உங்களை நீண்ட உடையைத் தரிக்க விதித்திருக்கிறான்!

புத்த:—அது வுண்மைதான்.

கபா:—அது பாதி வுண்மை. ஆனால் உனக்கு முழு வுண்மையும் தெரியவேண்டும்.

புத்த:—சரி, சரி; போதும் உன் கேலி. பிச்சைப்பொழுது போகிறது. நான் செல்லவேண்டும். (பக்கலில் நகருகிறான்)

கபா:—அடே! போக்கிரி! எங்கு போவாய்? என் கபாலத்தைக்கொடுத்து விட்டுப் போ.

(அவன் உடையைப் பிடித்து இழுக்கிறான்).

புத்த:—புத்தனே! போற்றுவோம்!

கபா:—கபடனைப் போற்று என்று சொல்! அவன்தானே, களவு நூல் இயற்றியவன். ஆனல் புத்தன் அவனுக்கு அப்பன்

அந்தணர்கள் கண்கள் அயர்ந்திருந்த காலையினில்
தந்திரமாய் புத்தன் சரக்கறையை—முந்தி
உபநிடத பாரதத்தினெண் பொருள்கள் வெளவி
அபகரித்து வைத்தான் அறி.

புத்த:—பாபம் சாந்தி! பாபம் சாந்தி!

கபா:—இந்தத் தூய்மையான துறவிக்கு எந்த பாபம்தான் சாந்தியாகாது!

தேவ:—ஐயா! நீங்க நினைத்ததுபோல தெரியுது. அந்த மண்டை ஓடு லேசா கிடைப்பதா தோணலெ. இந்தக் கொம்பிலெ இருக்கிற கள்ளைக் குடிச்சு கொஞ்ச திடப்படுத்திக்கிட்டு அவங்ககூட சண்டை போடுங்க.

கபா:—அப்படியே (தேவசோமா கள்ளைக் கொடுக்கக் கபாலி வாங்கியுண்கிறான்) பெண்ணே! நீயும் கொஞ்சம் சாப்பிடு, துவண்டு போயிருக்கிறாய்.

தேவ:—ஐயா! உங்க சித்தம். (அவளும் குடிக்கிறாள்)

கபா:—இந்தப் பயல் நம் துரோகிதான். இருப்பினும் எதையும் எல்லோரோடும் பகிர்ந்து வுண்ணவேண்டுமென்பது நம்மதக் கொள்கை. ஆகையால் எஞ்சியிருப்பதை அத்துறவிக்கும் கொடு.

தேவ:—ஐயா! உங்க உத்தரவு. (புத்த சந்நியாசியைப் பார்த்து) இந்தாங்கோ ஐயா!

புத்த:—(தனக்குள்ளே) என்ன அதிர்ஷ்டம்! ஆனால் யாரேனும் பார்த்துவிடுவார்களென்ற ஒரு பயம்தான். (அவளைப் பார்த்து) இல்லை அம்மா! அப்படிச் சொல்லாதே, அது என் போன்றவர்க்குத் தகுதியல்ல. (வாயைச் சப்புகொட்டுகிறான்.)

தேவ:—போ! தொலை! இந்த மாதிரி அதிர்ஷ்டம் உனக்கு எங்கே கிடைக்கப் போவுது ?

கபா:—பெண்ணே! அவன் நாவில் நீர் சொட்டுகிறது; அதனால் சொல் குழறுகிறது.

புத்த:—இன்னும் உங்களுக்கு என்மீது இரக்கமில்லையா ?

கபா:—இரக்கமிருந்தால் நான் எப்படி முற்றும் துறந்த முனிவனாவேன்!

புத்த:—அப்படியானால் முற்றும் துறந்த முனிவர்க்கு முனிவு ஏன் ?

கபா:—என் பொருளைக் கொடுத்துவிட்டால் எனக்கு உன் மேல் முனிவென்ன ?

புத்த:—உன் பொருள் எது ?

கபா:—கபாலம்.

புத்த:—என்ன! கபாலமா ?

கபா:—'என்ன! கபாலமா?' என்று கேட்கிறான். இம்! இதில் வியப்பென்ன ? இந்த உலகமே பொய்யென்ற புத்தன் புதல்வன் நீ. அவன் கடல், மலை, ஆறு எல்லாவற்றையும் மறைத்திருக்க உனக்கு இந்தச் சிறிய கபாலத்தை மறைப்பதற்கு முடியாதா என்ன ?

நிலைகொள் பூதங்கள் நிற்பன யாவையும்
மலைவ தென்ன மறுத்திடும் புத்தனார்
நிலவு மைந்த னெனப்படு நீபலிக்
கலம றைத்துக் கழறல் அரியதோ ?

தேவ:—ஐயா! மயிலே மயிலேன்ன இறகு போடாது. அவங்கிட்டெருந்து வெடுக்குனு பிடிங்கிக்குங்க.

கபா:—பெண்ணே! அதுதான் சரி, அப்படியே செய்கிறேன்.

(அவன் கையிலிருந்து ஓட்டைப் பறிக்கப் பார்க்கிறான்.)

புத்த.—போடா! போக்கிரி கபாலி! (அவன் கையை உதறிவிட்டு அவனை உதைக்கிறான்.)

கபா:—நான் எப்படி விழுந்தேன்!

தேவ:—டே! நீ செத்தே. (சந்நியாசியின் தலையைப்பற்றி இழுக்க எத்தனிக்க மொட்டைத் தலை கையில் பிடிபடாமல் கீழே விழுகிறாள்.)

புத்த:—(தனக்குள்ளே) தலையை மொட்டை அடிக்கச் சொன்ன புத்தன் திரிகால ஞானி! (உரக்க) அம்மா! எழுந்திரு, அம்மா! எழுந்திரு. (தேவசோமியைக் கைகொடுத்துத் தூக்கி விடுகிறான்.)

கபா:—பாருங்கள் மாகேஸ்வரர்களே! பாருங்கள்! இந்த நாகசேனன் என்ற போலிச் சந்நியாசி என் நங்கையைப் பாணிக்கிரகணம் செய்கிறான்.

புத்த:—நீ அப்படிச் சொல்லாதே. துன்பத்தில் விழுந்தோரைக் கைதூக்கி விடுவது எங்கள் மதக் கொள்கை

கபா:—இதுதான் உங்கள் வாலறிவனும் புத்தனுடைய மதமோ? நான் முன்னே விழவில்லையா? பரவாயில்லை. இப்பொழுது உன் மண்டைவோடு என் திருவோடு ஆகப்போகிறது பார். (எழுந்து சண்டை யிடுகிறான்.)

புத்த:—ஓ. அனிச்சம். துக்கம். அனர்த்தம்.

கபா:—பாருங்கள் மகேஸ்வரர்களே! பாருங்கள்! இப்போலி புத்த சந்நியாசி என் கபாலத்தை எடுத்துக்கொண்டது மல்லாமல் ஓலமும் இடுகிறான். நல்லது நானும் கூவுகிறேன். "ஒரு பிராமணனைக் கொல்லுகிறார்கள்! ஒரு பிராமணனைக் கொல்லுகிறார்கள்."!

(ஒரு பாசுபதன் வருகிறான்)

பாசு:—ஐயா! சத்திய சோமரே ஏன் கூச்சலிடுகிறீர்?

கபா:—ஓ, பப்ருகல்பா! இந்த நாகசேனனென்ற திருடன் என் கபாலத்தை எடுத்துக்கொண்டு கொடுக்கமாட்டேன் என்கிறான்.

பாசு:—(தனக்குள்ளே) நாம் செய்ய நினைக்கும் நியாயம், காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்று வந்தவன் கொண்டு போனானென்ற நியாயம்தான். இச் சந்நியாசிக் குடிலன் பசும் புல்லைக் காட்டி பசுவை இழுப்பதுபோல தன் கையில் காசைக் காட்டி எனது மனதிற்கு உவந்த இவளைக் கவரப் பார்க்கிறான்.

ஆகையால் நான் இக் கபாலியைத் தூண்டிவிட்டு என் காரியத்தை நிறைவேற்றிக்கொள்கிறேன். (வெளிப்படையாக) நல்லது நாக சேனு! இவன் சொல்கிறபடிதானு?

புத்த:—என்னேயா! நீரும் அப்படிப்பேசுகிறீர்! ஈயாததை எடாதது எங்கள் மதக் கொள்கை பொய்மையே புகலாதது எங்கள் மதக் கொள்கை. பிரமச்சர்யம் வழுவாமலிருப்பது எங்கள் மதக் கொள்கை. உயிர் செகுத்துண்ணுதது எங்கள் மதக் கொள்கை. குறித்த காலம் தவறி வுண்ணுதது எங்கள் மதக் கொள்கை. ஆகையால் எம்முடைய சமயந்தான் எனக்குப் புகலிடம்.

பாசு:—நல்லது, சத்திய சோமா! அவர்கள் நெறி அப்படி. இதற்கு நீ என்ன சொல்கிருய்?

கபா:—எங்கள் நெறி, பொய்மையே புகலக் கூடாதென்பது

பாசு:—இருவர் சொல்வதும் சரிதான். இதனை எப்படி மத்தியஸ்தம் செய்வது?

புத்த:—புத்த சமயத்தைச் சேர்ந்த எனக்கு இக்கபாலியினுடைய கள் கலயம் எதற்காக?

பாசு:—உண்மைதான். ஆனல் அப்பொருள் உனக்கு வேண்டுவதில்லை என்று சொன்னதினல் நீ எடுக்கவில்லையென்று எப்படிப் புலனுகிறது?

கபா:—அவன் எடுத்தது வெள்ளிடை மலைபோல் யாவர்க்கும் தெரிந்திருக்க, எடுக்கவில்லையென்று காரணம் காட்டுதல் பயனற்றது.

பாசு:—நீ வெள்ளிடை மலைபோல் என்று சொன்னதின் கருத்து யாது?

தேவ:—ஐயா! அந்த ஓட்டை அவன் துணியில் மறைத்து வைத்திருக்கான்.

பாசு:—சந்நியாசி கேட்டாயா?

புத்த:—ஓ! ஐயா! இந்தக் கப்பரை வேறு யாருடையதுமல்ல.

கபா:—அப்படியானல் காண்பி, பார்ப்போம்.

புத்த:—ஆகட்டும் (கப்பரையைக் காண்பிக்கிறுன்)

பாசு:—மகேஸ்வரர்களே! பாருங்கள்! கபாலி செய்ய நினைத்த தீங்கையும் இச்சந்நியாசியின் செம்மை நெறியையும்!

புத்த:—ஈயாததை எடாதது எங்கள் மதக்கொள்கை. பொய்மையே புகலாதது எங்கள் மதக்கொள்கை. பிரமச்சர்யம் வழுவாமலிருப்பது எங்கள் மதக்கொள்கை. குறித்த காலம் தவறி வுண்ணுதது எங்கள் மதக்கொள்கை. ஆகையால் எம்முடைய சமயந்தான் எனக்குப் புகலிடம்.

(கபாலியும் சந்நியாசியும் கூத்தாடுகிறுர்கள்)

புத்த:—சீ! வெட்கமில்லாமல் கூத்தாடுகிருன்.

கபா:—ப்பு! யார் கூத்தாடரா? (முற்றும் சுற்றிப்பார்த்து) இந்த சங்கியாசி நான் கூத்தாடுகிறேன் என்று நினைத்துக்கொண்டான். ஆனல் நான் அல்ல. என்னுடைய ஆனந்தமென்ற மெல்லிய கொடி காணுமற்போன கபாலத்தைக் கண்டதால் உண்டான உற்சாகமென்ற தென்றலால் அகப்பட்டு இங்குமங்கும் அசைகிறது.

புத்த:—இக்கப்பரையைச் சரியாய்ப் பார்க்கமாட்டேன் என்பதற்குக் காரணம் யாது? ஐயா! பெரிய மனதுசெய்து இதன் நிறத்தைப் பார்க்கவேண்டும்.

கபாலி:—அதைப்பற்றி நான் என்ன சொல்லக்கிடக்கு? எனக்குக் கண் தெரியவில்லையா? இந்தக் கபாலம் காக்கையிலும் கருமையாயிருக்கிறது.

புத்த:—ஆகையால் இது என்னுடையதுதான் என்று இப்பொழுது நீயே ஒத்துக்கொண்டாய்.

கபாலி:—உண்மைதான்; நீ நிறத்தை மாற்றுவதில் தேர்ந்தவனென்று ஒப்புக்கொண்டேன். இதோ நீ அணிந்திருக்கும் ஆடை, தாமரை நூல்போல் வெள்ளை வெளேரென்று இருந்ததை வைகறையில் செவ்வானமிட்டதுபோல் சிவக்கச் செய்துவிடவில்லையா? மேலும் காஷாயத்தால் உள்ளும் புறமும் மூடியிருக்கும் உன்னை அடைந்தமாத்திரத்தில் அந்தக் கபாலத்தின் நிறம் வேருவதில் விந்தையென்ன?

தாமரை நூலன்ன தவளவுடை செவ்வான
மாமிது போலுள்ளம் அமையுமெனில்—காமுறுவெண்
சங்கனைய கபாலம் தன்னிறந்தான் மாறுவதிங்
கென் புதுமை யேதுமிலையே.

தேவ:—ஐயோ! ஏழை நான் கெட்டேன். பிரம்மாவுடனேர்த்தியான கபாலம் சந்திரனைப்போல பளபளப்பும் சதா கள்ளு நாற்றமும் வீசிய எங்க கபாலம் இந்த வீணுபோன பயல் தொட்டு இம்மாதிரிப் போச்சே. (இவள் அழுகிருள்)

கபாலி:—இல்லை என் கண்ணே! அழாதே. அதை மறுபடியும் பரிசுத்தப்படுத்தி விடலாம். தேவர்களும் பிராயச்சித்தத்தினல் தங்கள் பாபவிமோசனம் ஆகி புனிதராகிருர்களென்று நம் வேதம் கூறும். உதாரணமாக நம் கடவுள், பிறை அணிந்த பெம்மான் நான்முகனின் தலையைக் கிள்ளிவிட்ட பாபமும், தேவர்க்கதிபதியான இந்திரன், துவஷ்டாவின் மகனுன விருத்திரனைக்கொன்ற பாவமும் பிராயச்சித்தத்தால் தீரவில்லையா? ஏ பப்ருகல்பா! அப்படித்தானே?

பாசு:—உன் கூற்று வேதத்திற்கு ஒத்ததே.

புத்த:—நல்லது. நானே நிறத்தை மாற்றிவிட்டேனென்று

வைத்துக்கொண்டாலும் இக்கப்பரையின் உருவத்தையும் பருமனையும் யார் மாற்றினர் !

கபா:—நீங்களெல்லாம் மாயாதேவியின் வம்சமல்லவா ?

புத்த:—உன்னோடு எவ்வளவு நாழி இந்த வழக்கு; இந்தரா எடுத்துக்கொள்.

கபா:—இதான் புத்தனுடைய கருணை வெள்ளம்.

புத்த:—இந்த என் பரிதாப நிலையில் எனக்கு யார் துணை ?

கபா:—புத்தன்! தர்மம்! சங்கம்! மும்மணிகள்தாம்.

பாசு:—இந்தச் சண்டை என்னால் தீர்க்க முடியாது. ஆகையால் நாம் நீதி மன்றம் போவோம் வாருங்கள்.

தேவ:—அப்படியானால் ஐயா! அந்தக் கபாலத்திற்கு ஒரு கும்பிடு.

பாசு:—உன் கருத்து என்ன?

தேவ:—ஏ! இந்த மனுஷன்! பள்ளியில் வரும்வரும்படியால் கொழுத்த பணக்காரன். அதைக்கொண்டு நீதிமன்றம் அதிகாரிகளுக்கு வாக்கரிசி போட்டுவிடுவான். நானோ பாம்புத் தோலும் சாம்பலுமே அஸ்தியாயுடைய ஓர் ஏழைக் கபாலியின் அடிமை. நான் வழக்குக்குப் போக காசு எங்கே யிருக்கு ?

பாசு:—அப்படியல்ல. நம் நீதிபதிகள் கருங்கல் தூண் அனையர். நேர்மையும் நடு நிலைமையும் தூய்மையும் உறுதியும் வாய்ந்த மனத்தினர்; நற்குடிப் பிறந்தோர்.

கபா:—போதும்; போதும். நல்லவன் எதற்கு நாண வேண்டும். போவோம்.

புத்த:—நல்லதய்யா, நீவிர் முன்னே போம்.

பாசு:—அப்படியே. (எல்லோரும் செல்கின்றனர்)

(தொடரும்)

மூன்றம் களம் முற்றும்.

---

“செல்வி”யைப் போற்றுமின் !

செய்கட னாற்றுமின் !

# சென்னை மாகாணத் தமிழர் மாநாடு,
# திருநெல்வேலி

வரவேற்புத்தலைவர்

உயர்திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், M.A., M.L.,

## உரை

(முன் ௩௬எ-ம் பக்கத்தொடர்ச்சி)

தமிழ்மொழியின் நெடுங்கணக்கானது பேச்சொலிகளின் மூலங்களாகிய தனி ஒலிகளினாலேயே அமைக்கப்பட்டிருப்பதை நினைவில் வைத்துக்கொள்ளல் வேண்டும். எழுத்துச் சுருக்கத்தின் பொருட்டுச் சிறிது திரிவுபடும் ஒலிகளுக்கு வெவ்வேறெழுத்துக்கள் அமையாமல் திரிபுணர்த்துஞ் சூத்திரம் ஒன்றையே இலக்கணநூலார் வகுத்துப் போந்தனர். காலஞ்சென்ற டாக்டர் கால்டுவேல் என்பார் கூறும் வல்லின மெய்யின் ஈரோசைச் சட்டமும் அதன் சார்பாயதே. ககரமானது, கடல் என்ற சொல்லில் வல்லோசை யுடையதாயும், நகம் என்பதில் இடையோசை யுடையதாயும், வங்கம் என்பதில் மெல்லோசை யுடையதாயும் இருப்பதற்குச் சூத்திரம்,

> "எடுத்தல், படுத்தல் நலிதல் உழப்பில்
> திரிபுந் தத்தமிற் சிறிதுளவாகும்." என்பதே.

நகம், நக்கன், பசை, பச்சை, வடம், வட்டம், பதி, பத்தி, கபம், கப்பல், அறம், அற்றம் என்பன, ஈரோசைச் சட்ட எடுத்துக்காட்டுக்களாதல் காண்க. மெய்யெழுத்துக்களின் பிறப்பை ஆய்ந்தால், தமிழிலுள்ள மெய்யெழுத்துக்களைக் குறைத்தல் கூடாதென்பது விளங்கும்.

நாக்கின் அடிப் பாகம், மேல் வாயின் அடிப் பாகத்தைத் தொடுவதால் எழும் ஒலி ககரமாகும். நாக்கின் அடிப் பாகமும், நடுப் பாகமும் மேல் வாயைத் தொடுவதால் யகரம் உண்டாகும். நாவின் நடுப் பகுதி, மேல் வாயின் நடுப் பகுதியைத் தொடுவதாற் சகரமுண்டாகும். நாவின் கடைப் பகுதி மேல் வாயின் கடைப் பகுதியைத் தொடுவதால் டகர முண்டாகும். நாக்கின் கடைப் பாகம் மேல் வாயைத் தடவுவதினால் ரகரமும், ஒற்றுவதினால் றகரமும், அழுத்தமாய் உறழ்வதினால் ழகரமும் உண்டாவன. நாவின் நுனி பரந்து மேல்வாய்ப் பல்லினடியைப் பொருந்துவதால் தகரம் உண்டாகும் நாவின் நுனி திரண்டு மேல் வாயின் கடைப் பகுதியை ஒற்றுவதால், லகரமும், தடவுவதால் ளகரமு முண்டாகும். மேல் வாய்ப் பல் கீழுதட்டைத் தொடுவதால் வகரமும், இதழிரண்டும் மூடித் திறப்பதால் பகரமுமுண்டாவன. வல்லெழுத்துக்களாகிய க, ச, ட, த, ப, ற என்பன தோன்றுமிடத்தே மூக்கினோசை ஒலிப்பதால் ங, ஞ, ண, ந, ம, ன என்

னும் மெய்யெழுத்தொலிகள் உளவாம். ய, ர, ல, வ, ழ, ள என்பன நாவானது மேல் வாயின் பல பகுதிகளை எளிதாகப் பொருந்துவதால் தோன்றும் இடையெழுத்துக்களாவன. பிற எழுத்தொலிகளெல்லாம் கலப்பொலிகளே. இவ்வொலி நூலுண்மையை உள்ளத்திற்கொண்டு எழுத்துக்களைக் குறைப்பதைப்பற்றி யாய்வாம்.

ரகாத்தையும், றகாத்தையும் ஒன்றுக்கினுல் சொற்குழப்பம் ஏற்படும். றகரத்தாற் புலனாகும் வீரச் சுவை மறைந்தொழியும். 'அற்ற தலை போக அறாத தலை நான்கினையும் பற்றித் திருகிப் பறியேனோ' என்பதிலுள்ள சினவாற்றல் றகாத்தைப் பொறுத்ததே. ஆசிரியனென்னும் பொருள் படும் குரவரும், மலைவேடரைக் குறிக்கும் குறவரும் ஒரு சொல்லாகும். அரமும், அறமுமொன்றாம். விரலும் விறலும், அரையும் அறையும் தலைமயங்கி அவ்வவற்றின் பொருளாற்றல் வேறுபாட்டைத் தொலைத்துவிடும். னக ரத்தை ஒழித்துவிட்டால், நகரத்திற்கினமாய மெல்லோசை இன்னதென் பது விளங்காது. மொழிக்கு முதலில் வாராத எழுத்தைப் பற்றிய சூத்தி ரத்தை மாற்றவேண்டும். ழகரத்தை ஒழித்தால் மாட்டுக் குளம்பும், உண வுக் குழம்பும் ஒன்றுவதுடன் தமிழிற்குரிய சிறப்பெழுத்தும் போய், அவ் வெழுத்துள்ள சொற்கள் தமிழ்ச் சொல்லென்ற கருத்திற்கிடமிராது. வட மொழியில், லகரமே, முதலில் உண்டு, பின் ளகரம் வந்தது. ல ள வேற் றுமை கிடையாது. தமிழில் லகரமும், ளகரமும் வேறுதல், கல், கள், வில், விள், கலம், களம், வல், வள், கொல், கொள் என்பவற்றின் பொருள் வேறுபாட்டாலறியப்படும்; பிறவும் அவ்வாறே கண்டுகொள்க.

தமிழ் எழுத்து வடிவுகளெல்லாம் கருவின் உருவாகிய ஓங்காரத்தில் நின்று தோன்றியன; ஆதலாலும், தமிழில் நெடுங்கணக்கிற்கு வடிவம் தனியே அமைந்திருப்பதாகிய செய்தியை மறைத்தல் வரலாற்றுண் மையை மறைத்தல் ஆகுமாதலாலும் தமிழின் வரியெழுத்துக்களை மாற்று வது தவறாகும்.

அவ்வாறே தமிழ்ச் சொற்களையும் பாதுகாத்தல் வேண்டும். பிற எழுத்துக்களின் கலப்பு தமிழில் ஏற்படுங் காலத்தில் தமிழ் எழுத்தின் அமைப்பிற்கு ஏற்றவாறே அவைகள் சேர்க்கப்படவேண்டும் என விதி இருப்பினும் தமிழிலுள்ள சொற்களை இழவாதிருக்கற் பொருட்டும் தமிழ் மொழியின் ஆற்றல்களை விளக்கிக் காட்டுதற்பொருட்டும் பதுக் கருத்துக் களைத் தனித் தமிழ்ச் சொற்களாற் புலப்படுத்துதலே பொருத்தமாகும்.

தமிழ் மொழியிலே பிறமொழிச் சொற்களைக் கலத்தல் கூடாதென்ப தைச் சிலர் நோக்காவொடுக்கமென்பர். அது தவறு. நூல் இழைப்பதும் ஆடை நெய்வதும் அறவே ஒழிந்த இந்நாட்டில், அவை தழைத்தற்பொருட் டுக் கதராடை யணிதல் வேண்டுவோரை ஒடுக்க நோக்கினர் என்று கூறு தல் தவறுதல்போல, தூய தமிழ்ப் பேச்சு மிகக் குறைந்து, தமிழ்ச் சொல் லாக்க முறைகள் பெரிதும் மறைந்தொழிந்த இத் தமிழ் நாட்டிலே அவை நிலைத்தற்பொருட்டுத் தூய தனித் தமிழ் வழங்கல் வேண்டுமென்றல் தக் கதேயாதல் காண்க.

சொல் என்பதை உரைப்பதற்கு மொழி, உரை, கூறு, இயம்பு, அறை, பறை, நொடி, ஒப்பு, பேசு, சாற்று, ஓது முதலிய பல சொற்கள்

பல உணர்ச்சிநயங்களை விளக்கத் தக்கவாறு தமிழில் அமைந்திருப்பவும், வசனித்தான், சம்பாஷித்தான் முதலிய அயற்சொற்களை வழங்குவோமாயின், தமிழிலுள்ள சொற்செல்வத்தையும், அதன் வகை நயங்களையும் நாம் அறியாதொழிவோம். வெவ்வேறு தொழிலுடையோர் வழங்கும் குழூஉக் குறிச் சொற்கள், மரபுச் சொற்கள் முதலியவற்றை, அத் தொழில்களைப் பற்றிய நூல்களை எழுத விரும்புவோர் கற்றுப் பயன்படுத்துதலை விடுத்து, பிறமொழிச் சொற்களை நேராகத் தமிழில் பயன்படுத்துதல், சருந்தனம் கைத்தலத்த உய்த்துச் சொரிந்திட்டு அரிப்பரித்தெய்த்துப் பொருள் தேடுவதை யொக்கும். 'Centre of gravity' என்பதைத் தச்சுமரபுச் சொல்லாக வழங்கும் 'எண்' என்னும் ஓரசைச் சொல்லாற் குறிப்பது எவ்வளவு எளிதென்பதைப் பாருங்கள். அவ்வாறே, தமிழ் மருத்துவ நூலிலுள்ள சொற்கள் பல, மருத்துவ நூற்கருத்துக்களைத் தெரிவிக்கப் பயன்படுவதுடன், நம் முன்னையோர் நமக்கு வைத்த அரும்பொருட் குவியல் இன்னவென்றறிந்து நாம் மகிழ்தற்கும் ஏதுவாகும். வரலாற்று வளர்ச்சிக்கும் அது காரணமாகும். முன்னோர் மொழி பொருளேயன்றி அவர் மொழியும் பொன்னேபோற் காத்தல் நமது கடமையாதலறிக.

தமிழில் வந்து தங்கிவிட்ட பிறமொழிச் சொற்களைத் தமிழிலக்கண முறையில் வழங்குவதோடு, தமிழில் முன்னமேயுள்ள சொற்செல்வத்தை இழந்துவிடுதல் கூடாதென்பதே அறிஞர் கருத்து. வட சொற்கள் என்று கருதப்படும் பல சொற்கள் தமிழே யெனக் கருதவும் இடமுண்டு.

'ஆதி' என்ற சொல், உலகத்தை யாக்குங் கடவுளின் ஆற்றலைக் குறிக்கும். ஆ-பகுதி, இ-விகுதி, த்-எழுத்துப் பேறு. இது வட மொழியிலும் வழங்குகின்றது 'சிவமெனும் பொருளும் ஆதிசத்தியொடு சேரின் எத்தொழிலும் வல்லதாம்' என்றவிடத்து 'ஆதி' என்பதற்கு அப்பொருள் கொள்ளாது, 'முதல்' என்று கொள்ளுதல் பொருந்துவதில்லை. சட்டி, சமழ்ப்பு என்பன தமிழ்ச் சொல்லாதலின், சகரம் மொழிக்கு முதலில் வராதென்று கொள்ள இந்நாளில் இடமில்லை. "தண்ணிதாய வெள்ளருவி, சலசலநுரைமணி ததும்ப" என்றவிடத்தில் நீர்வீழ்ச்சியின் ஓசையைச் சலசலவென்பது குறிக்குங்காலை, அச்சொற்களைத் தமிழென்றல் தவறாகுமா? அவ்வோசையினின்று, சலம் என்ற சொல் வந்ததாயின் அது தமிழ்ச் சொல்லே. "பீடம்" என்பது தமிழிலே உயர்ந்த இருக்கையைக் குறிப்பதால், அதனைப் பீடு + அம் எனப் பிரித்துப் பொருள் கொள்ளுதல் தமிழ் முறைக்கொத்ததே. குட்டம், வேட்டி முதலிய சொற்கள் வட மொழியில் குஷ்டம், வேஷ்டி யென வழங்குமென்ப.

'ஆசை' என்பது தமிழில் வழங்கும் பெருவழக்காகிய வட சொல்லென்ப. 'ஆசு' என்பது குற்றமெனக் கொண்டு, பற்று வைத்தல் குற்றமாமென்ற கருத்தில் 'ஆசை' என்பது தமிழென்பாருமுளர். அனைய மொழிகளைத் தமிழெனவே கொள்வோமாக.

பிறசொற்களைத் தமிழிலக்கண முறைக்கேற்ப வழங்கலாமென்றல், அயல் நாட்டு நூலால் இந்நாட்டில் நெய்யப்பட்ட ஆடையை அணியலா மென்பதுபோ லாகும். எவ்வாறாயினும், தமிழிலுள்ள சொற்செல்வத்

தையும், அச்சொற்செல்வங் குறிக்கும் பெருமையையும் இழந்துவிடுதல் நன்றன்றென்பதையே தூய தமிழ்வாணர் வற்புறுத்த விரும்புகின்றனர்.

மேலை நாட்டு அறிவுநூற் கருத்துக்களைத் தமிழில் வெளிப்படுத்துவதற்குப் புதிய சொற்கள் வேண்டுமாயின், சிலர் அவற்றை ஆங்கிலத்தில் உள்ளவாறே தமிழில் வழங்கலாமென்றும், அவற்றை வடமொழியிற் பெயர்த்து வழங்கலாமென்றும் கூறும் இரு கொள்கைகளுள் முன்னையதே சிறந்தது. ஆனால் அது தமிழ்வாணர்க்கு நீர்மோரிலே கருவேப்பிலை, மிளகாய் முதலிய வாசப் பொருள்களின் சாரத்தைச் சேர்க்காமல் அவற்றையே போட்டு, அவற்றால் தொண்டை விக்கும்படி செய்வதுபோலாம்.

தமிழ் மொழிக்கு அக்கருத்துக்களை யுணர்த்தும் ஆற்றலும், வழியும் உள்ளனவாயின் அவற்றைத் தமிழ்ச் சொற்களாலேயே தெரித்தல் தமிழ் மொழியின் ஓசை நயத்தைப் பாதுகாத்தற்கும் தமிழ்ச் சொல்லாற்றலை வளர்த்தற்குமேதுவாமென்பதனை நமதுள்ளத்தில் பதித்துக்கொள்ளவேண்டும். ஆங்கிலம், செர்மன் முதலிய ஐரோப்பிய மொழிகளிலும், புதிது புதிதாகக் காணப்படும் பொருள்களை யுணர்த்தப் புதுச் சொற்களை அமைத்தல் தெளிவு. இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் கண்டு வெளிப்படுத்தப்பட்ட ரேடியம் என்னும் பொருளிற்கு அப்பெயர் புதிதாக வழங்கப்பட்டதேயாகும். ரேடியம் என்ற சொல் இந்நூற்றாண்டிற்கு முன் அப்பொருளைக் காட்டுவதற்குப் பயன்படவில்லை. அச்சொல் புதிதாக ஆளப்பட்டதுபோலத் தமிழிலும் அப்பொருளைக் குறித்தற்குக் கதிரி என்ற சொல்லை வழங்கலாம். தமிழ்ச் சொல்லாக்க முறையையும் மேலை நாட்டுச் சொல்லாக்க முறையையும் நன்கறிந்தவர்கள் தமிழிலே சொற் சுருக்கமாக மொழிகளையமைத்துக் கொள்ளுதல் கூடுமென்றறிவர். அறிவியற் சொற்களுக்கு நேரான தமிழ்ச்சொற்கள் பல சித்தர் நூல்களிற் காணப்படும். நிலக்கனிகளாகிய உலோகங்களின் தமிழ்ப்பெயர்களெல்லாம் சித்தர் நூலிற் காணப்படுவனவே. ரேடியமென்பது ஆயிர மாற்றுக் கரும்பொன் என்று சித்தர் நூலிற் பேசப்படும் பொருளே யென்பர். அஃதெவ்வாறாயினும் அதனைக் கதிரி யென்ற புதுச்சொல்லாலும் தமிழிற் குறிக்கலாம்.

ஆசிரியர் தொல்காப்பியனார் செய்யுள் வழக்கையும் உலக வழக்கையுந் தெரிந்து இயல் நூல் அமைத்ததுபோல இரு வழக்கையுந் தழுவியே சொற்களை யாத்தல் கூடும். Acid என்பதற்குப் புளினி யென்றும் Alkali என்பதற்கு உப்பினி யென்றுங் கூறுவது பொருந்தும். பழம்நீ என்பது பழனி யெனவும், தண்ணீர் என்பது தண்ணியெனவும் வழங்குதல் காண்க. தர்க்க நூல் என்பதைத் தமிழில் அளவைநூலென்பர். திருவள்ளுவர் அதனை அளவென்றனர். "அளவறிந்தார் நெஞ்சத்தறம் போல" என்றது காண்க. கணக்குநூலை ஔவையார் "எண்" என்றது காண்க. அவ்வாறே Physics என்னும் பூதநூலைப் பூதமெனவும், Chemistry எனப்படும் கலவைநூலைக் கலவையெனவுங் கூறலாம். மின்சாரத்தை மின்னியெனவும் மினியெனவும் சுருங்கக்கூறலாம். இவ்வாறே பிறவற்றிற்கும் சுருக்கமான பெயர்களை அமைத்துக் கொள்ளலாம். நாளடைவில் அவை வழக்கத்தில் வந்துவிட்டால் வேற்றுமை தோன்றாது.

Train என்பதைத் தொடர் வண்டியெனத் தமிழில் கூறலாம். அச்சொற்றொடரே தொடரெனவும் வழக்கத்தில் வந்துவிட்டால் வேற்றுமை தோன்றாது. தமிழில் வழக்கமாயுள்ள சொற்களை அப்படியே வழங்கலாம். தபால், தந்தி யென்பன அத்தன்மையன. இம்முறைகளினாலே உணர்த்தமுடியாத சொற்களைக் கடன் வாங்கவேண்டியதிருந்தால் தமிழ் ஒலிநயம் கொடாமல் தமிழில் அவற்றை வழங்கலாமெனினும், ஆராயுங்கால் பிற மொழியில் புதுச்சொல் ஆக்குவதற்கு எவ்வளவு ஆற்றலிருக்கின்றதோ அவ்வளவு ஆற்றல் தமிழ்மொழியில் நிரம்பியிருக்கின்றதென்பது துணிபாதலின், எக்கருத்திற்கும் தமிழ்ச் சொல்லமைத்தற்குச் செய்யும் முயற்சி செவ்விதிற் கைகூடு மென்றறிக. ஆதலால் தூயதமிழே வழங்குதல் வேண்டு மென்னுங் கொள்கை நிலைபெறுதற்பாலதே. தமிழரின் ஒற்றுமையான ஊக்கமும், பொழுதும், விடா முயற்சியுமே அதற்கு வேண்டப்படுவனவாம்.

இதுகாறுங் கூறியவாற்றால், மக்கள் முதன் முதற்றோன்றிய இடத்திற்கருகில் வழங்கியதாய், அவர்களின் முதன் மொழியினின்றுங் கிளைத்த சீனம் முதலிய பண்டை உயர் மொழிகளுளொன்றாய், அவற்றுட் சிறந்த வளர்ச்சியும் இயலமைப்பு முடையதாய் இன்னும் நன்கு நின்றலவுதலின் அப்பண்டை மொழிகளுள் முதன்மையதாய்த் தமிழ்மொழியானது திகழ்கின்றதென்பதும், தமிழ் நெடுங்கணக்கானது பேச்சொலிகளின் மூலங்களினால் அமைந்ததாய் அவற்றிற்குரிய வரிவடிவும் அவற்றொடு கலந்து பிற எழுத்தொலிகள் தோன்றுவதற்கு ஏதுவாய சார்பெழுத்துக்குள்ள வரிவடிவு முடைமையின், பேச்சொலிகள் பலவற்றையும் எழுதுதற்குரிய எழுத்துக்கள் தமிழிலே யிருப்பதால் பிறமொழியினின்று எழுத்துக்களைத் தமிழின்கண் சேர்த்தல் மிகையாவதுடன் தமிழ்மொழியின் எழுத்துச் சுருக்கத்தையும் சொற் செட்டையும் மூச்சுச் செட்டையும், இயலமைப்பையும் அது வேறுபடுத்துமென்பதும், தமிழ்மொழியின் எழுத்துக்களைக் குறைத்தல் பேச்சொலியின் மூலங்களை மறைப்பதுடன் சொற்குழப்பத்திற்கும் உணர்ச்சிக் கேட்டிற்கும் மொழிச்சிறப்புக் குன்றுதற்கும் ஏதுவாமென்பதும், தமிழின் தூய்மையையும் சொற்செல்வத்தையும் ஆற்றலையும் பாதுகாத்தற் பொருட்டும் பிறமொழிக் கலப்பினை நீக்குதல் நலமாமென்பதும், பிறமொழிகளைத் தமிழிற் கலப்பதனால் தமிழின் இயலமைப்பும் ஓசை நயமும் பழுதுபடாவண்ணம் அவற்றைச் சேர்த்தல் கூடுமாயினும் புதுக் கருத்துக்களுக்குப் புதுச் சொற்களையே பிற நாட்டினர் வகுத்தாள்வதுபோல அக்கருத்துக்களுக்குப் புதுச்சொற்களை நயம்பெற அமைத்துக் கொள்ளும் ஆற்றல் தமிழுக்குண் டென்பதும், அவ்வாற்றலை வளர்த்தற்குத் தமிழறிஞரின் ஒத்துழைப்பும், ஊக்கமுமே வேண்டுமென்பதும் அறியற்பாலன.

நமது தாய்மொழியாகிய தமிழானது புனிதமும் வனப்பும் வளமுங் குன்றாது என்றுமியங்கும் முதற் பெருமொழியாக உலகில் திகழும் வண்ணம் இம்மாநாடு செய்யும் பெரு முயற்சியானது முற்றிலுங் கைவருமாறு முழுமுதல் துணைபுரிக.

---

## சேந்தமிழ்ப் புரவலர்,

## உயர்திரு த. வே. உமாமகேசுரன் பிள்ளை அவர்கள் B. A., B L.

# தலைமைப் பேருரை

இரண்டாயிரம் ஆண்டுகளின் முன்னர் இந்திய நாட்டின் நிலையினையும், பிற நாடுகளின் நிலையினையும் ஒப்புநோக்குவோர் பிற நாடுகள் இருளடர்ந்திருக்கவும், தமிழ்நாடு மட்டும் நாகரிகச் சுடர் பரப்பி, செல்வமும் கொற்றமுங் கொண்டு, தலை நிமிர்ந்திருக்கவும் காண்பர். சேர சோழ பாண்டியராய முடியுடை மூவேந்தரும் செந்தமிழ்ப் புலவர்களைத் தமது துணைவராகவும், தோழராகவும் நட்புக் கொண்டு கொடைமடம் பட்ட வள்ளன்மையால் அவர்களைப் பேணிப் புரந்து வந்தனர். மன்னர் முதல் ஊழியர் ஈறாகப் பல நிலையிலுள்ளவர்களும், ஆண்பாலரே யன்றிப் பெண்பாலரும் புலமையிற் சிறந்த கலைவாணராய்த் திகழ்ந்தனர். கல்வி, பிழைப்பிற்கு வழியாய்க் கருதி இற்றை நாளில் பயிலப்படுவதுபோல் பண்டை நாளில் பயிலப்பட்டதில்லை; பல்கலைக் கழகத்தினர் வழங்கும் பட்டங்களைக் கலைவாணர் பெறுவதும், பெற்ற பின்னர் ஊழியங்களைத் தேடி அலைவதும், அலைந்து திரிந்து பதவிகளில் அமர்ந்த பின்னர், தாம் அரிதிற் கற்றுத் தேர்ந்த கலைகளின் பயிற்சியை நெகிழ விட்டு ஊதியம் ஒன்றனையே கருதுவதும்போல் அற்றை நாளிற் கருதினரில்லை. அவிச் சுவையினும் கவிச் சுவையே அயராத இன்பத்தை அளிக்கும் பெற்றியதெனத் தெரிந்து, நுண்மாண் நுழைபுலன் கொண்டு ஆய்ந்து கலை யின்பத்தில் மாந்தர் திளைத்தனர். அறிவுடை யொருவனை அரசனும் விரும்பிப் போற்றியபடியால் தமிழ்நாடு கலை மலிந்த நாடாய்த் திகழ்ந்தது. இயல், இசை, நாடகம் எனுங் கலைகளே யன்றி ஓவியம் ஆகிய கவின் கலையும் சிற்பம் ஆகிய தொழிற்கலையும் ஆய கலைகள் அறுபத்து நான்கும் செழித்து வளர்ந்தன. கலையின் நுண்பொருள்களைக் கூறுதற்கான குறியீட்டுச் சொற்கள் தமிழில் இல்லையே எனப் பண்டைக் காலத்துத் தயங்கினரில்லை. திரிசொற்களைப் பெய்து நூலெழுதுவதும், இருநூற்றின் மேற்பட்ட எழுத்துக்கள் தமிழ் நெடுங்கணக்கில் இருப்பதும், வேற்று மொழிகளின் ஒலிக் குறிகளுக்கேற்ப தமிழில் சில பல எழுத்துக்கள் இல்லாதிருப்பதும் கலை வளர்ச்சியைத் தகைசெய்யும் இடர்களெனத் தமிழர் பழி தூற்றியதில்லை. பழம் தமிழ்க் கால முதல் வட சொற்களும் திசைச் சொற்களும் தமிழில் இன்றியமையாத விடத்து வழங்கி வந்திருக்கின்றன. ஆனால் பிற மொழிகள் தமிழுலகில் நுழைந்து பணி செய்ய நேருங்கால் அவைகள் தமிழியலுக்கு ஏற்ப உருமாறித் தொழில் புரிய வேண்டுமென்பது ஆன்றோர் வகுத்த தமிழ் மரபு.

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே".

என்பது சூத்திரம். வடவெழுத்துக்களில் பல உரப்பியும், எடுத்தும், கனைத்தும் கூறவேண்டுதலின் அவை தமிழியலுக்கு முரண்படுதல் பற்றி அவ்வடவெழுத்துக்களை நீக்கி எழுதுவதே முறையென மூதறிஞர் கண்டனர். வடசொற்கள் தமிழில் பெரிதும் வழங்கத் தலைப்பட்ட பிற்காலத்திலும் இவ்வியலுக்கு மாறுபடாவண்ணம் வடமொழி ஆக்கத்திற்குச் சில விதிகளும் நன்னூலார் வகுத்தனர். சங்ககால முதல் இதுகாறும் தோன்றிவரும் சிறந்த நூல்கள் யாவும் இம்மொழிமரபு வழுவாமல் பாதுகாத்து வருகின்றன.

இற்றை நாளில் தமிழை வளம்படுத்துவேமெனத் தலைப்படும் ஒரு சிலர் தமிழ் எழுத்திலக்கணத்தில் குறைபாடுகள் மலிந்திருப்பதாகவும், அவற்றை அகற்றுதல் மொழிவளர்ச்சிக்கு இன்றியமையாததெனவும் கூறுகின்றனர். நூல்வழக்கிலிருக்கும் மொழிகளையும் அவற்றின் எழுத்திலக்கணங்களையும் இக்கொள்கையினர் நடுநின்று ஆய்வரெனில், பிறமொழிகளிற்காணும் குறைபாடுகள் சொல்லிறந்தனவென்றும், தமிழ் மொழியில் அத்துணை குறைபாடுகள் இல்லை என்றும் காண்பர். (Lord Crower) என்ற ஆங்கிலப்புலவர் தம் மொழியின் எழுத்திலக்கணத்திற் காணப்பெறும் குறைகள் சிலவற்றைத் தொகுத்து, அவை புலனுமாறு இக்கவியில் விளக்குகின்றனர்:-

"In the English tongue we speak,
Why is "break" not rhymed with "freak"?
Well you tell me why it is true,
We say 'sew' but likewise 'Jew'?
"Beard" Sounds not the same as "heard"
"Cord" is different from "word"
And since 'pay' is rhymed with "say"
Why not 'paid' with 'said', I pray?
'Cow' is cow, but 'low' is low.
'Shoe' is never rhymed with 'foe'.
And in short it seems to me
Sound and letters disagree.

இன்னோரன்ன குறைபாடுகள் எண்ணிறந்தனவாய் மலிந்திருந்தும் ஆங்கில மொழியின் வளர்ச்சி குன்றினதாவென உன்னிப் பாருங்கள். கலைபயில் தெளிவும் கட்டுரை வன்மையும் ஒருங்கே உடைய ஆங்கிலப் புலவர்கள் தமது எழுத்திலக்கணத்தைச் சீர்திருத்த முற்பட்டனரா? ஆங்கில எழுத்திலக்கணத்தில் சீர்திருத்தம்புரிய முற்பட்டவர் தாமும் எய்திய பயன் ஏதேனுமுளதா? MASON OLCOTT எனும் துரைமகனார் தமிழ் கற்பதில் ஆர்வந்தழைக்கின்றார்; தமிழ் இலக்கியங்களைக் கற்பதற்கான அளவு தம் தமிழறிவை வளர்க்க ஒல்லாதெனக் கண்டு, தம் நிலைக்குத் தமிழைக் கொணர்வதே சாலுமென விழைந்து, இன்றியமையாதவை எனத் தாம் கண்ட சீர்திருத்தங்கள் சிலவற்றைச் செய்தித் தாள்களில் விளம்பரம் செய்துவிட்டனர். இந்திய நாடு முற்றுமே பயிலக்கூடியவாறு நாகரி, உருது போன்றதொரு பொது-

வெழுத்தால் தமிழ் நூல்களை எழுதவேண்டுமெனவும், உலகெங்கணும் பயிலுதற்பொருட்டு உரோமன் எழுத்தாலாவது, உலகப்பொதுவான ஒலிக்குறி எழுத்தாலாவது (International Phonetic Alphabet) எழுதவேண்டுமெனவும் கருதுகின்றனர். இலக்கிய நூல்களிற் காணும் செந்தமிழ் வழக்கையொழித்துப் பேச்சு வழக்கிலுள்ள கொச்சை மொழியில் நூல்கள் எழுதப்பட வேண்டுமெனத் துணிகின்றனர். ஆகார, ஐகார, ஒகர, ஔகாரங்கள் ஏறிய மெய்யெழுத்துக்கள் அனைத்தையும் ஒருபடித்தாய் எழுதாது ணகர, னகர, றகர, லகர, ளகாரங்களுக்கு மட்டும் மாறுபட்ட குறியீடு எற்றுக்கோ வெனவும், தந்நகர, றன்னகரங்கள் மிகைபட்டவை எனவும் கூறுகின்றனர். அச்சுக் கோப்போரின் துன்பத்திற் கிரங்கி, மற்றுஞ் சிலர் இருநூற்றின் மேற்பட்ட எழுத்துக்களில் சிலவற்றை அகற்றிவிட விரும்புகின்றனர்; வேறு சிலர் 'f' என்னும் ஆங்கில எழுத்தையும் அதுபோன்று தமிழில் இல்லாத பிற மொழிகளிற் காணும் புதிய எழுத்துக்களையும் தமிழ் நெடுங்கணக்கில் சேர்க்க வேண்டுமெனவும் கருதுகின்றனர். இக்கூறிய கொள்கைகள் நாகரிக உலகில் எம்மொழியாளரும் கைக்கொள்ளாதவை என்பது வெளிப்படை. பிற மொழிகளுக்குரிய சிறப்பெழுத்துக்களை நாடொறும் தமிழ் நெடுங்கணக்கில் சேர்த்துக் கொள்ளுவதானால், என்றும் முற்றுப்பே றடையாததாய்த் தமிழ் நெடுங்கணக்கு, தன் பெயரினை யொப்ப நீள நீண்டுகொண்டே வரும். கன்னித் தமிழெனப் போற்றப் பெறும் உயர்தனிச் செம்மொழியின் எழில்நலமும் இயல்நலமுங் குன்றிக் கேடுற்றுத் தன்னுருவே மாறிவிடும். தமிழின் எழுத்தியல், இப்போதுள்ளவாறே, பல்லாயிரம் ஆண்டுகளாக இருந்து வந்தும் மொழிப் பயிற்சிக்கோ, மொழி வளர்ச்சிக்கோ இது தடை செய்வ தெனக் கூறின ரில்லையே. வீரமா முனிவர், போப்பையர் ஆகிய அயல் நாட்டவரும் எளிதில் தமிழ்ப் புலமை எய்தி, தமிழரும் புகழத் தகும் இலக்கிய இலக்கண நூல்களை இயற்றித் தமிழ்மொழியின் மாட்சிகளை வியந்து போற்றினரேயன்றி இக்கூறிய திருத்தங்கள் தேவையெனக் கருதின ரில்லை. ஆரியமும் தென்றமிழும் நன்குணர்ந்த நமது சமயகுரவர்கள் திருமுறைகளை அருளிச் செய்யவும், நமது ஞானகுரவர்கள் ஒப்புயர்வற்ற ஞானப் பனுவல்களை இயற்றவும் தமிழ்மொழி வளஞ்சுரக்கவில்லையா? வடகலையும் தென்கலையும் நிலைகண் டுணர்ந்த நச்சினார்க்கினியர், பரிமேலழகர் ஆகிய உரையாசிரியர்கள் வட நூலார் கொள்கையில் அடிப்பட் டிருந்தும் தமிழ் மரபு இழுக்கா வண்ணம் உரை நூல்கள் இயற்றின ரன்றே! வடவெழுத்தைத் தமிழில் பெய்து எழுதும் கொள்கை இன்றியமையாதென இவ்வுரையாசிரியர் காணவில்லையே? தமிழன்பர் என்றும், தமிழ்ப் புலவர் என்றும் தமிழை வளம் பெறச் செய்வார்போலவும், தமிழுக்குப் புத்துயிர் அளிப்பார்போலவும், வாய்ப்பறை சாற்றி ஆங்கிலம் வட மொழி ஆகிய பிற மொழிகளில் தமக்குள்ள பெருமதிப்பினால் தமிழ் மொழி மேல் குறைகளை எறிட்டுக் கூறியும் தமிழ் மொழியின் சீரினை இழித்துக் கூறியும், மனம் போனவாறெல்லாம் சீர்திருத்தம் பேசத் தலைப்படு

இன்றவர் போலித் தமிழரல்லவா? ஆங்கிலம், வடமொழி ஆகிய மொழிகளில் இக்கூறிய கொள்கைகளின்படி சீர்திருத்தங்களைப் புரிய நிரம்ப இடமிருந்தும் அவற்றைத் திருத்தத் துணியாது, மொழியியல் தானும் தாம் உணர்ந்தறியாதார் தமிழ் மொழியைத் திருத்துவோ மென்பது பேதை மதியன்றோ? இத்தமிழன்பர்களின் சீர்திருத்த முயற்சியால், தமிழன்னையின் எழில்நலம் மறுப்படாவண்ணம் பாது காப்பது தமிழரின் முதன்மையான கடன் என எண்ணுகின்றேன்.

கலைநூல்கள் தமிழில் எழுதப்பெறாதது பெருங் குறையென எல்லோராலும் கருதப்பெறுகிறது. கலை நூல்களைத் தேடுவோரில் லாதபடியால் அவை வெளிவரவில்லை என்பார் ஒரு சாரார். நூலில்லா மையால் பயில்வோரில்லை என்பர் மற்றொரு சாரார். தமிழில் எழுதப் பெறும் கலைநூல்களுக்கு உண்மையான தேவை நாட்டில் இருந்தால், நூல்கள் ஒன்று பலவாகத் தோன்றிவிடுமென்பது எனது நம்பிக்கை. இது எவ்வாறாயினும், கலைநூல்களை எழுதுவதற்கு ஏற்ற முறை யாது என்பது பற்றிப் பெரியதோர் ஆராய்ச்சி நிகழ்ந்து வருகின்றது. கலைநூல்களில் வழங்கும் குறியீட்டுச் சொற்களுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்கள் படைப்பது எவ்வாறு? ஆங்கிலமாதிய மேனாட்டு நூல் களில் வழங்கும் சொற்களையே எடுத்துக்கொள்ளுவதா, வடசொற்க ளால் படைத்துக்கொள்ளுவதா, அல்லது தமிழ்ச்சொற்களால் ஆக் கிக்கொள்ளுவதா என்பதுபற்றி அறிஞர்கள் கலாம் நிகழ்த்துகின்ற னர். ஏற்ற தமிழ்ச்சொற்கள் நூலிலோ வழக்கிலோ கிடைக்கு மெனின் அவற்றைப் பயன்படுத்தவேண்டும்; இல்லாதவழி தமிழில் படைத்துக்கோடல் வேண்டும்; இதுவும் முடியாவிடில் பிறமொழிக் குறியீட்டுச் சொற்களைத் தமிழ்மரபிற் கேற்பத் திரித்து அமைத்துக் கோடல் வேண்டும். இதுவே பண்டையோர் கொண்ட முறை. பழைய இலக்கியங்களில் பயிலும் வடசொற்களும், திசைச்சொற் களும் பெரும்பான்மையாகத் தற்சம, தற்பவ மொழிகளாய்த் தமிழ் எழுத்தால் எழுதப்படுதலும், தமிழ்ச்சொற்களையே இணைத்து வேற்று மொழிச்சொல்லின் பொருளைத்தருமாறு படைத்துக்கொள்ளுதலும் வழக்கமாயிருந்து வந்திருக்கின்றன. பிறமொழியாளர்கள் கை யாளும் முறைகளும் இவையேயாகும். 'சாம்புநதம்' என்பதை 'நாவலம் பெயரிய பொலம்' என வழங்கினர். (நாவாய்) என்ற தமிழ்மொழியை Navy என யவனர் திரித்துக்கொண்டனர். இது போலவே ஆங்கிலேயரும் அரிசி, இஞ்சி என்பவற்றை rice, ginger என ஆக்கிக்கொண்டனர். கலைநூல்களிற் காணும் நுண்பொருள்களை யும், கருவிகளையும் உணர்த்துதற்கு நான்தொறும் புதிது புதிதாகச் சொற்கள் மேனாட்டினரால் படைக்கப்படுகின்றன. இச்சொற்களை நுனித்து ஆய்ந்தால், தாம் சுட்டும் பொருளை விளக்கும் சொற்கள் மிகச்சில; அச்சொற்களில் பல, அவை உணர்த்தும் பொருளைக்கண்ட அறிஞரின் பெயராலாதல், இடுகுறிப்பெயராலாதல் ஆக்கப்பட் டிருத்தலைக் காணலாம். இங்ஙனம் ஆக்கப்பெறும் சொற்களை ஒரு மொழியினின்றும் பிறிதோர் மொழியில் வழங்குங்கால் தத்தம் மொழிக்குரிய எழுத்துக்களில் திரித்து எழுதிக்கொள்ளுதலும்,

சொற்பொருள் விளங்குமாறு தம்மொழியில் சொற்கள் படைத்துக் கொள்ளுதலும் மேனாட்டினர் கொள்ளும் முறைகளாம். சர்மனி நாட்டினர் கலைத்திறன் மிக்க நாடுகளில் முதலிடம்பெற்றுத் திகழ்பவர் என்பதை எவரும் மறுக்கத் துணியார். அறிவுநூற் பொருள்களைக் குறிப்பதற்கான சொற்களைப் பொருள் விளங்குமாறு சர்மனியர் தம்மொழியில் ஆக்கிக்கொள்ளுகின்றனர். அவர்கள் மொழிவளமேனும் கலைத்திறமேனும் குன்றினதில்லை. இச்சீரிய முறையை என் தமிழர் கொள்ளக்கூடாது? கலைநூல்களிற் காணும் நுண்பொருள்களைக் குறிப்பதற்குத் தமிழில் சொல்லாற்றலும் சொல்வளனும் இல்லை என்பார், தமது அறியாமையை மொழியின் மேலேற்றி ஏதம் புரிபவர் என விடுக்க. தருக்கநூல், அணி இலக்கணம், யோகநூல், ஞானநூல் முதலியவற்றில் வடசொற்கள் பலவற்றைத் தமிழில் செவ்வனே மொழிபெயர்த்திருக்கக் காணலாம்; பல வடசொற்களைத் தமிழ்ச் சொற்களாகத் திருத்தி அமைத்திருக்கவுங் காணலாம். இற்றை நாளிலோ, ஆங்கிலத்துறையில் கற்றுத் தேர்ந்த பட்டதாரிகள் பள்ளிச்சிறார்கள் பயிலுதற்பொருட்டு, மேனாட்டுக் கலைகளைப் பாடப் புத்தகங்களாகத் தமிழில் எழுதி வெளியிடுகின்றனர். இந்நூலாசிரியர்களிற் பெரும்பாலர் தமிழ் நூற்பயிற்சி மிக மிகக் குறைந்தவர்; தமதுள்ளக் கருத்தைத் தெள்ளிதிற் கூற வாயில்லாது விழிப்பவர்; பொருள் விளக்கமற்ற, வாய்வழங்காத, சில வடசொற்களைக் கரடுமுரடாக முடைந்து குறியீட்டுச் சொற்களெனக் கருதித் தாம் எழுதும் கலைநூல்களில் அவற்றைப் பெய்து வெளியிடுகின்றனர். மாணவர்க்கும், ஆசிரியர்க்கும் இந்நூல்கள் விளைத்து வரும் ஏதங்கள் மிகப்பல. தமிழறிவு நிரம்பாத ஆசிரியர்கள் எழுதும் கலைநூல்களாலும், பள்ளிப் படிப்பினாலும் கலைவளர்ச்சி பெருகுமென்றும், நாட்டுமொழி வளம்பெறுமென்றும் நினைப்பது பேதைமையாகும். இம்மட்டோ! தமிழ் மொழியை வளப்படுத்தும் கருத்துடன், கலைநூல்களிற் காணும் நுண்பொருள்களைக் கூற, தமிழறிவு இல்லாத கலைவாணரின் உதவிகொண்டு அரசியலார் வெளியிட்டிருக்கும் குறியீட்டுச் சொற்களின் அட்டவணைகள் பல்லாற்றலும் பிழை மலிந்திருத்தலால் தமிழ்நாட்டின் நன்மதிப்பை இழந்து வழக்கற்றிருக்கின்றன. வடமொழியாளரும், அரசியலாரும் படைத்திருக்கும் குறியீட்டுச் சொற்கள் உலகர் அனைவர்க்கும் பொருள் விளங்குமாறு அமைக்கப்பெற்றிருப்பதாகக் கருதலாகுமா? தமிழ்ச் சொற்களால் குறியீட்டு மொழிகளை ஆக்கிக்கொள்ளுவதால் விளையுங் கேடுதான் என்னை? திருவாளர் பா. வே. மாணிக்க நாய்க்கர் அவர்கள் மிகச்சிறந்த முறையில் கலைப்பொருள்களுக்கு ஏற்ற குறியீட்டுச் சொற்களைத் தமிழில் ஆக்கினரன்றே? திருவாளர் மறைமலையடிகள், திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் M. A. M. L., திருவாளர் A. சீனிவாசாச்சாரியார் அவர்கள் B. A. L. T., திருவாளர் பண்டிதமணி கதிரேசன் செட்டியார் அவர்கள் முதலாயினோர் விழுமிய நடையில் எழுதிவரும் உரைநூல்களையும், அன்னோர் புதுக்கருத்துக்களை மிக எளிதாகத் தமிழில் எழுதுவதையும் கண்டும்,

தமிழ்மொழி வளங்குன்றியதெனப் பழிதூற்றும் வன்கண்ணர்களின் அறியாமைக்கு மிகவும் இரங்குகின்றேம்.

பள்ளியிற் பயில்வோர், ஆங்கிலமொழிந்த ஏனைய பாடங்களைத் தமிழில் கற்றுத்தேர்வது நாட்டிற்கும் நமக்கும் நலம்பயக்குமென்ற கொள்கை நாளடைவில் நிலைபெற்று வருகிறது. பள்ளியிறுதித் தேர்வி (S. S. L. C.) லுங்கூட கலைநூற்பொருள்பற்றிய வினாக்களுக்குத் தமிழில் விடை பகரலாமெனும் உரிமை வழங்கப்பெற்றுமிருக்கிறது. அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தே, கலைநூற்பயிற்சி தமிழில் நடப்பதே தமது முடிந்த நோக்கமென்று நடுத்தரத்தேர்வு (Intermediate) க்கான தருக்க நூலொன்றும், பிறநூல்களும் தமிழில் இயற்றத் தொடங்கி இருக்கின்றனர். என்ருலும், கல்லூரித் தலைவர்கட்கும், பல்கலைக்கழகத் தலைவர்கட்கும், கல்வித்துறைகளை ஆட்சிபுரியும் அரசியற்றலைவர்கட்கும், கலைகளைக் கற்பிக்கும் ஆசிரியர்கட்கும் இக்கொள்கையில் முழுநம்பிக்கையில்லை; உறுதியில்லை; ஊக்கமுமில்லை; தமிழில் கற்பிக்கும் ஆற்றலுமில்லை. இன்னபல காரணங்களால் தாய்மொழியில் கல்வியைக் கற்பித்தல் என்பது பேச்சளவில் இருக்கிறது. இன்னும் ஆட்சியில் வரவில்லை. தங்குற்றங் காணமாட்டாத ஆசிரியர், புதுவதான கலைப்பொருளைத் தமிழில் மொழிவதற்குச் சொல்வளமில்லையெனவும், கலைநூல்கள் எழுதுவாரில்லை யெனவும் பொய்க்கரிகூறி வீணே காலங்கழிக்கின்றனர். இப்பொருள்பற்றி, உசுமானிப் பல்கலைக் கழகப் பேரவையில் நவாபு மாடியார் சங்து பகதூர் அவர்கள் M. A., 8—2—1934-இல் நிகழ்த்திய பேருரையைத் தமிழ் நாட்டுத் தலைவர்கள் பல்காலும் படித்துத் தெளிவுறுவாராக. அப்பொன்னுரையின் சுருக்கம் வருமாறு.—எங்கள் மொழித்திறனில் முழு நம்பிக்கை வைத்தோம். புதுக் கலைகளின் கருத்தை உணர்த்த அயல்நாட்டு மொழியே இன்றியமையாத கருவி என்றும், தாய்மொழி இதற்கு ஏலாத கருவி என்றும் கொண்டிருந்த பழங்கொள்கையால் இந்தியர்கள் பழிக்கு ஆளானதுமன்றிக் கீழ்நிலையும் எய்தினர் எனக்கண்டோம். வேற்று மொழியைக் கற்றுப் புலமை பெறவும், அதன் வாயிலாய்க் கலையறிவு பெறவும் நாம் மேற்கொள்ளும் முயற்சிகளால் இக்கொள்கைக்கு அடிமை ஆகிரேம் என்பதை நன்கு உணர்ந்தோம். வேற்றுமொழியா லன்றிக் கலையறிவும், உயர்நிலையும் எய்தவொண்ணுது என்ற அடிமை எண்ணத்தினுல் நுண்மதி மழுங்கி, ஆயுந்திறனழிந்து, பாடப் புத்தகங்களை உருவேற்றி ஒப்புவிக்கும் கருவிகளாயினேம் எனத் தெளிந்தோம். தாய்மொழி தாழ்ந்த தரத்தது, கலைக் கருத்துக்களைத் தன் கைப்படுத்தவோ பிறர் உணருமாறு கூறவோ முடியாதது என்ற எண்ணங்கள் மனிதனின் ஆய்புலத்தையும், தன்முயற்சியையும் மழுங்கச் செய்யும் மனநிலையை விளைத்துவிட்டன. தாய்மொழி இழிதகவுடையதெனும் கொள்கையை மறுக்கத் துணிந்தவர் சென்ற ஒரு நூற்றுண்டாக வெளி வரவில்லை. இந்திய மக்கள் கல்வியில் தேர்ச்சியடைதற்கு ஆங்கிலமே ஏற்ற கருவியென மக்காலே துரைமகனர் அறிக்கை

விடுத்த காலந்தொட்டு, அனைவர்க்கும் தாய்மொழியில் நம்பிக்கை ஒழிந்துவிட்டது. எமது தாய் மொழியில் கல்வி வழங்குவம் எனப் பல்கலைக் கழகம் கூறிய ஞான்று பல்வகைத்தான எதிர்ப்புக்கள் இங்குத் தோன்றின. சிசுக் கொலைபுரிவோர் சிலர் கழகத்தின் கழுத்தை உடனே முறித்துவிட எண்ணினர். சிலர் சொல்வளம் நிரம்பாத இந்துத்தானி மொழி புதுக் கருத்துக்களைக் கூற முடியாது தடுமாற்றமுறுமெனவும், அம்மொழியைக் கருவியாகக் கொண்டு கற்பிக்க முயலும் கலைக் கழகமும் உருப்படாது மாய்ந்தொழியுமெனவும் கூறினர்; மற்றுஞ் சிலர் ஆங்கில நாட்டிலுள்ள கலைக் கழகங்களின் நன்மதிப்பைப் பெறமாட்டாதென நினைத்தனர்; யானோ, இக்கலைக் கழகத்தாரின் புதுக் கொள்கையில் முழு நம்பிக்கை வைத்தவன்; கழகந் தொடங்கியவர்களின் மதி நுட்பத்தை மிகவும் மெச்சினேன்; துணிபுடன் செயல்புரிந்ததை மகிழ்ச்சியுடன் பாராட்டினேன். தாய்மொழிப் பயிற்சியில் தமக்குள்ள குறைவினை உன்னி, சொல்லாற்றல் இல்லையே எனக் கணக்காயர் முதலில் மயங்கினர். இதுபோது கழகந் தொடங்கிப் பத்து ஆண்டுகள் ஆயின. இந்துத்தானி மொழி புதுத் தேவைகளுக்கேற்றவாறு விளங்குவதையும், கலை நூற்பொருள்களை எளிதே கூறுதற்கு ஏற்ற கருவியாய் இருப்பதையும், உள்ளக் கருத்துக்களை முட்டின்றி மொழிவதற்குத் தம் சொல்வளம் பல்கியதையும் அக்கணக்காயரே கண்டு இன்புறுகின்றனர். இலக்கியங்களும், கணிதமாகிய கலைகளும் இயல்பிலே வந்து தாய்மொழியில் இசைவுடன் அமைந்துவிட்டன. சுருங்கக் கூறின், கழகந் தோன்றிய காலத்தே பலர் உள்ளத்தும் விளைந்த ஐயப்பாடுகள் யாவும் அகன்றொழிந்தன. புதுக் கலைகள் எல்லாம் மிக எளிதில் தாய்மொழியிலே கற்பிக்கப்படுகின்றன. இக்கழகத்தே தேர்ச்சி பெறுபவர் இந்தியாவிலும் இங்கிலாந்திலும் உள்ள கலைக் கழகங்களின் தேர்வுகட்கு எவ்வாற்றானும் தாழ்வில்லையென மதிக்கப் பெறுகின்றனர். நீதிக் கலை, மருத்துவக் கலை, சிற்பக் கலை, உழவுக் கலை ஆகிய தொழிற்கலைக் கல்லூரிகளும் சீரிய முறையிலே வளர்க்கப்பெறுகின்றன.”

செயற்கரிய கருமமெனத் தமிழர் கருதும் செயல்களை, உசுமானிக் கலைக் கழகத்தினர் பத்தாண்டுகளில் மிக எளிதில் இயற்றியதன் பொருட்டென்னை? உண்மையான மொழிப் பற்றும், தன்னம்பிக்கையும், எண்ணிய கருமத்தை எவ்வாற்றானும் இயற்றுவேமெனும் மனத் திண்மையுமல்லவா? தமிழன்பர் என மகுடமிட்டுக்கொள்பவரிடத்து இத்தகைய பெற்றிமைகள் காணப்படுகின்றனவா? இவர் மாட்டுத் தன்னம்பிக்கையில்லை; தாய்மொழியின் எழில்நலங்களையும், சொற்சுவை, பொருட்சுவைகளையும் காண்பதற்குரிய தமிழறிவில்லை; ஆதலால் புதுக் கருத்துக்களைப் பேசுதற்குச் சொல்லில்லை யெனவும், எழுதுதற்கு எழுத்தில்லை யெனவும் பழி தூற்றி அயல்மொழிகட்கு அடிமைகளாயிருக்கின்றனர். சென்னை மாகாணத்தில் கல்வித்துறையிலும் அரசியல் நெறியிலும் உயர்பதவியிலிருப்பவர்கள் ஆங்கில மொழியில் மதிப்பும் வட மொழியில் பற்றும் உடையவர்களாய் அவற்றை வளர்ப்பதில் கருத்துடையவர்களாயிருக்கின்றனர். சில

காலமாய் நிகழ்ந்துவரும் நாட்டு மொழிக் கிளர்ச்சியின் பலனாய், சென்னைப் பல்கலைக் கழகத்தினர் F.A., B.A. தேர்வுகட்குத் தமிழைக் கட்டாயப் பாடமாக வைத்தும், தமிழாராய்ச்சிக் கழகம் நிறுவியும், தமிழகராதி வெளியிட்டும், தமிழில் B. A. Honours ஏற்படுத்தத் தீர்மானித்தும், சிறந்த தமிழ்ப் பணி ஆற்றியதாகக் கருதுகின்றனர். சற்றே ஆராய்ந்து பார்த்தால் இவையெல்லாம் வெளிமயக்கு என்பது தேற்றமாகும். B.A. தமிழ்த் தேர்விற்கு வசதி தரும் உயர்தரக் கல்லூரி சென்னை நகரத்தில் ஒன்றுதானுமில்லை; வெளி நகரங்களிற் கும்பகோணம் தவிர்ந்த பிறவிடங்களில் இல்லை. தமிழ் வித்துவான் தேர்விற்கு வசதி தரும் கல்லூரி திருவையாறு அல்லாத பிறவிடங்களில் இல்லை. ஆங்கில மொழியையும் வட மொழியையும் வளர்க்காத கல்லூரியும், பல்கலைக் கழகமுமோ சென்னை மாகாணத்தில் இல்லவே இல்லை. சென்னைப் பல்கலைக் கழகத்தினர் முடிவு செய்த வண்ணம் தமிழ் Honours வகுப்புகள் என்றைக்கேனும் உருவாகுமோவென ஐயுறவேண்டியிருக்கின்றது. சென்னைப் பல்கலைக் கழக ஆராய்ச்சியாளர் வெளியிட்டிருக்கும் நூல்களையும், அவர்கள் செலவிட்ட தொகைகளையும் ஒப்புநோக்குமிடத்து, கழகத்தின் வேலை நன்மதிப்பிற்குரியதாயில்லை.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார் தொடங்கிய தமிழ் வேலை சென்னைக் கழகத்து வேலையினும் சிறிதளவு சிறந்ததெனக் கூறலாம். தமிழ் மொழிக்குத் தனித்தலைமை கொடுத்துச் சீரிய முறையில் வளர்க்கும் கடப்பாடுடைய இக்கழகத்தும் ஏனைய கழகங்களையொப்பவே தமிழுக்கு ஓர் ஒதுக்கிடமே கொடுக்கப்பட்டிருக்கிறது. மற்றக் கழகங்களில் செய்யும் வேலைகளை யெல்லாம் செய்யத்தலைப்பட்டுப் பண மில்லாமை கண்டு, தமிழைச் சிறந்த முறையில் பேண வழியில்லையென மயங்குகின்றனர். தமிழில் கலைநூல்கள் எழுதுதற்குப் போதிய அளவு தொகைகள் தருவதில்லை; தமிழ் ஆராய்ச்சி வேலைக்கும், தமிழ் Honours தேர்வுக்கும், தமிழ் வித்துவான் படிப்பிற்கும் வருகின்ற மாணவர்களை ஊக்குதற் பொருட்டுப் போதிய அளவு உதவிச் சம்பளங்கள் கொடுப்பதில்லை. தமிழ்நாட்டில் அருகிக் காணப்பெறும் நல்லாசிரியர்களைத் தேடிக் கொணர்ந்து பேணியும் போற்றியும் வைத்துக்கொள்ளுவதில்லை; வடமொழிப் பிரிவில் பல்வகைத்தாய சிரோமணி வகுப்புக்களை நிறுவத் துணிந்தவர்கள், தமிழில் வித்துவான் வகுப்பு மட்டும் வைத்து சிரோமணிப் பிரிவுகளை யொத்த தமிழ்ப்பிரிவுகள் ஏற்படுத்தாதிருக்கின்றனர். இசைக் கல்லூரியில் தமிழ்க்கல்விக்கு இடந்தராமலும், தமிழிசையை வளர்ப்பதற்குரிய வழிகளை அமைக்காமலும், தமிழ்ப்பற்றுடைய மாணவர்களைச் சேர்க்காமலும் வன்கண்மை புரிகின்றனர். இப்பல்கலைக் கழகத்தின் ஆட்சிக் கழகத்தில், தமிழ் மொழிக்கும் இப்பல்கலைக் கழகத்திற்கும் சிறந்த தொடர்பு இருப்பதாகச் சட்டத்தில் புலனாகவில்லையே என வாது புரிபவர்களைச் சேர்த்திருப்பதால் அவர்களால் விளையும் தடுமாற்றங்கட்கு அளவுதானுமில்லை. பல்கலைக் கழகங்களில் உயர்பதவிகளில் இருப்பவர்களில் பெரும்பாலர் தமிழ்ப்பற்றும் தமிழறிவும் இல்லாத

வர்கள். ஆதலால், இக்கழகங்களின் அமைப்பு மாறினாலன்றித் தமிழ்மொழி கீழ்நிலையில் வைக்கப்படுமென்பது ஒருதலை. ஆட்சிக் கழகத்திலும் (Syndicate), கலைக்குழுவிலும் (Academic Council) இடம் பெறுபவர் தமிழ்ப்பற்றில்லாத மேனாட்டுக் கலை யறிஞர். இவர்களால் தமிழ் வளர்க்கப்பெறுமென எண்ணுவது ஏமாற்றத்திற்கிடமாகும்.

வங்காளியர், மராட்டியர், ஆந்திரர் ஆதிய இந்தியர்கள் மிகுந்த மொழிப்பற்றுடையவர்களாய்க் காணப்பெறுகின்றனர். ஆங்கிலத்திலும், மேனாட்டுக் கலைகளிலும் புலமை நிரம்பியவர்களும் தம் தாய்மொழியில் பற்றுடையராய்த் திகழ்கின்றனர். செல்வம் படைத்தவர் மொழிவளர்ச்சிக்கான கருமங்களிற் செலவிடுதற்பொருட்டுப் பெருந் தொகைகளைத் தருகின்றனர். தாம் கற்ற கலைநூற் பொருள்களைத் தம்மவர் எளிதில் கற்பதற்குரிய நூல்களைத் தம் தாய்மொழியில் இயற்றுகின்றனர். தமிழ் நாட்டினர் தாய்மொழி வளர்ச்சிக்காக யாது செய்கின்றனர்? தமிழ்ப் பற்றுடையவர்கள் ஒரு சிலர் ஆங்காங்கு நடத்திவருகிற தமிழ்க் கலாசாலைகளையன்றி, சிறந்த முறையில் விரிவான ஏற்பாடுகளுடன் நடத்தப்பெறும் உயர்தரத் தமிழ்க் கல்லூரி ஒன்றேனும் தமிழ் நாட்டின் எல்லைக்குள் காண்பதற்கில்லை. தமிழ் வளர்ச்சிக்குச் செய்யப்பெறும் சிறுமுயற்சிகள் நாடெங்கும் சிதறிக் கிடக்கின்றமையாலும், இவை சிறந்த குறிக்கோள் ஒன்றனை எய்தும் கருத்துடன் நடத்தப்பெறுமையாலும் மதிக்கத்தக்கதான பலன் இவற்றால் விளைவதில்லை. தமிழ் நாட்டிலுள்ள குறுநில மன்னர், நிலக்கிழவர்கள், செல்வர்கள் ஆதிய பெருமக்களில் பெரும்பாலர் தமிழ்மொழியிடத்து அன்பில்லாதிருக்கின்றனர்; செவியிற் சுவையுணரமாட்டாது, வாயுணர்வில் திளைப்பவராயிருக்கின்றனர். இவர்களுடைய அரண்வாய்ந்த மாளிகைகளில் கண் முதலிய புலன்களைக் கவரும் பொருள்கள் சேமித் திருப்பதன்றி, அறிவையும் மனதையும் கவரும் தமிழ் நூல்களைக் காண்பது அரிதினும் அரிதாகின்றது. நாட்டின் தலைவர்களது நிலை இதுவானால், பொது மக்களின் நிலைமையைப் பேசவும் வேண்டுமோ? சினிமா, நாடகமாதிய காட்சிகளும், கிராமபோன் பாடல்களும், 'காபி' ஆதிய உண்டாட்டுக்களும், சமயவாதங்களும், சாதிக்கலகங்களும், அரசியற் போர்களும், இன்னபலவும் அளவிறந்த இன்னல்களை விளைப்பனவாயிருந்தும், அவைகளே மக்களின் உள்ளத்தை ஈர்த்து அயராது ஊக்கிவருகின்றன. நல்ல நூல்களைக் கற்பதும், கற்றவர்கள் வாயிலாய்க் கேட்பதும் வழக்காறற்று வருகின்றன. தமிழ் நாட்டின் நகரங்களிலுள்ள புத்தகக் கடைகளில் ஆங்கிலப் பள்ளிக்கூடங்களிற் பயிலும் பாடப்புத்தகங்களையன்றி நல்ல தமிழ்நூல்களை விற்பது அரிதாகிவிட்டது. செய்தித் தாள்களையும், நொடிப்பும், நகையும் மலிந்த விகடத் தாள்களையும், காதல், களவு முதலிய சிறுமைகளை விளங்கக் கூறி அறியா மாக்களை இன்புறுத்தும் நாவல்களையுமே தமிழ் மக்கள் பேணுகின்றனர். ஞானசாகரம், ஞாயிறு, செந்தமிழ்ச் செல்வி, கலாநிலயம், தமிழ்ப் பொழில் போன்ற மாதத் தாள்களை ஆத

ரிப்பார் மிக மிகக் குறைந்து வருகின்றனர். சுருங்கக் கூறின், தமிழரிற் பெரும்பாலர் சிறு தொழில்களையும் சின்னீரவாகிய இன்பத்தினையும் நாடுபவர்களாய், வாழ்க்கையின் சிறந்த குறிக்கோள்களை அறியாதவர்களாய்க் கீழ்நிலையை எய்தி இருக்கின்றனர். உலகர் போற்றிப்புகழும் உச்ச நிலையில் இருந்த தமிழ் மக்கள் ஆற்றல் குன்றி அறிவிழந்து, கல்லாமாக்களாய் ஆனதன்பொருட்டு என்னை? தாய் மொழிப் பயிற்சியை நெகிழவிட்டோம்; தமிழ் மூதறிஞர் கூறிய உறுதிப்பொருள்களை மறந்தோம்; அன்னியரின் நடைஉடை பாவனைகட்கும் மொழிகட்கும் அடிமைப் பட்டோம். இதனாலன்றோ "கல்லாது நிற்பார் பிறரின்மையின் கல்விமுற்ற—வல்லாருமில்லையவை வல்லார் அல்லாருமில்லை" எனக் கூறமுடியாது நம்மவரில் 100-க்கு 95 பேர்கள் கல்லாமாந்தர் எனக் கணக்கிடலாயிற்று.

இக்குறைகளைத் தீர்ப்பதற்குரிய வழிதுறைகளை அமைப்பது கடன் எனக்கண்ட தமிழறிஞர், மொழி வளர்ச்சிக்கு அடிப்படையான கருமங்கள் எவை யென அறுதியிட்டு, அவற்றுள் சிலவற்றையேனும் நாமே நிறைவேற்ற வேண்டுமெனும் மனவுறுதியுடன் முடிபுகள் செய்யவேண்டும். தீர்மானிக்கப்படும் முடிபுகளை ஆட்சியில் கொணர்ந்து காரியங்களை முட்டின்றி முடிப்பதற்குரியதோர் சங்கத்தை நிறுவவேண்டும். உண்மைத் தமிழ்ப்பற்றும், பிறருடன் தோழமைகொண் டுழைக்கும் ஒருமைப்பாடும் உடைய தமிழன்பர்களையே அச்சங்கத்தில் உறுப்பினராய்ச் சேர்க்கவேண்டும். அறிவுக்கலை, அழகுக்கலை, தொழிற்கலை ஆகிய கலைகள் அனைத்தையும் செவ்விய தமிழில் தக்கார் துணைகொண்டு இயற்றவேண்டும்; இவ்வாறு இயற்றப்படும் நூல்களைப் பயில்வதற்குத் தொடக்கக் கல்லூரிகளையும், நடுத்தரக் கல்லூரிகளையும், உயர்தரக் கல்லூரிகளையும் நாடெங்கும் நிறுவவேண்டும்; நல்ல நூல்நிலையங்களை நாட்டவும், பொதுமக்கள் அவற்றைப் பயன்படுத்தவும் மிக மிக வசதிகள் இயற்றவேண்டும். இச்சங்கத்தின் கொள்கைகளை ஆங்காங்கு பரவச்செய்வது தமது தலையாய கடமை எனக்கருதித் தமிழ்ப்பண்டிதர் அனைவரும் இத்தமிழ்ப் பணியை மேற்கொள்ள வேண்டும். தமிழ் நாட்டிலுள்ள தமிழ்ச் சங்கங்கள் யாவும் ஒரு நோக்குடன் செயல் புரியும் பொருட்டு அவற்றை இச்சங்கத்துடன் இணைத்துக்கொள்ள வேண்டும். தமிழ்ச் சங்கங்கள், ஆண்டு விழாக்கள் நடத்துவதோடமையாது, இயல்பிற்கேற்றபடி தமிழ்க் கலாசாலையும், நூல் நிலையமும் நடத்தவும், சார்ந்துள்ள மக்கள் காவிய நலன்களை நுகரவும், கலை அறிவில் வேட்கையுறவும் வசதிகள் அமைக்கவும், தமிழில் வெளிவரும் சிறந்த நூல்களை அவ்வப்போது வாங்கவும் முன்வர வேண்டும். அரசியலாரின் துணையையோ, ஆங்கிலக் கல்லூரிகளின் ஆதரவையோ எதிர்பாராது, தமது வாழ்க்கையை நன்மதிப்புடன் நடத்திக்கொள்ளுமாறு மருத்துவம், சோதிடம், இசை, நாடகம் போன்ற சில தொழிற்கலைகளையும் வித்துவான் படிப்பிற்குப் பாடமாக அமைத்துச் சிறந்த முறையில் உயர்தரக் கல்லூரி நாட்டவேண்டும். இவ்வாறன்றி, தமிழ் இலக்கிய இலக்கணங்களை மட்டும் பயின்றால் எவ்வண்ணம் B, A முதலிய பட்டதாரிகள்

பிழைக்கும் வழி தெரியாது, வேலையில்லாது விழிக்கின்றூர்களோ அவ்வண்ணமே தமிழில் புலமை பெறுவோரும் தவிக்க நேரும். இசைத்தமிழ், நாடகத்தமிழ், மருத்துவக்கலை, ஓவியக்கலை ஆகிய கவின்கலைகளில் தமிழ்ப்புலவர்கள் திறனடைந்தால் இக்கலைகள் வளர்ந்தோங்கும்; தமிழ்ப்புலவர் வளம்பெறுவர்; நாடும் நலனுறும். இது தமிழ்ப்பித்தனுடைய வெறுங்கனவன்று. உண்மையில் தமிழ்ப் பற்றுடைய அறிஞர்கள் ஒருங்குசேர்ந்து, ஆங்காங்குள்ள அன்பர் களின் துணைகொண்டு சிறிது சிறிதாகப் பொருள் ஈட்டித் தமிழ்த் தொண்டுபுரியத் தலைப்பட்டால் இவை மிக எளிதில் நிறைவேறும். தன்னம்பிக்கையும், உலையாத ஊக்கமும், தளராத முயற்சியும், கருத்து வேறுபாடு விளையக்கூடிய கருமங்களினின்றும் விலகுதலும், ஒருமைப்பாடும் கொண்டு உழைப்பவர் இத்தமிழ்த்தொண்டை மேற் கொள்ளவேண்டும். தமிழ் நாட்டின் எல்லைக்குள் ஆங்கிலக் கல்லூரி கள் எத்தனை, வடமொழிக் கல்லூரிகள் எத்தனை வளனுற விளங்கு கின்றன! இதுகாலை அரசியற் பித்தினால் இந்திமொழியும் இந்திப் பிரசாரகரும் தமிழ்நாட்டில் பெற்றிருக்கும் ஆக்கத்தின் பொருட்டு என்ன ? பிறமொழிகள் வளர்தற்கும், தமிழ்மொழி வளங்குன்றுதற் கும் காரணமாவது தமிழரின் முயற்றின்மையே யாகும். அரசிய லாரையும், நாட்டின் தலைவர்களையும், மடங்களின் தலைவர்களையும். பெருஞ்செல்வரையும் பழிதூற்றுவதில் பயனில்லை.

'உழப்பின் வாரா வுறுதிகளுளவோ
கழப்பின் வாராக் கையறவுளவோ.'

என்ற பொய்யாமொழியினைக் கடைப்பிடித்துத் தமிழறிஞர் ஊக்கத் துடன் முயலவேண்டும்.

தமிழ்நாட்டின் நிலை பல்லாற்றானும் தளர்வுற்றிருக்கின்றது. நூற்றுக்கணக்கான ஆங்கிலக் கல்லூரிகளும், இரண்டு பல்கலைக் கழகங்களும் தமிழ்நாட்டின் எல்லைக்குள்ளிருந்தும், தமிழரிற் பெரும் பாலர் கல்லா மாக்களெனக் கருதப்படுகின்றனர். ஆங்கிலக் கல்லூரி களிலிருந்து கற்றுத்தேறி வெளி வருபவர் புதுக்கொள்கைகட்கு அடிப்பட்டு, பிறர்மாட்டு அன்பும் அருளும் கொண்டு தொண்டு புரியு மாறறியாத ஊமராய்த் தனிச்சாதியினரா யிருக்கின்றனர். அறியாமை அகலவும், நாடு நலஞ்சிறக்கவும் தமிழ்க்கல்வியே சிறந்த கருவி. தமிழ் மொழியின் ஆக்கம் பெருகுதற்குரிய வழிகளை நாடித் தமிழறிஞர் நாட் டைப் புரப்பாராக.

"எண்ணிய எண்ணியாங்கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்."

நலம்

## மாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்கள்

க. "சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கம்" ஒன்று நிறுவவேண்டு மென்றும், அதனை (Government of India Act 21 of 1860) இந்திய அரசியலார் 1860 இருபத்தோராவது சட்டப்படி பதிவு செய்ய வேண்டுமென்றும், அதற்கான விதிகளை ஒப்புக்கொள்வதாக வும் இம்மாநாடு தீர்மானிக்கிறது.

உ. "இச்சென்னை மாகாணத் தமிழர் முதலாவது மாநாட்டின் மிகுதித் தொகை சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் முதற் பொருளாகுமென்றும், தமிழ்நூற் காட்சி நிலயத்திற்கு வந்துள்ள நூல்களில் சங்கத்திற்கெனத் தரப்பெற்றன சங்கநூல் நிலயத்திற் சேர்க்கப்பெற வேண்டுமெனவும் இம்மாநாடு தீர்மானிக்கிறது."

ந. "ஆங்கில ஆசிரியருக்குள்ள தகுதிகளும் பொறுப்புக்களும் தமிழாசிரியர்கட்கும் இருத்தலினாலே, அவ்வப் பள்ளிக்கூடங்களி லுள்ள ஆங்கில ஆசிரியருக்குத் தருவது போலச் சம்பளம் தமிழாசிரி யர்கட்கும் தரல்வேண்டும் என்று அரசியற் றலைவர்களையும், கல்லூரி நடத்துகிற செல்வர்களையும் இம்மாநாடு வேண்டிக் கொள்கிறது."

ச. "உலக முதன் மொழியாகவும், பலதுறைக் கல்விகளும் அமைந்துள்ளதாகவும் உள்ள தமிழ்மொழியை அடிமைமொழி எனப் பொருள்படும்படி "Vernacular" என்று சொல்லாமல் "தாய் மொழி "Mother tongue" என்று கூறவேண்டும் எனப் பல்கலைக் கழகத்தாரையும் அரசியலாரையும் இம்மாநாடு வேண்டிக்கொள் கிறது."

ரு. "ஆசிரியப் பயிற்சிப் பள்ளிகளில் தகுதிவாய்ந்த தமிழா சிரியர்களை அமர்த்தல் வேண்டுமென இம்மாநாடு தீர்மானிக்கிறது."

சு. "மக்களிடை அறிவை வளர்க்கச் சுற்றுநூல்நிலையங்கள் பல இடங்களிலும் தொடங்கும்படி நாட்டாண்மைக் கழகத்தாரையும் தமிழ்ச் சங்கங்களையும் இம்மாநாடு வேண்டிக்கொள்கிறது."

எ. "நூன்மதிப்புக் கழகத்தா (Text Book Committee) ருடைய ஒப்பம் பெற்ற நூல்களிற் பல பிழை மலிந்திருப்பதைக் கண்டு இம்மாநாடு வருந்துகின்றது."

அ. "ஆங்கிலத்திலும் வடமொழியிலும் இருப்பதுபோல தமிழி லும் துணைமொழி யில்லாமல் B. A., M. A., பட்டத்திற்குத் தமிழி லேயே தேர்வு ஏற்படுத்த வேண்டுமென்று சென்னைப் பல்கலைக் கழகத்தாரை இம்மாநாடு வேண்டிக்கொள்கிறது."

கூ. "கல்லூரிகளிலும் உயர்தரப் பள்ளிக்கூடங்களிலும் ஆங் கிலம் ஒழிந்த எல்லாப் பாடங்களையும் தமிழிற் கற்பித்தல் வேண்டு மென்று இம்மாநாடு தீர்மானிக்கிறது."

ய. "பள்ளி இறுதித் தேர்வு (S. S. L. C), நடுத்தேர்வு (Intermediate), கல்லூரித் தேர்வு (B. A.) ஆகிய தேர்வுகளில்

தமிழை எடுத்துக்கொண்ட மாணவர் அதே மொழியை விருப்பப் பாடமாக எடுத்துக் கொள்ளலாமென விதிக்க வேண்டுமென்று பள்ளி இறுதிக் கழகத்தாரை (S. S. L. C. Board) யும், பல்கலைக் கழகத்தாரையும் இம்மாநாடு வேண்டுகிறது."

கக. "தமிழ்மொழியிற் பல்பொருள் விளக்க அகராதி (Encyclopaedia) இன்மையின் அக்குறையை நீக்கத் தமிழறிஞர் முற்படுதல் வேண்டுமென இம்மாநாடு தீர்மானிக்கிறது."

கஉ. "நாட்டின் உண்மை வரலாற்றை விளக்குகின்ற கல்வெட்டுக்களை ஆராய்ச்சி செய்வதற்கு அதிற் பழக்கமுள்ள தமிழ்ப் புலமை மிக்கார்களையே எற்படுத்தும்படிக்கும், அவற்றைத் தாமே ஆராய்பவர்களுக்குப் பணஉதவி செய்யும்படிக்கும் இது வரையில் வெளிவராத கல்வெட்டுக்களை விரைவில் வெளியிடும் படிக்கும் அரசியலாரை இம்மாநாடு வேண்டுகிறது."

கரு. "தமிழ்ப் பெயர்கள் பிறமொழிப் பெயர்களாக மாற்றப் பட்டிருப்பதை உண்மைப் பெயராக வழக்கத்திற் கொண்டுவரவேண்டும் ஏற்பாடு செய்யக் கீழ்க்கண்டவர்களை ஒரு உட்கழகமாக, பிறரையும் சேர்த்துக்கொள்ளும் உரிமையுடன், இம்மாநாடு ஏற்படுத்துகிறது.

க. திரு. த. வே. உமாமகேசுரன் பிள்ளையவர்கள் B.A., B.L.
உ. ,, வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் G.B.V.C.
ரு. ,, இரா. கு. நல்லகுற்றாலம் பிள்ளையவர்கள்.
ச. ,, க. ப. சந்தோஷம் அவர்கள் B.A., L.T.
ரு. ,, செ. தெ. நாயகம் அவர்கள்.

கச. "தமிழ் நாட்டில் நடைபெறும் விழாக்களிலும், பிற திருமணம் முதலிய நிகழ்ச்சிகளிலும் தமிழ்ப் பாடல்களே பாடுமாறு ஏற்பாடு செய்யத் தமிழ்ப் பெருமக்களை இம்மகாநாடு வேண்டுகிறது."

கரு. "அரசியலார் வெளியிட்டுள்ள அட்டவணைகளில் நூற்றுக்கு எண்பத்திநான்கு சொற்கள் வடமொழியா யிருத்தலால், மேல்நாட்டுக் கலைச்சொற்களுக்குச் சரியான தமிழ்ச் சொற்களை (Tamil Equivalents to Scientific Terms) ஆக்குவதில் ஊசுமானியா முதலிய பல்கலைக் கழகத்தார் செய்துள்ள செயல்களைத் தெரிந்து கொண்டு ஆக்கித் தரும்படி பின்வரும் உட்கழகத்தை இம்மாநாடு அமைக்கிறது. அக்கழகம் தக்காரைச் சேர்த்துக்கொள்ளும் உரிமையுடையது."

திருவாளர்கள் (க) கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் M.A., L.T., (உ) T. S. வேலாயுதம் பிள்ளையவர்கள் B.A., L.T., (ரு) A. சீனிவாசாசாரியாரவர்கள் B.A., L.T., (ச) சாமி. விபுலானந்தர் அவர்கள் B.S.C., (ரு) M. சோமசுந்தரம் அவர்கள் M.A., L.T., (சு) க. ப. சந்தோஷமவர்கள் B.A., L.T., (எ) அலர்மேல் மங்கைத் தாயாரம்மாளவர்கள் M.L.C., (அ) சாமி. விருதை. சிவஞான யோகியவர்கள், (கூ) தி. இலக்குமணப் பிள்ளையவர்கள் B.A.

# ஆராய்ச்சிப் பகுதி-Research

## ஆரியர் நாகரிகமும் திராவிடர் நாகரிகமும்

[திரு. பா. வே. மாணிக்க நாயக்கர்—
காழி. சிவ. கண்ணுசாமி B A.]

(முன் ௩௧௨-ம் பக்கத் தொடர்ச்சி)

ஒரு நாட்டு மக்களின் நாகரிக முதிர்ச்சியை யளந்தறிவதற்கு அம்மக்களின் "மட்டு, மரியாதை"களே சிறந்த கருவிகளாகும். இம் "மட்டு, மரியாதை" என்பன ஒருவருடனொருவர் உரையாடுவதிலுங்கூட பின்பற்றற் குரியனவாம். பலர் முன்னிலையில் சில சொற்களைக் கூறலாகாதென ஒரு நியதியுண்டு. அச்சொற்களெல்லாம் அவையஞ்சு கிளவிகளாம். இத்தகைய சொற்களை வழக்காற்றிற் பயன்படுத்துவதை அளவுகோலாகக் கொண்டு நாம் திராவிடர் நாகரிகத்தை அளக்கப் புகின் அவ்வளவு கோலுக்கு அதன்கண் வேலையே யில்லை என்பது புலனும். ஆரியர் நாகரிகத்தை அளக்கப் புகினே அவையஞ்சுகிளவியளவு கோல் மீண்டும் மீண்டும் பன்முறை அளக்கப் பயன்படுவதைக் காணலாம். ஆரியர்தம் நூல்களிலும் உரையாடலிலும் வழங்கும் இத்தகைய அருவருக்கத்தக்க சொற்களுக்கு அளவே இல்லை. பண்டைத் தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியம் தொடங்கி இன்றளவும் எழுதப்பட்டு வெளிவந்துள்ள ஒவ்வொரு தமிழ் இலக்கண நூலிலும் அருவருக்கத்தக்க மொழிகளைப் பயன்படுத்தக் கூடாதெனக் கண்டித்து அறுதியிட்டிருப்பதையும், இன்றியமையாது பயன்படுத்தவேண்டி நேரிடுங்கால் எவ்வாறு இடக்கர் அடக்கி மொழிய வேண்டும் என விதித்திருப்பதையும் நன்கு காணலாம். வேறெம் மொழிக்குரிய இலக்கண நூலிலும் இத்தகைய தொரு விலக்கு இருப்பதாக நானறிந்த வரையிற் கண்டதுமில்லை கேட்டதுமில்லை.

எழுத்தறியாத திராவிட நாட்டுப்புறத்தான் ஒருவன்கூட, இயல்பாகவே திராவிட நாகரிகத்திற்குரிய "மட்டு மரியாதை" என்ற கட்டுப்பாட்டினுட் பழக்கப்பட்டவனாதலால், தெலுங்கிலோ, தமிழிலோ, மலையாளத்திலோ, துளுவிலோ இணைவிழைச்சு குறித்த சொற்களையும் அவைபோன்ற சொலற் கொணுச் சொற்களையும், சினமூட்டப்பட்டோ மற்ற எக்காரணத்தினுலோ தன் நிலை யிழந்திருந்தாலொழிய, கூறவே மாட்டான். ஆனல் வடமொழியில் வேதங்கள்முதல் தோன்றியுள்ள நூல்களிலோ ஆரியக் கவிஞர்கள் "சிருங்கார ரசம்" என்ற பெயரால் திரா

விடர்கள் காதுகள் புளித்துப்போகுமளவிற்கு அளவு வரையற்ற அருவருக்கத்தக்க இடக்கரான மொழிகளை வாரியிறைத்துள்ளனர்.

"எல்லோரும், 'ஊத்தைக் குழியிலே மண்ணெடுத்து உதிரப் புனலிலே உண்டை சேர்த்து'ப் பிறந்தவர்கள் தாமே! அவ்வாறிருக்க உண்மையான சொற்களை மொழிவதில் அருவருப்பென்ன! மறைப்பென்ன?" என்றுவினவுதல் கூடும். உண்மையே; அவ்வாறு எல்லோரும் பிறந்தவர்கள்தாம் என்பதை மறைக்கவில்லை; மறுக்கவுமில்லை. ஆனால் அவ்வாறு பிறந்ததனாலேயே அப்பிறத்தற்குரிய உறுப்புகளையும் செய்கைகளையும் பறைசாற்றித் திரியலாம் என்று கூறுவதையே மறுக்கிறோம். அஃது "மரியாதை" யற்ற ஒழுக்கமாகும். அருவருக்கத்தக்கவற்றை ஒதுக்குவதனாலேயே மக்கள் மாக்களினும் வேறுபட்டு மேம்பட்டவர்களாகின்றனர். யாகம் என்ற பெயரால் ஆரியர்களாற் செய்யப்படும் 24 வகைப்பட்ட பௌண்டரீக யாகங்கள் ஒழுக்கமும் நாகரிகமும் உடைய எம்மக்களாலாவது கையாளத்தக்கனவா? யாகத்திற்காகப் பலியிடப்படும் ஆடு, மாடு, குதிரை, மான் போன்ற விலங்குகளை யாகத்திற்கு 'அதிதெய்வமான' இந்திரனாகவே கருதி அவ்விலங்கினுடன் யாகம் இயற்றுவோனின் மனைவி இரவெல்லாம் துயில் கொள்ள வேண்டும் என்று விதித்துள்ள ஆரிய நாகரிக முறையின் ஏற்றந்தான் என்னே! திராவிடர்தம் நாகரிக நிலை குலைந்து சீர் கேடுற்றிருக்கும் இக்காலத்திற் கூட திராவிடப் புலவர்கள் இணைவிழைச்சிற்கான சொற்களைப் பயன் படுத்த நேருங்கால் ஒருபடித்தாக அவற்றை வடமொழிச் சொற்களாகவே குறித்திருப்பதைக் காணலாம். தமிழ்மொழியின் தூய்மையையும் பெருமையையும் அவர்கள் மாசுபடுத்தத் துணியவில்லை.

மேனாட்டிலிருந்து இந்நாட்டிற்கு வந்து வடமொழியை எழுத்தெண்ணிப் படிக்க இடமுங் காலமும் பெற்ற ஆங்கில ஐரோப்பியப் புலவர்கள் தமிழ் தெலுங்கு முதலிய நாட்டு மொழிகளைக் கல்லாத அறியாமையினால் திராவிடர்கள் பேய்வழிபாடுடையவர்கள் என்று குழறுபடையாக மொழிந்து போயினர். ஒரு நாட்டு மக்களிடைப் பேய்களின் நினைவும் வழிபாடும் இருந்திருப்பின் அதற்கான அறிகுறிகளை அவர்தம் மொழியிற் காணல் வேண்டுமன்றோ? வடமொழி யகராதியில் நூற்றுக்கணக்கான பேய்களின் பெயர்கள் காணப்படுகின்றன; ஆனால் திராவிட அகராதியிலோ அத்தகைய பெயர்களைக் காண்பதற்கில்லை. திராவிடர்கள் இற்றை நாளிற் பேய்த்தெய்வங்களை வணங்கக்காண்கின்றோமே எனின் அவர்கள் வணங்கும் பேய்த் தெய்வங்கள் எல்லாம் ஆரியர்தம் பேய்த் தெய்வங்களே; ஆரியப் பெயருடையவை

களே. இவ்வுண்மை உணர்ந்தறிய மாட்டாது ஆங்கில ஐரோப்பிய மாணவர்கள் திராவிடர்கள் பேய் வழிபாட்டினர் என்று உளறி வழிந்தனர் !

இறைமைக் குணங்கள் இல்லாத தெய்வங்களைத் தெய்வங்களாகக் கொண்டு வழிபடுதல் திராவிடர்மாட்டு என்றுங் கிடையாது. அன்றியும் இறைமைக் குணங்கள் நிறைந்த பொருட் டெய்வங்களையுங்கூட, பண்டை இலக்கண நூலில் உயர்திணையின்பாற் படுத்தாமல் மக்களின் விருப்பத்திற்கியைந்தவாறு உயர்திணைப் படுத்தியோ அஃறிணைப் படுத்தியோ மொழிவதற்கான விதி வகுத்திருப்பதும் நோக்கற்பாலது. மகன் ஒருவனே முட்டின்றி உயர்திணையின்பாற்படுத்து மொழிவதற்குரியவனுகக் கருதப்பட்டான்; அஃதும் ஆறறிவு படைத்த மகன் ஒருவனே என்பது குறிக்கொளற்பாற்று. இஃதே திராவிடர் தம் உயர்ந்த தத்துவநிலை. உருவ வழிபாடன்று உண்மை வழிபாடே திராவிட நாகரிகத்திற்குரியதாம்

இனி, சாதி என்ற பிரிவினை திராவிடர்களுக்குள் கிடையாது. பிறப்பினுல் உயர்வு தாழ்வை நேராகக் குறிக்கக் கூடிய எச்சொல்லும் திராவிட மொழிகளில் இல்லை. செய்தொழிலினுலும் பிறந்த நாடுகளினுலும் உண்டான பிரிவினையே அவர்கண் மாட்டுக் காணப்பட்டது. பின்னர்ப்புகுந்த ஒற்றுமை நலங் கெடுக்கும் ஆரிய சாதிப்பெயர்களுடன் இன்றும் திராவிடர்கள் தம்முடைய தொழிற்கும் பிறப்பிடத்திற்கு முரிய பெயர்களைச் சூட்டிக் கொண்டிருக்கக் காணலாம். பிறநாட்டு மக்கள் தம்மிடை வாழ்ந்து வருதற்குத் திராவிடர்கள் எத்தகைய இடர்ப்பாடும் விளைத்ததில்லை. எந்நாட்டினராயினும் திராவிடர்களிடையே தந்நாடே போல அவர்கள் வாழ்ந்துவர வசதி பெற்றனர். அதனுல் நாளாவட்டத்தில் பிற நாட்டினரும் திராவிடர் தம் உயரிய நாகரிகத்தினுல் ஈர்க்கப்பட்டு எத்தகைய வேறுபாடுமின்றி கலப்புற்றுத் திராவிடர்களே யாயினர். போரில் வென்று நாட்டைப் பிடித்தவர்கள் கூட திராவிடர் நாகரிக நிலையைச் சிதைக்க முடியாமல் அதன்மாட்டு ஈடுபடுவாராயினர். ஆந்திர நாட்டை அடிப்படுத்துப் பின் தமிழர் நாட்டிடையும் சிற்சில பகுதிகளைக் கைக்கொண்ட பல்லவர்கள் தம் இனச்சுவடேயில்லாமல் திராவிடர்களுடன் கலந்து பட்டமை இதற்கு எடுத்துக் காட்டாகும்.

திராவிடர்தம் மணமுறையை நோக்கிலோ, அத்துறை நிகழ்த்தும் ஒவ்வொரு செயலுக்கும் ஆடவன் பொறுப்பாளியாக இருந்திருப்பது நன்கு புலப்படும். ஓராடவன் ஒரு பெண்ணுடன், பெற்றோருடன்பட்டோ படாமலோ பான்மை வழிப் பட்டுக் கூடிட நேரின் அவனுடைய உரிமைகளனைத்தும் அன்று

முதல் அப்பெண்ணைச் சார்வதே திராவிட முறை. சீரிய இவ்வற முறையுடன் ஆரியர்தங் காமமிக்க காந்தர்வ முறை போன்ற மண முறையை ஒப்பிட்டுப் பார்ப்போர்க்கு நம்பி வந்தபெண்ணை நட்டாற்றில் விட்டு எத்தகைய பொறுப்புமின்றி ஆடவன் தப்பித் திரிய இடங்கொடுக்கும் அவர் முறையின் குறைபாடு கூறாமலே விளங்கும். அத்தகையதோர் இழிமுறையில் நீதியும்நல்லொழுக்கமும் காணக் கிடக்கும் என்று கருதவுங் கூடுமோ?

மனுநீதியில் "வர்ண சங்கிரகம்" என்றதலைப்பின் கீழ் "சாதி"யும் அதன் பல்வேறு பிரிவுகளுங் காணப்படுகின்றன. ஆரிய நாகரிகத்திற்குப் பட்டோலையாயிருப்பது மனு நீதியே. பஞ்சமர்கள் என்று அழைக்கப்படுவோர் அந்நூலின்கண் "சண்டாளர்" எனக் கூறப் படுகின்றனர். "சண்டாளர்" என்பார் பார்ப்பனப் பெண்டிர்க்கும் "சூத்திர" ஆடவர்களுக்கும் முறைதவறிப் பிறந்தவர்கள் என்று அந்நூலே கூறுகிறது. இவ்விழி முறை இப்பொழுதில்லையென்று துணிந்து கூறலாம். இத்தகைய "சண்டாளர்"களின் தொகை பார்ப்பனர் தம் மக்கட்டொகையைப்போல் ஆறு அல்லதுஏழு மடங்கு மிகுத்துக்காணப்படு கிறதென்ற உண்மையை நோக்கின்மனு நீதியின் கூற்று ஒப்பத்தக்கதோ எனஐயுறவேண்டியிருக்கிறது. ஐயுறாமல் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டுமெனக் கூறின் ஆரியர்தங் கற்பொழுக்கம் நிலைகுலைந்து காணப்படுவது கருதற்பாற்றாம். ஆரியர்தம் நூற்களும் நாடகங்களும் இழிந்த காமச்சுவைமிகுந்த கதைகள் நிறைந்தவை என்று முன்னர்க்கூறினோம். அத்தகைய கதைகளும் நாடகங்களும் மணியெனத் திகழ்ந்த திராவிடர் நாகரிக முறையை ஒருவாறு மாசுபடுத்தின என்பதையொப்புக் கொள்ளல் வேண்டும். வெறுத்தொதுக்கற்குரிய இக்கதைகள் எல்லாம் எவ்வாறோ திராவிட மொழிகளில் மொழி பெயர்க்கப் பட்டுவிட்டன. சங்கத்தமிழிலோ அதற்கு முன்னெழுந்த தமிழ்நூல்களிலோ வெறுக்கத் தகுந்த காமமலிந்த கதைகள் ஒன்றேனும் காணக்கிடையாது. சிலப்பதிகாரத்தில் ஒரே ஒரு கதைகுறிக்கப் பட்டுள்ளது உண்மையே; ஆனால் அஃது ஒரு பார்ப்பினி கற்பிழந்து காசிக்குச் சென்று கழுவாயாற்றியதையே குறிப்பதாம். இதனால் ஆரிய நாகரிகத் தாக்கால் திராவிடர்கள் எவ்வாறு தம் ஒற்றுமை நலமிழந்து, உயரொழுக்கங்கள் குன்றி, சாரத்தைக் கைநெகிழ விட்டுச் சக்கையையே விடாப்பிடியாப் பற்ற நேர்ந்ததென்பது ஒருவாறு புலனாம்.

(தொடரும்)

—

# ஔவையார்

(முகப்புப் படம் பார்க்க)

நல்லிசைப் புலமை மெல்லியலாருண் மேம்பட்டவர்; தெய்வ பக்தியும் அற்புத மகிமையுமுடையவர்; இவர் பிதா பகவனென்னும் வேதியன்; தாய் ஆதியென்பாள். பாணர் சேரியில் வளர்ந்து வயதடைந்தவர். பிறந்த பொழுதே தாய் தந்தையர் நியமனப்படியே சிசுவைப் பிரியமாட்டாது வருந்துகையில் "எவ்வுயிருங் காக்கவோ ரீசனுண்டோ வில்லையோ, அவ்வுயிருள் யானுமொன்றிங் கல்லலேனோ, வவ்வி யருகுவது கொண்டிங் கலைவானே னன்னாய், வருகுவது தானே வரும்." எனக்கூறி அவரைத் தேற்றி விடுத்தவர். இவருடன் பிறந்தவர் அதிகமான், திருவள்ளுவர், கபிலரென மூன்று சகோதரரும், உப்பை, உறுவை, வள்ளியென மூன்று சகோதரிகளுமாவார். இவர் தமிழ்நாடு முழுவதுஞ் சஞ்சரித்துப் பற்பல அமையங்களிற் பற்பல தனிக்கவிகளால் பற்பல அற்புதங்கள் செய்தவர்.

இவராற் பாடப்பட்டோர் அதியமான் நெடுமானஞ்சி, அதியமான் மகன் பொகுட்டெழினி, தொண்டைமான், நாஞ்சில் வள்ளுவன், சேரமான் மாவெண்கோ, பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப்பெருவழுதி, சோழன் இராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி முதலியோ ரநேகர். அதியமான் நெடுமானஞ்சி தனக்குக் கிடைத்த கருநெல்லிக்கனியை உண்டோர் நெடுங்காலஞ் சீவித்திருப்பரென்ப துணர்ந்தும் தானதனை யுட்கொள்ளாது இவரிடத்துள்ள அன்பினால் கொடுக்க வுண்டு நெடுங்காலஞ் சீவித்திருந்தவர். இதனைப் புறநானூற்றில் இவர் பாடலினும், நெடுநல்வாடையினும் காணலாம். அதிகமான நெடுமானஞ்சி யிடத்துள்ள அன்பினால் தொண்டைமானிடந் தூது சென்றவர். இவர் உக்கிரப்பெருவழுதி காலமுதல் கம்பர் காலம் வரையில் அநேக நூற்றாண்டுகள் சீவித்தவரென்றறியப்படுகிறது.

இவரியற்றிய நூல்கள் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி, அசதிக்கோவை, பந்தனந்தாதி, ஞானக்குறள் முதலியன. அன்றியும் எட்டுத் தொகையுள் சிலவற்றில் பலசில பாடல்களும், அவ்வவ்வமயங்களிற் கூறிய எண்ணிறந்த தனிச் செய்யுட்களும் இவர் பெயராலே விளங்கும். இவர் வாக்கு விசேடத்தாலே தொண்டைநாட்டில் சுரக்குங் கிணறு இன்றளவும் அங்ஙனமே யுள்ளது.

(அபிதான கோசம்)

# செய்திகளும் குறிப்புகளும்
# News and Notes

1888-ஆம் ஆண்டு ஜூன் முதல் நாளில் இந்தியக் கிறித்தவ உடையார் வகுப்பிற் பிறந்து, திரிசிரபுரம் ஸெயின்ட் ஜோசப் கல்லூரியில் கல்வி பயின்று, பின்னர் இலண்டன் சென்று கிரேஸ் இன் நிலையத்தில் பார் அட்லா பட்டம் பெற்று, நாடு திரும்பி, 1918 முதல் 1920 வரை தஞ்சை நகராண்மைக் கழகத் தலைவரா யிருந்தவரும், 1924 முதல் 1930 வரை தஞ்சை ஜில்லாபோர்ட் தலைவரா யிருந்தவரும், இலண்டன் வட்டமேஜை மாநாட்டு அங்கத்தினரில் ஒருவரா யிருந்தவருமான இராவ்பகதூர் A. T. பன்னீர்ச்செல்வம் அவர்கள் சென்னை அரசாங்க உள்நாட்டு மந்திரி பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டமை யறிந்து யாம் கழிபேருவகை கொள்கிறோம். தமிழில் மிகுந்த பற்றுடையவரும் தமிழ்க் கல்வி வளர்ச்சியில் மிகுந்த ஆர்வமுடையவரும் தமிழர் முன்னேற்றமே குறிக்கோளாகக் கொண்டவருமான இப்பேரறிவாளர் நாட்டுக்கு நற்றொண்டு புரிந்து மேன்மேலும் உயர்பதவியடைந்து திகழுமாறு இறைவன் அருள்புரிவானாக.



*　　　*　　　*

ஆஸ்திரியா நாட்டுத் தலைமையாளரான டாக்டர் டெல்ஃபஸ் என்பவர் அரசாங்க எதிர்க்கட்சியாரால் சுட்டுக்கொல்லப்பட்டதும், ஜெர்மனி நாட்டுக் குடியரசுத் தலைவரான ஜெனரல் வான் ஹிண்டன்பர்ஃக் என்பவர் மரணமடைந்ததும் வருந்தற்பாலனவாம்.

*　　　*　　　*

கதிரி (Radium) என்ற புதியதோர் கனிப்பொருளைத் தம் ஆராய்ச்சி வன்மையாற் கண்டுபிடித்து அறிவியலுலகிற்குப் பேருதவி புரிந்த பிரான்ஸ் நாட்டுப் பேரறிஞர் மேடேம் மரியா க்யூரி என்ற அம்மையார் தம் 67-வது வயதில் விண்ணுலகு நீத்தது பெரிதும் இரங்கற்பாற்றும்.

*　　　*　　　*

சென்னைப் பல்கலைக் கழகத்தார் விரைவில் தமிழில் பி. ஏ. ஆனர்ஸ் வகுப்புத் துவக்கவேண்டுமென்று முடிவுகட்டியுள்ளது நற்செய்தியாகும். இத்துணைக் காலங் கழித்தேனும் இத்தகைய ஓர் எண்ணம் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவினர் மனத்திடை முளைத்தது போற்றற்குரியதே.

கழக வெளியீடு-கசுசு

உ

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்த நிச்சயம்



திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி & சென்னை
1934

# பதிப்புரை

சைவசித்தாந்தத்தின் பெருமை தெரிக்க எழுந்த இச் சிறுநூல், பதினெட்டாவது நூற்றாண்டிற் றிகழ்ந்த ஆசிரியர் குடவாயில் சிவப்பிரகாச தேசிகர் அவர்களின் மாணவர் சிவாநந்த தேசிகர் இயற்றிய தாகும். இவர் இயற்றிய சைவசித்தாந்த சாரம் என்ற மற்றொரு நூல் முன்னர் வெளியிடப்பட்டது. இந்நூலும் தருமபுர ஆதீனத்தைச் சேர்ந்த வித்து வான் சட்டைநாதத் தம்பிரானவர்களிடமும் அவ் வாதீனத்தைச் சேர்ந்த சீகாழி வித்வசிகாமணி ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையவர்களிடமும் இருந்த ஏட்டுச் சுவடிகளிலிருந்து படி யெடுக்கப்பட்டதே. மேற்படி வித்வசிகாமணிப் பிள்ளையவர்களின் நன் முயற்சியாலும், அவர்தம் மாணவர் வித்வான் காழி-சிவ. கண்ணுசாமி பிள்ளை B A., அவர்களின் முயற்சி யாலும் இந்நூல் நங்கழக வாயிலாக முதன்முதல் அச்சேறி வெளிவருகிறது.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

மயக்காம் விடய மதனாற் சுகதுக்கம் வாய்த்திருக்க
வுயிர்ப்பாற் சுகத்தை யுயிர்க்குண மென்ற வுரைதவரு
துயர்ப்பாழு மான்ம குணமே லணுக்குணந் தோன்றல்முத்தி
நயப்பான முத்தர்க்கு முண்டாஞ் சுகதுக்க நன்றதன்றே. 91

முத்தரு மின்பதுன்பஞ் சேர்வரென்று மொழிந்திடவே
பெத்தரு முத்தரும் பேதமின் றாமே பிறைமவுலி
மத்தன் னிசைத்த வசனத் திதுவும் வருவதுண்டோ
இத்தன்மை செப்பினர் யாவரு மில்லை யிதுபழுதே. 92

தருதுக்க மின்ப முயிர்க்குண மோவிறை தன்குணமோ
மிகையற் றிரண்டும் விடய குணத்தெண் விடயகுணம்
தகவுற் றவர்க்குப் பொருந்துதல் போலரன் றாள்பொருந்த
மிகையற் றானின்பம் மேவு முயிர்க்கின்பம் வேறிலையே. 93

நித்தனுக் காருயிர் முத்தியி லொப்பு நிகழ்த்தலினா
லத்தனைப் போல வுயிர்க்கு வடிவமு மானந்தமென்
றுத்தமமான சிவாகமந் தானு முரைத்ததுவாம்
முத்தன் சிவானந்த மெய்தா னெனவு மொழிந்திடிலே. 94

முத்தன் சிவானந்தந் தன்னை யருந்தி முதல்வனையு
நித்தம் பிரிவில னென்று கமங்க ணிகழ்த்தலினால்
அத்தன தானந்த மெய்தா துயிரென் றறைந்தசொற்று
னுத்தம முத்தி யுணரா தவர்க ளுரைக்குஞ்சொல்லே. 95

சிவனுக் குயிர்சம மென்றால் வடிவுஞ் சிவன்றனைப்போ
லிவனுக் குரைப்ப திசையா மலமறைப் பின்மைமுக்கண்
ணவனுக் கொப்பா மன்றி முற்றுமுவமை யறையினுயிர்
பவனுக்கு வேறன் றொருபொரு ளென்று பகர்ந்திடுமே. 96

அரனுவி ஞானங் கிரியையை மூடிய வாணவத்தின்
பரிபாகங் கண்டதை நீக்கிட ஞானம் பகர்கிரியை
விரிவாகு மென்னப் புகலாக மத்துயிர் மென்குணமாய்ப்
பிரி………………ங்கூட விளங்குதல் பேசலின்றே. 97

அண்ணலை யின்ப சொரூபியென் ருரான வாகமங்கள்
நண்ணி யுரைப்பது போலுயிர் தன்னை நவின்றதின்ருல்
.....................தின்ப முண்டென்று புகன்றதுமுக்
கண்ணன தின்பமென் ருய்ந்தாக யத்துள்ளுங் கண்டுகொள்ளே.

இருளறு சீவன் முத்தர் சிவமேகண் டிருப்.........
..............வானுபவ சுவானு பூதிக மாமதென்றும்
பிரிவின் மெய்ஞ்ஞான முடையோர் சிவனைப் பெறுவரென்றும்
கரிசகல் முத்தர் சிவன் ரேற்ற மென்று......... 99

ஆருப் பரம்பார்த் திருப்பர் பதார்த்தம்பா ரார்களென்றும்
கீரு விருண்மல நீங்க வரனடிக் கீழிருப்பார்
மாருச் சிவானுபவ மாவி யென்றும் வந்தமோ
........................சித்திமெய் நூலிடத்தே. 100

பன்னுமுயிரின் குணமாக வின்பம் பகர்தலின்றி
யுன்னுஞ் சிவன்றன தானந்த முத்த ருவந்தருந்தி
பின்னமில் லாம விருப்பரென் ருகமம்
...........விட்டு சிவானந்த மேமுத்தி யாமெனுமே. 101

முற்றிற்று.

The Progressive Printers, Madras.